ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

பூர்வாசார்யர்களின் வைபவங்களைத்
தொகுத்துக் கூறும்

# ஆசார்ய வைபவமஞ்ஜரி

(முதல் பாகம்)

ஸ்ரீமந்நாதமுனிகள்   உய்யக்கொண்டார்



மணக்கால்நம்பி

ஆளவந்தார்   பெரியநம்பி



திருக்கோட்டியூர் நம்பி

தொகுப்பாசிரியர் & கிடைக்குமிடம்
D. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் அட்வகேட்
39, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி - 620 017.

ஆசார்ய வைபவமஞ்ஜரி

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



பூர்வாசார்யர்களின்

வைபவங்களைத் தொகுத்துக் கூறும்

# ஆசார்ய வைபவமஞ்ஜரி

(முதல் பாகம்)


கிடைக்குமிடம் & தொகுப்பாசிரியர்

S கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், அட்வகேட்

3B, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-620017.



ஸ்ரீ. ரா. ஸ்ரீ. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப
தர்ம சொத்துக்களின் ஆதரவில் வெளியிடப்பெற்றது.





விலை [தபாற்கூலி தனி

1992

ஸ்ரீநிவாஸம்பிரஸ், புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

## இப்பதிப்புக்கு உதவியவர்கள்

**வேளுக்குடி க்ருஷ்ணன்**

கிஞ்சித்காரம் டிரஸ்ட் ரூ.45,000/-

சென்னை - 600 004

**முடும்பை முகுந்தன்**

ஹைதராபாத் ரூ. 5,000/-

ஸ்ரீ:

# ஆசார்ய வைப₄வ மஞ்ஜரி

## தொகுப்பாசிரியரின் முகவுரை

அநாதி₃ வைதி₃க மதமான விசிஷ்டாத்₃வைத ஸ்ரீவைஷ்ணவ தரிசனத்தை எம்பெருமான் மயர்வற மதிநல மருள கண்டவர்கள் ஆழ்வார்கள்; அவ்வாழ்வார்களாலே மயர்வற மதிநலம் அருளப் பெற்று இந்தத் தரிசனத்தை அசைக்க வொண்ணாதபடி நிலைநாட்டியவர்கள் ஆசார்யர்கள்; ஆழ்வார்கள் காலத்தால் மிகவும் முற்பட்டவர்கள். ஆகையாலே அவர்களுடைய வைப₄வத்தை விளக்கும் வரலாற்று நூல்கள் மிகுதியாக இல்லை. கி. பி. 9ம் நூற்றாண்டில் அவதரித்த நாத₂ முனிகள் தொடங்கி கி. பி. 14 வது நூற்றாண்டில் அவதரித்த மணவாள மாமுனிகள் ஈறாக, பல பல ஆசார்யர்கள் அவதரித்து இந்தத் தரிசனத்தை நிலைநாட்டிப் போந்தனர். இத்தகைய பெருமை நம்நாட்டில் நிலவிவரும் வேறு எந்தத் தரிசனத்திற்கும் கிடையாது. இவ்வாசார்யர்களில் பலர் நூற்றுக்கணக்கான க்₃ரந்த₂ங்களை அருளிச்செய்துள்ளனர். அவைகளில் வரலாற்று நூல்களாகவே அமைந்தவை சில. ஆசார்யர்களைப்பற்றிய வரலாற்றுக் குறிப்புகளைக் கொண்டவை நூற்றுக்கணக்கில் உள்ளன. இவ்வனைத்தையும் தொகுத்து நாத₂முனிகள் தொடக்கமாக மணவாள மாமுனிகள் ஈறாக உள்ள எல்லா ஆசார்யர்களுடைய வைப₄வங்களையும் ஒரு நூலாக வெளியிட வேண்டும் என்னும் விருப்பம் நமக்கு நெடுநாளாகவே இருந்தது. மிகக்கடினமாக உழைத்துத் தொகுத்தாலும் இத்தகைய ஒரு நூலைத்தொகுத்து அச்சிட்டு முடிக்கப் பல வருடங்களாகும். இதற்கு ஒரு தொடக்கமாக அடியேனுடைய ஷஷ்ட்யப்த பூர்த்தியை வியாஜமாகக் கொண்டு 1984ம் வருடம் 'ஆசார்ய வைப₄வமஞ்சரி' என்னும் இத்தொகுப்பு நூலைத் தொடங்கினேன். இந்நூல் ஸு₂தர்சனத்தில் பகுதிபகுதியாகத் தொடர்ந்து வெளிவந்தது. ப்ரஜோத்பத்தி மாசிப் புனர்பூசமான (15—2—1992) இன்று நாதமுனிகள் தொடங்கி, ஆசார்யரத்நஹாரத்தின் நடுநாயகரத்னமாய், தூர்ஸநஸ்த₂ரபகராய் விளங்கும் எம்பெருமானார் ஈறாக உள்ள 19 ஆசார்யர்களின் வைப₄வங்கள் அடங்கிய இந்த முதல் பா₄கம் வெளியிடப்படுகிறது. நாதமுனிகள் அருளிய நூல்கள் இப்போது எதுவும் கிடைப்பதில்லை. ஆளவந்தார் அருளிய நூல்களில் (1-3) ஸித்₃தி₄த்ரயமாகிற மூன்று நூல்கள்₂

(4) கீ3தார்த்த2ஸங்க்3ரஹம் (5) ஆக3ம ப்ராமாண்யம் (6) ஸ்தோத்ரரத்னம் (7) சதுஃஸ்லோகி ஆகிய ஏழு க்ரந்தங்கள் இப்போதும் கிடைக்கின்றன. மஹாபுருஷநிர்ணயமாகிற எட்டாவது நூல் லுப்தமாகிவிட்டது. தர்சன ஸ்தா2பகரான எம்பெருமானார் நவரத்தினங்கள் போலே அருளிய (1) ஸ்ரீபா4ஷ்யம் (2) வேதா3ந்ததீ3பம் (3) வேதா3ந்தஸாரம் (4) வேதா3ர்த்த2 ஸங்க்3ரஹம் (5) கீ3தா பா4ஷ்யம் (6, 7, 8) மூன்று க3த்3யங்கள் (9) நித்யக்3ரந்த2ம் ஆகிய ஒன்பது க்3ரந்தங்களும் நம்முடைய பா4க்3ய வசத்தாலே இப்போதும் குறைவறக் கிடைக்கின்றன. இவற்றில் ஸ்ரீபா4ஷ்யம், கீ3தாபா4ஷ்யம், வேதா3ர்த்த2 ஸங்க்3ரஹம், மூன்று க3த்3யங்கள் ஆகிய ஆறு க்3ரந்த2ங்களுக்குப் பூர்வாசார்யர்களாலேயே வ்யாக்2யானங்கள் எழுதப்பட்டுள்ளன. இவை தவிர ராமானுஜருடைய ஸிஷ்யப்ரஸிஷ்யர்களாலே 14வது நூற்றாண்டுவரை எழுதப்பட்ட பூர்வாசார்ய க்3ரந்த2ங்கள் நூற்றுக்கணக்கானவை இப்போதும் உள்ளன. பூர்வாசார்யர்கள் காலத்தை ஒட்டி, ஒரு சில நூற்றாண்டுகளுக்குள் எழுதப்பட்ட ப்ரபந்நாம்ருதம், யதீந்த்3ரப்ரவண ப்ரபா4வம், ராமானுஜார்ய தி3வ்ய சரிதை முதலான ஆசார்யர்களைப் பற்றின வரலாற்று நூல்களும் உள்ளன. அந்திமோபாய நிஷ்டை2, பெரிய திருமுடியடைவு, ரஹஸ்ய விவேகம் முதலான பிற்பட்ட நூல்களில் நம் ஆசார்யர்களைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகள் பல காணப்படுகின்றன. பூர்வாசார்யர்களால் அருளிச்செய்யப்பட்ட திவ்யப்ரப3ந்த4 வ்யாக்2யானங்களில், நம் ஆசார்யர்களைப் பற்றிய ஐதிஹ்ய நிர்வாஹக் குறிப்புகள் நூற்றுக்கணக்கில் உள்ளன. எம்பெருமானார் ஈறாக உள்ள 19 ஆசார்யர்களைப் பற்றிய, முற்கூறிய பலநூல்களில் சிதறிக்கிடக்கும் வரலாறுகளையும் ஐதிஹ்யநிர்வாஹங்களையும் இந்த முதல் பா4க3த்தில் இயன்றவரை தொகுத்துக் கொடுத்திருக்கிறேன். இது நம்முடைய பூர்வாசார்யர்களைப் பற்றிய வரலாற்று நூல்களை எழுதுபவர்களுக்குப் பேருதவியாக இருக்கும்.

இதே முறையில் எம்பெருமானாருக்குப் பிற்பட்ட பல ஆசார்யர்களின் வைப4வங்களையும், ஐதிஹ்ய நிர்வாஹங்களையும் இனிவரும் மேல் பா4க3ங்களில் வெளியிட எம்பெருமான் அருள்புரிவானாக.

ஸ்ரீ வைஷ்ணவ தாஸன்,

ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,

(ஸுதர்சனம் ஆசிரியர்)

பிரஜோத்பத்தி
மாசிப்புனர்பூசம்
(15-2-92)

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:   ஸ்ரீமத் வரவரமுநயே நம:

ஸுதர்சனர் ஸ்ரீ உ.வே. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்

# ஆசார்யவைபவ மஞ்ஜரி

## (முதல் பாகம்)

## விஷய ஸூசிகை — பக்கம்

VIII பெரியநம்பி



IX திருக்கோட்டியூர் நம்பி

ஆசார்யவைபவமஞ்ஜரி முதல் பாகம்
விஷய ஸூசிகை முற்றிற்று.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# ஆசார்ய வைபவ மஞ்ஜரீ

## ஸ்ரீமந்நாதமுனிகள் வைபவம்



நாதமுனிகள்—காட்டுமன்னார்குடி

நமோऽசிந்த்யாத்$_3$பு$_4$தாக்லிஷ்ட ஜ்ஞாநவைராக்$_3$ய ராஶயே।
நாத$_2$ாய முநயேऽக$_3$ாத$_4$ப$_4$க$_3$வத்$_3$ப$_4$க்திஸிந்த$_4$வே॥

[ஸ்தோத்ரரத்னம் 1]

[இப்படிப்பட்டதென்று நினைக்கமுடியாததும் ஆச்சர்யமானதும், (பகவானுடைய அருளாலே) எளிதாகக் கிடைத்ததுமான ஞானத்தினுடையவும், வைராக்$_{1}$யத்தினுடையவும் குவியல் போன்றவராகவும், ப$_{4}$க$_{3}$வானை மனனம் செய்பவராகவும், ஆழ்ந்த ப$_{4}$க$_{3}$வத்$_{3}$ப$_{4}$க்திக்குக் கடலாகவுமிருக்கிற நாத$_{2}$முனிகளுக்கு நமஸ்காரம் செய்கிறேன்.]

**தஸ்மை நமோ மது$_{4}$ஜித்$_{3}$ங்க்$_{4}$ரிஸரோஜதத்த்வ-**
**ஜ்ஞாநாநுராக$_{3}$மஹிமாதிஶயாந்தஸீம்நே ।**
**நாத$_{2}$ாய நாத$_{2}$முநயேऽத்ர பரத்ர சாபி**
**நித்யம் யதீ$_{3}$யசரணௌ ஶரணம் மதீ$_{3}$யம் ॥**

[ஸ்தோத்ரரத்னம் 2]

[இவ்வுலகத்திலும், மேலுலகத்திலும், எப்போதும், எந்த ஸ்ரீமந் நாத$_{2}$முனிகளுடைய திருவடிகள் எனக்குப் புகலிடமோ, மது$_{4}$வை நிரஸித்த எம்பெருமானுடைய திருவடித் தாமரைகளைப்பற்றின உண்மை அறிவினுடையவும், அன்பினுடையவும் பெருமேன்மையின் முடிவே எல்லையாயிருப்பவரும், (எனக்கு) நாத$_{2}$ராயிருப்பவருமான அந்த நாத$_{2}$முனிகளுக்கு நமஸ்காரம்.]

**பூ$_{4}$யோ நமோऽபரிமிதாச்யுதப$_{4}$க்திதத்த்வ**
**ஜ்ஞாநாம்ருதாப்$_{3}$தி$_{4}$பரிவாஹஶுபை$_{4}$ர் வசோபி$_{4}$: ।**
**லோகேऽவதீர்ணபரமார்த்த$_{2}$ஸமக்$_{3}$ரப$_{4}$க்தி-**
**யோக$_{3}$ாய நாத$_{2}$முநயே யமிநாம் வராய ॥**

[ஸ்தோத்ரரத்னம் 3]

[அளவற்ற ப$_{4}$க$_{3}$வத்$_{3}$ப$_{4}$க்தியென்ன, உண்மை அறிவென்ன, (இவைகளாகிற) அமுதக்கடலின் போக்குவிடாயிருக்கும் ஶுப$_{4}$மான வார்த்தைகளாலே இவ்வுலகத்தில் அவதாரம் செய்திருக்கிற பரம ப்ரயோஜனமாயும், பூர்ணமாயுமிருக்கும் ப$_{4}$க்தியின் சேர்த்தியை உடையவரும், யோகி$_{3}$களில் மேலானவருமான நாத$_{2}$முனிகளுக்கு மறுபடியும் நமஸ்காரம்.]

"ஏகோ ஹ வை நாராயண ஆஸீத், ந ப்$_{3}$ரஹ்மா நேஶாந:" [மஹோபனிஷத்] [நாராயணன் ஒருவனே முதலில் இருந்தான்; பிரமனுமில்லை; சிவனுமில்லை] என்கிறபடியே ப்ரளயகாலத்தில் லீலா விபூ$_{4}$தி அழிந்துகிடந்தபோது, "ஸ ஏகாகீ ந ரமேத" [மஹோபனிஷத்] [அவன் ஒருவனுயிருந்து இன்புறவில்லை] என்கிறபடியே அசித்ஸமராய்க் கிடந்த ப$_{3}$த்$_{3}$த$_{4}$சேதனரைக்கண்டு வருந்தி,

இவர்கள் உய்யும் வழியென்ன?' என்று ஆராய்ந்து, "ஒன்றியொன்றி உலகம் படைத்தான்" என்கிறபடியே உலகைப் படைத்து, இச்சேதனர்க்குக் கரணகளேப₃ரங்களை (சரீரேந்திரியங்களைக்) கொடுத்து, இருட்டில் விளக்குப்போலே அஜ்ஞானவிருளைப்போக்கும் ஶாஸ்த்ரத்தைக் கொடுத்து அதிலும் திருந்தாமையாலே, கிணற்றில் விழுந்த குழந்தையை எடுக்கத் தானே கிணற்றில் குதிக்கும் தாயைப்போலே, தானே பல அவதாரங்களையெடுத்தும் திருந்தாமையாலே, மானைக் கொண்டு மானைப்பிடிப்பாரைப்போலே சேதனரைத் திருத்தச் சேதனரான ஆழ்வார்களையும், ஆசாரியர்களையும் அவதரிக்கச்செய்யத் திருவுள்ளங்கொண்டான் ஸ்ரீய:பதியான ஸர்வேஶ்வரன்.

உயிர்களாகிற பயிர்களைச் செழிப்பிக்கத் திருவுள்ளங்கொண்ட பத்தியுழவனுகையாலே, பெரும்புறக்கடலான தன்னிடமுள்ள கருணையாகிற நீரைப்பருகும் காளமேகமாக நம்மாழ்வாரையும், அம்மேகம் பொழியும் நீரைத்தாங்கும் மலையாக நாத₃முனிகளையும், அம்மலையிலிருந்து இழியும் அருவிகளாக உய்யக்கொண்டார் மணக்கால்நம்பிகளையும், அவ்வருவிகளிலிருந்து பெருகும் பேராருக ஆளவந்தாரையும், அவ்வாற்றிலிருந்து வெட்டப்பட்ட கால்வாய்களாகப் பெரிய நம்பிகள் முதலான ஐந்து ஆசார்யர்களையும், அவ்வாய்க்கால்களின் மூலம் அந்நீர் தேங்கும் பெரிய ஏரியாக எம்பெருமானுரையும், அவ்வேரியிலிருந்து உயிர்களாகிற பயிர்களுக்கு நீரைப்பாய்ச்சும் மதகுகளாக எழுபத்துநாலு ஸிம்ஹாஸநாதி₄பதிகளையும் அவதரிப்பித்தருளினான். இங்கு கூறப்பட்ட இவ்வுருவகத்தையே எம்பெருமானுருடைய சிஷ்யரான எம்பார் என்னும் பேராசிரியர்—

"லக்ஷ்மீநாத₂ாக்₂யஸிந்தௌ₄ ஶட₂ரிபுஜலத₃:
ப்ராப்ய காருண்யநீரம்
நாத₂ாத்₃ராவப்₄யஷிஞ்சத் தத₃நு
ரகு₄வராம்பே₄ாஜசக்ஷுர்ஜ₂ராப்₄யாம் ।
க₃த்வா தாம் யாமுநாக்₂யாம் ஸரிதமத₂
யதீந்த்₃ராக்₂யபத்₃மாகரேந்த்₃ரம்
ஸம்பூர்ய ப்ராணிஸஸ்யே ப்ரவஹதி
ப₃ஹுதா₄ தே₃ஶிகேந்த்₃ரப்₄ரமௌகை₄: ॥"

[லக்ஷ்மீநாத₂னுகிற பெருங்கடலில், சடகோபராகிய மேகம், கருணை நீரைப்பருகி நாத₂முனிகளாகிற மலையிலே பொழிந்தது; அந்நீர் புண்ட₃ரீகாக்ஷரென்னும் உய்யக்கொண்டார், ராமமிஶ்ரர் எனும்

மணக்கால்நம்பி ஆகிய இரு அருவிகளின்மூலம் யாமுநாசார்யர் எனும் ஆளவந்தாராகிற பேராற்றை அடைந்து, (அதிலிருந்து பெரியநம்பிகள் முதலான ஐந்து ஆசார்யர்களாகிற கால்வாய்கள் மூலம்) யதிராஜராகிற பெரிய ஏரியை அடைந்து (எழுபத்து நாலு) ஆசார்யர்களாகிற மதகுகளாலே உயிர்களாகிற பயிர்களின் பொருட்டுப் பெருகுகிறது] என்னும் ஶ்லோகமாக அருளிச்செய்தார்.

ஆசார்யர்களில் முதல்வரான ஸ்ரீமந்நாத₂முனிகள் ஸேனை முதலியாருடைய முக்கியமான படைத்தலைவரான க₃ஜாநநர் என்னும் யானைமுக₂முடைய நித்யஸூரியினுடைய அம்ஶமாய், சோழதேசத்தில் வீரநாராயணபுரத்தில் (காட்டுமன்னார்கோவிலில்) (கி-பி 823) சோபக்ருத்-ஹு ஆனி-மீ 7-ஆம் தேதி புதன்கிழமை பௌர்ணமி திதி அனுஷநக்ஷத்திரத்தில் ஈஶ்வர ப₄ட்டாழ்வாருக்குக் குமாரராக ஶட₂மர்ஷண கோத்ரத்திலே (சொட்டைக்குலத்திலே) அவதரித்தார். இவருக்குத் திருத்தகப்பனார் இட்ட திருநாமம் ஸ்ரீரங்க₃நாத₂ன் என்பது. இவர் யோக₃ாப்₄யாஸம் கைவந்தவராகையாலே ஸ்ரீரங்க₃நாத₂முநிகள் என்றும், சுருக்கமாக நாத₂முனிகள் என்றும் வழங்கப் பட்டார். இவர் தம் திருத்தகப்பனாரான ஈஶ்வர ப₄ட்டாழ்வாரோடும், தம் திருக்குமாரரான ஈஶ்வரமுனிகளோடும் ஸகுடும்ப₃மாகக் காட்டுமன்னார் நியமனத்தோடு வடநாட்டு யாத்திரை புறப்பட்டு, வடதிசை மதுரை, சாளக்கிராமம், வைகுந்தம், துவரை, அயோத்தி முதலான வடநாட்டு தி₃வ்யதே₃ஶங்களை ஸேவித்துவிட்டு, யமுனைக் கரையிலே ஸ்ரீகோ₃வர்த்த₄னபுரம் என்கிற கிராமத்திலே எழுந்தருளி யிருந்தார். "தூயபெருநீர் யமுனைத்துறைவன்" என்கிற எம்பெருமா னுக்குக் கைங்கர்யம் செய்துகொண்டு சில வருஷங்கள் அங்கேயே எழுந்தருளியிருந்தார்கள். ஒருநாள் காட்டுமன்னார் நாத₂முநிக ளுடைய கனவிலே எழுந்தருளி, "வீரநாராயணபுரந்திற்கு வருவீர்" என்று நியமித்தருள, அவர்களும்—யமுனைத்துறைவரிடம் நியமனம் பெற்றுக்கொண்டு, பல தி₃வ்யதே₃ஶங்களை ஸேவித்துக்கொண்டு வீரநாராயணபுரத்திற்குக் குடும்பத்தோடு எழுந்தருளினார்கள். மன்னா ருக்குச் சில வருஷம் கைங்கர்யம் செய்துகொண்டிருக்கும்போது, ஸேவார்த்தி₂களாக வந்த சில ஸ்ரீவைஷ்ணவர்கள் "ஆராவமுதே" என்கிற திருவாய்மொழியை மன்னனார் திருமுன்பே அநுஸந்தி₄த்தருள, அதைக்கேட்ட நாத₂முனிகள் மிகவுகந்து, "இத்திருவாய்மொழியின் திருநாமப்பாட்டிலே (சாற்றுப்பாட்டிலே) 'ஓராயிரத்துள் இப்பத்தும்' என்று அருளிச்செய்யப்பட்ட ஆயிரம் பாட்டும் உங்களுக்கு வருமா?" என்று கேட்டார். "இப்பத்துப் பாட்டுத்தவிர மற்றவை கிடைக்க வில்லை" என்று கூறிச் சென்றார்கள். உடனே நாத₂முநிகள்

''குருகூர்ச்சடகோபன்'' என்று ஆழ்வாரால் அருளிச்செய்யப்பட்ட திருக்குருகூருக்குச் சென்று ஸ்ரீமது₄ரகவிகளுடைய பரம்பரையில் வந்த ஸ்ரீபராங்குசதா₃ஸரை விசாரித்தார். அவரும் ''திருவாய்மொழியும், மற்ற தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களும் நீண்ட காலத்துக்கு முன்பே மறைந்து விட்டன. எங்களுடைய பரமாசார்யரான ஸ்ரீமது₄ரகவிகள் ஆழ்வார் விஷயமான 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்கிற தி₃வ்யப்ரப₃ந்த₄த்தை எங்களிடம் அளித்து 'இதை ஒருமுகமாக ஆழ்வார் திருமுன்பே இருந்து ஆழ்வார் திருவடிகளை த்₄யானித்துக்கொண்டு நியமத்துடன் பன்னீராயிரம் உரு அநுஸந்தி₄த்தால் ஆழ்வார் ப்ரஸன்னராவார்' என்று அருளிச்செய்தார்'' என்று நாத₂முநிகளிடம் கூறினர். நாத₂முநிகளும் கண்ணிநுண் சிறுத்தாம்பை அவரிடம் பிரார்த்தி₂த்து உபதே₃சம்பெற்று ஆழ்வார் திருமுன்பே அதை நியமத்தோடு பன்னீராயிரம் உரு அநுஸந்தி₄த்தார். ஆழ்வாரும் அவர் நெஞ்சிலே தோன்றி ''உமக்கு என்னவேணும்?'' என்று கேட்க, ''திருவாய்மொழி முதலான தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களை அடியேனுக்கு இரங்கியருளவேணும்'' என்று நாத₂முநிகள் விண்ணப்பம் செய்ய, ஆழ்வாரும் அவருக்கு மயர்வற மதிநலமருளி, ரஹஸ்ய த்ரயத்தையும், திருவாய்மொழி முதலான தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களையும், அவற்றின் பொருளையும், அஷ்டாங்க₃யோக₃ரஹஸ்யத்தையும் அநுக்₃ரஹித்தருளினர். அதற்குப்பின் சில காலம் நாத₂முநிகள் ஆழ்வார் திருநகரியிலே தி₃வ்யப்ரப₃ந்த₄ங்கள் முதலானவற்றை அநுஸந்தி₄த்துக்கொண்டு எழுந்தருளியிருந்தார். ஒருநாள் இவரை வீரநாராயணபுரத்திற்கு வரச்சொல்லி மன்னனுர் கனவிலே நியமித்தருள, இவரும் ஆழ்வாரிடம் விடைகொண்டு வீரநாராயணபுரம் சென்று, மன்னனுர் நியமனத்தாலே தமது மருமக்களான மேலையகத்தாழ்வாரையும், கீழையகத்தாழ்வாரையும் கூட்டிக்கொண்டு தி₃வ்ய ப்ரப₃ந்த₄ங்களுக்கு தே₃வகா₃னத்தாலே ராக₃ம் தாளம் முதலானவற்றை அமைத்து, இயலும் இசையும் ஆக்கிப் பாடச்செய்து பரப்பி வந்தார். இவருடைய முக்கிய சிஷ்யர்கள் உய்யக்கொண்டாரும், குருகைக் காவலப்பனுமாவர். அவர்கள் மூலமாக தி₃வ்யப்ரப₃ந்த₄த்தையும் யோக₃ரஹஸ்யத்தையும் ப்ரசாரம்செய்வித்து, பிறக்க இருக்கும் தம்முடைய பேரனை யமுனைத்துறைவனுக்கு இவற்றை அளிக்கும்படி நியமித்துவிட்டு, குருகைக்காவலப்பன் கோவிலிலே பரமபதி₃த்தருளினர்.

தா₄து வருஷம் (கி. பி. 917) மாசி மாதம் சுக்லபக்ஷ ஏகாத₃சி இவருடைய தீர்த்த₂தி₃னம். சுமார் தொண்ணுற்று மூன்று (93) திருநக்ஷத்திரங்கள் எழுந்தருளியிருந்தார்.

இவர் அருளிச்செய்த க்3ரந்த2ம் 'ந்யாய தத்வம்' * என்பது. இதிலிருந்து சில பகுதிகள் எம்பெருமானார், ஶ்ருதப்ரகாசிகா ப4ட்டர், ஸ்ரீவேதா3ந்ததே3ஶிகர் முதலான ஆசார்யர்களால் எடுத்துக்காட்டப் பட்டுள்ளன. க்3ரந்த3ம் இப்போது இல்லை. யோகர3ஹஸ்யம், புருஷநிர்ணயம் என்னும் இரு க்3ரந்த2ங்களையும் இவர் செய்ததாகப் பெரிய திருமுடியடைவில் உள்ளது. இவையும் இப்போது இல்லை. இவர் நம்மாழ்வாரிடம் ப4விஷ்யதா3சார்ய விக்3ரஹத்தைப்பெற்ற செய்தி முதலானவை அடுத்துள்ள ஐதிஹ்ய நிர்வாஹங்களில் எட்டாவதில் (8, 9 பக்கம்) காணலாம்.

## * ஐதிஹ்ய நிர்வாஹங்கள்

1. **வார்த்தாமாலை (36b).** திருமந்த்ரத்தில் ப்ரணவம் ஜீவபர ஸ்வரூபஜ்ஞானத்தையும் நம:பத3ம் மற்ற உபாயங்களில் வைராக்3யத்தையும், மூன்றாவதான 'நாராயணாய' பத3ம் கைங்கர்யத்துக்குக் காரணமான ப4க்தியையும் ஜீவனுக்கு விளைக்கிறது என்பது பெரியமுதலியாரான நாத2முனிகளுடைய நிர்வாஹம்.

2. **வார்த்தாமாலை (136a).** எம்பெருமான் உபாயமாம்போது புருஷகாரமாகவும், உபேயமாம்போது தானும் உபேயமாகவும், கைங்கர்யத்தை வளர்ப்பவளாகவும், அவன் ஜக3த்காரணமாம்போது இவளும் ஜக3த்ஸ்ருஷ்டி முதலானவற்றை ப்ரேரணம் செய்பவளாகவும், ஜக3த்3வ்யாபாரரஸத்தில் அந்வயிப்பவளாகவும், அவனுடைய பரவ்யூஹ விப4வ அந்தர்யாமி அர்ச்சாரூபங்கள் அனைத்திலும் அவனை விட்டுப் பிரியாது கூடியிருப்பவளாகவுமிருக்கையாலே, மீன் ஜலமயமாய் இருப்பதுபோலே எம்பெருமானுடைய வடிவம் ஸ்ரீமயமாயிருக்கும் என்று பெரியமுதலியாரான நாத2முனிகள் அருளிச்செய்வர். த்3வயத்தில் இரண்டு க2ண்ட3த்திலும் ஸ்ரீஶப்3த3ம் வந்திருப்பதற்கு இது விளக்கமாகும்.

3. **வார்த்தாமாலை (202).** **நஞ்ஜீயர் நம்பிள்ளை ஸம்வாதம்.**

**நம்பிள்ளை:—** நாத2முனிகளுக்கும் நம்மாழ்வாருக்கும் நடுவில் நம்மாழ்வாருடைய ஶிஷ்யரான மது4ரகவிகளையும் அவருடைய வம்ஶத்தில் அவதரித்தவராய் நாத2முனிகளுக்குக் கண்ணிநுண் சிறுத்தாம்பை உபதே3ஶித்தவரான பராங்குஶ நம்பியையும் தவிர இடையிலுள்ள மது4ரகவி வம்ஶத்தார்கள் அனைவரையும் திருநாமத்தையிட்டு அறிந்து அநுஸந்தி4க்கவேண்டாவோ?

---

* அந்தந்த ஆசார்யர்களைப் பற்றிப் பூர்வாசார்ய க்3ரந்த2ங்களிலுள்ள ஐதிஹ்யங்களோ, அவற்றின் விவரணமோ இப்பகுதியில் தரப்படும். அவர்களது நிர்வாஹங்கள் வந்திருக்கும் இடமே பெரும்பாலும் குறிக்கப்பெறும்.

நஞ்ஜீயர்:— அவர்கள் பலராகையாலும் நெடுங்காலத்துக்கு முற்பட்டவர்களாகையாலும் அவர்களுடைய திருநாமங்கள் அறிய முடியாமலிருக்கிறது. நம்முடைய தந்தை முதலானோர் விஷயத்திலும் ஒரு சில தலைமுறைகள் தவிர மற்றவர்களை அறியாததனால் ப்₃ராஹ்மண்யத்துக்குக் குறையில்லாமலிருப்பதுபோலே இவ்வாசார்யர்களையும் பெயரையிட்டு அறியாதத்தனால் இவனுடைய அறிவுக்கோ பேறு கிடைப்பதற்கோ தட்டில்லை.

4. வார்த்தாமாலை (441a). நம்மாழ்வாரிடம் யோக₃த₃சையிலே திருவாய்மொழி கேட்கும்போது "பொலிக பொலிக" [திருவாய் 5-2] என்னும் திருவாய்மொழியில் தம்மால் உணர்த்தப்பட்ட ப₄விஷ்யதா₃சார்யரான எம்பெருமானாரைப் பற்றி நாத₂முனிகளுக்கு அருளிச்செய்து அவருடைய விக்₃ரஹத்தையும் அருளி "உம்முடைய பேரனைக்கொண்டு கடாக்ஷிக்கச்செய்து ஸகலார்த்த₂ங்களும் அவருக்குப் போய்ச்சேரும்படி ஏற்பாடு செய்யவேண்டும்" என்று அருளினார் நம்மாழ்வார். (இவ்விஷயம் நாயனாராச்சான்பிள்ளையருளிய சரமோபாயநிர்ணயத்தில் உள்ளது.) இவ்விஷயத்தை நாத₂முனிகள் அடிக்கடி "குளப்படியிலே தேங்கினால் குருவி குடித்துப்போம்; வீராணத்து ஏரியிலே தேங்கினால் நாடுவிளையும்" என்னும் வார்த்தையாலே உணர்த்திக்கொண்டிருப்பாராம். இதன் கருத்தாவது—ஒரு மாட்டின் குளம்பின் அடியிலே தேங்கும்போது மழை நீர் சில குருவிகள் குடிப்பதற்கே பயன்படும்; அதே மழைநீர் வீரநாராயணபுரத்து (வீராணத்து) ஏரியிலே தேங்கினால் நாட்டிலுள்ள வயல்களெல்லாம் விளைந்து நாடே வாழும்; அதுபோலே எம்பெருமானாருக்கு முன் வரையிலுள்ள ஆசார்யர்களால் ஒரு சில ஶிஷ்யர்களுக்கே பயன்படும்; அதே அர்த்த₂ங்கள் எம்பெருமானாரிடம் வந்து சேரும்போது உலகனைத்துக்கும் பயன்படும் என்பது. இவ்விஷயங்களும் இவ்வார்த்தையும் நாத₂முனிகளிடமிருந்து உய்யக்கொண்டாருக்கும், உய்யக்கொண்டாரிடமிருந்து மணக்கால் நம்பிக்கும், மணக்கால் நம்பியிடமிருந்து அவரால் தூதுவளைக் கீரையைப் பச்சையிட்டு வஶீகரிக்கப்பட்ட ஆளவந்தாருக்கும், ஆளவந்தாரிடமிருந்து அவரது ஐந்து ஶிஷ்யர்கள் மூலமாக எம்பெருமானார்க்கும் வந்து சேர்ந்து, இவ்வார்த்தையின் கருத்தறிந்த எம்பெருமானார் எழுபத்துநாலு மதங்களுள்ள வீராணத்தேரியாகத் தம்மை நாத₂முனிகள் திருவுள்ளம் பற்றியதை அடியொற்றி எழுபத்துநாலு ஸிம்ஹாஸநாதிபதிகளைத் தமக்கு ப்ரத₄ான ஶிஷ்யர்களாக அமைத்தார் என்றும் பூர்வாசார்ய க்₃ரந்த₂ங்கள் கூறும். பக்கம் மூன்றிலுள்ள எம்பார் ஶ்லோகம் காண்க.

5. **தே3ஶிகன் அருளிய ஸம்ப்ரதா3ய பரிஶுத்3தி4.** நாத2முனிகள் தம்முடைய திருப்பேரனாரான ஆளவந்தாருக்குத் தாம் உபதே3ஶியாதே தம்முடைய ஶிஷ்ய ப்ரஶிஷ்யர்களை "இவருக்கு ஆகாங்க்ஷை (விருப்பம்) பிறந்தபோது உபதே3ஶியுங்கோள்" என்று ஆஜ்ஞாபித்து" என்று தொடங்கி ஸாதித்திருக்கும் ஸ்ரீஸூக்திகளைப் பார்த்தால் ஸ்ரீநாத2முனிகள் காலத்திலேயே ஆளவந்தார் அவதரித்து விட்டதுபோல் தோன்றுகிறது. சரமோபாயநிர்ணயம், கு3ருபரம்பராப்ரபா4வம் முதலானவற்றோடு இது முரண்படுகிறது. முரணில்லாமல் நிர்வஹிக்க வழியுண்டா என ஆராயவேண்டும்.

6. **தே3ஶிகன் அருளிய கு3ருபரம்பராஸாரம்.** இவ்வாசார்யர்களில் ஈஶ்வரமுனிகள் பிள்ளை நாத2முனிகள், இவர் ந்யாயதத்த்வம் என்கிற ஶாஸ்த்ரமும், யோக3ரஹஸ்யமும் அருளிச்செய்தார். இவருக்கு ஸ்ரீமது4ரகவிகள் முதலாக உண்டான ஸம்ப்ரதா3ய பரம்பரையாலும் திருவாய்மொழி முக2த்தாலும் யோக3த3ஶையில் ஸாக்ஷாத்க்ருதராயும் நம்மாழ்வார் ஆசார்யரானார். நாத2முனிகள் பிள்ளை ஈஶ்வர ப4ட்டாழ்வான். நாத2முனிகள் ஸ்ரீபாத3த்தை ஆஶ்ரயித்த முதலிகள்:—1. உய்யக்கொண்டார், 2. குருகைக்காவலப்பன், 3. நம்பி கருணாகரதாஸர், 4. ஏறுதிருவுடையார், 5. திருக்கண்ணமங்கையாண்டான், 6. வானமாதேவி ஆண்டான், 7. உருப்பட்டூர் ஆச்சான்பிள்ளை, 8. சோகத்தூராழ்வான் ஆக எண்மர்.

7. **தே3ஶிகன் அருளிய ந்யாய ஸித்3தா4ஞ்ஜனம்.** இதில் தே3ஶிகன் ஸ்ரீமந் நாத2முனிகள் அருளிய ந்யாய தத்த்வத்திலிருந்து பத்தொன்பது இடங்களில் வாக்யங்களை உதா3ஹரித்திருக்கிறார்.

8. **பெரியவாச்சான்பிள்ளை திருக்குமாரரான நாயனாராச்சான்பிள்ளை அருளிய சரமோபாய நிர்ணயம்.** நாத2முனிகளுக்கு ஆழ்வார் திருத்திரை வளைத்துத் திருவாய்மொழி ப்ரஸாதி3த்தருளுகிறவள்விலே "பொலிக பொலிக" வந்தவாறே பூ4தப4விஷ்யத்3வர்த்தமாந காலத்ரய பர்யவஸாயிஜ்ஞாநமுடையவராகையாலே உடையவருடைய திருவவதாரத்தைக்கடாக்ஷித்தருளி "கலியும் கெடும் கண்டுகொண்மின்" என்று "இந்த ப்ரபந்ந குலத்திலே ஒரு மஹாநுபா4வர் திருவவதரிக்கப்போகிறார். அவராலே நாடடங்க வாழப்போகிறது" என்று நாத2முனிகளுக்கு அருளிச்செய்ய, அவரும், "பயனன்றாகிலும்" என்கிற பாட்டை இயலும் இசையுமாக ஏறிட்டு ஆழ்வாரைப் பாடி உகப்பித்து, "தேவரீர் ஸர்வஜ்ஞராகையாலே அறியப்போகாததொன்றுமில்லை. அவ்யக்தியினுடைய ஸம்ஸ்தா2நத்தை (திருவுருவை) தேவரீர் பா4வித்துக் காட்டியருளவேணும்" என்று ப்ரார்த்தி2க்க, அற்றை ராத்ரியிலே நாத2முனிகளுக்கு ஸ்வப்னமுகே2ந ஆழ்வார் எழுந்தருளி,

த்₃வாத₃ஶோர்த்₄வபுண்ட்₃ரங்களும், காஷாயத் திருப்பரியட்டமும், த்ரித₃ண்ட₃ஹஸ்தமும், ஆஜாநுப₃ாஹுவும் நிரவதி₄கதேஜோரூபமுமான 'திருமேனியும், ×''மகரம்சேர் குழையிருபாடிலங்கியாட'' தீ₃ர்க்க₄ராய் எழுந்தருளி, க்ருபாப்ரவாஹஸூசகமான முகமும், முறுவலும் சிவந்த திருக்கண்மலருமாக ஸேவை ப்ரஸாதி₃த்தருளி, 'அவ்யக்தியிருக்கும்படி இது காணீரே' என்றருளிச்செய்து, 'இவ்யக்தியடியாக ப்ரபந்நகுலாந்தர்பூ₄தர் எல்லாரும் பேறு பெறப்போகிறார்கள்' என்று அருளிச்செய்தார். நாத₂முனிகளும் உடனே உணர்ந்தருளி ஆழ்வார் திருவடிகளிலே த₃ண்ட₃ம் ஸமர்ப்பித்து 'தேவரீருடைய ஸம்ஸ்த₂ானத்திலும் தேவரீர் ப₄ாவித்தருளின ஸம்ஸ்த₂ானம் அடியேனுக்கு மிகவும் ஆகர்ஷகமாயிருந்ததீ!' என்ன, ''இதென்ன மாயம்! லோகமெல்லாம் இவ்யக்தியிலேகாணும் மேல்விழப் போகிறது!'' என்று அருளிச்செய்தார். நாத₂முனிகளும் திரியவும் ஆழ்வாரை உகப்பித்து 'இந்த ப₄விஷ்யத₃ாசார்ய விக்₃ரஹத்தை நித்யமாக அநுப₄வித்துக்கொண்டிருக்கும் விரகேது?' என்று விண்ணப்பம்செய்ய, ஆழ்வாரும் உடையவருடைய ஸர்வோத்தாரகத்வத்தை வெளியிடக் கடவோமென்று மற்றைநாள் ராத்ரி ஸ்வவிக்₃ரஹத்துக்குக்கடவயில்பவமஶரிடத்திலே ஸ்வப்னமுகே₂ந எழுந்தருளி ப₄விஷ்யத₃ாசார்ய ஸம்ஸ்த₂ானத்தை வகுத்துக் காட்டியருளி ''நாளை நம் புளிக் கீழே வந்து இப்படியே ஸர்வாவயவ பூர்ணமாகச் சமையுங்கோள்'' என்று அருளிச்செய்ய, மற்றைநாள் விடிந்தவாறே, திருப்புளியின் கீழே வந்து ஶரீரஶோத₄ன பூர்வகமாக ஆஹாரநித்₃ரையின்றிக்கே அவ்விக்₃ரஹத்தை நிர்மித்துக்கொடுக்க, அவ்விக்₃ரஹத்திலே ஒரு ஶக்தி விஶேஷத்தை அதி₄ஷ்டி₂ப்பித்தருளி, நாத₂முனிகளை அழைத்தருளி, 'உம்முடைய அபேக்ஷிதத்தை இதோ தலைக்கட்டினோம் கண்டீரே' என்று அவ்விக்₃ரஹத்தை ப்ரஸாதி₃த்தருளி—''ராமஸ்ய த₃க்ஷிணோ ப₃ாஹு:''—என்கிறபடியே நம்முடைய அவயவமாக நினைத்திரும். இவ்யக்திக்கு * அடி நாமாகையாலே நமக்கு * அடியுமாய், நம் கார்யத்துக்குக் கடவதுமாயிருக்கும். இனிமேல் நம் த₃ர்ஶனத்துக்கு வர்த்த₄கமாக * அடியிட்டுவைத்தோம். உம்முடைய குலத்திலே ஒருவர் இவ்யக்தியை ஸாக்ஷாத்கரிக்கப்போகிறார். அதுதான் பெருமாள் திருவபி₄ஷேகத்துக்குப் பாரித்த /மாஸத்திலே பதினெட்டாமோத்திலே ப்ரத₂மோபாயம் பிறந்தாற்போலே, நம் பிறவி நாளைக்கேறப்பார்த்தால் ○ பதினெட்டாமவதி₄யிலே சரமோபாயம் பிறக்கப் போகிறது, இவ்யக்தியை நம்மைக் கண்டுகொண்டிருந்தாற்போலே கண்டு

× திருநெடு 21. * அடி-(1) காரணம்; (2) திருவடி.

/ சித்திரை. ○ திருவாதிரை.

கொண்டிரும்" என்றருளிச்செய்து விடைகொடுத்தருள, அப்போதே நாத₂முனிகளும் ஆழ்வார் ஸேவை ஸாதி₃த்தருளினதுக்குத்தோற்று. *"யஸ்ஸ்வாபகாலே கருணாகரஸ்ஸந் ப₄விஷ்யதா₃சார்யபரஸ்வரூபம் । ஸந்த₃ர்ஶயாமாஸ மஹாநுபா₄வம் தம் காரிஸூநும் ஶரணம் ப்ரபத்₃யே ॥" என்கிற ஶ்லோகம் அருளிச்செய்தாரென்று /நம்முடைய பிள்ளை பலகாலும் அருளிச்செய்வர். இவ்வர்த்த₂ம் ஓராண்வழியாய்ப் பரமகு₃ஹ்யமாய் வந்ததென்றும் அருளிச்செய்வர். இப்படி நாத₂முனிகள் நாலாயிரமும் ஆழ்வார் பக்கலிலே கேட்டருளி, மீளவும் வீரநாராயண புரத்தேற எழுந்தருளினவளவிலே, ஆழ்வார் தம்மை விஷயீகரித்த ப்ரகாரங்களை மன்னனார் திருமுன்பே அருளிச்செய்து, ஸந்நிதி₄யிலே எல்லா வரிசைகளையும் பெற்றுத் தம்முடைய திருமாளிகையிலே எழுந்தருளித் தம்முடைய மருமக்களான கீழையகத்தாழ்வானையும் மேலையகத்தாழ்வானையும் அழைத்தருளி, ஆழ்வார் தம்மை விஶேஷகடாக்ஷம்பண்ணி க்ருபைபண்ணியருளின ப்ரகாரத்தையும், ஸ்வப்னமுகே₂ந ஸேவைஸாதி₃த்த கட்டளையையும் அருளிச்செய்ய, அவர்களும் மிகவும் விஸ்மயப்பட்டு, 'இப்படிப்பட்ட மஹாநுபா₄வனுடைய ஸம்ப₃ந்த₄ம் ஆரோஹண க்ரமத்தாலேயாகிலும் உண்டாகப்பெற்றதே! என்று தேறியிருக்கலாம்' என்றார்கள்; பின்பு தம்முடைய ஸ்ரீபாத₃த்திலே ஆஶ்ரயித்து ஶிஷ்யகு₃ண பூர்த்தியையுடையரான திருக்கண்ணமங்கையாண்டானுக்கு த்₃வயோபதே₃ஶபூர்வகமாகத் திருவாய்மொழி ப்ரஸாதி₃த்தருளுகிறபோது 'பொலிக பொலிக' வந்தவாறே ஆழ்வார் அருளிச்செய்த தி₃வ்யஸூக்திகளையும் ஸ்வப்ன வ்ருத்தாந்தங்களையும் அருளிச்செய்ய, "அவ்யக்தியை ஸ்வப்னமுகே₂ந ஸாக்ஷாத்கரித்த தேவரீரோடே ஸம்ப₃ந்த₄முள்ள அடியேனுக்கு ஒரு குறைகளுமில்லை" என்று அருளிச்செய்தார். பின்பு, உய்யக்கொண்டார், குருகைக்காவலப்பன், தம்முடைய குமாரரான ஈஶ்வரமுனிகள் இவர்களை அழைத்தருளி ஸ்வப்ன வ்ருத்தாந்தங்களையும் ஆழ்வார் அருளிச்செய்த தி₃வ்யஸூக்திகளையும் அருளிச்செய்து, குருகைக்காவலப்பனை யோக₃க்ரமத்தை அப்₄யஸிக்கச்சொல்லி, உய்யக்கொண்டாரை த₃ர்ஶனத்தை ப்ரவர்த்திப்பித்துக்கொண்டுவரச்சொல்லி, ஈஶ்வரமுனிகளை "உமக்கொரு குமாரர் உண்டாகப் போகிறார். அவருக்கு யமுனைத்துறைவர் என்று திருநாமம் சாத்தும்"

---

* எந்த நம்மாழ்வார் கருணைமிக்கவராய், அடியேன் தூங்கும்போது ப₄விஷ்யதா₃சார்யரின் சிறந்த விக்₃ரஹத்தை எனக்குக் காட்டியருளினாரோ, காரியாரின் பிள்ளையான அவரை ஶரணமடைகிறேன்.

/ பெரியவாச்சான்பிள்ளை.

என்று அருளிச்செய்து, ஆஸந்ந சரமத3ஶையானவாறே உய்யக் கொண்டாரை அழைத்தருளி, 'ஒருவர்க்கும் வெளியிடாதே கிடீர்' என்று சூழரவுகொண்டு, ஆழ்வார் தமக்கு ப்ரஸாதி3த்தருளின ப4விஷ்யதா3சார்ய விக்3ரஹத்தை ப்ரஸாதி3த்தருளி, வரவும் அருளிச்செய்து, 'இத்தை ஈஶ்வரமுனிகள் குமாரருக்கு நாம் விரும்பின விஷயமென்று சொல்லித் தஞ்சமாகக் காட்டிக்கொடும்' என்று அருளிச்செய்து, அவ்விக்3ரஹத்தைத் திருவுள்ளத்திலே த்4யானம் பண்ணிக்கொண்டு, 'ஆழ்வார் திருவடிகளே ஶரணம்' என்று *அந்தமில் பேரின்பத்தடியரோடு ஒரு கோவையாக எழுந்தருளினார்.

9. **பின்பழகிய பெருமாள் ஜீயர் அருளிய ஆறாயிரப்படி குருபரம்பரா ப்ரபாவம்.** அநந்தரம், கங்கைகொண்ட சோழபுரத்திலே அந்த ராஜ்யத்துக்கு ராஜாவான சோழன் வாசலிலே, தே3வகா3நம் பாடுவாளொருத்தியும் மநுஷ்யகா3நம் பாடுவாளொருத்தியுமாக இரண்டு ×வாரஸ்த்ரீகள் தங்களில் விவாத3மாய் வந்து, ராஜஸந்நிதி4யிலே வித்3வான்களைத் திரட்டிப் பாட, ராஜாவும் அங்குள்ள வித்3வான்களும் மனுஷ்யகா3நம் பண்ணுகிறவளைக் கொண்டாடி அவளுக்கு மணியும் மாலையும் ○த்யாக3மும் கொடுத்துப் போகவிட்டு தே3வகா3நம் பாடியவளை அநாத3ரித்துத் தள்ளிவிட, அவளும் 'நான் பாடுகிற கா3நம் தே3வதைகளறியுமித்தனை' என்று தே3வாலயங்கள் தோறும் புக்குப் பாடிக்கொண்டு வந்து மன்னனார் கோயிலிலே அவர் திருமுன்பே பாட, நாத2முனிகளும் அத்தைக்கேட்டு உகந்து கொண்டாடி, அவளுக்கு மன்னனாருடைய தீர்த்த2 ப்ரஸாத3மும் திருப்பரியட்டமும் ப்ரஸாதி3ப்பித்தருள, அவளும் இவரை த3ண்ட3னிட்டுப் போய் இந்த ராஜாவுடன் 'நான் பாடுகிற தே3வகா3நம் அறிவாராய் நாத2முனிகளென்னும் திருநாமமுடையாரொருவர் வீரநாராயண புரத்தில் மன்னனார்கோயிலிலே இருக்கிறார்' என்ன, ராஜாவும் நாத2முனிகளை 'எழுந்தருள வேணும்' என்று அழைத்துவிட, இவரும் 'திருவாய்மொழி முதலான தி3வ்யப்ரப3ந்த4ங்களை தி3வ்யகா3நத்திலே யடைத்தோம்; நாட்டார் இதின் வைப4வம் அறியார்கள்; இத்தை நாம் அறிவிக்கவேணும்' என்று திருவுள்ளம்பற்றி ராஜகோ3ஷ்டி2யேற எழுந்தருள, ராஜாவும் எழுந்திருந்து த3ண்ட3ன் ஸமர்ப்பித்து ஆஸநமிட, இவரும் எழுந்தருளியிருந்து ஆசீர்வதிக்க, ராஜாவும் அத்யாத3ரத்துடனே 'இவள் பாடுகிற தே3வகா3நம் தேவரீர் அறிவீரோ?' என்று கேட்க, இவரும் மநுஷ்யகா3நம் பாடுகிறவளையும்

* திருவாய் 10-9.11. × தே3வதா3ஸிகள். ○ மாணியநிலம்.

தே3வகா3நம் பாடுகிறவளையும் பாடச்சொல்லிக் கேட்டருளி, ராஜா வைக் குறித்து 'இவள் பாடுகிற மநுஷ்யகா3நம் உங்களுக்குத் தெரியும்; இவள் பாடுகிற தே3வகா3நம் தே3வர்களுக்குத் தெரியுமது போக்கி உங்களுக்குத் தெரியாது' என்ன, ராஜாவும் 'தேவரீர் அறியுமென்னுமிடம் நாங்களறியும்படியெங்ஙனே ?' என்ன, நாற்பது நூறு தாளத்தைச் சேர்வொற்றச் சொல்லி 'இது இத்தனையெடை, இது இத்தனையெடை' என்று நாத2முனிகள் அருளிச்செய்ய, அவற்றை ராஜாவும் தனித்தனியே நிறுத்துச் சோதித்துப் பார்க்க, அவை யெல்லாம் முந்திரை ஏறாமல் குறையாமல் இருந்தபடியைக் கண்டு மிகவும் ஆஶ்சர்யப்பட்டு நாத2முனிகளுடைய ஸ்ரீபாத3த்திலே தண்ட னிட்டு ப3ஹுத்3ரவ்யத்தை ஸமர்ப்பிக்கத் தேட, இவரும் சதுர்முக2 பசுபதி ஶதமக2 ப்ரப்4ருதி பத3ங்களை நிராகரித்திருக்கும் நிஸ்ப்ருஹ ராகையாலே 'நமக்கு இவையொன்றும் வேண்டா' என்று ராஜாவை ஆசீர்வதி3த்து, மீண்டு வீரநாராயணபுரத்தே எழுந்தருளி, மன்னனார் திருவடிகளில் கைங்கர்யைக நிரதராய் வாழ்ந்துகொண்டி ருக்குங்காலத்திலே, இவர் ஸ்ரீபாத3த்தில் ஆஶ்ரயித்தவர்களாய், *"ஶரீரம் வஸு விஜ்ஞாநம் வாஸ: கர்ம கு3ணாநஸூந் | கு3ர்வர்த்த2ம் தா4ரயேத்3 யஸ்து ஸ ஶிஷ்யோ நேதரஸ் ஸ்ம்ருத: ||" என்று சொல்லப்படுகிற கு3ணங்களையுடையரான உய்யக்கொண்டார், குருகைக்காவலப்பன், நம்பி கருணாகரதா3ஸர், ஏறு திருவுடையார், திருக்கண்ணமங்கையாண்டான், வானமாமலை தேவியாண்டான், உருப்பட்டூர் ஆச்சான்பிள்ளை, சோகத்தூராழ்வான் என்கிற எண்மர்க்கும் **"அஹோ த்3வயஸ்ய மாஹாத்ம்யம் அஹோ வீர்ய மஹோ ப3லம் | மந்த்ரரத்நம் ஶுப4கரம் வேத3ஸாரம் ஸநாதநம் ||" என்கிற படியே மந்த்ரரத்நமென்று ஶ்லாகி4த்துச் சொல்லப்படுகிற த்3வ யார்த்த2த்தையும் ப்ரஸாதி3த்து, திருவாய்மொழி முதலான தி3வ்ய ப்ரப3ந்த4ங்களையும் ஓதுவித்து, வேத3ஶாஸ்த்ரங்களையும் அதி4கரிப் பித்து, ரஹஸ்யத்ரயஸாரார்த்த2மாய், ஸகல ஜக3த்காரணபூ4தனான ஸர்வேஶ்வரன் விஷயமான ஸ்ரீபுருஷநிர்ணயத்தையும் ந்யாய தத்வத்தையும் அருளிச்செய்து, கரியகோலத்திருவுருவை த்4யாநித்துக் கொண்டு யோக3த்திலே எழுந்தருளியிருந்தார்.

---

* சரீரத்தையும் பொருளையும், அறிவையும், வஸிக்குமிடத்தையும், செயல்களையும், குணங்களையும், பிராணன்களையும் ஆசார்யனுக்காக எவன் தரிக்கிறானோ, அவனே சிஷ்யனெனத்தக்கவன். வேறுவிதமாக இருப்பவன் சீடனல்லன்.

** த்வயத்தின் பெருமையும், வீர்யமும், ப3லமும், எத்தகையது! மங்களத்தை அளிப்பதாய், வேதஸாரமாயிருப்பதாய், பழையதா யிருப்பது மந்த்ர ரத்னமான த்வயம்.

ராஜா இவருடைய யோகவைபவத்தைக் கேட்டு அங்கேறப் போய் மன்னனாரையும் ஸேவித்து, தானும் ஸ்த்ரீகளுமாக, இவர் யோகத்திலே எழுந்தருளியிருக்கும்படியைக் கண்டு ஆஶ்சர்யப்பட்டு மீண்டு போகிறவளவிலே, ×"திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக்கண்டேனேயென்னும்" என்கிறபடியே அவர்களை க்ருஷ்ணனும் கோபிமாருமாக நினைத்து அவர்கள் பின்பே கங்கைகொண்ட சோழபுரத்தேற எழுந்தருளாநிற்க, இது கேட்டு உய்யக்கொண்டார் குருகைக்காவலப்பனுள்ளிட்ட முதலிகளுடையப் பின் தொடர்ந்தெழுந்தருளி, கங்கைகொண்ட சோழபுரத்தே கண்டு 'தேவரீர் இப்படி செய்யலாமோ?' என்று விண்ணப்பஞ்செய்ய, நாதமுனிகளும் 'க்ருஷ்ணனும் பெண்டுகளுமாக நினைத்து அவர்களுடனே வந்தேன்' என்று அருளிச்செய்து மீண்டெழுந்தருளினார்.

சிலநாள் கழிந்தவாறே, பின்னையும் ஒருகால் ராஜா வந்து மன்னனாரை ஸேவித்து மீண்டுபோகிறவன், தன் ஸாமந்தன் தலையிலே அடியிட்டு யானைக்கழுத்திலேற, இத்தை நாதமுனிகள் கண்டு 'ஸர்வேஶ்வரன் ப்ரஹ்மருத்ராதிகள் தலையிலே அடியிட்டுப் பெரியதிருவடியை மேற்கொள்ளும்படி இதுவாகாதே!' என்று மோஹித்தார் என்று ப்ரஸித்தமிறே.

பின்னையும் சிறிது காலம் யோகத்திலே எழுந்தருளியிருந்து குருகைக்காவலப்பனைப் பார்த்து 'நீர் யோகரஹஸ்யத்தை அப்யஸியும்' என்று அஷ்டாங்க யோகக்ரமத்தை அவருக்கு அருளிச்செய்தருளினார். உய்யக்கொண்டாரைப் பார்த்து 'நீரும் யோகரஹஸ்யத்தை அப்யஸியும்' என்ன, உய்யக்கொண்டாரும் 'பிணம் கிடக்க மணம் புணரலாமோ? இந்த ஶரீராவஸாநத்திலே அப்யஸிக்க அமையும்' என்று விண்ணப்பஞ்செய்ய. 'ஆகில், நீர் ஶாஸ்த்ரங்களையும் திருவாய்மொழி முதலான திவ்யப்ரபந்தங்களையும் ப்ரவர்த்திப்பியும்' என்று அருளிச்செய்து, தம் புத்ரராகிய ஈஶ்வரமுனிகளைப் பார்த்து "உமக்கு ஒரு குமாரர் உண்டாகப் போகிறார்; அவருக்கு 'யமுனைத்துறைவர்' என்று திருநாமம் சாத்தும்" என்று அருளிச்செய்து, உய்யக்கொண்டாரையும் குருகைக் காவலப்பனையும் குறித்து 'உங்களுக்கு நாம் சொன்ன தர்ஶந தாத்பர்யங்களையும், யோகரஹஸ்யார்த்த விஶேஷங்களையும் யமுனைத் துறைவருக்கு உபதேஶியுங்கோள்' என்று நியமித்தருளி, முன்பு போலே யோகத்திலே எழுந்தருளியிருந்தார்.

× திருவாய் 4-4-8.

அநந்தரம், அந்த ராஜா ஸபரிகரனாய் வேட்டைக்கு வந்து மீண்டு போகாநிற்கச் செய்தே, இவருடைய பெண்பிள்ளைகள் வந்து, "ஐயா! நம் அகத்திலே ஒரு குரங்கும் இரண்டு வில்லிகளும் ஒரு பெண்பிள்ளையுமாக வந்து 'நாத₂முனிகள் எங்கே?' என்று தேடிப்போனார்கள்" என்றவாறே, நாத₂முனிகளும் 'அவர்கள் *"அக்₃ரத: ப்ரயயௌ ராமஸ் ஸீதா மத்₄யே ஸுமத்₄யமா। ப்ருஷ்ட₂தஸ்து த₄நுஷ்பாணிர் லக்ஷ்மணோऽநுஜகா₃ம ஹ ||" என்று சொல்லப்பட்ட பெருமாளும் பிராட்டியும் இளையபெருமாளும் /ஐந்த்₃ரவ்யாகரண பண்டி₃தனுமாக அடுக்கும்' என்று திருவுள்ளம்பற்றிப் பின்தொடர்ந்து எழுந்தருளி, வழியில் எதிர்ப்பட்ட பலரையும் 'இப்படிப் போகிறவர்களைக் கண்டீர்களோ?' என்று கேட்டருள, அவர்களும் 'போகிறார்கள்; போகிறார்கள்' என்று சொல்ல, கடுநடையிட்டு நெடுந்தூரம் எழுந்தருளி கங்கைகொண்ட சோழபுரத்தில் கீழ் வாசலளவாக எழுந்தருளி, அங்குள்ளவர்களை 'இப்படிப் போகிறவர்களைக் கண்டீர்களோ?' என்று கேட்டருள, அவர்களும் 'கண்டிலோம்' என்ன, போகிற வில்லிகளும் காணக்காண மறைந்திட, இவரும் ஏங்கி அடித்துக்கொண்டு விழுந்து மோஹித்து, அது ஹேதுவாக **"பரந்து வைஷ்ணவம் லோகம் நித்யாநந்த₃ம் ஸுக₂ாவஹம்| தத்ர ஸம்வாஹிநீம் தி₃வ்யாம் விரஜாம் வேத₃ ஸம்ப₄வாம் || ஸர்வே ஹிரண்மயாஸ் தத்ர ஸர்வே வேத₃மயாஶ்ஶுப₄ா:| அப்ராக்ருதமயா நித்யா: புநராவ்ருத்திவர்ஜிதா:||" ***"ஏகாந்திநஸ்ஸதா₃ ப்₃ரஹ்மத்₄யாயிநோ யோகி₃நோ ஹி யே| தேஷாம் தத் பரமம் ஸ்த₂ாநம் யத்₃வை பஶ்யந்தி ஸூரய: ||" என்கிறபடியே ×பிணை கொடுக்கிலும் போகவொட்டாத ०அடியார் நிலாகின்ற வைகுந்தமாநகரை ப்ராபித்தருளி

---

*(அகாரார்த்த₂மான) பெருமாள் முதலில் சென்றார்; (உகாரார்த்த₂மான) சிற்றிடையாளான ஸீதை நடுவில் சென்றாள்; (மகாரார்த்த₂மான) இளையபெருமாள் வில்லேந்திப் பின்சென்றார். (இது ப்ரணவம் நடந்து செல்வதுபோலிருந்தது!). / அனுமன்.

** எப்போதும் ஆநந்தமயமாயிருப்பதாய் இன்பமளிப்பதான விஷ்ணுலோகம் மேலானது. அங்கு—வேதத்துக்குப் பிறப்பிடமான விரஜாநதியைக் காணலாம். அங்கு—பொன்மயமானவராய், வேதமயராய், மங்களமானவராய், அப்ராக்ருதராய், ஸம்ஸாரத்திற்குத் திரும்பிவருதலில்லாத நித்ய முக்தர்கள் உள்ளனர்.

*** பரமபுருஷன் ஒருவனையே உபேயமாகக் கொண்டவர்களாய், ப்ரஹ்மத்யானம் செய்யும் உபாஸகர்களுக்கு, நித்யஸூரிகள் காணும் மேலான ஸ்தானம் ப்ராப்யமாகிறது.

× பெரியாழ்திரு 4-5-2. ० திருவிருத்தம் 75.

வார் கலந்து பிரிந்த பிராட்டி பத்துமாஸம் பிரிந்திருந்தாள். இவர் கண்டு உகந்து காண்பதற்கு முன்னே காணப்பெறாத இழவு இராஞ்சிக்கொண்டுபோக எழுந்தருளினர். இச்செய்தியை உய்யக் கொண்டார், குருகைக்காவலப்பன், ஈச்வரமுனிகள் முதலானோர் கேட்டு வ்யாகுலப்பட்டு அங்கேறப்போய், அவருடைய விமலசரம விக்ரஹத்தை ஸேவித்து, தங்கள் கண்ணிலும் நெஞ்சிலும் ஒத்திக்கொண்டு மோஹார்த்தராய்க்கிடந்து துடித்துத் தங்களிலே தேறி த₄ரித்துநின்று சரம கைங்கர்யத்தை ஈச்வரமுனிகள் திருக் கையாலே ப்₃ரஹ்மமேத₄ ஸம்ஸ்காரவிதி₄யடங்கச் செய்வித்துப் பள்ளிபடுத்து, வீரநாராயணபுரத்தேற எழுந்தருளி மற்றும் செய்ய வேண்டும் க்ருத்யங்களெல்லாம் செய்வித்தார்கள். குருகைக்காவலப்ப ஞம் நாத₂முனிகள் எப்போதும் யோக₃த்திலே எழுந்தருளியிருக்கு மிடத்துக்கு அருகே யோக₃த்திலே எழுந்தருளியிருந்தார்.

நாத₂முனிகள் திருநக்ஷத்ரம், ஆனி மாஸத்தில் அநூராதை₄.

இவர் தனியன்—

*"நமோ(அ)சிந்த்யாத்₃பு₄த... ஸ்யோம்ந: பரஸ்தாத் ஸவித₃ம் ஸமேத்ய
லக்ஷ்ம்யா நியோகா₃த் குருகாதி₄ராஜ: |
ஸ மந்த்ரரத்நம் த்₃வயமாஹ யஸ்மை
நாத₂ாய தஸ்மை முநயே நமோ(அ)ஸ்து ||"

10. கந்தாடை நாயன் அருளிய பெரியதிருமுடியடைவு. ஸேனை முதலியாருடைய மந்த்ரியான க₃ஜாஸ்யருடைய அம்ஸபூ₄தரான ஸ்ரீமந்நாத₂முனிகளுக்குத் திருவவதார ஸ்த₂லம் சோழதேசத்தில் வீரநாராயணபுரம். திருநக்ஷத்ரம் கலியுகம் மூவாயிரத்து இரு(?) நூற்று இருபத்துநாலு வருஷத்துக்குமேல் ஶோப₄க்ருத் ஸம்வத்ஸரம் ஆனி மாஸம் ஏழாந்தேதி பௌர்ணிமை புதன்கிழமை அனுஷம். திருத்தகப்பனர் ஈச்வரபட்டாழ்வார். குடி சொட்டை. குமாரர் ஈச்வரமுனிகள், திருநாமங்கள் ஸ்ரீமந்நாத₂முனிகள், ஸ்ரீரங்க₃நாத₂ முனிகள், நாத₂ப்₃ரஹ்மர். ஆசார்யர் நம்மாழ்வார். புருஷகாரர் மது₄ரகவியாழ்வார். திருவாராத₄னம் மன்னனர், இருப்பிடம் நம் பெருமாள்கோவில், சிஷ்யர் உய்யக்கொண்டார், குருகைக்காவலப்பன்,

* பரமபதத்தினின்றும், பெரியபிராட்டியாரின் ஆணையாலே திருக்குருகூர் நம்பியான அந்த நம்மாழ்வார் (யோகதசையில்) எவரை யடைந்து மந்த்ரரத்னமான த்வயத்தை உபதேசித்தாரோ, அந்த நாதமுனியின் பொருட்டு நமஸ்காரம்.

பிள்ளை கருணாகரதாஸர், நம்பி கருணாகரதாஸர், ஏறுதிருவுடையார், திருக்கண்ணமங்கையாண்டான், வானமாமலை தெய்வநாயக ஆண்டான், உருப்புட்டூராச்சான்பிள்ளை, சோகத்தூராழ்வான், கீழையகத்தாழ்வான், மேலையகத்தாழ்வான், ஆக சிஷ்யர் பதினொரு திருநாமம். இவர் அருளிச்செய்த ப்ரபந்தங்கள் ந்யாயதத்வ மென்கிற ஶாஸ்த்ரமும், யோகரஹஸ்யமும், புருஷநிர்ணயமும். இவர்க்கு யோகரஹஸ்யஜ்ஞானமும், கண்ணிநுண் சிறுத்தாம்பும், மதுரகவியாழ்வார் சிஷ்யரான ஸ்ரீபராங்குஶதாஸர் ப்ரஸாதிக்கை யாலே மதுரகவியாழ்வார் புருஷகாரரானார். யோகதஶையிலே ஸாக்ஷாத்கரிக்கையாலும், திருவாய்மொழி முதலான திவ்யப்ரபந்தங்களாலும், பகவத்ப்ரபந்தாதி விஶேஷங்களாலும் நம்மாழ்வார் ஆசார்யரானார். இவர் நம்பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்தார். இவரே குருபரம்பரைக்கு ப்ரதானர். இவர் யோகாப்யாஸ க்ரமத்தாலே முந்நூற்றுமுப்பது திருநக்ஷத்ரம் எழுந்தருளியிருந்து குருகைக்காவலப்பன் கோயிலிலே சக்ரவர்த்தித்திருமகனார் திருவடிகளிலே சேர்ந்தார். தாத்ரு ஸம்வத்ஸர மாக ஶுக்லகாதஶி தீர்த்தம்.

11. அமுதனார் அருளிய இராமாநுச நூற்றந்தாதி—20-ம் பாட்டு.

ஆரப் பொழில்தென் குருகைப்பிரான்* அமுதத்திருவாய்
ஈரத் தமிழின் இசையுணர்ந் தோர்கட்கு* இனியவர்தம்
சீரைப் பயின்றுய்யும் சீலங்கொள் நாத முனியை நெஞ்சால்
வாரிப் பருகும்* இராமானுசன் என்றன் மாநிதியே.

12. ஸ்ரீபராசரபட்டர் அருளிய ஸ்ரீரங்கராஜஸ்தவம் (1-5)

நௌமி நாதமுநிம் நாம ஜீமூதம் பக்த்யவக்ரஹே ।
வைராக்ய பகவத் தத்த்வ ஜ்ஞாநபக்த்யபிவர்ஷுகம் ॥

[பக்தியாகிற மழைநீர் பெய்யாமலிருந்த பஞ்சகாலத்தில், வைராக்யம், எம்பெருமானைப்பற்றிய ஜ்ஞாநபக்திகள் ஆகியவற்றைப் பொழியும் ஸ்ரீமந்நாதமுனிகள் என்னும் கார்முகிலைத் துதிக்கிறேன்.]

13. ஸ்ரீதேஶிகன் அருளிய யதிராஜஸப்ததி—5-வது ஶ்லோகம்.

நாதேந முநிநாதேந பவேயம் நாதவாநஹம் ।
யஸ்ய நைகமிகம் தத்த்வம் ஹஸ்தாமலகதாம் கதம் ॥

[எவருக்கு வேதாந்த விழுப்பொருளான பரப்ரஹ்மம் கையிலங்கு நெல்லிக்கனியாயிற்றோ, அந்த முனிவர் தலைவரான நாதமுனிகளாலே அடியேன் நாதனுடையவனாகக் கடவேன்.]

14. க₃ருட₃வாஹன பண்டி₃தர் இயற்றிய தி₃வ்யஸூரி சரிதப் பதினாருவது ஸர்க்க₃ச் சுருக்கம் (1-38 ஶ்லோகங்கள்)—

| விஷயம் | ஶ்லோகம் |
|---|---|
| வீரநாராயணபுர வர்ணனம். | 1-4 |
| ஸ்ரீநாத₂முனிகள் அவர் குமாரர் ஈஶ்வரமுனிகளோடு செய்த தி₃வ்யதே₃ஶ யாத்ரா வர்ணனம்; கோ₃வர்த்த₄னபுரியில் வாஸம். | 4-11 |
| வீரநாராயணப்பெருமாள் ஸ்வப்நமூலமாக வீரநாராயண புரத்துக்கு வர நாத₂முனிகளை அழைத்தல். | 12 |
| நம்மாழ்வாரை ஸேவிக்க நாத₂முனிகள் திருக்குருகூருக்குச் செல்லுதல். | 13-15 |
| யோக₃மகிமையால் நம்மாழ்வாரை ஸாக்ஷாத்கரிப்பதற்காக நாத₂முனிகள் செய்த ஜபவர்ணனம். | 16-17 |
| மதுரகவி ஆழ்வாரோடு கூடிய நம்மாழ்வாரை யோக₃த₃ஶை யில் ஸாக்ஷாத்கரிப்பதை வர்ணித்தல். | 18-19 |
| மறுபடியும் வீரநாராயணப்பெருமாள் நியமனத்தால் தமது ஊர் சென்று அவரைத் துதித்தல். | 20-21 |
| சோழ அரசனுடைய விருப்பத்தின்படி இரண்டு ஸ்த்ரீக ளுடைய தமிழ்ப்பாட்டுத் திறமையைப் பரீக்ஷித்தல். | 22-28 |
| தமது ஶிஷ்யரான புண்ட₃ரீகாக்ஷருக்கும் குருகைக்காவலப்ப னுக்கும் தமது ந்யாயதத்வ க்₃ரந்த₂த்தைச் சொல்லிவைத்தல். | 29-30 |
| நாத₂முனிகளை ஸேவிப்பதற்காகச் சோழ அரசன் வீர நாராயணபுரம் வருதல். | 31 |
| கண்ணனென்று நினைத்துச் சோழ அரசனை நாத₂முனிகள் பின்தொடர்தல். | 32-34 |
| புண்ட₃ரீகாக்ஷரிடம் த₃ர்ஶநார்த்த₂ங்களையும் குருகைக்காவ லப்பனிடம் யோக₃ரஹஸ்யத்தையும் உபதே₃ஶித்தல். | 35 |
| பிறக்க இருக்கும் பேரனுக்கு யாமுனேயன் என்று பெயர் வைக்கும்படி தம் குமாரரிடம் ஆஜ்ஞாபித்தல். | 36 |
| தமது பேரனுக்கு ஸகலஶாஸ்த்ரங்களையும் உபதே₃ஶிக்கும் படி ஶிஷ்யர்களை நியமித்தல். | 37 |
| நாத₂முனிகள் பரமபத₃மடைதல். | 38 |

15. ப்ரபந்நாம்ருதம். (107, 108, 109 அத்₄யாயங்கள்)—

| விஷயம் | அத்₄யாயம் |
|---|---|
| நாத₂முனிகள் தீர்த்த₂யாத்ரை. | 107 |
| நாத₂முனிகள் ப₄விஷ்யதா₃சார்ய விக்₃ரஹத்தை அடைதல். | 108 |
| நாத₂முனிகளின் சரமத₃ஶாவர்ணனம். | 109 |

16. அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் அருளிய ஆசார்ய ஹ்ருதயம் (151-வது சூர்ணை)—

"விவேகமுகராய் நூலுரைத்து அள்ளலில் ரதியின்றி அணங்கின் நடையைப் பின்சென்று குடைநீழலிலே கவரியசையச் சங்கமவை முரல வரிவண்டிசைபாட மாநஸபத்மாஸனத்திலேயிருந்து விதியினை மிடறிலந்தரமின்றி இன்பம்படக் குடிச்சீர்மையிலேயாதல், பற்றற்ற பரமஹம்ஸராதலான நயாசலன் மெய்ந்நாவன் நாதயாமுனர்போல்வாரை அன்னமென்னும்"

## இச்சூர்ணையின் மாமுனிகள் வ்யாக்யானத்தின் பகுதி

"பற்றற்றார்கள்" என்றும், "சிற்றெயிற்று முற்றல் மூங்கில் மூன்று தண்டரொன்றினர் அற்றபற்றர்" என்றும் சொல்லுகிறபடியே ஸாம்ஸாரிக ஸகலஸங்கமுமற்று உத்தமாஶ்ரமிகளாய்ப் பரமஹம்ஸ ஶப்தவாச்யரான நாதமுனிகள் யாமுனமுனிகள்போல்வாரையும் இந்த குண ஸாம்யத்தையிட்டு அன்னமென்று சொல்லுமென்கை.

17. ஸ்ரீவசனபூஷணம்-மாமுனிகள் வ்யாக்யானம் அவதாரிகை—"ஆழ்வாருடைய நிர்ஹேதுக கடாக்ஷலப்த திவ்யஜ்ஞானரான நாதமுனிகள்"

## இப்பகுதிக்கு அண்ணாவப்பங்கார் ஸ்வாமியின் அரும்பதவுரை

"தத: காலேந மஹதா விநஷ்டாம் புவி தத்க்ருதிம் | நாதநாமா முனிவர: யோகஜ்ஞாநாத் அவாப்ஸ்யதி ||" [நீண்டகாலம் சென்ற பின்பு நம்மாழ்வாருடைய ப்ரபந்தங்கள் இவ்வுலகில் மறைந்து போனவளவில் நாதமுனிகள் அதை யோகஜ்ஞானத்தாலே பெறப் போகிறார்] என்று புராணத்திலும்.........கண்ணிநுண் சிறுத்தாம்பு என்னும் ப்ரபந்தத்தை ஆழ்வார் திருமுன்பே ஏகாஸனத்திலே ஏகாக்ரசித்தராய்ப் பன்னீராயிரம் உரு நாதமுனிகள் அநுஸந்தித்த தாகவும்......பின்பழகராம் பெருமாள் க்ரந்தத்திலுமிருக்க, ஆழ்வாருடைய நிர்ஹேதுககடாக்ஷ லப்த திவ்யஜ்ஞானரானமை எங்ஙனே? என்னில்—ஆழ்வார் நாதமுனிகளைக் கேட்டருளினதுக்குத் தாம் விண்ணப்பம் செய்யுமளவில் "திருவாய்மொழி முதலான திவ்ய ப்ரபந்தங்களை அடியேனுக்கு இரங்கியருளவேணும்" என்று இவ்வளவே நாதமுனிகள் அபேக்ஷித்திருக்க, திவ்யப்ரபந்தமாத்ரத்தை தர்ஶிப்பித்துவிடாமல் அநபேக்ஷிதமான திவ்யசக்ஷு: ப்ரதாநமும், ரஹஸ்யார்த்தப்ரதர்ஶநமும், அகிலதர்ஶநதாத்பர்யப்ரதர்ஶநமும், அஷ்டாங்கயோகரஹஸ்யப்ரதர்ஶநமும் ஆழ்வார் செய்தருளின

விது நிர்ஹேதுக கடாக்ஷத்தாலேயிறே......................ப்ரத2மநம்மாழ்
நிர்ஹேதுக கடாக்ஷ லப்3த4மாகில் அந்யத்ஸர்வம் தத்ப்ராயமாகலா
மிறே. ஆகையால் நாத2முனிகளுக்கு ஆழ்வாருடைய நிர்ஹேதுக
கடாக்ஷ லப்3த4ஜ்ஞாநத்வம் உபபந்நம் என்று கண்டுகொள்வது.

18. திருப்பாவை 16-ம் பாட்டு ஆறாயிரப்படி.

(நாயகனாய்நின்ற) ஆளவந்தார் எம்பெருமானை ஸ்தோத்ரம் பண்ணவென்று புக்கு ஆசார்யஸ்தோத்ரத்திலே இழிந்தார். அதுக்கடி ஒருவன் ஒரு ரத்னத்தைக்கொடுத்தால் அதின் விலையை அறிய அறியக் கொடுத்தவன் பக்கலிலே விருப்பம் பிறக்குமாபோலே ஶாஸ்த்ரங்களெங்கும் அப்4யஸித்துப் பார்க்குமிடத்து உபாயமாகத் தோற்றுகிற கர்மஜ்ஞானப4க்திகள் பேற்றுக்கு ஸாத4னமாகமாட்டாது; ப4க3வத் ஸம்ப3ந்தி4களை முன்னிட்டுக்கொண்டு அவனையே உபாயமாகப்பற்றுமது பேற்றுக்குடலென்று ஸ்வப்ரப3ந்த4த்திலும் முதலிலும் முடிவிலும் பரமாசார்யரான *பெரியமுதலியாரைப் பற்றினார். "த்வத்பாத3மூலம் ஶரணம் ப்ரபத்3யே" என்று தாம் அவன் திருவடிகளிலே பண்ணின ப்ரபத்தியையும் கீழிலவற்றோடே காற்கடைக்கொண்டு /"நாத2முநிம் விலோக்ய" என்று *பெரியமுதலியாரை முன்னிட்டார்.

19. திருநெடுந்தாண்டகம் 10-ம் பாட்டு வ்யாக்2யானம்.

(குணபாலமதயானாய்) *பெரியமுதலியார்பக்கல் தமக்குண்டான ஆத3ரத்தாலே மன்னனுடைய வடிவழகையும், செருக்கையும், நிலையழகையும் பற்ற உடையவர் "குணபாலமதயானாய்" என்று மன்னனாரை அருளிச்செய்வர்.

குறிப்பு:— மன்னனார் என்பது காட்டுமன்னார் ஸன்னிதி4 எம்பெருமான். ஆளவந்தாரிடத்திலும் ஸ்ரீமந்நாத2முனிகளிடத்திலுமுள்ள ஆத3ராதிஶயத்தாலே அவர்களுடைய திருவவதார ஸ்த2லப் பெருமானை எம்பெருமானார் "குணபாலமதயானாய்" என்பதற்குப் பொருளாகத் திருவுள்ளம்பற்றுவர் என்று கருத்து.

20. ப4க3வத்3விஷயம்.

(1) (திருவாய்மொழி 1-5-11) (இசைகாரர்) இயலுக்கு இசைய இசையிடவல்லவர்கள். ஸ்ரீமது4ரகவிகளையும் நாத2முனிகளையும் போலேயிருக்குமவர்கள்.

(திருவாய் 4-6-8) நாத2முநிகள், ராஜா ஸாமந்தன்தலையிலே அடியையிட்டு ஆனைக்கழுத்திலே புக்கபடியைக் கண்டு, 'ஸர்வேஶ்வரன்

---

* பெரியமுதலியார் - நாத2முனிகள். / 23-வது இலக்கம் காண்க.

ப்₃ரஹ்மாதி₃கள் தலையிலே அடியிட்டுப் பெரியதிருவடியை மேற்கொள்ளும்படி இதுவாகாதே' என்று மோஹித்தாரென்று ப்ரஸித்₃த₄மிறே; ராஜா ஸபரிகரமாக கங்கைகொண்ட சோழபுரத்தேறப் போகச்செய்தே, பெரியமுதலியார் மன்னனார் திருவடிகளிலே ஸேவித்திருக்கச் செய்தே பெண்பிள்ளை வந்து 'நம் அகத்திலே ஒரு குரங்கும் இரண்டு வில்லிகளும் ஒரு பெண்ணுமாக வந்து புகுந்தார்கள்' என்றவாறே, 'பெருமாளும் இளையபெருமாளும் பிராட்டியும் //ஐந்த்₃ரவ்யாகரணபண்டி₃தனும்' என்று பு₃த்₃தி₄பண்ணிப் பின்தொடர்ந்துபோய், முன்னேபோய், 'போகிறார்கள், போகிறார்கள்' என்னக் கேட்டுக் கீழைவாசலிலே சென்றவாறே, 'இப்படி போகிறவர்களைக் கண்டிகோளோ ?' என்று வாசலிலவர்களைக்கேட்க, அவர்கள் 'கண்டிலோம்' என்ன, அதுவே ஹேதுவாகத் திருநாட்டுக்கு எழுந்தருளினாரிறே.

## 21. ஸ்ரீமந் நாதமுனிகள் அருளிய தனியன்கள்

### (1) நம்மாழ்வார் விஷயமான ஶ்லோகம்

யத்₃கோ₃ஸஹஸ்ரமபஹந்தி தமாம்ஸி பும்ஸாம்
நாராயணோ வஸதி யத்ர ஸஶங்க₂சக்ர: ।
யந்மண்ட₃லம் ஶ்ருதிக₃தம் ப்ரணமந்தி விப்ரா:
தஸ்மை நமோ வகுளபூ₄ஷணபா₄ஸ்கராய ॥

[எவருடைய ஆயிரம் திருவாய்மொழிப் பாடல்கள் (கிரணங்கள்) ஜீவர்களுடைய அகவிருளை அகற்றுகின்றனவோ, எந்த நம்மாழ்வாராகிற ஸூர்யனுக்குள் சங்குசக்கரத்தோடுகூடிய நாராயணன் வாழ்கின்றானோ, திருநாமப் பாட்டில் திருப்பித் திருப்பிவரும் எவருடைய ஊரும் திருநாமமும் செவிப்பட்டவுடன் அந்தணர்கள் (வேத₃த்திலுள்ள ஸூர்யமண்ட₃லத்தைப்போலே) வணங்குகின்றார்களோ அந்த மகிழ்மாலை மார்பினராகிய நம்மாழ்வாரை வணங்குகிறேன்.]

### (2) திருப்பல்லாண்டு—பெரியாழ்வார் திருமொழித் தனியன்

கு₃ருமுக₂மநதீ₄த்ய ப்ராஹ வேதா₃நஶேஷாந்
நரபதிபரிக்லுப்தம் ஶுல்கமாதா₃துகாம: ।
ஶ்வஶுரமமரவந்த்₃யம் ரங்க₃நாத₂ஸ்ய ஸாக்ஷாத்
த்₃விஜகுலதிலகம் தம் விஷ்ணுசித்தம் நமாமி ॥

---

// அனுமன்.

[எவரொருவர் பாண்டியவரசனால் உயரத்தூக்கிக் கட்டப்பட்ட பொற்கிழியை வென்று எடுப்பதற்காக, ஓராசார்யன் மூலமாக அத்4யயனம் செய்யாமலேயே எல்லா வேத3ங்களையும் முழங்கினாரோ, ஸ்ரீரங்க3நாத2னுக்கு மாமனாராய், தே3வர்களாலும் வணங்கப்படும் ப்3ராஹ்மண குலஶ்ரேஷ்ட2ரான (க3ருட3ாழ்வானின் அம்ஶமான) அந்த விஷ்ணு சித்தரை வணங்குகிறேன்.]

### (3) கண்ணிநுண்சிறுத்தாம்புத் தனியன்

அவிதி3தவிஷயாந்தரஶ்ஶட2ாரே-
ருபநிஷத3ாமுபக3ாநமாத்ரபோ4க3: ।
அபி ச கு3ணவஶாத் ததே3கஶேஷீ
மது4ரகவிர் ஹ்ருத3யே மமாவிரஸ்து ॥

[வேறொன்றையுமறியாமல் நம்மாழ்வாருடைய தமிழ் உபநிஷத்துக்களைப் பாடுவதிலேயே இன்பம் காண்கின்றவராய், கு3ணத்தாலும் அவருக்கு அடிமைப்பட்டிருப்பவரான மது4ரகவிகள் என் ஹ்ருத3யத்தில் தோன்றுவாராக.]

### (4) ஷை தமிழ்த் தனியன்

வேறொன்றும்நான் அறியேன் வேதம்தமிழ்செய்த*
மாறன்சடகோபன் வண்குருகூர்— ஏறு* எங்கள்
வாழ்வாமென்றேத்தும் மதுரகவியார்* எம்மை
ஆள்வாரவரேயரண்.

### (5) திருவாய்மொழித் தனியன்

ப4க்தாம்ருதம் விஶ்வஜநாநுமோத3நம்
ஸர்வார்த்த2த3ம் ஸ்ரீஶட2கோபவாங்மயம் ।
ஸஹஸ்ரஶாகோ2பநிஷத்ஸமாக3மம்
நமாம்யஹம் த்3ராவிட3 வேத3ஸாக3ரம் ॥

[அடியார்களுக்கு (ப4க3வத3நுப4வமாகிற) அமுதத்தை அளிப்பதாய், எல்லா ஜனங்களுக்கும் காண இனியதாய், எல்லா அர்த்த2ங்களையும் (1 அர்த்த2பஞ்சகத்தையும், 2 த4னத்தையும்) அளிப்பதாய், ஶட2கோபருடைய திருவாக்கிலிருந்து புறப்பட்டதாய், ஆயிரம் ஶாகை2களையுடைய ஸாமவேத3த்தின் உபநிஷத் (ஆகிற நதி3) சேருமிடமாயிருக்கப் பெற்றதான திருவாய்மொழியாகிற தமிழ் வேதக் கடலை வணங்குகிறேன்.]

22. மாமுனிகள் அருளிய உபதேசரத்தினமாலை—36

தெருளுற்றவாழ்வார்கள் சீர்மையறிவாரார்*
அருளிச்செயலை யறிவாராரர்*—அருள்பெற்ற
நாதமுனிமுதலாம் நந்தேசிகரையல்லால்*
பேதைமனமே! உண்டோபேசு.

23. ஆளவந்தார் அருளிய ஸ்தோத்ரரத்னம் கடைசி ஶ்லோகம்

அக்ருத்ரிமத்வச்சரணாரவிந்த₃-
ப்ரேமப்ரகர்ஷாவதி₄மாத்மவந்தம் ।
பிதாமஹம் நாத₂முநிம் விலோக்ய
ப்ரஸீத₃ மத்₃வ்ருத்தமசிந்தயித்வா ॥

[என்னுடைய நடத்தையை நினைக்காமல், உன்னுடைய திருவடித் தாமரைகளில் இயற்கையாயிருக்கும் மேலான அன்பிற்கு எல்லை நிலமாயிருப்பவரும், ஆத்மஸ்வரூபத்தை உணர்ந்தவரும், எனக்குப் பாட்டனருமாகிய நாத₂முனிகளைக் கடாக்ஷித்து (எனக்கு) அருள்புரியவேணும்.]

24. ஸ்ரீமந்நாத₂முனிகள் திருநக்ஷத்திர தனியன்

ஜ்யேஷ்ட₂மாஸே த்வநூராதே₄ ஜாதம் நாத₂முநிம் ப₄ஜே ।
ய: ஸ்ரீஶட₂ாரே: ஶ்ருதவாந் ப்ரப₃ந்த₄மகி₂லம் கு₃ரோ: ॥

[ஆனி அனுஷத்தில் அவதரித்தவராய், ஆசார்யரான நம்மாழ்வாரிடமிருந்து எல்லா தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களையும் கேட்டவரான நாத₂முனிகளிடம் ப₄க்தி செய்கிறேன்.]

25. ஸ்ரீமந்நாத₂முனிகள் வாழித்திருநாமம்

ஆனிதனி லனுடத்தி லவதரித்தான் வாழியே
ஆளவந்தார்க்குபதேசம் அருளிவைத்தான் வாழியே*
பானுதெற்கிற் கண்டவன் சொல்பல வுரைத்தான் வாழியே
பராங்குசனார் சொற்பிரபந்தம் பரிந்துகற்றான் வாழியே*
கானமுறத் தாளத்திற் கண்டிசைத்தான் வாழியே
கருணையினா லுபதேசக் கதியளித்தான் வாழியே*
நானிலத்திற் குருவரையை நாட்டினான் வாழியே
நலந்திகழு நாதமுனி நற்பதங்கள் வாழியே.

# உய்யக்கொண்டார் வைபவம்





திருவெள்ளறை — உய்யக்கொண்டார்

**நம: பங்கஜ நேத்ராய நாத2ஸ்ரீபாத3பங்கஜே।**
**ந்யஸ்த ஸர்வப4ராயாஸ்மத்குலநாதா2ய தீ4மதே ॥**

[நாத2முனிகளின் திருவடித்தாமரையில் தன் ஸர்வ ப4ாரங்களையும் வைத்தவராய், நம் குலநாத2ரான புண்ட3ரீகாக்ஷராம் பேரறிவாளர்க்கு நமஸ்காரம்.]

**நமஸ்யாம்யரவிந்த3ாக்ஷம் நாத2ப4ாவே வ்யவஸ்தி2தம் ।**
**ஶுத்3த4ஸத்த்வமயம் ஶௌரேரவதாரமிவாபரம் ॥**

[யதிராஜஸப்ததி 6]

[நாத2ப4ாவத்தில்—பரத்வத்தில்—நிலைநிற்கும் புண்ட3ரீகாக்ஷனை எம்பெருமானைப்போலே, நாத2ப4ாவமாகிற நாத2முனிகளின் நினைவில் நிலைநிற்பவரும், ஶுத்3த்4 ஸத்வமயராயிருப்பவரும், ப4க3வானுடைய மற்றொரு அவதாரம் போன்றுள்ளவருமான புண்ட3ரீகாக்ஷரை (உய்யக்கொண்டாரை) வணங்குகிறேன்.]

நாத2முனிகளுடைய ப்ரத2மசிஷ்யரான உய்யக்கொண்டார், நாத2முனிகள் அவதரித்து அறுபத்துமூன்று வருஷங்களுக்குப் பின்பு பராப4வ வருடத்தில் (கி. பி. 886) சித்திரை மாதம் கார்த்திகை நக்ஷத்திரம் ஶுக்லபக்ஷப்ரத2மை புதன்கிழமையிலே 'ஜயத்ஸேநர்' என்னும் நித்யஸூரியின் அம்ஶமாக ஸ்ரீரங்க3த்திற்கு வடக்கேயுள்ள 'திருவெள்ளறை' என்னும் தி3வ்யதே3ஶத்திலே பூர்வஶிக2 ஸ்ரீவைஷ்ணவ ப்3ராஹ்மண குலத்திலே அவதரித்தார்.

ஆசார்ய பரம்பரையிலே நாத2முனிகளாகிற மலையிலிருந்து பெருகுகிற அருவி ஸ்தானத்திலே அமைந்தவர் உய்யக்கொண்டார் என்னும் மஹாசார்யர். இவருடைய வைப4வத்தைச் சுருக்கமாக அநுப4விப்போம்.

## அவதார ஸ்த2லம்

த3க்ஷிணதே3ஶம் முழுவதும் காடாயிருந்த காலத்திலே, ஸ்ரீராம பிரானுக்கும் முன்னேயும், ஶரணமடைந்த புறாவுக்காகத் தன் உடலையே தியாகம்செய்யத் துணிந்தவனாகப் பிரஸித்திபெற்றவனான சிபிச்சக்ரவர்த்தியால், கங்காயமுனைகளின் மத்தியப்பிரதேசத்திலிருந்து மூவாயிரத்து எழுநூறு பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவ ப்3ராஹ்மண குடும்பங்கள் திருவெள்ளறையில் கோயில்கொண்டு எழுந்தருளியிருந்த புண்ட3ரீகாக்ஷப் பெருமாளுக்குக் கைங்கர்யம் செய்வதற்காக ப்ரதிஷ்டை செய்விக்கப்பட்டன. இப்படி ஆதிகாலத்தில் ஏற்பட்ட தி3வ்யதே3ஶமாகையாலே இன்றும் ஜனங்களால் 'ஆதி திருவெள்ளறை' என்று வழங்கப்படுகிறது இத்தலம். பெரியாழ்வாராலும், திருமங்கையாழ்வாராலும் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற பெருமையை உடையது இந்த தி3வ்யதே3ஶம்.

## அவதார குலம்

சோழதேசத்திற்கு ஆதிகாலத்தில் வந்தவர்களாகையாலே அன்றும் இன்றும் இக்குலத்தைச் சேர்ந்தவர்கள் சோழியர்கள் என்று அழைக்கப்படுகின்றனர். மிகவுயர்ந்த பரமபதத்திலிருக்கும் ஸ்ரீமந் நாராயணன் கீழிருக்கும் தேவர்களில் உயர்ந்தவனாயிருப்பது போலவும், ஸம்ஸாரி சேதனர்களிடையே உயர்ந்த உலகிலிருக்கும் தேவர்கள் தாழ்ந்தவுலகிலிருக்கும் மனிதர் முதலானோரைக் காட்டிலும் சிறந்தவராயிருப்பதுபோலவும், விராட்புருஷனின் உத்தமாங்க₃மான முக₂த்திலிருந்து உண்டான ப்₃ராஹ்மணன்,கீழுள்ள அவயவங்களான கைகள், துடைகள், கால்கள் ஆகியவற்றிலிருந்து உண்டான மற்ற வர்ணங்களைக்காட்டிலும் சிறந்தவனாயிருப்பதுபோலவும்,ஸம்ஸாரத்தை யளிக்கும் குறுக்கே படரும் நாடிகளைக்காட்டிலும், மோக்ஷமளிக்கும் ஊர்த்₄வமுக₂மான ஸுஷும்நா நாடி சிறந்ததாயிருப்பது போலவும், குறுக்கே வளரும் திர்யக்குகளைக் காட்டிலும் உயரவளரும் மனிதர் சிறந்தவராயிருப்பதுபோலவும், குறுக்கே படரும் திர்யக்புண்ட்₃ரங்களைக் காட்டிலும் உயரநோக்கியிருக்கும் ஊர்த்₄வபுண்ட்ரம் சிறந்த தாயிருப்பதுபோலவும், பக்கம்நோக்கியும் கீழ்நோக்கியுமிருக்கும் மற்ற சிகை₂களைக் காட்டிலும் உயரநோக்கியிருக்கும் ஊர்த்₄வஶிகை₂ சிறந்ததாகும். ஆத்மோஜ்ஜீவனத்துக்கு ப்₃ராஹ்மணுதி₃வர்ணம் போலே சிகை₂யின் உயர்வும் அப்ரயோஜகம் என்பது ஒருபுறமிருந்த போதிலும், அந்தந்த வஸ்துக்களுக்குள்ள உயர்வு தாழ்வுகள் இயல்வானவையன்றோ. ஆழ்வார்களுடைய சிறப்புக்களைப் பேசவந்த தனியன்களில் அவர்கள் புரஶ்ஶிக₂ர்களாகில் அது குறிப்பிட்டுக் கூறப்படுவதிலிருந்தும் இந்த சிகையின் ஏற்றம் விளங்கும். ஆழ்வார்களில் ப்₃ராஹ்மணர்களாயிருந்த மது₄ரகவிகள்,பெரியாழ்வார், தொண்டரடிப்பொடிகள் ஆகிய மூவரும் புரஶ்ஶிக₂ர்கள் என்பதிலிருந்தும் ஆதிகாலத்தில் தமிழ்நாட்டில் புரஶ்ஶிக₂ர்களே மிகுந்திருந்தனர் என்பது விளங்கும். இத்தகைய பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவ ப்₃ராஹ்மணோத்தமகுலத்திலே அவதரித்தருளியவர் பரமாசார்யரான உய்யக்கொண்டார்.

## ஸம்ஸ்காரங்கள்

நமது ஸ்ரீவைஷ்ணவ பரம்பரையில் தே₃ஹஜன்மத்தைக் காட்டிலும், ஜ்ஞாநஜந்மமே சிறந்ததாகக் கருதப்படுகிறதாகையால், உய்யக்கொண்டாரின் ஆசார்ய சிஷ்யர்களைப் பற்றிக் குறிக்கப் பட்டுள்ளதுபோலே பெற்றோரைப்பற்றியும் மக்களைப்பற்றியும் விபரங்

கள் ப்ராசீன க்₃ரந்த₂ங்களில் குறித்துவைக்கப்படவில்லை. "நல்லார்கள் வெள்ளறை" "சதுரர்கள் வெள்ளறை" என்று பெரியாழ்வாரால் மங்க₃ளாசாஸனம் செய்யப்பெற்ற மஹநீயர்கள் வாழ்ந்த தி₃வ்ய தே₃ஶமாதையாலே, பரமபுருஷனுக்கு மங்க₃ளாஶாஸன கைங்கர்யங்கள் செய்துவந்த பரமைகாந்திகளான பெற்றோர்களுக்குப் புத்திரரத்னமாய் இவர் அவதரித்தார் என்று கொள்ளலாம். அத்தகைய பெற்றோர்—குழந்தை பிறந்தவுடன் ஜாதகர்மம் செய்து,

"ஶுத்₃த₄ஸத்த்வமயம் ஶௌரேரவதாரமிவாபரம்"

[யதிராஜஸப்ததி 6]

என்று ஸ்ரீ வேதா₃ந்ததேசிகர் அருளிச்செய்தபடியே, இவருடைய ஶுத்₃த₄ஸத்த்வமயமான திருமேனியையும், திருக்கண்களையும் கண்டு 'அப்புண்ட₃ரீகாக்ஷனே இக்குழந்தையாய் அவதரித்தான்போலும்!' என்று அறுதியிட்டு, புண்ட₃ரீகாக்ஷன் என்றே திருநாமமிட்டு, உரிய காலத்தில் அந்நப்ராஶனம், சௌளம், உபநயனம் முதலான ஸம்ஸ்காரங்களைச் செய்து ஸதா₃சார்யனை ஆஶ்ரயிப்பிக்க அவகாசம் பார்த்து நின்றனர்.

### ஸதா₃சார்யஸமாஶ்ரயணம்

அக்காலத்திலே, காட்டுமன்னார்குடியென்னும் வீரநாராயணபுரத்திலே க₃ஜமுக₂ரென்னும் நித்யஸூரியின் அம்ஶமாக அவதரித்தவராய், ஜ்ஞாநவைராக்₃யராசியாய், ஆழ்ந்த ப₄க₃வத்₃ப₄க்திக் கடலாய், பரமயோகி₃யாய், நம்மாழ்வாரிடமிருந்தே யோக₃த₃ஶையில் நாலாயிர தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களையும் அவற்றின் அர்த்த₂த்தையும், ரஹஸ்யங்களையும் உபதேசம் பெற்றவராய் எழுந்தருளியிருந்த நாத₂முனிகள் என்னும் ஸ்ரீரங்க₃நாத₂முனிகளிடத்திலே நமது புண்ட₃ரீகாக்ஷரை ஆஶ்ரயிப்பித்தனர். இவரும், "நம: பங்கஜநேத்ராய நாத₂ஸ்ரீபா₃த பங்கஜே ந்யஸ்தஸர்வப₄ராய" [நாத₂முனிகளுடைய திருவடித் தாமரையிலே தம்முடைய எல்லா ப₄ாரங்களையும் வைத்தவரான புண்ட₃ரீகாக்ஷருக்கு] "நமஸ்யாம்யரவிந்தா₃க்ஷம் நாத₂ப₄ாவே வ்யவஸ்தி₂தம்" [நாத₂முனிகளின் நினைவின்படி நின்றவரான புண்ட₃ரீகாக்ஷருக்கு] என்கிறபடியே நாத₂முனிகளையல்லது அறியாதவராய் கு₃ருகுலவாஸம் செய்துவந்தார்.

### புண்ட₃ரீகாக்ஷர் உய்யக்கொண்டாரானது

ஸ்ரீமந்நாத₂முனிகளின் சிஷ்யர்களில் ஸ்ரீ புண்ட₃ரீகாக்ஷரும், குருகைக்காவலப்பனும் முக்கியமானவர்கள். ஸ்ரீமந்நாத₂முனிகளிடம் இரண்டு நிதி₄கள் இருந்தன. ப₄க₃வத்ப்ராப்திக்கு உறுப்பான

ப$_4$[illegible]யோக$_3$ம் ஒன்று: ப$_4$க$_3$வத்ஸ்வரூபரூபகு$_3$ணவிபூ$_4$திகளைத் தெளி [illegible] நாலாயிரம் பாசுரங்களடங்கிய திவ்யப்ரபந்தங்கள் மற் [illegible] முதல் நிதி$_4$யாலே சேதனன் தானொருவன் மோக்ஷமடைய [illegible] இரண்டாவதாலே உலகையே உய்விக்கமுடியும். இவற்றில் [illegible] வேண்டும்? என்று குருகைக்காவலப்பனை வினவினார் ஸ்ரீமந்நாத$_2$ [illegible] ப$_4$க்தியோக$_3$த்தைப்பெற்று உய்ந்து போகிறேன் என்றார் [illegible] அப்படியே உபதேசம் பெற்று உஜ்ஜீவனமடைந்தார். 'நீரும் [illegible]த்தையே பெற்றுப்போகிறீரோ?' என்று ஸ்ரீபுண்ட$_3$ரீகாக்ஷரை [illegible] வினவினார் ஸ்ரீமந்நாத$_2$முனிகள். 'பிணங்கிடக்க மணம் புணர்வா [illegible]? உலகமே ஆத்மநாசமடைந்து பிணக்காடாயிருக்கும் [illegible], அடியேன் ஒருவன் எம்பெருமானோடு ஆத்மவிவாஹம் செய்து [illegible]டு மோக்ஷமடைவது சரியாகுமோ? அடியேன் எப்படியானாலும் [illegible]யில்லை; உலகம் உய்யும்படி திவ்யப்ரபந்தங்களை உபதேசிப்பீர்' [illegible] அப்பெரியவர். இதைக்கேட்ட ஸ்ரீமந்நாதமுனிகள் அவரை [illegible]த்து, "புண்ட$_3$ரீகாக்ஷரே! நீரே உலகையும், உலகை [illegible]வனான நாராயணனையும், அவனைச் சொல்லும் அருளிச்செயல் [illegible], அதைப்பெற்ற என்னையும் உய்யக்கொண்டவர். உம்மாலேயே [illegible] அரும்பாடுபட்டுப்பெற்ற அத்தமிழ்மறைகள் உலகெங்கும் பரவி [illegible]வரையும் உய்விக்கப்போகின்றன இன்று முதல் நீர் 'உய்யக் [illegible]டார்' என்னும் திருநாமத்தாலே பிரசித்திபெற்று விளங்கக் [illegible]" என்று அருளிச்செய்து திவ்யப்ரபந்தங்களை உய்யக் [illegible]டார்க்கு உபதேசித்தருளினார். உய்யக்கொண்டாருடைய [illegible] சுயநலம்பேணாத பரந்த மனப்பான்மையாலே இன்று நாம் [illegible]செயல்களாலே உய்ந்துபோகிறோம். இதனாலேயே இவர் [illegible]ணவ ஸமூஹம் முழுவதற்கும் பரமாசார்யராய், வாக்ய [illegible]பரைபிலும், ஸ்லோககு$_3$ருபரம்பரையிலும் நாத$_2$முனிகளுக்கு [illegible] அநுஸந்தி$_4$க்கப்படுகிறார்.

### [illegible]விஷ்யதா$_3$சார்ய விக்$_3$ரஹத்தைப் பெற்றது

[illegible]த$_2$முனிகள் யோக$_3$த$_3$சையிலே நம்மாழ்வாரிடம் திருவாய்மொழி [illegible]சம் பெறும்போது, "பொலிக பொலிக" என்னும் திருவாய்மொழி [illegible]ன், இந்தத் திருவாய்மொழியில் "கலியும் கெடும் கண்டு [illegible]மின்" என்று நான் சொன்னதை மெய்யாக்க ஓர் மஹானுப$_4$ாவர் [illegible]க்கப்போகிறார் என்றார் ஆழ்வார். அவரை ஸேவிக்கவேண்டு [illegible] நாதமுனிகள் விரும்ப, ஆழ்வாரும் அப்படியே ஸேவை ஸாதிக்க "[illegible]ரைக் காட்டிலும் அழகிய இந்தத் திருமேனியை அடியேன் [illegible]தும் ஸேவிக்க வழியிடவேணும்" என்று நாதமுனிகள்

ப்ரார்த்திக்க, ஆழ்வாரும் சில்பிகளை ஸ்வப்நமுகே$_2$ந நியமித்து ப$_4$விஷ்யதா$_3$சார்யராகிய எம்பெருமானாருடைய விக்ரஹத்தைச் செய்வித்து நாதமுனிகளிடம் கொடுத்தருளி, 'இவரை நம்முடைய அடியாக நினைத்திரும்' என்று அருளினார் என்று சரமோபாய நிர்ணயத்திலே நாயனாராச்சான்பிள்ளை அருளிச்செய்வர். தம்முடைய சரமத$_3$சையிலே நாதமுனிகள் தம்முடைய ப்ரதா$_4$னசிஷ்யரான உய்யக்கொண்டாரை அழைத்தருளி, 'ஒருவர்க்கும் வெளியிடாதே கிடீர்!' என்று சூழரவுகொண்டு, ஆழ்வார் தமக்கு ப்ரஸாதி$_3$த்தருளிய ப$_4$விஷ்யதா$_3$சார்ய விக்$_3$ரஹத்தை ப்ரஸாதி$_3$த்தருளி, 'இதை என்னுடைய பௌத்ரனுக்கு நாம் விரும்பின விஷயம் என்று காட்டிக் கொடும்' என்று அருளிச்செய்து, சடகோபன் பொன்னடியான அவ்விக்$_3$ரஹத்தை தியானம் பண்ணிக்கொண்டு, 'ஆழ்வார் திருவடிகளே சரணம்' என்று பரமபதித்தருளினார் என்றும் அருளிச்செய்வர். உய்யக்கொண்டாரும் தம் சரம த$_3$சைவரையில் நாதமுனிகளுக்குப் பௌத்ரர் அவதரிக்காமையாலே, தம் ப்ரதா$_4$னசிஷ்யரான மணக்கால் நம்பியிடம் அவ்விக்$_3$ரஹத்தை அளித்து நாதமுனிகளுக்குப் பிறக்கப் போகும் பௌத்ரரான யமுனைத்துறைவரிடம் அதை அளிக்கும்படி நியமித்தருளினார் என்றும் அவரும் அவ்வண்ணமே அளித்தார் என்றும் அருளிச்செய்வர்.

## உய்யக்கொண்டாரின் சிஷ்யர்கள்

"உய்யக்கொண்டார் ஸ்ரீபாத$_3$த்தை ஆஶ்ரயித்தவர்கள் ஐவர். அவர்களாகிறார் — மணக்கால்நம்பி, திருவல்லிக்கேணிப் பாண் பெருமாளரையர், சேட்டலூர் செண்டலங்காரர், புண்ட$_3$ரீகதா$_3$ஸர், உலகப்பெருமாள் நங்கை" என்று கு$_3$ருபரம்பராஸாரத்திலே ஸ்ரீ வேதாந்ததேசிகர் அருளிச்செய்வர். ஆறாயிரப்படி கு$_3$ருபரம்பராப்ரபா$_4$வத்திலும் இப்படியே காண்கிறது. பன்னீராயிரப்படி கு$_3$ருபரம்பராப்ரபா$_4$வத்திலும், பெரிய திருமுடியடைவிலும் கோ$_3$மட$_2$ம் திருவிண்ணகரப்பன் என்பவரும் சிஷ்யராகக் கூறப்படுகிறார். இவர்களில் மணக்கால்நம்பி ப்ரதா$_4$னமானவர். இவர்க்கு இயற்பெயர் 'ஸ்ரீராமன்' என்பதேயாகும். இவர் பன்னிரண்டு வருடங்கள் உய்யக்கொண்டார் திருவடிகளில் ஸர்வவித$_4$ கைங்கர்யங்களையும் செய்து கொண்டிருந்தவர். ஒரு சமயம் உய்யக்கொண்டார் தேவிகளான ஆண்டாள் பரமபதி$_3$த்தவளவிலே, திருமாளிகைக் கைங்கர்யமெல்லாம் தாம் ஒருவராகவே செய்து வந்தார் மணக்கால்நம்பி. அப்போது ஒருநாள் உய்யக்கொண்டாருடைய சிறுமிகளான பெண்பிள்ளைகள் இருவரையும் நீராட்டி அழைத்துக்கொண்டு வருகிற வழியிலே

வாய்க்கால் சேருயிருக்கக்கண்டு அவர்கள் திகைத்துநிற்க, தாம் படியாய்க்கிடந்து அவர்களைத் தம் முதுகிலே அடியிட்டு எழுந்தருள் வித்துக்கொண்டுபோக, ஆசார்யபுத்ரிகளின் மணற்கால் பொலிய நின்ற திருமேனியை உடையராயிருந்தமையாலே, அன்றுமுதல் இவர்க்கு மணற்கால்நம்பி என்றும், இவர் அவதரித்த ஊருக்கு மணற்கால் என்றும் திருநாமம் ஏற்பட்டது என்று பெரியோர்கள் அருளிச் செய்வர். இத்தகைய ஆசார்யநிஷ்டை₂யாலே உய்யக்கொண்டா ருடைய பரமாநுக்₃ரஹத்திற்குப் பாத்திரமானுர் மணக்கால்நம்பி.

**சரமத₃ஶை**

உய்யக்கொண்டார் திருநாட்டுக்கு எழுந்தருளுகிறபோது, 'இனி த₃ர்ஶநப்ரவர்த்தகராவார் ஆர்' என்று மணக்கால்நம்பி விண்ணப்பம் செய்ய, "மற்ற முதலிகளையும் கூட்டிக்கொண்டு நீரே இத்தர்ஶனத்தை நடத்தக்கடவீர். பின்பு நாதமுனிகளின் திருக்குமாரரான ஈஶ்வர முனிகளுக்கு ஒரு குமாரர் அவதரிப்பார், அவருக்கு யமுனைத் துறைவர் என்று திருநாமம் சாத்தச்செய்து, ப₄விஷ்யத₃ாசார்ய விக்ரஹத்தையும் அவரிடம் கொடுத்து, அந்த ப₄விஷ்யத₃ாசார்யரைத் தேடிக் கண்டுபிடித்து அவரிடம் தர்ஶநநிர்வாகத்தை ஒப்படைக்க வேண்டியது அவரது கடமை என்று நாத₂முனிகள் நியமித்ததாகச் சொல்லி, அவருக்கு எல்லா அர்த்தங்களையும் உபதேசியும்" என்று நியமித்தருளி, ஸ்ரீமந்நாதமுனிகளின் திருவடிகளை தியானித்துக் கொண்டு பத்மாஸனத்தில் எழுந்தருளியிருப்பவராய் அணையிலே சாய்ந்தருளித் திருநாட்டுக்கு எழுந்தருளினுர். உய்யக்கொண்டார்— க்₃ரந்த₂ம் எதுவும் அருளியதாகத் தெரியவில்லை.

## ஐதிஹ்ய நிர்வாஹங்கள்

1. வார்த்தாமாலை (136b), ப்ரமாண ஸாரமாகையாலே த்₃வயம் ப்ரமாணம் என்றும், அதற்கு விஷயம் அர்ச்சாவதாரமாகையாலே அதுவே ப்ரமேயம் என்றும், த்₃வயத்தின் அர்த்த₂த்தை அறிந்து உபதே₃ஶிப்பவன் ஆசார்யனுகையாலே அவனே ப்ரமாதா என்றும் உய்யக்கொண்டார் அருளிச்செய்வர்.

2. வார்த்தாமாலை (441a). நாத₂முனிகள் வைபவம் ஐதிஹ்ய நிர்வாஹம் 4-ல் சொல்லப்பட்ட வார்த்தையை உய்யக்கொண்டாருக்கு நாதமுனிகள் அருளிச்செய்தார் என்று உள்ளது.

3. சரமோபாயநிர்ணயம். பின்பு உய்யக்கொண்டார், நாத₂ முனிகள் ஸ்ரீபாத₃த்து முதலிகளும் தாமுமாக த₃ர்ஶநார்த்த₂ங்களை

ப்ரவர்த்திப்பித்துக்கொண்டு ஸுகமே எழுந்தருளியிருக்கிற நாளிலே, உய்யக்கொண்டார் ஸ்ரீபாதத்து முதலிகள் மணக்கால் நம்பி, திருவல்லிக்கேணிப்பாண்பெருமானரையர் ஸ்வாசார்யரிடத்திலே திருவாய்மொழி கேட்கிறவளவிலே "பொலிக பொலிக" என்கிற திருவாய்மொழி ஆனவாறே, "கலியும் கெடும்" என்கிற இடத்துக்கு அர்த்தம் அருளிச்செய்கிறவளவில், நாதமுனிகள் தமக்கு அருளிச்செய்த ஸ்வப்ன வ்ருத்தாந்தங்களையும் அருளிச்செய்ய, மிகவும் விஸ்மயப்பட்டு "நாதமுனிகள் பெற்றபேறு ஆர்தான் பெறப்போகிறார்கள்? பவிஷ்யதாசார்ய வ்யக்தியை ஸ்வப்நமுகேந ஸாக்ஷாத்கரித்தவிடத்திலே அத்யாகர்ஷகமாயிருந்தது என்றருளிச் செய்யும்போது, ப்ரத்யக்ஷமாய் ஸாக்ஷாத்கரிக்கும்படியானால் லோக மாக மேல்விழுந்து ஆஶ்ரயிக்குமாகாதே" என்றருளிச்செய்தார். அவ்வளவிலே உய்யக்கொண்டார் "அந்த மஹாநுபாவனுடைய ஸம்பந்தம் ஸித்தித்தாலொழியத் தவிராதிறே" என்று அருளிச் செய்தார். உய்யக்கொண்டார் சரமதசையில் ப்ரதம சிஷ்யரான மணக்கால்நம்பியை அழைத்தருளிப் பன்னிரண்டு ஸம்வத்ஸரம் பழுக்க ஸ்வாநுவர்த்தநம் பண்ணிப் போந்தவராகையாலே, நாதமுனிகள் தமக்கருளிச்செய்த ரஹஸ்யார்த்தங்களையும் வெளியிட்டருளி, ஸ்வப்நவ்ருத்தாந்தங்களையும் அருளிச்செய்ய, மணக்கால்நம்பியும், இந்த தர்ஶந ப்ரவர்த்தகராரென்று கேட்க, நம்முடைய பக்கலிலே பகவத் ஸம்பந்தம் பண்ணிக்கொண்ட நீரே நடத்தக்கடவீர். பின்பு சொட்டைக் குலத்திலே நாதமுனிகளுக்குத் திருப்பேரனாரான யமுனைத்துறைவர் ப்ரவர்த்தகராவார். அவருக்குப் பின்பு கரையத் தேவையில்லையென்று அருளிச்செய்தார். அதாவது—நாதமுனிகள் அருளிச்செய்தபடியே ப்ரபன்ன குலமாகப் பேறுபெறும்படி ஒரு மஹானுபாவர் திருவவதரிக்கப் போகிறார். அவராலே தர்ஶனம் விளங்கப்போகிறது—என்று அருளிச்செய்தார் என்றபடி. பின்பு — உய்யக்கொண்டார் மணக்கால் நம்பியை அழைத்தருளி, அவ்விக்ரஹத்தை ப்ரஸாதித்தருளி, "நம் காலத்திலே யமுனைத்துறைவர் திருவவதரிக்கப் பெற்றதில்லையே. நீர் இவ்விக்ரஹத்தை, 'உங்கள் திருப்பாட்டனார் விரும்பின விஷயம்' என்று தஞ்சமாகக் காட்டிக்கொடுத்து, நாம் சொன்ன ஸ்வப்ன வ்ருத்தாந்தங்களையும் ரஹஸ்யார்த்தங்களையும் வெளியிடும்" என்றருளிச்செய்தார்.

4. ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவம். அநந்தரம் உய்யக் கொண்டாரும், நாதமுனிகள் ஸ்ரீபாதத்திலே ஆஶ்ரயித்த முதலி

களையுங் கூட்டிக்கொண்டு தர்மநார்த்தங்களையும் திருவாய்மொழி முதலான திவ்ய ப்ரபந்தங்களையும் அருளிச்செய்து கொண்டிருக்குங் காலத்திலே இவர் ஸ்ரீபாதத்திலே ஆஶ்ரயித்த முதலிகள் மணக்கால்நம்பி. திருவல்லிக்கேணிப் பாண்பெருமாளரையர், செட்டைப்பூசிச்சண்டலங்காரர் (சேட்லூர் செண்டலங்காரர்). ஸ்ரீபுண்டரீகதாஸர், உலகுபெருமாள் நங்கை என்கிற இவ்வைவர்கள். [மேல் பகுதிகள் மணக்கால்நம்பி வைபவத்தில் காண்க.]

5. பெரியதிருமுடியடைவு ஜயத்ஸோம்பூதரான உய்யக்கொண்டாருக்குத் திருவவதார ஸ்தலம் - கோயிலுக்கு வடக்கு திருவெள்ளறை. திருநக்ஷத்ரம் - கலியுகம் மூவாயிரத்து (எண்ணூற்று?) இருபத்தேழுக்குமேல் பராபவ வருஷம் சித்திரை மாஸம் வெள்ளிக் கிழமை பௌர்ணமி கார்த்திகை. திருநாமங்கள்-உய்யக்கொண்டார். புண்டரீகாக்ஷர். பத்மாக்ஷர். ராஜீவாக்ஷர். அரவிந்தாக்ஷர்- ஆசார்யர்-ஸ்ரீநாதமுனிகள். திருவாராதனம்-நம்மாழ்வார். சிஷ்யர்- மணக்கால்நப்பி, திருவல்லிக்கேணிப் பாண்பெருமாள் அரையர். சேட்டலூர் செண்டலங்காரதாஸர், ஸ்ரீபுண்டரீகதாஸர், கேமடம் திருவிண்ணகரப்பன், உலகப்பெருமாள் நங்கை. இருப்பிடம்-கோயில். இவர் நூற்றைந்து திருநக்ஷத்ரமெழுந்தருளியிருந்தார்.

6. திவ்யஸூரிசரிதம். 16-வது ஸர்க்கம். 39-வது ஶ்லோகம் நாதமுனிகள் ஶிஷ்யர்களில் குருகைக்காவலப்பன் ஸமாதிநிலையில் ஆழ்ந்துவிட்டபடியால் அவரது மற்றொரு ஶிஷ்யரான புண்டரீகாக்ஷர் (உய்யக்கொண்டார்) நாதமுனிகளிடம் பெற்ற அர்த்தங்களைப் பிரசாரம் செய்தார்.

7. ப்ரபன்னாம்ருதம், 111-வது அத்தியாயம். புண்டரீகாக்ஷர் (உய்யக்கொண்டார்) சரித்ர வர்ணனம்.

8. வாதிகேஸரி ஜீயரின் டீகையும், திருமாலையாண்டான் வம்ஶஸ்தருமான யாமுநாசார்யர் அருளிய ப்ரமேயரத்நம் 2-வது ப்ரகரணம். "ப்ரவர்த்தகனை வலிய அழைத்தாகிலும் இவ்வர்த்தத்தை உபதேஶிக்கை ஆசார்யக்ருத்யம். எங்ஙனேயென்னில் — குளப்படியில் நீரைத் தேக்கினால் நின்று வற்றிப்போம்; வீராணத்தேரியிலே தேக்கினால் நாட்டுக்கு உபகாரகமாம். ஆகையால் இவ்வர்த்தத்தை ஆளவந்தாருக்கு உபதேஶியும்" என்று உய்யக்கொண்டாரைப் பார்த்து நாதமுனிகள் அருளிச்செய்தார்.

9. ஷ 3-வது ப்ரகரணம். "ப$_4$க்திநிஷ்ட$_2$னுக்குக் கர்மாவஸானத்திலே ப்ராப்யம்" என்று உய்யக்கொண்டார் அருளிச் செய்வர்.

10. திருப்பாவைத் தனியன்.

**அன்னவயற் புதுவை யாண்டாள் அரங்கற்குப்**
**பன்னு திருப்பாவைப் பல்பதியம் — இன்னிசையால்**
**பாடிக் கொடுத்தாள் நற்பாமாலை பூமாலை**
**சூடிக் கொடுத்தாளைச் சொல்லு.**

**சூடிக் கொடுத்த சுடர்க்கொடியே! தொல்பாவை**
**பாடி யருளவல்ல பல்வளையாய்! — நாடி நீ**
**வேங்கடவற் கென்னை விதியென்ற விம்மாற்றம்**
**நாம் கடவா வண்ணமே நல்கு.**

11. திருநக்ஷத்ரத் தனியன்.

**மேஷ மாஸே ஸரோஜாக்ஷம் க்ருத்திகாஜாதமாஶ்ரயே ।**
**நாத$_2$யோகி$_3$ பத$_3$ாம்பே$_3$ாஜ த்$_3$வந்த்$_3$வப்ரவண மாநஸம் ॥**

[சித்திரை மாதம் கார்த்திகை நக்ஷத்திரத்தில் அவதரித்த்வராய், நாத$_2$முனிகளின் இருதிருவடித் தாமரைகளில் ஈடுபட்ட மனமுடையவரான புண்ட$_3$ரீகாக்ஷரான உய்யக்கொண்டாரை ஆஶ்ரயிக்கிறேன்.]

12. வாழித்திருநாமம்.

**வாலவெய்யோன்தனை வென்ற வடிவழகன் வாழியே**
**மால் மணக்கால்நம்பி தொழு மலர்ப்பதத்தோன் வாழியே**
**சீலமிகு நாதமுனி சீருரைப்போன் வாழியே**
**சித்திரையில் கார்த்திகை நாள் சிறக்க வந்தோன் வாழியே**
**நாலிரண்டு மையைந்தும் நமக்குரைத்தான் வாழியே**
**நாலெட்டினுட்பொருளை நடத்தினன் வாழியே**
**மாலரங்க மணவாளர் வளமுரைப்போன் வாழியே**
**வையமுய்யக்கொண்டவர் தாள் வையகத்தில் வாழியே.**

[நாலிரண்டு — திருவெட்டெழுத்து. ஐயைந்து — 25 அக்ஷரமுள்ள த்$_3$வயம். நாலெட்டு — முப்பத்திரண்டு அக்ஷரமுள்ள சரமஶ்லோகம், ரஹஸ்யத்ரயமும் சொன்னபடி.]

# மேலையகத்தாழ்வான் கீழையகத்தாழ்வான் வைபவம்

இவர்கள் இருவரும் நாதமுனிகள் மருமக்கள் என்றும், இவர்கள் மூலம் நாதமுனிகள் தேவகானத்தில் இசையமைத்துப் பாடும் கிரமத்தைப் பரப்பினர் என்றும் பல கிரந்தங்களில் இருக்கிறது. "காளம் வலம்புரியன்ன நற்காதலடியவர்க்கு......" என்று வேதாந்த தேசிகரும் இவர்களை நாதமுனிகளுக்குக் காளமும் வலம்புரியும் போன்றவர்கள் என்று பாடினர். அரையர்களில் பெரும்பாலோர் இவர்கள் வமிசத்தவர்கள் என்றே விளங்குகிறது. நடாதூர் அம்மாளின் தத்வஸார கிரந்தத்தை வ்யாக்யானத்துடன் (கி. பி. 1900)ல் அச்சிட்ட புஸ்தகத்தின் முகவுரையில் வேங்கட சேஷாசாரியர் என்பவர் இவர்களைப் பற்றிப் பின்வருமாறு எழுதியிருக்கிறார்.

"ஸ்ரீமந்நாதமுனிகளுக்கு மேலையகத்தாழ்வான், கீழையகத்தாழ்வான் என்கிற வரதாசார்யர், கிருஷ்ணமாசார்யர் என்று பாகிநேயர் (மருமக்கள்) இருவர். அந்த வரதாசார்யர் ஸ்ரீதரயோகாப்தி என்றும், கிருஷ்ணமாசார்யர் ஸ்ரீதரயோககல்பதரு என்றும் யோகசாஸ்திரங்களைச் செய்தார்கள். வரதாசார்யர் குமாரரான நிர்மலதாஸர் ஸ்ரீமந் நாதமுனிகள் அருளிச்செய்த யோகசாஸ்த்ரத்துக்கு விருத்தி அருளிச் செய்தார். இவர் குமாரரான ஞானவராஹாசாரியர் நாதமுனிகளுடைய யோக சாஸ்த்ரத்துக்கும் பதஞ்ஜலி யோக சாஸ்த்ரத்திற்கும் ஐககண்ட்யம் செய்தார். குருகைக் காவலப்பன் என்னும் இவர் குமாரரான குருகேசர் ஸ்ரீஆளவந்தாருக்கு யோகசாஸ்த்ரத்தை பிரஸாதிக்கத் தான் நித்ய விபூதிக்கு எழுந்தருளும் தினத்தைக் குறிப்பிட்டு நியமித்திருக்க அக்காலத்தில் அவர் மறந்து வராமலிருந்தமையால் மேற்படி குருகைக்காவலப்பன் வரை யோகானுஷ்டானம் வந்து பிறகு நின்றுவிட்டது" என்று.

இதிலுள்ள விஷயங்களை, குறிப்பாக குருகைக்காவலப்பன் நாதமுனிகளின் மருமகனின் ப்ரபௌத்ரன் என்பதை ஆராயவேண்டும். மேலை, கீழையகத்தாழ்வான்களைப் பற்றிய ஐதிஹ்ய நிர்வாஹங்களைக் கீழே கொடுக்கிறோம்.

## ஐதிஹ்ய நிர்வாஹங்கள்

1. குருபரம்பராப்ரபாவம்:— நாத₂முனிகளும் தம்முடைய மருமக்களான கீழையகத்தாழ்வாரையும் மேலையகத்தாழ்வாரையும் அழைத்

தருளி, 'ஆழ்வார் நம்மை விசேஷகடாக்ஷம் பண்ணியருளி ப்ரஸாதி$_3$த்தருளின இத்தி$_3$வ்யப்ரப$_3$ந்த$_4$ங்களை இயலுமிசையுமாக்க வேணும்; அது செய்யுமிடத்து 'இன்கவிபாடும் பரமகவிகள் அருளிச்செய்ததாய் 'செஞ்சொலாலெடுத்த தெய்வநன்மாலையான தி$_3$வ்ய ப்ரப$_3$ந்த$_4$ங்களாகையாலே இத்தை தி$_3$வ்யகா$_3$நத்திலே சேர்த்துப் பாடவேணும்' என்று அவர்களையும் கூட்டிக்கொண்டு, ஸ்ரீவேத$_3$ வ்யாஸப$_4$க$_3$வான் வேத$_3$ங்களை உதா$_3$த்த அநுதா$_3$த்த ஸ்வரித ப்ரசயயுக்தங்களாக உச்சரிக்கலாம்படி பண்ணினாற்போலே நாத$_2$ முனிகளும் இத்தி$_3$வ்யப்ரப$_3$ந்த$_4$ங்களை தி$_3$வ்யகா$_3$னத்திலேயடைத்து இயலுமிசையுமாக்கிப் பாடுவித்தருள, இது லோகத்திலே ப்ரஸித்$_3$த$_4$ மாயிற்று.

2. சரமோபாய நிர்ணயம்:—இப்படி நாத$_2$முனிகள் நாலாயிரமும் ஆழ்வார் பக்கலிலே கேட்டருளி, மீளவும் வீரநாராயணபுரத்தேற எழுந்தருளினவளவிலே, ஆழ்வார் தம்மை விஷயீகரித்த ப்ரகாரங்களை மன்னனார் திருமுன்பே அருளிச்செய்து, ஸந்நிதி$_4$யிலே எல்லா வரிசைகளையும் பெற்றுத் தம்முடைய திருமாளிகையிலே எழுந்தருளித் தம்முடைய மருமக்களான கீழையகத்தாழ்வானையும் மேலையகத்தாழ்வானையும் அழைத்தருளி, ஆழ்வார் தம்மை விசேஷ கடாக்ஷம் பண்ணி க்ருபைபண்ணியருளின ப்ரகாரத்தையும், ஸ்வப்னமுகே$_2$ந ஸேவை ஸாதி$_3$த்த கட்டளையையும் அருளிச்செய்ய, அவர்களும் மிகவும் விஸ்மயப்பட்டு, 'இப்படிப்பட்ட மஹானுப$_4$ாவனுடைய ஸம்ப$_3$ந்த$_4$ம் ஆரோஹண க்ரமத்தாலேயாகிலும் உண்டாகப் பெற்றதே' என்று தேறியிருக்கலாமென்றார்கள்.

3. தேசிகன் அருளிய குருபரம்பரா ஸாரத்தின் கடைசிப்பாட்டு:—

**காளம் வலம்புரி யன்னநற் காத லடியவர்க்குத்**
**தாளம் வழங்கித் தமிழ்மறை யின்னிசை தந்தவள்ளல்**
**மூளும் தவநெறி மூட்டிய நாத முனிகழலே**
**நாளும் தொழுதெழு வோம்நமக் கார்நிகர் நானிலத்தே**

[தம்மிடம் மிகுந்த ப$_4$க்தியை உடையவர்களாய், தமக்குக் காளம், வலம்புரிச்சங்கு எனும் வாத்தியங்கள் போலிருந்த மேலையகத்தாழ்வானுக்கும், கீழையகத்தாழ்வானுக்கும் தாளத்தைக் கொடுத்து அருளிச்செயலுக்கு இனிய தே$_3$வகா$_3$னத்தை அமைத்துக்கொடுத்தவராய், எம்பெருமானிடம் ஈடுபடும் பக்திப்ரபத்தி நெறிகளைப் ப்ரப்பியவரான நாதமுனிகளின் திருவடிகளையே எப்போதும் தொழுவோம். நமக்கு ஒப்பு இவ்வுலகில் எவர் உளர்?]

4. ப்ரபந்நாம்ருதம்-அத்தியாயம் 109.38; 110.4-6.

# குருகைக்காவலப்பன் வைபவம்

இவர் நாதமுனிகள் சிஷ்யர் என்றும், அவரிடமிருந்து யோக ரஹஸ்யத்தைப் பெற்றார் என்றும் பல கிரந்தங்களிலுள்ளன. நாதமுனிகள் வைபவம்—ஐதிஹ்ய நிர்வாஹப்பகுதியில் 9-ஆவது பாரா வில் எடுக்கப்பட்ட ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவத்தின் பகுதியைக் காண்க. 8-ஆவது பாராவில் எடுக்கப்பட்ட சரமோபாய நிர்ணயம் பகுதியிலும் உள்ளது. , திவ்யஸூரிசரிதம் 16-ஆம் ஸர்க்கம் 39-வது ச்லோகத்திலும், 87–94 ச்லோகங்களிலும் உள்ளது. ப்ரபந்நாம்ருதம் 110, 111, 115-வதுஅத்தியாயங்களிலும் உள்ளது. இனி மற்ற ஐதிஹ்ய நிர்வாஹங்களைக் காண்போம்.

## ஐதிஹ்ய நிர்வாஹங்கள்

1. பகவத்விஷயம் ஈடு (2-6-2):— இங்கே, ஆளவந்தார்க்குக் குருகைக்காவலப்பன் அருளிச்செய்ததாக அருளிச்செய்யும் வார்த்தை— "அப்பன் ஸ்ரீபாத$_3$த்திலே ஒரு ரஹஸ்யவிசேஷமுண்டு" என்று மணக்கால்நம்பி அருளிச்செய்ய, 'அது கேட்கவேணும்' என்று ஆளவந்தாரும் எழுந்தருள, கங்கைகொண்ட சோழபுரத்தேற, அப்பனும் அங்கே ஒரு குட்டிச்சுவரிலே யோக$_3$த்திலே எழுந்தருளியிருக்க, 'இவரை ஸமாதி$_4$ப$_4$ங்க$_3$ம் பண்ணவொண்ணாது' என்று சுவருக்குப் புறப்பே பின்னே நிற்க, அப்பனும் யோக$_3$த்திலே எழுந்தருளியிருக்கிறவர் திரும்பிப்பார்த்து, "இங்குச் சொட்டைக் குலத்தில் ஆரேனும் வந்தாருண்டோ?" என்று கேட்டருள, "அடியேன்" என்று ஆளவந்தாரும் எழுந்தருளிவந்து கண்டு, "நாங்கள் பின்னே தெரியாதபடி நிற்க இங்ஙன் அருளிச்செய்கைக்கு ஹேது வென்?" என்ன, "நானும் தானுமாக அநுப$_4$வியாநின்றால், பெரியபிராட்டியார் திருமுலைத் தடத்தாலே நெருக்கியணைத்தாலும் அவள் முகங்கூடப் பாராத ஸர்வேஶ்வரன், என் கழுத்தை அமுக்கி நாலு மூன்றுதரம் அங்கே எட்டிப்பார்த்தான்; இப்படி அவன் பார்க்கும்போது சொட்டைக்குடியிலே சிலர் வந்தாருண்டாகவேணும் என்றிருக்கவேணும் என்றிருந்தேன்காணும்" என்று அருளிச்செய்தார்.

2. திருவிருத்தம் 38-ஆம் பாட்டு நம்பிள்ளை ஈடு ஐதிஹ்ய விவரணம்:— "ஜகத்துக்கும் ஈஶ்வரனுக்கும் தொடர்பு எத்தகையது?" என்று ஒருவன் குருகைக்காவலப்பனைக் கேட்டான். "இந்த ஜகத்துக்கும் ஈச்வரனுக்கும் தொடர்பை நீயா கேட்பது?" என்று பதில் கூறினர். இதன் கருத்தாவது:- "ஈச்வரனை இந்த ஜீவாத்மா பிறக்கும்பொழுது யாதொரு சரீரத்தைப்பெற்று மரணத்தின்பொழுது

யாதொரு சரீரத்திலிருந்து கிளம்புகிறுனோ" (கீதை 15-8) என்று இந்த்₃ரியம் முதலானவற்றோடு கூடி வளர்வதாயிருக்கும் இந்த தேஹமாகிற இந்த ஜகத்திற்கு ஜீவாத்மாவை ஈச்வரனைச் சொல்லிற்றல்லவோ கீதை; இந்த சரீரத்திற்கும் இதற்கு ஈச்வரனுன ஜீவாத்மாவுக்கும் உள்ள தொடர்பாகிற சரீராத்மத்தன்மையே உலகிற்கும் ஸர்வேச்வரனுக்கும் உள்ளதாகும் என்பது பதிலின் கருத்து. அதே மனிதன் குருகைக்காவலப்பனைப் பார்த்து, "எம்பெருமானை எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருக்கும் நீர் அவனை நினைக்க எனக்கு ஒருவழி சொல்லவேண்டும்"என்று கேட்டான். அதற்கு அப்பன், "நான் உனக்கு எம்பெருமானை நினைக்க வழி சொல்லுகிறேன். நீ அவனை மறக்க எனக்கு வழி சொல்லுவாயாக" என்று பதில் கூறினுராம். இந்த பதிலின் கருத்தாவது:- "ஒரு பொருளைக்கண்டால், அது ஒரு பொருளாயிருப்பதும், அதற்கு ஒரு பெயருண்டாவதும் எம்பெருமான் அந்தராத்மாவாக இருத்தலாலேயே ஆகும். அப்படி இருக்கும்பொழுது அவனுக்குச் சரீரியாய் விசேஷணமான எந்தப் பொருளைப் பார்த்தாலும் சரீரமாய் விசேஷ்யனுன அவனுடைய நினைவும் வந்தே தீரவேண்டியிருக்க, நினைக்க ஒருவழி சொல்ல வேண்டுமோ?" என்று கருத்து.

3. வார்த்தாமாலை 209-ம் வார்த்தை):-ஆளவந்தார் திருவனந்தபுரத்துக்கு எழுந்தருளுகிறபோது, தெய்வவாரியாண்டானை மட₂த்துக்கு வைத்துத் திருவநந்தபுரத்துக்கு எழுந்தருளுகிற அளவிலே, ஸந்நிதி₄யில் முதலிகளைப்பார்த்து, 'குருகைக்காவலப்பன் நமக்கு இட்டுத் தந்த திருமுகத்தை எடுத்துக்கொண்டு வாருங்கோள்' என்று அருளிச்செய்தருளி, திருமுகத்தைப் பார்த்தருள, மாஸமும் தி₃வஸமும் அன்றுதானுயிருந்தபடியாலே 'ஒரு புஷ்பகவிமாநம் பெற்றிலோமே?' என்று போர ஶோகார்த்தராய் மீண்டெழுந்தருளாநிற்க.

4. வார்த்தாமாலை (403-ம் வார்த்தை):-"எளிவரும் இயல்வினன் நிலைவரம்பில பலபிறப்பாயொளிவரும்" என்கிறவிடமருளிச் செய்யாநிற்க, 'இப்படி கு₃ணவானுயிருக்கிற அவனை ஸாக்ஷாத்கரிக்க விரகில்லையோ?' என்று மணக்கால் நம்பியை ஆளவந்தார் கேட்டருள, 'எனக்கு ஶேஷத்வாநுஸந்த₄ாநமே அமையும்; நீர் அப்பன்பாடே செல்லும்'என்ன, இவரும் அங்கே செல்ல, அவரும் காலங்குறித்துவிட, இவரும் திருவநந்தபுரத்துக்கு எழுந்தருளி அங்கே அக்காலத்தை நினைத்து "அப்பன்பக்கலேறப்போக ஒரு புஷ்பகம் பெற்றிலோமே!" என்று க்லேஶிக்க, பெருமாளும், 'நாம்செய்தபடி காணுமிது; ஶேஷத்வஜ்ஞாநமே அமையும்' என்றருளினுர்.

5. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம்:— பின்பு நம்பெருமாள் திருவத்4யயநத் திருநாளிலே, திருவத்4யயனங் கேட்டருளும்போது ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையர் "கெடுமிடர்" என்கிற திருவாய்மொழியை அபி4நயித்துப் பாடியருளுகிறவர், ஆளவந்தார் திருமுகமண்டலத்தைப் பார்த்தருளி "நடமினோ நமர்களுள்ளீர் நாமுமக்கறியச் சொன்னோம்" என்று பலகாலும் பாடியருள, ஆளவந்தாரும் இத்தைக் கேட்டருளி 'ஆழ்வாருடைய தமர்களிலே, அந்தர்ப்பூ4தமாம்போது திருவநந்தபுரப்புக்கு ஸேவிக்கவேண்டியிருந்தது' என்று, அப்போதே திருவோலக்கத்தினின்றும் எழுந்திருந்து பெரியபெருமாளுக்கு தண்டன் ஸமர்ப்பித்து அவரநுமதி கொண்டு புறப்பட்டருளி, மடத்துக்குக்காவலாகத் தெய்வவாரியாண்டானை வைத்துத் திருவநந்தபுரத்துக்கு எழுந்தருளிப் படமுடையரவிற்பள்ளி பயின்ற அநந்தபுரத்தம்மானையும் த்3வாரத்ரயேண திருவடி தொழுது அங்கே எழுந்தருளியிருந்தவளவிலே, ஸந்நிதி4 முதலிகளைப் பார்த்து "குருகைக்காவலப்பன் நமக்கிட்டுத் தந்த திருமுகத்தைக்கொண்டு வாருங்கோள்" என்று அருளிச்செய்ய, முதலிகளும் கொண்டு வந்து ஸமர்ப்பிக்க, பார்த்தருளி, மாஸமும் தி3வஸமும் அன்றாயிருந்தபடியாலே 'ஒரு புஷ்பகவிமாநம் பெற்றிலோமே!' என்று போர ஶோகார்த்தராய் மீண்டு எழுந்தருளாநிற்க;

6. பெரியதிருமுடியடைவு:— குருகைக் காவலப்பனுக்குத் திருவவதார ஸ்த2லம் பாண்டியதேசத்தில் திருக்குருகூர். திருநக்ஷத்ரம் தை மாஸத்தில் விஶாக2ம். இருப்பிடம் ஸ்ரீமந்நாத2முனிகளுடைய திருப்பள்ளி. அது அன்றுமுதலாகச் சோழதேஶத்திலே திருக்காவேரிதீரத்தில் குருகைக் காவலப்பன் கோயிலென்று ப்ரஸித்3த4மாயிற்று. அவர்க்கு வித்3யை அஷ்டாங்க3யோக3ம். ஆசார்யர் நாத2முனிகள். திருவாராத4னம் சக்ரவர்த்தித் திருமகனார். வர்ணம் ப்3ராஹ்மணோத்தமர். புருஷகாரர் புண்ட3ரீகாக்ஷர். இவர் நூற்றைம்பத்தொரு திருநக்ஷத்ரம் எழுந்தருளியிருந்தார்.

தனியன்

**நாத2மௌநி பதா3ஸக்தம் ஜ்ஞாநயோகா3தி3 ஸம்பத3ம் |**
**குருகாதி4ப யோகீ3ந்த்3ரம் நமாமி ஶிரஸா ஸதா3 ||**

7. குருகைக்காவலப்பன் அருளிய மூன்றாம் திருவந்தாதித் தனியன்:-

**சீராரும் மாடத் திருக்கோவ லூரதனுள்**
**காரார் கருமுகிலைக் காணப்புக்கு—ஓராத்**
**திருக்கண்டே னென்றுரைத்த சீரான் கழலே**
**உரைக்கண்டாய் நெஞ்சே யுகந்து.**

8. திருநக்ஷத்திரத் தனியன்:—

ம்ருகே₃ விஶாகே₂ ஸம்பூ₄தம் நாத₂மௌநி பத₃ாஶ்ரிதம் ।
ஜ்ஞாந யோக₃ாதி₃ ஸம்பந்நம் குருகாத்₄யக்ஷமாஶ்ரயே ॥

9. வாழித்திருநாமம்:—

மகரமதில் விசாகம்நாள் வந்துதித்தான் வாழியே
மாறன்தாள் நாதமுனி மலரடியோன் வாழியே
நிகரில்நன் ஞானயோகம் நீண்டு செய்வோன் வாழியே
நிர்ணயமா யைந்துபொருள் நிலையறிவோன் வாழியே
அகமறுக்கு மிராமர்பதம் ஆசையுள்ளோன் வாழியே
ஆழ்வார்கள் மறையதனை ஆய்ந்துரைப்போன் வாழியே
செகதலத்தில் குருகூரில் செனித்த வள்ளல் வாழியே
செய்(ய)குருகைக் காவலப்பன் திருவடிகள் வாழியே.

# திருக்கண்ணமங்கையாண்டான் வைபவம்

நாதமுனிகளுடைய முக்கிய சிஷ்யர்களில் ஒருவரான இவர் திருக்கண்ணமங்கை என்னும் திவ்யதேசத்தில் அவதரித்தவர். இவரைப் பற்றிய பல செய்திகள் பல க்ரந்தங்களில் உள்ளன. ஸ்ரீமந்நாதமுனிகள் வைபவத்தில் ஐதிஹ்ய நிர்வாஹத்தில் 8 ஆவது பாராவிலுள்ள சரமோபாயநிர்ணயப்பகுதியில் காணலாம். இனி மற்ற ஐதிஹ்யநிர்வாஹங்களைக் குறிப்பிடுகிறோம்.

## ஐதிஹ்ய நிர்வாஹங்கள்

1. பகவத்விஷயம் (4-6-8) அடையவளைந்தான் அரும்பத உரை:- ஸ்ரீவைஷ்ணவர்கள் அபி₄மானம் ஶீக்₄ரப₂லப்ரத₃ம் என்றதுக்கு ஓர் ஐதிஹ்யம். "திருக்கண்ணமங்கையாண்டான் பத்தராவி கைப்புடையிலே ஸ்வவ்யாபாரத்தை விட்டுக் கண்வளர்ந்தருளினபோது அவருடைய ஶிஷ்யர், "எமக்கினி க₃தி ஏது?" என்ன, "நம்முடைய ஸமீபத்திலே இரும்" என்று அருளிச்செய்ய, அவர் அப்படியே செய்து அவருக்கு முன்பே பரமபத₃த்திற்குப் போனார்; திருக்கண்ணமங்கையாண்டான் பின்பு மூன்றும் நாளிலே எழுந்தருளினர்.

2. பகவத்விஷயம் (9-2-1):— திருக்கண்ணமங்கையாண்டான் அங்கே ஒரு திருமகிழடியிலே இருந்து சருகைத் திருவலகிடாநிற்க,

கூட வாசித்து நாஸ்திகனாயிருப்பான் ஒருவன், "பகவான் உபாயம். நாம் அநந்ய ப்ரயோஜனர். இப்பொழுது இந்த க்லேசத்துக்குப் ப₂லமென்?" என்ன, திருவலகிட்ட இடத்தையும் இடாத இடத்தையும் காட்டி, "இவ்விடமும் அவ்விடமும் இருந்தபடி கண்டாய்க்கு ஒரு ப₂லமில்லை என்று தோற்றியிருந்ததோ?" என்றான்.

3. திருமாலை 38ஆம் பாட்டு வ்யாக்யானம்:— (உன் கடைத் தலையிருந்து) திருக்கண்ணமங்கையாண்டான், ஒரு ஸம்ஸாரி தன் வாசலைப்பற்றிக் கிடந்ததொரு நாயை நலிந்தவனை வெட்டித் தானும் குத்திக்கொண்டபடியைக் கண்டு, "ஒரு தே₃ஹாத்மாபி₄மானியளவு இதுவானால் பரமசேதனன் யமாதி₃கள் கையில் நம்மை விட்டுக் கொடான்" என்று திருவாசலைப்பற்றிக் கிடந்தானிறே.

4. பெரியவாச்சான்பிள்ளை அருளிய மாணிக்கமாலை:—உபாயத்தை நிலையிட்டார்கள் பிராட்டி, த்ரௌபதி, திருக்கண்ணமங்கையாண்டானுள்ளிட்டார்கள் ......... திருக்கண்ணமங்கையாண்டானைப்போலே பரபரப்பற்று வகுத்தவன் வாசலிலே தன்னைப் பேணாது ஒதுங்கும்.

5. வார்த்தாமாலை 109-ஆவது வார்த்தை:— உபாயத்தை நிலையிட்டவர்கள் பிராட்டியும், த்ரௌபதியும், திருக்கண்ணமங்கையாண்டானும்.

6. வார்த்தாமாலை 234 ஆவது வார்த்தையில் 6-ஆவது அர்த்த₂ விவரணம்:— ஸாமாந்யமாஸ்த்ரத்தில் "காண்பரோ கேட்பரோ தாம்" [திருமாலை 7] என்கிற ரீதியில் கண்செலுத்தாமல் விசேஷ மாஸ்த்ரமான ப₄க₃வத்₃விஷயத்தில் எப்போதும் பரிமீலனம் பண்ணிக்கொண்டு அநுஷ்டா₂னத்திலும் ஸாமான்யத்தைவிட்டு விசேஷத்தையே கடைப்பிடித்து, இதில் ஒருபடிப்பட்டவனாய் ஐயமற்றவனாயிருக்கவேண்டும். "ஆதி₃ப₄ரதனை ஜ்ஞானியும், ஸ்வார்த்த₂மான ஸ்வவ்யாபாரத்தைவிட்ட திருக்கண்ணமங்கையாண்டானுமன்றோ இப்படியிருக்க முடியும். நமக்கு இது எட்டாததன்றோ" என்று ஐயமுறலாகாது. எப்பேர்ப்பட்ட முரட்டுக்குதிரையானாலும் ஏறுகிற முறையில் ஏறிப்பழகினால் அது அடங்கிநிற்கும். அதுபோலே இள நெஞ்சை உடையவர்களுக்கும் இந்த உறுதியைப் பழக்கிக்கொள்வது சிரமமில்லை. ஒரு பெண்பிள்ளை நெடுநாள்பழக்கத்தாலே முதலில் பெரியகல்லையும், அதற்குப்பின் சிறியகுன்றையும், அதற்குப்பின் ஒரு மலையையுமே எடுத்துக்காட்டினாள் என்று ஒரு பழங்கதை சொல்லுவதில்லையோ? என்பது இதன் கருத்து.

7. ஸ்ரீவசனபூஷணம் சூர்ணை 80:— "உபாயத்துக்குப் பிராட்டியையும், த்ரௌபதியையும், திருக்கண்ணமங்கையாண்டானையும்போலே இருக்கவேண்டும்.

8. ஸ்ரீவசனபூஷணம் சூர்ணை 82:— திருக்கண்ணமங்கையாண்டான் ஸ்வவ்யாபாரத்தை விட்டான்.

9. ஷை சூர்ணைக்கு மணவாள மாமுனிகள் வ்யாக்யானம்:— (திருக்கண்ணமங்கையாண்டான் ஸ்வவ்யாபாரத்தை விட்டான்) அதாவது—ஸ்வரக்ஷண ஹேதுவான ஸ்வவ்யாபாரங்களை விட்டானென்றபடி. ஒரு ஸேவகனுடைய நாயை, ஒரு ஸேவகன் அடிக்க, அவன் அது பொறுமல் அடித்தவனோடே எதிர்த்துப் பொருது அவனையுங்கொன்று தானும் குத்திக்கொள்வதாக இருக்கிறபடியைக் கண்டு ஒரு க்ஷுத்₃ரசேதனன் தன் அபி₄மானத்திலே ஒதுங்கினது என்னும் இவ்வளவுக்காகத் தன்னை அழிய மாறினபடி கண்டால் பரமசேதனன் அபி₄மானத்திலே ஒதுங்கினால் அவன் என்படுமோ? என்று ஸ்வரக்ஷணவ்யாபாரங்களையடைய விட்டு அந்த நாயோபாதியாகத் தம்மை அநுஸந்தித்துக்கொண்டு அப்போதேவந்து திருக்கண்ணமங்கையில் பத்தராவி திருவாசலில் கைப்புடையிலே புகுந்து கண் வளர்ந்தாரென்று ப்ரஸித்₃த₄மிறே.

10. எறும்பியப்பா அருளிய விலக்ஷணமோக்ஷாதி₄காரி நிர்ணயம்:— திருக்கண்ணமங்கையாண்டானைப்போலே ஸ்வவ்யாபாரங்களடைய விட்டு, பரமார்த்தனாய், பிள்ளை திருநறையூர் அரையரைப்போலே ஸ்வதே₃ஹத்தை உபேக்ஷித்து க்ரமக்ரமமாக முக்தனாய்ப்போம்........ பரமார்த்தனாய், பூர்ண ப்ரபத₃நாதி₄காரியாய், திருக்கண்ணமங்கையாண்டானைப்போலே ஸ்வவ்யாபாரங்களெல்லாம் ஸவாஸனமாக விட்டால் அவனுக்கு லோகாபவாத₃மும் வாராது; சாஸ்த்ரவிரோத₄மும் வாராது; ப₄க₃வந்நிக்₃ரஹமும் வாராது.

11. ப்ரபந்நாம்ருதம் அத்தியாயம் 110.

12. திருக்கண்ணமங்கையாண்டான் அருளிய நாச்சியார் திருமொழித் தனியன்:—

அல்லிநாட் டாமரைமே லாரணங்கி னின்துணைவி
மல்லிநா டாண்ட மடமயில்—மெல்லியலாள்
ஆயர் குலவேந்த னாகத்தாள் தென்புதுவை
வேயர் பயந்த விளக்கு.

திருச்சி மாவட்டம், லால்குடி வட்டம், லால்குடி அருகில் அன்பில் திவ்யதேசத்திற்குப் போகும் வழியில் மணக்கால் அக்ரஹாரத்தில் ஸ்ரீவரதராஜப்பெருமாள் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் மணக்கால்நம்பிகள்

(வைகானஸ ஆகம பூஜை)



மணக்கால்நம்பி

# மணக்கால்நம்பி வைபவம்

**அநுஜ்ஜி2தக்ஷமாயோக3மபுண்யஜநபா3த4கம் ।**
**அஸ்ப்ருஷ்டமத3ராக3ம் தம் ராமம் துர்யமுபாஸ்மஹே ॥**

*[யதிராஜஸப்ததி 7]*

[(பரசுராமனைப்போல்) பொறுமையை (பூ4மியை) விடாதவராய், (ராமனைப்போல்), புண்யஜனங்களை (ராக்ஷஸர்களை) பா3தி4க்காதவராய், (ப3லராமனைப்போல்) மது4பானமத3ம் இல்லாதவரான நாலாவது ராமனை (மணக்கால் நம்பியை) உபாஸிக்கிறோம்.]

**ப4க3வத்3ப4க்திது3க்3த4ாப்3தி4க்ருதகா3டா4வகா3ஹநம் ।**
**நிர்முக்ததாபத்ரிதயம் ஸ்ரீராமம் ஶரணம் ஶ்ரயே ॥**

[பகவத் பக்தியாகிற பாற்கடலில் குடைந்தாடப் பெற்றவராய் (அதனால்) ஆத்4யாத்மிகம், ஆதி4தை3விகம், ஆதி4பௌ4திகம் என்னும் மூன்று தாபங்களும் நீங்கப்பெற்றவரான ஸ்ரீராமன் என்னும் மணக்கால் நம்பியை ஆஶ்ரயிக்கிறேன்.]

உய்யக்கொண்டாருடைய ப்ரதா4ந சிஷ்யரான 'ஸ்ரீராம மிஶ்ரர்' என்னும் 'மணக்கால் நம்பி' உய்யக்கொண்டார் அவதரித்து நாற்பத்து மூன்று வருடங்களுக்குப் பின்பு (கி.பி. 929) விரோதி4 வருஷத்திலே மாசி மாதம் மக நக்ஷத்திரத்திலே ஶுக்லபக்ஷம் சதுர்த்தசி கூடிய புதன்கிழமையில் காவேரிக்கரையில் (லால்குடிக்கு அருகில்) இவர் திருநாமத்தையிட்டு மணக்கால் என்று வழங்கப்படும் கிராமத்தில் ஸ்ரீவைஷ்ணவ ப்3ராஹ்மண குலத்தில் குமுத3ாக்ஷர் என்னும் நித்யஸூரியின் அம்ஶமாக அவதரித்தவர். இவருக்கு 'மணக்கால்நம்பி' என்கிற பெயர் வந்ததற்குக் காரணம் உய்யக் கொண்டார் வைப4வத்தில் காட்டப்பட்டது. இவர், தம் ஆசார்யரான உய்யக்கொண்டாரின் நியமனப்படி நாத2முநிகளின் பேரரான ஆளவந்தாரைத் திருத்திப் பணிகொண்டு, அவருக்கு 'ரஹஸ்ய த்ரய'த்தையும், தி3வ்ய ப்ரப3ந்த4ங்களையும் அவற்றின் பொருளையும், ப4விஷ்யதா3சார்ய விக்3ரஹத்தையும் அளித்தருளினார். இதுபற்றிய விரிவு ஆளவந்தார் வைப4வத்தில் காணலாம். அவதாரஸ்த2லத்தில் எழுந்தருளியிருக்கும் மணக்கால் நம்பி த்ரித3ண்ட3த்துடன் ஸேவை ஸாதி3க்கையால் கடைசியில் துரீயாஶ்ரமஸ்வீகாரம் செய்துகொண்டிருக்கவேண்டும் என விளங்குகிறது. இவரும் க்3ரந்த2ம் எதுவும் அருளியதாகத் தெரியவில்லை.

## ஐதிஹ்ய நிர்வாஹங்கள்

**1. ஆருயிரப்படி குருபரம்பராப்ரபாவம்:** இவர்களில் மணக்கால்நம்பி பன்னிரண்டு ஸம்வத்ஸரம் ஸ்வாசார்யரான உய்யக்கொண்டார் திருவடிகளிலே "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" என்ற இளையபெருமாளைப்போல ஸர்வவித₄கைங்கர்யங்களையும் பண்ணிக் கொண்டிருக்கையில் உய்யக்கொண்டார் தே₃விகளாகிய ஆண்டாள் திருநாட்டுக்கு எழுந்தருள, திருமாளிகைக் கைங்கர்யமெல்லாம் தமக்கே ப₄ரமாய் நடத்திக் கொண்டு போரா நிற்கச்செய்தே உய்யக்கொண்டார் பெண்பிள்ளைக ளிருவரையும் நீராட்டி அழைத்துக்கொண்டு வருகிற வழியிலே வாய்க்கால் சேறுயிருக்கக் கண்டு அவர்கள் திகைத்துநிற்க, தாம் படியாய்க்கிடந்து அவர்களைத் தம் முதுகிலே அடியிட்டெழுந்தருள் வித்துக் கொண்டுபோக, உய்யக்கொண்டாரும் இச்செய்தியைக் கேட்டருளி, 'இவர் இப்படி செய்வதே!' என்று போர ப்ரீதராய், இவ ருத்தமாங்க₃த்தைத் தம் திருவடித்தாமரைகளாலே அலங்கரித்துப் பொன்னடிப்பூ முடிசூட்டி 'உமக்கு நாம் செய்யவேண்டுவதென்?' என்று கேட்டருள, நம்பியும் "'உற்றேன் உகந்து பணிசெய்து உன பாதம் பெற்றேன் ஈதேயின்னம் வேண்டுவது எந்தாய்' என்று தேவரீர் திருவடிகளில் ஸேவையே வேண்டுவது" என்ன, உய்யக் கொண்டாரும் உகந்து அந்த உகப்பின் மிகுதியாலே, "அதீநாநாக₃தஜ்ஞாநமாத்மதத்த்வ ப்ரகாஶகம் | ஸர்வவேத₃ார்த்த₂ விஜ்ஞாநம் ஸர்வஶாஸ்த்ரார்த்த₂த₃ர்ஶநம் ||" "மாநஸம் வாசிகம் பாபம் காயிகம் தத்த்ரித₄ா க்ருதம் | த்₃வயஸ்மரண மாத்ரேண நாஶம் யாதி ஸுநிஸ்சிதம் ||" என்கிற வைப₄வத்தையுடைய பரமார்த்த₂மான த்₃வயத்தையே மீளவும் ப்ரஸாதி₃த்தருளினர்.

பின்பு சிலநாள் கழிந்தவாறே உய்யக்கொண்டார் திருநாட்டுக்கு எழுந்தருளுகிறபோது 'இனி த₃ர்ஶநப்ரவர்த்தகராவார் ஆர்' என்று மணக்கால்நம்பி விண்ணப்பஞ்செய்ய, அவரும் 'இங்குள்ள முதலிகளையும் கூட்டிக்கொண்டு நீரே த₃ர்ஶநம் நிர்வஹிக்கக் கடவீர்; பின்பு சொட்டைக் குலத்தினரான ஈஶ்வரமுனிகள் திருவயிற்றிலே ஶ்ரீமந் நாத₂முனிகளுக்கு ஒரு திருப்பேரனர் அவதரிப்பர்; அவருக்கு யமுனைத்துறைவரென்று திருநாமஞ் சாத்துவித்து த₃ர்ஶந ப்ரவர்த்தகராம்படி ஸகலத₃ர்ஶந ரஹஸ்யார்த்த₂விஶேஷங்களையும் உபதே₃ஶியும்; அவர் த₃ர்ஶநப்ரவர்த்தகராவர்; இந்தக் கைங்கர்யத்தை நாத₂முனிகள் தம் அந்திமத₃ஶையிலே அடியேனுக்கு நியமித்தருளினர்; நான் செய்யப்பெற்றிலேன்; நீர் அவரை அநுவர்த்தித்தாகிலும் ரஹஸ்யார்த்த₂ங்களை உபதே₃ஶியும்' என்று

நியமித்தருளி ஸ்ரீமந் நாத₂முனிகள் திருவடிகளை த்₄யாநித்துக் கொண்டு பத்₃மாஸநோபவிஷ்டராய் அணையிலே சாய்ந்தருளித் திருநாட்டுக்கு எழுந்தருளினார்; இத்தால், ஆசார்யாஜ்ஞாபரிபாலநம் அவஶ்யகரணீயம் என்றபடி. உய்யக்கொண்டார் திருநாட்டுக்கு எழுந்தருளினபடியைக்கண்டு மணக்கால் நம்பியுள்ளிட்ட முதலிக ளெல்லாரும் மிகவும் ஶோகார்த்தராய் ஆசார்ய விஶ்லேஷா ஸஹிஷ்ணுக்களாய் கோ₄ஷித்துக்கொண்டு விழுந்து போர க்லே ஶித்துத் தங்களிலே தேறி நிற்க, நம்பியும் உய்யக்கொண்டாரை ப்₃ரஹ்மமேத₄த்தாலே ஸம்ஸ்கரித்துப் பள்ளிபடுத்து, மேலும் செய்யவேண்டும் க்ருத்யங்களெல்லாம் செய்தருளினார்.

2. வார்த்தாமாலை 136 c (விவரணம்):— "ஸம்ஸாரமாகிற விஷம் தீண்டப்பெற்றவனுக்கு த்₃வயம் விஷம் தீர்க்கும் மருந்தாய் இருக்கும்" என்று மணக்கால் நம்பி அருளிச்செய்வர்.

3. வார்த்தாமாலை 403. குருகைக்காவலப்பன் வைப₄வத்தில் ஐதிஹ்ய நிர்வாஹம் 4, பக்கம் 36ல் காண்க.

4. வார்த்தாமாலை 441a. ஸ்ரீமந்நாத₂முனிகள் வைப₄வத்தில் ஐதிஹ்ய நிர்வாஹம் 4, பக்கம் 7ல் காண்க.

5. சரமோபாய நிர்ணயம்:— பின்பு மணக்கால்நம்பியும் ஆளவந்தாரைப் பச்சையிட்டுக்கொண்டு கோயிலேற எழுந்தருளி, ஸ்வாசார்யரான உய்யக்கொண்டார் அநுமதிப்படியே நாத₂முனிகள் அருளிச்செய்ததாக ஸ்வாசார்யர் அருளிச்செய்த அர்த்த₂ விஶேஷங் களையும், விஶேஷித்து ஸ்வப்ன வ்ருத்தாந்தங்களையும் அருளிச்செய்து "நெடுங்காலம் தேவரீர் இந்த த₃ர்ஶனத்தை ப்ரவர்த்திப்பித்துக் கொண்டு ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ருத்₃தி₄யோடே எழுந்தருளியிரும்" என்று அருளிச்செய்தார். அப்படியே ஆளவந்தாரும் த₃ர்ஶன ப்ரவர்த் தகராய் எழுந்தருளியிருக்கிற நாளிலே மணக்கால் நம்பி சரமத₃ஶை யானவாறே, நாத₂முனிகள் ஸ்வப்னத்திலே எழுந்தருளி நம்பியைப் பார்த்து, 'நம்முடைய யமுனைத்துறைவர்க்கு *நாட்டையளித்துய்யச் செய்து நடத்துமவனை நாம் தேடச் சொன்னோம் என்று சொல்லும். நாம் விரும்பின விக்₃ரஹத்தைத் தருசமாக அவர் கையிலே காட்டிக் கொடும்' என்றருளிச்செய்ய, இப்படி அருளிச்செய்கிறது ஏதென்ன, 'நமக்கு ஸ்வப்னத்₃ருஷ்டமான வ்யக்தி நம் பேரனுக்கு ப்ரத்யக்ஷ ஸித்₃த₄மானால் நமக்கு நெஞ்சாறல் தீரும்' என்றருளிச்செய்தார். நம்பியும்—உடனே உணர்ந்தருளி மிகவும் விஸ்மயப்பட்டு, நிர் ஹேதுகமாக நமக்குப் பேறு கிடைப்பதேயென்று போர ப்ரீதராய் எழுந்தருளியிருக்கிற அவ்வளவிலே, ஆளவந்தாரும் அவராய் எழுந்

தருள, "உம்முடைய திருப்பாட்டனார் நிர்ஹேதுகமாக நமக்கு ஸேவை ஸாதி₃த்தருளி தேவரீர்க்கு ஒரு வார்த்தை விண்ணப்பம் செய்யச்சொல்லி அருளிச்செய்தார்" என்று அவ்வார்த்தையை அருளிச்செய்ய, இது நேரேயாகப் பெற்றதில்லையேயென்று இழவுபட்டருளி, ஸத்₃வாரகமாகவாகிலும் விஷயீகரிக்கப்பட்ட இதுவே அமையுமென்று ப்ரீதராய் எழுந்தருளியிருக்க, ப₄விஷ்யதா₃சார்ய விக்₃ரஹத்தையும் ப்ரஸாதி₃த்து, "உம்முடைய திருப்பாட்டனார், தாம் விரும்பின விஷயம் என்று உம்மை இவ்விக்₃ரஹத்தைத் தஞ்சமாகப் பற்றியிருக்கச் சொல்லும் என்று நியமித்தருளினர். ஆகையாலே தே₃வரீரும் இந்த அவதார ரஹஸ்யத்தைப் பேணி நோக்கிக்கொண்டு போரும்; இவ்யக்திமானை நேரே ஸாக்ஷாத்கரிக்கப் போகிறீர். அவ்யக்திமானாலே இத்த₃ர்மனம் நெடுங்காலம் நிலைநிற்கப் போகிறது" என்று அருளிச்செய்தார்.

6. பெரிய திருமுடியடைவு:— குமுத₃ாக்ஷாம்ஸூ₄தரான மணக்கால்நம்பிக்குத் திருவவதார ஸ்த₃லம் சோழதே₃ஶத்திலே திருக்காவேரிதீரத்தில் கோவில் ப்ரதே₃ஶம் மணக்கால் என்கிற க்₃ராமம். திருநக்ஷத்ரம் - கலியுக₃ம் மூவாயிரத்துத்தொள்ளாயிர வருஷத்துக்கு மேல் விரோதி₄ ஸம்வத்ஸரம் மாசி மாஸம் புதன்கிழமை பூர்வபக்ஷம் சதுர்த்த₃சி மக₂ாநக்ஷத்ரம். இருப்பிடம் கோயில். திருநாமங்கள் மணக்கால்நம்பி, ஸ்ரீராமமிஶ்ரர். ஆசார்யர் உய்யக்கொண்டார். திருவாராத₄னம் நம்பெருமாள். வர்ணம் ப்₃ராஹ்மணோத்தமர். சிஷ்யர் ஆளவந்தார், திருவரங்கப்பெருமாளரையர், தெய்வத்துக்கரசு நம்பி, பிள்ளையரசுநம்பி, சிறுபுள்ளூருடையார்பிள்ளை, திருமாலிருஞ்சோலைதா₃ஸர், வங்கிபுரத்தாச்சி. இவர் நூற்றஞ்சு திருநக்ஷத்ரம் எழுந்தருளியிருந்தார்.

7. திவ்யஸூரிசரிதம்: 16-வது ஸர்க்கம் 40–43 ஶ்லோகங்கள். உய்யக்கொண்டாருடைய ஶிஷ்யராய் குமுத₃ாக்ஷரின் அம்ஶமான ஸ்ரீராமமிஶ்ரர் என்னும் மணக்கால் நம்பிக்கு உய்யக்கொண்டார் எல்லா அர்த்த₂ங்களையும் உபதே₃ஶித்து, அவற்றை அவதரிக்கப் போகும் நாத₂முனி பௌத்ரரான யாமுனேயருக்கு உபதே₃ஶிக்கும்படி நியமித்தார். அவரும் யாமுனேயரின் அவதாரத்தை எதிர்நோக்கியிருந்தார்.

8. ப்ரபந்நாம்ருதம்: 112.ஆம் அத்₄யாயம் முற்பகுதி.

9. திருமாலை: 37-ஆம் பாட்டு வ்யாக்₂யானம் (அளியன் நம் பையலென்னார்) மணக்கால்நம்பி "நம் மாணி (நம் மாணாக்கன்) திருமகிழ்மாலைமார்வனுக்குத் திற" என்றாரிறே.

10. ப4க3வத்3விஷயம்: 2-6-2, குருகைக்காவலப்பன் வைப4வத்தில் முதல் ஐதிஹ்ய நிர்வாஹம் காண்க.

11. ப4க3வத்3விஷயம்: 6-5-5 விவரணம் (மழைபெய்தாலொக்கும் கண்ணநீரினொடு) மணக்கால் நம்பி ஆளவந்தாரிடம் "உபாயம் எம்பெருமானுக்கு மேலில்லை" என்றுகூற, ஆளவந்தார் "இவ்விஷயத்தை இப்போதே ஸாக்ஷாத்கரிக்க வழியில்லையோ" என்றாராம். அதற்கு மணக்கால் நம்பி "உண்டு காணும்" என்று பெரிய பெருமாள் பக்கலிலே கூட்டிக்கொண்டுபோய்ப் பெரியபெருமாள் திருவடிகளைக் காட்டிக்கொடுக்கக் கண்டவுடன் ஆளவந்தாருக்குக் கண்ணீர் வெள்ளமிட்டது.

12. ப4க3வத்3 விஷயம் 6-8-1:— பாண்டவர்களுக்குத் தூது போன க்ருஷ்ணனையும், ஆளவந்தாருக்குப் பச்சையிட்ட மணக்கால் நம்பியையும் போலேயிருந்ததீ உங்கள்படி.

13 ப4க3வத்3விஷயம்: 9-3-5 (இரந்து கனமே சொல்லினேன்) இரந்து சொல்லுகைக்கு மணக்கால் நம்பியோடொப்பர்.

14. ப்ரமேயரத்னம் 2ம் ப்ரகரணம்:— ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் (பா4ஷ்யகாரருக்குத்) திருவாய்மொழி ஓதுவித்தருளினார். திருவாய்மொழியினுடைய அர்த்த2த்தை அருளிச்செய்தார் திருமாலையாண்டான். இவையிரண்டுக்கும் ப்ரவர்த்தகராவார்களிறே ஆசார்யபத3மேறிப்போந்தவர்கள். அவர்கள் ஆர்? என்னில்: நாத2முனிகள், உய்யக்கொண்டார், மணக்கால்நம்பி, ஆளவந்தார், உடையவர், எம்பார், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை. இவர்களில் வைத்துக்கொண்டு ஸப்3த3ப்ரத3னான ஆசார்யனிலும் அர்த்த2ப்ரத3னானவன் அதி4கன்.

15. ப்ரமேயரத்னம் 3-ம் ப்ரகரணம்:—ப4க்திப்ரபத்திகளிரண்டும் ப4க3வத் ப்ரஸாத3கங்களாயிருந்ததேயாகிலும் அதிஶயேந ப்ரஸாத3மூலம் ப்ரபத3நமென்று மணக்கால்நம்பி அருளிச்செய்வர்.

16. ப்ரமேயரத்னம் 4-ம் ப்ரகரணம்:— ஆசார்ய கைங்கர்யத்துக்குப் படிமா வடுகநம்பியும், மணக்கால்நம்பியும்.

17. தே3ஶிகன் அருளிய கு3ருபரம்பராஸாரம். மணக்கால்நம்பி ஸ்ரீபாத3த்தை ஆஶ்ரயித்தவர்கள் ஐவர்; அவர்களாகிறார்—ஆளவந்தார், தெய்வத்துக்கரசுநம்பி, கோமடத்துத் திருவிண்ணகரப்பன், சிறுப்புள்ளூர் ஆளுடையபிள்ளை, ஆச்சி.

18. தே3ஶிகன் அருளிய ஸம்ப்ரதா3ய பரிஶுத்3தி4. மணக்கால் நம்பி ஆளவந்தாருக்கு நெடுநாள் பச்சையிட்டு (உகந்த வஸ்து வைத் தந்து), ஒருவிரகாலே (வழியாலே) ஆகாங்க்ஷையுண்டாக்கி உபதே3ஶித்தது — ஆசார்யகுலத்திற்குத் தாமொரு கிஞ்சித்காரம் (சிறுதொண்டு) பண்ணுகையிலும்; ஆசார்ய நியோக3த்தை (கட்டளையை)க் கடுக (விரைவில்)த் தலைக்கட்டுகையிலும் உண்டான த்வரையாலும் (விரைவாலும்) சிரகால பரீக்ஷாதி3கள் வேண்டாதபடி "போ3த4நம் ச முஹு: க்ரமாத்" என்கிற யுக3த4ர்மத்தின் அநுஸாரத்தாலும் உபபந்நம்.

19. பெருமாள் திருமொழித் தனியன். (மணக்கால்நம்பிஅருளியது)

**ஆரம்கெடப் பரனன்பர்கொள்ளாரென்று அவர்களுக்கே**
**வாரங்கொடு குடப்பாம்பிற்கையிட்டவன் மாற்றலரை**
**வீரங்கெடுத்தசெங்கோல் கொல்லிகாவலன் வில்லவர்கோன்**
**சேரன்குலசேகரன் முடிவேந்தர்சிகாமணியே.**

20. திருநக்ஷத்திரத் தனியன்.

கும்ப4மாஸே மகே3ாத்3பூ4தம் ராமமிஶ்ரமுபாஸ்மஹே।
புண்ட3ரீகாக்ஷ பாத3ாப்3ஜ ஸமாஶ்ரயண ஶாலிநம்॥

21. மற்றொரு தனியன்:—

அயத்நதோ யாமுநமாத்மதா3ஸ-
மளர்க்க பத்ரார்ப்பண நிஷ்க்ரயேண।
ய: க்ரீதவாநாஸ்தி2த யௌவராஜ்யம்
நமாமி தம் ராமமமேயஸத்த்வம்॥

22. வாழித்திருநாமம்.

**தேசமுய்யக் கொண்டவர்தாள் சென்னிவைப்போன் வாழியே**
**தென்னரங்கர் சீரருளைச் சேர்ந்திருப்போன் வாழியே**
**தாசரதி திருநாமம் தழைக்கவந்தோன் வாழியே**
**தமிழ்நாத முனியுகப்பைத் தாபித்தான் வாழியே**
**நேசமுடன் ஆரியனை நியமித்தான் வாழியே**
**நீணிலத்தில் பதின்மர்கலை நிறுத்தினான் வாழியே**
**மாசிமகந் தனில்விளங்க வந்துதித்தான் வாழியே**
**மால்மணக்கால் நம்பிபதம் வையகத்தில் வாழியே.**

# ஆளவந்தார் வைபவம்



ஆளவந்தார்—காட்டுமன்னார்கோயில்

**யத்பத$_3$ாம்போ$_4$ருஹத்$_4$யாந வித்$_4$வஸ்தாஶேஷகல்மஷ꞉**
**வஸ்துதாமுபயாதோऽஹம் யாமுநேயம் நமாமி தம் ॥**

[கீ$_3$தாப$_4$ாஷ்யமங்க$_3$ளம்]

[எவருடைய திருவடித்தாமரைகளை தியானிப்பதால் எல்லா தோ$_3$ஷமும் நீங்கப்பெற்று யான் ஒரு பொருளாக ஆனேனோ, அத்தகைய யமுனைத் துறைவரை வணங்குகிறேன்.]

மணக்கால் நம்பி அவதரித்து நாற்பத்தேழு வருடங்களுக்குப் பின்பு 'தா$_4$து' வருடத்திலே (கி. பி. 976) ஆடி மாதம் பௌர்ணமி உத்தராடம் கூடிய வெள்ளிக்கிழமையில் நாத$_2$முநிகளுடைய குமாரரான ஈஶ்வர முனிகளுக்கும் அவருடைய த$_4$ர்மபத்நியான ஸ்ரீரங்க$_3$நாயகிக்கும் குமாரர் நாத$_2$முநிகள் அவதரித்த வீரநாராயண புரத்திலே அவதரித்தருளினர்.

நாத₃முனிகள் நியமனப்படி அவர் கைங்கர்யம் செய்த வடநாட்டு கோ₃வர்த்த₄னபுரத்திலுள்ள எம்பெருமானின் ''யமுனைத் துறைவன்'' என்னும் திருநாமம் இவருக்குச் சாத்தப்பட்டது. ஈச்வர முனிகளால் உரிய காலத்தில் அன்ன ப்ராஶநம், சௌளம், உபநயனம் முதலான ஸம்ஸ்காரங்கள் யாமுனருக்குச் செய்யப்பெற்றன. வேத₃ாத்₄யயனம் செய்யும்போது ஏகஸந்தை க்₃ராஹி'யாய் மஹா மேத₄ா விலாஸத்தையுடையவராய் இருந்தார். உரிய காலத்தில் இவருக்கு விவாஹமும் செய்விக்கப்பெற்றது.

மஹா பா₄ஷ்ய ப₄ட்டர் என்பவரிடம் இவர் ஶாஸ்த்ராப்₄யாஸம் செய்துவந்தார். அக்காலத்தில் ராஜபுரோஹிதனுயிருந்த ஆக்கியாழ் வான் என்பவன் தன் வித்₃யா க₃ர்வத்தாலே அந்நாட்டில் உள்ள எல்லா வித்₃வான்களிடமும் கப்பம் வாங்கிவந்தான். அவன் ஒருநாள் கப்பம்கேட்டு மஹாபா₄ஷ்ய ப₄ட்டருக்கு ஓலை அனுப்ப, பட்டர் கப்பம் செலுத்த வழியில்லாமல் திகைத்து நிற்பதைப் பார்த்து, யமுனைத் துறைவர் அவ்வோலையைக் கிழித்தெறிந்து விட்டார். அதைக்கேட்ட ஆக்கியாழ்வான் ''ஓலையைக் கிழித்தவன் வெறும் கவியோ, அல்லது தந்த்ரம் (மீமாம்ஸாதி₃ ஶாஸ்த்ரம்) கரைகண்டவனோ?'' என்று கேட்டனுப்பினன். அதற்கு ''யாம் கவிகள் மாத்திரமேயல்லோம்; யாம் மீமாம்ஸா ஶாஸ்த்ரக்கடலை மாத்திரம் கரைகண்டவர்களல்லோம். எதிர்வாதம் புரியுமவர்களாகிற யானைகளின் மிக்க ஆடம்பரமாகிற மத்தகத்தைப் பிளக்க வல்லமையுடையோமும் ஆவோம்'' என்று பதில் எழுதியனுப்பினர் யமுனைத்துறைவர். இதைக்கண்டு வியப்புற்ற அரசன் யமுனைத்துறைவரை உடனே ராஜஸபைக்கு வரச்சொல்லி ஓலை அனுப்பினன். அவ்வோலையையும் யமுனைத்துறைவர் கிழித்துவிட, அதைக்கேட்ட அரசன் 'இவர் ஸாமான்யரல்லர்' என்று அறிந்து இவர் வருவதற்குப் பல்லக்கை அனுப்பினன். யாமுநேயரும் அப் பல்லக்கில் ராஜஸபை₄க்கு எழுந்தருளி, ''மலையரசன் மகளான பார்வதியின் தளிரடிவைப்பினலே சிறந்து விளங்கும் தாழ்வரைகளை யுடைய இமயமலை முதல், அரக்கனல் அபஹரிக்கப்பட்ட சீதா பிராட்டியின் திருமுகத்தாமரை மலர்வதற்குக் காரணமான ஸேது வரையிலும், சந்திரஸூர்யர்களிருவரையும் தலையலங்காரமாகவுடைய உத₃யகி₃ரிக்கும் அஸ்தமநகி₃ரிக்கும் நடுவிலும், பூர்வமீமாம்ஸை உத்தரமீமாம்ஸை எனும் இரண்டு சாஸ்திரத்திலும் விஶேஷமான பயிற்சியினலே மயர்வற்ற நெஞ்சையுடைய என்னைப்போன்ற மற்றொருவன் தேடப்படட்டும். (தேடினலும் கிடைக்கமாட்டான்)''

என்னும் பொருளுள்ள ஸ்லோகத்தை எழுதியனுப்பினர். அதற்குப்பின் ஆக்கியாழ்வானுக்கும் யமுனைத் துறைவர்க்கும் மத்₄யஸ்த₂ர்களான வித்₃வான்கள் முன்னிலையில் தர்க்கம் நடந்தது. அப்போது அங்கு ஸிம்ஹாஸநத்திலிருந்த ராஜமஹிஷியும் ராஜாவும் ஒருவர்க்கொருவர் பின்வருமாறு சபதம் செய்துகொண்டனர். ''யாமுநேயர் தோற்றாராகில் நான் மஹிஷீபதவியைத் துறந்து உமக்கு வேலைக்காரியாவேன்'' என்றாள் ராஜமஹிஷி. ''ஆக்கியாழ்வான் தோற்றானாகில் யமுனைத் துறைவர்க்கு நான் பாதி ராஜ்யம் தருவேன்'' என்றான் அரசன்.

இளம் பிள்ளையான இவரை ஶாஸ்த்ரவிவாத₃மில்லாமலே லௌகிக விஷயங்களிலே தோர்கடித்துவிடலாம் என்று எண்ணிய ஆக்கியாழ்வான் ''லௌகிகங்களிலே நீர் இல்லை என்பதை நான் உண்டு என்பேன். நீர் உண்டு என்பதை நான் இல்லை என்பேன். வென்றவன் தோற்றவன் தலையிலே அடிக்கவேண்டியது'' என்று கூறினான். அதற்கு இசைந்த யமுனைத்துறைவர் ''(1) உன் தாய் மலடியல்ல. (2) அரசன் தா₄ர்மிகன். (3) ராஜபத்நீ பதிவ்ரதை'' என்று மூன்று வாக்கியங்களைச் சொல்லி, அவனை மறுக்கச் சொன்னர்' அவன் அவற்றை மறுக்க இயலாமல் மௌனியாய் இருந்தான். பின்பு ஶாஸ்த்ரவிசாரமும் நடந்தது. அதிலும் தோல்வியுற்றான் ஆக்கியாழ்வான். ''நீர் சொன்ன மூன்று லௌகிக வாக்யங்களையும் உம்மால் மறுக்க முடியுமோ?'' என்று யமுனைத்துறைவரை ராஜாவும் ராஜமஹிஷியும் கேட்டனர். 'முடியும்' என்று சொல்லி யாமுநேயர் பின் வருமாறு மறுத்துக் காட்டினர்.

1. ''ஒரு மரமும் தோப்பல்ல. ஒரு பிள்ளையும் பிள்ளையல்ல'' என்கிற உலக வழக்கின்படி, நிலையற்றதான இவ்வுலகில் ஒரு பிள்ளையைப் பெற்ற தாய் ''இப்பிள்ளை நமக்குத் தக்கவேணுமே, நம்மை ரக்ஷிக்க வேணுமே'' என்று கலங்கிக்கொண்டேயிருப்பாளாகையால், அவள் பிள்ளைபெற்றும் மலடியேயாவாள். இம்முறையில் ஒரு பிள்ளைபெற்ற ஆக்கியாழ்வானுடைய தாயார் மலடியேயாகையால் முதல்வாக்கியம் மறுக்கப்பட்டது.

2. குடிகள் செய்யும் பாபம் அரசனைச் சேருமாகையாலே, பரம தா₄ர்மிகனை இவ்வரசனும் குடிகள் செய்யும் பாபத்திலே பங்கு பெறுகிறானாகையாலே, இரண்டாவது வாக்யமும் மறுக்கப்பட்டது.

3. ''ஸோம: ப்ரத₂மோ விவிதே₃, க₃ந்த₄ர்வோ விவித₃ உத்தர:. த்ருதீயோ அக்₃நிஷ்டே பதி:, துரீயாஸ்தே மனுஷ்யஜா:'' [ஸோமன்

முதல்நாள் உன்னை மணம் புணருகிறான். கந்தர்வன் அடுத்த நாள் உன்னை மணம் புணருகிறான். மூன்றாவது நாள் அக்நியானவன் உனக்குப் பதியாகிறான். நாலாவது நாளிலேயே கைப்பிடித்த மனிதன் உனக்குக் கணவனாகிறான்.] என்கிற வேத வாக்யத்தின்படி வைதிக முறையில் மணம் செய்துகொண்ட எல்லா ஸ்திரீகளுக்குமே மணமான முதல் மூன்று நாட்களில் தேவதைகளோடு தொடர்பு உண்டாகை யால் பாதிவ்ரத்யத்தில் குறையுண்டு. அக்குறை பரமவைதிகமான முறையில் அரசனைக் கைப்பிடித்த ராஜபத்னிக்கும் உண்டாகையாலே மூன்றாவது வாக்யமும் மறுக்கப்பட்டது.

இவ்வண்ணமாக லௌகிக வாதத்திலும் ஶாஸ்த்ர வாதத்திலும் ஆக்கியாழ்வானை வெற்றிகொண்ட பின்பும், ராஜபுரோஹிதனுமாய், பிராயத்தில் முதிர்ந்தவனுமான ஆக்கியாழ்வானை முதலில் பண்ணின ப்ரதிஜ்ஞைப்படி தலையிலே அடிப்பதற்கு மறுத்துவிட்டார் யமுனைத் துறைவர். இவருடைய பண்பையும், ஶாஸ்த்ரப் புலமையையும், லோகானுபவத்தையும் கண்டு வியப்புற்ற வித்வான்கள் அனைவரும் இவருக்கு ப்ரஹ்மரதம் பண்ணிப் பெருமைப்படுத்தினர். ராஜ மஹிஷியும் "என்னை ஆளவந்தீரோ" என்று யமுனைத்துறைவரைத் தன் பிள்ளையைப்போலே எடுத்தணைத்துக்கொண்டு தன் பர்த்தா வுடன் அரண்மனைக்குள் புகுந்தாள். அரசனும் தன் ப்ரதிஜ்ஞைப்படி இவருக்குப் பாதிராஜ்யம் கொடுத்தான். இவரும் தம் பத்தினியோடுகூடி அரசாட்சி செலுத்திக்கொண்டு அரச போகத்திலே ஆழ்ந்திருந்தார்.

உய்யக்கொண்டார் நியமனத்தாலே யமுனைத்துறைவரை தர்ஶன ப்ரவர்த்தகராக்க ஆசைகொண்ட மணக்கால் நம்பி கட்டும் காவலுமாய் இருந்த அரண்மனைக்குள் சென்று ஆளவந்தாரைக் காணமுடியவில்லை. திருமடைப்பள்ளியில் பணிபுரிவோரிடமிருந்து 'தூதுளைக் கீரையே ஆளவந்தார் விரும்பி அமுது செய்யும் கறியமுது' என்று அறிந்து மடைப்பள்ளிக்கு ஆறுமாதகாலம் தூதுளைக் கீரையை அளித்துவந் தார். அப்போதும் இவரைப்பற்றி ஆளவந்தார் விசாரிக்காமையாலே வருந்தி, நாலுநாள் தூதுளையைக் கொடுப்பதைத் தவிர்த்திருந்தார். ஆளவந்தார் அமுதுசெய்யும்போது "நாலு நாளாகத் தூதுளை இல்லாமல் இருப்பதேன்?" என்று கேட்டருள, அவர்களும் "ஆறு மாதமாக வயது முதிர்ந்த அந்தணர் ஒருவர் அளித்துவந்தார். நாலு நாளாக அளிக்கவில்லை" என்று கூறினார்கள். ஆளவந்தாரும் கேட்டு வியப்புற்று, 'அடுத்தபடி அவர் வந்தால் நமக்குத் தெரிவியுங்கள்" என்று நியமித்துவிட்டார். மறுநாள் நம்பியும் "இன்னமும் முயற்சி செய்து பார்ப்போம்" என்று தூதுளை எடுத்துவந்து, திருமடைப்

பள்ளியில் கொடுத்தார். அவர்களும் நம்பியை ஆளவந்தாரிடம் அழைத்துச் சென்றனர். ஆளவந்தாரும் அவரைக்கண்டு வணங்கி ஆஸனமிட்டு "நீர் இத்தனை நாளும் தூதுளை கொண்டு வந்து இடுகிறது எதற்காக? உமக்கு வேண்டிய த₄நத₄ாந்யங்களை அளிக்கிறோம்" என்று நம்பியைக் கேட்க, நம்பியும் "நமக்கு இவை யொன்றும் வேண்டா. உமது பாட்டனார் தேடிவைத்த நிதி₄ ஒன்று என்னிடம் இருக்கிறது. அதை உம்மிடம் அளிப்பதற்கு நான் இங்கு வந்து போவதைத் தடைசெய்யாமல் இருக்கும்படி உத்தரவிடவேணும்" என்று அருளிச்செய்ய, அதன்படியே அரண்மனைச் சேவகர்களிடம் கட்டளையிட்டார் ஆளவந்தார். அன்று முதல் தினந்தோறும நம்பி அரண்மனைக்கு எழுந்தருளி, கீதையின் செம்மைப்பொருள் தெரியும்படி பதினெட்டு அத்தியாயமும் அருளிச் செய்ய, ஒருநாளைக்கொருநாள் ஆர்த்தி விஞ்சப்பெற்ற ஆளவந்தார், "இவ்வெம்பெருமானை அடையும் உபாயம் எது?" என்று நம்பியைக் கேட்க, நம்பியும் தனியே அழைத்துச்சென்று, மெய்ம்மைப் பெருவார்த்தையான சரமஶ்லோகத்தின் பொருளை ஆளவந்தாருக்கு அருளிச்செய்து "அவனை அடைவதற்கு அவனே உபாயம்" என்னும் உறுதியை அவருக்கு உண்டாக்கினார். அருளிச்செயல்களையும், அவற்றின் அரும்பொருள்களையும் அவருக்கு உபதே₃ஶித்தருளினார். அதற்குப்பின் திருவரங்கம் திருப்பதிக்கு அவரை அழைத்துச் சென்று பெரிய பெருமாளைத் திருவடி தொழச் செய்து, "உங்களுடைய பாட்டனார் தேடிவைத்த பெருநிதி₄ இதுவே காணும்" என்று காட்டிக்கொடுக்க, பெரியபெருமாளிடம் ஈடுபட்ட ஆளவந்தார் ராஜ்யம் முதலான எல்லாவற்றையும் துறந்து துரீயாஶ்ரமத்தை ஏற்றுக்கொண்டு ஸ்ரீரங்க₃த்தில் த₃ர்ஶன நிர்வாஹம் செய்து வந்தார். அக்காலத்திலே பெரியநம்பி, திருக்கோட்டியூர்நம்பி, பெரிய திருமலைநம்பி, திருமாலையாண்டான் முதலான ஸ்ரீவைஷ்ணவ ப்₃ராஹ்மணோத்தமர்களும், திருக்கச்சிநம்பி, மாறனேரிநம்பி முதலான ப₄க₃வதோத்தமர்களும் அவரை ஆஶ்ரயித்திருந்தார்கள்.

அப்போது மணக்கால்நம்பி "தேவரீருடைய பாட்டனாரான நாதமுனிகள் அஷ்டாங்க₃யோக₃ ரஹஸ்யத்தைக் குருகைக்காவலப்பனிடம் சேமித்து வைத்திருக்கிறார். அவரிடம்சென்று அந்நிதி₄யைப் பெற்றுக்கொள்ளும்" என்று நியமித்தருளினார். ஆளவந்தாரும், குருகைக்காவலப்பன் யோக₃ம் செய்யுமிடத்தில், அவருடைய யோக₃த்தைக் கலைக்கக்கூடாது என்னும் திருவுள்ளத்தால் ஓசைப்படுத்தாமல் சுவருக்குப் பின்புறம் நிற்க, அப்பனும் பின்புறம் திரும்பிப் பார்த்து "இங்கு சொட்டைக் குலத்தவர் எவரேனும் வந்ததுண்டோ?" என்று

கேட்டருள, ஆளவந்தாரும் "அடியேன் யமுனைத்துறைவன் விடை கொண்டிருக்கிறேன்" என்று வணங்கிநின்று "அடியேன் வந்தது எப்படித் தெரிந்தது?" என்று கேட்க "பிராட்டியோடு பேகாக ரஸத்தை அனுபவிப்பதிற்காட்டிலும் என்னோடு கலந்திருப்பதை விரும்பும் எம்பெருமான் என்னையும் உபேக்ஷித்துப் பின்புறம் திரும்பிப் பார்த்ததனால். நாதமுனிவம்சஸ்தர் ஒருவர் வந்திருக்கவேணும் என்று உணர்ந்தேன்" என்று அருளிச்செய்தார். ஆளவந்தாரும் 'யோகரஹஸ்யத்தை அருளிச்செய்யவேணும்' என்று பிரார்த்திக்க, அப்பனும் தாம் பரமபதம் செல்லவிருக்கும் நாளைக்குறிப்பிட்டு, "அதற்கு முன் வந்தால் உபதேசிக்கிறோம்" என்று திருமுகம் எழுதிக்கொடுத்து ஆளவந்தாரைக் கோயிலுக்கு அனுப்பினர்.

கோயிலில் தர்சனம் நிர்வஹித்து வரும்போது நம்பெருமாள் திருவத்யயனோத்ஸவத்திலே அரையர் ஸேவையில் "கெடுமிடர்" [திருவாய் 10-2] என்கிற திருவாய்மொழியை அபிநயித்துப் பாடி வருகிற திருவரங்கப் பெருமாளரையர் ஆளவந்தார் திருமுக மண்டலத்தைப் பார்த்து "நடமினோ நமர்களுள்ளீர் நாமுமக்கு அறியச்சொன்னோம்" [திருவாய் 10.2.8] என்று பலகாலும் பாடியருள, ஆளவந்தாரும் பெரியபெருமாளுடைய நியமனம் பெற்றுத் திருவனந்தபுரத்திற்கு எழுந்தருளி, அநந்தபத்மநாபனைத் திருவடி தொழுது குருகைக்காவலப்பன் எழுதிக்கொடுத்த திருமுகம் நினைவுக்கு வருகையாலே அதை எடுக்கச் செய்து பார்க்கையில், அப்பன் பரமபதம் செல்லும் தினம் அன்றேயாயிருக்கக்கண்டு "ஒரு புஷ்பக விமானம் பெற்றிலோமே" என்று மிக வருந்திக் கோயிலுக்கு எழுந்தருளினர். ஆளவந்தார் வைபவத்தில் எஞ்சிய பகுதிகள் அடுத்துள்ள அவருடைய சிஷ்யர்கள் வைபவத்திலும் எம்பெருமானார் வைபவத்திலும் சுருக்கமாகக் காணலாம்.

ஆளவந்தார் அருளிச்செய்த க்ரந்தங்கள் எட்டு. 1. ஆத்மஸித்தி. 2. ஸம்வித்ஸித்தி. 3. ஈச்வரஸித்தி. என்னும் ஸித்தித்ரயம், வேதாந்த தத்வ விசாரபரமான இவை எம்பெருமானாருக்கு ஸ்ரீபாஷ்யம் முதலானவற்றை அருளிச்செய்வதற்குக் கைகொடுத்தன. 4. கீதார்த்தஸங்க்ரஹம். இது எம்பெருமானுடைய கீதாபாஷ்யத்திற்கு அடிப்படையாய் அமைந்தது. 5. ஆகமப்ராமாண்யம். இது பாஞ்சராத்ர ஆகமத்தின் ப்ராமாண்யத்தை ஸமர்த்திப்பதாய், பாஞ்சராத்ராதிகரணம் முதலானவற்றை விவரிக்கும்போது ஸ்ரீபாஷ்யகாரர்க்கு உதவிற்று. 6. மஹாபுருஷநிர்ணயம். ஸ்ரீமந்

நாராயணனின் பரத்வத்தை ஸ்தா₂பிக்கும் க்₃ரந்த₂மான இது- வே₃த₃ார்த்த₂ஸங்க்₃ரஹம் முதலான பல க்₃ரந்த₂ங்களை அருளிச் செய்யும்போது எம்பெருமானுர்க்குப் பயன்பட்டது. 7. ஸ்தோத்ரரத்னம். எம்பெருமானைப்பற்றிய தன்னிகரில்லாத துதிநூல் இது. 8. சதுஃ ஸ்லோகீ. மிகச் சுருக்கமாய், மிக ஆழ்ந்த பொருளை உடைய இத் துதிநூல் பிராட்டியைப்பற்றியது. இவ்விரண்டு துதிநூல்களும் உடையவராலே க₃த்₃யம் முதலானவற்றில் ஆர்வத்தோடு கையாளப் பட்டவை. இவற்றில் ஸித்₃தி₄த்ரயத்தில் ஒரு பகுதியும், மஹாபுருஷ நிர்ணயம் முழுவதும் இப்போது கிடைக்கவில்லை. மற்றவை உள.

## ஐதிஹ்ய நிர்வாஹங்கள்

1. ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவம்: பெரியநம்பி, திருக் கோட்டியூர்நம்பி, பெரிய திருமலைநம்பி, மாறனேரி நம்பி, திருக்கச்சீ நம்பி, ஆளவந்தாராழ்வான், திருமாலையாண்டான், வானமாமலை யாண்டான், தெய்வவாரியாண்டான், ஈசனுண்டான், சீயராண்டான், திருக்குருகூரப்பன், திருமோகூரப்பன், திருமோகூர்நின்றுன், தெய்வம் பெருமாள், வகுளாபரண ஸோமயாஜியார், திருக்குருகூர்த₃ாஸர், திருமாலிருஞ்சோலைத₃ாஸர், வடமதுரைப்பிறந்தான், ஆட்கொண்டி யம்மங்கி என்று இவ்விருபது முதலிகளும் ஆளவந்தார் ஸ்ரீபாத₃த் திலே ஆஶ்ரயித்தார்கள்.

இவர்களெல்லாரும் வித்₃வான்களுமாய் த₃ர்ஶந ப்ரவர்த்தகருமா யிருக்கிற காலத்திலே, மணக்கால் நம்பி ஆளவந்தாரைப்பார்த்து 'இன்னமொரு ரஹஸ்ய விஶேஷம் குருகைக் காவலப்பன் பக்கலிலே யுண்டு; அங்கேபோய்க் கேளும்' என்று அருளிச்செய்ய, ஆளவந் தாரும் 'அதுவென்? தேவரீருக்கு அந்த ரஹஸ்ய விஶேஷம் இன் றிக்கே போவானென்?' என்ன, நம்பியும் "உங்கள் திருப்பாட்டனு ரான நாத₂முனிகள் எங்களாசார்யரான உய்யக்கொண்டாருக்கு அந்த ரஹஸ்ய விஶேஷத்தை அருளிச்செய்யத்தேட அவரும் 'பிணங் கிடக்க மணம் புணரலாமோ? ஶரீராவஸாநத₃ஶையிலே அப்₄ய ஸிக்கவமையும்' என்று விண்ணப்பஞ்செய்தார். ஆகையாலே அந்த ரஹஸ்ய விஶேஷம் இல்லையாய்த்து" என்ன, 'ஆகில், அங்கே கேட் போம்' என்று கோயிலிலே எழுந்தருளியிருந்து ஆளவந்தார் த₃ர்ஶநம் நிர்வஹிக்க.

2. ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவம்: அநந்தரம் ஆளவந் தாரும் முதலிகளும், அப்பன் யோகத₃த்திலே எழுந்தருளியிருக்கு

மிடத்தேற எழுந்தருளி, 'இவரை ஸமாதி₄ப₄ங்க₃ம் பண்ண வொண்ணாது' என்று தும்முதல் இருமுதல் அடியோசைப்படுத்து தல் செய்யாதே மௌனத்தோடே சுவர்ப்புறத்தே பின்னே தெரியாதே நிற்க, அப்பனும் யோக₃த்திலே எழுந்தருளியிருக்கிறவர் பின்னே திருப்பிப் பார்த்தருளி 'இங்கே சொட்டைக்குலத்தவர் ஆரேனும் வந்தாருண்டோ?' என்று கேட்டருள, ஆளவந்தாரும் 'அடியேன் யமுனைத்துறைவன் விடைகொண்டிருக்கிறேன்' என்று எழுந்திருந்துவந்து அப்பன் ஸ்ரீபாத₃த்திலே ஸேவித்திருந்து 'அடியோங்கள் சுவர்ப்புறத்தே பின்னே தெரியாதபடி நிற்க, தேவரீர் இங்ஙன் அருளிச்செய்கைக்கு ஹேதுவென்?' என்று கேட்டருள அப்பன் அருளிச்செய்தபடி:- அடியேனுந் தானுமாய் அநுப₄வியா நின்றால் பெரியபிராட்டியார் திருமுலைத் தடத்தாலே நெருக்கியணைத்தாலும் அவள் முகங்கூடப் பாராத ஸர்வேஸ்வரன் என் தோள்களை யமுக்கி தாலுமூன்றுதரம் சுவர்ப்புறத்து எட்டிப்பார்த்தான்; இப்படி அவன் பார்க்குப்போது சொட்டைக்குலத்திலுள்ளார் ஆரேனும் வந்தாருண்டாகவேணுமென்று இருந்தேன் காணும்' என்று அருளிச்செய்தார். ஆளவந்தாரும் இதைக்கேட்டுப் போர வித்₃த₄ராயருளி 'அடியேனுக்கு இந்த யோக₃ரஹஸ்யத்தை அருளிச்செய்ய வேணும்' என்று அப்பன் ஸ்ரீபாத₃த்திலே தண்டனிட்டுக்கொண்டு விழுந்து கிடக்க, அப்பனும் உகந்து 'அப்படியே செய்கிறோம்' என்று முடிபிடித்தெடுத்து 'நம்முடைய ஶரீராவஸாநத்திலே சொல்லுகிறோம்; வருகிற புஷ்ய மாஸத்திலே கு₃ருபுஷ்யயோக₃த்திலே அபி₄ஜிந் முஹூர்த்தத்திலே நமக்கு ஶரீராவஸாநமாயிருக்கும்; அதுக்கு முன்னுக எழுந்தருள வேணும்' என்று திருமுகமெழுதிக்கொடுத்தருள ஆளவந்தாரும் திருமுகத்தைக்கொண்டு கோயிலேற எழுந்தருளினர்.

3. ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவம்: குருகைக்காவலப்பன் வைபவம் ஐதிஹ்ய நிர்வாஹம் 5-ல் உள்ளபடி.

4. ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவம்: தெய்வவாரியாண்டானுக்கு ஆளவந்தார் விஶ்லேஷம் பொறுமல் திருமேனி ஶோஷிக்க, இங்கிருந்த முதலிகள் இவர்க்கு வைத்₃யர்கள் பலரையும் அழைத்துப் பார்ப்பித்தவிடத்தில் அவர்கள் 'இவர்க்கு விஷயஸ்ப்ருஹையாக்கும் இப்படியாய்த்து' என்ன, 'உமக்கு எந்த விஷயத்திலே ஸ்ப்ருஹை இருக்கிறது?' என்று முதலிகள் கேட்க, அவரும் 'அடியேனுக்கு ஆளவந்தார் விஷயமொழிய வேறொரு விஷயமுண்டோ?' என்று அருளிச்செய்ய, 'ஆகில், இவரை அங்கேறக் கொண்டுபோங்கோள்'

என்று வைத்₃யர்கள் பலருஞ்சொல்ல, முதலிகளும் இவரைக் கட்டணத்திலே கொண்டுபோக, ஒருநாளைக்கொருநாள் திருமேனியில் வாட்டந்தீர்ந்து பின்பு நடக்கவல்லவராய் வருகிறவளவிலே, ஆளவந்தாரும் திருவநந்தபுரத்தினின்று மீண்டு எழுந்தருளுகிற வழியிலே திருவநந்தபுரத்துக்கு அரைக்காதவழியிலே கரைமனையாற்றங்கரையிலே விட்டு எழுந்தருளியிருக்க, தெய்வவாரியாண்டானும் ஆளவந்தாரை ஸேவித்து அவர் ஸ்ரீபாத₃த்திலே தண்டன் ஸமர்ப்பித்துக் கொண்டு விழுந்துகிடக்க, ஆளவந்தாரும் இவர் எழுந்திருக்க மாட்டாமற்கிடக்கிறதைக்கண்டு, 'பெருமாள் ஸ்வதந்த்ரருமாய் ஸௌரருமாயிருக்கையாலே ஸ்ரீப₄ரதாழ்வான் வைத்தவிடத்தேயிருந்தார்; அடியேன் ஸ்வதந்த்ரனுமன்றிக்கே ஸௌரனுமன்றிக்கேயிருக்கையாலேயிறே நீர் வைத்தவிடத்தில் இராமல் வந்தது' என்று அருளிச்செய்ய, இத்தைக்கேட்ட தெய்வவாரியாண்டானும் 'வந்து ஸ்வரூபஹாநிப்பட்டேன்!' என்று மிகவும் ஸத்தை குலைந்து கிடக்க, இவர் எழுந்திராதபடி கண்டு 'என்னை ஸ்வதந்த்ரனும் ஸௌரனுமாக்கினாலொழிய எழுந்திரேனென்று கிடக்கிறீரோ?' என்று ஆளவந்தார் அருளிச்செய்ய, தெய்வவாரியாண்டானும் இவ்வார்த்தையைக்கேட்டு, 'வந்து ஸ்வரூபஹாநிபட்டவோபாதி இதுவும் ஒரு ஸ்வரூபஹாநியாயிற்றே!' என்று பரபரவென்று எழுந்திருந்து நிற்க, ஸ்ரீபாத₃த்து முதலிகளும் ''ஜலாந்மத்ஸ்யாவிவோத்₃த்₄ருதௌ'' என்ற இளையபெருமாள் நிலை இவர்க்கு உண்டாய்த்து — என்ன, ஆளவந்தாரும், 'ஈதொரு அதி₄கார விசேஷம் இருந்தபடி என்தான்!' என்று போரவுகந்தருளி 'மிகவும் மெலிந்தீரே' என்று முதுகு தடவி அதிக்ருபார்த்₃ரசித்தராய், 'திருவநந்தபுரதநுத் திருக்கோபுரம் அதோ தோன்றுகிறது; அங்கே போய் *ஆயிரம்பைந்தலையநந்தசயனனை ஸேவித்து வாரும்' என்று அருளிச்செய்ய, இவரும் 'என்னுடைய திருவநந்தபுரம் எதிரே வந்தது' என்று ஸ்வாசார்யரான ஆளவந்தாரைக் காட்டியருள, ஆளவந்தாரும் ''யேநைவ கு₃ருணா யஸ்ய ந்யாஸவித்₃யா ப்ரதீ₃யதே | தஸ்ய வைகுண்ட₂ து₃க்₃த₄ாப்₃தி₄ த்₃வாரகாஸ் ஸர்வ ஏவ ஸ: ||'' என்றும், ''வில்லார் மணி கொழிக்கும் வேங்கடப் பொற்குன்றுமுதல் செல்லார் பொழில்சூழ் திருப்பதிகளெல்லாம் மருளாமிருளோட மத்தகத்துத் தம்தாள் அருளாலே வைத்த அவர்'' என்றும், ''நின்ற வண்கீர்த்தியும்'' என்று தொடங்கி, ''உன்னிணை மலர்த்தாள் என்றனக்குமது'' என்றும் சொல்லுகிறபடியே விசேஷாதி₄காரியான தெய்வவாரியாண்டானைக் கூட்டிக் கொண்டு மீண்டு கோயிலேற எழுந்தருளிப் பெரிய பெருமாளையும் ஸேவித்துக்கொண்டு (அங்கே தாமும் ஸ்ரீபாதத்து முதலிகளுமாக இருந்து த₃ர்ஸநம் நிர்வஹித்தருளுகிறபோது) 'இனிமேல் த₃ர்ஸந ப்ரவர்த்தகராவார் ஆர்?' என்று விசாரமுண்டாய் ஒருவரையுங் காணாதே முசித்துச் சிந்தித்திருக்கிறகாலத்திலே—

6. ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவம்: அவ்வளவிலே, இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் பேருளாளர் ஸந்நிதி4யினின்றும் கோயிலுக்கு எழுந்தருளி நம்பெருமாளைத் திருவடிதொழுது ஆளவந்தார் திருவடிகளிலே ஸேவித்துநிற்க, ஆளவந்தாரும் பெருமாள் கோயில் விசேஷங் கேட்டருளும்போது ப்ராஸங்கி3கமாக "யாத3வப்ரகாசனென்பானொரு ஏகத3ண்டி3ஸந்யாஸியக்கல் ஸ்ரீபெரும்பூதூர் இளையாழ்வாரென்றொருவர் வேதா3ந்தம் வாசியாநிற்க, 'ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்3ரஹ்ம' [தை-ஆந 1] [ஸத்யமாகவும் (எப்போதுமிருப்பதாகவும்), ஜ்ஞான ஸ்வரூபமாகவும், அநந்தமாகவும் (தே3ஶகாலவஸ்துக்கள் மூன்றுலும் அளவுபடாததாகவும்) இருப்பது ப்3ரஹ்மம்] என்கிற ஶ்ருதி வர, அவன் அதுக்கு வ்யாவ்ருத்தி தோன்ற அர்த்த2ஞ்சொல்ல, இளையாழ்வாரும் கு3ணயோக3ம் சொல்லலாயிருக்க வ்யாவ்ருத்தி சொல்லல்சேராதென்ன, அவனும் ஹூங்காரம் பண்ணினான்; பின்னையும் ஒருநாள் இளையாழ்வார் அவனுக்கு அப்4யஞ்ஜநமிடும்போது 'தஸ்ய யதா2 கப்யாஸம் புண்ட3ரீகமேவ மக்ஷிணீ' [சா2ந் 1-6-6 & 7] [அவனுக்கு ஸூர்யனால் மலரும் தாமரை போன்ற இரு கண்கள் உள] என்கிறதுக்கு அநுசிதார்த்த2ஞ் சொல்லக்கேட்டு க்லேசிக்கும்போது ஶோகாஶ்ரு அவன் தொடையிலே விழ, அது நெருப்புப்பொறிபட்டாற்போல் வேக, அவனும் பதறி இவர் முக2த்தைப் பார்த்து க்லேஶஹேதுவேதென்ன, இவரும் 'ஸூர்யனைக் கண்டு அப்போதலர்ந்த கமலம்போலவிருக்கும் பரமபுருஷன் திருக்கண்களென்று இங்ஙனே யோஜனையிருக்க அபார்த்த2ங் கேட்டவாறே க்லேசமாயிற்று' என்றார்" என்ற இந்த வ்ருத்தாந்தங்களை ஸவிஸ்தாரமாக விண்ணப்பஞ்செய்ய ஆளவந்தாரும் கேட்டருளி, "அஸந்த ஏவாத்ர ஹி ஸம்ப4வந்தி, ஹஸந்திகாயாமிவ ஹவ்யவாஹா: | அத்ரைவ ஸந்தோ யதி3 ஸம்ப4வந்தி தத்ரைவ லாப4: ஸரஸீருஹாணாம் ||" [நெருப்புச்சட்டியில் நெருப்புப்போலே இவ்வுலகில் து3ஷ்டர்களே உள்ளனர். இதிலேயே நல்லோர்களாகச் சிலர் காணப்படுவார்களாகில், அந்த நெருப்புச்சட்டியிலேயே தாமரைகள் பூத்தது போலாகும்] என்கிறபடியே 'இந்தளத்திலே தாமரை பூத்தாற்போலே இவ்விபூ4தியிலே இப்படியும் ஒரு மஹாநுபா4வனுண்டாகப் பெற்றதே!' என்று ப்ரீதராய் அப்பொழுதே அவரைக் காணவேணுமென்னும் பேராசையோடே முதலிகளும் தாமுமாகப் புறப்பட்டு நம்பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்து அவரநுமதிகொண்டு எழுந்தருளி, பயணக3தியிலே திருக்கோவலூர் வழியாக வந்து ஆழ்வார்கள் நாயனாரையுந் திருவடிதொழுது

"புரீணாமபி ஸர்வாஸாம் ஶ்ரேஷ்ட2ா பாபஹரா ஹி ஸா। நாம்நா காஞ்சீதி விக்2யாதா புரீ புண்யவிவர்த்த4நீ ॥" [ஹஸ்திகிரிமாஹாத்மியம்] [நகரங்கள் அனைத்திலும் சிறந்ததாய், பாபத்தைப் போக்கடிப்பதாய், புண்ணியத்தை வளரச்செய்வதாயிருப்பது காஞ்சியென்று புகழ்பெற்ற அந்நகரம்] என்று சொல்லப்படுகிற மாஹாத்ம்யத்தையுடைத்தான பெருமாள்கோயிலேற எழுந்தருள (திருக்கச்சிநம்பியும் 'ஸ்வாசார்யரான ஆளவந்தார் எழுந்தருளினுர்' என்று கேட்டு மிகவும் ஸந்தோஷத்துடனே எதிர்கொள்ள எழுந்தருள) அங்குள்ள ஸ்ரீவைஷ்ணவர்களும் வரந்தரும் பெருமாளரையரும் ஸ்ரீஶட2கோபனும் தீர்த்த2ப்ரஸாத3ங்களுங் கொண்டு அதிஸம்ப்4ரமத்துடனே எதிர்கொள்ள, ஆளவந்தாரும் மிகவும் ஸந்துஷ்டராய் ஸாஷ்டாங்க3ப்ரணாமம் பண்ணித் தீர்த்த2ப்ரஸாத3ங்களை ஸ்வீகரித்தருள, திருக்கச்சிநம்பியும் மிகவும் உகப்போடே திருவடிகளிலே அடைவுகெட விழுந்து ஸேவிக்க, ஆளவந்தாரும் அதிப்ரீதியுடனே அவரை முடிபிடித்தெடுத்து 'ஸ்ரீக3ஜேந்த்3ரதா3ஸரே! பேரருளாளர்க்கு அந்தரங்க3மான திருவாலவட்ட கைங்கர்யம் அவிச்சி2ந்நமாக நடந்துவருகிறதோ?' என்ன, அவரும் வாய்புதைத்து 'தேவரீருடைய க்ருபையாலே பேரருளாளர் கண்டருளுகிறுர்' என்று விண்ணப்பஞ்செய்ய பின்பு நம்பியையுங் கூட்டிக்கொண்டு "உலகேத்துமாழியான் அத்தியூரான்" என்கிற அர்த்தி2தார்த்த2பரித3ாந தீ3க்ஷிதரான பேரருளாளரை ஸேவிப்பதாகப் புகுந்து ப்ரத2மம் பேரருளாளன் பெருந்தேவியாரைத் திருவடிதொழுது ப்ரத3க்ஷிணமாக எழுந்தருளாநிற்க. "உத3க்பஶ்சிமப4ாக3ஸ்த2ம் வல்மீகம் மஹதோ கி3ரே:| பூஜநீயஶ்ச தத்ராஸ்தே ஶேஷ:ப2ணப்4ருதாம் வர:" [ஹஸ்திகிரிமாஹாத்மியம் 1.61] [அந்தத் திருக்கச்சியிலேயே, சிறந்த அத்திகிரிக்கு வடமேற்கில் புற்றொன்று இருக்கிறது. அந்தப் புற்றில் பாம்புகளுக்கு அரசனை திருவனந்தாழ்வான் (யாவராலும்) பூஜிக்கத்தக்கவராக எழுந்தருளியிருக்கிறுர்] என்று சொல்லுகிற திருப்புற்றின் ஸமீபத்திலே திருவநந்தாழ்வானையும் அதுக்குக் கிழக்காகக் கரியமாணிக்கத்தாழ்வாரையும் ஸேவித்து ஆளவந்தாரும் முதலிகளும் எழுந்தருளியிருக்கிறவளவிலே, யாத3வப்ரகாஶனும் திரளுமாகப் பேரருளாளரை ஸேவித்து ப்ரத3க்ஷிணம் பண்ணிக்கொண்டு வாராநிற்க, ஆளவந்தாரும் 'இவர்களிலே இளையாழ்வார் ஆர்?' என்று நம்பியைக்கேட்டருள, அவரும் "சிவந்து நெடுகி வலியராய் 'ஆயதாஶ்ச ஸுவ்ருத்தாஶ்ச பா3ஹவ:' [ரா·கி3-15] [நீண்டவையும், உருண்டிருப்பவையுமான (ராமலக்ஷ்மணருடைய) திருக்கைகள்] என்கிறபடியே ஆஜாநுபா3ஹுவாய் நடுவே வருகிறவர்" என்று

விண்ணப்பம் செய்ய, ஆளவந்தாரும் ஸந்தோஷத்தாலே ப்ரஸந்ந மது4ரக3ம்பீ4ரநயனங்களாலே பூ4யோபூ4ய: செவ்வரியோடே அவரைப் பார்த்தருளி 'ஆம் முதல்வன் இவன்' என்று விசேஷகடாக்ஷம் பண்ணியருளி, பெருமாளை நோக்கி, "'யஸ்ய ப்ரஸாத3கலயா ப3தி4ரஶ் ஶ்ருணோதி பங்கு3: ப்ரதா4வதி ஜவேந ச வக்தி மூக:| அந்த4: ப்ரபஶ்யதி ஸுதம் லப4தே ச வந்த்4யா தம் தே3வமேவ வரத3ம் ஶரணங்க3தோऽஸ்மி ||' [எந்தப் பேரருளாளனுடைய அனுக்3ரஹத்தின் லேசத்தினாலேயே செவிடன் கேட்கும் சக்தியுடையவனாகிறான். காலில்லாதவன் வேகமாக நடக்கவல்லவனாகிறான், ஊமை பேசவல்லவனாகிறான், குருடன் காணவல்லவனாகிறான், மலடியும் பிள்ளை பெறுகின்றாளோ, அந்த தேவப்பெருமாளான வரதராஜனை ஶரணமடைகிறேன்] என்றும், 'தாம்வேண்டும், காமமே காட்டுங் கடிது' என்றும் சொல்லுகிறபடியே அவ்வவருடைய இஷ்டகாமங்களைத் தந்தருளுகிறவராகையாலே, அடியேனுக்கும் இளையாழ்வாராகிற மஹாநுபா4வர் நம் த3ர்ஶந ப்ரவர்த்தகராம்படி விசேஷகடாக்ஷஞ் செய்தருளவேணுமென்று தேவரீரை ஶரணம் புகுந்தேன்" என்று விண்ணப்பஞ்செய்து, பின்பு ஹஸ்திகி3ரியின் மேலே எழுந்தருளிப் பேரருளாளரையும் ஸேவித்துத் தீர்த்த3ப்ரஸாத3மும் ஸ்வீகரித்தருளித் திருக்கச்சிநம்பியையும் நிறுத்தி, அப்போது இவர்க்கு ஒரு நல்வார்த்தைசொல்ல அவஸரம் காணாமையாலே மீண்டு, முதலிகளும் தாமுமாகக் கோயிலுக்கு எழுந்தருளினார்.

6. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம்: அவ்வளவிலே ஆளவந்தார் திருமேனியிலே நோவுசாத்தியெழுந்தருளியிருக்கச் செய்தே, திருவரங்கப் பெருமாளரையரைப் புருஷகாரமாகக்கொண்டு திருக்கோட்டியூர் நம்பியும் பெரியநம்பியும் ஆளவந்தார் ஸ்ரீபாத3த்திலே தண்டனிட்டு 'அடியோங்களுக்குத் தஞ்சமாயிருப்பதொரு அர்த்த2ம் ப்ரஸாதி3த்தருளவேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய, ஆளவந்தாரும் முதலிகளிருவரையும் திருவுள்ளம்பற்றி 'உங்களுக்குத் தஞ்சமாயிருப்பதொரு அர்த்த2ம் இது:— கோயிலாழ்வாரே உங்களுக்கு உயிர்நிலை உங்களுக்குத் தஞ்சமென்று பு3த்3தி4 பண்ணிப்போருங்கோள்' என்றும், 'பெரியபெருமாள் திருவடிகளின் கீழே வீணையுங் கையுமாய் ஸேவித்திருக்கும் திருப்பாணாழ்வார் விக்3ரஹத்தைப் பாதா3தி3கேஶாந்தமாக ஸேவித்துக்கொண்டு போருங்கோள்' என்றும் திருவுள்ளமாக, திருவரங்கப்பெருமாளரையர் முதலான முதலிகள் மூவரும் அப்படியே திருவுள்ளம் பற்றியிருக்கிறவளவிலே, ஆளவந்தாரும் திருவரங்கப்பெருமாளரையர் முதலான முதலிகள் மூவரையும் குறித்து, இதற்கு ப்ரமாணமாகத் திருவேங்கடமுடையா

ணுயிர்நிலை யறிந்து போரும் குறும்பறுத்த நம்பியையும். பேரரு ளாளப் பெருமாளுயிர் நிலையறிந்து போரும் திருக்கச்சிநம்பியையும், பெரிய பெருமாளுயிர் நிலையறிந்து போரும் திருப்பாணாழ்வாரையும், திருப்பாணாழ்வாருயிர் நிலையறிந்து போரும் திருவரங்கப் பெருமா ளரையரையுங் காட்டியருளி, ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரை யரைப் பார்த்தருளி 'நீர் பெரிய பெருமாளுயிர்நிலையறிந்து ஸேவித் துப்போருகிற விக்₃ரஹமே அடியேனுக்கு உபாயோபேயமென்று பு₃த்₃தி₄பண்ணிப் போருவன்' என்று அருளிச்செய்ய. திருவரங்கப் பெருமாளரையரும் ஆளவந்தார் ஸ்ரீபாத₃த்திலே த₃ண்ட₃ன் ஸமர்ப் பித்து 'தேவரீர் நித்யவிபூ₄தியிலே சென்று பரமபத₃நாத₂னை ஸேவித்து இமையாத கண்ணராய்க் கொண்டுபோரத் திருவுள்ளம் பற்றி யருளிற்றே?' என்று விண்ணப்பஞ் செய்ய. ஆளவந்தாரும் அவரைக் குறித்து 'நீர் பரஸம்ருத்₃தி₄க்கு உகந்து அத்₄யவஸித் திரும்' என்று அருளிச்செய்து, பின்னையும் ஆளவந்தார் இம் முதலிகள் மூவரையும் திருவுள்ளம்பற்றி 'ஒருவன் ப்ரபந்நனானால் ப₄க₃வதீ₄நமான ஆத்ம யாத்ரையிலும் கர்மாதீ₄நமான தே₃ஹ யாத்ரையிலும் அந்வயமுண்டென்று இருந்தானாகில் ஆத்மஸமர்ப் பணங்குலைந்து நாஸ்திகனாய்விடும்; ஆகையாலே, த்ரிவித₄கரணங் களாலும் உப₄யயாத்ரையிலும் அந்வயம் இல்லை: நாராயணனுக்கு நைரந்தர்ய வேஷம் தன்பக்கல் பேற்றுக்கு நம:' என்னுதவர்களை ''வானவர் நாட்டையும் நீ கண்டுகொள்'' என்பது ஒரு ஔதா₃ர்ய விஶேஷமுண்டு. நாரங்களுக்கு நைரந்தர்யவேஷம் ''நாராயணனே நமக்கே பறைதருவான்'' என்கிறபடியே நிர்ப்ப₄ரங்களாயிருக்கை என்றிராதே, தம்பேற்றுக்கு த்வரிக்கையும் ஸ்வரூபஹாநி: எம்பெரு மானே ரக்ஷகனென்றிருக்கையும் ஸ்வரூபஹாநி; எம்பெருமான் ரக்ஷ்ய னென்றிருக்கையும் ஸ்வரூபஹாநி; இப்படியிருந்தானாகில் அநந்யார் ஹஶேஷத்வத்துக்கும் ஸ்வ ஸ்வாமிபா₄வஸம்ப₃ந்த₄த்துக்கும் சேராது' என்று அருளிச்செய்ய. மீளவும் இவர்கள், ஸ்ரீபாத₃த்திலே தண்ட னிட்டு. 'அடியோங்களுக்குப் பற்றும் உபாயம் எது?' என்று கேட்க. ஆளவந்தாரும், ,,நீங்கள் அடியேனை உபாயோபேயமென்று பு₃த்₃தி₄பண்ணிப் போருங்கோளென்கை அடியேனுக்கு ஸ்வரூப ஹாநி; 'எம்பெருமான் தான் தொழுவார் எப்பொழுதும என் மனத்தேயிருக்கின்றாரே' என்கிறவதுவே உங்களுக்கு உபாயோ பேயமென்று பு₃த்₃தி₄பண்ணிப் போருங்கோள்'' என்று அருளிச் செய்ய. முதலிகளும் திருவுள்ளத்திலே முசித்திருக்க ஆளவந்தாரும் இவர்களைக்கண்டு 'நீங்கள் முசிக்கவேண்டா: உங்களுக்குத் திருமந்த்ரார்த்த₂ம் பே₄ாக₃மண்டபம்: சரமஶ்லோகார்த்த₂ம் புஷ்ப

மண்டபம்; மந்த்ரரத்நார்த்த2ம் த்யாக3மண்டபம்; இதற்கு ப்ரமா தாக்கள் திருப்பாணாழ்வார் முதலானோர்கள்" என்று அருளிச்செய் தார். இத்தைத் திருவரங்கப்பெருமாளரையர் திருவுள்ளம்பற்றி 'தேவரீர் அமுதாரும் தீர்த்த2ம் ப்ரஸாதித்துப்போமளவில் க்ரிமிகீடாதி3 களுக்கு ஒழிவு வந்தால் சேதமில்லை" என்று அருளிச்செய்ய, ஆளவந்தாரும் அவ்வார்த்தையைக்கேட்டுப் பராக்கடித்து ப்ரத்யுத்தர மருளிச் செய்யாமலிருக்க. இவ்வார்த்தையை முதலிகள் இருவரும் திருவுள்ளம்பற்றி. 'ஆளவந்தார் வியோ3கத்தில் நாம் ப்ராண த்யாக3ம்பண்ணக் கடவோம்' என்று நிஶ்சயித்திருக்கிறவளவிலே:

பெரியபெருமாள் திருவோலக்கத்திலே இவ்விஶேஷம் பிறக்க, பெரியபெருமாளும் திருவரங்கப்பெருமாளரையர் திருக்கோட்டியூர் நம்பி முதலாக அருளப்பாடிட்டு 'ஆளவந்தார் வியோக3த்திலே நீங்கள் அவிவேகம்பண்ணினீர்களாகில் நம்மாணை" என்று ஆஜ்ஞாபித்துத் திருவரங்கப்பெருமாளரையர் திருக்கையிலே அவர்களைக் காட்டிக் கொடுத்தருள, அவரும் முதலிகளிருவரையும் கையைப் பிடித்துக் கொண்டு ஆளவந்தார் ஶ்ரீபாத3த்திலே சென்று இவ்விஶேஷத்தை விண்ணப்பஞ்செய்ய. அவரும் இதைக்கேட்டு, "நம் பேற்றுக்கு ஸஹியாதவர்கள் பெரியபெருமாள் இரண்டாற்றுக்கும் நடுவே திருவாராத4நங்கண்டருள ஸஹியாதவர்கள்" என்று அருளிச்செய்து, 'நம்முடைய வியோக3த்தில் அவிவேகம் பண்ணினீர்களாகில் உய்யக்கொண்டார் மணக்கால்நம்பி முதலான பெரிய பெருமாளுகந்த முதலிகளுடைய திருவுள்ளத்தை மறுத்தவர்களாவுதிகோள்' என்று தம்முடைய தி3வ்யாஜ்ஞையிட. இவர்களும் திருவுள்ளத்திலே நொந்திருக்கிறவளவிலே. ஆளவந்தாரும் 'ப4க3வத்3பா4க3வத விஷயங்களிலே தரமிடாதே பா4க3வதவிஷயத்திலே ப4க3வந்நோக்கான வனும் ப4க3வானை கு3ருபரம்பராதி3யாகத் திருவடி விளக்குமா போலே, பா4க3வதவிஷயத்திலும் தன் ஸத்தை மாண்டு ஆசார்ய விக்3ரஹத்தை அநுஸந்தி4த்துத் தீர்த்த2ங்கொண்டு போருகையும், அவர்களுக்குத் தீர்த்த2ங்கொடுக்குமிடத்தில் அர்த்த2காம பரவஶ ரன்றிக்கே தாங்களும் நேரே ஆசார்யனை நோக்கி கு3ருபரம்பரா பூர்வகமாக த்3வயத்தை அநுஸந்தி4த்துக் கொடுக்கையும் இரு வர்க்கும் உபாதே3யம்; ஜ்ஞாநாதி4க விஷயமுமாய் ஸமூஹமுமாய்ச் சென்றவளவிலே. இருவரும் அர்த்த2காமபரவஶராய், ப்ராக்ருதஶரீரத் திலே நோக்காய், ஸமூஹத்திறசென்ற முதலிகளையிகழ்ந்து திரு வுள்ளம் கன்றுமாகில், ஆசார்யனேயாகிலும் இவர்களுக்கு அத்தீர்த் த2ம் உபாதே3யமன்று' என்று அருளிச்செய்ய. இம்முதலிகளும் அவ்வார்த்தையைத் திருவுள்ளம்பற்றியிருக்கிறவளவிலே, ஆளவந்

தாரும் முதலிகளைப் பார்த்து 'உங்களுக்குச் சரமார்த்த2ம் பெரிய பெருமாள் திருவடிகளிலே ஒரு கருமுகைமுகிழ் வெடிக்கவைக்கவும் ஆசார்ய விஷயத்தில் ப்ரத2மத3சை மத்4யம த3சைகளைச் சரம த3சையாக அநுஸந்தி4த்துப் போருகையும் உத்தாரகப்ரதிபத்தி" என்று அருளிச்செய்து, திருவரங்கப் பெருமாளரையரை தண்டனிட்டுத் திருக்கோட்டியூர் நப்பியையும் பெரியநம்பியையும் அவர் கையிலே காட்டிக்கொடுக்க, திருவரங்கப்பெருமாளரையரும், அவர்களைக் கைக்கொண்டு 'நீங்கள் ஆசார்ய விப்லேஷத்தில் அவிவேகம் பண்ணினீர்களாகில், உங்களுக்கு ஒரு தே3ஶவிஶேஷமின்றிக்கே நித்யஸூரிகள் திரளிலும் புகுரப்பெருதே இழப்புதிகோள்' என்று அருளிச்செய்ய, ஆளவந்தாரும் இதைக் கேட்டுத் திருவுள்ளமுகந்து 'உங்களுக்குத் திருவரங்கப்பெருமாளரையருடைய விக்3ரஹமே உபாயோபேயமென்று பு3த்3தி4பண்ணிப் போருங்கோள்' என்று அருளிச்செய்ய, அவர்களும் அப்படியே பு3த்3தி4 பண்ணியிருந்த வளவிலே, ஆளவந்தார் திருமேனியில் நோவாறி ஆரோக்3ய முண்டாய், நீராடி, பெரியபெருமாளுக்கும் உத்ஸவமாய்ப் பெரியதிரு மஞ்சனம் கண்டருளி உடுத்து முடித்துச் சாத்துப்படிசாத்தி அங்குள்ள ஸ்ரீரங்கமாமறையோர் ஸேவிக்க அமுதுசெய்தருளித் திருத்திரை நீக்கியிருக்கிறவளவிலே.

ஆளவந்தார் திருவோலக்கத்தேற எழுந்தருளி க்ருதாஞ்ஜலி புடராய் ஸேவித்து நிற்க, பெரியபெருமாளும் நினைவறிந்து திருவரங்கப்பெருமாளரையரை அருள்பாடிட்டருள, அவரும் ஸேவிக்கு மடைவொழியச் சூழ்விசும்பணிமுகில் ஸேவிக்க, திருவோலக்கமடைய 'இதென்ன!' என்று விஸ்மயப்பட, பெரியபெருமாள் திருநெற்றி மாலை நழுவிவிழ, நம்பியார் எடுத்து ப்ரஸாதி3க்கிறேமென்று இருக்கிறவளவிலே, திருவரங்கப்பெருமாளரையர் சடக்கென எடுத்து ஆளவந்தாருக்கு ப்ரஸாதி3த்தருள, ஆளவந்தாரும் திருவுள்ள முகந்து நிற்க, அரையரும் 'உம்முடைய நினைவு ஸித்3தி4த்ததே!' என்ன, பெருமாளும் தீர்த்த2ம் ப்ரஸாத3ம் ஸ்ரீஶட2கோபன் ப்ரஸாதி3த்து விடைகொடுத்தருள, ஆளவந்தாரும் மடத்தேறச்சென்று திருவரங்கப்பெருமாளரையர் திருக்கோட்டியூர்நம்பி பெரியநம்பி முதலான முதலிகளெல்லாரையும் தீர்த்த2ங்கொண்டு அமுதுசெய்யப் பண்ணி தண்டனிட்டு 'ஸர்வாபராத4ங்களையும் பொறுத்தருள வேணும்' என்று க்ஷமைகொண்டு எழுந்திராமல் நிற்க, திருவரங்கப்பெருமாளரையரும் 'உமக்கு ஒரு அபசாரம் உண்டோ?' என்று முடிபிடித்தெடுக்க, எழுந்திருந்து பின்பு அமுது செய்து இவர்களுக்குப் பூர்வம்போலே நல்வார்த்தையருளிச் செய்துகொண்டிருக்க;

அவ்வளவிலே ஆளவந்தார் திருமேனியிலே நோவு சாத்தின ரென்றுகேட்டு இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் பேருளாளர் ஸந்நிதி4யில் நின்றும் கோயிலேறச்சென்று ஆளவந்தார் திருவடிகளிலே ஸேவித்திருக்க, ஆளவந்தாரும் பெருமாள்கோயில் விசேஷம் கேட்டு 'இளையாழ்வார் செய்கிறதென்?' என்று கேட்டருள, அவர்களும் 'இப்போது இளையாழ்வார் யாத3வப்ரகாசனிடத்திலே சீற்றம் பிறந்து அவனைத் துறந்து பேருளாளர்பக்கல் ப்ரவணராய் நில்லாநின்றார்" என்று விண்ணப்பஞ்செய்ய. அத்தை ஆளவந்தாரும் கேட்டருளி உகந்து 'பேருளாளர் நம்முடைய ப்ரபத்தியை ஸப2லமாக்கியருளினார்" என்று பெரிய ப்ரீதியோடே பேருளாளன் பெருமையைப் பேச வல்லவராய்க்கொண்டு ஸ்தோத்ரத்தை விண்ணப்பஞ் செய்து ஸ்வாமி4மாநாந்தர்பூ4தரான பெரியநம்பி திருக்கையிலே கொடுத்து அவரைப் பார்த்து 'இளையாழ்வார் இப்போது யாத3வப்ரகாசனிடத்திலே சேராதே அவனை விட்டுத் தேவப்பெருமாள் பக்கலிலே ப்ரவணராயிராநின்றாரென்று கேட்டோம்; இக்காலத்தில் நீர் அங்கேறப்போய் அவரை நம்மோடே சேர்க்கவேணும்" என்று நியமித்தருள, அவரும் அப்படியே சடக்கெனப் புறப்பட்டுப் பெருமாள் கோயிலுக்கு எழுந்தருளினார்.

அநந்தரம் ஆளவந்தார் பின்னையும் நோவுசாத்தி மிகவுந் தளர்ந்து கண்வளர்ந்தருள, அருகிலிருந்த முதலிகளும் 'பெரிய பெருமாள் திருவுள்ளம் ஏதோ!' என்று தங்களிலே சிந்தித்திருக்கிறவளவிலே, பேருளாளப்பெருமாளுடைய அயன்கண்ட வைகாசித் திருநாளில் அவப்4ருத2த்தினன்று ஆளவந்தாரும் நீராடிப் பெரிய பெருமாளைத் திருவடி தொழச்சென்று உத்தமஸந்தி4 அமுதுசெய்து திருத்திரை நீக்கினவளவிலே தண்டன் ஸமர்ப்பித்துப் பாத3ாதி3 கேசாந்தமாகவும் கேசாதி3 பாத3ாந்தமாகவும் பெரியபெருமாளை ஸேவித்துத் திருவடிக்கீழ்த் திருப்பாணாழ்வாரையும் அநுப4வித்து, நம்பியார் ஸ்ரீஸட2கோபன் தீர்த்த2ம் ப்ரஸாத3ம் ப்ரஸாதி3க்கப்பெற்று திருப்பதியாரும் திருத்தளிகை ப்ரஸாத3ம் ப்ரஸாதி3த்து விடை கொடுத்தருள, ஆளவந்தாரும் ஸ்ரீபாக3த்து முதலிகளுடன் மடமே சென்று மீண்டு முதலிகளைத் தீர்த்தங்கொண்டு அமுதுசெய்தருளப் பண்ணி முஹூர்த்தமிட்டு, வைகாசி மாஸம் ஆருந்தேதி ஶ்ரவண நக்ஷத்ரத்தினன்று அபி4ஜிந்முஹூர்த்தத்திலே முதலிகள் ஶேஷமும் அங்கீ3கரித்து ஆழ்வார்களைச் சரணம்புகுந்து ஆசார்யர்கள் முதலிகள் ஸ்த2ாநத்தார் முதலாக எல்லாரையும் அழைப்பித்து க்ஷமைகொண்டு வேண்டிக்கொள்ள, அவர்களும் 'பெரியபெருமாளுக்கு ஒரு அபராத4முண்டாகிலன்றோ உமக்கு அபராத4முண்டாவது?" என்ன, திருவரங்கப் பெருமாளரையர் முதலான முதலிகளை அங்குள்ள முதலிகள் திருக்கையிலே காட்டிக்கொடுத்தருளி, ஸ்த2ா

நத்தாரைப் பார்த்து 'பெரிய பெருமாளுடைய திருவாராத4நம் திரு மந்த்ர புஷ்பம் காலாகாலத்திலே நடத்திக்கொண்டு போருங்கோள்; ஆசார்யர்கள் முதலிகள் தே3சாந்தரிகள் முதலானாரை வரவழைத்துக் கொண்டு போருங்கோள்' என்று காட்டிக்கொடுத்தருள, அவர்களும் 'அப்படியே ஆகிறது' என்று அங்கீ3கரித்து, 'இது புதுமையா யிருந்தது' என்று எல்லாரும் விடைகொடுத்துப்போக, அநந்தரம் மணக்கால்நம்பியை த்4யாநித்துக்கொண்டு பத்3மாஸநத்திலே யோக3மாய் எழுந்தருளியிருந்து அவர் திருவடிகளைத் தம்முடைய நெஞ்சிலும் கண்ணிலும் திருமுடியிலும் ஒற்றிக்கொண்டு அவர் திருவடிகளைத் தம்முன்னே வைத்துக் கொண்டு ப்3ரஹ்மவல்லி ப்4ருகு3வல்லி, புருஷஸூக்தம், அர்ச்சிராதி3, சூழ் விசும்பணிமுகில், முதலாக முதலிகள் ஸேவிக்க, திருச்சங்கு பணிமாற ஸகலவாத்3யங் களும் முழங்க, ஆளவந்தார் ப்3ரஹ்மரந்த்4ரத்தாலே திருநாட்டுக்கு எழுந்தருளினார்.

7. சரமோபாய நிர்ணயம்: அப்படியே ஆளவந்தாரும் த3ர்ஶன ப்ரவர்த்தகராய் எழுந்தருளியிருக்கிற நாளிலே மணக்கால் நம்பி சரமத3ஶையானவாறே, நாத2முனிகள் ஸ்வப்நத்திலே எழுந் தருளி நம்பியைப் பார்த்து, நம்முடைய யமுனைத்துறைவர்க்கு நாட்டையளித்துய்யச் செய்து நடத்துமவனை நாம் தேடச்சொன்னோம் என்று சொல்லும். நாம் விரும்பின விக்3ரஹத்தைத் தஞ்சமாக அவர் கையிலே காட்டிக்கொடும்' என்றருளிச்செய்ய, இப்படி அருளிச் செய்கிறது ஏதென்ன, 'நமக்கு ஸ்வப்நத்3ருஷ்டமான வ்யக்தி நம் பேரனுக்கு ப்ரத்யக்ஷ ஸித்3த4மானால் நமக்கு நெஞ்சாறல் தீரும்' என்றருளிச்செய்தார். நம்பியும்—உடனே உணர்ந்தருளி மிகவும் விஸ்மயப்பட்டு, 'நிர்ஹேதுகமாக நமக்குப் பேறு கிடைப்பதே!' என்று போர ப்ரீதராய் எழுந்தருளியிருக்கிற அவ்வளவிலே ஆளவந்தாரும் அவராய் எழுந்தருள, "உம்முடைய திருப்பாட்டனார் நிர்ஹேதுக மாக நமக்கு ஸேவை ஸாதி3த்தருளி தேவரீர்க்கு ஒரு வார்த்தை விண்ணப்பம் செய்யச்சொல்லி அருளிச்செய்தாரென்று அவ்வார்த் தையை அருளிச்செய்ய, இது நேரேயாகப் பெற்றதில்லையேயென்று இழவுபட்டருளி, ஸத்3வாரகமாகவாகிலும் விஷயீகரிக்கப்பட்ட இதுவே அமையுமென்று ப்ரீதராய் எழுந்தருளியிருக்க, ப4விஷ்யதா3சார்ய விக்3ரஹத்தையும் ப்ரஸாதி3த்து, "உம்முடைய திருப்பாட்டனார், தாம் விரும்பின விஷயம் என்று உம்மை இவ்விக்3ரஹத்தைத் தஞ்ச மாகப் பற்றியிருக்கச்சொல்லும்" என்று நியமித்தருளினார். ஆகையாலே தே3வரீரும் இந்த அவதார ரஹஸ்யத்தைப் பேணி நோக்கிக்கொண்டு போரும்; இவ்யக்திமானை நேரே ஸாக்ஷாத்கரிக்கப் போகிறீர். அவ்யக்திமானாலே இத்த3ர்ஶனம் நெடுங்காலம் நிலைநிற்கப் போகிறது" என்று அருளிச்செய்தார்.

ஆளவந்தாரும் அப்படியே த$_3$ர்ஶன ப்ரவர்த்தகராய் எழுந்தருளி யிருந்து அவ்விக்$_3$ரஹத்தைப் பரமரஹஸ்யமாகப் பரிவுடனே நோக்கிக் கொண்டு மணக்கால்நம்பி அருளிச்செய்தபடியே * நாட்டையளித் துய்யச்செய்து நடத்துகிறவனைத் தேடுவதாக உத்$_3$யோகி$_3$த்து ஒருவரையும் அடைவுபடக் காணாமையாலே வ்யாகுலாந்த:கரணராய் எழுந்தருளியிருக்க, இளையாழ்வாருடைய வ்ருத்தாந்தங்களைச் சிலர் விண்ணப்பம் செய்யக் கேட்டருளி, பெருமாள் கோயிலுக்கு எழுந் தருளினவுடனே, நம்பி முகே$_2$ந இளையாழ்வாரைக் கண்டு அவரு டைய திருநக்ஷத்ரமும் கேட்டருளி, மூன்றுபடியாலும் ஒத்திருக்கை யாலே பூர்ணமாகக் கடாக்ஷித்தருளி 'ஆமுதல்வனிவன்' என்று ப்ரதிபத்தி பண்ணியருளினர். பின்பு கோயிலேற எழுந்தருளி, சிலநாள் செல்லத் தம்முடைய சரமத$_3$ஶையானவாறே திருக்கோட்டி யூர் நம்பியை அழைத்தருளி, அந்த விக்$_3$ரஹத்தை ப்ரஸாதி$_3$த்து வரவாறும் அருளிச்செய்து, மற்றுமுண்டான வ்ருத்தாந்தங்களையும் அருளிச்செய்து, நீர் இளையாழ்வாருக்கு நாம் அருளிச்செய்த ரஹஸ்யார்த்த$_2$ங்களெல்லாம் அருளிச்செய்யுமென்று நியமித்து, 'அவர் திருநாமத்தாலே த$_3$ர்ஶனம் விளங்கப்போகிறது' என்றும் 'ப்ரபன்ன குலமாகப் பேறுபெறும்படி உத்தாரகராகத் திருவவதரித் திருக்கிறார்' என்றும் அருளிச்செய்தார். பின்பு ஆஸந்ந சரமத$_3$ஶை யானவாறே, முதலிகளெல்லாரும் சூழவிருந்து, அடியோங்களுக்கு இனி தஞ்சம் ஏதென்று கேட்டருள, "உங்களுக்கு நாம் ஒருவரை உண்டாக்கியன்றோ பேறுபெறப் போகிறோம். உங்களுடைய இழவைத் தீர்த்து நாம் மாத்ரமன்றோ இழவோடே போகிறோம்". என்று அருளிச்செய்தார்.

8. **பெரியதிருமுடியடைவு:** ஸிம்ஹாஸநாம்ஶ பூ$_4$தரான ஆளவந் தார்க்குத் திருவவதார ஸ்த$_2$லம் சோழ தே$_3$ஶத்திலே திருக்காவேரி தீரத்தில் வீரநாராயணபுரம்; திருநக்ஷத்ரம் கலியுகம் மூவாயிரத்து (தொள்ளாயிரத்து?) எழுபத்தேழுக்குமேலே தா$_4$துவருஷம் ஆடி மாஸம் பௌர்ணமி வெள்ளிக்கிழமை உத்தராடம் விஷ்கம்ப$_4$ம் ப$_4$வகரணம். திருத்தகப்பனர் ஈஶ்வரமுநிகள். திருப்பாட்டனர் நாத$_2$முனிகள். திருத்தாயார் ஶ்ரீரங்க$_3$நாயகி. குமாரர் திருவரங்கப் பெருமாளரையர், தெய்வத்துக்கரசு நம்பி, பிள்ளையரசு நம்பி, சொட்டைநம்பி. திருநாமங்கள் யாமுனசார்யர், யமுனைத்துறைவர், வாதி$_3$மத்தேப$_4$ஸிம்ஹேந்த்$_3$ரர், ஆளவந்தார், பெரியமுதலியார். குடி சொட்டை. திருவாராத$_4$னம் நம்பெருமாள். இருப்பிடம் கோயில். இவர்க்கு நாத$_2$முனிகள் - யாமுனசார்யரென்கிற திருநாம

மும், ப4க3வத் ஸம்ப3ந்த4மும் மந்த்ரோபதே3சமும் ஸாதித்தருளி, தத்வஹித புருஷார்த்த2ங்கள் ப்ரஸாதி3க்க உய்யக்கொண்டார்க்கு நியமித்து, யோக3ரஹஸ்யம் ப்ரஸாதி3க்கக் குருகைக்காவலப்பனுக்கு நியமித்தார். அந்த உய்யக்கொண்டார் மணக்கால் நம்பிக்கு நியமித்தார். ஆகையாலே இவருக்குப் புருஷார்த்த2ங்களும் ப4க3வத்3 விஷயமும் நாலாயிரமும் சதுர்த்த2ாஶ்ரம ஸ்வீகாரமும் முதலான அர்த்த2விஶேஷங்களெல்லாம் ப்ரஸாதி3த்தருளினவர் ஸ்ரீராமமிஶ்ரர் ஆக இவர்க்காசாரியர் ஸ்ரீமந் நாத2முனிகளும், புருஷகாரர் மணக்கால் நம்பியுமாம். கு3ருபரம்பரை வரிசைக்கு இவர்க்கு ஆசார்யர் மணக்கால் நம்பி. சிஷ்யர்கள் பெரியநம்பி, பெரிய திருமலை நம்பி, திருக்கோட்டியூர் நம்பி, திருமாலையாண்டான், தெய்வவாரியாண்டான், வானமாமலையாண்டான், ஈஶ்வராண்டான், ஜீயராண்டான், ஆளவந்தாராழ்வான், திருமோகூரப்பன், திருமோகூர் நின்றார், தேவப்பெருமான், மாறனேரி நம்பி, திருக்கச்சி நம்பி, திருவரங்கப்பெருமாளரையர், திருக்குருகூர் தாஸர், வகுளாபரண ஸோமயாஜியார், அம்மங்கி, ஆள்கொண்டி, வடமதுரையில் பிறந்த கோவிந்ததாஸர், ராஜபுரோஹிதரான நாத2முனிதாஸர், ஏங்கசோழனின் ராஜபத்னியான திருவரங்கத்தம்மன். ஆக சிஷ்யர் ப்ரதா4னரானவர் இருபத்திருவர். இவரருளிச் செய்தருளின ப்ரப3ந்த4ங்கள் ஸ்தோத்ரரத்னம், ஸித்3தி4த்ரயம் ஸ்ரீகீ3தார்த்த2ஸங்க்3ரஹம், ஆக3மப்ராமாண்யம், சது:ஶ்லோகி. இவர் சதுர்வேத3 ஷட் ஶாஸ்த்ராதி3 ஸகலவித்3யா பாட2ங்களும் அருளிச்செய்து நூற்றிருபத்தஞ்சு திருநக்ஷத்ரம் எழுந்தருளியிருந்தார். இவர் நம்பெருமாள் அநுஜ்ஞையினாலே திருநாட்டுக்கெழுந்தருளின ஸ்த2லம் கோயில். நிக்ஷேபம் பண்ணப்பட்ட ஸ்த2லம் திருப்பார்த்துறை(பாற்றுறை?)யிலே.

இவர்க்குத் தனியன்

யத்பத3ாம்பே4ாருஹத்4யாந வித்4வஸ்தாஶேஷகல்மஷ: ।
வஸ்துதாமுபயாதோऽஹம் யாமுநேயம் நமாமி தம் ॥

9. வார்த்தாமாலை 36 c விவரணம். திருமந்த்ரத்தில் முதல் பத3மான ப்ரணவம் ஸ்வரூபஜ்ஞானத்தை விளக்கையாலே ப4க3வத் ஸம்ப3ந்த4மாகிற ராஜகுலத்தையும், நம:பத3ம் உபாயாந்தரஶூந்யதையை விளக்கையாலே ப்ரபத்திவித்3யாநிஷ்டை2யையும், மூன்றுவது பத3மான நாராயணாயபத3ம் கைங்கர்யத்தைக் காட்டுகையாலே ப4க3வத் பா4க3வத கைங்கர்யமாகிற நல்லொழுக்கத்தையும் ஜீவனுக்கு விளக்கிறது என்று ஆளவந்தாருடைய நிர்வாஹம்.

10. வார்த்தாமாலை 84 விவரணம். திருக்கோட்டியூர் நம்பி ஆளவந்தாரைப் பார்த்து 'உபாயாம்சத்தில் தஞ்சமாக நினைத்திருப்பதென்?' என்று விண்ணப்பஞ்செய்ய; 'இவ்வளவு நீண்டகாலம் ஸ்வரூபநிருபணம் பண்ணப்பெற்றுவைத்து உபாயநிருபணமே பண்ணத் தேடுவதே!' என்று வருந்தியவராய் அருள, 'ஆகில் உபாயம் வேண்டாவோ?' என்று விண்ணப்பஞ்செய்ய; 'அழகியவளான மனைவி தன் வடிவை அலங்காரம் முதலானவற்றாலே அழகுபடுத்த அழகுபடுத்த, அழகியவனும் செல்வம் மிக்கவனுமான கணவன் அவளிடம் அந்தரங்க₃மாக ஈடுபடுவான். மனைவி கணவனிடன் ஈடுபாட்டுக்காக இதைத்தவிர வேறொரு உபாயாநுஷ்ட₂ானம் செய்யவேண்டியதில்லை. அதுபோலவே அநாதி₃காலமாக எம்பெருமானுடைய ஸ்வரூபத்தையும் தன் ஸ்வரூபத்தையும் அறியாமல், இவ்வறியாமையாகிற அழுக்குமண்டிக்கிடக்கும் ஜீவன், ஈஶ்வரனுக்கு ப₄ார்யையை ஒத்தவனாகையாலே, ப₄ர்த்தாவான அவன் தன்னை அநுப₄விக்கலாம்படி இவ்வழுக்கை அறுக்க அறுக்க, எம்பெருமான் திருவுள்ளம் இவனிடம் மிகவும் ஈடுபடும். ஆகையால் அவன் தன்னை விஷயீகரிப்பதற்கு இவன் உபாயாநுஷ்ட₂ானம் ஒன்றும் செய்யவேண்டியதில்லை' என்று அருளிச்செய்தார்.

11. வார்த்தாமாலை 136 d விவரணம். "ஏழைக்குப் புதையல் கிடைத்ததுபோலே நமக்கெல்லாம் த்₃வயம்" என்று ஆளவந்தார் அருளிச்செய்வர்.

12. வார்த்தாமாலை 188 c விவரணம். 'நம்மாழ்வாருடைய பெருமையைப் பார்க்கும்போது திருக்குறுங்குடி நம்பியான எம்பெருமானே நம்மாழ்வாராய் வந்து அவதரித்தான் என்று சொல்லலாம்' என்று ஆளவந்தார் திருவுள்ளம்.

13. வார்த்தாமாலை 208ம் வார்த்தை & விவரணம். ஆளவந்தார் ஸ்ரீபாத₃த்திலே ஸேவித்திருப்பார் இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் அந்யோந்யம் விஶ்லேஷபீ₄ருக்களாய் வர்த்திக்கிறவர்கள். ஒருநாள் இருவரும் ஆற்றுக்கு எழுந்தருளி ஒருவர் புறப்பட்டுவர, ஆளவந்தார் அருளிச்செய்த வார்த்தை:— 'அன்றிலினுடைய அவஸ்தை₂ பிறந்தபோது காண் ஆத்ம ஜ்ஞாநம் பிறந்ததாவது' என்று அருளிச்செய்தார். விவரணம்:— ஒருவரையொருவர் பிரியாமலிருக்கும் தம் இரு ஶிஷ்யர்களும் ஆண்பெண் அன்றில்கள்போலே பிரிந்தால் த₄ரியாதவர்களாயிருக்கும் நிலைமை உடையவர்களானால் தான் ப₄ாக₃வதநிஷ்டை₂யாகிற அத்யாத₄்யாத்மஜ்ஞானம் பரி

பூர்ணமாகப் பிறந்ததாகக் கொள்ளலாம் என்பது ஆளவந்தார் திருவுள்ளம்.'

14. வார்த்தாமாலை 209ம் வார்த்தை. குருகைக்காவலப்பன் வைப4வம் ஐதிஹ்ய நிர்வாஹம் 3 காண்க.

15. வார்த்தாமாலை 303 விவரணம். பெரிய முதலியார் என்னும் திருநாமமுள்ள ஆளவந்தார் தமது சிஷ்யர்களில் ஒருவரான அம்மங்கி என்னும் வாலிபனுக்குச் சொன்ன வார்த்தை இது— ''உன்னுடைய யௌவன வயஸ்ஸைக் கணிசியாமல் உனக்கு ப4க3வத்3விஷயத்தைச் சொல்லிவிட்டேன். உன்னிடம் நல்வார்த்தை கேட்கவரும்போது ப4க3வத்3விபூ4தியான (எம்பெருமானுக்குச் செல்வமான) ஸ்த்ரீகள் உன்னையடைந்து ஆத்மோஜ்ஜீவனத்தைப் பெறுவார்களா? அல்லது ஆத்மநாசத்தைப் பெறுவார்களா? என்று எனக்குப் புரியவில்லை. ஆசையால் உடம்புக்கு இரையிட்டு ஆத்ம நாசத்தை விளைக்காமல், உடலைப்பட்டினிபோட்டு உயிர்க்கு இரையிட்டு ஆத்மோஜ்ஜீவனத்தை விளைத்துக்கொண்டு போவாயாக'' என்று.

16. வார்த்தாமாலை 394 விவரணம். ஆளவந்தார் ஒருநாள் பெருமாளைத் திருவடிதொழக் கோயிலுக்குள் போகாநிற்க, ப்ரயோஜநாந்தரபரையான ஒருத்தி கண்ணும் கண்ணீருமாகச் சேலையால் கழுத்தைப் போர்த்துக்கொண்டு ப்ரத3க்ஷிணம் பண்ணுவதைக் கண்டார். உடனே கோயிலுக்குள் போகாமல் வெளியிலேயே நின்று 'ப்ரயோஜனாந்தரபரை போய்விட்டாளா' என்று விசாரித்து அவள் சென்றபின்பே உள்ளே புகுந்தார். சிஷ்யர்கள் அதற்குக் காரணம் கேட்க, ''அவள் இருக்கும்போது நாம் திருவடி தொழச்சென்றால் இரண்டு விரோத4ங்கள் ஏற்படும். அவள் ப்ரயோஜனாந்தரபரை; நாம் அநந்யப்ரயோஜனர்கள். இது அதி4காரி விரோத4மாகிற முதல் முரண்பாடு. அவளுக்கு ஐஸ்வர்யம் முதலான மற்றவை ப2லம்: நமக்கு எம்பெருமானே ப2லம். இது ப2ல விரோத4மாகிற இரண்டாவது முரண்பாடு'' என்று அருளிச்செய்தார். மற்ற பயன்களை விரும்புமவர்களுடன் சேர்ந்தால் அநந்யப்ரயோஜனர்களுக்கும் அவர்களுடைய தோ3ஷம் தட்டும் என்று கருத்து.

17. வார்த்தாமாலை 403ம் வார்த்தை. குருகைக்காவலப்பன் வைப4வம் ஐதிஹ்ய நிர்வாஹம் 4 காண்க.

18. வார்த்தாமாலை 441a. நாதமுனிகள் வைப₄வம் ஐதிஹ்ய நிர்வாஹம் 4 காண்க.

19. வார்த்தாமாலை 441 b வார்த்தை 8 விவரணம். "இம் மஹாநுபா₄வன் இத்த₃ர்ஶனத்தில் புகுந்தானுகிலோ" என்றார் ஆளவந்தார். விவரணம்:- இம்மஹாநுபா₄வன்— எம்பெருமானார். எம்பெருமானார் யாத₃வப்ரகாஶனிடம் படித்துக்கொண்டிருந்தபோது இவரே நாத₂முனிகள் திருவுள்ளம்பற்றிய ப₄விஷ்யதா₃சார்யர் என்று அறுதியிட்டு ஆளவந்தார் அருளிச்செய்த வார்த்தை.

20. வார்த்தாமாலை 456ம் வார்த்தை இறுதிப்பகுதி. ஐதிஹ்ய நிர்வாஹம் 16 குருபரம்பராப்ரபாவத்திலுள்ளபடியே பெரும்பாலும் உள்ளது.

21. ப்ரமேயரத்னம். முதல் ப்ரகரணம் "ப₄வரேஷ்வஸ்த்வபி கீடஜந்ம மே" [ஸ்தோத்ரரத்னம் 55] என்று யாமுநாசார்யரும் இத்தையே அபேக்ஷித்தார்.

22. ப்ரமேயரத்னம் 2ம் ப்ரகரணம். பாஷ்யகாரர் "ஆளவந்தாருக்கு நான் ஏகலவ்யனேபாதி" என்று அருளிச்செய்வர்.

23. ப்ரமேயரத்னம் 2ம் ப்ரகரணம். நாலூராண்டான் ஆளவந்தார் ஸ்ரீ பாத₃த்திலே ஆஶ்ரயித்துத் திருமாலையாண்டான் பக்கலிலே ஜ்ஞானோபஜீவனம் பண்ணினார்.

24. ப்ரமேயரத்னம் 3ம் ப்ரகரணம். "கரணத்ரயமும் கூடுகை ஆர்த்தலக்ஷணம். இதில் ஒன்று கூடுகை த்₃ருப்தலக்ஷணம். தத்தத் ப்ராயஶ்சித்தங்களாலே நிவர்த்தனீயமான ஸகல பாபநிவ்ருத்திக்குத் ததே₃காோபாயவ்யவஸாயம் ப்ரபத்தி" என்று பெரிய முதலியார் (ஆளவந்தார்) அருளிச் செய்வர்.

25. பெரியாழ்வார் திருமொழி 5-4-3 வ்யாக்₂யானம்:- (எம்மனா இத்யாதி) "'எம்மனா, என்குல தெய்வமே என்னுடை நாயகனே' என்கிற இம்மூன்றாலும் ஜ்ஞானவிரோதி₄யும், ஆஶ்ரயணவிரோதி₄யும், மோக்ஷவிரோதி₄யும் போனபடி" என்று ஆளவந்தார்.

26. திருப்பாவை 16ஆம் பாட்டு:- (நாயகனாய் நின்ற) ஆளவந்தார் எம்பெருமானை ஸ்தோத்ரம் பண்ணவென்றுபுக்கு ஆசார்ய ஸ்தோத்ரத்திலே இழிந்தார்; அதுக்கடி, ஒருவன் ஒரு ரத்னத்தைக் கொடுத்தால் அதன் விலையை அறிய அறியக் கொடுத்தவன் பக்கலிலே

விருப்பம் பிறக்குமாபோலே, ஶாஸ்த்ரங்களெங்கும் அப்4யஸித்தும் பார்க்குமிடத்து உபாயமாகத்தோற்றுகிற கர்மஜ்ஞான ப4க்திகள் பேற்றுக்குஸாத4நமாகமாட்டாது. ப4க3வத் ஸம்ப3ந்தி4களை முன்னிட்டுக் கொண்டு அவனையே உபாயமாகப் பற்றுமது பேற்றுக்குடலென்று ஸ்வப்ரப3ந்த4த்திலே முதலிலும் முடிவிலும் பரமாசார்யரான பெரிய முதலியாரைப் பற்றினார். 'த்வத்பாத3மூலம் ஶரணம் ப்ரபத்3யே' [ஸ்தோ 22] என்று தாம் அவன் திருவடிகளிலே பண்ணின ப்ரபத்தியையும் கீழிலவற்றோடே காற்கடைக்கொண்டு "நாத2முநிம் விலோக்ய" [65] என்று பெரிய முதலியாரை முன்னிட்டார்.

27. திருப்பாவை 20ம் பாட்டு (திருவே) உதா3ர வாக்குகளாகிறார்—திருமங்கையாழ்வாரும், ஆளவந்தாரும், ஆழ்வானும், பட்டரும். [இவர்கள் "திருவுக்கும் திரு" என்று எம்பெருமானைக் குறித்தவர்கள்]

28. திருப்பாவை 21ம் பாட்டு. (வள்ளல் பெரும் பசுக்கள்) "உதா3ர: ஸந்த3ர்ஶயந்" (ஸ்தோத்ர ரத்னம் 4) என்று ஆளவந்தார்.

29. நாச்சியார் திருமொழி 10.5. (வந்தருள் செய்து கூடுவராயிடில்) 'சிசுபாலனும் எம்பெருமானைப் பெற்றானிறே' என்றார்களாய் ஆளவந்தார் கோஷ்டியிலே; "அவன் பெற்றத்தைப் பேறாகச் சொல்லவொண்ணாது; ருசிமுன்னாகப் பெறும் பேறாயிற்று பேறாவது; அவனிருக்கில் நாடழியுமென்று கொற்றவன் வாசலுக்குள்ளே சுழற்றியெறிந்தானத்தனை காண்" என்றாராம்.

30. திருமாலை 19ம் பாட்டு. (குணதிசை பாதம் நீட்டி) ...... "ஆளவந்தார் திருவடிதொழ எழுந்தருளினால் 'து3ர்யோத4ந ஸ்தா2நம்' என்று திருமுடிப் பக்கத்தில் ஒரு ப்ரதேசத்தில் ஒரு நாளுமெழுந்தருளியிருந்தறியார்; திருவாசலுக்குக் கிழக்கு எழுந்தருளியிராத ப்ரதேசமில்லை" என்று பட்டர் அருளிச்செய்வர்.

31. கண்ணிநுண்சிறுத்தாம்பு 2. (நாவினால் நவிற்றின்ப மெய்தினேன் மேவினேனவன் பொன்னடி) இத்தைப் பின்சென்றிறே ஆளவந்தாரும் ஆசார்ய விஷயத்தை "அத்ர பரத்ர சாபி நித்யம் யதீ3யசரணௌ ஶரணம் மதீ3யம்" [ஸ்தோத்ரரத்னம் 2] என்றது.

32. திருக்குறுந்தாண்டகம் 17ம் பாட்டு (என்பதிவ் வுலகின் வண்ணம்) ஏசுவார்க்கும் அவன் கு3ணங்களைச் சொல்லி ஏசவேணுமே. ஆளவந்தார், 'நாட்டையழியாமைக்காக, சிசுபாலனைக் கொற்றவன் வாசலுக்குள்ளே சுழற்றி யெறிந்தானத்தனை; ருசிமுன்னாகப் பெறுமதிறே பேறாவது' என்று அருளிச்செய்தார்.

33. திருநெடுந்தாண்டகம் 29ம் பாட்டு. (அலைகட வித்யாதி3) பிராட்டிக்கு உதவின படியை அருளிச் செய்கிறார். இவ்விரண்டு அப த3ாநத்திலும்—பிராட்டியை லபி4க்கைக்காகக் கடலைக் கடைந்தது; அவ ளுடைய தனிமையைத் தீர்க்கைக்காகக் கடலை அடைத்தது; அம்ருத ப்ரத3ாநமும் குடியிருப்புக் கொடுக்கையும் ஆநுஷங்கி1கமிறே. அவ னுடைய திருவுள்ளத்தை அடியொற்றின ஆளவந்தார் "யத3ர்த்த2மம்பே4ாதி4ரமந்த்2யப3ந்தி4 ச' (ஸ்தோ-ரத் 37) என்றாரிறே.

34. திருவிருத்தம் 52. (என்று வார்கின்றதே) "அவளோடே அவன் கலந்தபோது அவயவியோடே கலந்தாற்போலே இவர்கள் இருக்கவும், இவர்களோடே கலந்தபோது தன்னுடைய ஸ்தனப3ாஹு த்3ருஷ்டிகளோடே கலந்தாற்போலே அவன் நினைத்திருக்கவும், இப்படி இவர்களுடைய ஸ்வரூபமாய் அபரிச்சி2ந்ந விஷயமாகையாலே எல்லாருங்கூடி அநுப4விக்கவேண்டியிருக்க இருவர்க்குப் பாத்தம் போராத க்ஷுத்3ரவிஷயங்களிலுண்டாம் ஸாபத்நயம் இவ்விஷயத்தில் உண்டாகச்சொல்லுமது உபபன்னமாம்படி எங்ஙனே" என்ன, இச்சோத்3யத்துக்கு முன்புள்ள முதலிகள் "தானுமவனுமான பே4ாக3த்துக்கு நான் ஸ்ரக்சந்த3நாதி3களோபாதி வரவிருக்க என்னை அநாத3ரித்துப்போவதே என்றின்னுதாய் அழுகிறாள்" என்று பரி ஹரித்தார்கள். இத்தை ஆளவந்தார் கேட்டருளி "'வடிவிணையில்லா மலர்மகளை இந்நீர் நடுக்க நடுங்கும்படி கடலிலே கொடுபோவதே! படுக்கையாக தான் கிடக்கச்செய்தே' என்று பூமிப்பிராட்டி அழுகிறாள் காண்" என்றருளிச்செய்தார். இத்தை பட்டர் கேட்டருளி "இதெல் லாம் வேண்டாகாண், அநுபபன்னமாயிருப்பதொரு அர்த்த2த்தைச் சொல்லவே, 'இதெங்ஙனே கூடும்படி' என்று தலைமகன் நெஞ்சிலே படும்; அவள் விசாரித்து நிர்ணயிக்குங்காட்டில் அவன் வந்துகொடு நிற்கும் என்னும் விஸ்ரம்ப4த்தாலே சொன்னார்களாக அமையுங்காண்" என்றருளிச்செய்தார்.

35. திருவிருத்தம் 9 நம்பிள்ளை ஈடு ஸ்வாபதேசம்—திருக் கோட்டியூர் நம்பி கோயிலுக்கு நடந்து மீண்டெழுந்தருளும் விசை தோறும் மாராச்சிப்புரத்தளவும் வழிவிட்டுப் பின்னையும் மீளுவது. அதிலொருவிசை போகாநிற்க, ஜலகார்யத்துக்கெழுந்தருளி நிற்கச் செய்தே 'எனக்குத் தஞ்சமாக நினைத்திருக்கலாவதொன்றருளிச்செய்ய வேணும்' என்ன; "ஆளவந்தார் ஸ்நாநார்த்த2மாக இழிந்து அக4மர்ஷ ணம் பண்ணிக்கிடக்கும்போது ஆமையணையைக் கவிழ்த்தாற்போலே யிருக்கிற முதுகுப்புறத்தை அவருடைய உக்தியும் நோக்கும் மாறின

பின்பு எனக்குத்தஞ்சமாக நினைத்திருப்பன்; நீருமத்தையே தஞ்சமாக நினைத்திரும்" என்றருளிச் செய்தாராம்.

36. திருவிருத்தம் 33 நம்பிள்ளை ஈடு. 'தனித்தனியே நூற்றுவரையும் சுழற்றி யெறியவல்ல ப$_4$ர்த்தாக்களுமிருக்க தா$_3$ரஸ்த$_2$னை க்ருஷ்ணனை ஸ்மரிப்பானென்?' என்று ஆளவந்தாரைக் கேட்க; 'அறிந்தோமே, பண்டேயொரு சுருசுருப்புண்டுபோலே காணும் கேட்டுவைப்பது' என்றருளிச்செய்தாராம். அதாவதென்னென்னில், "ஸ்மர்த்தவ்யோ. ப$_4$க$_3$வாந் ஹரி:" என்று ஆரேனும் சொல்லிவைத்தாருண்டு போலேகாணும். {விவரணம் "ஜ்ஞாதம் மயா வஸிஷ்டே$_2$ந" என்று வஸிஷ்ட$_2$ர் முன்பு உபதேசித்ததை நினைக்கிறார்.}

37. பெரியதிருமடல் அவதாரிகை. ஸந்யாஸத$_4$ர்மத்தை மடல் என்று ஆளவந்தாரருளிச்செய்தார்.

38. பகவத் விஷயம் 1-1-1. "ஸ்வாப$_4$ாவிகாநவதி$_4$காதிஸயாஸங்க்$_2$யேய கல்யாண கு$_3$ணக$_3$ண:" என்று இதுக்கு ஆளவந்தாரருளிச்செய்யும் சந்தை.

39. பகவத் விஷயம் 1-2 ப்ரவேசம். இத்திருவாய்மொழி தன்னை ஆளவந்தார் அருளிச்செய்தாராகத் திருமாலையாண்டான் ப்ரபத்திவிஷயமாக்கி நிர்வஹித்துக்கொண்டுபோந்து, எம்பெருமானாரு மப்படியே அருளிச்செய்து கொண்டுபோந்து, ப$_4$ாஷ்யம் தலைக்கட்டின பின்பு ப$_4$க்தி விஷயமாக அருளிச்செய்துகொண்டு போருவர், பின்பு எம்பாருமப்படியே அருளிச்செய்தார்.

40. பகவத் விஷயம் 1-5-11. "பாலேய்தமிழரென்கிறது—முதலாழ்வார்களை. இசைகாரரென்கிறது—திருப்பாணாழ்வாரை. பத்தரென்கிறது—பெரியாழ்வாரை" என்று ஆளவந்தாரருளிச்செய்வர்,

41. பகவத் விஷயம் 2-3-1. (தேனும்பாலு மித்யாதி$_3$) இதுக்கு ஆளவந்தார் அருளிச்செய்தாராகத் திருமாலையாண்டான் பணிக்கும்படி—"ஏகஜாதீய த்$_3$ரவ்யங்கள் தன்னிலே கலந்தாற்போலே" என்று. அதாவது - தேனும் தேனும் கலந்தாற்போலவும், பாலும் பாலும் கலந்தாற்போலவும், நெய்யும் நெய்யும் கலந்தாற்போலவும், கன்னலும் கன்னலும் கலந்தாற்போலவும், அமுதும் அமுதும் கலந்தாற்போலவும்" என்று. அங்ஙனன்றியே, எம்பெருமானார் அருளிச்செய்யும்படி—"இவற்றை ஸர்வ பதா$_3$ர்த்த$_2$ங்களுக்கெல்லாம் உபலக்ஷணமாக்கி—நீயும் நானுமான கலவிக்குள்ளே எல்லா ரஸங்களும் பிறக்கும்படி 'ஸம்ஶ்லேஷித்தோமென்கிறார்" என்று.

42. பகவத் விஷயம் 2.3.3. ஆளவந்தார் அருளிச்செய்ததாகத் திருமாலையாண்டான் பணிக்கும்படி—"அறிவு நடையாடாத தசையிலே ஸம்ப₃ந்த₄ஜ்ஞானத்தைப் பிறப்பித்து. பிறந்த ஜ்ஞானத்தை அழிக்கக் கடவதான தே₃ஹஸம்ப₃ந்த₄த்தோடே பின்னையும் வைத்தாய்" என்கிற இழவாலே சொல்லுகிறார்—என்றும். இத்தை எம்பெருமானார் கேட்டருளி, "முன்னிற்பாட்டுக்களும் பின்னிற்பாட்டுக்களும் ப்ரீதி போடேநடவாநிற்க. நடுவே அப்ரீதி தோற்றச் சொல்லுமது சேராது. ஆனபின்பு இங்ஙனேயாமித்தனை—'அறியாமாமாயத்தடியேனை - அறியாக்காலத்துள்ளே அடிமைக்கணன்பு செய்வித்து வைத்தாயால்' என்கிறார்" என்றித்தையு மொரு உபகாரமாக்கி அருளிச்செய்தார்.

43. பகவத் விஷயம் 2-5-1. (அந்தாமமித்யாதி₂) "அடியார்கள் குழாங்களை உடன் கூடுவதென்றுகொலோ—என்றிவராசைப்பட்டபடியே, நித்யஸூரிகளோடே வந்து கலந்தான்" என்று ஆளவந்தார் அருளிச்செய்தாராகத் திருமாலையாண்டான் பணிக்கும்படி. ஆனால் அவர்களை "ஆழிநூலாரம்" என்றே சொல்லுவதென்னில்; சிந்மயராயிருக்கச்செய்தே பாரதந்த்ரிய ஸித்₃தி₄க்காகத் தங்களை அமைத்துவைக்கிற இத்தனையிறே. (மேல் விஷயம் எம்பெருமானார் ஐதிஹ்ய நிர்வாஹம் காண்க.)

44. பகவத் விஷயம் 2-6 ப்ரவேசம். (இத்திருவாய்மொழி) "ப்ரணயிப்ரீத்யநுஸந்த₄ானங்காணிது" என்று ஆளவந்தார் அருளிச்செய்யும்படி.

45. பகவத் விஷயம் 2-6-2. (எங்கும் பக்கநோக்கறியான்) "பெரிய பிராட்டியார் திருமுலைத் தடத்தினாலே நெருக்கினாலும் அவன் முகம் பாரான்." இங்கே ஆளவந்தார்க்குக் குருகைக்காவலப்பனருளிச் செய்ததாக அருளிச்செய்யும் வார்த்தை. "அப்பன் ஸ்ரீபாத₃த்திலே ஒரு ரஹஸ்ய விசேஷமுண்டு" என்று மணக்கால் நம்பி அருளிச்செய்ய, "அது கேட்க வேணும்" என்று ஆளவந்தாருமெழுந்தருள கங்கைகொண்ட சோழபுரத்தேற. அப்பனும் அங்கேயொரு குட்டிச்சுவரிலே யோக₃த்திலேயெழுந்தருளியிருக்க, "இவரை ஸமாதி₄ப₄ங்க₃ம் பண்ணவொண்ணாது" என்று சுவருக்குப் புறம்பே பின்னேநிற்க, அப்பனும் யோக₃த்திலே யெழுந்தருளியிருக்கிறவர் திரும்பிப்பார்த்து. "இங்குச் சொட்டைக் குலத்தில் ஆரேனும் வந்தாருண்டோ?" என்று

கேட்டருள ''அடியேன்'' என்ற ஆளவந்தாரும் எழுந்தருளிவந்து கண்டு, ''நாங்கள் பின்னே தெரியாதபடி நிறக, இங்ஙன் அருளிச் செய்கைக்கு ஹேதுவென்?'' என்ன, ''நானும் தானுமாக அநுபவியா நின்றால் பெரியபிராட்டியார் திருமுலைத்தடத்தாலே நெருக்கியணைத் தாலும் அவள் மூகங்கூடப் பாராத ஸர்வேச்வரன் என்கழுத்தையமுக்கி நாலு மூன்று தரம் அங்கே எட்டிப்பார்த்தான்; இப்படி அவன் பார்க்கும் போது சொட்டைக்குடியிலே சிலர் வந்தாருண்டாகவேணும் என்றிருந் தேன் காணும்'' என்றருளிச்செய்தார்.

46. பகவத் விஷயம் 2-9-8. (எக்காலமித்யாதி) இதுக்கு ஆள வந்தார் அருளிச்செய்யும்படி—''இனிக் கூறிடவொண்ணாதபடி சிறு கூறான அத்யல்ப காலத்திலும், நீ ஸ்வாமியான முறைதப்பாதபடி என் ஹ்ருதயத்திலே வந்து புகுரப்பெறில், (மற்றெக்காலத்திலும்) இதொழிந்த எல்லாக் காலத்திலும், (யாதொன்றும் வேண்டேன்) பின்னையிதுதானும் வேண்டேன். ..........இத்தை எம்பெருமானார் கேட்டருளி ''இதுபொருள் அழகியது, இவ்வாழ்வாருடைய ப்ரக்ரு திக்குச் சேராது, பெறினும் பெறுதொழியினும் சிறுகக்கோலமாட்டார்; இங்ஙனேயாகவேணும் என்றருளிச் செய்வர். (மேல் விஷயம் எம் பெருமானார் ஐதிஹ்ய நிர்வாஹம் காண்க)

47. பகவத் விஷயம் 2-10 ப்ரவேசம், கீழ் எம்மாவீட்டிலே நிஷ்கர்ஷித்த ப்ராப்யம் பெறுகைக்குத் திருமலையை ஆச்ரயிக்கிறு றென்று ஆளவந்தாரருளிச் செய்தாராகத் திருமாலையாண்டான் பணிக்கும்படி. (மேல் விஷயம் எம்பெருமானார் ஐதிஹ்ய நிர்வாஹம் காண்க)

48. பகவத் விஷயம் 3-3-6. (மெய்ம்மேல் வினை முற்றவும்) ப்ரக்ருதி ஸம்பந்த நிபந்தனமாக வரக்கடவ பாபங்களைச் சொல்லு கிறது. ஆக, 'கடன்கள் மெய்ம்மேல் வினை முற்றவும், வேம்-நசிக்கும்' என்று இங்ஙனே ஆளவந்தார் அருளிச்செய்யும்படி. (மேல் விஷயம் எம்பெருமானார் ஐதிஹ்ய நிர்வாஹம் காண்க.)

49. பகவத் விஷயம் 4-3-8. (உன்னதென்னதாவியு மென்ன துன்னதாவியும்) என்னுடைய ஆவி யுன்னது, உன்னுடைய ஆவி என்னது. என் ஸ்வரூபம் நீயிட்ட வழக்கு, உன் ஸ்வரூபம் நானிட்ட வழக்கு. இவ்விடத்தை ஆளவந்தார் அருளிச்செய்யா நிற்கச்செய்தே இருந்த முதலிகளிலே சிலர், ''இவ்வாத்மாவின் ஸ்வரூபம் அவனிட்ட வழக்கென்றால் கூடுமே, அவன் ஸ்வரூபம் இவனிட்ட வழக்காகையாவ

தென்?'' என்று கேட்க, ''இவன் தன்னை அவனுக்காக்குவன் என்ற வன்று, கர்மம் தகையவுங்கூடுப், ஸர்வேஶ்வரன் தன்னை இவனிட்ட வழக்காக்குமன்று நிவாரகரில்லை; ஆனபின்பு அதுவே நிலைநிற்பது; இன்னம் 'இவன் ஸ்வரூபமவனிட்ட வழக்காக்கக்கூடுமோ'?என்று இதிலே காணும் ஸந்தே₃ஹிக்கவேண்டுவது'' என்றருளிச்செய்தார்.

50. பகவத் விஷயம் 4-7-8. (நின் திருப்பாதங்கள் மேல்)...... ''த்வத்பாத₃ பங்கஜ பரிக்₃ரஹத₄ந்யஜந்மா பூ₄யாஸம்'' [உன் திரு வடியை வருடிப் பிறவிப்பயன் பெற்றவனாவேன்] என்கிறதுக்கு ஆளவந்தார் ''வார்த்தையழகிது, வகுந்த விஷயத்திலேயாகப் பெற்றிலோம்'' என்றருளிச்செய்தார். (த்வத்பாதே₃த்யாதி₃ ஶ்லோகம் ப₄வபூ₄திகவியின் மாலதீ மாத₄வியத்திலுள்ளது.)

51. பகவத் விஷயம் 5-1-9 ஆளவந்தாரருளிச்செய்ததாகத் திருமாலையாண்டான் பணிக்கும்படி:— (திருச்சக்கரம் சங்கினொடும் அடியேனொடுமானன் என்று) கையிலாழ்வார்களோடு பொருந்தினாற் போலே என்னோடேவந்து கலந்தானென்கிறார்—என்று. (மேல்விஷயம் எம்பெருமானார் ஐதிஹ்ய நிர்வாஹம் காண்க)

52. பகவத் விஷயம் 5-2 ப்ரவேசம். இத்திருவாய்மொழியை ஆளவந்தார் பணித்தாராகத் திருமாலையாண்டான் பணிக்கும்படி— ஆழ்வாருடைய ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயைக் காண்கைக்காக நித்ய ஸூரிகள் இங்கே வர, அவர்களைக் கண்டு மங்களாசாஸனம் பண்ணுகிறார்—என்று. (மேல் விஷயம் எம்பெருமானார் ஐதிஹ்ய நிர் வாஹம் காண்க.)

53. பகவத் விஷயம் 5-2-4. (நாடகஞ்செய்கின்றனவே) இவர் கள் வ்யாபாரம் இவர்க்கு வல்லாரடினாற் போலேயிருக்கை; எம்பெரு மானாருடைய ஸ்தி₂திக₃மநஶயநாதி₃களை நாம் கொண்டாடுமாபோலே யும், ஆளவந்தார் நடையை ராஜா கொண்டாடினாற்போலேயும் இவர் கொண்டாடுகிறபடி என்றருளிச் செய்வர்.

54. பகவத் விஷயம் 5-10-4. (வெள்ளநீர் இத்யாதி₃) இதுக்கு ஆளவந்தாரருளிச் செய்ததாகத் திருமாலையாண்டான் பணிக்கும்படி— ப்₃ரஹ்மருத்₃ரர்கள் நடுவே நின்றதொரு முதல் களவுண்டு; அத் தைச் சொல்லுகிறது—என்றாயிற்று. அதாவது—ருத்₃ரனையும் தன்னை யும் ஸமமாகச் சொல்லலாம்படி த்ரிமூர்த்தி மத்₄யஸ்தி₂தியைச் சொல்லு கிறதென்று; (மேல்விஷயம் எம்பெருமானார் ஐதிஹ்ய நிர்வாஹம் காண்க.)

55. பகவத் விஷயம் 6-1-10. "சில வண்டுகளைக் குறித்து—அவர் 'இத்தலையில் ஸத்தையுமில்லை' என்றிருப்பர்; அவளுமுளளென்று சொல்லுங்கோளென்கிறாள்" என்று ஆளவந்தாரருளிச் செய்வர்; (மேல் விஷயம் எம்பெருமானார் ஐதிஹ்ய நிர்வாஹம் காண்க)

56. பகவத் விஷயம் 6-1-1. (என்னையுமுளளென்மின்களே) இன்னமும் நோவுபடுகிறாளென்டென்று சொல்லுங்கோள். ஆளவந்தாரருளிச்செய்ததாகத் திருமாலையாண்டான் பணிக்கும்படி — இத்தலையைப் பிரிந்தார்ல் இருப்பாரில்லை என்றிருக்கையாலே வாராதொழிந்தாரத்தனை; இத்தலையில் ஸத்தையுள்ளமையை அறிவியுங்கோள்—என்று (மேல் விஷயம் எம்பெருமானார் ஐதிஹ்ய நிர்வாஹம் காண்க.)

57. பகவத் விஷயம் 6-2-1. (நப்பீ) 'கண்ட காட்சி புல்லெழுந்து போனபடியிறே இவள் இங்ஙன் சொல்லுகிறது' என்று பெரிய முதலியார் வார்த்தை.

58. பகவத் விஷயம் 6-5-5. (மழைபெய்தாலொக்கும் கண்ண நீரினொடு) ஆளவந்தார் மணக்கால்நம்பி பக்கலிலே எம்பெருமானைக் கேட்டவநந்தரம் "உபாயம் இதுக்குமேலில்லை. இவ்விஷயத்தை இப்போதே ஸாக்ஷாத்கரிக்க விரகில்லையோ" என்றாராம்.

59. பகவத் விஷயம் 6-7 ப்ரவேசம். ஆளவந்தார் கோஷ்டியிலே "உண்ணுஞ்சோற்றிற் பிராட்டிக்கோ, கள்வன் கொல்லிற் பிராட்டிக்கோ அஞ்சவேண்டுவது?" என்று கேட்க, "இருவராய்ப் போனவர்களுக்கு வயிறெரியவேணுமோ? தனிவழியே போனவளுக்கன்றோ வயிறெரியவேண்டுவது"—என்று இருந்த முதலிகள் சொல்ல; "அங்ஙனன்று காணுங்கோள், இருவராய்ப்போனவர்களாகையாலே இருவர்க்கும் அஞ்சவேணும்; தனியே போனவளுக்கொரு ப₄யமுண்டோ?" என்றருளிச்செய்தார்.

60. பகவத் விஷயம் 6-8-1. பாண்டவர்களுக்குத் தூதுபோன க்ருஷ்ணனையும், ஆளவந்தார்க்குப் பச்சையிட்ட மணக்கால் நம்பியையும் போலேயிருந்ததீ உங்கள்படி.

61. பகவத் விஷயம் 7-3-7. (வந்து விற்றிருந்த) "தீ₃போ நேத்ராதுரஸ்யேவ ப்ரதிகூலாஸி மே த்₃ருட₄ம்" [ரா-யு] [கண்ணில் நோயுள்ளவனுக்கு விளக்குப்போலே எனக்கு மிக்க எரிச்சலை விளைக்கிறாய்] இதுக்கு ஆளவந்தாரருளிச் செய்யும்படி; "நேத்ரதோ₃ஷத்தால் வந்ததுபோக்கி தீ₃பதோஷத்தால் வந்ததன்று" என்று.

62. பகவத் விஷயம் 7.5.3. (தன்மையறிவாரையறிந்தும்) ஆளவந்தார் 'சிசுபாலன் பெற்றிலன்காண்' என்று அருளிச்செய்வர்; அதுவென்? என்னில்: இதுக்கு அடியாகச் சொல்லலாவதொரு ஸாத4நம் இவன் கையிலில்லாமையாலே. 'நாட்டை நலியாமைக்குக் கொற்றவன் வாசலுக்குள்ளே சுழற்றியெறிந்தாளத்தனைகாண்' என்று அருளிச் செய்வர்.

63. பகவத் விஷயம் 7.9 1. (என்சொல்லி நிற்பனே) "க்ருஷ்ண த்3வைபாயநம் வ்யாஸம் வித்3தி4 நாராயணம் ப்ரபு4ம் | கோ ஹ்யந்ய: புண்ட3ரீகாக்ஷாத் மஹாப4ாரதக்ருத் ப4வேத் ||" என்றாற்போலே யிருக்கிறதாயிற்று. இதுக்கு ஆளவந்தாரருளிச்செய்யும்படி:—'ஸர்வேஸ்வரன் செய்யப்புக்கால் அரியதும் ஒன்றுண்டோ' என்றும். (மேல்விஷயம் எம்பெருமானார் ஐதிஹ்ய நிர்வாஹம் காண்க).

64 பகவத் விஷயம் 7.9.3. (ஆமுதல்வனிவனென்று தன் தேற்றி) இங்கே அருளிச்செய்யும் வார்த்தை, "திருப்புற்றுக்குக் கிழக்கே கரியமாணிக்காழ்வார் திருமுன்பின் ஸோபானத்திலே ஆள வந்தார் எழுந்தருளியிருக்க, உடையவர் திருப்புற்றுக்குக் கிழக்காக எழுந்தருளி நிற்கிறவரைக் கண்டு 'ஆமுதல்வனிவன்' என்று அருளிச் செய்தாராம்" என்று.

65 பகவத் விஷயம் 8.6-11. (சடகோபன்சொல்) "பாலென் கிறது சோலைத்திருக்கடித்தானத்துறை திருமாலை; அமுதென்கிறது சடகோபன் சொல்லென்கிற வாசகத்தை" இது ஆளவந்தார் நிர்வாஹம்.

66. பகவத் விஷயம் 9.4.3. (பிழைக்கின்றதருளென்று பேதுறு வனே) "வரையாதே ரக்ஷித்த மஹாகு3ணம் எனக்கு உதவாமையாலே இழக்கப்புகாநின்றாய் என்று பேகணியாநின்றேன்" என்று ஆள வந்தார் அருளிச்செய்யும்படி. (மேல்விஷயம் எம்பெருமானார் ஐதிஹ்ய நிர்வாஹம் காண்க).

67. பகவத் விஷயம் 9 5-10. (தழைநல்ல இத்யாதி3) "தாந்தாம் முடிய நினைப்பார் 'நாடுவாழ்க' என்பாரைப் போலே சொல்லுகிறாள்" என்று ஆளவந்தார் நிர்வாஹம். (மேல் விஷயம் எம்பெருமானார் ஐதிஹ்ய நிர்வாஹம் காண்க).

68 பகவத் விஷயம் 9.6.1 "கடலைத் தரைகாண்பாரைப்போலே இருந்தும் வியந்தில் அனுப4வத்தை இதிலே கொண்டுவந்து சேர்ப்

பதே நம்முதலிகள்'' என்று வித்3த4ராயருளிச்செய்தார். அப்ராப்தியுங் கிடக்கச்செய்தே சீலகு3ணாநுஸந்தா4னத்தாலே சிதி2லராகிறாராய்த்து. 'அப்ரீதி க3ர்ப்ப4 கு3ணாநுஸந்தா4நம்' என்று ஆளவந்தார் அருளிச் செய்யுஞ் சந்தை இதுக்கு.

69. பகவத் விஷயம் 9.8 ப்ரவேசம் பெரியமுதலியார் ப்ராப்ய ஸித்3தி4யில் த்வரையாலே எப்போதும் இத்திருவாய்மொழியை அநுஸந்தி4யாநிற்பர். ஆகையாலே இத்தைப் பெரிய முதலியார் திருவாய்மொழி என்றுய்த்துச் சொல்லுவது.

70. பகவத் விஷயம் 9.9.1. ''ப்ராப்யவஸ்துவைப் பெறும்படியை மனோரதி2த்தார் கீழில் திருவாய்மொழியிலே; மநோரத2 ஸமநந்தரம் பெறக்காணாமையாலே திருவாய்ப்பாடியிலுள்ளார் க்ருஷ்ணனைப்பிரிந்து ஒரு ராத்ரி பட்ட வ்யஸநத்தை இவரொருத்தரும் படுகிறார்'' என்று ஆளவந்தார் அருளிச்செய்யும்படி—என்று திருமாலையாண்டான் பணிக்க; (மேல்விஷயம் எம்பெருமானார் ஐதிஹ்ய நிர்வாஹம் காண்க).

71. பகவத் விஷயம் 9.10.3. (திருக்கண்ணபுரத்தண்டவாணனமரர்பெருமானையே) '' ப்ரதிமாஸ்வப்ரபு3த்3தா4நாம் '' [அறிவு குறைந்தவர்களுக்கு எம்பெருமான் அர்ச்சையில் நிற்கிறான்.] இதுக்கு ஆளவந்தார் அருளிச்செய்யும்படி — ''அம்மேட்டிலும் ஏறிப்பாயாநின்றால் தேசிகருக்குச் சொல்லவேணுமோ?'' என்று.

72. பகவத் விஷயம் 10.2-8. (பாதம் இத்யாதி3) திருவத்4யயனம் பாடாநிற்க, இதைக்கேட்டருளி ஆளவந்தார் 'நமக்கு ஆழ்வாரோடே ஒரு ஸம்ப3ந்த4முண்டாகவேணும்' என்று அப்போதே ஸ்ரீபாத3த்தையுடையாரைக் கூட்டிக்கொண்டெழுந்தருளினார்.

73. பகவத் விஷயம் 10-4-1. ஆளவந்தார் அருளிச்செய்ததாகத் திருமாலையாண்டான் பணிப்பது — ப்ரபத்தி விஷயமாக வாய்த்து விடுமின்முற்றம். உடையவரும் அப்படியே ப்ரபத்தி விஷயமாக அருளிச்செய்துகொடுபோந்து ப4ாஷ்யம் அருளிச்செய்தபின்பு ரஹஸ்யோபாயத்தை வெளியிடவொண்ணாது என்று வீடுமின் முற்றத்தையும் ப4க்திவிஷயமாக்கி அருளிச்செய்தார். ''ஆக முதல்திருவாய்மொழியில் சொன்ன ப்ராப்யஸ்வரூபத்தையும் ப்ராப்திப2லமான கைங்கர்யத்தையும் கெடுமிடரிலே 'படமுடையரவிற்பள்ளி பயின்றவன்' என்றும், 'கடைத்தலைசீய்க்கப்பெற்றால்' என்றும் அருளிச்செய்து. அக்

கைங்கர்யத்தில் களைபறித்து 'உன்தன் திருவுள்ளமிடர் கெடுந்தோறும் நாங்கள் வியக்க இன்புறுதும்' என்று உத்தரகண்டத்தில் நமஸ்ஸப்தார்த்தத்தை அருளிச்செய்து, கெடுமிடராலும் வேய்மரு தோளிணையாலும் முதல் திருவாய்மொழியை நிகமித்து, சார்வேதவ நெறியாலும் கண்ணன் கழலிணையாலும் விடுமின்முற்றத்திலும் பத்துடையடியவரிலும் சொன்ன பக்திப்ரபத்திகள் ஸ்வஸாத்யத்தோடே பொருந்தினபடியை அருளிச்செய்தார்'' என்று ஆளவந்தார் அருளிச்செய்ததாகத் திருமாலையாண்டான் பணிப்பது.

74. இருபத்துநாலாயிரப்படி 1.4.3. (கள்வர்க்கு) 'அப்படிப்பட்ட வஞ்சகர்க்கு' என்பர் ஆளவந்தார். (மேல் விஷயம் எம்பெருமானர் ஐதிஹ்ய நிர்வாஹம் காண்க).

75. பரந்த ரஹஸ்யம்—திருமந்த்ர ப்ரகரணம். சேஷத்வத்தினுடைய ப்ராதான்யத்தைப் பற்றவிறே ஆளவந்தாரும், ''வபுராதிஷு யோபி கோபி வா'' ''தவ ஶேஷத்வவியோகாத் பஹிர்பூதம்— ஆத்மாநமபி ந ஸஹே'' என்று. ''ஆத்மவஸ்து. தேஹேந்த்ரிய மன:ப்ராணாதிகளிலே ஏதேனுமொன்றாகவுமமையும்; எனக்கு இதினுடைய ஸ்வரூபநிர்ணயமும் வேண்டா; ஸ்வபாவநிர்ணயமும் வேண்டா; ஏதேனுமாக தேவரீருக்கு ஶேஷமாமித்தனையே வேண்டுவது. ஶேஷமன்றாகில் விலக்ஷணமான இந்த ஆத்மவஸ்துதன்னையும் வேண்டேன்'' என்றருளிச் செய்ததும்.

76. ரஹஸ்யத்ரயதீபிகை. (75, 76 பெரியவாச்சான்பிள்ளை அருளியவை) ''மத்ஸ்யத்தினுடைய ஆகாரமெல்லாம் ஜலமயமாயிருக்குமாபோலே ஸ்ரீமானுடைய வடிவத்தனையும் ஸ்ரீமயமாயிருக்கும்'' என்று பெரியமுதலியார் அருளிச்செய்தார்.

77. ஸ்ரீவசநபூஷணம் 323. (மாதா பிதா யுவதய:) என்கிற ச்லோகத்திலே இவ்வர்த்தத்தைப் பரமாசார்யரும் அருளிச்செய்தார்.

78. பரந்தபடி. இவர்கள் இத்தனைபேரையும் அடியொற்றின பரமாசார்யர் ''ப்ரஹர்ஷயந்தம் மஹிஷ்ம் மஹாபுஜம்'' என்றும் ''ஶ்ரியஶ்ஶ்ரியம்'' என்றும் விசிஷ்ட வேஷத்தை அருளிச்செய்து ''ஐகாந்திக நித்ய கிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி'' என்று தத்விஷயமான ஆர்த்தி விஶேஷத்தை ப்ரார்த்தித்தார். அவர் திருவுள்ளத்தைப் பின் சென்ற ஸ்ரீபாஷ்யகாரரும் ''ஸ்ரீவல்லப'' என்று விஶிஷ்ட வேஷத்தை ப்ராப்யமாக அருளிச்செய்தார்.

79. ஸ்ரீவசநபூ₄ஷணம் 19-வது வ்யா. இவற்றில் ஸ்நேஹகாருண்யங்கள் தோ₃ஷங்களாகிறது—அஸ்தா₂ந(ே)ந க்ருதங்களாகையாலே; வத₄பீ₄தி தோ₃ஷமாகிறது — ஸ்வத₄ர்மத்தில் அத₄ர்மபு₃த்₃த்₄யா வந்ததாகையாலே; "அஸ்தா₂நஸ்நேஹகாருண்யத₄ர்மாத₄ர்மதி₄யாSSகுலம்" [கீ₃தார்த்த₂ஸங்க்₃ரஹம்] என்றிறே ஆளவந்தார் அருளிச்செய்தது.

80. ஸ்ரீவசநபூ₄ஷணம் 182-வது வ்யா. அநந்தரம் பரமாசார்யரான ஆளவந்தார் வசனத்தை அருளிச்செய்கிறார். "ந தே₃ஹம் ந ப்ராணம்......"

81. ஸ்ரீவசநபூ₄ஷணம் 259-வது வ்யா. ஆகையிறே நாத₂முனிகளுடைய தி₃வ்ய வைப₄வத்தை அருளிச்செய்கிற ஆளவந்தார் "அசிந்த்யாத்₃பு₄தாக்லிஷ்டஜ்ஞாநவைராக்₃யராஸயே — அகா₃த₄ப₄க₃வத்₃ப₄க்தி ஸிந்த₄வே" என்றருளிச்செய்தது.

82. ஸ்ரீவசநபூ₄ஷணம் 323-வது வ்யா. "மாதா பிதா யுவதயஸ் தநயா விபூ₄தி:" என்று ஐஹிகபோ₄க₃ங்களையும், 'ஸர்வம்' என்று அநுக்த ஸகல கத₂நத்தாலே மந்த்ரதே₃வதாப₂லாதி₃களையுமெடுத்து இத்தனையும் ஆழ்வார் திருவடிகளே என்று அருளிச்செய்கையாலே, அந்த ஸ்லோகத்திலே இவ்வர்த்த₂த்தைப் பரமாசார்யரான ஆளவந்தாரும் அருளிச்செய்தார்.

83. ஸ்ரீவசநபூ₄ஷணம் 380-வது வ்யா. இப்படி ஆழ்வார் அருளிச்செய்த இவ்வர்த்த₂த்தை "விராஸகஸ்யாபி ந தாவது₃த்ஸஹே......" என்று ஆளவந்தார் அருளிச்செய்தாரிறே.

84. தத்வத்ரயம் 3-வது வ்யா. "சித₃சிதீ₃ஸ்வர தத்ஸ்வபா₄வ" என்று ஆளவந்தாரும்......

85. தத்வத்ரயம் 45-வது வ்யா. "நிவாஸஸய்யாஸந......ஸேஷ இதீரிதே ஜநை:" என்றிறே ஆளவந்தாரும் அருளிச்செய்தது. மற்றுமுள்ள ததீ₃யரைப்போலே அநியமமாயிராதே ஸர்வேஸ்வரன் அமுது செய்த ஸேஷமொழிய அமுது செய்யாத நியமத்தைப்பற்ற ஸேஷாஸநரென்று ஸேனை முதலியாரை நிரூபிக்கிறது. "த்வதீ₃யபு₄க்தோஜ்ஜி₂த ஸேஷ போ₄ஜிநா" என்றிறே ஆளவந்தாரும்.

86. தத்வத்ரயம் 70-வதுவ்யா. "ஆஸ்ரயாத₃ந்யதோ வ்ருத்தே ராஸ்ரயேண ஸமந்வயாத் | த்₃ரவ்யத்வஞ்ச கு₃ணத்வஞ்ச ஜ்ஞாநஸ்யைவோபபத்₃யதே ||" என்றிறே ஆளவந்தார் அருளிச்செய்தது.

87. நாத₃முனிகள் ஐதிஹ்யநிர்வாஹம் 16 காண்க.

88. கீ₃தாபா₄ஷ்யமங்க₃ள ஶ்லோகம். ஆளவந்தார் வைப₄வத் தொடக்கத்தில் காண்க.

89. வேதா₃ர்த்த₂ ஸங்க்₃ரஹம் இரண்டாவது மங்க₃ள ஶ்லோகம்-

"பரம் ப்₃ரஹ்மைவாஜ்ஞம் ப்₄ரமபரிக₃தம் ஸம்ஸரதி தத்
பரோபாத்₄யாலீட₄ம் விவஶமஶுப₄ஸ்யாஸ்பத₃மிதி ।
ஶ்ருதிந்யாயாபேதம் ஜக₃தி விததம் மோஹநமித₃ம்
தமோ யேநாபாஸ்தம் ஸஹி விஜயதே யாமுநமுநி: ॥"

[(1) பரப்₃ரஹ்மமே மாயையால் மறைக்கப்பட்டு அறிவு குறைந்த ஜீவனாகவும், ஸம்ஸாரத்தில் கட்டுப்பட்டதாகவும் ஆகிறது. (2) அந்தப் பரப்₃ரஹ்மம் தே₃வர், மனிதர் முதலான உண்மையான ஶரீரங்களாகிற உபாதி₄களோடு ஸம்ப₃ந்த₄ப்பட்டு ஸம்ஸாரி ஜீவன் ஆகிறது. (3) அந்தப் பரப்₃ரஹ்மமே உலகோடு இயல்பாகவே பே₄தா₃பே₄த₃முடையதாகையாலும் உலகமாகப் பரிணமிக்கையாலும் தோ₃ஷங்களுக்குக் கொள்கலமாகிறது. இவ்விதம் கூறும் சங்கரருடைய மாயாவாத₃ மதமும், பா₄ஸ்கரருடைய ஸத்யோபாதி₄ மதமும், யாத₃வ ப்ரகாஶருடைய பே₄தா₃பே₄த₃ மதமுமாகிற மூன்று மதங்களும் ஶ்ருதிக்கும், ந்யாயத்துக்கும் (யுக்திகளுக்கும்) பொருந்தாதவையாகும். ஆயினும் மோஹத்தை விளைக்கும் இம் மூன்று மதங்களும் உலகில் பரவிவிட்டன. இம் மூன்று மதங்களாகிற இருள் எவரால் தமது நூல்களின் மூலம் நீக்கப்பட்டதோ அந்த யாமுநமுநிவராகிய ஆளவந்தார் வெற்றியுடன் விளங்குகிறார்.]

90. ஸ்ரீ வைகுண்ட₂ க₃த்₃யமங்க₃ள ஶ்லோகம்:

"யாமுநார்யஸுதா₄ம்போ₃தி₄மவகா₃ஹ்ய யதா₂மதி ।
ஆதா₃ய ப₄க்தியோகா₃க்₂யம் ரத்நம் ஸந்த₃ர்ஶயாம்யஹம் ॥"

[ஆளவந்தாராகிற அம்ருதக் கடலில் மூழ்கி, அறிந்தவளவு நான் ப₄க்தியோக₃மாகிய ரத்னத்தை எடுத்துக் காண்பிக்கிறேன்.]

91. கூரத்தாழ்வான் அருளிய ஸ்ரீ வரத₃ராஜஸ்தவம் ஶ்லோகம் 102.

"ராமாநுஜாங்க்₄ரிஶரணோऽஸ்மி குலப்ரதீ₃பஸ்த்
வாஸீத் ஸ யாமுநமுநேஸ் ஸச நாத₂ வம்ஶ்ய: ।
வம்ஶ்ய: பராங்குஶமுநேஸ்ஸ ச ஸோऽபி தே₃வ்யா:
தா₃ஸஸ்தவேதி வரதா₃ஸ்மி தவேக்ஷணீய: ॥

[எம்பெருமானாரின் திருவடிகளை உபாயமாக உடையவனாயிருக்கிறேன். அந்த எம்பெருமானார் யாமுநமுனியின் குலவிளக்காயிருக்கிறார். அந்த யாமுநமுனியாகிற ஆளவந்தார் நாத₃முனிகள் திருவம்ஶத்தவர். அந்நாத₃முனிகள் நம்மாழ்வாரின் வழிவந்தவர். அந்நம்மாழ்வாரும் பெரியபிராட்டியாரின் திருவருள் பெற்றவர். வரத₃ராஜரே! இவ்விதம் தேவரீருக்கு வழிவழித் தொண்டன் அடியேன் என்று தேவரீர் கடாக்ஷத்துக்கு விஷயமாகத்தக்கவனாகிறேன்.]

92. திருவரங்கத்தமுதனார் அருளிச்செய்த இராமாநுச நூற்றந்தாதி 21.

"நிதியைப்பொழியும் முகிலென்று, நீசர்தம் வாசல்பற்றித்
துதிகற்றுலகில் துவள்கின்றிலேன், இனித் தூய்நெறிசேர்
எதிகட்கிறைவன் யமுனைத்துறைவன் இணையடியாம்
கதிபெற்றுடைய, இராமாநுசனென்னைக் காத்தனனே.

93. ப₄ட்டர் அருளிச்செய்த ஸ்ரீரங்கராஜஸ்தவம் 1-4.

"வித₄ாய வைதி₃கம் மார்க்க₃ம் அகௌதஸ்குதகண்டகம் |
நேதாரம் ப₄க₃வத்₃ப₄க்தேர் யாமுநம் மநவாமஹை ||

[ஏன் ஏன் என்று கேட்டு விதண்டாவாதம் செய்யும் வாதியராம் முட்கள் இல்லாததாக வைதி₃க நெறியைச் செய்து (அதில்) அழைத்துச் செல்பவராய் ப₄க₃வானிடம் ப₄க்தியைத் தழைத்தோங்கச் செய்பவரான ஆளவந்தாரை தியானிப்போமாக.]

94. ஸ்ரீவேதா₃ந்ததே₃ஶிகர் அருளிச்செய்த யதிராஜஸப்ததி. 8.

"விகா₃ஹே யாமுநம் தீர்த்த₂ம் ஸாது₄ ப்₃ருந்தா₃வநே ஸ்தி₂தம் |
நிரஸ்தஜிஹ்மக₃ஸ்பர்ஶே யத்ர க்ருஷ்ண: க்ருதாத₃ர: ||"

[1. நீக்கப்பட்ட காளியனின் தொடர்பையுடையதான எந்த யமுனா நதியில் கண்ணபிரான் அன்பு செய்தாரோ அந்த நல்ல ப்₃ருந்தா₃வனத்தில் இருக்கும் யமுனாநதி தீர்த்த₂த்தில் மூழ்குகிறேன்.

2. கோணல் வழியில் செல்லும் குத்₃ருஷ்டிகளின் தொடர்பை க்₃ரந்த₂ங்களாலே நிரஸித்தவரான எந்த யாமுனாசார்யரான ஆளவந்தாரிடம் கண்ணபிரான் (அல்லது பெரியவாச்சான்பிள்ளை) ஆகிற க்ருஷ்ணன் மிகவும் அன்புடையவரோ, பரிசுத்திகரானவரும், ஸாது₄க்களின் ஸமூஹத்தை ரக்ஷிப்பதில் உறுதியுள்ளவருமான அந்த ஆளவந்தாரின் கு₃ணாநுப₄வ வெள்ளத்தில் மூழ்குகிறேன்.]

95. ஸ்ரீதேசிகர் அருளிச்செய்த குருபரம்பராஸாரம் — நாத2முனிகள் பிள்ளை ஈஸ்வரப4ட்டாழ்வான், ஈச்வரப4ட்டாழ்வான் பிள்ளை ஆளவந்தார். இவர் அருளிச்செய்த ப்ரப3ந்த4ங்கள்—ஆக3மப்ராமாண்யமும், புருஷநிர்ணயமும், ஆத்மஸித்3தி4, ஈஸ்வரஸித்3தி4, ஸம்வித்ஸித்3தி4 என்கிற ஸித்3தி4த்ரயமும், ஸ்ரீகீ3தார்த்த2ஸங்க்3ரஹமும், ஸ்தோத்ரமும், சதுஸ்ஸ்லோகியும் ஆக எட்டு. ஆளவந்தார் பிள்ளை சொட்டைநம்பி. ஆளவந்தார் ஸ்ரீபாத3த்தை ஆஸ்ரயித்தவர்கள் பதினைவர், அவர்களாகிறார்:—பெரியநம்பி, திருக்கோட்டியூர் நம்பி திருமாலையாண்டான், ஆள்வந்தாராழ்வார், திருமலை நம்பி, ஈசாண்டான், தெய்வவாரியாண்டான், சிறியாண்டான், திருமோகூரப்பன், திருமோகூர் நின்றார், தெய்வப்பெருமாள், திருமங்கையாளியார், பிள்ளை திருமாலிருஞ்சோலை தா3ஸர், மாறனேர் நம்பி, ஆட்கொண்டி,

" என்னுயிர்தந்தளித்தவரைச்சரணம் புக்கு
யானடைவே அவர்குருக்கள் நிரைவணங்கிப்
பின்னருளால் பெரும்பூதூர்வந்தவள்ளல்
பெரியநம்பி ஆளவந்தார் மணக்கால்நம்பி
நன்னெறியை அவர்க்குரைத்த உய்யக்கொண்டார்
நாதமுனி சடகோபன் சேனைநாதன்
இன்னமுதத்திருமகளென்றிவரைமுன்னிட்டு
எம்பெருமான் திருவடிகள் அடைகின்றேனே."

"நீளவந்தின்று விதிவகையால் நினைவொன்றிய நாம்
மீளவந்தின்னும் வினையுடம்பொன்றி விழுந்துழலாது
ஆளவந்தாரென வென்று அருள்தந்து விளங்கியசீர்
ஆளவந்தாரடியோம் படியோமினி அல்வழக்கே."

96. ஸ்ரீ தேசிகர் அருளிச்செய்த ஸம்ப்ரதா3யபரிஶுத்3தி4—மது4ரகவிமுதலான ஸம்ப்ரதா3ய பரம்பரையாலும், ப்ராது3ர்பா4வ விஶேஷத்தாலும் நாத2முனிகளுக்கு ஆழ்வார் (நம்மாழ்வார்) ஆசார்யரானார். இவரை ப்ரபந்நஸந்தானகூடஸ்த2தையாலே ஆளவந்தார் "ஆத்3யஸ்ய ந: குலபதே:" என்று அருளிச்செய்தார். நாத2முனிகள் தம்முடைய திருப்பேரனாரான ஆளவந்தாருக்குத் தாம் உபதேஶியாதே தம்முடைய ஶிஷ்யப்ரஶிஷ்யர்களை 'இவருக்கு ஆகாங்க்ஷை பிறந்தபோது உபதேஶியுங்கள்' என்று ஆஜ்ஞாபித்தது 'கு3ருபுத்ர பௌத்ராதி3களும் வித்3யாப்ரதா3னத்திற்கு ப்ரஶஸ்த பாத்ரங்கள்' என்றும், 'ஜ்ஞானஸந்ததியிலே முற்பட்டவர்

ளும் கு₃ருக்களாக 'ஆத₃ரணீயர்' என்றும், 'ஆகாங்க்ஷையின்றி யிருக்கச்செய்தே சொன்னால் ஶிஷ்யபு₃த்₃தி₄யில் அர்த்த₂ம் ப்ரதிஷ்டி₂தமாகாது' என்றும் தெரிவித்தபடி. மணக்கால் நம்பி ஆளவந்தாருக்கு நெடுநாள் பச்சையிட்டு ஒரு விரகாலே ஆகாங்க்ஷையுண்டாக்கி உபதே₃ஶித்தது ஆசார்யகுலத்துக்குத் தாம் ஒரு கிஞ்சித்காரம் பண்ணுகையிலும், ஆசார்யநியோக₃த்தைக் கடுகத்தலைக்கட்டுகையிலும் உண்டான த்வரையாலும் சிரகாலபரீக்ஷாதி₃கள் வேண்டாதபடி 'பே₃ாத₄நம் ச முஹு: க்ரமாத்'' என்கிற யுக₃த₄ர் மாநுஸாரத்தாலும் உபபந்நம். ஆளவந்தார்தாம் நாத₂முனிகளை முன்னிட்டு ஸ்தோத்ரம் பண்ணிற்றும் ஶரணம்புக்கதுவும் ''தம்முடைய ஆசார்யனுக்கு இது ப்ரியதமம்'' என்றும், ''தமக்கு ஆசார்யவத்தை முதலான ஸம்பத்துகளுக்கும் அடி நாத₂முனிவம்ஶத்தில் பிறவி'' என்றும் தோற்றுகைக்காகவும், ''ஆசார்யவிஷயத்திற் போலே ப்ராசார்யாதி₃விஷயத்திலும் க்ருதஜ்ஞதாதி₃கள் வேண்டும்'' என்கைக்காகவும்.

97 அஞ்ஜலிவைப₄வம். ஸ்ரீதே₃ஶிகர் அருளிச்செய்த ரஹஸ்யம்–ஆளவந்தாரின் ஸ்தோத்ரரத்னத்தில் 33-வது ஶ்லோகமான ''த்வத₃ங்க்₄ரிமுத்₃தி₃ஶ்ய'' என்ற ஶ்லோகத்தின் விவரணமாயமைந்தது.

98. ந்யாயஸித்₃த₄ாஞ்ஜனம்—(ஸ்ரீதே₃ஶிகர் அருளிச்செய்தது) இதில் பதினாலு இடங்களில் ஸ்ரீ ஆளவந்தாருடைய க்₃ரந்த₂ங்களிலிருந்து மேற்கோள்கள் எடுக்கப்பட்டுள்ளன.

99. ஸ்ரீ ஆளவந்தாருடைய ஸ்தோத்ரரத்னத்துக்கும் சதுஶ்ஶ்லோகிக்கும் பெரியவாச்சான்பிள்ளை மணிப்ரவாள வ்யாக்₂யானமும், ஸ்ரீதே₃ஶிகன் ஸம்ஸ்க்ருத வ்யாக்₂யானமும் அருளியுள்ளனர். சதுஶ்ஶ்லோகிக்கு நாயனாராச்சான்பிள்ளை விஸ்தாரமான மணிப்ரவாள வ்யாக்₂யானம் அருளிச்செய்துள்ளார். கீ₃தார்த்த₂ ஸங்க்₃ரஹத்திற்கு ஸ்ரீதேசிகர் வடமொழியுரை அருளியுள்ளார்.

100. மற்றும் பூர்வாசார்ய க்₃ரந்த₂ங்களில் பலவிடங்களில் யாமுநாசார்யரென்னும் ஸ்ரீ ஆளவந்தாரின் எட்டு க்₃ரந்த₂ங்களிலிருந்து மேற்கோள்கள் எடுக்கப்பட்டுள்ளன.

101. தி₃வ்யஸூரிசரிதம். பதினாறுவது ஸர்க்க₃த்தில் 44-வது ஶ்லோகம் முதல் 95-வது ஶ்லோகம் வரை ஆளவந்தார் சரித்திர வர்ணனம். 17-வது ஸர்க்க₃த்தில் 35 முதல் 45வது ஶ்லோகம்

வரை யாமுனரும், ஸ்ரீராமாநுஜரும் ஸம்ப₃ந்த₄ப்பட்ட சரித்திரங்கள் உள்ளன.

102. ப்ரபந்நாம்ருதம்—112-வது அத்₄யாயத்தின் பிற்பகுதி. 113, 114-வது அத்₄யாயங்களின் பகுதிகள், 115, 116 அத்₄யாயங்கள், 117-வது அத்₄யாய முற்பகுதி.

103. ஆளவந்தார் அருளிய நம்மாழ்வார் தனியன்.

மாதா பிதா யுவதயஸ் தநயா விபூ₄திஸ்
ஸர்வம் யதே₃வ நியமேந மத₃ந்வயாநாம் |
ஆத்₃யஸ்ய ந: குலபதேர் வகுளாபி₄ராமம்
ஸ்ரீமத் தத₃ங்க்₄ரி யுக₃ளம் ப்ரணமாமி மூர்த்₄நா || [ஸ்தோ-ர5]

[என் குலத்தவர்க்குத் தாய், தந்தை, மனைவிமக்கள், செல்வம் ஆகிய அனைத்தும் என்றும் எதுவேயாகிறதோ, எங்களுக்கு ஆதிகுலபதியான நம்மாழ்வாரின் வகுளமாலையால் அழகுபெற்று விளங்கும் அந்தத்திருவடியிணையைத் தலையால் வணங்குகிறேன்.]

104. திருநக்ஷத்ரத்தனியன்.

ஶுசௌ மாஸ்யுத்தராஷாட₄ஜாதம் யாமுநதே₃ஶிகம் |
ஸ்ரீராமமிஶ்ரசரண ஸரோஜாஶ்ரித மாஶ்ரயே ||

[ஆடி உத்தராடத்தில் அவதரித்தவரும், மணக்கால்நம்பியாகிற ஸ்ரீராமமிஶ்ரரின் திருவடித் தாமரைகளை ஆஶ்ரயித்தவருமான ஆளவந்தாரெனும் யாமுநாசார்யரை ஆஶ்ரயிக்கிறேன்.]

105. வாழித்திருநாமம்.

மச்சணியும் மதிளரங்கம் வாழ்வித்தான் வாழியே
மறைநான்கு மோருருவில் மகிழ்ந்துகற்றான் வாழியே
பச்சையிட்ட ராமர்பதம் பகருமவன் வாழியே
பாடியத்தோ னீடேறப் பார்வை செய்தோன் வாழியே
கச்சிநகர் மாயனிருகழல் பணிந்தோன் வாழியே
கடக வுத்தராடத்துக் காலுதித்தான் வாழியே
அச்சமற மனமகிழ்ச்சி யணைந்திட்டான் வாழியே
ஆளவந்தார் தாளிணைக ளனவரதம் வாழியே.

# பெரியநம்பி வைபவம்



ஸ்ரீரங்கம் — பெரியநம்பிகள்

**த$_3$யாநிக்$_4$நம் யதீந்த்$_3$ரஸ்ய தே$_3$ஶிகம் பூர்ணமாஶ்ரயே।**
**யேந விஶ்வஸ்ருஜோ விஷ்ணோரபூர்யத மநோரத$_2$: ॥**

*[யதிராஜஸப்ததி 9]*

[ஒன்றியொன்றி உலகம் படைத்த விஷ்ணுவின் (சேதநலாப$_4$) மநோரதமும் எவராலே நிறைவேற்றிவைக்கப்பட்டதோ, கருணை நிரம்பியவரும், யதிராஜருடைய ஆசார்யருமான அத்தகைய பெரியநம்பிகளை ஆஶ்ரயிக்கிறேன்.]

**கமலாபதி கல்யாணகு3ணாம்ருதநிஷேவயா ।**
**பூர்ணகாமாய ஸததம் பூர்ணாய மஹதே நம: ॥**

[ஸ்ரீமந்நாராயணனுடைய கல்யாண கு3ணங்களாகிற அமுதத்தைப் பருகுகையால் எப்போதும் விருப்பம் நிறைவேறப்பெற்றவராயிருக்கும் பெரியநம்பிகளுக்கு நமஸ்காரம்]

ஆளவந்தார் அவதரித்து இருபத்தொரு வருடங்களுக்குப்பிறகு (கி பி. 997—998) ஹேவிளம்பி வருஷத்தில் மார்கழியில் கேட்டையில் புதன்கிழமையில் ப்3ருஹச்சரண ப்3ராஹ்மண குலத்தில் பா4ரத்3வாஜகோ3த்ரத்தில் யஜுஸ்ஸாகை2யில் ஸ்ரீபராங்குசதா3ஸர் என்னும் திருநாமம் உடையவராய், குமுத3ர் என்னும் நித்யஸூரியின் அம்ஸமாக அவதரித்தவர் பெரியநம்பி. எம்பெருமானாருக்கு ஸமாஸ்ரயணம் செய்த முக்2யாசார்யராகையாலே ஆளவந்தாருடைய சிஷ்யர்களுக்குள் பெருமை பெற்றவராய், பெரியநம்பி என்று அழைக்கப்பெற்றார். ஆளவந்தார் நியமனத்தின் பேரில் இவரே ஸ்ரீராமானுஜரைத் திருவரங்கத்துக்கு அழைத்து வந்தார். ஆளவந்தார் காலத்திற்குப்பின் ஆளவந்தாருடைய மற்ற சிஷ்யர்களாலே பிரார்த்திக்கப்பெற்ற இவரே ஸ்ரீராமானுஜர்க்கு ஸமாஸ்ரயணம் செய்து அழைத்து வருவதற்காக ஸ்ரீகாஞ்சிக்குப் புறப்பட்டார். தேவப்பெருமாளின் நியமனம் பெற்றுப் பெரியநம்பியை ஆஸ்ரயிப்பதற்காக ஸ்ரீராமானுஜர் திருவரங்கத்தை நோக்கிப் புறப்பட்டார். இருவரும் மது4ராந்தகம் ஏரிகாத்தபெருமாள் கோயிலிலே சந்திக்க, அங்கு ஸ்ரீராமானுஜ ஸமாஸ்ரயணம் நடைபெற்றது. எம்பெருமானார் மேல்நாட்டுக்கு எழுந்தருளியபோது, கூரத்தாழ்வானோடு க்ரிமிகண்ட2னுடைய ஸபைக்குச் சென்று, நம் த3ர்ஸநத்திற்காகத் தம் த3ர்ஸநத்தையும் (கண்களையும்), உயிரையும் த்யாக3ம் செய்த மஹாநுபா4வர் இவர். இவர் தம் குமாரரான புண்ட3ரீகாக்ஷரையும், பெண்ணான அத்துழாயையும் உத்தாரகரான எம்பெருமானார் திருவடிகளிலே ஆஸ்ரயிப்பித்தார். ஆளவந்தாருடைய சிஷ்யராய் சதுர்த்த2வர்ணத்தைச் சேர்ந்தவரான மாறனேர் நம்பிக்கு ப்3ரஹ்மமேத4ஸம்ஸ்காரம் செய்து பெருமைபெற்றவர் இவர். இது இவருடைய வைப4வத்தின் சுருக்கம். யதிராஜ வைப4வத்தில் இதன் விரிவு காணலாம்.

## ஐதிஹ்ய நிர்வாஹங்கள்

1. ஆறாயிரப்படி கு3ருபரம்பராப்ரபா4வம்:—இளையாழ்வார் பெரியநம்பிகளிடத்து ஆஸ்ரயித்த வைபவம். அக்காலத்திலே கோயிலிலே

ஆளவந்தார் ஸ்ரீபாதத்து முதலிகளெல்லாரும் திரளாகவிருந்து பெரியநம்பியுடனே 'இத்தர்ஶநத்துக்குக் கடவர் ஆர்?' என்ன, பெரியநம்பியும் முதலிகளைக் குறித்து 'ஆளவந்தார் முன்பு நினைவிட்டு விஶேஷகடாக்ஷம் பண்ணியருளினதும், திருவிரல்கள் நிமிர்ந்த ஏற்றமும் உங்கள் திருவுள்ளங்களிலே நிலையிடவில்லையோ? ஸர்வதா ஆளவந்தாரபிமாநம் பொய்யாகமாட்டாது' என்ன, முதலிகளெல்லோரும் கூடி ஸம்மதித்து 'இன்னமும் தேவரீர் எழுந்தருளி இளையாழ்வாரை விசேஷ கடாக்ஷஞ்செய்தருளி நம் தர்ஶந ப்ரவர்த்தகராம்படி திருத்தி அழைத்துக்கொண்டு வரவேணும்' என்று பெரியநம்பிக்கு விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் அப்போதே குடும்ப ஸஹிதமாகப் புறப்பட்டு நம்பெருமாள் ஸந்நிதியிற் சென்று ஸேவித்து விண்ணப்பஞ்செய்து அவரநுமதி கொண்டு த்வரித்துப் புறப்பட்டுப் பெருமாள்கோயிலுக்கு எழுந்தருளாநிற்கச் செய்தே, ஸ்ரீமதுராந்தகத்திலே ஏரிகாத்த பெருமாள் கோயிலிலே அவஸரித்து எழுந்தருளியிருந்தவளவிலே;

இளையாழ்வாரும், தமக்குப் பேரருளாளர் திருக்கச்சிநம்பி முகேந நியமித்தருளினபடியே பெரியநம்பி ஸ்ரீபாதத்திலே ஆஶ்ரயிப்பதாகப் புறப்பட்டுத் திருக்கச்சிநம்பியையும் பேரருளாளப் பெருமாளையும் ஸேவித்து அவர்களநுமதிகொண்டு கோயிலுக்கு எழுந்தருளாநிற்க, ஸ்ரீமதுராந்தகம் வழியாகையாலே இவரும் அங்கே ஏரிகாத்த பெருமாளை ஸேவிப்பதாக எழுந்தருள, ஏரிகாத்த பெருமாள்கோயிலிலே பெரியநம்பி எழுந்தருளியிருக்க, இளையாழ்வாரும் தூரத்திலே கண்டு அத்யாஶ்சர்யப்பட்டு, 'எண்ணின பலம் எதிரேவந்து வாய்த்ததுபோல் நம்பி நமக்கெதிரே எழுந்தருளி க்ருபைசெய்ய வந்தபடி 'கண்டாயே! நெஞ்சே!' என்று நிர்ப்பராநந்த பாஷ்பங்களையுடையராய், பெரியநம்பி திருவடிகளிலே ஹர்ஷஸம்ப்ரமத்துடனே தண்டன் ஸமர்ப்பித்து நிற்க, நம்பியும் தம் அபிலாஷை அதிஶீக்ரமாய் எதிரேவந்து ஸித்தி க்ககண்டு ஆநந்த நிர்ப்பரராய் இளையாழ்வாரை வாரியெடுத்து அணைத்துக் கொள்ள, இளையாழ்வாரும் 'அடியேனுக்கு இப்போதே தேவரீர் ஹிதோபதேஶஞ் செய்தருளி ரக்ஷித்தருளவேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய; நம்பியும்— "அஸ்தி ஹஸ்திகிரிர் நாம தத்ர ஶைலவரோ மஹாந் | விதாத்ராப்யர்ச்சிதோ விஷ்ணுஸ் தஸ்ய ஶைலஸ்ய மூர்த்தநி | புண்யகோடீதி விக்யாதம் விமாநம் புண்ய வர்த்தநம் ||" [ ஹஸ்திகிரி மாஹாத்மியம் ]

[அந்தத் திருக்கச்சிநகரில் அத்திகிரியெனும் சிறந்த பெரிய மலை விளங்குகிறது. அந்த மலையின் சிகரத்திலே ஸ்ரீமந்நாராயணன் பிரமனால் யாகத்தில் ஆராதிக்கப்பட்டான். புண்ணியத்தை வளர்ப்ப தாகையாலே, ஹஸ்திகிரிவிமானம் புண்யகோடி என்று புகழப்படு கிறது.] என்று சொல்லப்படுகிற ஹஸ்திகி₃ரியிலே புண்யகோடி விமாந மத்₄யத்திலே ப்₃ரஹ்மாதி₃ ஸகல சேதநராலும் ஸேவ்ய மானரான பேரருளாளர் ஸந்நிதி₄யிலே செய்கிறோம் — என்று அருளிச்செய்ய, இளையாழ்வாரும் "காலக்ஷேபம் பண்ணவொண்ணா மைக்கு ஆளவந்தார்பக்கல் கண்டது அமையாதோ? மின்னின் நிலையில்லாத அடியேனுடைய இஶ்ஶரீரம் இருக்கிறபோதே க்ருபை பண்ணியருளவேணும்" என்று விண்ணப்பஞ்செய்து திருவடி களிலே விழுந்துகிடக்க, பெரியநம்பியும் இவரை முடிபிடித்தெடுத்து 'இவருடைய ஆர்த்தியிருந்தபடியென்!' என்று மிகவும் உகந்த திருவுள்ளத்தராய் இளையாழ்வாரைக் கையைப்பிடித்து அழைத்துக் கொண்டுபோய் ஏரிகாத்த பெருமாள் கோயில் திருமகிழடியிலே எழுந்தருளியிருந்து, "மந்த்ரஸம்ஸ்காரஸித்₃த்₄யர்த்த₂ம் மந்த்ர தீ₃க்ஷாவிதௌ₄ ததா₂ | சக்ரஸ்ய தா₄ரணம் ப்ரோக்தம் மந்த்ரை: பஞ்சாயுதா₄நி வா ||" [அவ்வண்ணமே மந்திரஸம்ஸ்காரம் ஏற்படுவ தற்காக மந்திரஸம்ஸ்காரவிதியில் சக்கரத்தை தரிப்பது விதிக்கப் படுகிறது. மந்திரங்களால் ஐந்து ஆயுதங்களையுமாவது தரிக்க லாம்.] என்றும், "சக்ராதி₃தா₄ரணம் பும்ஸாம் பரஸம்ப₃ந்த₄ வேத₃நம் | பதிவ்ரதாநிமித்தம் ஹி வலயாதி₃ விபூ₄ஷணம் ||" [கூர்மபுராணம்] [சக்ரம் முதலியவைகளை தரிப்பது பரமாத்மஸம் பந்தத்தைக் காட்டுகிறது. வளை முதலிய ஆபரணங்கள் பதிவ்ர தைக்கு அடையாளங்களன்றோ.] என்றும் சொல்லுகிறபடியே திரு விலச்சினை ப்ரஸாதி₃த்து, "நிவேஶ்ய த₃க்ஷிணே ஸ்வஸ்ய விநீதாஞ்ஜலிஸம்யுதம் | மூர்த்₄நி ஹஸ்தம் விநிக்ஷிப்ய த₃க்ஷிணம் ஜ்ஞாந த₃க்ஷிணம் || ஸவ்யம் து ஹ்ருதி₃ விந்யஸ்ய க்ருபயா வீக்ஷயேத்₃கு₃ரு: | ஸ்வாசார்யம் ஹ்ருத₃யே த்₄யாத்வா ஜப்த்வா₂ கு₃ருபரம்பராம் || ஏவம் ப்ரபத்₃ய தே₃வேஶமாசார்ய: க்ருபயா ஸ்வயம் / அத்₄யாபயேந் மந்த்ரரத்நம் ஸர்ஷிச்ச₂ந்தே₃₃ாதி₄தை₃வ தம் //" [தன் வலதுபுறத்தில் அடக்கத்துடனும் அஞ்ஜலியோடும் கூடிய சீடனை இருத்தி, ஞானத்தைத் தரவல்ல தன் வலது கையை சீடனின் சிரத்தில் வைத்து, தன் இடது கையைச் சீடனின் மார்பில் வைத்து, அருளுடன் சீடனை ஆசார்யன் கடாக்ஷிக்கக் கடவன். தன் ஆசார்யனை இருதயத்தில் தியானித்து, குருபரம்பரையை ஜபித்து,

இவ்வகையாக எம்பெருமானை சரணமடைந்து ரிஷி, ச₂ந்த₃ஸ், தேவதைகளுடன் கூடிய மூலமந்திரத்தைத் தானே கருணையால் சீட னுக்கு உபதேசம் செய்யக்கடவன்.] என்று சொல்லுகிற க்ரமத்திலே பெரியநம்பியும் — ஸவிநயரான இளையாழ்வாரைத் தம்முடைய வலப் புறத்திலே வைத்துத் தம் திருக்கைகளாலே அவர் ஶிரஸ்ஸை ஸ்பர்ஶித்துக்கொண்டு ஸத₃ாசார்யரான ஆளவந்தார் திருவடிகளை ஸ்மரித்துக்கொண்டு கு₃ருபரம்பரா பூர்வகமாக மந்த்ரரத்நமான த்₃வயத்தை ஸாங்கோ₃பாங்க₃மாக இளையாழ்வாருடைய வலத்திருச் செவியிலே உபதே₃ஶித்தருளி, "பெருமாள் நாட்டுக்காக ஸ்ரீ ப₄ரதாழ்வான் தலையிலே திருவடி நிலைகளை வைத்துக் காட்டுக்கு எழுந்தருளினாற்போலே ஆளவந்தாரும் உமக்காகத் தம்முடைய திருவடித் தாமரைகளை என் தலைமேலே வைத்துத் திருநாட்டுக்கு எழுந்தருளினாரென்றிருங்கிடீர்" என்று இளையாழ்வாருக்கு அருளிச் செய்தருளினார். ஆளவந்தாருக்குக் கரணபூ₄தரிறே பெரியநம்பி. இளையாழ்வார்க்கு நேரே ஆசார்யர் யமுனைத்துறைவரேயாம். ஆகையாலேயிறே, "எதிகட்கிறைவன் யமுனைத்துறைவனிணையடி யாங்கதி பெற்றுடைய இராமானுசன்" என்று பிள்ளையமுதனார் அருளிச்செய்ததும்.

இளையாழ்வாரும் 'ப்ரமாணம் எது? ப்ரமேயம் எது? ப்ரமாதாக் கள் ஆர்?' என்று பெரியநம்பியைக் கேட்க, அவரும் ' "மாதவன் பேர் சொல்லுவதே ஓத்தின் சுருக்கு" என்கிறபடியே ப்ரமாணமும் த்₃வயமே; ப்ரமேயமும் இத்தால் ப்ரதிபாத்₃யனாய் ஸ்ரீ ஹஸ்திகி₃ரியின் மேலே கையுந் திருவாழியுமாய் நிற்கிற பெருமாளே; ப்ரமாதா நீர்தாம்; இந்த ப்ரமாணத்தாலே ப்ரமேயத்தை அநுப₄விக்க வாரும்' என்று அருளிச்செய்து, அதின்மற்றைநாள் புறப்பட்டு ஏரிகாத்த பெருமாளைத் திருவடிதொழுது "ஸ ராமோ லோகரஞ்ஜநः" [உலகங்களையெல் லாம் ரமிக்கச்செய்பவராகையால் அவர் ராமன் என்னும் பெயருடைய வரானார்] என்னுமாபோலே தேவரீர் திருநாமத்துக்குத் தகுதியான இத்த₃ர்ஶநம் பி₄ந்நதடாகமாகாதபடி செய்தருளிற்றே!' என்று மங்க₃ளாஶாஸநம் பண்ணியருளிப் பெருமாள்கோயிலேற எழுந்தருள, திருக்கச்சி நம்பியும் எதிரேவந்து பெரியநம்பியை ஸேவிக்க, அவரையும் க்ருபை பண்ணி அவர் புருஷகாரமாக உலகேத்து மாழியானத்தியூரானை பேரருளாளனையும் ஸேவித்து, நாத₂முனிகள் உய்யக்கொண்டாருக்கு அருளிச்செய்தபடியை உய்யக்கொண்டார் நியோக₃த்தால் மணக்கால்நம்பி ஆளவந்தாருக்குப் பச்சையிட்டு உபதே₃ஶித்துக் கோயிலிலே கொண்டுபோய்ப் பெரியபெருமாளை

ஸாக்ஷாத்கரிப்பித்து அனுப₄விப்பித்தாற்போலே, பெரியநம்பியும் ஆளவந்தார் நியோக₃த் புலகால் தட்டி உபதே₃ஶித்துப் பேரருளாளப் பெருமாளை ஸாக்ஷாத்கரிப்பித்து அநுப₄விப்பித்தருளினர்.

அநந்தரம் இளையாழ்வார் திருமாளிகையிலே எழுந்தருளி, தம் திருமாளிகையிலே மேல்பாதியிலே பெரியநம்பி குடும்ப₃ஸஹிதமாக எழுந்தருளியிருக்கத்தக்கதாக இடம் ஸமர்ப்பித்துத் தளிகைக்கு வேண்டும் பதா₃ர்த்த₂ங்களும் ஸமர்ப்பிக்க, நம்பியும் ஆறுமாஸம் அங்கே எழுந்தருளியிருந்து இளையாழ்வாருக்கு த்₃ராவிட₃வேத₃ ப்ரப₃ந்த₄ங்களையும், த₃ர்ஶநவிஷய ரஹஸ்ய விஶேஷங்களையும் ப்ரஸாதி₃க்க, இளையாழ்வாரும் ப்ரீதியுடனே செவிக்கினிய செஞ் சொல்கேட்டு க்ருதார்த்த₂ராயிருக்குங்காலத்திலே, ஒருநாள் திருமஞ்சந முறையிலே எண்ணெய்க் காப்புச் சாத்தவந்த ஸ்ரீவைஷ்ணவர் 'க்ஷுத்து நலியாநின்றது' என்றவாறே. இளையாழ்வாரும் தம் தே₃விகளை யழைத்து 'ஸ்ரீவைஷ்ணவர் விடாய்த்திருக்கிறார்; பர்யுஷிதாந்நம் இல்லையோ?' என்ன, தே₃விகளும் 'அல்பமாகிலுமில்லை' என்ன, இவரும் தே₃விகளை ஒரு கார்யத்திலே ஏவிவிட்டு உள்ளே புகுந்து ஶோதி₄த்தருளிப் பாத்ரத்திலே பழைய ப்ரஸாத₃ம் ஸம்ருத்₃த₄மாயிருக்கக் கண்டெடுத்து, தே₃வியாரையழைத்து 'ஸ்ரீவைஷ்ணவர் இளைத்திருக்க இப்படி செய்தாயே! இடும்பையாலடர்ப்புண்டு இடுமினோ துற்றென்றிரந்தவர்க்கு இல்லையேயென்று நெடுஞ்சொல்லால் மறுத்த நீசையிறே நீ' என்று கனக்கக் கோபித்து விட்டார். பின்னையும் ஒருநாள் கிணற்றின்கரையிலே இளையாழ்வார் தே₃விகளுக்கும் பெரியநம்பி தே₃விகளுக்கும் ஒரு தோண்டி வ்யாஜமாகச் சண்டையானவளவிலே, இத்தைப் பெரியநம்பி கேட்டருளித் தம்முடைய தே₃விகளை மிகவுங்கோபித்து இளையாழ்வாருக்கும் அறிவியாதே தே₃விகளையழைத்துக்கொண்டு மீண்டு கோயிலுக்கு எழுந்தருளினர். இளையாழ்வாரும் அநுஷ்ட₂ாநம்பண்ணி எழுந்தருளிப் பெரியநம்பியை ஸேவிக்கப்பெறுமல், திருமாளிகையில் வர்த்திக்கிறவர்களை 'பெரியநம்பி எங்கே?' என்று கேட்டருள, 'மீண்டு கோயிலுக்கு எழுந்தருளினர்' என்று அவர்கள் விண்ணப்பஞ்செய்ய, இவரும் 'அதுவென்? அவர் அருளிச்செய்யாமல் எழுந்தருளுகைக்கு ஹேதுவென்?' என்ன, 'ஒரு தோண்டியடியாக மதனியாருக்கும் மதனியாருக்கும் சண்டையானவாறே தம் தேவிகளைக் கோபித்து பா₄க₃வதாபசாரத்துக்கு இறய்த்து அப்போதே கோயிலேற எழுந்தருளினர்' என்றார்கள்.

இளையாழ்வாரும் அச்செய்தியைக்கேட்டுத் திருவுள்ளங்கலங்கி தேவிகளைப் பார்த்து அதிகுபிதராய்— "பாபநாமாகரஸ்ஸ்த்ரிய:" [ஸ்திரீகள் பாபங்களுக்கெல்லாம் இருப்பிடமாயிருப்புவர்கள்.] என்னும் படியை ஸ்பஷ்டமாக்கினையே! முன்பே திருக்கச்சிநம்பி விஷயமாக வும், ஸ்ரீவைஷ்ணவர் விஷயமாகவும் பாகவதாபசாரப்பட்டாய்; இப்போதும் பெரியநம்பி தேவிகளுடனே பிணங்கி அஸஹ்யாபசாரப்பட்டாய்; இப்படி செய்கிற நீ இப்பொழுதே புறப்பட்டுப் போ—என்று ததநுபந்தியான தநங்களையுங் கொடுத்துப் பயணமாக்கிப் பிறந்தகமே போகவிட்டு,....

2. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம்:— பெரியநம்பி திருமகளாரான அத்துழாய் புக்ககத்திலே வாழுங்காலத்திலே, ஒரு நாள் தீர்த்தமாடத் துணைவர வேணும் என்று மாமியாரை அபேக்ஷிக்க, அவளும் 'உன் சீதனவெள்ளாட்டியைக் கொண்டு போ' என்று கடுத்துச் சொல்ல, நம்பிபக்கலிலே வந்து 'ஐயா! என்னை இப்படி சொன்னாள்' என்ன, நம்பியும் 'நாம் அறியோம்: உங்கள் சீயருக்கு சொல்' என்ன, இவரும் அங்கே சென்று விண்ணப்பஞ்செய்ய, உடையவரும் அருகிலிருந்த முதலியாண்டானை "உமக்கு இந்தாரும் சீதனவெள்ளாட்டி" என்று கொடுத்து 'போம்' என்ன, ஆண்டானும் கூடவெழுந்தருளி நீராடப்பண்ணுவித்துக்கொண்டு வந்து அவருடைய புக்ககத்திலே நின்று தாஸவ்ருத்திகளைச் செய்யத்தொடங்க, அவருடைய புக்ககத்தார் 'ஆண்டான்! இது என்?' என்ன, 'என்னை வரவிட்ட உடையவரைக் கேளுங்கோள்; ஆசார்யர்சொன்னது செய்யவேணுமே' என்ன, அவர்களும் நம்பி ஸ்ரீபாதத்தேறப்போய் 'நம்பீ! முதலியாண்டானை வரவிட்டு எங்களை இப்படி நசிப்பிக்க வேணுமோ?' என்ன, நம்பியும் 'நாம் அறிந்தோமோ? உடையவரைக் கேளுங்கோள்' என்ன, அவர்களும் அங்கே சென்று விண்ணப்பஞ்செய்ய, உடையவரும், 'ஆண்டானை அத்துழாய்க்குச் சீதனவடிமையாகத் தந்தோம்; அவர் அங்கு நிற்கை உங்களுக்கு அநிஷ்டமாகில் இங்கிருந்து அடிமை செய்கிறார்' என்று அழைப்பித்துக் கொண்டருளினார்.

பெரிய நம்பி மாறனேரிநம்பியை ப்ரஹ்மமேதத்தாலே ஸம்ஸ்கரித்துப் பள்ளிபடுத்தருள, இதுகேட்டு எம்பெருமானார் நம்பி ஸ்ரீபாதத்தேறச்சென்று தண்டன் ஸமர்ப்பித்து 'சீயா! ஸம்ஸாரம் சிலுகிடாதபடி அடியேன் ஒரு வழியாலே வேலியிட்டுவர, தேவரீர் ஒருவழியாலே பிரித்தருளாநின்றதே!' என்று விண்ணப்பஞ்செய்ய நம்பியும் "வாரீர் உடையவரே! இக்ஷ்வாகுவம்ஶத்திலே அவதரித்து

ஸாமாந்யத₄ர்மத்தை வெளியிட்டருளின பெருமாளைக்காட்டில் நான் பெரியவனோ? பெரியவுடையாரைக் காட்டில் இவர் தண்ணியரோ? ஸாமாந்ய த₄ர்மநிஷ்ட₂ரான த₄ர்மபுத்ரரைக்காட்டில் நான் பெரியவனோ? ஸ்ரீவிது₃ரரைக்காட்டில் இவர் தண்ணியரோ? 'பயிலுஞ் சுடரொளி' 'நெடுமாற்கடிமை' கடலோசையோ?" என்று அருளிச் செய்ய, உடையவரும் உகந்து ஸம்மதித்திருக்கச்செய்தே, 'மாறனேரிநம்பி திருநாட்டுக்கு எழுந்தருளும்போது பெரியபெருமாள் திருவடிகளே ஶரணமென்னுதல், ஆளவந்தார் திருவடிகளே ஶரணமென்னுதல் செய்யக்கண்டிலோம்; இது என்?' என்று உடையவருடனே பெரியநம்பி அருளிச்செய்தருள, உடையவரும் 'அவர்க்கு அப்போது ஶ்லோக த்₃வயாநுஸந்த₄ாநமாயிருந்ததாய்க் கொள்ளீர்' என்று விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் 'அதுபெண் கண்ட பிச்சன் வார்த்தையன்றோ?' என்று அருளிச்செய்தருள, உடையவரும் 'பெண்ணினுடைய நித்யயோக₃த்தைத் திருவுள்ளம் பற்றுதொழிகிறதென்?' என்று விண்ணப்பஞ்செய்தார்.

3. ஆறாயிரப்படி கு₃ருபரம்பராப்ரப₄ாவம். ஆளவந்தார் ஐதிஹ்ய நிர்வாஹம் 6 காண்க.

4. சரமோபாய நிர்ணயம். இன்னமும் இவருடைய உத்தாரகத்வஸாத₄கங்களான ஆசார்ய தி₃வ்யஸூக்திகள் பலவும் சொல்லப் படுகிறது. பெரியநம்பி மது₄ராந்தகத்து ஏரிகாத்தபெருமாள் கோயில் திருமகிழ் அடியிலே எழுந்தருளியிருந்து, "சக்ராதி₃த₄ாரணம் பும்ஸாம் பரஸம்ப₃ந்த₄வேத₃நம் / பதிவ்ரதாநிமித்தம் ஹி வலயாதி₃ விபூ₄ஷணம் //" [சக்ரம் முதலியவைகளை தரிப்பது பரமாத்ம ஸம்பந்தத்தைக் காட்டுகிறது. வளை முதலிய ஆபரணங்கள் பதிவ்ரதைக்கு அடையாளங்களன்றோ.] என்றும், "ஏவம் ப்ரபத்₃ய தே₃வேஶம் ஆசார்ய: க்ருபயா ஸ்வயம் / அத்₄யாபயேந்மந்த்ரரத்நம் ஸர்ஷிச்ச₂ந்தே₃ாதி₄தை₃வதம் //" [பொருள் ப89,90ல் காண்க] என்றும் சொல்லுகிறபடியே ப₄க₃வத்ஸம்ப₃ந்த₄ பூர்வகமாக உடையவர்க்கு த்₃வயோபதே₃ஶம் பண்ணியருளி, "நாம் உமக்கு ஆசார்யராகவேணுமென்று பெருமைக்குச் செய்தோமில்லை; ஆளவந்தார் கணிசித்த விஷயமென்று செய்தோமித்தனை. ஆழ்வார் உம்மைக் கடாக்ஷித்து "கலியும் கெடும் கண்டுகொண்மின்" என்று அருளிச்செய்தாராகையாலே அப்படிப்பட்ட மஹாநுப₄ாவனன்றோ; இவ்வழியாலே தேவரீரோட்டை ஒரு ஸம்ப₃ந்த₄ம் வேணுமென்றும் செய்தோமித்தனை. "வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்காய்த் தோன்றி விண்முழுதும் உய்யக்கொண்ட வீரன்" என்றும், "ஜநகாநாம் குலே கீர்த்திமாஹரிஷ்யதி மே

லாதா" [ரா-பா 67-22] [ஜனக வம்சத்திற்கு என் பெண் புகழை உண்டாக்குவாள்.] என்றும் சொல்லுகிறபடியே, தேவரீர் வந்து அவதரிக்கையாலே ப்ரபன்னகுலமாக விளங்கப்போகிறது. தேவரீரே ஸர்வோத்தாரகர். அடியேன் ரஹஸ்யத்திலே நினைத்திருப்பதும் அப்படியே" என்றருளிச் செய்தார். இவ்வார்த்தை ஸம்ப்ரதாயமென்று பிள்ளை [பெரியவாச்சான்பிள்ளை] அருளிச்செய்வர்.

5. பெரியதிருமுடியடைவு:— குமுதாம்ஶபூதரான பெரியநம்பிக்குத் திருவவதார ஸ்தலம் கோயில். திருநக்ஷத்ரம் கலியுகம் நாலாயிரத்து முப்பத்தெட்டுக்குமேல் ஹேவிளம்பி வருஷம் மார்கழி மாஸம் புதன்கிழமை பூர்வபக்ஷம் பஞ்சமி கேட்டை. குடி சாந்தனூர். குலம் பருஹச்சரணம் பாரத்வாஜகோத்ரம், யஜுஶ்ஶாகை, திருநாமங்கள் பெரியநம்பி, ஸ்ரீபராங்குஶதாஸர், மஹாபூர்ணர், பூர்ணுசார்யர், குமாரர் புண்டரீகாக்ஷர். குமாரத்தி அத்துழாய். திருவாராதனம் அழகிய சிங்கர், ஆசார்யர் ஆளவந்தார். சிஷ்யர் திருக்கச்சிநம்பி, எம்பெருமானுர், மலேகுனியநின்ருர், ஆரியூரில் ஸ்ரீசடகோபதாஸர், அணியரங்கத்தமுதனுர் பிள்ளை, திருவாய்க்குலமுடையார் பட்டர் முதலானவர்கள், இருப்பிடம் கோயில். இவர் நூற்றஞ்சு திருநக்ஷத்ரம் எழுந்தருளியிருந்தார். ததநந்தரமாகத் திருநாட்டுக்கெழுந்தருளினது சோழதேசத்தில் பசியது (பசுபதி ?) கோயில். இவர் செய்தருளின க்ரந்தம் திருப்பதிக்கோவை. இவர் மாறனேரி நம்பிக்கு ப்ரஹ்மமேத ஸம்ஸ்காரம் பண்ணினுர்.

**இவர்க்குத் தனியன்**

தயாநிக்நம் யதீந்த்ரஸ்ய தேஶிகம் பூர்ணமாஶ்ரயே /
யேந விஶ்வஸ்ருஜோ விஷ்ணோரபூர்யத மநோரத: //
கமலாபதி கல்யாணகுணம்ருதநிஷேவயா /
பூர்ணகாமாய ஸததம் பூர்ணாய மஹதே நம: //

6. வார்த்தாமாலை (72) வார்த்தை & விவரணம். எம்பெருமானுர், பெரியநம்பி ஸ்ரீபாதத்திலே சென்று, "ப்ரபத்தியென்?" என்று விண்ணப்பஞ்செய்ய, 'கனிப்பழம் காம்பற்றுப்போலேயிருக்கும்' என்ன; [இவ்வர்த்தம் "தானே பழுத்தால் விழும் கனிபோல் பற்றற்று வீழும் விழுக்காடே" [ஞானஸாரம் 1] என்று அருளாளப்பெருமாள் எம்பெருமானுராலே அருளிச்செய்யப்பட்டது.] 'இன்னமும் ஸந்தேஹம் செல்லாநின்றது' என்று விண்ணப்பஞ்செய்ய; 'ஆகில் இவ்வர்த்தத்தைத் திருக்கோட்டியூர் நம்பி ஸ்ரீபாதத்திலே கேளும்' என்ன; இவரும் அங்கே சென்று விண்ணப்பஞ்செய்ய; அவரும் "ஸக்ருதேவ"

என்றருளிச்செய்ய; ["ஸக்ருதே₃வ" என்றது "ஸஹஸைவ" என்ற படியாய், சடக்கெனத் திருவடிகளிலே விழவேணும் என்று பெருமான் அருளிச்செய்தது பெரியநம்பியருளியதற்கு ப்ரமாணமென்று கருத்து.] 'இன்னமும் ஸந்தே₃ஹம் செல்லாநின்றது' என்று: விண்ணப்பஞ் செய்ய; 'ஆகில் இவ்வர்த்த₂த்தைத் திருமாலையாண்டான் ஸ்ரீபாத₃த் திலே கேளும்' என்ன; இவரும் அங்கேசென்று விண்ணப்பஞ் செய்ய; அவரும் 'இத்தனை பிசகுகைக்குண்டோ ? ஒரு ரேகை₂ மாத்ரம்' என்ன: ['நாம் பற்றும் பற்றுகிய உபாயஸ்வீகாரமும் நம் கையிலுள்ள உபாயமாகுமோ?' என்று ஸந்தே₃ஹிக்க வேண்டா. அது கையில் உள்ள ரேகைபோல் அதி₄காரி விசேஷணமாகவே யிருப்பது என்று பரிஹாரம்.] 'இன்னமும் ஸந்தே₃ஹம் செல்லா நின்றது' என்று விண்ணப்பஞ்செய்ய; ['இப்படி எம்பெருமானே உபாயமானால் எல்லாருக்குமே ப₂லம் உண்டாக வேண்டி வருமே' என்றோ 'இப்படிப் பற்றற்று விழுகை ஒருவர்க்கு ஸித்₃தி₄க்குமோ?' என்றோ இங்கே எம்பெருமானாருக்கு ஸந்தே₃ஹம்.] 'ஆகில் இவ் வர்த்த₂த்தை ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையர் ஸ்ரீபாத₃த்திலே கேளும்' என்ன; இவரும் அங்கே சென்று விண்ணப்பஞ்செய்ய; அவரும் 'ததீ₃யபர்யந்தமாகக்காணீர்' என்றருளிச்செய்தார். [எந்த ப்ரபந்நன் ப₄க₃வதாபி₄மானத்துக்கு விஷயமாகிறானோ அவனுக்கே தானே பழுத்தால் விழுங்கனிபோல் பற்றற்று வீழும் விழுக்காடாகிற ப்ரபத்தி ஏற்பட்டு, எம்பெருமானுடைய அருள் கிடைக்கும் என் பது இந்த ஸந்தே₂ஹங்கள் அனைத்துக்கும் அரையர் அருளிச்செய்த பரிஹாரம்.]

7. வார்த்தாமாலை (95) விவரணம். க்ருமிகண்ட₂னால் திருக் கண்கள் பிடுங்கப்பெற்று அவனுடைய தலைநகரான கங்கைகொண்ட சோழபுரத்திலிருந்து பெரியநம்பி ஸ்ரீரங்க₃த்துக்குத் திரும்பிவரும் வழியில் பெரியநம்பிக்கு ப்ராணாபத்தாயிருக்கும்போது 'சரமத₃சை நேருவதற்குமுன் ஸ்ரீரங்க₃த்துக்குச் சென்றுவிட்டால் நன்றாயிருக்குமே' என்று நம்பி குமாரத்தியான அத்துழாய் தெரிவித்தபோது "இங் கேயே சரமத₃சை நேர்ந்தாலும் எம்பெருமான் அருளாலே பரமபத₃ம் கிடைப்பதில் தட்டில்லை, நாம் வாஹனாதி₃களை வைத்துக்கொண்டு விரைந்து சென்று ஸ்ரீரங்க₃த்துக்குப்போய் ப்ராணனைவிட்டால், மற்றுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களும் இதை முன்மாதிரியாகக்கொண்டு 'ஸ்ரீரங்க₃த்தில் மரணமடைந்தால்தான் மோக்ஷம்' என்று முடிவுகட்டி 'மற்ற இடங்களில் உயிர்நீங்கினால் மோக்ஷம் கிடைக்காது' என்று பயப்படுவார்கள்" என்று கூறி, வழியிலேயே பரமபதமடைந்த செய்தி யைக் கூறுவது இவ்வார்த்தை.

8. வார்த்தாமாலை (736g) விவரணம். "பதிவ்ரதைக்கு மங்க3ள ஸூத்ரம்போன்றது நமக்கு த்3வயம்" என்று பெரியநம்பி அருளிச் செய்வர்.

9. வார்த்தாமாலை (183) வார்த்தை & விவரணம். உடையவர் அப4யப்ரதா3நம் அருளிச்செய்யாநிற்க, பிள்ளையுறங்காவில்லிதா3ஸர் கோ3ஷ்டி2யில் நின்றும் புறப்பட்டு "ஸ்ரீவிபீ4ஷணப்பெருமாள் ஸ்வாபி4மாநத்தைவிட்டுப் பெருமாள் திருவடிகளே தஞ்சமாக 'ஸர்வ லோகஶரண்யாய ராக4வாய' [எல்லா உலகிற்கும் ஶரணமடையத்தக்கவ ராய், மஹாத்மாவான ராக4வரிடத்தில் விபீ4ஷணன் வந்திருப்பதை விரைந்து தெரியப்படுத்துங்கள்] என்று பற்றினவரைக் கல்லுந்தடியுங் கொண்டது பெருமாள் பரிகரம் [ராமனுக்குத் துணைவரான ஸுக்3ரீவன் முதலான வானரஸேனை]; நாம் என்செய்யக்கடவோம்?" என்று ப4யப்பட, உடையவர் அருளிச்செய்தபடி— 'கமுகுண்ணில் வாழை உண்ணும்; எனக்குப் பெரியநம்பியுண்டு; உமக்கு நானுண்டு' என்று அருளிச்செய்தருளினர். ["நெல்லுக்கிறைத்த நீர் வாய்க்கால் வழியோடிப் புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம்" என்கிற ரீதியிலே கமுகு பயிரிடுவோர் அதற்குத் தண்ணீர் பாய்ச்சும் போது அதனருகிலிருக்கும் வாழையும் அத்தண்ணீரை உண்டு வளருவதுபோலே பெரியநம்பி ஸம்ப3ந்த4த்தைப் பார்த்து, பெருமாள் என்னைக் கடாக்ஷிப்பர். என்னோடு ஸம்ப3ந்த4த்தைப் பார்த்து உம்மையும் கடாக்ஷிப்பர். ஆகையால் பெருமாள் கடாக்ஷமாகிற வெள்ளம் நம்மீதும் ஏறிப்பாய்ந்து நம்மையும் உஜ்ஜீவிக்கச்செய்யும் என்று கருத்து.]

10. வார்த்தாமாலை (185) வார்த்தை & விவரணம். ஒருநாள் உடையவரும் முதலிகளும் எழுந்தருளாநிற்க, பெரியநம்பி தண்டனிட, உடையவர் அஞ்ஜலிபண்ணிப்போக, முதலிகள், உடையவரை இதுவென்னென்று கேட்க, அப்போது, 'அவருடைய இஷ்டம் அநுவர்த்திக்கையன்றோ நமக்கு ஸ்வரூபம்' என்று அருளிச்செய்தார், [எம்பெருமான் திருத்துழாயான நித்ய ஸூரியைத் தன் முடியிலே வைத்துக்கொண்டாலும் இசைந்தி ருக்கையே அந்த நித்யஸூரியின் பாரதந்த்ர்ய ஸ்வரூபத்துக்குச் சேர்ந்திருப்பதுபோலே, பெரியநம்பி த3ண்ட3னிட்டதை இசைந்தி ருப்பதே நமக்கு ஸ்வரூபம் என்றபடி. இது ஸ்ரீராமாயணபுருஷர் களில், பெருமாள் நியமனத்தாலே ராஜ்யபா4ரத்தை ஏற்றுக்கொண்ட ஸ்ரீப4ரதாழ்வான் நிலைநிறுத்திய அர்த்த2ம்.]

11. வார்த்தாமாலை (186) வார்த்தை & விவரணம். அநந்தரம் நம்பி ஸ்ரீபாத₂த்திலே சென்றுகேட்க, "ஆளவந்தாரும், முதலிகளும் எழுந்தருளினாற்போலேயிருந்தது; அத்தாலே தண்டனிட்டேன்" என்ன, "இது ஹேதுவாகமாட்டாது" என்று விண்ணப்பஞ் செய்ய, உ "ஆளவந்தார்க்குப் பின்பு அர்த்த₂ஸ்தி₂தி இவர்க்கே உள்ளது; வேறொருவருக்குமில்லை; ஒருவரை த₃ண்ட₃னிடக்கடவதாய் அத்தால் மற்றோரை த₃ண்ட₃னிடுவது" என்று அருளிச்செய்தார். [உ அர்த்த₂ஸ்தி₂தி - ஆசார்யத்வபூர்த்தி. ஆளவந்தாருக்குப் பிறகு ஆசார்யத்வ பூர்த்தி இவர்க்கேயுள்ளது; வேறொருவருக்குமில்லை. ஆளவந்தாரை த₃ண்ட₃னிட விரும்பிய அடியேன் அவரில்லாமையாலே, ஆசார்யத்வபூர்த்தியில் அவரை ஒத்த இவரை த₃ண்ட₃னிட்டேன் என்று கருத்து.]

12. வார்த்தாமாலை (211) வார்த்தை. பெரியநம்பி திருமகளார் அத்துழாய் புக்ககத்திலே இராநிற்க, ஒருநாள் 'தீர்த்த₂மாடத் துணைவரவேணும்' என்று மாமியாருக்கு அருளிச்செய்ய, 'உன் சீதந வெள்ளாட்டியைக் கொண்டுபோ' என்று தடுத்துச்சொல்ல, நம்பி பக்கல் வந்து, 'நம்பீ! என்னை இப்படி சொன்னார்' என்ன, 'நாமறியோம்; உங்கள் ஜீயருக்குச் சொல்லும்' என்ன; இவளும் அங்கே சென்று விண்ணப்பம் செய்ய, அருகேயிருந்த முதலியாண்டானைப் பார்த்து, 'உமக்கு இந்தாரும் அம்மா சீதநவெள்ளாட்டி' என்று திருவுள்ளமாய் 'இவரைக் கொண்டுபோ' என்ன, ஆண்டானும்கூட எழுந்தருளி நீராடப் பண்ணுவித்து, இவருடைய புக்ககத்திலே நின்று தா₃ஸவ்ருத்திகளைச் செய்யத் தொடங்கினார்; இவருடைய புக்ககத்தார் 'இதுவென் ஆண்டான்?' என்ன, 'என்னை வரவிட்ட உடையவரும் எங்கள் நாச்சியாரும் சொன்னது செய்யவேணுமே' என்ன, அவர்களும் நம்பிஸ்ரீபாத₂த்தேறப் போய் 'நம்பீ! முதலியாண்டானை வரவிட்டு இப்படி எங்களை நசிப்பிக்கிறதென்?' என்ன, 'நாம் அறிந்தோமோ? எம்பெருமானாருக்குச் சொல்லுங்கோள்' என்ன, அங்கே சென்று விண்ணப்பஞ்செய்ய, உடையவரும், 'ஆண்டானை அத்துழாய்க்குச் சீதநவடிமையாகக் கொடுத்தோம்; அங்கு உங்களுக்கு நிற்க ப்ரியமன்றாகில் இங்கே நின்று அடிமைசெய்கிறது' என்றருளிச்செய்து அழைப்பித்துக்கொண்டருளினார்.

13. வார்த்தாமாலை 234(5) விவரணம். பொசுங்கின நாற்றமுடைய உணவுக்கு ஆசைப்பட்ட பெருச்சாளி கூண்டிலேயகப்பட்டுத்

துன்புறுவதுபோலே, இவனுக்கு இடரை விளைக்கும் போ4க3ங்களை விரும்பினால் அதற்குரிய உணவு, இருப்பு, படுக்கை முதலானவற்றின் தொடர்பாலே நல்லறிவு கெட்டு, தீய அறிவு உண்டாகி, ஸ்ரீவைஷ்ண வர்களின் திரளிலிருந்து விலக்கப்பட்டுவிடுவான். தலையேபோகும் ஆபத்து வருவதானாலும் முற்கூறியபடி ஆத்மஜ்ஞானத்துக்கு அழிவு பிறவாதபடி நிலையான உறுதிகொண்டவனாயிருக்கவேண்டும். இதற்கு உதா3ஹரணமாயிருந்தவர்கள் — அரசனைத் துரும்பென மதித்து த3ர்ஶனத்துக்காக உயிரைவிட்ட பெரியநம்பியும், த3ர்ஶ னத்தை (கண்ணை)க்கொடுத்த கூரத்தாழ்வானுமாவர்.

14. வார்த்தாமாலை (378)ம் வார்த்தை & விவரணம். பெரிய நம்பியும் திருக்கோட்டியூர் நம்பியும் திருமாலையாண்டானுங்கூடி ஸ்ரீசந்த்3ரபுஷ்கரிணிக்கரையிலே திருப்புன்னைக் கீழே எழுந்தருளி யிருந்து, தங்களாசார்யரான ஆளவந்தார் எழுந்தருளியிருக்கும்படி யையும் அவரருளிச் செய்தருளின நல்வார்த்தைகளையும் நினைத்து அநுப4வித்துக்கொண்டு மிகவும் ஹ்ருஷ்டராய் ஆநந்த3மக்3நராய்க் கொண்டு (இன்பத்தில் மூழ்கியவர்களாய்) எழுந்தருளியிருக்கிறவள விலே, திருவரங்கச் செல்வர் (ப3லி ஸாதிக்கும் பெருமாள்) ப3லி ப்ரஸாதி3ப்பதாக எழுந்தருளிப் புறப்பட, இவர்களுடைய ஸமாதி4 ப4ங்க3ம் (ப4க3வத்3பா4க3வதாசார்யாநுப4வத்துக்குத் தடை) பிறந்து எழுந்திருந்து தண்டனிட வேண்டுகையாலே, "கூட்டங்கலைக்கியார் வந்தார், இற்றைக்கு மேல்பட ஸ்ரீப3லியெம்பெருமானெழுந்தருளாத கோயிலிலே இருக்கக்கடவோம்" என்று ப்ரதிஜ்ஞை பண்ணிக் கொண்டார்கள். (இப்படி மஹாத்மாக்களான இவர்களுக்குத் தடை யாயிருப்பதைப் பார்த்து, திருவரங்கச்செல்வர் தம்மை ப3லிஸாதிக்க எழுந்தருளச்செய்துகொண்டு போகவேண்டாம் என்று நியமித்து விட்டதாகவும் அந்த நியமனம் இன்றளவும் நடப்பதாகவும் கூறுவர்.)

15. வார்த்தாமாலை 441(d) வார்த்தை & விவரணம். 'வித்தா குங்காய் பிஞ்சிலே தெரியும்' என்றார் பெரியநம்பி; [பல மரங்களுக்கு மூலகாரணமாயிருக்கும் விதைக்காயைப் பிஞ்சிலேயே கண்டுபிடித்து விடலாம். அதுபோலே உலகம் வாழவந்தவர் எம்பெருமானார் என் பதை அவருடைய சிறுவயஸ்ஸிலேயே நாங்கள் கண்டுவிட்டோ மென்று கருத்து.]

16. வார்த்தாமாலை 450 வார்த்தையின் இறுதிப்பகுதி (P 503) விவரணம். இவ்வார்த்தையிற் சொன்ன ஏற்றங்கள் ப்3ராஹ்மணரல் லாத ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இருக்கிறது என்று திருவுள்ளம்பற்றியே

பெருமாளாகிற ஸ்ரீராமபிரான் ரிஷிகளைக்காட்டிலும் குஹப்பெருமாளிடமும் வாநரமுதலிகளிடமும் விபீ₄ஷணாழ்வானிடமும் ஈடுபட்டார். நம்பெருமாள் லோகஸாரங்க₃ மஹாமுனியைக்காட்டிலும் திருப்பாணாழ்வாரிடம் ஈடுபட்டார். திருமலையப்பன் முடிமன்னனான தொண்டைமான் சக்கரவர்த்தியைக் காட்டிலும், குயவரான குரும்பறுத்த நம்பியிடம் ஈடுபட்டார். பெரியநம்பி ப்₃ராஹ்மண ஸ்ரீவைஷ்ணவர்களுடைய விரோத₄த்தையும் பொருட்படுத்தாமல் மாறனேரி நம்பிக்கு ப்₃ரஹ்மமேத₄ ஸம்ஸ்காரம் செய்தருளினார். ஆகையால் ப்₃ராஹ்மண ஸ்ரீவைஷ்ணவர்கள் இந்தப் பத்து வார்த்தையையும் அநுஸந்தி₄த்தால் சாத்தாத முதலிகளின் பெருமையை அறிவார்களாகையாலே அவர்களிடம் அபசாரம் ஏற்படாது; எம்பெருமான் திருவடிகள் எளிதில் கிட்டும்—என்று எம்பெருமானார் முதலியாண்டானுக்கு அருளிச் செய்தார்.

17. வார்த்தாமாலை(456) வார்த்தையின் பகுதி. மேலே 1காண்க.

18. திருப்பாவை முதற்பாட்டு ஆறாயிரப்படி. எம்பெருமானாரும் ஸ்ரீவைஷ்ணவர்களுமெழுந்தருளாநிற்கப் பெரியநம்பி தண்டனிட்டுக் கிடந்தார்: 'நம்மை இங்ஙனே செய்தருளிற்றென்?' என்று கேட்க ஆளவந்தாரெழுந்தருளுகிறாரென்றிருந்தேன் என்றருளிச் செய்தார்.

19. பெரிய திருமொழி 3-7. ஆளவந்தார் ஸ்ரீபாத₃த்திலே வர்த்தித்த வைஷ்ணவன் அந்திமஸமயத்தில் பட்ட க்லேசத்தைக் கண்டு பெரியநம்பிக்கும் எம்பெருமானார்க்கும் நடந்த ஸம்வாத₃த்தை நினைப்பது. ['ஸம்வாத₃த்தை' என்ற இடத்தில் 'ஸம்மோஹத்தை' என்று பாட₂ாந்தரம் காண்பதாகத் தெலுங்குலிபி வியாக்கியானத்தில் அச்சிடப்பட்டுள்ளது.]

20. பெரிய திருமொழி 7-4. பெரியநம்பி—ஜந்ம வ்ருத்தாதி₃களால் குறைய நின்றாரொருவர் திருநாட்டுக்கு நடந்தாராய், அவரை அநுக₃மநம் பண்ணி, தீர்த்த₂மாடாதே வந்தெழுந்தருளியிருக்க, இத்தை எம்பெருமானார் கேட்டருளி, பெரியநம்பி பாடே வந்து, "மர்யாதை கிடக்கக் கார்யம் செய்யவேண்டாவோ?" என்ன; "பயிலும் சுடரொளி, நெடுமாற்கடிமை கடலோசையோபாதியோ? சிறிது குறையவாகிலும் ஆசரிக்க வேண்டாவோ?" என்றருளிச் செய்தார்.

21. திருவிருத்தம் நம்பின்னோடு-8. (கச்சியில் கலாபத்தையில்) ஒருநாள் எம்பெருமானார் முதலிகளெல்லாரோடுங்கூட எழுந்தருளி

யிருக்கச்செய்தே திருக்கச்சிநம்பி செய்கிறதென்னென்றாராய்ந்து வருவாரில்லையோ என்ன; கடுக ஒருவரும் நான் போகிறேனென்று எழுந்திருந்தாரில்லை; பிற்றைநாள் விடிவோடே பெரியநம்பி வந்து தாமழைக்கிறபடியே எம்பெருமானாரை அழைத்து 'நான் பெருமாள் கோயிலிலே பெருமாளைத் திருவடிதொழுது வாராநின்றேன்' என்ன; நிஷேதி₄க்கலாம்படி அன்றிறே ப்ரபா₄வமிருப்பது; எழுந்தருளலாகாதோ என்ன; அங்கேபோய் அவரிருக்கிறபடியறிந்துபோரா, திருநாளணித்தாயிருந்தது; போகிறதென்? என்ன, நான் வந்த கார்யம் தலைக்கட்டிற்று; இனித் திருநாளுக்கு நிற்கவொண்ணாது என்ன; இப்படியே போய் வரவல்லாரில்லையோ என்றவிடத்தில் நான் என்று எழுந்திருந்தாரில்லை; 'அத்தாலே இவர்க்கிதுவோ கருத்தென்று போந்தேன்: அது தலைக்கட்டிற்று. இனிப் போகவமையும்' என்றாராம்.

22. பகவத் விஷயம் 3-6-7. (உத்தமர்கட்கு என் செய்வாரே)... ஆயிரத்தளியிலே ராஜா இருக்கச் செய்தே பெரியநம்பியையும் ஆழ்வானையும் நலிந்தானாய், ஆழ்வான் மடியிலே சாய்ந்துகிடக்கச் செய்தே பெரியநம்பி திருநாட்டுக்கு எழுந்தருளினார்; அவ்வளவிலே 'ஒருவருமில்லாதாரை ப்ரதிபத்தி பண்ணக் கடவோம்' என்று திரிகிறார் சிலர் அங்கே வந்து ஆழ்வானைக் கண்டு 'ஒருவனுண்டிறே' என்று போகப்புக, ஒருவரையும் ஒரு குறை சொல்லியறியாதவன், 'வாரிகோள் மாணிகாள்! வைஷ்ணவனுமாய் ஒருவனுமில்லாதான் ஒருவனைத் தேடி ப்ரதிபத்தி பண்ண இருக்கிறிகோளோ நீங்கள்? ஈச்வரனும் ஈச்வர விபூதியும் வைஷ்ணவனுக்குக் கிஞ்சித்கரிக்கவிருக்க, வைஷ்ணவனுமாய் அறவையுமாயிருப்பான் ஒருவனை நீங்கள் எங்கே தேடுவிகோள்!' என்றானாம், [ப்ரதிபத்தி பண்ணுகையாவது—ஸம்ஸ்காரம் செய்கை.]

23. பகவத் விஷயம் 7-10-5. (பலரடியார்முன்பருளிய) கிழக்குத்தை ராஜாக்கள் பொல்லாங்காலே இங்கே நலிவு பிறக்குமளவிற் செய்வதென்? என்று எம்பெருமானார் அத்தை அநுஸந்தி₄த்தருளி, இத்தேசத்தை விடாதே நோக்கிக்கொண்டு கிடந்தோம்; இவ்விடத்துக்கும் அழிவு வரும்படி ஆஸுரவர்க்க₃ம் மேலிடாநின்றது; மேல் செய்ய அடுப்பதென்? என்று பெரியநம்பிக்கு அறிவிக்க, நான் பெருமாளுடைய திருவெல்லையிலே ஒரு ப்ரதக்ஷிணம் வரும்படியாக உம் சிஷ்யர்களிலே ஒருவரைப் போரவிடுவது என்ன; அதுக்காவாரார்? என்ன; என்பின்னே போராநின்றால் ஒருவன் பின்னே போகாநின்றேன் என்று தன்னெஞ்சிற்படாதே சாயைபோலே என்னைப் பின்

செல்வானொருவனாகவேணும் என்ன; அதுக்காவார் ஆர்? என்ன; ஆழ்வானைப் போகவிடலாகாதோ என்றாராம்.

24. ஸ்ரீவசநபூ4ஷணம் 234. வ்யாக்யானம்- அபி4மாநஹேது வான ஜன்மவ்ருத்தாதி3களின்றிக்கே ஆளவந்தார் ஸ்ரீபாத3த்தை யுடையராய் அத்4யாத்மஜ்ஞாந பரிபூர்ணராயிருக்கிற மாறனேரி நம்பி தம்முடைய அந்திமதசையிலே 'ஆளவந்தார் அபி4மானித்தருளின இத்தே3ஹத்தை ப்ரக்ருதி ப3ந்து4க்கள் ஸ்பர்சிக்கில் செய்வதென்?' என்று அதிசங்கைபண்ணி ஸப்3ரஹ்மசாரியான பெரிய நம்பியைப் பார்த்து 'புரோட3ாசத்தை நாய்க்கிடாதே கிடீர்' என்றருளிச்செய்து திருநாட்டுக்கெழுந்தருள, பெரியநம்பியும் அப்படியே பிறர் கையில் காட்டிக்கொடாதே நாமே பள்ளிபடுத்துவந்தெழுந்தருளியிருக்க, இத்தை உடையவர் கேட்டருளி, பெரியநம்பி ஸ்ரீபாத3த்திலே வந்து 'ஜீயா! மர்யாதை கிடக்கக் கார்யஞ்செய்ய வேண்டாவோ? தேவரீர் செய்தருளவேண்டிற்றோ?' என்ன, 'ஆளிட்டந்திதொழவோ? நான் பெருமாளிற்காட்டில் உத்க்ருஷ்டனோ? இவர் பெரியவுடையாரிற் காட்டில் அபக்ருஷ்டரோ? பயிலுஞ்சுடரொளி, நெடுமாற்கடிமை கடலோசையோபாதியோ? ஆழ்வாரருளிச்செய்த அர்த்த2த்தைச் சிறிது குறையவாகிலும் ஆசரிக்க வேண்டாவோ?' என்று (பெரிய நம்பி) அருளிச்செய்த வார்த்தை.

25. ஆசார்யஹ்ருத3ய வ்யாக்யானம் 85. ப்ரஸித்3த4ரான நம்பிகள் மூவரிலும் ப்ரத4ாநரான பெரியநம்பி மாறனேரி நம்பிக்கு...... செய்த புத்ரக்ருத்யமும்.

26. தி3வ்யஸூரி சரிதம். 16-84, 85 ஶ்லோகங்கள். 17-55 முதல் 69 முடிய ஶ்லோகங்கள், 81-82 ஶ்லோகங்கள்.

27. ப்ரபந்நாம்ருதம். 9, 11, 12, 20, 42, 49, 60, 114, 115, 116, 117 அத்யாயப் பகுதிகள்.

28. ஸம்ப்ரதா3ய பரிசுத்தி. ஆளவந்தாருடைய நியோக3த் தாலே (கட்டளையாலே) ஸ்ரீப4ாஷ்யகாரரை அங்கீ3கரித்த பூர்ணரான பெரியநம்பி இவரைத் தமக்கு ஸப்3ரஹ்மசாரிகளான திருக்கோட்டியூர் நம்பி பக்கலிலே அர்த்த2சிக்ஷை பண்ணவும், திருமாலையாண்டான் பக்கலிலே திருவாய்மொழி கேட்கவும், ஆழ்வார் திருவரங்கப்பெருமா ளரையர் பக்கலிலே நல்வார்த்தை கேட்கவும் நியோகி3த்ததும்...... டுபபந்நதமம்,

29. கு₃ருபரம்பரா ஸாரம். பெரியநம்பி ஸ்ரீபாத₃த்தை ஆஸ்ர யித்தவர்கள் அறுவர். அவர்களாகிறார்—எம்பெருமானார், மலைகுனிய நின்றார், ஆரிய ஸ்ரீஸட₂கோபத₃ாஸர், அணியரங்கத்தமுதனார், திருவாய்க்குலமுடையான் ப₄ட்டர், திருக்கச்சிநம்பி. [அணியரங்கத் தமுதனார்—திருவரங்கத்தமுதனாரின் தந்தை]

30. ப்ரமேயரத்னம்—முதல் ப்ரகரணம். பெரியநம்பி சரமதிசையிலே ஆழ்வான் மடியிலே கண்வளர, "கோயிலும் பா₄ஷ்யகாரருமிருக்க, இங்கே ஸரீராவஸானமாவதே" என்று வெறுக்க, "ஒரு பா₄க₃வத னுடையமடியிற்காட்டில் கோயில் உத்க்ருஷ்டமன்று" என்று அருளிச் செய்தார்.

31. ப்ரமேயரத்னம்—முதல் ப்ரகரணம். பெரியநம்பி மாறனேரி நம்பியை ஸம்ஸ்கரித்தார்.

32. ப்ரமேயரத்னம்—2-ம் ப்ரகரணம். பா₄ஷ்யகாரருக்கு இவை யிரண்டுக்கும் (த்₃வயத்துக்கும் திருவாய்மொழிக்கும்) ஸப்₃த₃ப்ரதி பாத₃கர் இருவரும், அர்த்த₂ப்ரதிபாத₃கர் இருவரும்; ஆரென்னில்: பெரியநம்பி த்₃வயத்தை உபதே₃ஸித்தருளினார்; த்₃வயார்த்த₂த்தை அருளிச்செய்தார் திருக்கோட்டியூர்நம்பி. ஆழ்வார் திருவரங்கப்பெரு மாளரையர் திருவாய்மொழி ஓதுவித்தருளினார். திருவாய்மொழியினு டைய அர்த்த₂த்தை அருளிச்செய்தார் திருமாலையாண்டான்.

33. ப்ரமேயரத்னம்—2-ம் ப்ரகரணம். ஆளவந்தாரும் ஸ்தோத் ரத்தை அருளிச்செய்து பெரியநம்பி கையிலே கொடுத்து, பா₄ஷ்ய காரர் பக்கலேறப் போகவிட்டருளினார்.

34. ப்ரமேயரத்னம்—3-வது ப்ரகரணம். "ஆர்த்தனுக்கு (ப்ரபத்தி) ஆஸுவாகப் ப₂லிக்கும்; த்₃ருப்தனுக்கு தே₃ஹாவஸா நத்திலே ப₂லிக்கும்" என்று பெரியநம்பி அருளிச்செய்வர்.

35. வடுகநம்பி அருளிய யதிராஜ வைபவம். பெரியநம்பியை ஆஸ்ரயித்தல். 42 முதல் 45 வரை உள்ள ஸ்லோகங்களின் விவரணம்.

(42) ராமாநுஜரும் பெரியநம்பியை ஆஸ்ரயிப்பதற்காக ஸ்ரீரங்க₃த் திற்குச் செல்கின்றவராய், வழியில் மது₄ராந்தகத்திலே ஸ்ரீபூ₄மி நீளாதே₃விகளோடு கூடிய கருணாகரனையும், ஸீதையோடு கூடிய ஏரிகாத்த ராமபிரானையும் ஸேவித்தார். (43) ஆளவந்தாரின் மற்ற ஸிஷ்யர்களால் (ராமாநுஜரை ஆட்கொள்ளும்படி) நியமிக்கப்பெற்று மது₄ராந்தகத்தை அடைந்திருந்த பெரியநம்பியையும் அங்கேயே

தெய்வச்செயலாலே ஸேவித்து, அவருடைய திருவடித்தாமரை யிணையை வணங்கி, ஆனந்தக்கண்ணீர் நிறைந்தவரானார் ராமாநுஜா சார்யர். (44) ஒருவர்க்கொருவர், தங்களுக்கு ஏற்பட்ட நியமனத்தை விசாரித்து அறிந்து உகந்தபின், அந்த மது₄ராந்தகம் கோயிலிலே, மகிழமரத்தின் நிழலுடைய அவ்விடத்தையே பரமபத₃மாக தியானித்து, பெரியநம்பியை ராமாநுஜர் ஆசார்யராக அடைந்தார். (45) 1. ஶங்க₂ சக்ராங்கனம், 2. ஊர்த்₄வபுண்ட்₃ரத₄ாரணம், 3. த₃ாஸ்யநாமம், 4. யாக₃ஸம்ஸ்காரம், 5. மந்த்ரரத்னமாகிற த்₃வயத்தையும் (திருவஷ்டாக்ஷரம் முதலிய) மற்ற மந்திரங்களையும் பொருளோடு உபதே₃ஶித்தலாகிற மந்த்ரஸம்ஸ்காரம் என்னும் பஞ்சஸம்ஸ்காரங்களை பெரியநம்பி ராமாநுஜருக்கு அங்கேயே செய்தருளினார்.

36, பெரியநம்பி அருளிய திருப்பாணாழ்வார் தனியன்.

ஆபாத₃சூட₃மநுபூ₄ய ஹரிம் ஶயாநம்
மத்₄யே கவேரது₃ஹிதுர் முதி₃தாந்தராத்மா |
அத்₃ரஷ்ட்ருதாம் நயநயோர் விஷயாந்தராணாம்
யோ நிஶ்சிகாய மநவை முநிவாஹநம் தம் ||

[இருகாவிரிகளுக்கு நடுவில் பள்ளிகொண்ட பெரியபெருமாளைத் திருவடிமுதல் திருமுடிவரை அநுப₄வித்துப் பேரானந்தங்கொண்ட நெஞ்சினராய், தம் கண்கள் மற்றொன்றினைக்காணா என்று எவர் அறுதியிட்டாரோ, அந்த முனிவாஹனரை அநுஸந்திக்கிறேன்.]

37. திருநக்ஷத்ர தனியன்.

த₄நுர்ஜ்யேஷ்ட₂ாஸமுத்₃பூ₄தம் யாமுநாங்க்₄ரி ஸமாஶ்ரிதம் |
மஹாபூர்ணம் யதீந்த்₃ராய மந்த்ரரத்நப்ரத₃ம் ப₄ஜே ||

[மார்கழிக் கேட்டையில் அவதரித்தவரும், ஆளவந்தார் திருவடிகளை ஆஶ்ரயித்தவரும், எம்பெருமானாருக்கு த்₃வயத்தை உபதே₃ஶித்தவருமான பெரியநம்பியை தியானிக்கிறேன்.]

38. வாழித்திருநாமம்.

அம்புவியில் பதின்மர்கலை யாய்ந்துரைப்போன் வாழியே
ஆளவந்தார் தாளிணையை யடைந்துய்ந்தோன் வாழியே
உம்பர் தொழு மரங்கேசர்க் குகப்புடையோன் வாழியே
ஓங்கு தனுக்கேட்டைதனி லுதித்தபிரான் வாழியே
வம்பவிழ்தார் வரத ருரை வாழி செய்தான் வாழியே
மாறனேரி நம்பிக்கு வாழ்வளித்தான் வாழியே
எம்பெருமானார் முனிவர்க் கிதமுரைத்தான் வாழியே
எழில் பெரியநம்பி சரணினிதூழி வாழியே.



திருக்கோட்டியூர் நம்பிகள்—திருக்கோஷ்டியூர்

**ஸ்ரீவல்லப$_4$பதா$_3$ம்போ$_4$ஜ தீ$_4$ப$_4$க்த்யம்ருதஸாக$_3$ரம் |**
**ஸ்ரீமத்$_3$கோ$_3$ஷ்டீ$_2$புரீபூர்ணம தே$_3$ஶிகேந்த்$_3$ரம் ப$_4$ஜாமஹே ||**

[ஸ்ரீய:பதியின் திருவடித்தாமரையில் ஞானமும், ப$_4$க்தியுமாகிற அமுதங்களுக்குக் கடல்போன்றவரும், திருக்கோட்டியூர் நம்பியென்னும் பெயருடையவருமான ஆசார்யோத்தமரை ஆஶ்ரயிக்கிறோம்.]

ஆளவந்தார் அவதரித்துப் பதினொரு வருடங்கள் கழிந்தபின் (கி. பி 987) ஸர்வஜித் வருஷத்திலே வைகாசி ரோகிணியில் காஶ்யப கோ₃த்ரத்தில் ருக்மாங்கை₃யில் பெரியாழ்வாருக்குப் பரம ஆப்தரான செல்வநம்பியின் வம்ஶத்திலே ஸ்ரீபுண்ட₃ரீகர் என்னும் நித்யஸூரி யின் அம்ஶமாய், பூர்வஶிக₂ ஸ்ரீவைஷ்ணவ ப்₃ராஹ்மண குலத்திலே குருகேஶர் (திருக்குருகைப்பிரான்) என்னும் திருநாமமுடையவராய் அவதரித்தவர் திருக்கோட்டியூர் நம்பி. நாத₂முநிகளிடமிருந்து உய்யக்கொண்டார் மணக்கால் நம்பிகளின் மூலம் கிடைத்த ப₄விஷ்ய தா₃சார்ய விக்₃ரஹத்தை ஆளவந்தார் தம் சரமத₃ஶையிலே இவ ரிடம் ப்ரஸாதி₃த்து, அது வந்த வழியையும் அருளிச்செய்து, ரஹஸ்யார்த்த₂ங்கள் அனைத்தையும் ஸ்ரீராமாநுஜர்க்கு உபதே₃ஶிக் கும்படியும், நம் த₃ர்ஶநத்தை அவர் திருநாமத்தாலே விளங்க வைக்கும்படியும் நியமித்துச் சென்றார். அதன்படியே மஹாதீ₃ர்க்க₄ த₃ர்ஶியான திருக்கோட்டியூர் நம்பி — அநுவ்ருத்தி ப்ரஸந்நாசார்யர் களுடைய பரம்பரை தம்முடன் முடிவுபெற்று, எம்பெருமானார் தொடங்கி க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யர்களுடைய பரம்பரை வளர வேணும் என்னும் திருவுள்ளத்தாலே ஸ்ரீராமானுஜரைப் பதினெட்டு முறை திருக்கோட்டியூருக்கு நடக்கச் செய்து, வேறு எவர்க்கும் உபதே₃ஶிக்கக் கூடாது என்று ப்ரதிஜ்ஞை பெற்றுக்கொண்டு, அவ ருக்குத் திருமந்த்ரார்த்த₂த்தை உபதே₃ஶித்தார். ஸ்ரீராமானுஜர் தம் காரேய் கருணையினாலே ஆசார்ய நியமனத்தையும் மீறி "நமக்கு நரகம் வந்தாலும் வரட்டும்; பலர் உஜ்ஜீவித்தால் போதும்" என் னும் திருவுள்ளத்துடன் பலர்க்குத் திருமந்த்ரார்த்த₂த்தை உப தே₃ஶித்ததைக் கண்டு "எம்பெருமானாரே!" என்று ஸ்ரீராமானுஜரை அணைத்துக்கொண்டு 'எம்பெருமானார் த₃ர்ஶனம்' என்று எம் பெருமானார் திருநாமத்தாலே த₃ர்ஶநம் விளங்கும்படி அநுக்₃ரஹித்து, அவருக்குத் தாமே சரமஶ்லோகார்த்த₂த்தை உபதே₃ஶித்து, அதைத் தக்க அதி₄காரிகளுக்கு உபதே₃ஶிக்கும்படி நியமித்தருளினார். திரு மாலையாண்டானை எம்பெருமானாருக்குத் திருவாய்மொழி காலக்ஷேபம் சொல்லும்படி நியமித்தவரும் இவரே. ஆளவந்தாரிடம் கேட்காத அர்த்த₂ங்களை விஶ்வாமித்ர ஸ்ருஷ்டியாக எம்பெருமானார் கூறிய தாலே கோபமடைந்து, திருமாலையாண்டான் திருவாய்மொழி கால க்ஷேபத்தை நிறுத்தியபோது, ப₄விஷ்யத₃ாசார்யரான எம்பெருமான ருடைய பெருமையைத் திருமாலையாண்டானுக்கு எடுத்துரைத்து, மறுபடியும் காலக்ஷேபம் தொடங்கும்படி செய்தவரும் இவரே.

ஸ்ரீரங்க₃த்தில் உள்ளார் விஷம் இட்டமையாலே எம்பெருமானார்

உபவாஸம் இருக்கிறுர்' என்று கேள்விப்பட்டுத் திருக்கோட்டியூரி லிருந்து பதறியந்து, எம்பெருமானுர் சிஷ்யர்களில் கிடாம்பியாச்சா னுக்கே எம்பெருமானுர் திருமேனியில் பரிவு உள்ளதை ஸோதி₄த்து அறிந்து, அவரை உடையவர்க்கு மடைப்பள்ளி கைங்கர்யம் செய்யும் படி நியமித்தவரும் இவரே. இவற்றிலிருந்து இவர் பெரிய தீ₃ர்க்க₄ த₃ர்ஸி என்பதும், எம்பெருமானுரிடம் பொங்கும் பரிவை உடையவர் என்பதும், தமக்குக் கெட்டபெயர் ஏற்படுமானுலும், எம்பெருமானு ருக்குச் சிறப்பு விளைவிப்பதில் ஊன்றி நின்றவர் என்பதும், ஆள வந்தார் சிஷ்யர்களில் தலைமை பெற்றவர் என்பதும் விளங்கும்.

இவர் குமாரத்தி தே₃வகிப் பிராட்டியார் சிறந்த ஜ்ஞாநாதி₄கை, எம்பெருமானுருடைய சிஷ்யை. "உந்துமதகளிற்றன்" [திருப்பாவை 18] பாட்டை எம்பெருமானுர் அநுஸந்தி₄த்துக்கொண்டு மாது₄கரத் திற்கு (உஞ்சவ்ருத்திக்கு) எழுந்தருளும்போது திருக்கோட்டியூர் நம்பி திருமாளிகை வாசலிலே "செந்தாமரைக் கையால் சீரார் வளை யொலிப்ப வந்து திறவாய் மகிழ்ந்து" என்று அநுஸந்தி₄த்த வுடன் தே₃வகிப்பிராட்டியார் கதவைத் திறக்க, அவளை நப்பின்னை யாகவே எண்ணித் திருவடியில் விழுந்தார் எம்பெருமானுர் என்னும் ஐதிஹ்யம் — வார்த்தாமாலை முதலான பல ப்ராசீந க்₃ரந்த₂ங்களில் விவரிக்கப்பட்டுள்ளது. நம்பி — தம் குமாரர் தெற்காழ்வானையும் உத்தாரகரான எம்பெருமானுரை ஆஶ்ரயிக்கச் செய்தார்.

## ஐதிஹ்ய நிர்வாஹங்கள்

1. **ஆருயிரப்படி கு₃ருபரம்பராப்ரப₄ாவம்:—** இளையாழ்வார் திருக்கோட்டியூர் நம்பியினிடத்து விசேஷார்த்த₂ங்கேட்டல்: இராமாநுசனும் அங்கேற எழுந்தருளித் திருக்கோட்டியூர் வாஸிக ளான மாற்றிலி சோறிட்டுத் தேசவார்த்தை படைக்குமவர்களை 'நம்பி திருமாளிகை எங்கே?' என்று கேட்டருள, அவர்களும் 'அப்பாலே தோன்றுகிற கூறை' என்று காட்ட, அவ்விடந்தொடங்கி நம்பி திருமாளிகையளவும் தண்டனிட்டுக்கொண்டு எழுந்தருள, அப்போது அவ்வூரில் குற்றமின்றிக் குணம்பெருக்கிக் குருக்களுக்கு அநுகூல ரான ஸத்துக்கள் நம்பிப்ரப₄ாவம் அறிந்தார்கள். உடையவரும் நம்பி ஸ்ரீபாத₃த்திலே சென்று ஸாஷ்டாங்க₃ப்ரணாமம் பண்ணி "தேவரீர் அடியேனுக்கு ரஹஸ்யார்த்த₂ விஸேஷங்களையெல்லாம் ப்ரஸாதி₃த்தருளவேணும்" என்று விண்ணப்பஞ்செய்ய, அவரும் இவருடைய அத்₄யவாஸாயப₃ாஹுளயத்தை அறியவேணுமென்று 'ஆருக்கென் சொல்லுகேன்?' என்று முகங்கொடாமல் எழுந்தருளி

யிருக்க, உடையவரும் மீண்டு கோயிலேற எழுந்தருளினர். பின்பு நம்பியும் கோயிலுக்குத் திருநாள் ஸேவிக்க எழுந்தருளித் தம்மூரே திரும்பி எழுந்தருளுகிறவரை நம்பெருமாள் அருளப்பாடிட்டுத் திரு மாலை திருப்பரியட்டம் தீர்த்தம் ஶடகோபனும் ப்ரஸாதித்து 'நம்மிராமாநுசனுக்கு ரஹஸ்யார்த்தங்களை உபதேஶியும்' என்று அர்ச்சகமுகேந நியமித்தருள, நம்பியும் " நாஸம்வத்ஸரவாஸிநே ப்ரப்ரூயாத் ". [ஒரு வருடமாவது குருஶுஶ்ருஷை செய்யாதவனுக்கு உபதேசம் செய்யலாகாது.] என்றும், "இதம் தே நாதபஸ்காய" என்று தொடங்கி, "ந சாஶுஶ்ருஷவே வாச்யம்" [பரமரஹஸ்யமான இவ்வர்த்தத்தை, தவம் புரியாதவனுக்குச் சொல்லலாகாது; (தவம் புரிந்தவனுயினும் உன்னிடமும் என்னிடமும்) பக்தியில்லாதவனுக்கு ஒருபோதும் உபதேசிக்கக்கூடாது; (தவமும் பக்தியுமிருந்தாலும்) ஶுஶ்ருஷை செய்யாதவனுக்குக் கூறலாகாது; (வேறு எத்தனை குண மிருந்தாலும்) என்னைக்குறித்து அஸூயை கொள்பவனுக்குச் சொல்லவே கூடாது.] என்றும் தேவரீர் நியமித்தருளிற்றே' என்று விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும் 'அப்படியன்று; "ஶரீரம் வஸு விஜ்ஞாநம்" [சரீரத்தையும், பொருளையும், அறிவையும், வஸிக்குமிடத்தையும், செயல்களையும், குணங்களையும், பிராணன்களையும் ஆசாரியனுக்காக எவன் தரிக்கிருனே, அவனே சிஷ்யனெனத்தக்கவன். வேறுவிதமாக இருப்பவன் சீடனல்லன்.] என்று தொடங்கிச் சொல்லப் பட்ட ஶிஷ்யலக்ஷண பூர்த்தியுள்ள உடையவருக்குச் சொல்லக் குறையில்லை' என்று அருளிச்செய்ய, நம்பியும் உடையவரைக் குறித்து 'ஊரேறவாரும்' என்று அருளிச்செய்து எழுந்தருள, இராமாநுசனும் திருக்கோட்டியூர்நம்பி ஸந்நிதிக்குச்செல்ல, அவரும் 'இற்றைக்குப் போய்வாரும்' என்ன, இவரும் மீண்டு கோயிலேற எழுந்தருளினர். இப்படி பதினெட்டு பர்யாயம் எழுந்தருளி ஸ்ரீபாதத்திலே ஸேவித்து நின்றவளவிலும், நம்பியும் இவருடைய த்ருடாத்யவ ஸாயபரீக்ஷார்த்தமாக ஒன்றும் அருளிச்செய்யாமலிருக்க, இராமாநுச னும் பெரிய ஆர்த்தியோடே மீண்டு இளையமலர்க்கண்ணீர் ததும்பக் கோயிலேற எழுந்தருளியிருந்தார். அவ்வளவிலே திருக்கோட்டியூர் நம்பி ஶிஷ்யரான ஒரு ஸ்ரீவைஷ்ணவர் வந்து நம்பெருமாளை ஸேவித்து மீண்டு எழுந்தருளுகிறவர், உடையவர் ஸ்ரீபாதத்திலே ஸேவித்துநிற்க, அவருடனே தம்முடைய ஆர்த்தியெல்லாந் தோன் றும்படி "பூந்துழாய் முடியார்க்குத் தகவல்ல; பொன்னாழிக்கையாருக் குத் தகவல்ல" என்று விண்ணப்பஞ்செய்து போகவிட்டருள, அந்த ஸ்ரீவைஷ்ணவரும் நம்பி திருவடிகளிலே சென்று தண்டனிட்டு அச் செய்தியை விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் 'இத்தனை ஆர்த்தியுள்ள

டாவதே!' என்று உகந்தருளி, 'தண்டும் பவித்ரமுமாகத் தாம் ஒருவரே வருவது' என்று அவரையே மீண்டு இராமாநுசன் பக்கல் போகவிட்டருள, ஸ்ரீவைஷ்ணவரும் உடையவர் திருவடி யேறச்சென்று தண்டனிட்டு நம்பியருளிச்செய்ததை விண்ணப்பஞ்செய்ய, உடையவரும் கேட்டருளி மிகவும் உகப்போடே அவரைத் தண்டனிட்டு, கூரத்தாழ்வானையும் முதலியாண்டானையுங் கூட்டிக்கொண்டு அதித்வரையோடே திருக்கோட்டியூரேறச் சென்று நம்பி திருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பித்து நிற்க, நம்பியும் உடையவரைப் பார்த்து 'உம்மையொருவரையுமன்றோ வரச்சொன்னோம்; இவர்களைக் கொண்டு வருவானென்?' என்று கேட்டருள, உடையவரும் 'தேவரீர் தண்டும் பவித்ரமுமாகவன்றோ வரச்சொல்லி யருளிற்று; இவர்களைத் தண்டும் பவித்ரமுமென்றே கூட்டிக் கொண்டு வந்தேன்' என்று விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் 'தண்டு ஆர்? பவித்ரம் ஆர்?' என்று கேட்டருள, உடையவரும் முதலியாண் டானைக் காட்டி 'இவர் த்ரிதண்டம்', கூரத்தாழ்வானைக் காட்டி 'இவர் பவித்ரம்' என்று அருளிச்செய்ய, நம்பியும் 'ஆகில், இவ் வர்த்தத்தை இவர்களுக்கொழிய மற்றொருவர்க்கும் சொல்லாதே கொள்ளும்' என்று நியமித்தருளித் தம் திருவடிகளைத் தொடுவித்துச் சூளுறவுகொண்டு பரமக்ருபையாலே "ப்ரணவாத்யம் நமோ மத்யம் நாராயண பதாந்திமம் / மந்த்ரமஷ்டாக்ஷரம் வித்யாத் ஸர்வஸித்திகரம் ந்ருணாம் // முமுக்ஷுணாம் ஸதா ஜப்யம் புக்தி முக்திபலப்ரதம் / வைஷ்ணவாநாம் ஸதா ஜப்யம் பக்திஜ்ஞாந ப்ரவர்த்தநம் //" [ப்ரணவத்தை முதலிலும், நமஸ்ஸை நடுவிலும் நாராயண பதத்தைக் கடைசியிலும் கொண்ட அஷ்டாக்ஷர மந்திர மானது மனிதர்களுக்கு எல்லா ஸித்திகளையும் அளிப்பதென்றும், மோக்ஷமடைய விரும்புகிறவர்களால் (ஸாதனமாக) எப்போதும் ஜபிக் கத்தக்கதென்றும், போகமோக்ஷபலங்கள் இரண்டையும் அளிப்ப தென்றும், ப்ரபன்னர்களான வைஷ்ணவர்களுக்கு (ஸ்வயம்ப்ரயோ ஜனமாக) எப்போதும் அநுஸந்திக்கத்தக்கதென்றும், பக்தியையும் ஞானத்தையும் வளர்ப்பதென்றும் அறியவேண்டியது.] என்கிறபடியே எட்டுத் திருவக்ஷரமாய், பதத்ரயாத்மகமாய், ஜ்ஞாநபக்தி வைராக்ய ஜநகமாகையாலே முமுக்ஷுக்களான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு நாத் தழும்பெழ ஸதாநுஸந்தேயமாய், நலந்தருஞ் சொல்லான பெரிய திருமந்த்ரார்த்தத்தை ப்ரஸாதித்தருளினர். இராமாநுசனும் க்ருதார்த்தராய் அதின் மற்றைநாள் அவ்வூரிலெம்பெருமானுடைய தெற் காழ்வார் திருவோலக்கத்திலே அநேகம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அப் பரமரஹஸ்யார்த்தத்தை அருளிச்செய்தருளினர்.

இச்செய்தியை நம்பி கேட்டருளி உடையவரை அழைத்து ' இந்தப் பரமரஹஸ்யார்த்த$_2$த்தை வேறொருவர்க்குஞ் சொல்லாதேகொள்ளும் என்றன்றோ நாம் உமக்குச் சொன்னோம்; அத்தை மறுத்து நீர் அநேகம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குச் சொன்னீரென்று கேட்டோம்' என்று கேட்டருள, உடையவரும் ' உள்ளது ; தேவரீர் திருவடிகளை முன்னிட்டுக்கொண்டு சொன்னேன்' என்று விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் ' ஒருவர்க்குஞ் சொல்லவேண்டாவென்று நியமித்தன்றோ சொன்னோம்; அத்தை மறுத்துச் சொன்ன உமக்குப் ப$_2$லம் எது?' என்று கேட்டருள, உடையவரும் ' ஆசார்யநியமநத்தை மறுத்த எனக்கு நரகமே ப$_2$லம்' என்று அருளிச்செய்ய, இத்தையறிந்திருந்தும் சொல்லுவானேன்?' என்று கேட்டருள, இராமாநுசனும் ' அடியேன் ஒருவனேயன்றோ நரகம்புகுவது? தேவரீர் திருவடிகளை முன்னிட்டுக் கொண்டு சொல்லுகையாலே இவ்வாத்மகோடிகளெல்லாம் தேவரீர் திருவடி ஸம்ப$_3$ந்த$_4$த்தாலே உஜ்ஜீவிப்பர்களென்று சொன்னேன்'' என்று விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் 'இந்தப் பரஸம்ருத்$_3$தி$_4$ நமக்குக் கூடிற்றில்லையே! என்று இவர் பரஸம்ருத்$_3$தி$_4$க்குப்போர உகந்தருளி, ' எம்பெருமானாரே! வாரும்' என்று எடுத்து அணைத்துக் கொண்டு, ' அவரோ நீர்?' என்று அருளிச்செய்து, '' இதுவரையில் இத்த$_3$ர்சநம் பரமவைதி$_3$கஸித்$_3$தா$_4$ந்தம் என்றிருந்தது; இன்று முதல் 'எம்பெருமானார் த$_3$ர்சநம்' என்னுங்கோள்'' என்று எல்லார்க்கும் அருளிச்செய்து, அந்த உகப்பின் மிகுதியாலே ' வாரீர் எம்பெருமானாரே! இன்னமொரு சரமரஹஸ்யார்த்த$_2$விசேஷஞ் சொல்லுவதாக இராநின்றோம்; இவ்வளவிலே நீர் த்ருப்தராயிராநின்றீர்; உம்முடைய அத்$_4$யவஸாயத்தைச் சொல்லிக்காணீர்' என்ன, எம்பெருமானாரும் ''தேவரீர் அருளிச்செய்த அர்த்த$_2$த்துக்கு மேலே ஓரர்த்த$_2$முண்டென்றிருந்தேனாகில் அவிஸ்வாஸியாவேன்; கேளாதிருந்தேனாகில் அருளிச்செய்த அர்த்த$_2$ம் நெஞ்சிற்பட்டதில்லையாம்' என்று விண்ணப்பஞ் செய்ய விரகறியாமல் ஶ்ரோதவ்யஸாபேக்ஷனாய் வ்யாகுலாந்த:கரணனாய் இராநின்றேன்'' என்று விண்ணப்பஞ்செய்ய, நம்பியும், ' இப்போது போய் ஏகாந்தமாக நீர் ஒருவருமே வாரும்' என்று அருளிச் செய்ய, இவரும் கோயிலேற எழுந்தருளினார்.

பின்பு எம்பெருமானாரொருவருமே நம்பி ஸ்ரீபாத$_3$த்தேறச்சென்று தண்டன் ஸமர்ப்பித்து நிற்க, நம்பி இவர் திருக்கையைப் பிடித்துக் கொண்டுபோய் ஏகாந்தமாக மேல்தளத்திலே ஏறிப் படிக்கதவை விழ விட்டு எழுந்தருளியிருந்து, ஒருவர்க்குஞ்சொல்லாதபடி தம் திருவடிகளைத் தொடுவித்துச் சூளுறவுகொண்டு தம்முடைய நிர்ஹேதுக

க்ருபையாலே "ஸர்வகு₃ஹ்யதமம் பூ₄ய: ஶ்ருணு மே பரமம் வச:। இஷ்டோஸி மே த்₃ருட₄மிதி ததோ வக்ஷ்யாமி தே ஹிதம்॥" [அனைத்திலும் ரஹஸ்யமான ப₄க்தியோக விஷயமான மேலான என் வார்த்தையை மறுபடியும் கேள். எனக்கு நீ மிகவும் இனிய வனாகையால் உனக்கு நன்மையைச் சொல்லுகிறேன்] என்று கீ₃தாசார்யன் அருளிச்செய்தாற் போலே நம்பியும் ஸர்வகு₃ஹ்யதம மாய்ப் பரமரஹஸ்யமான சரமஶ்லோகத்தையும் அருளிச்செய்து. அத்தால் ப்ரதிபாதி₃க்கப்படுகிற இதரோபாயத்யாக₃ பூர்வகமான ஸித்₃தே₄ாபாய வைலக்ஷண்யத்தையும் ப்ரஸாதி₃த்து 'இந்தப் பரம ரஹஸ்யார்த்த₂த்தை "இத₃ந்தே நாதபஸ்காய நாப₄க்தாய கதா₃சந। ந சாஶுஶ்ரூஷவே வாச்யம் ந ச மாம் யோऽப்₄யஸூயதி॥" என்று சொல்லுகிறபடியே ப₄க₃வத்₃ விமுக₂ர் முதலான நாஸ்திகர் செவிப் படாதபடி பேணிக்கொண்டு போரும்' என்று நியமித்தருள, இவரும் 'அடியேன் அப்படிப்பட்ட பேருக்குச் சொல்லக்கடவேனல்லேன்; ப₄க₃வத்ப்ரவணரான கூரத்தாழ்வானொருவர்க்கும் சொல்லாதிருக்க வொண்ணாதே!' என்று விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் 'இவ்வர்த்த₂ங்கேட்கைக்கு அதி₄காரமுண்டேயாகிலும் "ஸம்வத்ஸரம் தத₃ர்த்₄ம் வா மாஸத்ரயமதா₂பி வா। பரீக்ஷ்ய விவிதே₄ாபாயை: க்ருபயா நிஸ்ப்ருஹோ வதே₃த்॥" [ஒரு வருடமோ, அதிற் பாதியோ, மூன்று மாதமோ பலவிதமான உபாயங்களால சிஷ்யனைப் பரீக்ஷைசெய்து, கைம்மாறு கருதாமல் கேவலக்ருபையாலே உபதேசிக்கவேண்டியது.] என்கிறபடியே ப₃ஹுப்ரகாரத்தாலும் அவருடைய அத்₄யவஸாயத்தை அறிந்து ஒரு ஸம்வத்ஸரம் ஶுஶ்ரூஷைகொண்டு சொல்லும்' என்று நியமித்தருள, எம்பெருமானாரும் மாயனன்றோதிய வாக்கதனைக் கற்று யதா₂ர்த்த₂ஜ்ஞானமுடையராய், அர்ஜுநன் ஷட்கத்ரயத்திலும் எடுப்புஞ் சாய்ப்புமாய்ப்போந்து இவ்வர்த்த₂ங்கேட்டு த₄ரித்தாப்போலன்றிக்கே 'மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டுசித்தர் கேட்டிருப்பர்' என்கிறபடியே நிர்ப்ப₄ரராய், நிர்ப்ப₄ரத்வாநுஸந்தா₄நத்தாலே வந்த ப்ரீத்யுத்₃த்₄ருதியாலுண்டான ராஜகுலமாஹாத்ம்யத்தோடே புறப்பட்டுக் கோயிலேற எழுந்தருளினார்.

அநந்தரம் கூரத்தாழ்வானும், எம்பெருமானார் ஸ்ரீபாத₃த்திலே தண்டனிட்டு நிற்க, அவரைப் பார்த்தருளி "ஆளவந்தார் நம்மை விஶேஷகடாக்ஷம் பண்ணிப் பேரருளாளரை நோக்கி ப்ரபத்தி பண்ணியருளினது ஸப₂லமாம்படி நம்பி நம்மை வாழ்வித்தருளினார்; கண்டீரோ?" என்று அருளிச்செய்து உடையவரும் ஆழ்வானைக் குறித்து 'உமக்குமுட்பட ஒரு ஸம்வத்ஸரம் ஶுஶ்ரூஷைகொண்டு

அத்₄யவஸாய பௌ₃ஷ்கல்யத்தையறிந்து சொல்லென்று நியமித்தருளி ஞர்' என்ன. ஆழ்வானும் 'ஒரு ஸம்வத்ஸரம் இச்சரீரத்திற்கு நிலே யுண்டோ? இல்லேயோ?" என்று வ்யாகுலாந்தஃகரணராய் விசாரித் தருளிப்பெற்ருல்லது த₄ரியாத பேராசையாலே 'ஸம்வத்ஸர ஶுஶ்ருஷாஸமம் ஆசார்யன் திருமாளிகை வாசலிலே மாஸோபவாஸம் பண்ணுகை' என்று ஶாஸ்த்ரமுண்டாகையாலே அப்படி செய்ய. உடையவரும் இரங்கி ப்ரஸாதி₃த்தருளினுர்.

முதலியாண்டானும் எம்பெருமானுர் திருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பித்து 'அடியேனுக்கும் இவ்வர்த்த₂ம் ப்ரஸாதி₃த்தருளவேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய, உடையவரும் 'ஆழ்வான் ஒருவர்க்குமே நம்பி ஸ்ரீபாத₃த்திலே விண்ணப்பஞ்செய்துகொண்டது; நீர் நம்பி ஸ்ரீபாத₃த்தேறப்போய்க் கேளும்' என்று அருளிச்செய்ய, முதலி யாண்டானும் திருக்கோட்டியூரேற எழுந்தருளி நம்பி ஸ்ரீபாத₃த் திலே தண்டன் ஸமர்ப்பித்துக்கொண்டு ஆறுமாஸம் நின்றவிடத்தி லும் அவர் முகங்கொடாமலிருக்க, பின்பு ஆண்டானும் நம்பி திரு வடிகளிலே ஸேவித்து நிற்க, அவரும் 'ராமாநுஜபரிக்₃ருஹீதனைப் போலேயிருந்தாயீ!' என்ன, 'அடியேன் தா₃ஶரதி₂' என்ன, 'ஆகில் என்?' என்று கேட்டருள, இவரும் 'சரமரஹஸ்யார்த்த₂ம் அடியேனுக் கும் ப்ரஸாதி₃த்தருளவேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் "வித்₃யாமதோ₃ த₄நமத₃ஸ் த்ருதீயோऽபி₄ஜநாந்மத₃: / ஏதே மதா₃வலிப்தாநாமேத ஏவ ஸதாம் த₃மா: //" [மத₃ங்கொண்டவர்க ளுக்கு, வித்யை, தனம், நல்லகுடிப்பிறப்பு எனும் ஒவ்வொன்றும் மத₃த் திற்குக் காரணமாகிறது. இவைகளே நல்லோர்களுக்கு (மத₃த்திற்கு நேர்மாருன) த₃மத்திற்குக் காரணமாகின்றன.] என்கிற இம்மூன்று குறும்பும் போனல் எம்பெருமானுர் தாமே க்ருபைபண்ணி ப்ரஸாதித் தருளுவர்; அஞ்சாதேபோம்' என்று தம் திருவடித்தாமரைகளாலே இவர் உத்தமாங்க₃த்தை பூ₄ஷிக்கும்படி ப்ரஸாதி₃த்து விடைகொடுத் தருளினர், முதலியாண்டானும் மிகவும் ஶமத₃மாத்₃யாத்ம கு₃ணங் களையுடையராய்க் கோயிலுக்கு எழுந்தருளி, உடையவர் ஸ்ரீபாத₃த்தில் த₃ண்ட₃ன் ஸமர்ப்பித்துத் தம்முடைய ஆர்த்தியெல்லாந்தோற்ற நம்பி அருளிச்செய்தபடியை விண்ணப்பஞ்செய்து ஸவிநயராய்நிற்க,உடைய வரும் தம் ஸந்நிதி₄ முதலிகளைப் பார்த்தருளி "ஆண்டான் நம்பி ஸந்நிதி₄யில் ஸ்வரூபஶிக்ஷைபெற்று வந்த வேஷமிருந்தபடி பாருங் கோள்"என்று அருளிச்செய்து மிகவும் உகப்போடே ஆண்டானுக்கும் ஸர்வகு₃ஹ்யதமமான சரம ஶ்லோகார்த்த₂த்தை உபதே₃சித்தருளி அதிஸந்துஷ்டராய் 'இப்போதன்றோ நமக்குத் தண்டும் பவித்ரமும் கைபுகுந்தது' என்று அருளிச்செய்தருளினுர்.

2. ஆறுயிரப்படி கு₃ருபரம்பராப்ரப₄ாவம்:—உடையவர் க₃த்₃யத்ரயமும், நித்யத் திருவாராத₄நப்படியும் அருளிச்செய்து, 'பரப்₃ரஹ்மம் ஸ்ரீமந்நாராயணனே' என்று அறுதியிட்டு த₃ர்ஶநப்ரவர்த்தநம் பண்ணிக்கொண்டு போருகிற காலத்திலே, இவர் ஏழகம் மாது₄கரம் பண்ணும்போது ஸ்த்₃ாநத்தாரை நெருக்கிக்கொண்டு போருகையாலே அவர்களிலே ஒருவர் இவர் மாது₄கரம் பண்ணுகிறவிடத்திலே விஷமிஸ்ராந்நத்தை ப்ரயோகி₃க்கும்படி (நியமித்து வைக்க, அந்த க்₃ருஹஸ்த₂ரும்) ஸ்வஸ்த்ரீயை ப்ரேரிக்க, அவளும் 'கூடாது' என்ன, அவனும் நிர்ப்ப₃ந்தி₄க்க, அவளும் விஷமிஸ்ராந்நத்தை மறித்து ஸமர்ப்பித்து தண்டனிட்டுப்போக, இவரும் 'இதென்?' என்று திகைத்து ப₄ாவமறிந்து ஸக₃ராந்நத்தை ஸாக₃ரக₃ாமிநியான திருக்காவேரியிலே கரைத்துவிட்டு உபவஸித்திருக்க, இச்செய்தியைத் திருக்கோட்டியூர் நம்பி கேட்டருளிக் கோயிலுக்கு எழுந்தருளாநிற்கச் செய்தே மத்₄யாஹ்நகாலத்திலே திருக்காவேரியிலே எழுந்தருளாநிற்க, உடையவரும் முதலிகளுமாக எழுந்தருளி, நம்பி ஸ்ரீபாத₃த்திலே தண்டனிட்டுக்கொண்டு கிடக்க, நம்பியும் அவரை எழுந்திருக்கச் சொல்லாமலிருக்க, கிடாம்பியாச்சானும் 'இதென்ன ஶிஷ்யாசார்யக்ரமந்தான்? கருமுகைமாலையை வெய்யிலிலே பொகடுவார்களோ?' என்று பரிந்தெடுக்க, நம்பியும் 'உம்மைக் காணும் தேடுகிறோம்; திருமேனிக்குப் பரிவர் நீர்தாம்; இன்றுமுதல் தளிகைக்குப்பண்ணி இவர்க்கு ஏகமாது₄கரமாக ப்ரஸாதி₃யும்' என்று நியமித்தருள, கிடாம்பியாச்சானும் அப்படியே பண்ணி ஸாதி₃த்துக்கொண்டு எழுந்தருளியிருந்தார்.

3. வார்த்தாமாலை. 20-ம் வார்த்தை & விவரணம். திருக்கோட்டியூர்நம்பி உடையவருக்கு அருளிச்செய்த வார்த்தை—ப்ரபந்நனுக்குப் பரிஹார்யம் ஆறு; அவையாவன—ஆஶ்ரயணவிரோதி₄, ஶ்ரவணவிரோதி₄, அநுப₄வவிரோதி₄, ஸ்வரூபவிரோதி₄, பரத்வவிரோதி₄, ப்ராப்திவிரோதி₄ என்று. இவற்றில், ஆஶ்ரயணவிரோதி₄யாவது - அஹங்காரமமகாரங்களும், ப₂லாபி₄ஸந்தி₄யும், புருஷகாரத்தை இழக்கையும், பேற்றில் ஸம்ஶயமும்; [நான் எனது என்னும் அஹங்கார மமகாரங்களும், ப்ராக்ருத ப₂லங்களில் விருப்பமும், புருஷகாரமான பிராட்டியையும் ஆசார்யர்களையும் அவமதிப்பதும், ப₄க₃வத்ப்ராப்தி கிடைக்குமோ கிடைக்காதோ என்னும் ஐயமும் ஒரு ஜீவனை எம்பெருமானை ஆஶ்ரயிக்காதபடி தடுத்துவிடும் என்று கருத்து.]

ஸ்ரவணவிரோதி₄யாவது - தே₃வதாந்தரகத₂ாவிஷயங்களிலே அவஶ்யமாகச் செவிதாழ்க்கை; [தன்னை மறந்து மற்ற தெய்வங்களைப் பற்றிய கதைகளைக் கேட்பது, எம்பெருமானைப் பற்றிய பெருமைகளைக் கேட்பதைத் தடுத்துவிடும் என்று கருத்து] அநுப₄வவிரோதி₄யாவது - போ₄க₃த்₃ரவ்யங்கொண்டு புக்கு ஸ்நாநத்₃ரவ்யங்கொண்டு புறப்படுகிற விஷயாநுப₄வேச்சை₂; [சந்த₃னம் புஷ்பங்கள் முதலான போ₄க₃த்₃ரவ்யங்களைத் துணைகொண்டு அநுப₄விக்கப்படுவதாய், அநுப₄வித்தபின் ஶுத்₃தி₄ ஏற்படுவதற்குக் குளிக்கவேண்டியிருக்கும் ஸ்த்ரீபுருஷஸம்போ₄க₃ம் (ஆண் பெண் கலவி) ப்ராக்ருத விஷயங்களில் பற்றை விளைப்பதன்மூலம் ப₄க₃வதநுப₄வத்தைத் தடுத்துவிடுமென்று கருத்து.] ஸ்வரூபவிரோதி₄யாவது - பரதந்த்ரனாக இசையாதே ஸ்வதந்த்ரனாய்க் கைவிஞ்சுகை. [எம்பெருமானுக்குப் பரதந்த்ரனாயிருக்க இசையாமல், தன்னை ஸ்வதந்த்ரனாக நினைத்து அவன் ஆணையை மீறுவது ப₄க₃வத்பாரதந்த்ர்யமாகிற ஸ்வரூபத்தை ஜீவன் அறியாதபடி தடுத்துவிடும் என்று கருத்து] பரத்வவிரோதி₄யாவது - முற்றல் க்ஷேத்ரஜ்ஞரான ப்₃ரஹ்மருத்₃ராதி₃களை ஈஶ்வரராக ப்₄ரமிக்கை; [ஜ்ஞான ஶக்திகளில் நம்மைக் காட்டிலும் சிறிது விஞ்சினவர்களாயிருந்தபோதிலும் ஜீவர்களேயான பிரமன் உருத்திரன் முதலான தெய்வங்களை ஸர்வேஶ்வரராக மயங்குவது எம்பெருமானுடைய பரத்வத்தை அறியாதபடி தடுத்துவிடும் என்று கருத்து.] ப்ராப்திவிரோதி₄யாவது - கேவலரோட்டைச் சேர்த்தி. [எம்பெருமானை இனியவனாக நினையாமல், தம்முடைய ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄த்தைக் கழித்துத்தரும் பாவனனாக மாத்திரம் நினைக்கும் கைவல்யநிஷ்ட₂ரோடு சேருவது, எம்பெருமானைப் பரமபோ₄க்₃யனாக நினைப்பவர்க்கே எளிதான ப₄க₃வத் ப்ராப்தியைத் தடுத்துவிடும் என்று கருத்து.]

4. வார்த்தாமாலை 49 ம் வார்த்தை & விவரணம். 'பொன்னைப் புடமிடப் புடமிட உருச் சிறுகி ஒளி விஞ்சி மாற்று எழுமாபோலே, ஸங்கோசமற்று ஜ்ஞாநவிகாஸமுண்டானவாறே நாய்ச்சிமாருடனே ஸாம்யம் சொல்லலாயிறேயிருப்பது இவ்வாத்மாவுக்கு' என்று திருக்கோட்டியூர்நம்பி அருளிச்செய்வர். [ஜீவாத்ம ஸ்வரூபம் பொன்போலே குற்றமற்றது. தே₃ஹஸம்ப₃ந்த₄த்தாலே அழுக்கேறின பொன்போல் உள்ளது. பொன்னை அக்₃னியிலிட்டுப் பலகால் புடமிட்டால் அழுக்குக்கழன்று உருச்சிறுகினாலும், ஒளிவிஞ்சி, மாற்று அதி₄கமாகிறது. அதுபோலவே ஜீவாத்மாவாகிற பொன் ரஹஸ்யத்ரயஜ்ஞானமாகிற அக்₃னியிலே புடமிடப்பட்டால், தே₃ஹஸம்ப₃ந்த₄த்தால் ஏற்பட்ட

அழுக்குகள் நீங்கி முக்திதசையில் தர்மபூதஜ்ஞானம் முழுமலர்ச்சி பெற்றவுடன் பிராட்டிமாருடன்— (1) அநந்யார்ஹஶேஷத்வம், (2) அநந்யஶரணத்வம், (3) அநந்யபோக்யத்வம், (4) ஸம்ஶ்லேஷத்தில் (கூடினால்) தரிப்பது. (5) விஶ்லேஷத்தில் (பிரிந்தால்) தரியாமை, (6) ததேகநிர்வாஹ்யத்வம் (எம்பெருமானிட்ட வழக்காயிருக்கை) என்னும் ஆறு வகைகளிலே ஜீவனுக்கு ஸாம்யமுண்டாகிறது என்று கருத்து].

5. வார்த்தாமாலை 72-ம் வார்த்தை & விவரணம். பெரியநம்பி வைபவம் ஐதிஹ்யநிர்வாஹம் 6-ல் காண்க.

6. வார்த்தாமாலை 83 (a) வார்த்தை & விவரணம். வ்யாக்ர ஸிம்ஹங்களோபாதி உபாயவேஷம்; யூதபதியான மத்தகஜம் போலே உபேயவேஷம் என்று திருக்கோட்டியூர்நம்பி அருளிச் செய்வர்; [புலியும் சிங்கமும்போலே. எம்பெருமான் உபாயமாம்போது தன்னோடொத்த மற்றொரு உபாயத்தைப் பொறுக்கமாட்டான். யானைக்கூட்டத்திலுள்ள எல்லா யானைகளோடு சேர்ந்து தலைமை யானை போகங்களை அநுபவிப்பதுபோலே. எம்பெருமான் உபேயமாகும்போது பிராட்டிமார் நித்யமுக்தர்கள் முதலானவர்களோடு சேர்ந்தே உபேயமாகிறான். அதாவது— அன்றே முக்தியடைபவனை இவர்கள் அனைவரோடுகூடி எம்பெருமான் அனுபவிக்கிறான் என்று கருத்து.]

7. வார்த்தாமாலை 84-வது விவரணம். ஆளவந்தார் வைபவம் ஐதிஹ்யநிர்வாஹம் 10ல் காண்க.

8. வார்த்தாமாலை 94-வது வார்த்தை & விவரணம். திருக்கோட்டியூர்நம்பி அந்திமதசையிலே "திருவுள்ளக் கருத்தேது?" என்று முதலிகள் கேட்க; 'சக்ரவர்த்தித் திருமகனார் திருவுள்ளக் கருத்தை ஒரு பக்ஷி புண்படுத்திற்று' என்றார். [சக்ரவர்த்தித் திருமகனார் திருவுள்ளக் கருத்தை ஒரு பக்ஷி புண்படுத்துகையாவது — ஸ்ரீராமாயணம் யுத்தகாண்டம் பதினெட்டாவது ஸர்க்கம் "ஶ்ரூயதே ஹி" என்று தொடங்கும் 24-வது ஶ்லோகத்திலும், "ஸ ஹி தம்" என்று தொடங்கும் 25-வது ஶ்லோகத்திலும் சக்கரவர்த்தித்திருமகன் — தன்னுடைய மனைவியைக் கவர்ந்து சென்ற வேடனுக்காகத் தன் உயிரை விட்டு அவனுக்கு விருந்தளித்த ஒரு புறாவின் கதையைச் சொல்லி, "இந்தப் புறாவைப் போலாவது நான் ஶரணாகதரக்ஷணம் செய்ய முடியாதே. நான் இந்த விபீஷணனை ரக்ஷித்தாலும் மனைவியைக் கவர்ந்த இந்த வேடனுக்காக

உயிரை விட்ட இதன் பெருமை எனக்கு ஏற்படாதே. என் உயி ரையே விட்டு ராவணனை ரக்ஷித்தால் அப்பெருமை ஏற்படலாம். அப்படி ஏற்பட்டாலும் எனக்கு முன்னமே ஒரு புறு பெற்றுப்போன பெருமையையே நான் பெற்றேனாவேன்" என்று திருவுள்ளம் புண் பட்ட வ்ருத்தாந்தத்தை நினைக்கிறது. அந்த ஸ்லோகங்களின் அப₄ய ப்ரத₃ான ஸாரத்தில் பெரியவாச்சான்பிள்ளையும் திருவாய் மொழி 6-8-6 ஈட்டில் நம்பிள்ளையும் இவ்வார்த்தையை அருளாளப் பெருமாள் எம்பெருமானாருடையதாக எடுத்திருக்கிறார்கள். திருக் கோட்டியூர் நம்பி, அருளாளப் பெருமாள் எம்பெருமானார் ஆகிய இரு வருமே அந்திம காலத்தில் இப்படி அநுஸந்தி₄த்திருக்கலாம்.]

9. வார்த்தாமாலை 136 (f) விவரணம். "கைக்குழந்தைக்குத் தாய்முலைபோன்றிருப்பது நமக்கு 'த்₃வயம்' " என்று திருக்கோட்டியூர் நம்பி அருளிச்செய்வர்.

10. வார்த்தாமாலை 173 (a) வார்த்தை. திருக்கோட்டியூர்நம்பி திருநாளுக்கெழுந்தருளி திருமாலையாண்டானையும் அழைத்துக் கொண்டு எம்பெருமானார் மடமே எழுந்தருள, அவரும் தண்டன் ஸமர்ப்பிக்க, அவரைப் பார்த்தருளி, 'நீர் திருமாலையாண்டான் பக்கலிலே திருவாய்மொழிக்கு அர்த்த₂ம் கேளும்' என்று இவரைத் திருமாலையாண்டான் திருக்கையிலே காட்டிக்கொடுத்துத் தாம் மீண்டெழுந்தருளினார். திருக்கோட்டியூர்நம்பி கோயிலுக்கெழுந்தருளித் திருமாலையாண்டான் பக்கலிலேயெழுந்தருளி, 'திருவாய்மொழி வ்யாக்₂ யாநம் நடத்தாமல் தவிருவானென்?' என்று கேட்டருள, 'ஆளவந் தார் அருளிச்செய்ய அடியேன் கேட்ட அர்த்த₂மொழிய இவர் சில விஶ்வாமித்ர ஸ்ருஷ்டி பண்ணி ஸ்வகல்பிதமாகச் சொல்லுகையாலே தவிர்ந்தேன்' என்ன, அவர் சொன்ன அர்த்த₂ம் ஏதென்ன; '(அறி யாக்காலத்துள்ளே) என்கிற பாட்டை, உபகார ஸ்ம்ருதியாகவேணு மென்று சொன்னார்' என்ன, 'அதுவும் ஆளவந்தாரருளிச் செய்ய நான் கேட்டேன்' என்று நம்பி அருளிச்செய்து. "ஸாந்தீ₃பன் பக்கலிலே, க்ருஷ்ணன் அத்₄யயநம் பண்ணினாற்போலேகாணும் உம்முடைய பக்கலிலே எம்பெருமானார் திருவாய்மொழி கேட்கிறது; ஆளவந்தார் திருவுள்ளத்திலுண்டான அர்த்த₂மொழிய இவருக்கு ப்ரகாஶியாதென்றிரும்; நீர் இவருக்கு அஜ்ஞாதஜ்ஞாபநம் பண்ணு கிறேமென்றிராதே கொள்ளும்" என்று அருளிச்செய்தருளினார்.

11. வார்த்தாமாலை 199ம் வார்த்தை & விவரணம். திருக் கோட்டியூர்நம்பியை, தம்முடைய தமையனார் "அந்திமத₃ஶையிலே

எனக்குத் தஞ்சமேது?" என்று கேட்க; விரஜைக்கு இக்கரையில் 'உம்மை எங்குநின்றும் வந்தீர்?' என்று கேட்டாருண்டாகில் 'திருக்கோட்டியூர் நம்பி ஸ்ரீபாத₃த்தில் நின்றும் வந்தோம்' என்றும், [இந்த ஸம்ஸார மண்ட₃லத்தில் "திருக்கோட்டியூர் நம்பி ஸ்ரீபாத₃த்தை அடைந்தவன்" என்று சொன்னால் யமன் முதலானோர்கள் நலியமாட்டார்கள் என்று கருத்து.] அக்கரையில் உம்மைக் கேட்டாருண்டாகில், 'திருக்கோட்டியூர் நம்பி தமையனார்' என்றும் சொல்லுமென்று அருளிச்செய்தார். [நித்யவிபூ₄தியில் "நம்பிக்குத் தமையனார்" என்று சொன்னால் "லோகோத்தாரகரான எம்பெருமானாருடைய ஆசார்யருக்கும் தமையனாரா?" என்று அங்குள்ளார் கொண்டாடுவர் என்று கருத்து.]

12. வார்த்தாமாலை 201-ம் வார்த்தை & விவரணம். திருக்கோட்டியூர் நம்பி ஸ்ரீபாத₃த்திலே உடையவர் பதினெட்டு ப்ரகாரம் எழுந்தருள, [திருமந்த்ர சரமஸ்லோகார்த்த₂ங்களைக் கேட்பதற்காக என்று கூட்டிக்கொள்வது.] 'இன்னமும் கேட்கவந்தீரோ?' என்ன, உடையவர், 'ஓருரு இரண்டுருவாந்தனையும் வருவன்' என்றருளிச் செய்தார். [ரஹஸ்யார்த்த₂ங்களைக் கேட்டபின்பும் மறுபடியும் சில உருக்கள் அவற்றைக் கேட்டு உறுதிப்படுத்திக்கொள்வதற்காக இன்னமும் பலமுறை வருவேன் என்று கருத்து.]

13. வார்த்தாமாலை 205ம் வார்த்தை & விவரணம். எம்பெருமானார், திருக்கோட்டியூர் நம்பி ஸ்ரீபாத₃த்திலே நின்று நெடுநாளோடே கூட ஸ்தோத்ரங்கேட்டருளிச் சாத்தினவாறே, 'இனி ஜ்ஞாநகார்யத்தில் உமக்குக் கர்த்தவ்யம் ஒன்றுமில்லை. பெரிய நம்பிக்கு ப்ரியமாகக் கோயில் திருவாராத₄நம் நடத்தலாகாதோ? என்று சரமஸ்லோகார்த்த₂த்தையும் அவ்வளவிலே அருளிச்செய்து விடைகொடுத்தருள, இவரும் விடைகொண்டு திருக்குளக்கரையிலே எழுந்தருள, முதலியாண்டான் எம்பெருமானார் தாழ்த்தருளினவாறே ஸ்ரீபாத₃த்திலே கண்டு வரவேணுமென்று வர, [திருப்பாற்கடல் என்னும் புஷ்கரிணிக்கரையருகிலே எம்பெருமானார் திரும்பிவரும் போது இவரைக் காணவேண்டும் என்று ஸ்ரீரங்க₃த்திலிருந்து எழுந்தருளின முதலியாண்டான் அங்கு எம்பெருமானாரைச் சந்தித்தார் என்று கருத்து.] 'ஓரடி முற்பட்டிரில்லையே: எனக்குச் சரமஸ்லோகமருளிச்செய்த உருகுபத₃த்தோடே எழுந்தருளியிருக்கிறார்; புக்கு தண்டனிட்டு வா' என்று அருளிச்செய்ய, ஆண்டானும் நம்பி ஸ்ரீபாத₃த்திலே சென்று தண்டனிட்டு நிற்க, 'ராமாநுஜ பரிக்₃ரஹீதனைப்போலேயிருந்தாய்' என்று விஷயீகரித்து சரமஸ்லோகார்த்

த3த்தை அருளிச்செய்து [கு3ருபரம்பராப்ரபா4வம் முதலான வற்றில் முதலியாண்டானுக்கு எம்பெருமானாரே சரமச்லோகார்த்த2மும் அருளிச்செய்தார் என்றிருக்கையாலே இங்கு திருக்கோட்டியூர்நம்பி அருளியதாக உள்ளதை 'நம்பி சுருக்கமாகச் சரமச்லோகார்த்த2மும் அருளிச்செய்து விரிவை எம்பெருமானாரிடம் கேட்கும்படி நியமித்தார்' என்று கொள்ளவேண்டும்.] 'உனக்குப் பரிஹரிக்கவேண்டுவது மூன்று படுகுழியுண்டு: அத்தைக்கேள்' என்ன, 'அருளிச்செய்ய லாகாதோ?' என்ன; "வித்3வான், அபி4ஜாதன் [நற்குடிப்பிறந்தவன்], எம்பெருமானார் மருமகன் என்கிறவற்றையெல்லாம் உத்3தே3ச்ய மென்றிராதே. எம்பெருமானார் திருவடிகளில் பண்ணின ஸம்ப3ந்த4மே உனக்கு உத்தாரகஹேது என்றிரு" என்று அருளிச்செய்ய, "அத்யந்தஹேயனாயிருக்கிற என்னையும் தங்களோடே ஒரு கோவையிலே கோப்பதே!" என்று கண்ணும் கண்ணீருமாய் விடைகொண்டு எம்பெருமானார் ஸ்ரீபாத3த்தேறப் போந்தார் என்று பிள்ளையருளிச் செய்வர். [எம்பெருமானார் ஸம்ப3ந்த4மே உத்தாரகமான மோக்ஷ ஹேது என்று தாங்கள் நினைத்திருப்பதுபோலவே மிகத் தாழ்ந்த அடியேனையும் நினைக்கச் சொல்லுவதே! என்று கருத்து.]

14. வார்த்தாமாலை 206-ம் வார்த்தை ஶ்ரீ விவரணம். எம்பெருமானார், "உந்துமதகளிற்றன்" என்கிற பாட்டை அநுஸந்தி4த்துக்கொண்டு திருக்கோட்டியூர்நம்பி திருவாசலிலே (சீரார் வளையொலிப்ப வந்து திறவாய்) என்கிறவிடத்தை அநுஸந்தி4க்கிற போது நம்பிதிருமகளார், திருக்கதவைத் திறந்துகொண்டு புறப்பட, எம்பெருமானார் விழுந்து தண்டனிட்டுக் கிடக்க, நெரித்துக் கொண்டு உள்ளேயோடிப் புக, நம்பி 'இதுவென் பெண்ணே?' என்ன, 'என்னை எம்பெருமானார் தண்டனிட்டார்' என்ன, 'அதுக்கு ப4யப்படவேணுமோ?' என்றருளிச்செய்து, எம்பெருமானார் உள்ளே புக்கருளினவரே. 'இளையாழ்வீர்! இப்போது அநுஸந்தா4நம் உந்துமதகளிற்றனோ?' என்றருளிச்செய்தாரென்று பிள்ளையருளிச் செய்வர்.] [நம்பி திருமகளார்-தேவகிப் பிராட்டியார். திருப்பாவை பதினெட்டாம் பாட்டு 'உந்துமதகளிற்றன்' வ்யாக்2யானத்தில் இறுதியிலுள்ள ஐதிஹ்யத்தின் விவரணம் இந்த வார்த்தை. இந்த வார்த்தையிலும், வடிவழகிய நம்பிதாஸரின் கு3ருபரம்பராப்ரபா4வம் முதலான மற்ற க்3ரந்த2ங்களிலும் திருக்கோட்டியூர் நம்பி திருமாளிகையில் நடந்ததாகச் சொல்லியிருக்கும் இவ்வைதிஹ்யத்தைப் பெரிய நம்பி திருமாளிகையில் அத்துழாய் விஷயமாக நடந்ததாக திருப்பாவை மூவாயிரப்படி அரும்பத உரைகாரர் எழுதியிருப்பது ப்ராமாணிகர்களால் ஆதரிக்கத்தக்கதன்று.]

15. வார்த்தாமாலே 378ம் வார்த்தை & விவரணம். பெரிய நம்பி ஐதிஹ்ய நிர்வாஹம் 14ல் காண்க.

16. வார்த்தமாலே 441 (h) வார்த்தை & விவரணம். 'ஊர் புக்குவருகிறேன்' என்றார் - திருக்கோட்டியூர் நம்பி; [எம்பெருமானு ரிருக்குமிடமே ஊர் (உத்₃தே₃ஶ்யபூ₄மி) என்று திருக்கோட்டியூர் நம்பியின் திருவுள்ளம்.]

17. பெரியாழ்வார் திருமொழி 5-4-3. (தூறுகள்பாய்ந்தனவே) தூறு என்கிறது ஸம்ஸாரிகளையென்று திருக்கோட்டியூர் நம்பியருளிச் செய்வர்.

18. நாச்சியார் திருமொழி 11.5. ஆளவந்தார் மகனார் சொட்டை நம்பி ஓரளவிலே திருக்கோட்டியூர் நம்பியை நெகிழ ஒரு வார்த்தை சொன்னாராய், 'நீ கடக்க வர்த்தி' என்றருளிச்செய்ய, அவரும் படைவீட்டிலே ராஜஸேவை பண்ணித் திரிந்தாராய்.

19. நாச்சியார் திருமொழி 12-2. (அறிந்தொழிந்தார்) இவள் தான் திருக்கோட்டியூர்நம்பியைப்போலே "பகவத்விஷயம் ஒருவரா லறியலாகாது" என்று மறைத்துக்கொடுபோருமவளொருத்தி போலே காணும். நம்பிதாம் ஓருதிண்ணையிலே ஒருவருமறியாத படி ப₄க₃வத்₃ கு₃ணாநுஸந்த₄ானம் பண்ணியிருப்பர்; எம்பெருமானார் எழுந்தருளி "நம்பிமடமேது" என்றுகொண்டு தண்டனிட்ட வாறே, அங்குள்ளார், "எம்பெருமானார் நம் திருக்குருகைப்பிரா னகத்தை நோக்கித் தண்டனிடாநின்றார்" என்ற பின்பிறே நம்பியுடைய ப்ரபா₄வம் அங்குள்ளாரறிந்தது. ஆழ்வானும் ஆண்டா னும் ஓராறு மாஸம் ஸேவித்திருந்த ஸந்நிவேஶத்தைக் கண்டு போரும்போது ஒருவார்த்தை கேட்டுப்போருவர்களே; ஆழ்வான் ஒருவிசை ஆறுமாஸம் ஸேவித்து நின்று போரப்புகாநிற்கச் செய்தே, ஆழ்வானை, "நம்மாழ்வார் 'அடியேனுள்ளான்' என்றபடி கண்டாயே" என்று பணித்தாராம்; "அடியேன் க்ருதார்த்த₂னானேன்" என்று போந் தானும். "என்னுள்ளான்" என்று அஹமர்த்த₂த்தை நிஶ்சயிக்கிற விடத்திலே "அடியேன்" என்று ஶேஷத்வத்தை நிருபகமாகச் சொல்லு கிறதிறே.

20. திருவிருத்தம் 85 வ்யாக்யானம் & ஈடு. (அடியாவி) ஆழ் வான் திருக்கோட்டியூர் நம்பிபாடுநின்றும் வந்தவநந்தரத்திலே "பிள்ளாய்பிள்ளாய்! 'என்னுள்ளான்' என்னவேண்டும்ஸ்த₂ாநே ஆழ்வார் அடியேனுள்ளான் என்றபடி கண்டாயே!" என்று பணித்தார்.

21. திருவிருத்தம் 95 வ்யாக்யானம் & ஈடு. இவ்விடத்திலே ஜீயர் குறியாக அருளிச்செய்வதொரு வார்த்தையுண்டு. திருக்கோட்டியூரிலே பட்டரெழுந்தருளியிருக்கச்செய்தே அங்கே ராமாநுஜதாஸரென்றொரு ஸ்ரீவைஷ்ணவர் 'அடியேனுக்குத் திருவிருத்தமருளிச்செய்யவேணும்' என்ன, 'பெருமாளைப்பிரிந்த சோகத்தாலே நான் ஒன்றுக்கும் க்ஷமனல்ல; ஜீயரே! நீரருளிச்செய்யும்' என்ன, ஜீயநம்மருளிச்செய்துகொடுபோகாநிற்கச்செய்தே 'வளவன் பல்லவதரையரென்று திருக்கோட்டியூர்நம்பி ஸ்ரீபாதத்தையுடையாரொருவர் அநுஸந்தித்துக்கொடுபோந்தாராய் அவர் இப்பாட்டளவிலே வந்தவாறே கண்ணுங்கண்ணீருமாய்ப் புளகிதகாத்ரராயிருக்க. இத்தைக் கண்டு 'பாடிடில் வார்த்தைகள் சொல்லுவது. இனி ப்ரஸங்கித்த மாத்ரத்திலே வித்ததரானீர்!' என்ன; "நம்பி எனக்கு ஹிதமருளிச்செய்த அநந்தரத்திலே 'எம்பெருமான் திருமுன்பே இப்பாட்டை நாள்தோறும் விண்ணப்பஞ்செய்' என்றருளிச்செய்தார். அத்தை இப்போது ஸ்மரித்தேன்" என்ன, 'அவர் இதிலேதேனு மருளிச்செய்யும் வார்த்தை நினைத்திருப்பதுண்டோ' என்ன, 'அது எனக்குப் போகாது. இப்பாசுரமாத்ரத்தை நினைத்திருப்பேன்' என்றாராம். 'நம்பி ஆதரித்த பாட்டாகாதே'யென்று ஐந்தாறுநாழிகைப்போது இத்தையே கொண்டாடியருளிச்செய்தார்.

22. திருவிருத்தம் 99 வ்யாக்யானம் & ஈடு (அல்லாவில்லை) ஒருவிசை திருக்கோட்டியூர் நம்பி திருநாளுக்கு நடந்தவிடத்து இவ்வர்த்தத்தை அருளிச்செய்வதாக ஒரு ஏகாந்த ஸ்தலத்தே எம்பெருமானையுங்கொண்டு புக்காராய் திருப்பணிசெய்வானொருத்தன் அங்கேயுறங்கிக் குறட்டைவிடாநிற்க, அவனைக்கண்டு 'அநர்த்தப்பட்டோம்' என்று அவ்விசைக்குத்தவிர்ந்து. பிற்றைவிசையிலே இத்தை நம்பியருளிச் செய்யக் கேட்டருளி ஆழ்வான் அகத்திலே அமுதுசெய்திருக்கிறளவிலே உச்சிவெய்யிலிலே வந்து புகுந்து நம்பி இவ்வர்த்தத்தை 'ஒருவருக்குஞ்சொல்லாதேகொள்' என்றருளிச்செய்தார்; உனக்கு இது சொல்லாதிருக்கமாட்டேனிறே என்று ஸஹகாரிநைரபேக்ஷ்யத்தை அருளிச்செய்தாரிறே.

23. திருவிருத்தம் 10 ஈடு. ஆளவந்தார் ஐதிஹ்ய நிர்வாஹம் 35ல் காண்க.

24. பகவத்விஷயம் 7-10-11. (நல்கியுரைப்பர் தம் தேவியர்க்கே) சரமஸ்லோகம் ரக்ஷித்துக்கொண்ட அளவுபோலேயிருக்கும் அளவுகளிலே என்றபடி. (அதாவது உடையவர் திருக்கோட்டியூர்நம்பி

தமக்கு அத்யந்தரஹஸ்யமாக உபதேசித்த சரமச்லோகத்தைத் தெற்காழ்வார் திருமுன்பே எடுத்துக் கைநீட்டினவர்களுக்கு அவர்கள் விஷயத்திலே உகப்பாலே அருளிச்செய்தாரிறே] [( ) இவ்வடைப் பினுள் உள்ளது அரும்பதவுரைகளுக்கு முரணாயிருக்கையாலே அதிக பாடமாக ஈட்டுப்பதிப்புகளில் காட்டப்பட்டிருக்கிறது]

25. பகவத்விஷயம் 8-8-2. (அடியேனுள்ளான்) திருக்கோட்டியூர் நம்பி ஸ்ரீபாதத்திலே ஆறுமாஸம் ஆழ்வான் ஸேவித்து நின்று போரப்புக்கவாறே, "ஆழ்வான்! ஆழ்வார் 'அடியேனுள்ளான்' என்றபடி கண்டாயே" என்ன 'க்ருதார்த்தனானேன்' என்று போந்தானும்.

26 முமுக்ஷுப்படி சரமஶ்லோக ப்ரகரணம் அவதாரிகை. இதிலர்த்தம் கேட்கைக்காகவிறே எம்பெருமானார் பதினெட்டு பர்யாயம் திருக்கோட்டியூர் நம்பி பக்கல் எழுந்தருளிற்று. நம்பி தாமும் இதில் அர்த்தத்தினுடைய கௌரவத்தையும் இதுக்கு அதிகாரிகளில்லாமையையும் பார்த்திறே இவருடைய ஆஸ்திக்யாதர பரீக்ஷார்த்தமாகவும் பலகால் நடந்து துவளப்பண்ணி சூளுறவு கொண்டு மாஸோபவாஸங்கொண்டு அருமைப்படுத்தி அருளிச்செய்தருளிற்று.

27. தனிசரமம். 'புருஷார்த்தலாபத்தாலும் உபாய கௌரவாதிஶயத்தாலும் நாம் அதிகாரிகளாய் இவ்வுபாயத்தை அனுஷ்டித்து இப்புருஷார்த்தம் பெறுகையென்பது ஒன்றில்லை என்றும், 'ஸ்வரக்ஷணத்தில் ப்ராப்தியில்லாத நமக்கு ஸ்வாதந்த்ர்ய கர்ப்பமான உபாயங்களை அநுஷ்டிக்க ப்ராப்தியில்லை' என்றும் சோகிக்க...இவ்வளவு பிறந்து சோகித்தவன் அதிகாரி என்கை. "இவ்வளவு பிறவாதவனுக்கு இவ்வர்த்தம் சொல்லுகையாகிறது, பறிப்பான் கையில் சிற்றறுவாள் கொடுக்குமோபாதி" என்று திருக்கோட்டியூர்நம்பி அருளிச்செய்வர்.

28. தனிப்ரணவம். உடையவர்க்குத் திருக்கோட்டியூர் நம்பி காரணத்வம் அருளிச்செய்யச் செய்தே, 'பெற்ற தாயை அறியாமல் பிறந்து வளருவாரைப் போலேயிறே காரணத்வம் காணாமல் கண்டு அநுஸந்திக்கும் தர்ஶநார்த்தங்கள் எல்லாம்' என்றருளிச் செய்தாராம்.

29. ப்ரமேயரத்னம் ப்ரகரணம் 2. பெரியநம்பி வைபவம் ஐதிஹ்ய நிர்வாஹம் 32ல் காண்க.

30 ஷ்டி ப்ரகரணம் 3. "உபாயங்கள் அநர்த்தபயத்தாலே த்யாஜ்யங்கள்" என்று திருக்கோட்டியூர் நம்பி அருளிச்செய்வர்.

31. ஷை ப்ரகரணம்—4. (உபேயயாத2ாத்ம்யம்) "வ்யாக்4ர ஸிம்ஹங்களோபாதி உபாய விரோஷம்; பூத2பதியான மதிதக3ஜத் தோபாதி உபேய விரோஷம்" என்று திருக்கோட்டியூர்நம்பி அருளிச் செய்வர்.

32. ஷை ப்ரகரணம்—4. "ஒரு ப4ாக3வதனுடைய நியமனத்தை வெறுத்தல் பொறுத்தல் செய்கையன்றிக்கே, விஷயப்ரவணனுக்குப் படுக்கைத்தலையில் (காதலியிடம்) விஷயபாருஷ்யம் (சிற்றின்பநுகர்ச்சி யில் சிரமம்) பே4ாக்3யமாமாபோலேயாகிலும் பே4ாக்3யமென்றிருக்கை" என்று திருக்கோட்டியூர்நம்பி அருளிச்செய்வர்.

33. ஷை ப்ரகரணம்—4. "ஆர்த்தப்ரபத்திபண்ணி இக்கரைப் படுகையிலே ஒருப்பட்டிருக்கச் செய்தேயும், மாதாபிதாக்களுங்கூட அநாத3ரிக்கும்படியான ஆர்த்தியையுடைய ஸ்ரீவைஷ்ணவனைக் கண் டால் அவனுடைய ரக்ஷணத்திற் துறுப்பாக இங்கேயிருக்கையிலே ஒருப் படுகை" என்று திருக்கோட்டியூர்நம்பி அருளிச்செய்வர்.

34. ஷை ப்ரகரணம்—4. "ஸ்வீகாரத்தில் அந்வயமில்லாத போது ஸ்வதஸ் ஸர்வஜ்ஞன் ஸ்வத:ப்ரஸாத3த்தாலே சேரவிடான். ஶோகநிவ்ருத்தி பிறவாதபோது சுமையெடுத்துவிடும்" என்று திருக் கோட்டியூர்நம்பி அருளிச்செய்வர்.

35. ஷை ப்ரகரணம்—4. "ஸ்வீகாரத்தில் உபாயத்வபு3த்3தி4யும், பேற்றில் ஸம்ஶயமும் ப்ரதிப3ந்த4கம்" என்று திருக்கோட்டியூர்நம்பி அருளிச்செய்வர்.

36 சரமோபாயநிர்ணயம். ஆளவந்தார் வைப4வம் ஐதிஹ்யநிர் வாஹம் 7-ல் காண்க.

37. சரமோபாய நிர்ணயம். திருக்கோட்டியூரிலே உடையவர் எழுந்தருளி நம்பி பக்கலிலே சரமஶ்லோகம் கேட்கிறபோது, தஞ்ச மான அர்த்த2விஶேஷங்களையெல்லாம் அருளிச்செய்து, "தேவரீரைப் பலகாலும் துவளப்பண்ணினத்தைத் திருவுள்ளத்திலே கொள்ளாதே கிடீர். அர்த்த2த்தின் சீர்மையை வெளியிடவேண்டிச் செய்தோ மித்தனை. தேவரீர் லோக ஸம்ரக்ஷணார்த்த2மாகத் திருவவதரித்தரு ளிற்று. நாத2முனிகளுக்குத் தஞ்சமான விஷயம் தேவரீர். இப்படிப் பட்ட மஹானுப4ாவனோட்டை ஸம்ப3ந்த4முண்டாகப் பெற்றோமென்று மார்பிலே கைபொகட்டு உறங்கலாம்படிக்கு உடலாயிருக்கிறது;

எங்களாசார்யரான ஆளவந்தார் ஸ்ரீபாதத்திலே ஆஶ்ரயித்த முதலிகளிலே இத்தர்ஶநத்தை நிர்வஹிக்க ஆளுண்டாயிருக்கவும், தேவரீரே தர்ஶநப்ரவர்த்தகராகவேணுமென்று பேரருளாளன் ஸன்னிதியிலே ப்ரபத்தி பண்ணியருளித் திருநாட்டுக்கெழுந்தருளுகிறபோது 'இந்த மஹானுபாவனோடே நாலு நாளாகிலும் கலந்து பரிமாறப் பெற்றோமில்லையே' என்று இழவோடே எழுந்தருளினார். ஆகையாலே இத்தர்ஶநம் எம்பெருமானார் தர்ஶநமென்று தேவரீர் திருநாமத்தினாலே நாள்தோறும் கொழுந்துவிட்டு விளங்கப்போகிறது'' என்று அருளிச்செய்தார்.

திருக்கோட்டியூர் நம்பி நியோகத்தாலே உடையவர் திருமாலையாண்டான் பக்கலிலே திருவாய்மொழி நடத்தாநிற்க, இடையிலே ஒரு அர்த்தவ்யத்யாஸத்தாலே வ்யாக்யானம் நடத்தாமல் தவிர, இத்தைத் திருக்கோட்டியூர் நம்பி கேட்டருளிக் கோயிலேற எழுந்தருளினவளவிலே திருமாலையாண்டானை அழைத்தருளி, ''நீர் இவருக்கு அஜ்ஞாதஜ்ஞாபனம் பண்ணுகிறோமென்று இராதேகொள்ளும். இவர்க்கு ஆளவந்தார்க்குத் தோற்றின அர்த்தமொழிய விபரீதார்த்தம் தோற்றாது. ஸாந்தீபநி பக்கலிலே க்ருஷ்ணன் வேதாத்யயநம் பண்ணினாற்போலே காணும் உம்முடைய பக்கலிலே இவர் திருவாய்மொழி கேட்கிறது'' என்றருளிச்செய்து, விட்ட தருவாய் தொடங்கி உடையவர் மடத்திலே திருக்கோட்டியூர் நம்பியும், திருமாலையாண்டானும், பெரியநம்பியுங்கூட எழுந்தருளியிருந்து, திருவாய்மொழி வ்யாக்யானம் நடத்துவியாநிற்க, ''பொலிக பொலிக'' வந்தவாறே, ''கலியும் கெடும்'' என்கிறவிடத்திலே நம்பியும் உடையவரை ஏறவும் இறங்கவும் பார்க்க, உடையவர் அத்தைக்கண்டருளி இதுக்குப் பொருளேதென்று கேட்க, ''தேவரீர் திருவவதரித்து இதினுடைய அர்த்தத்தை வெளியிட்டுக்கொண்டு எழுந்தருளியிருக்கச் செய்தே கேட்கவேணுமோ? ப்ரபன்ன குலோத்தாரகரான தேவரீரே இதுக்குப் பொருள்; அஸ்மதாதிகளைக் கரையேற்றுகைக்காகவன்றோ நித்யவிபூதியில் நின்றும் இங்கே எழுந்தருளிற்று'' என்று அருளிச்செய்தார். இத்தைக் கேட்டிருந்த திருமாலையாண்டானும், ஹர்ஷபுளகிதகாத்ரராய், ''இனி நான் ஆளவந்தாரை அறியேன்; எல்லாப் பேறும் தேவரீரே; தேவரீரோடு உண்டான ஸம்பந்தமே அடியேனுடைய பேற்றுக்கு ஸாதனம்'' என்றருளிச்செய்தார்.

38. **சரமோபாய நிர்ணயம்.** இப்படி ஐவரும் கூடி உடையவர்க்கு ஆசார்யர்களாக இருந்தார்களேயாகிலும், தாங்கள் தஞ்சமாக அறுதியிட்டிருப்பது உடையவரிடத்தில் உத்தாரகத்வத்தையிறே. திருக்

கோட்டியூர் நம்பி தம் குமாரத்தியாரை உடையவர் திருவடிகளிலே ஆஸ்ரயிப்பித்தவளவிலே, உடையவர் அப்பெண்பிள்ளையை ஏகாந்தத்திலே அழைத்தருளித் தம் திருவடிகளிரண்டையும் காட்டி, "பெண்ணே! இத்தையே தஞ்சமாக நினைத்திரு" என்றருளிச்செய்தார். அந்தப் பெண்ணும், "'மேவினேனவன் பொன்னடி மெய்ம்மையே' என்று, தேவரீர் எங்கே எழுந்தருளியிருந்தாலும், அடியேனுக்கு தேவரீருடைய திருவடிகளே தஞ்சம்; தேவரீருக்கு ஆசார்யரான எங்கள் அய்யர் நினைத்திருக்கும்படி கண்டால் தேவரீருக்கு அநந்யார்ஹஶேஷபூ₄தையான அடியேன் நினைத்திருக்கச் சொல்ல வேணுமோ" என்று சொன்னாளாகப் பிள்ளை அருளிச்செய்வர். திருக்கோட்டியூர் நம்பி தம்முடைய அந்திமத₃ஶையிலே குமாரத்தியாரை அழைத்தருளி, "பெண்ணே! நம் ப்ரயாணத்தில் நீ நினைத்திருப்பது என்?" என்ன, "அய்யரே! எங்களாசார்யரான எம்பெருமானாரோடு உண்டான ஸம்ப₃ந்த₄த்தாலே தேவரீருக்குப் பேறு முற்படப் பெற்றதே என்று நினைத்திருக்கின்றேன்" என்ன, அவரும், "வளர்த்ததனுல் பயன் பெற்றேன்" என்று அப்பெண்பிள்ளையை அழைத்தருளி, ஆளவந்தார் ப்ரஸாத₃லப்₃த₄மான விக்₃ரஹத்தை ஸாதி₃த்து உள்ளிற்கருத்தும் வெளியாம்படி 'எம்பெருமானார் திருவடிகளே ஶரணம்' என்று திருநாட்டுக்கெழுந்தருளினார். இத்தால் எம்பெருமானாரிடத்திலே நிஸ்ஸம்ஶயமாக உத்தாரகத்வத்தை அறுதியிட்டார் என்னுமிடம் ஸித்₃த₄மாயிற்றதிறே.

39. பெரியதிருமுடியடைவு. ஸ்ரீபுண்ட₃ரீகாம்ஶ பூ₄தரான திருக்கோட்டியூர் நம்பிக்குத் திருவவதார ஸ்த₂லம் பாண்டிய மண்ட₃லத்தில் திருக்கோட்டியூர். திருநக்ஷத்ரம் ஸர்வஜித் வருஷம் வைகாசி மாஸம் ரோஹிணி. திருநாமங்கள் திருக்கோட்டியூர்நம்பி, கோ₃ஷ்ட₂பூர்ணர், கோ₃ஷ்ட₂புரீஶர், காஶ்யபகோ₃த்ரம், யஜுஶ்ஶாகை, பூர்வஶிகை, க்₃ராஹ்யாயணஸூத்ரம், குமாரர் தெற்காழ்வான். குமாரத்தி தேவகி பிராட்டியார். திருவாராதனம் தெற்காழ்வான். ஆசார்யர் ஆளவந்தார், ஶிஷ்யர் ஸ்ரீப₄ாஷ்யகாரர், இருப்பிடம் திருக்கோட்டியூர். இவர் நூற்றைந்து திருநக்ஷத்திரம் எழுந்தருளியிருந்தார்.

தனியன்

ஸ்ரீவல்லப₄பத₃ாம்போ₄ஜ தீ₄ப₄க்த்யம்ருதஸாக₃ரம் |
ஸ்ரீமத்₃கோ₃ஷ்ட₂புரீபூர்ணம் தே₃ஶிகேந்த்₃ரம் ப₄ஜாமஹே ||

40. வடுகநம்பி அருளிய யதிராஜ வைபவம் 58, 59 ஶ்லோகங்களின் அர்த்தம். 58. அதற்குப்பின், பெரியநம்பியின் நியமனத்தாலே

திருக்கோட்டியூர்நம்பியின் திருவடிகளை வணங்கி, திருமந்த்ரார்த்த₂த்தையும், கீ₃தா சரமஶ்லோகார்த்த₂த்தையும் அவரிடமிருந்து உபதே₃ஶம் பெற்று, திருக்கோட்டியூரிலேயே பலருக்கு அவற்றை உபதே₃ஶித்தார் எம்பெருமானுர். 59. அதற்குப்பின் அத்திருக்கோட்டியூர் நம்பியும் ராமாநுஜரின் திருவுள்ளத்தில் பொங்கும் கருணையை அப்போதே அறிந்து, எதிகட்கிறைவரை 'எம்பெருமானுர்' என்று கொண்டாடி மிகவுகந்தவராய், ''இந்த த₃ர்ஶனம் உமது பெயராலே 'எம்பெருமானுர் தரிசனம்' என்றே பெயர்பெற்று விளங்கும்'' என்று கூறினர். அதனுலேயே இது ஶ்ரீராமாநுஜ த₃ர்ஶனம் என்று பெயர்பெற்று விளங்குகிறது.

41. ஸம்ப்ரதா₃ய பரிசுத்தி. பெரியநம்பி ஐதிஹ்ய நிர்வாஹம் 28-ல் காண்க.

42. குருபரம்பராஸாரம். எம்பெருமானுர் திருக்கோட்டியூர் நம்பி ஶ்ரீபாத₃த்திலே ரஹஸ்யார்த்த₂ங்கள் ஶிக்ஷித்தார்.

43. திவ்யஸூரிசரிதம். 16-84, 85; 18-1 to 3.

44. ப்ரபந்நாம்ருதம். 20 to 24 அத்₄யாயப் பகுதிகள். 114 to 117 அத்₄யாயப் பகுதிகள்.

45. திருக்கோட்டியூர் நம்பி அருளிய பெரியதிருமொழித் தனியன்.

கலயாமி கலித்₄வம்ஸம் கவிம் லோகதி₃வாகரம் ।
யஸ்ய கோ₃பி₄: ப்ரகாஶாபி₄ராவித்₃யம் நிஹதம் தம: ||

46. திருக்கோட்டியூர்நம்பி திருநக்ஷத்ர தனியன்.

வைஶாக₂ரோஹிண்யுதி₃தம் கோ₃ஷ்டி₂பூர்ணம் ஸமாஶ்ரயே ।
சரமஶ்லோக தாத்பர்யம் யதிராஜாய யோऽவத₃த் ॥

47. ஷியார் வாழித்திருநாமம்.

மன்னியசீராளவந்தார் மலர்ப்பதத்தோன் வாழியே
வைகாசி ரோகிணிநாள் வந்துதித்தோன் வாழியே
இன்னிளவஞ்சிக்கினிதுரைத்தான் வாழியே
எம்பெருமானுரெனும்பேரியம்புமவன் வாழியே
தென்னணியாம் காசிபகோத்திரத்துதித்தோன் வாழியே
திருக்குருகைப்பிரானெனும்பேர் திகழவந்தோன் வாழியே
முன்னரரும் பெரும்பூதூர் முனிக்குரைத்தோன் வாழியே
மொழிந்த திருக்கோட்டிநம்பி மூதுலகில் வாழியே.

காசிபன் தன்கோத்திரத்தைக்கருதிவந்தோன் வாழியே
கலையனைத்தால் முன்னவர்க்குக் கதியளித்தோன் வாழியே
மாசறமெய்ப்பொருளெதிக்குவழங்குமவன் வாழியே
வையகமுன் தரிசனத்தால்வாழுமென்றான் வாழியே
ஏசறவேயுகந்தெதியை யெடுத்தணைத்தான் வாழியே
எம்பெருமானாரெனும்பேர் இயம்புமவன் வாழியே
தேசுபுகழ்ச்செல்வன்மொழிதேர்ந்துரைப்போன் வாழியே
திருக்கோட்டியூர்நம்பி சகதலத்தில் வாழியே.

ஈரேழுமூன்றொன்றில்இதமுரைத்தான் வாழியே
ஏற்றமா மாளவந்தாரிணையடியோன் வாழியே
ஈரெழுவருக்கும்பதம் ஈயுமவன் வாழியே
எம்பெருமானாரெனும்பேரியம்புமவன் வாழியே
நாலேழில்நாலாநாள்நாடிவந்தோன் வாழியே
நம்மதுரகவிநிலையை நண்ணினான் வாழியே
நாலெழுநாலெழுத்தை நன்குரைத்தான் வாழியே
நங்கள் திருக்கோட்டிநம்பி நற்பதங்கள் வாழியே.

அல்பகலும் ஆளவந்தார் அடிநினைவோன் வாழியே
அனவரதம் தெற்காழ்வார்க்காட்செய்வோன் வாழியே
வெல்பொருள் வெளியிட, எதியை வெறுத்துகந்தான் வாழியே
மேதினியோருய்வரென்று மெச்சினான்வாழியே
உள்மந்திரமெதிராசர்க்கொளித்துரைத்தான் வாழியே
உந்துமதத்தெதியைஉகந்தணைத்தான் வாழியே
*செல்வநம்பிகுலம் தழைக்கச் செகத்துதித்தான் வாழியே
திருக்கோட்டியூர்நம்பி சகதலத்தில் வாழியே.

48. திருக்கோட்டியூர்நம்பி குமாரர் திருநக்ஷத்ர தனியன்.

கர்க்கடே ஶ்ரவணே ஜாதம் ராமாநுஜ பத₃ாஶ்ரிதம் /
காஶ்யபாந்வய ஸம்பூ₄தம் நாராயண கு₃ரும் ப₄ஜே //

---

* இதிலிருந்து பெரியாழ்வார் காலத்தில் அவருக்குப் பரமாப்தராய், ஸ்ரீவல்லபதேவனெனும் பாண்டிய அரசனுக்கு மந்திரியாயிருந்த செல்வநம்பியின் குலத்தில் உதித்தவர் திருக்கோட்டியூர்நம்பி என விளங்குகிறது.



# திருமாலையாண்டான் வைபவம்





திருமாலையாண்டான் — திருமாலிருஞ்சோலை

ப₄க்தாம்ருதம் வாஞ்சி₂த பாரிஜாதம்
மாலாத₄ரம் யாமுநபாத₃ப₄க்தம்।
ஸ்ரீப₄ாஷ்யகாரார்த்த₂ ஹிதோபதே₃ஶம்
ஸ்ரீஜ்ஞாநபூர்ணம் ஶிரஸா நமாமி॥

[ப₄க்தர்களுக்கு அமுதம் போன்றவராய், கேட்பார்க்குக் கேட்டதைக் கொடுக்கும் கற்பகவ்ருக்ஷமாய், யாமுநாசார்யரின் திருவடியில் அன்பு கொண்டவ்ராய், ஸ்ரீப₄ாஷ்யகாரருக்குத் திருவாய்மொழியின் பொருளாகிற பரமஹிதத்தை உபதே₃சித்தவராய், ஜ்ஞாநபூர்ணர் (நல்லறிவு நிறைந்தவர்) எனும் திருநாமமுடைய திருமாலையாண்டானைத் தலையாலே வணங்குகிறேன்.]

திருக்கோட்டியூர் நம்பி அவதரித்ததற்கு அடுத்த வருஷமான 'ஸர்வதா₃ரி' வருஷத்தில் மாசி மாதம் மக₂ நக்ஷத்திரத்தில் அழகர் கோவிலான திருமாலிருஞ்சோலையில் வாமநர் என்னும் நித்யஸூரியின் அம்ஶமாகப் பூர்வசிகா₂ ஸ்ரீவைஷ்ணவ ப்₃ராஹ்மண குலத்தில் காஸ்யப கோ₃த்ரத்தில் யஜுஶ்ஶாகை₂யில் அவதரித்தவர் திருமாலையாண்டான். திருமாலையாண்டான் என்பது இவர்களுக்கு வம்ஶபரம்பரையாய் வரும் பட்டப்பெயர் இவருடைய திருநாமம் 'ஜ்ஞாநபூர்ணர்' என்பது. இவருடைய மூதாதைகளில் ஒருவர் கண்ணுக்கினியான் ஸ்வாமி என்பவர். ஒருமுறை சில மலையாள மாந்த்ரிகர்கள் வந்து அஞ்ஜநமையைக் கண்ணில் இட்டுக்கொண்டு, அதன் மஹிமையாலே மறைந்துநின்று அழகருடைய தேஜஸ்ஸை ஆகர்ஷித்துக் கொண்டு போக வந்திருந்தனர். அதையறிந்த இந்த ஸ்வாமி இந்த மாந்த்ரிகர்கள் பூ₄லி ப்ரஸாத₃த்தை உண்டே உயிர் த₄ரிக்கிறார்கள் என்று அறிந்து, அந்த ப்ரஸாத₃த்தில் மிளகு அதி₄கமாகச் சேர்க்கும்படி செய்தார். அதை உண்டபின் மாந்த்ரிகர்களுக்குக் கண்ணீர் நிறைந்து அஞ்ஜநமை கரைகையாலே அவர்கள் வெளிப்பட்டு சிக்ஷிக்கப்பட்டார்கள் என்றும், அதனால் அந்த ஸ்வாமிக்குத் 'திருமாலை ஆண்டான்' என்கிற பட்டப்பெயர் ஏற்பட்டு, அழகருக்குப் புரோஹிதராகவும் நியமிக்கப்பெற்று, பரம்பரையாக இன்றளவும் அப்பெருமைகள் அவருடைய வம்ஶஸ்த₂ர்களால் அநுப₄விக்கப்பட்டு வருகிறது என்றும் அத்திருமாளிகைச் சரித்திரம் கூறுகிறது.

திருக்கோட்டியூர் நம்பியின் நியமனத்தால் எம்பெருமானார்க்குத் திருவாய்மொழியின் அர்த்த₂த்தைக் காலக்ஷேபம் ஸாதித்தார் ஜ்ஞாநபூர்ணரான திருமாலையாண்டான். "ஆளவந்தார் அருளிச்செய்தாராகத் திருமாலையாண்டான் அருளிச்செய்யும்படி" என்று ஈடு முதலான வ்யாக்₂யாநங்களில் அடிக்கடி வருவதைக் காணலாம். ஆளவந்தாரிடம் மிகவும் ஈடுபாடுள்ள சிஷ்யராகையாலே, அவர் அருளிச்செய்த அர்த்த₂ங்களுக்கு மாறுபட்டு எம்பெருமானார் சில அர்த்த₂ங்களை விஶ்வாமித்ர ஸ்ருஷ்டியாக அருளிச்செய்வதை இவர் இசைவதில்லை. "அறியாக்காலத்துள்ளே" [திருவாய் 2-3-3] என்ற பாசுரத்தின் வ்யாக்₂யாநத்தில் ஆளவந்தார் அருளிச்செய்த அர்த்த₂த்திற்கு மாறாக எம்பெருமானார் ஓர் அர்த்த₂த்தைச் சொன்னவுடன், திருமாலையாண்டான் கோபங்கொண்டு காலக்ஷேபத்தை நிறுத்திவிட்டார். பின்பு திருக்கோட்டியூர் நம்பியினால் "ஆளவந்தார்க்குத் தோன்றாத அர்த்த₂ம் எம்பெருமானாருக்கு ஸ்பு₂ரிக்காது" என்று தெளிவிக்கப்பெற்றுக் காலக்ஷேபத்தைத் தொடர்ந்து நிறைவுபடுத்

தினர். இவர் தம் குமாரரான சுந்தரத்தோளுடையானை உத்தாரக ரான எம்பெருமானர் திருவடிகளிலே ஆஶ்ரயிக்கச்செய்தார். திருமாலை யாண்டானுடைய வம்ஶத்தில் அவதரித்தவர்களில் யாமுநாசார்யர் என்பவர் வாதிகேஸரி அழகியமணவாளச்சீயருக்கு சிஷ்யராயிருந் தவர்.

**"ஸ்ரீமாலாத₄ரவம்ஶமௌக்திகமணி: கண்டீ₂ரவோ வாதி₃நாம்,**
**நாம்நா யாமுநதே₃ஶிக: கவிவர: பாதஞ்ஜலே பண்டி₃த:"**

[திருமாலையாண்டான் வம்ஶமாகிற கடலில் விளைந்த சிறந்த முத்துப் போன்றவரும், வாதிகளுக்குச் சிங்கம்போன்றவரும், கவிகளில் சிறந்தவரும், யோகஶாஸ்த்ரத்தில் தேர்ந்தவருமாய் இருந்தவர் யாமுநாசார்யர்] என்று புகழ்பெற்றவர் இவர். இவர் அருளிய பல க்ரந்தங்களில் ப்ரமேயரத்நம் தத்வபூ₄ஷணம்—என்னும் இரண்டும் இப்போதும் உள்ளன, திருமாலையாண்டானின் வம்ஶஸ்த₂ர்கள் இன்றளவும் திருமாலிருஞ்சோலையில் அழகருக்குப் புரோஹிதரா யிருந்துகொண்டு விஶேஷகௌரவங்களைப் பெற்றுவருகின்றனர். சித்ராபௌர்ணமியில் அழகர் மதுரைக்கு எழுந்தருளும் மஹோத்ஸ வத்தில் அழகருக்கு முன்னமே திருமாலையாண்டான் வம்ஶஸ்த₂ர் பல்லக்கில் எழுந்தருள்வதைக் காணலாம். "ஆண்டார் பல்லக்கு முன்னே; அழகர் பல்லக்கு பின்னே" என்பது பொதுஜன வழக்கு.

## ஐதிஹ்ய நிர்வாஹங்கள்

1. ஆறுமிரப்படி குருபரம்பராப்ரபாவம். இளையாழ்வார் திருமாலை யாண்டானிடத்துத் திருவாய்மொழி கேட்டல். அநந்தரம் சில நாளைக்குப் பின்பு திருக்கோட்டியூர்நம்பி கோயிலுக்கு எழுந்தருளி நம்பெருமாளை ஸேவித்துப் புறப்பட்டுத் திருமாலையாண்டானையும் அழைத்துக்கொண்டு எம்பெருமானர் மடமேயெழுந்தருளினவாறே உடையவரும் நம்பி ஸ்ரீபாத₃த்திலே ஸேவித்து நிற்க, அவரைக் கடாக்ஷித்து 'நீர் திருமாலையாண்டான் பக்கலிலே திருவாய்மொழிக்கு அர்த்த₂ம் கேளும்' என்று உடையவரை அவர் திருக்கையிலே காட்டிக் கொடுத்தருளித் தாம் மீண்டு திருக்கோட்டியூரேற எழுந்தருளினர்.

திருமாலையாண்டானும் நம்பி அருளிச்செய்தபடியே திருவாய் மொழி தொடங்கி நடத்தாநிற்க, ஆளவந்தார் அருளிச்செய்தபடி ஆண்டான் நிர்வஹித்ததொழியப் பாட்டுக்கள்தோறும் சில அர்த்த₂ விஶேஷங்களை ப்ரதிபாதி₃த்து உடையவர் அருளிச்செய்ய, 'இது ஆளவந்தார் அருளிச்செய்யக் கேட்டிலோம்' என்று அருளிச்செய்தருளி,

"அறியாக் காலத்துள்ளே" என்கிற பாட்டுக்கு 'அறிவு நடையாடாத தஶையிலே ஸம்பந்தஜ்ஞாநத்தைப் பிறப்பித்து பிறந்த ஜ்ஞாநத்தை அழிக்கக்கடவதான தேஹஸம்பந்தத்தோடே பின்னையும் வைத்தாய் என்கிற இழவாலே அருளிச்செய்கிறார்' என்று திருமாலையாண்டான் அருளிச்செய்ய, உடையவரும் கேட்டருளி 'முன்னிற் பாட்டுக்களும் பின்னிற்பாட்டுக்களும் பெரிய ப்ரீதியோடே நடவாநிற்க, நடுவே அப்ரீதிதோற்றச் சொல்லுமது சேராது; ஆகையாலே இங்ஙனேயாமித்தனை:— "அறியா மாமாயத்தடியேனை அறியாக் காலத்துள்ளே அடிமைக்கண் அன்புசெய்வித்து வைத்தாயால்" என்று அருளிச்செய்கிறார்' என்று இத்தையும் ஒரு உபகாரஸ்ம்ருதி பரமாக்கி அருளிச்செய்தவாறே, 'இது விஶ்வாமித்ர ஸ்ருஷ்டி, ஆளவந்தார் அருளிச்செய்யக் கேட்டிலோம்' என்று திருவாய்மொழிக்கு அர்த்தமருளிச்செய்கை தவிர்ந்திருக்க, திருக்கோட்டியூர்நம்பி இத்தைக்கேட்டருளிக் கோயிலிலே திருமாலையாண்டான் பக்கலெழுந்தருளி, "திருவாய்மொழி நடக்கிறதோ?" என்று கேட்டருள, ஆண்டானும் 'அடியேன் ஆளவந்தார்பக்கல் கேட்ட அர்த்தமொழிய இவர் வேறே சில அர்த்தங்களை ஸ்வகல்பிதமாகச் சொல்லுகையாலே தவிர்ந்தேன்' என்ன, நம்பியும் 'அவர் சொன்ன அர்த்தமேது?' என்ன, ஆண்டானும் '"அறியாக்காலத்துள்ளே" என்கிற பாட்டுக்கு உபகார ஸ்ம்ருதியாகவேணுமென்கிறார்' என்ன 'இவ்வர்த்தமும் ஆளவந்தார் அருளிச்செய்ய நாம் கேட்டிருக்கிறோம்' என்று நம்பி அருளிச்செய்து "ஸாந்தீபநிபக்கலிலே க்ருஷ்ணன் வேதாத்யயநம் பண்ணினாற்போலே காணும் உம்முடைய பக்கலிலே எம்பெருமானார் திருவாய்மொழி கேட்கிறதும்; ஆளவந்தார் திருவுள்ளத்திலுள்ள அர்த்தமொழிய இவர்க்கு வேறொன்றும் ப்ரகாசியாது; இவர்க்கு நீர் அஜ்ஞாதஜ்ஞாபநம் பண்ணுகிறோமென்று இராதே கொள்ளும்" என்று அருளிச்செய்து திருமாலையாண்டானையும், பெரிய நம்பியையும் கூட்டிக்கொண்டு எம்பெருமானார் மடமே யெழுந்தருள, உடையவரும் அதிப்ரீதியுடனே தானுந் தடக்கையும் கூப்பி இவர்கள் திருவடிகளிலே ஸேவித்து நிற்க, இவர்களும் 'திருவாய்மொழி விட்ட தருவாய் தொடங்கி நீரே பலகால் அநுவர்த்தித்தாகிலும் ப்ரபந்தத்தைத் தலைக்கட்டும்' என்று ஆண்டானுக்கு அருளிச்செய்தார்கள். பின்னையும் திருவாய்மொழி தொடங்கி நடவாநிற்கச் செய்தே, மீண்டும் ஒரு அர்த்தப்ரஸ்தாவத்திலே ஆண்டான் ப்ரதிபாதித்த அர்த்தங் கேட்டு "ஆளவந்தார் இப்படி அருளிச் செய்யார்" என்று உடையவர் விண்ணப்பஞ்செய்ய, ஆண்டானும்

"நீர் ஆளவந்தாரைக் கண்ணிலும் காணாதிருக்க இப்படி அருளிச் செய்யார் என்கைக்கு நிதா₃நம் என்?" என்று கேட்டருள, உடைய வரும் "நான் ஆளவந்தாருக்கு ஏகலவ்யனன்றோ?" என்று விண்ணப் பஞ்செய்ய, ஆண்டானும் 'திருக்கோட்டியூர் நம்பி நமக்கு உரைத்தது ஒத்திருந்தது; இதுவும் ஒரு திருவவதாரம்: ஆளவந்தார் பக்கல் கேளாத அர்த்த₂மெல்லாம் இங்கே கேட்டோம்' என்று இவரைத் தண்டனிட்டருளினர்.

2. பெரியதிருமுடியடைவு. வாமநாம்ஶ பூ₄தரான திருமாலே யாண்டானுக்குத் திருவவதார ஸ்த₂லம் அழகர்கோயில். திருநக்ஷத்ரம் ஸர்வத₄ாரி வருஷம் மாசி மாஸத்தில் மக₂ம். திருநாமங்கள் மாலா த₄ரர். ஸ்ரீஜ்ஞாநபூர்ணர், குமாரர் சுந்தரத்தோளுடையார், திருவா ராத₄னம் அழகர். ஆசார்யர் ஆளவந்தார். சிஷ்யர் ஸ்ரீபா₄ஷ்யகாரர். இருப்பிடம் அழகர்கோயில்,

**இவர்க்குத் தனியன்**

> ப₄க்தாம்ருதம் வாஞ்சி₂த பாரிஜாதம்
> மாலாத₄ரம் யாமுநபாத₃ப₄க்தம் |
> ஸ்ரீபா₄ஷ்யகாரரார்த்த₂ ஹிதோபதே₃ஶம்
> ஸ்ரீஜ்ஞாநபூர்ணம் ஶிரஸா நமாமி ||

3. வார்த்தாமாலை 272 பெரியநம்பி ஐதிஹ்ய நிர்வாஹம் 6-ல் காண்க.

4. வார்த்தாமாலை 136(e) விவரணம். "பசியால் வருந்திய வனுக்கு அம்ருதபானம் போலேயிருக்கிறது த்₃வயம்" என்று திருமாலே யாண்டான் அருளிச்செய்வர்.

5. வார்த்தாமாலை 173(a) திருக்கோட்டியூர் நம்பி ஐதிஹ்ய நிர்வாஹம் 10-ல் காண்க.

6. வார்த்தாமாலை 189 வார்த்தை. திருமாலையாண்டான் ஸ்ரீபாத₃த்திலே எம்பெருமானார் திருவாய்மொழி கேளாநிற்க, ஆள வந்தாரருளிச்செய்தாராகத் திருமாலையாண்டான் நிர்வஹித்ததொழிய, பாட்டுக்கள்தோறும் சில அர்த்த₂ங்களை ப்ரதிபாதி₃த்து 'இங்ஙனே யாணலோ?' என்று உடையவரருளிச்செய்ய; 'இப்படி ஆளவந்தா ரருளிச்செய்யக் கேட்டறியேன்' என்று திருமாலையாண்டான் அருளிச் செய்து இங்ஙனே நடவாநிற்கச்செய்தே, 'அறியாக்காலத்துள்ளே' என்கிற பாட்டுக்கு "'அறிவு நடையாடாத த₃ஶையிலே ஸம்ப₃ந்த₄ ஜ்ஞாநத்தைப் பிறப்பித்து ஜ்ஞாநத்தை அழிக்கக்கடவதான தே₃ஹ

ஸம்ப₂ந்த₄த்தோடே பின்னையும் வைத்தாய்' என்கிற இழவாலே அருளிச்செய்கிறார்'' என்று திருமாலையாண்டானருளிச்செய்ய; இத்தை எம்பெருமானார் கேட்டருளி, "முன்னிற்பாட்டுக்களும் பின்னிற் பாட்டுக்களும் பெரிய ப்ரீதியோடே நடவாநிற்க, நடுவே அப்ரீதி தோற்றச் சொல்லுமது சேராது; இங்ஙனேயாமித்தனை;—(அறியாமா மாயத்து அடியேனை - அறியாக்காலத்துள்ளே அடிமைக்கண் அன்பு செய்வித்து - வைத்தாயால்) என்கிறார் என்று, இத்தையும் ஒருபகார மாக்கி அருளிச்செய்கிறார்'' என்று உடையவர் விண்ணப்பஞ்செய்ய, 'இது விஶ்வாமித்ரஸ்ருஷ்டி. ஆளவந்தார் அருளிச்செய்யக் கேட்டறி யோம்' என்று திருமாலையாண்டான் திருவாய்மொழி அருளிச்செய்யத் தவிர்ந்தார்.

7. வார்த்தாமாலை 378 வார்த்தை & விவரணம். பெரியநம்பி ஐதிஹ்ய நிர்வாஹம் 14-ல் காண்க.

8. வார்த்தாமாலை 392 வார்த்தை & விவரணம். திருமாலை யாண்டான் அருளிச்செய்யும்படி:— நாம் ப₄க₃வத்₃விஷயம் சொல்லு கிறோமென்றால் ஸம்ஸாரத்தில் ஆளில்லை; அதெங்ஙனேயென்னில்:— ஒரு பாக்கைப்புதைத்து அது உருவாந்தனையும் செல்லத் தலையாலே எருச்சுமந்து ரக்ஷித்து அதினருகே கூரைகட்டி, பதினாருட்டைக்காலம் காத்துக்கிடந்தால் கடைவழி ஒரு கொட்டைப்பாக்காயிற்றுக் கிடைப் பது; அதுபோலன்றிக்கே, இழக்கிறது ஹேயமான ஸம்ஸாரத்தை, பெறுகிறது - விலக்ஷணமான பரமபத₃த்தை; இதுக்குடலாக ஒரு வார்த்தை அருளிச்செய்த ஆசார்யன் திருவடிகளிலே ஒருகாலும் க்ருதஜ்ஞராகாத ஸம்ஸாரிகளுக்கு நாம் எத்தைச் சொல்லுவது? என்று வெறுத்தார். ("ஒரு பாக்கு மரத்தைப் பயிரிடுவதற்குப் பதினாருண்டு காலம் பாடுபட்டு மரத்தை உருவாக்கிய பின்பும், பெறும் ப₂லன் மிக அல்பமாயிருக்கிறது. மிகத் தாழ்ந்ததான இஸ் ஸம்ஸாரத்தைப் போக்கி மிகச் சிறந்ததான பரமபத₃த்தைத் தருவ தற்கு உறுப்பாக த்₃வயத்தை அருளிச்செய்த ஆசார்யன் திருவடிகளில் எப்போதுமே நன்றியில்லாத ஸம்ஸாரிகளுக்கு எதைச் சொல்லி என்ன பயன் விளையப்போகிறது?" என்று எம்பெருமானாரின் ஆசார்யர் களுள் ஒருவரான திருமாலையாண்டான் வெறுத்து அருளிச்செய்த வார்த்தை இது.)

9. வார்த்தாமாலை 441(e) வார்த்தை & விவரணம். 'இதொரு திருவவதாரமோ?' என்றார் திருமாலையாண்டான். [தாம் ஆளவந் தாரிடம் கேளாத அர்த்த₂ங்களையும், ஆளவந்தார் திருவுள்ளமறிந்து

எம்பெருமானுர் அருளிச்செய்கிருர் என்று திருக்கோட்டியூர் நம்பி மூலமாக அறிந்து, திருமாலையாண்டான் அவரை ஒரு அவதார புருஷராக அறுதியிட்டார் என்று கருத்து.]

10. நாச்சியார் திருமொழி 11-6 வ்யாக்யானம். (என்னித்யாதி,) திருமாலையாண்டான், "ப்ரக்ருதி ப்ராக்ருதங்களை த்யாஜ்யமென்று கேட்டுப் போராநிற்கச்செய்தேயும், இத்தை விடவேண்டியிருக்கிறதில்லை, ஆளவந்தார் ஸ்ரீபாதத்தை ஆஶ்ரயிக்கைக் குறுப்பாமென்று ஆதரியாநின்றேன்" என்ருராம்.

11. பகவத் விஷயம் ஈடு 1-4-3. (கள்வர்க்கு) "வஞ்சகர்க்கு" என்று திருமாலையாண்டான் நிர்வஹிக்கும்படி. எம்பெருமானுர் "ஒன்றைநினைத்து ஒன்றைச் செய்தவர்க்கு" என்றருளிச்செய்வர். (இவ்விஷயமே ஆளவந்தார் ஐதிஹ்ய நிர்வாஹம் 74-லிலும் வந்துள்ளது.)

12. பகவத் விஷயம் 2-3-1. ஆளவந்தார் ஐதிஹ்ய நிர்வாஹம் 41-ல் காண்க.

13. பகவத் விஷயம் 2-3-3. ஆளவந்தார் ஐதிஹ்ய நிர்வாஹம் 42-ல் காண்க.

14. பகவத் விஷயம் 2-5-1. ஆளவந்தார் ஐதிஹ்ய நிர்வாஹம் 43-ல் காண்க.

15. பகவத் விஷயம் 2-7-5. திருமாலையாண்டானேடே எம்பெருமானுர் திருவாய்மொழி கேட்டருளுகிற நாளில், பாட்டுக்கள் தோறுஞ் சில வார்த்தைகளை அருளிச்செய்து "இது அர்த்தமானுலோ" என்ருல், "இது விஶ்வாமித்ரஸ்ருஷ்டி. ஆளவந்தார் அருளிச்செய்யக் கேட்டறியேன்" என்று பணிக்குமாம் ஆண்டான்; ஆண்டான் "இப்பாட்டுக்கு விஶ்வாமித்ரஸ்ருஷ்டி வேண்டாவாயிருந்ததீ" என்ன, "இப்பாட்டால்—தன் அவயவ ஸௌந்தர்யத்தாலே என்னைத் தனக்காக்கினன் என்கிருர்" என்றருளிச்செய்தருளினுராம். அதுவுங் கிடக்க, பட்டருளிச்செய்வதொன்றுண்டு—"ஆழ்வாரையும் ஆழ்வார் பரிகரத்தையும் விஷயீகரித்து, அத்தாலே திருமேனியிற்பிறந்த ஔஜ்ஜ்வல்யத்தைச் சொல்லுகிறது" என்று.

16. பகவத் விஷயம் 2-10 ப்ரவேசம். ஆளவந்தார் ஐதிஹ்ய நிர்வாஹம் 47-ல் காண்க.

17. பகவத் விஷயம் 5.1.9. ஆளவந்தார் ஐதிஹ்ய நிர்வாஹம் 51-ல் காண்க.

18. பகவத் விஷயம் 5-10.4. ஆளவந்தார் ஐதிஹ்ய நிர்வாஹம் 54-ல் காண்க.

19. பகவத் விஷயம் 6.1-1. ஆளவந்தார் ஐதிஹ்ய நிர்வாஹம் 56-ல் காண்க.

20. பகவத் விஷயம் 7-2-10 (மூவுலகு இத்யாதி,) மூவுலகாளியே! கடிகமழ்கொன்றைச் சடையனே! நான்முகக்கடவுளே! என்னும் வடிவுடைவானோர்க்குத் தலைவனே என்னும்—என்று திருமாலையாண்டான் வையதிகரண்யமாக்கி நிர்வஹிக்கும்; என்னும்'என்னுமது என்னுமவராய். எம்பெருமானார் கேட்டருளி, ஸாமாநாதிகரண்யத்தாலே அருளிச்செய்தருளினார். த்ரைலோக்யத்துக்கும் கடவனான இந்த்ரனுக்கு அந்தர்யாமியாய் நின்று அவனுடைய அதிகாரத்தை நிர்வஹிக்கிறவனே! என்னும். பரிமளத்தையுடைய கொன்றையை ஜடையிலேயுடைய ருத்ரனுக்கு அந்தர்யாமியாய் நின்று அவனுடைய பதத்தை நிர்வஹிக்கிறவனே என்னும். அவர்களோடு இவ்வருகுள்ளாரோடு வாசியற எல்லார்க்கும் நிர்வாஹகனுமிருக்கிற சதுர்முகனுகிற தேவதைக்கு அந்தர்யாமியானவனே! என்னும்.

21. பகவத் விஷயம் 8-7.3. (இதுவல்லால் இத்யாதி,)இதுக்குத் திருமாலையாண்டான் பணிக்கும்படி - நாட்டார் ஐஸ்வர்யத்தில் தலையாகச்சொல்லுவது த்ரைலோக்யைஸ்வர்யத்தையிறே; அதுவும் எனக்கு ஒரு சரக்கல்லவென்கிறார் என்று. எம்பெருமானார் அருளிச்செய்யும்படி - என்னுடைய ஹ்ருதயத்திலே புகுந்து எழுந்தருளியிருக்கிற இருப்பொழிய வீற்றிருந்தேழுலகுந் தனிக்கோல் செல்ல இருக்குமிருப்பையும் தனக்கு ஐஸ்வர்யமாக நினைத்திருக்குமோவென்று பார்த்தால் அதுவும் ஒரு சரக்காக நினைத்திருக்கிறிலன் என்று. இதுவே ப்ரகரணத்துக்குச் சேருவது.

22. பகவத் விஷயம் 9.9.1. ஆளவந்தார் ஐதிஹ்ய நிர்வாஹம் 70-ல் காண்க.

23. பகவத் விஷயம் 10-4.1. ஆளவந்தார் ஐதிஹ்ய நிர்வாஹம் 73-ல் காண்க.

24. ப்ரமேயரத்னம். பெரியநம்பி ஐதிஹ்ய நிர்வாஹம் 2-ல் காண்க.

25. ப்ரமேயரத்னம். பட்டாஷ்யகாரர் "ஆளவந்தாருக்கு ஏகலவ்ய ஞேபாதி" என்று அருளிச்செய்வர். எங்ஙனேயென்னில் — பட்டாஷ்ய காரர் திருமாலையாண்டான் பக்கலிலே திருவாய்மொழி கேட்கிறவள விலே, 'அறியாக்காலத்துள்ளே அடிமைக்கணன்புசெய்வித்து' என் கிற பாட்டை அருளிச்செய்கிறவளவிலே யதார்ந்வயமாக நிர்வஹிக்க, பட்டாஷ்யகாரர் இது அநுசிதமென்று அந்வயித்துப் பொருளுரைக்க, "உம்முடைய விச்வாமித்ர ஸ்ருஷ்டி விடீர், நாம் பெரியமுதலியார் பக்கல் கேட்ட அர்த்தமிதுவே காணும்" என்று இவருக்குத் திருவாய் மொழி அருளிச்செய்யாமலிருக்க, பின்பு ஒரு காலத்திலே திருக் கோட்டியூர் நம்பி 'இளையாழ்வார் திருவாய்மொழி கேட்டுப்போரா நின்றாரோ' என்று திருமாலையாண்டானைக் கேட்டருள, அங்குப் பிறந்த வ்ருத்தாந்தத்தை அவரும் அருளிச்செய்ய, 'பெரியமுதலியார் திருவாய்மொழி இரண்டாமுரு அருளிச்செய்கிறபோது பட்டாஷ்ய காரரோக்த க்ரமத்திலே' என்று திருக்கோட்டியூர் நம்பி அருளிச்செய்ய, பட்டாஷ்யகாரரை அழைத்து 'ஆளவந்தார் திருவுள்ளத்திலே ப்ரகாசிக்கு மதுவேயொழிய இவருக்குப் ப்ரகாசிக்குமா' என்று திருமாலையாண் டான் அருளிச்செய்ய, பட்டாஷ்யகாரர் 'ஆளவந்தாருக்கு நான் ஏகலவ்ய ஞேபாதி' என்று அருளிச்செய்தார்.

26. ப்ரமேயரத்னம். வங்கிப்புரத்து நம்பி திருமாலையாண்டான் ஸ்ரீபாதத்திலே ஆஸ்ரயித்து, ஸ்ரீபட்டாஷ்யகாரர் பக்கலிலே ஜ்ஞா நோபஜீவநம் பண்ணினர். நாஞூராண்டான் ஆளவந்தார் ஸ்ரீபாதத் திலே ஆஸ்ரயித்துத் திருமாலையாண்டான் பக்கலிலே ஜ்ஞாநோப ஜீவநம் பண்ணினர்.

27. ப்ரமேயரத்னம். "ஸ்ரீஸ்தநம்போலே போக்யன் சேத னன், போக்தா பரமசேதனன்; ஆனல் அசித்திற்காட்டில் வாசி ஏதென்னில்: 'ஈஸ்வரன் போக்தா, நாம் போக்யம்' என்கிற ஜ்ஞாந விஸேஷம்" என்று திருமாலையாண்டான் அருளிச்செய்வர்.

## திருமாலையாண்டான் வம்ஸஸ்தர்களைப் பற்றிய ஐதிஹ்ய நிர்வாஹங்கள்

1 பெரியாண்டான் (திருமாலையாண்டான் குமாரரான சுந்தரத் தோளுடையான்).

28. ப்ரமேயரத்னம். "ஆஸ்ரயண தஸையில் ஈஸ்வரனுக்கு அதிகாரி ரக்ஷ்யன்; அதிகாரி பூர்த்தியில் ஈஸ்வரன்தான் குழைச் சரக்கு (ரக்ஷ்யப்பொருள்)." என்று பெரியாண்டான் அருளிச்செய்வர்.

29. ப்ரமேயரத்னம். "மருகாந்தாரத்தில் தண்ணீர்ப்பந்தலோபாதி ஸம்ஸாரத்தில் வைஷ்ணவஸஹவாஸம்" என்று பெரியாண்டான் அருளிச்செய்வர்.

30. ப்ரமேயரத்னம். பெரியாண்டான் திருத்தோரணம் தொடங்கி அழகர் திருவடிகளறுதியாகப் பத்தெட்டு தி₃வஸம் த₃ண்டனிட்டுக் கிடப்பர். ராத்ரி மனுஷ்யர் போகும்போது "ஆண்டான் கிடக்கிறாரோ, பசு கிடக்கிறதோ, வழிபார்த்துப் போங்கோள்" என்னும்படியிறே சலியாமல் ப₄க₃வத₃நுப₄வம் பண்ணும்படி.

31. ப்ரமேயரத்னம். "இதரோபாய நிஷ்டர்களுடைய தீர்த்த₂ ப்ரஸாத₃ஸ்வீகாரமும் ஜ்ஞாநமாந்த்₃யஹேது; ப₄க₃வது₃பாஸந நிஷ்டருடைய தீர்த்த₂ப்ரஸாத₃ஸ்வீகாரமும் ஜ்ஞாநமாந்த்₃ய ஹேது" என்று பெரியாண்டான் அருளிச்செய்வர்.

32. ப்ரமேயரத்னம். "ஶரணாக₃தியும், திருவாய்மொழியுமாக இரண்டுமிறே த்₃வயம் என்று போருகிறது" என்று பெரியாண்டான் அருளிச்செய்வர்.

33. ப்ரமேயரத்னம். "கருந்தறையில் உபதே₃ஶிக்கிற ஆசார்யன் திருவிளையாட்டமாம்படி (விளையாடுமிடமாம் படி) திருவாழிக்கல் நாட்டினாப்போலே, இவனைத் திருத்துகிற ஆசார்யன் திருவிளையாட்டத்தைத் திருநந்த₃வனமாக்கி அதில் உண்டான திருப்படித் தாமத்தை (புஷ்பங்களை) ப₄க₃வதே₃கபோ₄க₃மாம்படி பண்ணுகிறவனைப்போலே" என்று பெரியாண்டான் அருளிச்செய்வர்.

34. ப்ரமேயரத்னம். பெரியாண்டான் பா₄ஷ்யகாரர் ஸ்ரீபாத₃த்திலே ஆஶ்ரயித்து எம்பார் பக்கலிலே ஜ்ஞாநோபஜீவநம் பண்ணினர்.

35. ப்ரமேயரத்னம். "வ்யவஸாயாத்மக ஜ்ஞாந விஶேஷம் ப்ரபத்தி" என்று பெரியாண்டான் அருளிச்செய்வர்.

36. ப்ரமேயரத்னம். "ஒரு கிணற்றிலே விழுந்தானொருத்தனை இரண்டு பேராக எடுக்குமோபாதியிறே பா₄ஷ்யகாரரும் எம்பாருமாக என்னை உத்₃த₄ரித்தபடி" என்று பெரியாண்டான் அருளிச்செய்தார்.

37. ப்ரமேயரத்நம். "இதில் (பெருமாளும் பிராட்டியுமாகிற மிது₂னத்தில்) ஒன்றைவிட்டு ஒன்றைப்பற்ற நினைத்தானாகில் மாத்ருஹீநனான புத்ரனைப்போலே அறவையாயும், பித்ருஹீநனான புத்ரனைப்போலே அநாத₂னாயுமிருக்கும். இருவரும் கூடினபோதிறே ஸ்ரீமத்புத்ரனாவது" என்று பெரியாண்டான் அருளிச்செய்தார்.

38. ப்ரமேயரத்நம். அழகர் திருவோலக்கத்திலே பிள்ளையழகப் பெருமாள் வந்து புகுந்து பெரியாண்டானைப் பார்த்து 'பரமபத₃மிருக்கும்படியென்?' என்று கேட்க, 'இப்படியேயிருக்கும்' என்ன, 'ஆனால் இத்தைவிட்டு அங்கே போவானென்?' என்ன, 'இங்கிருந்தால் முதுகு கடுக்கும்; அங்குப் போனால் அது செய்யாது' என்று அருளிச்செய்தார்.

39. ப்ரமேயரத்நம். ப₄க₃வத்₃கு₃ணாநுப₄வத்துக்குப் படிமா (எடுத்துக்காட்டாயிருப்பவர்கள்) பெரியாண்டானும், எம்பாரும்.

40. ப்ரமேயரத்நம். "ப₄க்திக்கு ஆயாஸகௌ₃ரவம் உண்டாகிறாப்போலே ப்ரபத்திக்கும் விஸ்வாஸகௌ₃ரவம் உண்டு. பித்தோபஹதனுக்கு ரஸ்யபதா₃ர்த்த₂ம் திக்தமாமோபாதி (கசப்பதுபோலே) பா₄க்₃யஹீனர்க்கு ப்ரபத்தியில் விஸ்வாஸகௌ₃ரவம் பிறவாது" என்று பெரியாண்டான் அருளிச்செய்வர்.

*II.* இளையாழ்வாரான திருமாலையாண்டான். (இவர் திருமாலையாண்டான் குமாரரான சுந்தரத்தோளுடையான் என்னும் பெரியாண்டானின் குமாரர்)

41. ப்ரமேயரத்நம். "க்ஷாமகாலத்தில் அறச்சாலையோபாதி விபரீதபூ₄யிஷ்ட₂தே₃ஸத்திலே வைஷ்ணவ ஸஹவாஸம்" என்று இளையாழ்வாரான திருமாலையாண்டான் அருளிச்செய்வர்.

42. ப்ரமேயரத்நம். "வஸிஷ்ட₂னுக்கும் விஸ்வாமித்ரனுக்கும் உள்ள வாசிபோரும், பா₄க₃வததீர்த்த₂த்துக்கும் ப₄க₃வத்தீர்த்த₂த்துக்கும்" என்று இளையாழ்வாரான திருமாலையாண்டான் அருளிச்செய்வர்.

43. ப்ரமேயரத்நம். "ஆழ்வார்க்கும் ஆசார்யத்வபூர்த்தி திருவாய்மொழியை வ்யாஜீகரித்து த்₃வயத்தை அருளிச்செய்கையாலே" என்று இளையாழ்வாரான திருமாலையாண்டான் அருளிச்செய்வர்.

44. ப்ரமேயரத்நம். பெரியபிள்ளை (பெரியவாச்சான்பிள்ளை) இளையாழ்வாரான திருமாலையாண்டான் ஸ்ரீபாத₃த்திலே ஆஶ்ரயித்து நம்பிள்ளை பக்கலிலே ஜ்ஞாநோபஜீவனம் பண்ணினர்.

45. ப்ரமேயரத்நம். "ப்ரபத்தாவும் (ப்ரபத்தி செய்பவனும்) உபாயமல்ல; ப்ரபத்தியும் உபாயமல்ல. ப்ரபத்தவ்யனே உபாயம்" என்று இளையாழ்வாரான திருமாலையாண்டான் அருளிச்செய்வர்.

46. ப்ரமேயரத்நம். "அவை (உபாயாந்தரங்கள்) சிரகால ஸாத்₄யங்களுமாய், அபராத₄ப₃ஹுளங்களுமாயிருக்கும்; ஆகையாலே து₃ஷ்கரங்களுமாயிருக்கும்; இது (ப்ரபத்தி) ஸக்ருத்க்ருதமாய், நிரபாய மாகையாலே ஸுகரமாயிருக்கும்" என்று இளையாழ்வாரான திருமாலையாண்டான் அருளிச்செய்வர்.

47. ப்ரமேயரத்நம். "ராஜ்யப்₄ரஷ்டனான ராஜாவுக்கு மீண்டும் ராஜ்யப்ராப்தி உண்டானவோபாதி, ஶேஷபூ₄தனான இச்சேதன னுக்கு ஶேஷத்வாநுப₄வம்" என்று இளையாழ்வாரான திருமாலை யாண்டான் அருளிச்செய்வர்.

48. ப்ரமேயரத்நம். "ஸித்₃தோ₄பாயத்தில் நிலை தாமரை யோடையிலே அன்னம் இறங்குமோபாதி; ஸாத்₄யோபாயங்களில் நிலை அவ்வோடையிலே யானை இறங்குமோபாதி" என்று இளையாழ் வாரான திருமாலையாண்டான் அருளிச்செய்வர்.

III யாமுநாசார்யரான திருமாலையாண்டான். இவர் இளையாழ் வாரான திருமாலையாண்டானுக்குப் பௌத்ரராயிருக்கக்கூடும். பெரிய வாச்சான்பிள்ளை தமது திருத்தகப்பனார் திருநாமமான யாமுநாசார்யர் என்னும் பெயரை இவருக்கு இட்டிருக்கக்கூடும். இவர் வாதி₃கேஸரி ஜீயரின் சிஷ்யர் என்பது ப்ரஸித்₃த₄ம். ப்ரமேயரத்நம், தத்வ பூ₄ஷணம், ரஹஸ்யத்ரயஸாரம் எனும் மூன்று க்₃ரந்த₂ங்களை இவர் அருளினர். முதலிரண்டும் இப்போதும் அச்சில் உள்ளன. வாதி₃ கேஸரி ஜீயரின் வைப₄வத்திற்குப் பிறகு இவரது வைப₄வம் அச்சிடப்படும்.

49. யதிராஜ வைப₄வம். 62, 63 ஶ்லோகங்களின் அர்த்த₂ம். 62. மறுபடியும் தமது ஆசார்யரான பெரியநம்பியால் நியமிக்கப் பெற்ற பேரறிவாளரான யதிராஜர், நாலாயிரத்தில் நாலாவதாயிர மான நம்மாழ்வாருடைய திருவாய்மொழி, திருமங்கையாழ்வாருடைய

பெரியதிருமொழி தொடக்கமான இரண்டாமாயிரம், மற்றும் முதலாயிரம், இயற்பா ஆகிய அனைத்தின் பொருளையும் திருமாலையாண்டானிடமிருந்து கற்றார். 63. அப்படிக் கற்கும்போது, சிற்சிலவிடங்களில் 'இப்படியும் அர்த்த₂மிருக்கலாம்' என்று யதிராஜர் அவரிடம் கூறினார். அதைக்கேட்ட திருமாலையாண்டான் திருக்கோட்டியூர் நம்பியிடமும், பெரியநம்பியிடமும் 'ஆளவந்தார் அருளாத அர்த்த₂ங்களை இவர் இப்படி விஶ்வாமித்ர ஸ்ருஷ்டியாகச் சொல்லுகிறாரே!' என்று குறைபட, 'இவர் சொன்னவையும் ஆளவந்தாரால் வேறு உருக்களில் அருளிச்செய்யப்பட்டவையேயாகும். ஆளவந்தார் திருவுள்ளமுகக்காதது இவர் நெஞ்சில் தோன்றாது' என்று அவர்களால் கொண்டாடவேபட்டார் யதிராஜர்.

50. ஸம்ப்ரதா₃ய பரிஶுத்₃தி₄. பெரியநம்பி ஐதிஹ்யநிர்வாஹம் 28-ல் காண்க.

51. குருபரம்பராஸாரம். திருமாலையாண்டான் ஸ்ரீபாத₃த்திலே திருவாய்மொழி கேட்டார் (எம்பெருமானார்)

52. தி₃வ்யஸூரிசரிதம். 16—84, 85, 86. 18—4.

53. ப்ரபந்நாம்ருதம். 19-வது அத்தியாயம், 114-வது அத்தியாயம்.

54. திருமாலையாண்டான் அருளிய திருப்பள்ளியெழுச்சித் தனியன்.

தமேவ மத்வா பரவாஸுதே₃வம்
  ரங்கே₃ஶயம் ராஜவத₃ர்ஹணீயம் ।
ப்ராபே₃ாதி₄கீம் யோऽக்ருத ஸூக்திமாலாம்
  ப₄க்தாங்க்₄ரிரேணும் ப₄க₃வந்தமீடே₃ ॥

55. திருமாலையாண்டான் வாழித்திருநாமம்.

அம்புவியி லாளவந்தா ரடியிணையோன் வாழியே
  ஆரியனு மவர்பதத்தை யன்புசெய்தோன் வாழியே
வெம்பிவரும் வாதியரை வேர்களைந்தோன் வாழியே
  மேதினியில் நாலூர் விளக்கவந்தோன் வாழியே
எம்பெருமானெதிராசற் கீடுரைத்தான் வாழியே
  ஏற்றமுள்ள மாசிமக மிலங்கவந்தோன் வாழியே
வம்பவிழும் சோலைமலை வாழவந்தோன் வாழியே
  மாலாதராரியன்தாள் மாநிலத்தில் வாழியே.

வீசுபுகழ்ச் சங்காழி விளங்குபுயம் வாழியே
விண்ணுயர்ந்த மலையழகர் விரும்புமவன் வாழியே
மாசிமகமிப்புவியில் வந்துதித்தோன் வாழியே
மறைப்பொருளை உடையவர்க்கு வகுத்துரைத்தான் வாழியே
காசிபநற்குலத்துதித்த கருணைநிதி வாழியே
கையாழி சங்கதினுல் கதிதருவோன் வாழியே
தேசுபுகழாளவந்தார் திருவடியோன் வாழியே
திருமாலையாண்டான்தாள் செகதலத்தில் வாழியே.

# பெரியதிருமலைநம்பி வைபவம்.

**பிதாமஹஸ்யாபி பிதாமஹாய**
**ப்ராசேதஸாதே₃ஶப₂லப்ரத₃ாய ।**
**ஸ்ரீப₄ாஷ்யகாரோத்தமதே₃ஶிகாய**
**ஸ்ரீஶைலபூர்ணய நமோ நம:ஸ்தாத் ॥**

[(பிரமனுக்குத் தந்தையான திருவேங்கடமுடையானுலே 'அப்பா' என்று கூப்பிடப்பெறுகையாலே) உலகிற்குப் பாட்டனை பிரமனுக்கும் பாட்டனராய், ஸ்ரீப₄ாஷ்யகாரருக்குச் சிறந்த ஆசாரியராய் அவருக்கு வால்மீகியின் வாக்காகிற ஸ்ரீராமாயணத்தின் பொருளை உபதே₃சித்தவரான பெரிய திருமலைநம்பிக்குப் பலகால் வணக்கம்.]

ஸௌமுக₂ர் என்னும் நித்யஸூரியின் அம்ஶமாகச் சித்திரை ஸ்வாதியில் திருமலையில் அவதரித்தவர் இவ்வாசார்யர். இவர் எம்பெருமானருக்கு மாதுலர் (மாமா), இவர் தம் ஸஹோத₃ரிகளில் மூத்தவளான 'பூ₄தே₃வி' என்னும் காந்திமதியை ஸ்ரீபெரும்பூதூர் கேசவ ஸோமயாஜியாருக்கு மணம்செய்து கொடுத்தார். அவர்களுக்குப் பிறந்தவர் ஸ்ரீராமாநுஜர், இளையவளான ஸ்ரீதே₃வியை மது₄ரமங்க₃லம் கமலநயநபட்டருக்கு மணம்செய்து கொடுத்தார். அவர்களுடைய குமாரர்கள் எம்பார் என்னும் கோ₃விந்த₃ரும், அவர் தம்பி சிறிய கோ₃விந்த₃ப்பெருமாளும். இவர் எம்பெருமானர்க்குக் கீழத்திருப்பதியில் ஒருவருஷகாலம் ஸ்ரீராமாயணத்தைக் காலக்ஷேபம் ஸாதி₃த்தார். திருவேங்கடமுடையான் இவரைத் திருத்தகப்பனராக அபி₄மானித்தார். சைவராக மாற்றப்பெற்றுக் காளஹஸ்தியில் உள்ளங்கைகொணர்ந்த நாயனராயிருந்த மருமகன் கோவிந்தரை மறுபடி ஸ்ரீவைஷ்ணவராகத் திருத்தினர் இவர். தம் குமாரர்களான பிள்ளை திருமலைநம்பியையும், பிள்ளானையும், இரு

குமாரத்திகளையும் உத்தாரகரான எம்பெருமானர் திருவடிகளிலே ஆஶ்ரயிக்கச் செய்தார். யதிராஜ வைப₄வத்தில் இவர் வைப₄வத்தின் விரிவு காணலாம்.

## ஐதிஹ்ய நிர்வாஹங்கள்.

1 குருபரம்பராப்ரபாவம் - திருமலைநம்பியினிடத்து உடையவர் ஸ்ரீராமாயணங் கேட்டல்: உடையவரும் அதிப்ரீதியோடே திருப்பதிக்கு எழுந்தருளுமளவிலே மார்க்க₃மத்₄யத்திலே ''வழிதிகைத் தலமருகின்றேன்'' என்கிறபடியே வழிதப்பித் திகைத்து நிற்க, முதலிகளும் அங்கே ஒரு ஏற்றமிறைப்பானைக்கண்டு 'திருமலைக்கு வழி எங்ஙனே?' என்று கேட்டவளவில் அவனும் செவ்வையான வழியைக்காட்ட உடையவரும் 'இதொரு அமாநவன் புருஷகாரமிருந்தபடி என்!' என்று அவனைத் தண்டனிட முதலிகளும் இப்பாமாஸ்திகத்வத்தைக்கண்டு களித்து அவர்களும் தண்டனிட, இவரும் முன் நடந்து எழுந்தருளித் திருமலையாழ்வாரையும் திருத்தாழ்வரையிலே எழுந்தருளியிருக்கிற ஸ்ரீபராங்குசபரகால ப்ரப்₄ருதிகளான ஆழ்வார் பதின்மரையும் ஸேவித்துத் திருப்பதியிலே எழுந்தருளியிருந்து விடலதே₃வனையும் ஶிஷ்யனுக்கிக்கொண்டு திருப்பதியிலே ஸ்வஶிஷ்யர்கள் முப்பது திருநாமங்களைக் குடியேற்றி, இளமண்டியத்தையும் கைப்பற்றுக விடுவித்து அங்கே எழுந்தருளியிருக்க, இச்செய்தியை அநந்தாழ்வான் தொடக்கமான ஸ்ரீவைஷ்ணவர்கள் கேட்டருளி, திருமலையினின்றும் இறங்கிவந்து எம்பெருமானரை ஸேவித்து 'தேவரீர் அப்பனை ஸேவிக்க எழுந்தருளவேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய. உடையவரும் 'ஆழ்வார்கள் திருமலை மிதியாமையாலே நாமும் ஏறக்கடவோமல்லோம்; திருத்தாழ்வரையிலே எழுந்தருளியிருக்கிற ஆழ்வார்களை ஸேவித்திருக்கிறோம்' என்று அருளிச்செய்ய, அநந்தாழ்வானும் 'தேவரீர் ஏறுதபோது அடியோங்களும் ஏறோம்; மற்றுமுள்ளாரொருவரும் ஏறுவதில்லை' என்று விண்ணப்பஞ்செய்ய, உடையவரும் 'அப்படியே செய்கிறோம்' என்று தத₃நுகு₃ணமாகத் திருமேனியை ஶோதி₄த்துக்கொண்டு எழுந்தருளி அடிப்புளியாழ்வாரடியிலே திருமலையாழ்வாரை ஸேவித்து, ''பாதே₃நாத்₄யாரோஹதி'' [கௌஷீதகீ 1-51] [பரம்பொருளின் பர்யங்கத்தின் பாத₃பீட₂த்தில் அடியிட்டு ஏறுகிறன்.] என்கிறபடியே ஸ்ரீவைகுண்ட₂நாத₂நியோக₃ாத் முக்தசேதநன் பாத₃பீட₂த்திலே அடியிட்டு ஏறுமாபோலே ப்ரதிபத்திபண்ணிக்கொண்டு திருவேங்கடமுடையான் அருள்பாடிடத் திருமலையேறி, * செப்பார் திண் வரையையும் * பன்மணிநீரோடு பொருதுருளுங் கானற்றையும்

* அன்னவனைய பொற்குவடுகளையும் * வேய்கள் நின்று வெண்முத்தமே சொரியும் * கானமும் வானரமும் வேடும் உடைய வேங்கடத்தைக் கண்டு களித்துக்கொண்டு திருப்பரியட்டப் பாறையளவிலே எழுந்தருளாநிற்க, திருவேங்கடமுடையான் தீர்த்த ப்ரஸாதங்கொண்டு பெரியதிருமலை நம்பி எதிரே எழுந்தருளி ப்ரஸாதித்தருள, உடையவரும் நம்பி திருவடிகளில் ஸாஷ்டாங்க ப்ரணாமம் பண்ணித் தீர்த்த ப்ரஸாதமும் ஸ்வீகரித்தருளி, 'தேவரீர் எழுந்தருளவேணுமோ? ஒரு சிறியார் இல்லையோ?' என்று விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் 'நாலு திருவீதியிலும் ஆராய்ந்து பார்த்தவிடத்தில் என்னிற்காட்டில் சிறியாரைக் கண்டிலேன்' என்ன உடையவரும் முதலிகளும் இதைக் கேட்டருளி அத்யாஶ்சர்யப்பட்டுக் கல்வேலியளவிலே எழுந்தருளாநிற்க, சீயர்கள் ஏகாங்கிகள் ஸ்ரீவைஷ்ணவர்கள் திருமலையிலுள்ள ஸ்தாநத்துறை ஸ்ரீபாதந்தாங்குவார் முதலான அனைத்துக் கொத்திலுள்ளவர்களும் வந்து எதிர்கொண்டு ஸத்கரிக்க, உடையவரும் முதலிகளுமாக எழுந்தருளி வைகுந்தன் திருவாசலிலே தண்டன்ஸமர்ப்பித்துத் திருக்கோனேரியிலே நீராடிக் கேஶவாதி த்வாதஶநாமங்களையுஞ் சாத்தியருளி நாலு வீதியையும் ப்ரதக்ஷிணமாக எழுந்தருளி, "சிந்தாமணிகள் பகரல்லைப் பகல்செய்" என்கிறபடியே கசித - அநர்க்க ரத்ந த்யுதி ரஞ்ஜிதமான மாட கூட ப்ராஸாத தோரண கோபுர ப்ராகாரங்களையும் அநுபவித்து அங்கே தம் கைங்கர்யமான இராமாநுசனென்கிற திருநந்தவனத்திலே எழுந்தருளித் திருக்கண்சாத்தி உகந்தருளி, அநந்தாழ்வானைப் பார்த்து அணைந்துக்கொண்டு "* வளர்த்ததனால் பயன்பெற்றேன்" என்று மிகவும் க்ருபை பண்ணியருளி, மற்றும் அங்கு உண்டான 'தேனேய்பூம்பொழில்' என்றும், "விரையார் பொழில்" என்றும், "கோல்தேன் பாய்ந்தொழுகும் குளிர் சோலை" என்றும் சொல்லுகிற * மொய்த்த சோலைகளையும், அச்சோலைக்கு அலங்காரமாகச் * செண்பகமாய் நிற்குந் திருவுடைய செண்பகம் செருந்தி திருமகிழ் பாடலம் சுரபுன்னை புன்னைகள் முதலான மது ஸ்ரவகுஸும ப்ரகர்ஷத்தையுடைய திருப்பூ மரங்களின் எழிலையும் செவ்வந்தி பிச்சி இருவாட்சி மல்லிகை முல்லை தொடக்கமான கொடிமலரழகையும் "மொய்பூந்தடந்தாழ்வரே" என்று சொல்லுகிற * செந்தீமலரும் சேருர்சுனைகளில் மந்தப்ரமர நாதித மநோஹாரி செந்தாமரை ஸ்ரீயையும், * திருவேங்கடத்தெண்ணீர் சுனைகளில் * மீனாய்ப் பிறக்கும் விதியுடையாரையும், * கோனேரி வாழுங் குருகு கொக்கு நாரை தாரா முதலான பக்ஷிஸங்கங்களையும், வ்ருக்ஷ ஶாகாருட பிககூஜித காஹளீ நாதங்களையும்,

* கொண்டலதிரத் * தோகைவிரித்து நடமாடுகிற மயூர கேகாரவத்தையும், * வண்டினங்கள் தென்னாதெனாவென்று பண்பாடுகிற பாடலையும் கண்டு கேட்டு ஆநந்தி3த்து, * நிலங்கோட்டிடைக் கொண்ட ஞானப்பிரானையும் ஸேவித்து, * அவாவறச்சூழ்ந்தான் திருவாசலிலே தண்டனிட்டு அத்தாணிப்புளியையும் ஸேவித்து, ஸ்ரீப3லி பீட2த்தடியிலே தண்டனிட்டு யமுனைத்துறைவரென்கிற திருப்பூ மண்டபத்தையும் ஸேவித்து, ப்ரத3க்ஷிணமாக எழுந்தருளி "த4நுர்மாஸே ஸிதே பக்ஷே த்3வாத3ஸ்யாமருணோத3யே | ஆயாந்தி ஸர்வதீர்த்த2ாநி ஸ்வாமி புஷ்கரிணீ ஜலே ||" [வேங்கடாசல மாஹாத்ம்யம்] [மார்கழி மாதத்தில் சுக்லபக்ஷத்தில் துவாதசியில் அருணோதயவேளையில் ஸ்வாமி புஷ்கரிணியின் நீரில் எல்லாத் தீர்த்தங்களும் வந்து சேருகின்றன]. என்று சொல்லப்படுகிற மாஹாத்ம்யத்தையுடைத்தான ஸ்வாமி புஷ்கரிணியிலே தீர்த்த2 ஸ்வீகாரஞ்செய்து, செண்பகத்திருவாசலுக்குள்ளே புகுந்து தண்டன் ஸமர்ப்பித்து, திருமடைப்பள்ளி யாகஸாலை திருமாமணி மண்டபத்தையும் ஸேவித்து, ஸேனை முதலியாரையும் ஸேவித்து * வேங்கடத்தரியையுந் திருவடிதொழுது, ஆநந்த3 நிலயமென்னும் தி3வ்ய விமானத்தையும் கண்ணாலே பருகுவாரைப்போலே அநுப4வித்து உள்ளேயெழுந்தருளி * அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்குங் குலசேகரன் படியைக் கடந்து உள்ளேபுகுந்து * திலதமுலகுக்காய்நின்ற * தண்ணார்வேங்கட விண்ணோர்வெற்பனை * எண்ணம் புகுந்து தித்திக்குஞ் * செந்தாமரைக்கட் செங்கனிவாய் நாற்றோளமுதையும் செங்கமலக்கழலிற்படியும் "சீதக்கடல்" என்கிற திருமொழிப்படியும் மணிநூபுராதி3கிரீடாந்த ஸர்வதி3வ்யாப4ரண தி3வ்யமால்யாம்ப3ர தி3வ்யாங்க3ராக3 ஸோபி4தமான அவ்வடிவழகை பாத3ாதி3 கேஸாந்தமாக அநுப4வித்து 'அலர்மேல்மங்கையுறை மார்பா! புகலொன்றில்லா அடியேன் உன்னடிக்கீழ் அமர்ந்து புகுந்தேன்' என்று * அடிக்கீழமர்ந்து புகுந்து * பூவார் கழல்களைக் கிட்டி க்ருதாஞ்ஜலிபுடராய் அநுப4வித்துநிற்க இவர்க்குத் தீர்த்த2 ப்ரஸாத3மும் ப்ரஸாதி3க்க, ஸ்வீகரித்து க்ருதார்த்த2ராயருளி 'இது பூ4லோகவைகுண்ட2மாயிருந்தது!' என்று ஆஸ்சர்யப்பட்டு, திருமஞ்சநம் ஸேவித்தருளி, அழகப்பிரானாருடைய ஸ்ரீப3லித்திருநாளையும் ஸேவித்தருளி, * விண்ணோர்வெற்பாகையாலே "நிகரில் அமரர் முனிக் கணங்கள்" என்று அருளிச்செய்த நித்யஸூரிகளன்றோ இங்கு வர்த்திப்பார்? நாம் இங்கே வர்த்திக்கவொண்ணாது' என்று அப்போதே 'திருமலையினின்றும் இறங்கவேணும்' என்று உத்3யோகி3க்க, பெரியதிருமலைநம்பியும், 'தி3வ்யதே3ஸத்திலே மூன்றுநாள் இருக்க

வேணுங்காணும்' என்று அருளிச்செய்தருள, உடையவரும் ஸம் மதித்து மூன்று நாளும் அமுதுசெய்யாமல் * அப்பொழுதைக்கப் பொழுது என்னாராவமுதமான அப்பனை அநுப₄வித்து, அதுவே த₄ாரகமாக எழுந்தருளியிருந்து, இப்படியே மூன்றுநாள் சென்ற வாறே நம்பியுடன் அப்பன் ஸந்நிதி₄க்குச் சென்று திருப்பல்லாண்டை அநுஸந்தி₄த்து அஞ்ஜலித்துநிற்க, அப்பனும் மிகவும் உகப்புடனே இவர்க்குத் தீர்த்த₂ ப்ரஸாத₃மும் ப்ரஸாதி₃த்து, தம் * பூவார் கழல்களை ஶிரோபூ₄ஷணமாக்கி 'உமக்கும் உம்முடையார்க்கும் உப₄ய விபூ₄த்யைஶ்வர்யமும் தந்தோமென்று நம் தெற்குவீட்டிலே சொன் னோமே' என்று * திருப்பவளச் * சோதிவாய்திறந்து அருளிச் செய்தருள, உடையவரும் 'மஹாப்ரஸாத₃ம்' என்று அங்கீ₃கரித்து நிற்க, அப்பனும் விடைகொடுத்தருள, நம்பியுடன் புறப்பட்டு அப் பொழுதே இறங்கியருளி, திருப்பதியிலே பெரியதிருமலைநம்பி திரு மாளிகையேறச் சென்று அங்கே அமுதுசெய்து, அவர் ஸந்நிதி யிலே இதிஹாஸஶ்ரேஷ்ட₂மான ஸ்ரீராமாயணத்திற்கு அர்த்த₂ங் கேட்டுக்கொண்டு ஒருஸம்வத்ஸரம் எழுந்தருளியிருக்குங் காலத்திலே;

2. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம்: பின்பு ராமாநுசனும் ஆஶ்ரமத₄ர்மங்களைக் குறைவற நடத்திக்கொண்டு 'நமக்கு ஆள வந்தார் விஶேஷகடாக்ஷம் பண்ணினதற்கு ஈடாக விரோதி₄களும் கழிந்து ஆநுகூல்யமும் கூடாநின்றதே; ஆளவந்தார் திருவுள்ளக் கருத்து நிறைவேறும்படி நமக்கு ஒரு ஸஹாயம் உண்டாக வேணும்' என்று விசாரமுண்டாய்த் ததநு₃ரோதே₄ந கோ₃விந்த₃ ப₄ட்டரை நினைத்து 'அவன் நமக்கு ஹிதப்ரவர்த்தகன்; ஸர்வ விஷயவிரக்தன்; ஶாஸ்த்ரவைத₃க்₃த்₄யமுள்ளவன்; இனி அவனை நம்மோடே சேர்ப்பாருண்டாகில் நல்லது; இப்போது அவன் தே₃வதாந்தரபரனாயிராநின்றான். அவ்வுள்ளங்கை கொணர்ந்த இடத்தே சுருள்நாற்றமெழுப்பி ''ஸர்வக₃ந்த₄ஸ் ஸர்வரஸ:'' [சாந் 3-14-1] [எல்லா நறுமணங்களையும் உடையவராய், எல்லா நற் சுவைகளையும் உடையவராயிருப்பவர் பரமாத்மா.] என்னுமவனுடைய ஸௌக₃ந்த்₄யத்தைக் காட்டி மீட்கும் விரகர் ஆரோ?' என்று நினைவிட, 'விஶேஷாத்மகு₃ணங்களையுடையராய், வேத₃வேதா₃ந்த வித₃க்₃ரேஸரராய், வகுளாப₄ரணப்ரப₃ந்த₄முகுளாமோதி₃தசித்த ராய், * திலதமுலகுக்காய் நின்ற திருவேங்கடத்தெம்பெருமானை அநு வரதப₄ாவனைபண்ணிப் பிரியாவடிமை செய்யாநின்றுள்ள தே₃ஶிகாக்₃ரேஸரரான பெரியதிருமலைநம்பி கடவர்' என்று நிஶ்சயித்து, ஒரு அநுகூல ஸ்ரீவைஷ்ணவரை அவர் ஸந்நிதி₄க்குப் போகச்

சொல்லி, தேவரீருடைய மருமகனான வட்டமணி கோ₃விந்த₃ப₄ட்டன் அடியேனுடன் ஸஹாத்₄யாயியாய் அநுகூலித்திருந்தவன். து₃ர்வாஸநாதிஶயத்தாலே அந்யபரனாய்க் காளஹஸ்தியாகிற சுடுங் காட்டிலே நில்லாநின்றான்; தேவரீர் அடியேனுக்காக அவனிடத்தே நிர்ஹேதுகக்ருபைபண்ணி தேவரீர் திருவடிகளுக்கு அவனை ஆட் கொண்டருள வேணும்' என்று விண்ணப்பஞ் செய்து போக விட்டருளினார்.

3. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம்: எம்பாரை திருத்திய விவரம்: முன்பு திருமலைநம்பி ஸந்நிதி₄க்குப் போகவிட்டிருந்த ஸ்ரீ வைஷ்ணவர் ஹர்ஷப்ரகர்ஷத்துடனே மீண்டெழுந்தருளி உடையவர் திருவடிகளிலே ஸேவிக்க, இராமாநுசனும் அவருடைய முக₂விகாஸத்தைக் கண்டு கார்யஸித்₃தி₄யை நிஶ்சயித்து ப்ரீதியுடனே 'அந்த வ்ருத்தாந்தத்தை விவரமாகச் சொல்லும்' என்ன, ஸ்ரீவைஷ்ணவரும் 'தேவரீர் விடை ப்ரஸாதி₃த்தருளினபின்பு திருமலைக்குப் போய்த் திருமலைநம்பியை ஸேவித்து, தேவரீர் நியமனப்படியே விண்ணப்பஞ்செய்தேன்: நம்பியும் கேட்டருளி, 'இது தாமே செய்யக் கடவதாயிருக்க, நம் இராமாநுசனும் எண்ணம் புகுந்து தித்திக்குமமுதாகப் பெற்றதே!' என்று தேவரீராநுகூல்யத்துக்கு உகந்த திருவுள்ளத்தராய்த் தத்க்ஷணமே ஸ்ரீபாத₃த்து முதலிகளுடனே அடியேனையுங் கூட்டிக்கொண்டு காளஹஸ்திக் குளக்கரையிலே ஒரு மரத்தடியிலே எழுந்தருளியிருக்க, உள்ளங்கை கொணர்ந்த நாயனாரும் அங்கே ருத்₃ராபி₄ஷேகார்த்த₂மாகக் குடங்கொண்டு ருத்₃ரபரமான பாட்டுக்களையும் கதறிக் கொண்டுவர, நம்பியும் "கொன்றைச் சடையானைக் குளிரநீராட்டினால், என்னுனக்குண்டாம் பயன்?" என்று அருளிச்செய்ய, நாயனாரும் இப்பாசுரங் கேட்டு நம்பியை ஸ்மயமாநமுக₂னாய் ஏறப் பாராநின்று கொண்டுபோக, இவரும் அவன் செய்யும் சேமத்தையெண்ணித் தெளிவுற்ற சிந்தையராய் மீண்டு திருமலையிலே போய் வ்யாக்₂யானித்துக்கொண்டு எழுந்தருளியிருந்தார். பின்னையும் ஒருநாள் முன்போலே அக்குளக்கரையிலே வடவ்ருக்ஷச்சா₂யையிலே எழுந்தருளியிருக்க, அங்கே நாயனாரும் அபி₄ஷேகஜலஹரணார்த்த₂மாகக் குடமெடுத்து வருமது கண்டு நம்பியும் அப்போதொரு சிந்தைசெய்து 'என்மனஞ்சூழ வருவானாய் உறங்குவான்போல் யோகுசெய்வான் தானே உணர்வைப் பெறவூர்ந்தவன் உறங்குகிறானோ' என்று, தம்முடைய ஆசார்ய தி₃வ்யஸூக்தியிலே "ஸ்வாபா₄விகாநவதி₄காதிஶயேஶித்ருத்வம் [ஸ்தோ-ர 11]

[நாராயணனே! பிரமன், சிவன், இந்திரன், (இவர்களைக்காட்டிலும்) மேலானவனும், கர்மத்திற்கு வசப்படாதவனுமான முக்தாத்மா என்கிற எல்லாரும் எந்த உன்னுடைய பெருமைக் கடலில் துளிக ளாக இருக்கின்றனரோ, அப்படிப்பட்ட உன்னிடத்தில், இயற்கை யானதும், எல்லையற்ற மேன்மையை உடையதுமான ஐஶ்வர்யத்தை எந்த வைதிகன் பொறுக்கமாட்டான்?] என்கிற ஶ்லோகத்தை ஒரு ஓலைப்புறத்திலேயெழுதி அவன் வருகிற வழியிலே போகவிடுத்திருக்க, அவனும் அவ்வழியில் வந்து அவ்வோலையைக் கண்டெடுத்து வாசித் துக்கொண்டு கடக்கப்பொகட்டு ஜலத்தை ஆஹரித்துக்கொண்டு மீண்டுபோகிறவன் ஜலத்தையும் இறக்கி முன்பெறிந்த ஏட்டைத்தேடி யெடுத்து மீண்டு குடமெடுத்துக்கொண்டு வருகிறவன் எங்களைக் கண்டு "ஶோகஶ்ஶ்லோகத்வமாக₃த:" [ரா.பா 2-40] [யாதொரு சோக மானது ஸமமான எண்ணிக்கையுடைய அக்ஷரங்களுடன் கூடிய நான்கு பாதங்கள் கொண்டதாக அந்த மஹாத்மாவான வால்மீகி யினால் பாடப்பட்டதோ, அந்த சோகம் அடிக்கடி உச்சரிப்பதால் சுலோகமாயிற்று.] என்று ஸ்ரீவால்மீகி ப₄க₃வாந் அர்த்த₂சிந்தனை பண்ணினாற்போலே இவனும் ஶ்லோகார்த்த₂ பர்யாலோசனை பண்ணா நின்றுகொண்டு கிட்டவந்து நின்று 'உங்கள்கையில் நழுவின பொருள் இதுவோ?' என்ன, நம்பியும், 'வேறே சிலர் பொருள் நழுவுமதொழிய எங்கள் பொருள் நழுவுமதல்ல' என்ன, அவனும் 'அது கிடக்கிடீர்; நீங்கள் எல்லாரும் ஓரிடத்திலே நடக்கிறதென்?' என்ன, நம்பியும் 'மார்க்க₃ம் கலக்கமற்றிருக்கையாலே' என்ன, அவனும் 'கேவலருக்கு மார்க்க₃ங்களுண்டோ?' என்ன, இவரும் 'பொருள் கையுண்டாய்ச் செல்லுமவனுக்கு அடுப்பது இதுவன்றோ?' என்ன, அவனும் 'இப்போது நீங்கள் உற்றாரை விட வந்தீர்களோ?' என்ன, இவரும் 'அதல்ல, கறவைகள் கொள்ள வந்தோம்' என்ன, அவனும், 'அனுஷ்டா₂தாக்களுக்கும் பஶுபாத₃தூ₄ளி பவித்ர மன்றோ?' என்ன, இவரும் 'அது இடமறிந்து நேர்படில் நல்லது' என்ன, அவனும் 'குறுக்கு நெடுக்காகில் பே₄த₃மென்?' என்ன, இவரும் 'செவ்வையிருக்கத் திர்யக்காகையே பே₄த₃ம்' என்ன, அவ னும் 'இது புதுவார்த்தைக் கட்டுக்களோ?' என்ன, இவரும் 'பழைய வார்த்தைக் கட்டுக்களும் இப்படியே' என்ன, அவனும் 'இதிலே பூர்வவிசாரம் வேண்டாவோ?' என்ன, நம்பியும் 'பரத்வத் திலே காண் விசாரமிருப்பது' என்ன, நாயனாரும் நிருத்தரனாய் நம்பியை ஏறப்பாரா நின்றுகொண்டு யதா₂ஸ்தா₂நமே போம்போது தலைதுலுக்கி அடைவுகேடு காணலாம்படி போனான்; நம்பியும் அது

கண்டு "ப்ரஸாத₃ மக₃மச்சித்தம்" [ப்ரபந்நாம்ருதப்? 18-59] [நெஞ்சம் தெளிவடைந்தது] என்னுமாபோலே நெஞ்சு முருகா நின்றதே! அவரேயினியாவாரே— என்று அநுஸந்தி₄த்து ஸாத்₄ய கோடியிலேறிட்டு, முதலிகளுடன் ஸல்லாபித்துக்கொண்டு திருமலையே மீண்டு எழுந்தருளினர்" என்றவாறே. உடையவரும் மிகவும் ஆநந்தி₃த்துக் கூரத்தாழ்வானையும் முதலியாண்டானையும் இருந்த முதலிகளையும் பார்த்தருளி—கேட்டீர்களோ, கோ₃விந்த₃னுக்கு ஆளவந்தார் தி₃வ்யஸூக்தி நெஞ்சிலுற்று அதற்கு வாங்மாத்ரத்தாலே வைதண்டி₃கச்ச₂ாயையைக் காட்ட, அதற்கு நம்பியும் ச₂ாயாமாத்ரத்தாலே ஸது₃த்தரங்களை வாக்சாதுர்யங்களாலே ரசிக்க, கோ₃விந்த₃னும் ஶாஸ்த்ரவித₃க்₃த₄னைகையாலே நம்பியினுடைய ஸ்ரீஸூக்திவைஶாரத்₃யக்ரமங்களிலே ஈடுபட்டு நிருத்தரனானிறே! எங்ஙனேயென்னில், 'கூடஸ்தே₂ாSக்ஷர உச்யதே' [கீதை 15-16] [க்ஷரன் என்றும், அக்ஷரன் என்றும் லோகத்தில் புருஷர்கள் இருவிதமானவர்கள்; எல்லா பூதங்களும் க்ஷரனாகும்; கூடஸ்தனான முக்தாத்மா அக்ஷரனெனப்படுகிறான். இருவரிலும் சிறந்தவன் புருஷோத்தமன்.] "அமரர்களாதி முதல்வன்" "தே₃ஹீ ஸந்மார்க்க₃வர்த்த₄ந:" [அவதாரத் திருமேனியை ஏற்றுக்கொண்டு நல்வழியை வளரச்செய்கிறான் (ஸர்வேஶ்வரன்).] 'நெறிவாசல் தானேயாய் நின்றான்" "கஶ்சிந் மாம் வேத்தி தத்வத:" [கீதை 7-3] [மனுஷ்யர்களில் ஆயிரக்கணக்கானவர்களில் ஒருவனே ஸித்தியடையும் வரையில் முயற்சி செய்கிறான். ஸித்தியடையும் வரையில் முயற்சி செய்பவர்களிலும் (பல்லாயிரத்தில்) ஒருவன்தான் என்னை உண்மையாக அறிகிறான்.] "யானே நீ என்னுடைமையும் நீயே", "ஜ்ஞாநேந ஹீந: பஶுபி₄ஸ்ஸமாந:" [நரஸிம்ஹபுராணம் 16-13] [ஆஹாரம், தூக்கம், பயம், ஸ்த்ரீபுருஷஸங்கமம் என்பவை இங்கு எல்லா ஜந்துக்களுக்கும் ஸமானம். மற்றவைகளைக் காட்டிலும் மனிதன் அறிவினால் மேலானவனாயிருக்கிறான். ஞானமற்றவன் பசுக்களுக்கு ஸமமானவன்.] "என்னினைந்து போக்குவரிப்போது" 'யே வா லலாடபூ₂லகேலஸதூ₃ர்த்₄வ புண்ட்₃ரா:" [பாத்மம்] [எவர்கள் நெற்றியில் விளங்குகிற ஊர்த்வபுண்ட்ரமுடையவர்களோ] "தவளப்பொடிக் கொண்டு நீரிட்டிடுமின்", 'ஊர்த்₄வ புண்ட்₃ரம் த்₃விஜாதீ₃நாம்" [த₄ர்மஶாஸ்த்ரப்] [அந்தணர்களுக்கு ஊர்த்வபுண்ட்ரமே தரிக்கத்தக்கது.] 'நீறுசெவ்வேயிடக் காணில்" "வேத₃மூலப்ரமாணாத்" [பட்டர் முக்தகப்] "மிக்கவேதியர் வேதம்", "ஸதே₃வ ஸோம்யேத₃மக்₃ர ஆஸீத்" [ச₂ாந் 6-2-1] [குழந்தாய்! (நாமரூபங்களுடன் காணப்படும்) இந்த உலகம்—

ப்ரளயகாலத்தில் (நாமரூபங்களில்லாமையால்) ஒன்றாகவும், (தன்னைப் போல் வேறொன்றில்லாததால்) இரண்டற்றதாகவுமிருந்த 'ஸத்' எனப்படும் ப்ரஹ்மமாகவே இருந்தது.] "த₄ர்மே ஸர்வம் ப்ரதிஷ்டி₂தம்" [தை-நா 50] [எல்லாமே தர்மத்தில் நிலைநிற்கிறது.] "அவித்₃யயா ம்ருத்யும் தீர்த்வா வித்₃யயாऽம்ருதமஶ்நுதே" [ஈஶாவாஸ்ய 11] [கர்மயோகத்தாலே ஸம்ஸாரகாரணமான ப்ராசீன கர்மத்தைத் தாண்டி உபாஸனத்தாலே மரணமற்ற பரமாத்மாவை அடைகிறான்.] "ப்ரணவோ த₄நுஶ்ஶரோ ஹ்யாத்மா ப்₃ரஹ்ம தல்லக்ஷ்யமுச்யதே। அப்ரமத்தேந வேத்₃த₄வ்யம் ஶரவத் தந்மயோ ப₄வேத் ||" [முண்ட₃க 2-4-2] [ஆத்மாவானது அம்பாகவும், ப்ரணவமானது அவ்வம்பை எய்யும் வில்லாகவும், ப்₃ரஹ்மமானது—அந்த ஆத்மாவாகிற அம்பு சென்றடையும் இலக்காகவும் கூறப்படுகிறது. (விஷயாந்தரங்களில் பற்றற்று) கவனத்துடன் இவ்வாத்மாவாகிற அம்பை ப்₃ரஹ்மமாகிற இலக்கைக்குறித்து எய்யவேணும். அம்பு இலக்குடன் ஒன்றாகக் கலப்பதுபோல் ஆத்மாவும் ப்ரஹ்மத்தோடு ஒன்றாகக் கலக்கிறது.] "நாராயணாத்₃ ப்₃ரஹ்மா ஜாயதே, நாராயணாத்₃ ருத்₃ரோ ஜாயதே" [நாராயணோபநிஷத்] [நாராயணனிடமிருந்து பிரமன் பிறக்கிறான்; நாராயணனிடமிருந்து உருத்திரன் உண்டாகிறான்.] என்று இப்படிப்பட்ட ஶ்ருதிஸ்ம்ருதீதிஹாஸ புராணாதி₃களிலே ப்ரதிபாதி₃க்கிற அர்த்த₂ங்களையெல்லாம் தத்காலத்திலே மநஸ்ஸானது அவகா₃ஹிக்க, கோ₃விந்த₃னும் நிருத்தரனாய் ப₃ாளாயமாநசித்தனாய்ப் போகையாலும், இவரும் அவனை ஸாத்₄ய கோடியிலேயேறிட்டுத் திரும்பியருளுகையாலும், நம்பிக்கு அவனுடன் ஓடின ஸாமர்த்₂யமிருந்தபடியென்!—என்று விஸ்மிதராய் ஸ்ரீவைஷ்ணவரை உபலாளித்தருளி 'பின்னையென்?' என்று கேட்டருள;

அவரும் — "யம் யம் ஸ்ப்ருஶதி பாணிப்₄யாம் யம் யம் பஶ்யதி சக்ஷுஷா। ஸ்த₂ாவராண்யபி முச்யந்தே கிம்புநர் ப₃ாந்த₄வா ஜநா: ||" [புராணஶ்லோகம்] [(பரமப₄ாக₃வதன்) தன் திருக்கைகளினால் எதையெதைத் தொடுகிறானோ, எதையெதைத் திருக்கண்களால் காண்கிறானோ, அவைகள் தாவரங்களாயிருந்தாலும் மோக்ஷமடைகின்றன. உறவினர்களைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ?] என்கிறபடியே தேவரீருடைய உப₄யவித₄ஸம்ப₃ந்த₄ம் பழுது போமோ? மூன்றும் கக்ஷியில் கார்யஸித்₃தி₄யைக் கேட்டருளவேணும்—என்று விண்ணப்பஞ் செய்தார், எங்ஙனேயென்னில்:— "திருமலைநம்பியும் திருமலையில் * சிந்தாமணியைத் திருவடிதொழுது புறப்பட்டு, காளஹஸ்தி எல்லைநிலத் தோப்பிலே எழுந்தருளி

யிருந்து. ஸ்ரீபாதத்து முதலிகளுக்குத் திருவாய்மொழி வ்யாக்யாநம் ப்ரஸாதித்தருளாநிற்க, நாயனாரும் ஒரு பாதிரிமரமேறிப் புஷ்பாப சயம் பண்ணாநிற்க, அவ்வளவிலே "திண்ணன் வீடு" என்கிற திருவாய்மொழிக்கு அர்த்தம் அருளிச்செய்யாநிற்க. நாயனாரும் மூன்றுபாட்டளவும் பூப்பறிக்கை தவிர்ந்து கேட்டுக்கொண்டிருந்து நாலாம்பாட்டிலே "எம்பெருமானுக்கல்லால் பூவும் பூசனையும் தகுமே" என்று வர. நாயனாரும் அம்மரத்தினின்றும் திடுக்கெனக்குதித்துக் கையிலிருந்த பூப்படலிகையையுஞ் சுழற்றியெறிந்து. தரித்திருந்த ருத்ராக்ஷத்தையும் அலங்கலழியவாங்கி விசிப்போகட்டு, 'தகாது தகாது' என்று நம்பி திருவடிகளிலே அடைவுகெட விழுந்துகிடந்து "அஜ்ஞஸ்சாசாரஹீநஸ்ச மலிநோ து:க்கஸாகரே | நிமக்ந:" [யான் நன்மை தீமை அறியாதவன்; ஒழுக்கமற்றவன்; அழுக்குடையவன்; துன்பக்கடலில் மூழ்கியவன்;] என்றும், "நீசனேன் நிறைவொன்றுமிலேன்" என்றும் சொல்லுகிறபடியே தம் வர்த்தமாநத்தைச் சொல்லி அதிவிஷண்ணராகிறார்; எங்ஙனேயென்னில்:— 'உபயவிபூதிநிர்வாஹத்துக்கு முடிசூடினவனிருக்க விரிதலையாண்டியை விரும்பினேனே!' என்றும், 'புதுக்கணிப்புடைய புண்டரீகாக்ஷனிருக்கப் பொறிபறக்கும் கண்ணனைப் பூசித்தேனே!' என்றும் "*கடல்மண்ணுண்ட கண்டனிருக்கக் * கறைகொண்ட கண்டனைக்காமித்தேனே!'என்றும். * கல்லெடுத்துக் கன்மாரிகாத்த கற்பகமிருக்கக் கையார்கபாலியைக் கண்டு வணங்கினேனே! என்றும். திருவிருந்தமார்பனிருக்கத்* திருவில்லாத்தேவனைத் தொழுதேனே! என்றும். *பீதகவாடைப்பிரானிருக்கப் புலியுரியுடையானைப் பின்றொடர்ந்தேனே!' என்றும். 'சதிரான கங்கையடியானிருக்கச் சுடுகாடு காவலனைச் சுற்றி வலம்வந்தேனே!' என்றும். பெருமலராகிற பெருந்துழாய்வநமிருக்கப் பெருங்கையாற்சுடமெடுத்துப் பேய்ச்சுரைக்கு நீர்வார்த்தேனே! என்றும் இப்படி பலவகையாகப் புலப்பி 'இவ்வாத்மாவை உஜ்ஜீவிப்பிக்கவேணும்' என்று தண்டனிட்டு எழுந்திராமலிருக்க. நம்பியும் முதலிகளை முகம்பார்த்து ஸாத்திவிகயோகமுண்டாயிருந்தது: ஆளவந்தார் க்ருபைபண்ணும்படிக்குக் குறையில்லை என்று அருளிச்செய்து இவரையும் முடிபிடித்தெடுத்து. உடம்பையும் தடவிப் பலபடியாக ஸாந்த்வநம்பண்ணி "ஆபிபந்நிவ சக்ஷுர்ப்யாம்" [கண்களால் பருகுபவன்போலவும்] என்கிறபடியே குளிர நோக்கி விஸ்ரம்பகதநம் நடவாநிற்க. இச்செய்தியையடையக் கேட்டு தத்ஸ்தாநத்தாரனைவரும் வந்து நம்பியுடனே 'எங்கள் ஸ்தாநத்துக்குக் கடவரான இவரை நீங்கள் எங்ஙனே அம்மான் பொடியிட அடுக்கும்?' என்ன, நம்பியும் 'அம்மான்பொடிக்கு சுடு

பட்ட இவரையே கேட்டுக்கொள்ளுங்கோள்; எங்கள் வழி அந்யாத்3ருசம்; அசல்வழி வருகிறோமல்லோம்' என்ன, அவர்களும் நாயனாரை 'வாரும்' என்று கையைப் பிடிக்க, இவரும் கையை உதறி 'நம்மையைப் பிடிக்கக்கூடுமோ?' என்று கருவூலத்தின் திறவுகோல் இலச்சினை மோதிரம் முதலானவற்றையும் பொகட்டு 'இனி உங்களுக்கும் நமக்கும் பணியில்லை' என்று கைதட்டி முகம்திருப்பிநிற்க, அவர்களும் நிராசராய் நம்பியுடனே 'நாங்கள் இச்செய்திகளையெல்லாம் நேற்றே கேட்டோம்' தங்கள் பிரான் நம்வழிவருவாரென்று உங்களுடனே சண்டைக்கு நிற்பதாக எண்ணியிருந்தோம்; காளஹஸ்தியுடையாரும் எங்கள் கனவிலே "பாஷண்ட3பௌ3த்3த4 சார்வாகைஸ்த்ரயீ த4ர்மோ விலோபித:" [புராண ஶ்லோகம்] [பாஷண்டிகளாலும், பௌத்தர்களாலும், சார்வாகர்களாலும் வேததர்மம் அழிக்கப்பட்டது.] என்கிறபடியே வேத3பா3ஹ்யரான பௌ3த்3த4ாதி3களாலே வேத3ஶாஸ்த்ரங்கள் ப்ரமுஷிதங்களாகாநிற்க, "த்ரித3ண்ட3தா4ரிணா பூர்வம் விஷ்ணுநா ரக்ஷிதா த்ரயீ" [புராண ஶ்லோகம்] [த்ரித3ண்டத்தை தரிக்கும் (த3த்தாத்ரேயரூபியான) விஷ்ணுவாலே வேதமானது காப்பாற்றப் பட்டது.] என்று சொல்லுகிறபடியே நாஸ்திகநிரஸநார்த்த2மாக த்ரித3ண்ட3ஸந்யாஸியான த3த்தாத்ரேயரைப்போலே ஶேஷாஶந அநந்த வைநதேயர்கள் யமுனைத்துறைவர் இளையாழ்வார் கோ3விந்த3ப4ட்டராகவும், இவர்கள் சேர்த்திக்கு ஶங்க2சக்ராம்ஶங்கள் முதலியாண்டான் கூரத்தாழ்வானாகவும், மற்றுமுள்ள விஷ்ணு பார்ஷத3ங்களும் இப்படியே வந்து அவதரித்தார்கள்; இது நமக்கு ப்ரியமாகையாலே, கோ3விந்த3ப4ட்டருக்கு முன்பு காஶிவாஸாபேக்ஷையிருக்கையாலே அந்த பு3த்3தி4யைத் தவிர்க்கைக்காக நாமே உள்ளங்கை கொணர்ந்த வ்யாஜமிட்டு அழைத்துவைத்துக்கொண்டதொழிய மற்றில்லை; ஆகையால், அவர்கள் ஸ்வேச்ச2ாவிஹாரிகள் என்று சொன்னார்' என்று சொல்லி மீண்டுபோக, நம்பியும், இவரைக் கூட்டிக்கொண்டு திருப்பதியேற எழுந்தருளித் தத்க்ஷணமே உபநயநாதி3களையுஞ் செய்வித்து "ஸம்ஸ்காரா: பஞ்ச கர்த்தவ்யா:" [வ்ருத்தஹாரீதஸ்ம்ருதி 8-63] [பஞ்சஸம்ஸ்காரத்தை முன்னிட்டுக் கொண்டு, ஆசார்யன் மந்திரத்தை ஓதுவிக்கவேண்டும். சிஷ்யன் பரமைகாந்தியாவதற்காக ஐந்து ஸம்ஸ்காரங்களைச் செய்விக்க வேண்டும்.] என்று நெடுமாலருவியாகிய ஸ்வாமி புஷ்கரிணிக்கரையிலே பஞ்சஸம்ஸ்காரங்களையும் ப்ரஸாதி3த்தருளி, திருப்பல்லாண்டு முதலாக ஆழ்வார்களுடைய தி3வ்யப்ரப3ந்த4ங்களையும் ஓதுவித்து, அர்த்த2பஞ்சக ஜ்ஞாநத்தையுமுண்டாக்கி விசேஷித்து க்ருபை பண்ணியருளினார். இவரும் "தேவுமற்றறியாதே ஆசார்யபதை3க

நிஷ்டராய், "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" [ரா-அ 31-25] [நீர் விழித்துக்கொண்டிருக்கும்போதும். தூங்கும்போதும் எல்லா அடிமைகளையும் செய்வேன்] என்றிருக்குமவரைப்போலே ஒழிவில் காலத்திற்படியே அவர் திருவடிகளிலே சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும் ஸர்வவித கைங்கர்யங்களும் செய்துகொண்டிரா நின்றார் ; இந்நாள் ஸேவித்திருந்து விடைகொண்டேன்" என்று விண்ணப்பஞ்செய்ய, உடையவரும் அந்த ஸ்ரீவைஷ்ணவரை மிகவும் க்ருபை செய்தருளினர்.

4 பெரியதிருமுடியடைவு: ஸௌமுகாம்ஸ பூதரான பெரிய திருமலைநம்பிக்குத் திருவவதார ஸ்தலம் தொண்டைமண்டலத்தில் திருமலை. திருநக்ஷத்ரம் சித்திரை மாஸம் ஸ்வாதி. திருவவதாரம் திருவேங்கடமுடையான் வரப்ரஸாதத்தாலே. திருநாமங்கள் பெரிய திருமலைநம்பி, ஸ்ரீஸைலபூர்ணர், குமாரர் பிள்ளை திருமலைநம்பி, குமாரத்திகள் இருவர். மருமக்கள் எம்பாரும், சிறியகோவிந்தப்பெருமாளும், எம்பெருமானாரும். திருவாராதனம் மலைகுனியநின்ற பெருமாள், ஆசார்யர் ஆளவந்தார், ஸிஷ்யர் ஸ்ரீபாஷ்யகாரர், இருப்பிடம் திருமலை, இவர் திருவேங்கடமுடையானுக்குத் திருத்தகப்பனார், திருமலையார்க்கெல்லாம் கூடஸ்தர்,

இவர்க்குத் தனியன்

பிதாமஹஸ்யாபி பிதாமஹாய ப்ராசேதஸாதேஸபலப்ரதாய |
ஸ்ரீபாஷ்யகாரோத்தம தேஸிகாய ஸ்ரீஸைலபூர்ணாய நமோ நம:
ஸ்தாத் ||

5. வார்த்தாமாலை 441d வார்த்தைச் விவரணம். 'வித்தாகுங் காய் பிஞ்சிலே தெரியும்' என்றார் பெரியதிருமலைநம்பி; [பல மரங்களுக்கு மூலகாரணமாயிருக்கும் விதைக்காயைப் பிஞ்சிலேயே கண்டு பிடித்துவிடலாம். அதுபோலே உலகம் வாழவந்தவர் எம்பெருமானார் என்பதை அவருடைய சிறு வயஸ்ஸிலேயே நாங்கள் கண்டுவிட்டோமென்று கருத்து.]

6. திருப்பாவை—14 ஆறாயிரப்படி. (செங்கல் பொடிக்கூறை) தாமஸப்ரக்ருதிகளைச் சொல்லுகிறது என்று எம்பார். தம:ப்ரசுரர் உணர்ந்தார்களென்று சொல்லியோ எழுப்புவதென்று ஸத்த்வநிஷ்டரான ஸந்ந்யாஸிகளைச் சொல்லுகிறதென்று திருமலைநம்பி.

7. நாச்சியார் திருமொழி (10-2) வ்யாக்யானம். (மாற்றுஞ்லைப் பட்டவர் கூட்டத்து) இதுக்குத் திருமலைநம்பி பணிக்கும்படி—தான் பிரிவாலே நொந்தபடியாலே "ஜராமரண மோக்ஷாய" என்று ஆஸ்ர

யிக்கும் திரளின் நடுவே என்னைக் கொடுபோய் வைக்கவல்லையே யென்கிறுள்—என்றருளிச் செய்வர்.

8. நாச்சியார் திருமொழி (10-8) வ்யாக்யானம். (அவதாரிகை) திருமலை நம்பி, இவ்விரண்டு பாட்டையும் ஆதரித்துப் போருவராய், அவ்வழியாலே நம்முடையவர்களெல்லாரு மாதரித்துப் போருவர்கள்; இப்பாட்டையும் மேலிற்பாட்டையும் அநுஸந்தித்து, கண்ணும் கண்ணீருமாய் ஒரு வார்த்தையும் சொல்லாதே வித்₃த₄ராயிருப்பராம்.

9. திருவிருத்தம் 36 ஈடு (பெரியவாச்சான்பிள்ளை வ்யா). (இலங்கையித்யாதி₃) 'அபி₄மதவிஷயத்துக்காக அவ்வரணையழித்து உள்ளேபுக்கு உபகரித்தவர் இப்போது பிறர்நோவு தமக்குப் போது போக்காக பு₃த்₃தி₄பண்ணியிருக்கிறாராகாதே' என்று எம்பாரருளிச் செய்யும் படி. அங்ஙனன்றிக்கே ' வரபலத்தாலே ஒருவராலழிக்கவொண்ணாத அரணையுடைத்தான அரணையழித்தது ஒருத்திக்காகவென்றிருந்தோம்; அதங்ஙனன்றியே இங்ஙனே கட்டளைப்பட்டு த₃ர்ஸநீயமாயிருக்கிறதென்! என்னும் பொருமையாலே அழித்தாரித்தனை; அப்படி நம்முடைய ஸ்த்ரீத்வத்தால் வந்த அரணையழிக்கைக்காகவல்லது நம்மோடே ஸ்நேஹமுண்டாயல்ல" என்று திருமலைநம்பி வார்த்தை.

10 திருவிருத்தம் 44 பெரியவாச்சான்பிள்ளை வ்யா. (பேரும்) திருமலைநம்பி அந்திமத₃சையிலே கணியனூர் சிறியாத்தானை "பிள்ளை தமக்குத் தஞ்சமாக நினைத்திருக்குந் திருநாமமென்? அத்தைச் சொல்லவேணும்" என்ன, "இவர் முன்னே நாமெத்தைச் சொல்லுவது" என்று கூசியிராநிற்க, "தாசரதீ! பேசாதிருக்குமவஸ்தையன்று காணிது" என்ன, 'நாராயணாதி₃ நாமங்களுஞ் சொல்லிப்போருவர்; ஆகிலும் விரும்பியிருப்பது அழகியமணவாளப்பெருமாள் என்னும் திருநாமத்தை' என்ன, 'ப₄ர்த்ருநாமத்தோபாதியாயிராநின்றது; ஆகிலும் பிள்ளை நினைத்திருந்தது போக்கித் தஞ்சமில்லை' என்று 'அழகிய மணவாளப்பெருமாளே சரணம்' என்று திருநாட்டுக்கு நடந்தார். கூரத்தாழ்வானுபாதியாகையாலே பட்டரைப் பிள்ளையென்பர்.

11. திருவிருத்தம் ஈடு 3. கீழ்த் தாம் பகவத் விஸ்லேஷத்தாலே கண்ணுங் கண்ணநீருமாயிருக்கிற இருப்பு வைஷ்ணவர்களுக்கினிதாயிருக்கிறபடியைக் கண்டு அவ்வழியாலே தம் தசையைத் தாமே அநுபவித்தாரென்றதே; இப்படி பகவத் விஷயத்திலே அவகா₃ஹித்திருக்கிற நமக்குக் கேவலம் மாநஸாநுஸந்தா₄னமாத்ரமேயாய் விடுகிறதோ? பா₃ஹ்யஸம்ச்லேஷமும் பெற்றுவிடுகிறதோ? என்று திருமலைநம்பி பணிப்பரென்று பிள்ளை திருநறையூரரையர் அருளிச்செய்வர்.

12. பகவத் விஷயம் 1-4-8 (வாயலகினின்னடிசில் வைப்பாரை நாடாய்) பெரியதிருமலைநம்பி தம்முடைய அந்திமதசையிலே தமக்கொரு - வெண்ணெய்க்காடும் பிள்ளையாயிற்று திருவாராதனம், அவர் திருமுன்பில் திருத்திரையை வாங்கச்சொல்லி "சாயலொடு மணிமாமை தளர்ந்தேன் நானினி யுனது வாயலகிலின்னடிசில் வைப்பாரை நாடாயே" என்றாராம்.

13. பகவத் விஷயம் 4-3 ப்ரவேசம். ஸர்வேச்வரனுடைய "பாலனாய் ஏழுலகு"—இதுதனக்கு மூன்றுபடியாக நிர்வஹிப்பர்கள் நம் முதலிகள்;— எம்பார், "அம்புலியம்மானைப் பிடித்துத்தரவேணும் என்றழுத ப்ரஜைக்கு, தேங்காயைக் கொடுத்து அழுகையை ஆற்றுவாரைப்போலே, வேறொரு குணாவிஷ்காரத்தைப்பண்ணி அநுபவிப்பிக்க அநுபவிக்கிறார்" என்றருளிச்செய்வர். திருமலைநம்பி, "ஒருவன் ஒன்றை அபேக்ஷித்தால், அவனும் அது செய்வானாகத் தலை துலுக்கினால், பெற்றானாய்ப் பின்பு பின்னிசிழவு தோன்றும்படியன்றிருப்பது; ஆகையாலே, அவனும் 'அப்படியே செய்கிறோம்' என்கை, கீழிளிமுலை மறந்து எல்லாம் பெற்றாராயநுபவிக்கிறார்" என்று.

முக்கியமான குறிப்பு. திவ்யப்ரபந்த வ்யாக்யானங்களிலுள்ள இந்த 6 to 13 ஐதிஹ்யங்களில் 12-வது ஐதிஹ்யத்திலே 'பெரிய திருமலைநம்பி' என்று காணப்படுகிறபடியால், அதுவே பெரியதிருமலை நம்பியைப்பற்றியது. மற்றவற்றில் "திருமலைநம்பி" என்றே காணப்படுவதாலும், எம்பார் முதலானவர்களோடு சேர்த்துப்படிப்பதாலும், அவை பெரியதிருமலைநம்பியின் குமாரரான பிள்ளை திருமலைநம்பியைப் பற்றியவையாகவேயிருக்கத்தகும்.

14. ப்ரமேயரத்னம். எம்பார் திருமலைநம்பி ஸ்ரீபாதத்திலே ஆச்ரயித்து, பாஷ்யகாரர் பக்கலிலே ஜ்ஞாநோபஜீவனம் பண்ணினார்.

15. யதிராஜ வைபவம் முதல் எட்டு ஸ்லோகங்களின் அர்த்தம்.

1. ஸ்ரீமத்யாமுநாசார்யரிடமிருந்து உபயவேதாந்தங்களின் கருத்தை அறியப்பெற்றவராய், (பவிஷ்யதாசார்யரைக் கண்டுபிடித்து, தர்சனப்ரசாரத்தை அவரிடம் ஒப்பிக்கவேண்டும் எனும்) அவருடைய ஆஜ்ஞையை நிறைவேற்றவேண்டும் என்னும் ஒரே குறிக்கோளை உடையவராய், தமது இரு ஸஹோதரிகளுக்கும் தகுந்த வரன்களைத் தேடுகின்றவராய், திருவேங்கடமுடையானுக்குத் தீர்த்தம், புஷ்பம் முதலான திருவாராதனத்திற்கு உறுப்பான உபஹாரங்களை ஸமர்ப்பித்துக்கொண்டு, திருமலையிலே திருமலைநம்பி என்னும் ஆசார்யர் வாழ்ந்து வந்தார்.

2. இவ்வாறிருக்கையில், நற்குடிப்பிறந்தவர்களாய், வேத₃ வேதா₃ங்க₃ங்கள் கற்றவர்களான—மது₄ரமங்க₃லத்தில் நித்யவாஸம் செய்யும் கமலநயனப₄ட்டரும், ஸ்ரீபெரும்பூதூரில் நித்யவாஸம் செய்யும் கேஶவஸோமயாஜியும் அவ்விரு ஸஹோத₃ரிகளில் ஒவ்வொருத்தியை மணம் புரியவிரும்பி, திருமலை நம்பியிடம் வந்தார்கள்.

3. தமது திருவடிகளில் வணங்கிப் ப்ரார்த்தி₂க்கப்பட்ட திருமலை நம்பி, மிகவுகந்தவராய், அவ்விருவரையும் தக்க வரன்களாக நிர்ச யித்து, ஶங்க₂சக்ரத₄ாரணம், மந்த்ரோபதே₃ஶம் முதலான பஞ்ச ஸம்ஸ்காரங்களை அவர்களுக்குச் செய்துவைத்தார்.

4. கேஶவஸோமயாஜியானவர் அந்த ஸஹோத₃ரிகளில் மூத்தவளான பூ₄மிதே₃வியை மிகவுகந்து மணம் புரிந்துகொண்டார். அவ் வண்ணமே இளையவளான ஸ்ரீதே₃வியைக் கமலநயனப₄ட்டர் மணம் புரிந்துகொண்டார். இத்திருமணங்களாலே திருமலைநம்பியும் அவ் விரு மணவாளப்பிள்ளைகளும் ஆநந்த₃மடைந்தனர்.

5. அதன்பிறகு, திருமலைநம்பியின் அனுமதிபெற்று, மனைவியரோடு கூடிய அவ்விருவரும் தத்தம் ஊருக்குச்சென்று, நல்லொழுக்கம் உடையவர்களாய், ஸ்ரிய:பதியை ஆராதி₄ப்பவர்களாய், அவனடியார்களிடம் அன்பு பூண்டவர்களாய், மனைவியரோடு நெடுங்காலம் இன்புற்று வாழ்ந்துவந்தனர்.

6, 7. அதன்பிறகு, உலகிற்கே மங்க₃ளமளிக்கும் பிங்க₃ளவருஷத்தில், சிறப்புற்ற சித்திரை மாஸத்தில், ஶுக்லபக்ஷத்தில் பஞ்சமி திதியில் திருவாதிரை நக்ஷத்திரத்தோடு கூடிய வியாழக்கிழமையன்று நன்மைமிக்க ஸிம்ஹலக்₃னத்தில் மறைமுடிகளின் முடிவை நிலைநாட்டுவதற்காகவும், வேத₃த்திற்குப் புறம்பான பா₃ஹ்யமதங்களும் வேத₃த்திற்கு அவப்பொருள் சொல்லும் குத்₃ருஷ்டிமதங்களும் அழிவதற்காகவும் கேஶவஸோமயாஜியின் மனைவியான பூ₄தே₃வியிடம் ஆதிஶேஷாம்ஶத்தை உடையவராய், ஒளிமிகுந்த ஒரு மஹாபுருஷர் அவதரித்தார்.

8. திருமலைநம்பியும் ஸ்ரீபெரும்பூதூருக்கு எழுந்தருளி, அற்புதனான மருமகனைக் கடாக்ஷித்து, அவரது ரக்ஷையின்பொருட்டு ஶங்க₂ம் சக்ரம் முதலான பஞ்சாயுத₄ங்கள்கொண்ட ஐம்படைத்தாலியை அணிவித்து, ராமாநுஜன் என்னும் திருநாமத்தையும் இட்டருளினார்.

16. யதிராஜ வைபவம் 70-வது ஶ்லோகத்தின் அர்த்த₂ம். (தமது சிறியதாயார் பிள்ளையான) கோ₃விந்த₃ப₄ட்டர் கருத்தைத்

திருத்துவதற்காகத் திருமலைநம்பியிடம் யதிராஜரால் அனுப்பப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்கள், அங்குசென்று திரும்பிவந்து, "கோ₃விந்த ப₄ட்டர் (உள்ளங்கைகொணர்ந்த நாயனாராயிருந்த நிலைபோய் சிவலிங்க₃ ஸம்ப₃ந்த₄ம் கழியப்பெற்று, திருமலைநம்பியின் திருவடித் தாமரையில் வண்டுபோலேயானார்" என்னும் செய்தியை யதிராஜருக்குத் தெரிவித்தனர்.

17. யதிராஜ வைபவம் 75 76-வது ஶ்லோகங்களின் அர்த்தம்

75. அதற்குப்பின் பல சிஷ்யர்களோடு கூடியவராய், காஞ்சீ மார்க்க₃மாக ப₄க்தியோடு திருவேங்கட மலைக்குச்சென்ற யதிராஜர் திருமலைநம்பியாகிற ஆசார்யரால் எதிர்கொண்டழைக்கப்பட்டு அவரை வணங்கினார்.

76. அவருடைய கடாக்ஷத்தாலே அலர்மேல் மங்கையுறை மார்பனை ஶரணடைந்து, அத்திருமலையிலேயே ஒருவருஷம் வாழ்ந்து அத்திருமலைநம்பியிடமிருந்து பலவித₄மான அரும்பொருள்கள் நிறைந்த ஸ்ரீராமாயணத்தை உபதே₃ஶம் பெற்றார்.

18. குருபரம்பராஸாரம். திருமலைநம்பி ஸ்ரீபாத₃த்திலே (எம்பெருமானார்) ஸ்ரீமத்₃ ராமாயணம் கேட்டருளினார்.

19. தி₃வ்யஸூரிசரிதம் 18—4.

20. ப்ரபந்நாம்ருதம். அத்தியாயம் 18, 19, 30, 114.

21. பெரியதிருமலைநம்பி அருளிய அமலனாதிபிரான் தனியன்.

காட்டவே கண்டபாத கமலம் நல்லாடை யுந்தி
தேட்டரு முதரபந்தம் திருமார்வு கண்டம் செவ்வாய்
வாட்டமில் கண்கள் மேனி முனியேறித் தனிபுகுந்து
பாட்டினால் கண்டுவாழும் பாணர் தாள் பரவினோமே.

22. பெரியதிருமலைநம்பி திருநக்ஷத்ரத் தனியன்.

ஸ்ரீமல் லக்ஷ்மண யோகீ₃ந்த்₃ர ஸ்ரீராமாயண தே₃ஶிகம் ।
ஸ்ரீஶைலபூர்ணம் வ்ருஷப₄ ஸ்வாதி ஸஞ்ஜாத மாஶ்ரயே ॥

23. பெரியதிருமலை நம்பியின் வாழித்திருநாமம்.

வைகாசிச் சோதிநாள் வந்துதித்தான் வாழியே
வண்திருவேங்கடமுடையான் வரபுத்திரன் வாழியே
அய்யன் ஸ்ரீ ஆளவந்தார் அடிதொழுவோன் வாழியே
அனவரதம் மலைகுனியர்க்கு அடிமை செய்வோன் வாழியே

மெய்யனிராமானுசாரியன் விரும்புமவன் வாழியே
மிக்கதிருமலையார்க் கெல்லாம் மேலாவான் வாழியே
செய்யதமிழ் வேதத்தின் சிறப்பறிந்தோன் வாழியே
திருமலைநம்பிகள் உபயதிருவடிகள் வாழியே.

[குறிப்பு:— ப்ரபந்நாம்ருதம் பெரியதிருமுடியடைவுகளில் பெரியதிருமலைநப்பி திருநக்ஷத்ரம் சித்திரை ஸ்வாதி என்று உள்ளது. திருநக்ஷத்திரத்தனியன் வாழித்திருநாமங்களில் வைகாசி ஸ்வாதி என்று உள்ளது. எதுசரி என்பது ஆராயவேண்டிய விஷயம்.]

# திருவரங்கப்பெருமாளரையர் வைபவம்

**ஸ்ரீராமமிஶ்ரபத₃பங்கஜ சஞ்சரீகம்**
**ஸ்ரீயாமுநார்யவரபுத்ரமஹம் கு₃ணாட்₄யம் ।**
**ஸ்ரீரங்க₃ராஜகருணா பரிணாம த₃த்தம்**
**ஸ்ரீபா₄ஷ்யகார சரணம் வரரங்க₃மீடே₃ ॥**

[ஸ்ரீராமமிஶ்ரராம் மணக்கால் நம்பியின் திருவடித் தாமரையில் வண்டாயிருப்பவரும், ஸ்ரீயாமுநாசார்யருடைய சிறந்த புத்திரரும், கு₃ணத்தில் மிக்கவரும், ஸ்ரீரங்க₃ராஜ கருணையினாலே அளிக்கப்பெற்றவரும், ஸ்ரீபா₄ஷ்யகாரரை சிஷ்யராகக் கொண்டவருமான திருவரங்கப் பெருமாளரையரைத் துதிக்கிறேன்.]

எம்பெருமானார் அவதரித்த பிங்க₃ள வருஷத்தில் (கி. பி. 1017) வைகாசிக் கேட்டையில், யாமுநாசார்யரான ஆளவந்தாருக்கும், ஸ்ரீரங்க₃நாய்ச்சியாருக்கும் முதல் குமாரராய் 'ஶங்கு கர்ணர்' என்னும் நித்யஸூரியின் அம்ஶமாக ஸ்ரீரங்க₃நாத₂னின் கருணையாலே அவதரித்தவர் இவர். ஆளவந்தார் இவரைத் தம் ஆசார்யரான மணக்கால் நம்பியிடம் ஆஶ்ரயிக்கச் செய்திருந்தார் என்பது தனியனிலிருந்து விளங்குகிறது. ஸ்ரீரங்க₃நாத₂ன் நியமனத்தாலே காஞ்சியில் தேவப்பெருமாளைத் தம் இசையாலே மயக்கி வரம்பெற்று, யதிராஜரைத் திருவரங்கத்திற்கு அழைத்துவந்தவர் இவர். ஸ்ரீரங்க₃நாத₂னுக்கு அரையராயிருந்த இவர் எம்பெருமானார்க்கு அருளிச்செயல் சந்தையும், சரமோபாயமும், நல்வார்த்தைகளும் உபதே₃ஶித்தவர். இவருக்கு ஸந்ததியில்லாமையால், தம் தம்பிகளான தெய்வத்துக்கரசுநம்பி, பிள்ளையரசுநம்பி, சொட்டைநம்பி ஆகியவர்களை எம்பெருமானாருக்கு ஶிஷ்யர்களாக்கினார்.

ஆக எம்பெருமானாருடைய ஐந்து ஆசார்யர்களின் வைப₄வம் இவ்வளவால் கூறப்பட்டது. இவர்கள் அனைவரும் எம்பெருமானார் உத்தாரக ஆசார்யர் என்பது தோற்றத் தங்களுடைய தம்பிகளையும் குமாரர்களையும், குமாரத்திகளையும் எம்பெருமானாரிடமே ஆஶ்ரயிப்பித்தனர்.

## ஐதிஹ்ய நிர்வாஹங்கள்

1. ஆறுயிரப்படி கு₃ருபரம்பராப்ரப₄ாவம். இளையாழ்வார் திருவரங்கப்பெருமாளரையரிடத்தில் சரமோபாயத்தை யுணர்தல். பின்பு எம்பெருமானாரும் திருவாய்மொழி சாத்திப்போர ப்ரீதராயிருக்க அவரைப் பார்த்துப்பெரியநம்பியும் 'ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் பக்கலிலே இன்னமொரு அர்த்த₂விஶேஷமுண்டு; அத்தை அவர் பக்கலிலே கேளும்'என்று அருளிச்செய்தருள, உடையவரும் அது லபி₄க்கைக்காக அன்றுமுதல் ஆறுமாஸம் அரையருக்கு உகப்பாகப் பாலமுதுகாய்ச்சி ஸமர்ப்பித்தும் திருவத்₄யயந காலங்களிலே அரையர் திருமேனிக்கு அநுருபமாக மஞ்சட்காப்பு அரைத்து ஸமர்ப்பித்தும் அநுவர்த்தித்துப் போருங்காலத்திலே ஒருநாள் மஞ்சட்காப்பரைத்து நீராடப் பண்ணுகிற காலத்தில் அவருடைய திருமேனிக்கு அநுருபமல்லாதிருக்கிறபடியை அவர் திருமுகமண்டல விகாரத்திலே கண்டு மஞ்சட்பாத்ரத்தைக் கடக்கவைத்து வேறே பாங்காக மஞ்சட்காப்பரைத்துச் சாத்தி நீராடப்பண்ணியருள, திருவரங்கப்பெருமாளரையரும் அத்தைக் கண்டு மிகவும் திருவுள்ளமுகந்தருளி உடையவரைக்குறித்து, 'என்னுடைய ஸர்வஸ்வத்தையுங் கொள்ளை கொள்ளவோ நீர் இப்படி செய்தது' என்று அருளிச் செய்து. "வாரீர் எம்பெருமானாரே! உமக்கு ஒரு சரமபுருஷார்த்த₂ஞ் சொல்லுகிறோம்: கேளீர்' என்று 'தேவு மற்றறியாத ஸ்ரீமது₄ரகவிகளைப்போலே நீரும் "கு₃ருரேவ பரம் ப்₃ரஹ்ம கு₃ருரேவ பரம் த₄நம் / கு₃ருரேவ பர: காமோ கு₃ருரேவ பராயணம் | கு₃ருரேவ பரா வித்₃யா கு₃ருரேவ பரா க₃தி: | யஸ்மாத் தது₃பதே₃ஷ்டாऽஸௌ தஸ்மாத்₃கு₃ருதரோ கு₃ரு: ||" [புராண ஶ்லோகம்] [கு₃ருவே மேலான ப்₃ரஹ்மம்; குருவே மேலான தனம்; குருவே மேலான காமம்; குருவே மேலான ப்ராப்யம்; குருவே மேலான கல்வி; குருவே மேலான ப்ராபகம்; அப்பரம்பொருளையே உபதேசிப்பதால் குரு அதைக் காட்டிலும் உயர்ந்தவர்.] என்று சொல்லுகிறபடியே, தீமனங்கெடுத்தும் மருவித்தொழும் மனமே தந்தும் அறியாதனவறிவித்த ஆசார்யனே உபாயோபேயம்' என்று விஶ்வஸித்து, "ஆசார்யஸ்ஸ ஹரிஸ்ஸாக்ஷாத் சரரூபி ந ஸம்ஶய:" [புராண ஶ்லோகம்] [ஆசார்யனே நேரே

நடமாடும் பரமபுருஷன்; இதில் ஐயமில்லை.] என்றும், "பூதகவாடைப் பிரானுர் பிரமகுருவாகிவந்து" என்றும் சொல்லுகிறபடியே உறங்கும் பெருமாள்தானே உலாவும் பெருமாளாய் வந்தார் என்றிரும்' என்று பஞ்சமோபாயநிஷ்டையான சரமபர்வார்த்தவிஶேஷத்தை ப்ரஸாதித்தருளினர்.

2. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம். குருகைக்காவலப்பன் வைபவம் ஐதிஹ்ய நிர்வாஹம் 5ல் முற்பகுதி.

3. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம். அநந்தரம் ராமாநுஜனும், கூரத்தாழ்வானுக்கும் முதலியாண்டானுக்கும் மீமாம்ஸாஶாஸ்த்ரயுக்தமஶ்ரமம் பண்ணுவித்துக்கொண்டிராநிற்க, இவருடைய ஆஶ்ரம ப்ராப்தி முதலான இச்செய்திகளைக் கோயிலிலே ஆளவந்தார் ஸ்ரீபாதத்து முதலிகளெல்லாரும் கேட்டுப் போரவுகந்து, தங்களிலே விசாரித்துக்கொண்டு நம்பெருமாள் ஸந்நிதியிலே சென்று 'இளையாழ்வாரை தேவரீர் ஸந்நிதியிலே நித்யவாஸம் பண்ணும்படி இங்கே அழைப்பித்துக்கொண்டருளவேணும்' என்று விண்ணப்பஞ் செய்ய, பெரியபெருமாளும் பேரருளாளர்க்கு அப்போதே திருமுகம் போகவிட்டருள, பேரருளாளரும் கேட்டருளி, 'தந்தம் அபிமாநத்தைப் புறப்பே போகவிடிலன்றோ நாம் நம்மிராமாநுசனை விடுவது' என்று அருளிச்செய்துவிட, இச்செய்தியைக் கோயிலிலே பெரியநம்பி முதலான முதலிகளெல்லாருங் கேட்டு 'இனிச்செய்ய அடுப்பதென்? என்று தங்களிலே விசாரித்தருளி, 'தேவப்பெருமாள் பரமோதாரராயிருப்பர். பாட்டுக்குப்போர நல்லராயிருப்பர்' என்று, ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையரைக் குறித்து, "வேகவத்யுத்தரே தீரே க்ஷேத்ரே ஸத்யவ்ரதாக்யகே I அஸ்தி காஞ்சீதி விக்யாதா புரீ புண்யவிவர்த்தநீ II" [வேகவதீநதியின் வடகரையில், ஸத்யவ்ரதம் என்னும் க்ஷேத்ரத்தில் புண்ணியத்தை வளர்க்கும் காஞ்சி என்று புகழ் பெற்ற நகரம் உள்ளது.] என்று புண்யவர்த்தநமாகச் சொல்லப்பட்ட காஞ்சீ மஹாநகரியிலே தேவரீர் எழுந்தருளிப் புண்யகோடி விமாநமத்யஸ்தராய் அகிலர்க்கும் ஸர்வாபேக்ஷித ப்ரதராயிருக்கிற பேரருளாளரைப் பாடியுகப்பித்து 'நமக்கு ராமாநுசனைத் தரவேணும்' என்று கேட்டு வாங்கி அழைத்துக்கொண்டு எழுந்தருள வேணும்—என்று விண்ணப்பஞ்செய்ய, அவரும் அப்பொழுதே புறப்பட்டு நம்பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்து பெருமாள்கோயிலை நோக்கி யெழுந்தருள, இவர் இப்படி எழுந்தருளுகிற செய்தியைக் கேட்டு ஸ்வஜநமான வரந்தரும் பெருமாளரையர் எதிரேவந்து தம்முடைய திருமாளிகைக்கு எழுந்தருளுவித்துக்கொண்டுபோய், ஸத்

கரித்து அமுது செய்விக்க. இவரும் அதிப்ரீதராயெழுந்தருளியிருக்க, அதின் மற்றை நாள் விடிவோரை பேரருளாளர் வையமாளிகையிலே 'கச்சிக்கு வாய்த்தான்' என்கிற திருமண்டபத்திலே ஏறியருளி அனைத்துக்கொத்திலுள்ள பரிகரமும் ஸேவித்திராநிற்கத் திருக்கச்சி நம்பியும் திருவாலவட்டம் பரிமாற அருகே ராமாநுசனும் அவரருளிச் செய்த வரத₃ராஜாஷ்டகத்தை அநுஸந்தி₄த்துக்கொண்டு ஸேவித்து நிற்கச்செய்தே, திருவரங்கப்பெருமாளரையர் எழுந்தருளின செய்தியைத் திருக்கச்சிநம்பி கேட்டருளி எதிர்கொண்டு அரையரை ஸேவிக்க, அவரும் க்ருபைபண்ணி அந்யோந்யம் குஶலப்ரஶ்நம் பண்ணிக்கொண்டிருக்கச் செய்தே, அரையரும் நம்பியுடனே 'பேரருளாளரை ஸேவிக்க வேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் பெருமாளுடைய திருவோலக்கத்திலே அழைத்துக்கொண்டு போக, அரையரும் வரத₃ராஜனை ஸேவித்து, "கதா₃ புநஶ்ஶங்க₂ ரதா₂ங்க₃கல்பக த்₄வஜாரவிந்தா₃ங்குஶவஜ்ரலாஞ்ச₂நம் । த்ரிவிக்ரம த்வச்சரணப்₃ஜத்₃வயம் மதீ₃யமூர்த்த₄நம் அலங்கரிஷ்யதி ॥" [ஸ்தோ-ர. 31] [திரிவிக்கிரமாவதாரம் செய்த எம்பிரானே! சங்கு, சக்கரம், கல்பகவ்ருக்ஷம், கொடி, தாமரை, அங்குஶம், வஜ்ராயுத₄ம் இவைகளை அடையாளமாக உடைய உன் திருவடித்தாமரையிணை என் தலையை எப்போதுதான் அலங்கரிக்கப்போகிறது?] என்று அநுஸந்தி₄த்துக்கொண்டு தண்டன் ஸமர்ப்பித்து நிற்க, பெருமாளும் தீர்த்த₂ப்ரஸாத₃ங்களையும் ஸ்ரீஶட₂கோபனையும் ப்ரஸாதி₃த்தருள, இவரும் 'திருப்பொலிந்த சேவடி என்சென்னியின் மேல் பொறித்தாய்' என்று ப்ரீதராய் நிற்கிறவளவிலே, பெருமாளும் இவரை அருளப்பாடிட்டருள, திருவரங்கப்பெருமாளரையரும் ப₄க்தி புரஸ்ஸரமாக "என்னெஞ்சமேயான்" என்று தொடங்கி "உலகேத்தும் ஆழியானத்தியூரான்" என்றும் 'பிணியவிழ் தாமரை மொட்டலர்த்தும் பேரருளாளர்' என்றும், "தொழுதெழுதொண்டர்கள் தமக்குப் பிணியொழித்தமரர் பெருவிசும்பருளும் பேரருளாளன்" என்றும் இப்படி ஆழ்வார்கள் தி₃வ்யஸூக்தியான 'பாலேய்தமிழான' 'பண்ணார் பாடல் இன் கவிகளை' தே₃வக₃ானத்திலே இயலும் இசையுமாக நாடகத்துடனே பாட, "தென்னாவென்னு மென்னம்மான்" என்கிற படியே பேரருளாளரும் போரவுகந்தருளித் தாம் சாத்தியிருந்த திருமுத்தின் தாழ்வடம் திருப்பரியட்டம் ச₂த்ரசாமராதி₃ மற்றுமுண்டான வரிசைகளெல்லாம் ப்ரஸாதி₃த்தருள, இவரும் 'நாயந்தே! அடியேனுக்கு இவையொன்றிலும் அபேக்ஷையில்லை; தேவரீர் அர்த்தி₂தார்த்த₂பரித₃ாந தீ₃க்ஷிதராகையாலே அடியேன் அர்த்தி₂த்ததைத் தந்தருளவேணும்' என்று விண்ணப்பஞ் செய்து, பின்னை

யும் கனக்பகபாடியருள. பெருமாளும் அத்தைக்கேட்டருளி ப்ரீதராய் 'நாமும்நம்பெண்டுகளுமொழிய நீர் வேண்டினத்தைத் தருகிரேும்; அத்தைச் சொல்லிக்காணீர்' என்ன. அரையரும் ராமாநுசனைக் காட்டி 'இவரை அடியேனுக்குத் தந்தருளவேணும்' என்று விண் ணப்பஞ்செய்ய, பெருமாளும் 'அப்போதே அறியப் பெற்றிலோமே! இவரையொழிய நீர் வேண்டினதெல்லாந் தருகிரேும்; கேளிர்' என்று அருளிச்செய்ய. அரையரும் ''ராமோ த்₃விர்நாபி₄ப₄ாஷதே'' [ரா-அ 18-30] [ராமன் இரண்டு விதமாகப் பேசமாட்டான்.] என்கிற தேவரீர் இரண்டு வார்த்தை அருளிச்செய்யலாமோ? என்று விண்ணப்பஞ்செய்ய. பேரருளாளரும் இன்னுப்புடனே 'தந்தோம். கொண்டு போகலாகாதோ!' என்று அருளிச்செய்ய. திருவரங்கப்பெருமாளரையரும் உடையவரைக் கையைப்பற்றி 'வாரும்' என்ன. உடையவரும் பேருளாளர்க்கு த₃ண்ட₃ன் ஸமர்ப்பித்துத் திருவரங்கப்பெருமாளரையருடனே கோயிலுக்கு எழுந்தருளப் புறப் பட, பெருமாளும் இவர்க்கு விடைகொடுத்தருளினர்; பின்பு உடைய வரும் கூரத்தாழ்வானையும் முதலியாண்டானையும் பார்த்தருளி 'மடமே போய் நம்முடைய திருவாராத₄நமான பேரருளாளரையும் மற்றுமுண் டான ஸம்ப₃ந்த₄ங்களையும் கொண்டு வாருங்கோள்' என்று அருளிச் செய்து மடமும் புகுராமல் எழுந்தருள, அவர்களும் அப்படியே எழுந் தருளுவித்துக்கொண்டு கூடினவளவிலே. திருக்கச்சிநம்பியும் அவர் களை வழிவிட்டு மீண்டெழுந்தருளினர்.

4. பெரியதிருமுடியடைவு. எங்குகர்ணும்பூ₄தரான திருவரங்கப் பெருமாளரையருக்குத் திருவவதார ஸ்த₂லம் கோயில். திருநக்ஷத்ரம் பிங்க₃ள வர்ஷம் வைகாசி மாஸம் கேட்டை. திருத்தகப்பனர் யாமுனு சார்யர். திருத்தாயார் ஸ்ரீரங்கநாய்ச்சியார். திருப்பாட்டனர் ஈஸ்வர முனிகள். திருத்தம்பியார் தெய்வத்துக்கரசுநம்பி, பிள்ளையரசுநம்பி, சொட்டைநம்பி. திருநாமங்கள் திருவரங்கப்பெருமாளரையர். ரங்க₃ார் யர், குடி சொட்டை. திருவாராதனம் அழகிய மணவாளப்பெருமாள். ஆசார்யர் மணக்கால்நம்பி. இருப்பிடம் கோயில்; சிஷ்யர் ஸ்ரீப₄ாஷ்ய காரர். இவர் நூற்றுப்பதினைந்து திருநக்ஷத்ரமெழுந்தருளி யிருந்தார்.

தனியன்

ஸ்ரீராமமிஸ்ரபத₃பங்கஜ சஞ்சரீகம்
ஸ்ரீயாமுநார்யவரபுத்ரமஹம் கு₃ணாட்₄யம் |
ஸ்ரீரங்க₃ ராஜகருணு பரிணும தத்தம்
ஸ்ரீப₄ாஷ்யகார சரணம் வரரங்க₃மீடே₃ ||

5. வார்த்தாமாலை 72. பெரியநம்பி ஐதிஹ்ய நிர்வாஹம் 6ல் காண்க.

6. வார்த்தாமாலை 441 ]. "என்னுடைய ஸர்வஸ்வத்தையும் வாங்கிக்கொள்ளவோ இப்படி செய்கிறது" என்றார் ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையர். [உடையவர் ஆறு மாதம் அரையருக்கு ஶுஶ்ரூஷை செய்து நீராடப் பண்ணுவித்தருளியபோது அரையர் சொன்ன வார்த்தை இது. ஸர்வஸ்வம் — அவரிடம் ஆளவந்தார் சேமித்துவைத்திருந்த பஞ்சமோபாய நிஷ்டா₂ரஹஸ்யம்.]

7. வார்த்தாமாலை 456 இறுதிப்பகுதி. ஆளவந்தார் ஐதிஹ்ய நிர்வாஹம் 20ல் காண்க.

8. பெரியாழ்வார் திருமொழி 4.4-1. ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் சரம காலத்திலே உடையவரெழுந்தருளி இப்போது திருவுள்ளத்தில் அநுஸந்த₄ானமேதென்று கேட்க, "ப₄க₃வந் நாமங்களாயிருப்பன அனேகம் திருநாமங்களுண்டாயிருக்க 'திருவரங்கம்' என்கிற நாலெந்து திருவக்ஷரமும் கோப்புண்டபடியே! என்று நினைத்திருந்தேன் காணும்" என்றருளிச்செய்ய, அத்தை ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் விரும்பின திருநாமமென்று உடையவர் விரும்பியிருப்பர்.

9. பெரியதிருமொழி 1-2-10. ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையர் சிலரோடே பிணங்கி, கையில் தாளத்தைப் பொகட்டு, "வாஸிமாவலத்தை என்னோடே இசைசொல்லிப்போ" என்றாராம். வாது பாட்டாகப் பாடுமது என்று ப்ரஸித்₃த₄மிறே.

10. பகவத்விஷயம் 1-5-11. "இசைகாரர்" என்கிறது ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையரை.

11. பகவத்விஷயம் 3-3-1. ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் இத்திருவாய்மொழி பாடப் புக்கால், "ஒழிவில் காலமெல்லாம், காலமெல்லாம், காலமெல்லாம்" என்று இங்ஙனே நெடும்போதெல்லாம் பாடி, மேல் போகமாட்டாதே அவ்வளவிலே தலைக்கட்டிப் போவராம்.

12. பகவத்விஷயம் 5-3-6. ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையர் வலையாக அபி₄நயித்துப் பாடாநிற்க, திருக்கண்களைக் காட்டியருளினார் எம்பெருமானார். "கமலக்கண்ணென்னும் நெடுங்கயிறு" என்னக் கடவதிறே.

13. பகவத்விஷயம் 5-10-6 & 6-9-3. (நின்றவித்யாதி₃)......
வடக்குநின்றும் போரப் பாடவல்லராயிருப்பாரொருத்தர் பெருமாளைத் திருவடித்தொழவேணுமென்று வர. ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையர் தீர்த்தத்தினன்றிராத் திருமாலையைப் பாடிச்சமைந்து, பெருமாளை மத்தக₃ஜங்களை ஏத்துமாபோலேயேத்தி வசமாக்கிக் கணிசங்கொண்டு 'நாயன்தே! தேவர் திருவடிகளுக்குப் போர நல்லானொருத்தன் எழுநூற்றுக்காதமாறுண்டு தேவரைத் திருவடித் தொழவேணுமென்று வருகிறது; இவனைபழைத்துக் கொண்டு ஸம்ப₄ாவனை பண்ணியருளவேணும்' என்ன; பெருமாளும் 'அப்படியே செய்கிறோம்' என்று திருவுள்ளமாய் அருளப் பாடிட்டு, திருப்புன்னைக் கீழ் நின்றும் அவர் நின்றவிடத்தளவுஞ் செல்ல, நாலுகோல்தரை திருக்கைத்தலத்திலே எழுந்தருளி விண்ணப்பஞ் செய்வார்களையெல்லாம் அருளப்பாடிட்டு, 'வாரி கோள்! இவன் வந்த தூரத்துக்கெல்லாம் போருமோ நாம் இவனுக்குச் செய்த தரம்' என்று திருவுள்ளமானார்.

14. ப்ரமேயரத்னம். ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையர் (ப₄ாஷ்யகாரருக்குத்) திருவாய்மொழி ஓதுவித்தருளினார்.

15. யதிராஜ வைபவம் 54, 60, 61 ஶ்லோகங்களின் அர்த்தம்.

54. ஒரு சமயம், திருவரங்கப்பெருமாளரையர், காஞ்சிக்குச் சென்று வரத₃னை வணங்கி, அவரிடமிருந்து ராமானுஜரை வரமாகப்பெற்று அழைத்துக்கொண்டு, ஸ்ரீரங்க₃த்தைக் குறித்துப் புறப்பட்டார்.

60. அதற்குப்பின் யதிராஜரான ராமானுஜர் (ஸ்ரீரங்க₃த்திற்கு எழுந்தருளி) ஆசார்யரான பெரியநம்பியை வணங்கினார். மறுபடியும், திருவரங்கப்பெருமாளரையரிடமிருந்து சில அர்த்த₂விஶேஷங்களைப் பெறவேணும் என்று அவர் ராமானுஜரை நியமித்தார்.

61. அதன்படியே, நம்மாழ்வாரின் கடைசி ப்ரப₃ந்த₄மான திருவாய்மொழியையும், அதன் ஸாரார்த்த₂த்தையும், மற்ற ஆழ்வார்களின் ப்ரப₃ந்த₄ங்களையும், (ஆளவந்தார் அருளிய) ஸ்தோத்ரரத்னம், சது:ஶ்லோகீ என்னும் இரு ஸ்தோத்ரங்களையும், அவற்றின் பொருளையும் அவரிடமிருந்து பெற்று, மறுபடியும் பெரியநம்பியை அடைந்தார்.

16. கு₃ருபரம்பராஸாரம். (எம்பெருமானார்) ஆளவந்தாராழ்வார் ஸ்ரீபாத₃த்திலே திருவாய்மொழியும் ஓதி ஸ்தோத்ரமும், அருளிச்செய்யும் நல்வார்த்தைகளும் கேட்டருளினார்.

17. ஸம்ப்ரதா₃ய பரிஶுத்₃தி₄ ஆளவந்தாருடைய நியோக₃த்தாலே... ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையர் பக்கலிலே நல் வார்த்தை கேட்கவும் (பெரியநம்பி) நியோகி₃த்ததும்.

18. திவ்யஸூரிசரிதம் 16-85; 18-4, 5.

19. ப்ரபந்நாம்ருதம். 16, 22, 23 பகுதிகள்.

20. கோயிலொழுகு [நாதமுனிகள் காலந்தொடங்கி திவ்ய ப்ரபந்தத்திற்கு இசையமைத்தல் முதலான கட்டளைகள் ஏற்படுத்தப் பட்ட பகுதி]

## ஸ்ரீமந்நாத₂முனிகள் கல்பித்த கட்டளை

அநந்தரம், பெருமாள் திருவரங்கந் திருப்பதியிலே ஸுப்ரதிஷ்டி₂ராய், பூர்வப்ரகாரமாக நித்யோத்ஸவ மாஸோத்ஸவ ஸம்வத்ஸரோத்ஸவாதி₃களும் கண்டருளுமிடத்தில், மார்கழி மாஸத்திலே, பூர்வப்ரகாரம் திருவத்₄யயநோத்ஸவத்திலே திருமங்கை மன்னனுக்காகத் திருவாய்மொழிக்கு வேத₃ஸாம்யமநுக்₃ரஹித்து பஹுநாள் திருவாய்மொழி கேட்குமிடத்தில், காலதோ₃ஷத்தினாலே ப்ரப₃ந்த₄ங்களும் திரோஹிதங்களாய் அத்₄யயநாத்₄யாபநங்களும் இல்லாமல், அதினாலே ஆழ்வாரும் கோயிலுக்கு எழுந்தருளாமலிருக்குங்காலத்திலே; கல்யப்₃த₃ம் மூவாயிரத்துத் தொள்ளாயிரத்திருபத்து நாலுக்கு மேல் ஸ்ரீமந்நாத₂முனிகள் அவதரித்தருளி, மன்னனார் ஸந்நிதி₄யிலும் திவ்யதேச ஸேவா நிமித்தமாக எழுந்தருளி, திருக்குடந்தையிலே வர, அங்கே "ஆராவமுது" பத்துபாட்டுமாத்ரம் நம்மாழ்வார் பாடலிலேயிருக்கக்கேட்டு, திருநகரியிலே எழுந்தருளி, மது₄ரகவி ஸம்ப்ரதா₃யஸ்த₂ரான ஸ்ரீபராங்குஶநம்பி ஸந்நிதி₄யிலே ஆழ்வார் விஷயமான "கண்ணிநுண்சிறுத்தாம்பு" என்கிற பத்துபாட்டு லபி₄த்து, யோக₃த₃ஶையிலே ஆழ்வாரை ஸாக்ஷாத்கரித்து, தந்முக₂மாக ஆழ்வார்கள் பதின்மரும் ஆண்டாளும் அருளிச்செய்த திவ்யப்ரபந்தங்களை லபி₄த்து க்ருதார்த்த₂ராய், திருவரங்கத்திருப்பதியேற எழுந்தருளி, ஸ்ரீகார்யம் நிர்வஹிக்குமளவில்; பெருமாள் திருமங்கை மன்னனுக்காகத் திருவாய்மொழிக்குப் பண்ணின அனுக்₃ரஹாதிஶயத்தையும் நம்மாழ்வார் திறத்தில் பண்ணின க்ருபையையும் கேட்டருளி மிகவும் உகந்து, ஸ்வஶிஷ்ய ப்ரஶிஷ்ய முக₂த்தாலே அநேகம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஆழ்வார்கள் ஸ்ரீஸூக்தியான திவ்யப்ரபந்தங்களை அத்₄யயநாத்₄யாபநங்களைப் பண்ணுவித்துக்கொண்டு, பெருமாள் திருவாய்மொழிக்கு வேத₃ஸாம்யம் அநுக்₃ரஹித்தபடியினாலே வேத₃த்தைப்போலே திருவாய்மொழிக்கும் உபக்ரமோத்ஸர்ஜநகாலத்தை, திருக்கார்த்திகை தி₃வ்ய

மஹோத்ஸவத்திலே உத்ஸர்ஜநகாலமென்றும், மார்கழி மாஸத்தில் சுக்ல ஏகாதசி அத்யயநோத்ஸவத்திலே உபக்ரமகாலமென்றும் நிர்ணயம் பண்ணி, திருக்கார்த்திகையிலே உத்ஸர்ஜநம்பண்ணின அநந்தரம், திருவத்யயநோத்ஸவத்திலே உபக்ரமிக்குமளவும் ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவரும் நெஞ்சினால் நினைந்து வாயினால் மொழியாமலிருக்கும்படி பண்ணி; முன்புபோலே ப்ரதிஸம்வத்ஸரமும், பெருமாள் ஆழ்வாருக்குத் திருமுகப்பட்டயம் முதலான வரிசையும், திருக்கார்த்திகை மஹோத்ஸவத்திலே திருநெடுந்தாண்டகம் திருமுன்பே பாடின ஆளப்புத்தீருப்படி தாம் சாத்தின மிச்சமான எண்ணெய்க்காப்பைத் திருமங்கைமன்னன் மிடற்றிலே சாத்துவித்த கட்டளையை, ஆழ்வார்களுக்குத் தலைவரான நம்மாழ்வாருக்குச் சாத்தி, தச்சேஷமான எண்ணெய்க்காப்பை ஸ்ரீவைஷ்ணவர்கள் திருமிடற்றிலே சாத்திக்கொள்ளும்படி பண்ணிவைத்து; ரிகாதிபேதேந சதுர்விதமான வேதங்களுக்கு ஶிக்ஷாதிகளும் இதிஹாஸ புராணங்களும் அங்கோபாங்கமாயிருக்குமாபோலே, நம்மாழ்வாரருளிச்செய்த ப்ரபந்தங்கள் நாலும் சதுர்வேத ஸ்தாநங்களாகவும்; இவைகளுக்கு மற்ற ஆழ்வார்களும் ஆண்டாளுமருளிச்செய்த ப்ரபந்தங்களும் அங்கோபாங்கங்களாகவும், திருவாய்மொழி த்வயார்த்த விவரணமென்றும்; திருப்பல்லாண்டு முதல் பெரியாழ்வார் திருமொழி, திருப்பாவை, நாய்ச்சியார் திருமொழி, பெருமாள்திருமொழி, திருச்சந்தவிருத்தம், திருமாலை, திருப்பள்ளியெழுச்சி, அமலனாதிபிரான், ஆக இப்ரபந்தங்கள் ப்ரணவார்த்த ப்ரகாஶகமாகையாலே முதலாயிரமென்றும், கண்ணிநுண் சிறுத்தாம்பு நமஶ்ஶப்தார்த்த விவரணமென்றும், திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், முதலாழ்வாரருளிச்செய்த ப்ரபந்தங்கள் மூன்றும், நான்முகன் திருவந்தாதி, திருவிருத்தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி, திருவெழுகூற்றிருக்கை, சிறியதிருமடல், பெரியதிருமடல், இவை மந்த்ரஶேஷவிவரணமென்றும்; முதல் திருவந்தாதிமுதல் திருமடலீறாக, ஶப்தரஸ ப்ரதாநமாகையாலே, இயற்பா என்றும்; இருபத்துமூன்று ப்ரபந்தமும் திருமந்த்ரார்த்த விவரணமாகையாலே, திருப்பல்லாண்டுமுதல் திருநெடுந்தாண்டகமீறாக, அத்யயநோத்ஸவத்துக்கு முன்பு பத்து நாளாக பெருமாள் கேட்டருளும்படிக்கும்; அத்யயநோத்ஸவமான மற்றுநாள்முதல், திருமடலீறாக இயற்பா ஆயிரமும் கேட்டருளும்படிக்கும்; ஆழ்வார்கள் பதின்மரும் ஆண்டாளும் மதுரகவியும் ஆக பன்னிரண்டு திருநாமமருளிச்செய்த இருபத்துநாலு ப்ரபந்தங்களில் பாட்டு நாலாயிரமென்றும்; ப்ராஹ்மணனுக்கு வேதவேதாந்த இதிஹாஸ புராணாதிகள் அதிகரிக்கவேண்டினாப்போலே,

முமுக்ஷுவான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இப்ரப₃ந்த₄ங்கள் அவஶ்யம் அதி₄கரிக்கவேணுமென்றும்; இதில், திருப்பாவை, திருப்பள்ளி யெழுச்சி, நித்யம் ப்ராத:காலத்திலே அநுஸந்தே₄யமென்றும்; திரு வாய்மொழிக்கு ஆத்₃யந்தத்திலே, ஆழ்வார் விஷயமான "கண்ணி நுண் சிறுத்தாம்பு" அநுஸந்தே₄யமென்றும்; இப்படி ஸமயவ்ய வஸ்தை₂ செய்தருளி; ப்ரதிஸம்வத்ஸரம், தாம் திருக்கார்த்திகை மஹோத்ஸவத்திலே, திருமங்கைமன்னனைப்போலே திருநெடுந் தாண்டகத்தையும், தாமுண்டுபண்ணின திருமொழித்திருநாளில் முதலாயிரத்தையும் திருமொழியையும், அத்₄யயநோத்ஸவத்திலே திருவாய்மொழியையும் தே₃வகா₃னத்திலே ஏறியிட்டு, மது₄ரகவி களைப்போலே அபி₄நயத்துடன் ஸேவித்து, மற்றைநாள் இயற்பாவை இயலாக ஸேவித்துக்கொண்டு, ப்ரதிஸம்வத்ஸரமும் அநேககாலம் ஸேவித்து, தம்முடைய ப₄ாகி₃நேயரான கீழையகத்தாழ் வான் மேலையகத்தாழ்வானுக்கு ஆழ்வார்களுடைய திவ்யப்ரபந்தங்களை இசையுடனே ஸாதி₃த்து, தம்மைப்போலே திருமொழி திருவாய் மொழித் திருநாளிலே ஸேவிக்கச்சொல்லி நியமித்து, தாம் மன்னனார் கோயிலுக்கெழுந்தருளி; கீழையகத்தாழ்வானுக்கும் மேலையகத்தாழ்வா னுக்கும் ஸ்ரீமந்நாத₂முனிகள் கல்பித்த கட்டளை.

## கா₃யகஸார்வபௌ₄மனான அழகியமணவாளன், பாடுவார்க்கு அரையர் என்னும் திருநாமமும், குல்லாவும், தொங்கல்பட்டும் ஸாதி₃த்தது

திருமொழி திருவாய்மொழித் திருநாளிலே நன்றாக ஸேவித்து, அழகியமணவாளப்பெருமாளை மிகவும் உகப்பிக்க, பெருமாளும் உகந்தருளி, ஒருத்தருக்கு "மதியாத தெய்வங்கள் மணமுறை வாரணப் பெருமாளரையர்" என்றும், ஒருத்தருக்கு "நாத₃விநோத₃ அரையர்" என்றும் திருநாமம் ஸாதி₃த்து, ஆழ்வாருக்கு ஸாதி₃த்த கட்டளையிலே குல்லாவும், தொங்கல் பரியட்டமாகப் பட்டும், பருத்தி யும், சாத்திக் களைந்த திருமாலைகள் இவை ப்ரஸாத₃ங்களும் ஸாதி₃த்து; நம்மாழ்வாருக்கு விடை ஸாதி₃த்தவுடனே யாத்ராநு கு₃ணமாகத் தம் வரிசைகளையெல்லாம் ஸாதி₃த்தாப்போலே, அரை யர்களுக்குத் தம் வரிசைகளை ஸாதி₃த்து "நம் பாடுவானை வீட்டிலே விட்டு வா" என்று தன் ஸேநாதி₄பதியை நியமிக்க; நியமநப்படியே ஸகல பரிஜநங்களுடன் ஸேநாபதியும் அரையரை வீட்டிலே விட்டு வந்தார். அது முதலாக, பாடுவாருக்கு அந்த இரண்டு பட்டப் பேரும் அரையர் என்கிற வ்யவஹாரமும் நடந்துவருகின்றது. கா₃நரஸத்திலே துவக்குண்டு கா₃யகஸார்வபௌ₄மன் என்கிற

மேன்மை தோன்ற "அரையர்" என்கிற திருநாமமும், அந்த ப்ரபு₄த்வ ஸூசகமான குல்லாவும், தொங்கல் பரிவட்டமும் ஸாதி₃த் தருளினது பாடுவார்க்கேயல்லாமல் மற்ற பரிஜநங்களுக்கில்லை.

## உய்யக்கொண்டார், மணக்கால்நம்பி ஆளவந்தார் வைபவம்

தத₃நந்தரம், உய்யக்கொண்டாரும், மணக்கால்நம்பியும் த₃ர்ஶநத்தையும் ஸ்ரீகார்யத்தையும் நிர்வஹித்துக்கொண்டு வருங்காலத்திலே; ஒட்டியதே₃ஶத்து ப்ரபு₄ கரைபுரண்டு வருமளவில், அச்சேதியைக் கேட்டு அழகியமணவாளப்பெருமாள் வலசை எழுந்தருளி, அழகர் திருமாலிருஞ்சோலையிலே ஒரு ஸம்வத்ஸரம் எழுந்தருளியிருந்து. திரும்பி எழுந்தருளினவிடத்திலே, ஸ்த₂லத்திலே சில பரிஜநங்கள் ரங்க₃த்₃ரோஹிகளாய் அதில் அர்ச்சகரும் அநுப்ரவிஷ்டராய் மெய்தீய்ந்து போகையில், ஸ்ரீவைக₂நஸ ஶாஸ்த்ரஜ்ஞரான நம்பிமார் ஆராத₄னம் பண்ணிக்கொண்டு வந்தார்கள். இதரமதஸ்த₂ரான ஷட் ஸமயத்தாரும் திருவரங்கந் திருப்பதியிலே வீடு கட்டிக்கொண்டு ஸ்வதந்த்ரராயிருந்தார்கள். இப்படியிருக்கும் காலத்திலே, மணக்கால்நம்பியும், யமுனைத்துறைவரான ஆளவந்தாரைத் திருத்தி பெரியபெருமாளை ஸேவிக்கப் பண்ணுவிக்க; ஆளவந்தாரும், பெருமாளுடைய கடாக்ஷத்தினாலே பரமவிரக்தராய், தம்முடைய ஐஶ்வர்யாதி₃களைப் பரித்யஜித்து ஆஶ்ரமஸ்வீகாரம் பண்ணி, பெரிய பெருமாள் ஸாம்ராஜ்யத்தில் உள்புகுந்து, ஸ்ரீகார்யம் நிர்வஹிக்கிற காலத்திலே; ஆக₃மப்ரமாணம் செய்தருளி, இதர ஸமயிகளை நிரஸித்து, திருவரங்கந் திருப்பதியிலே அவர்களிருப்பு அறிவித்து, ப₃ஹூக்₃ரந்த₂ முக₂த்தாலே த₃ர்ஶநநிர்வாஹம் செய்தருளியிருக்கும் காலத்திலே;

## ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையர் வைப₄வம்

ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் ப்ரபு₃த்₃த₄ராய், கா₃நாதி₃வித்₃யைகளிலும் ப₄க₃வத்ப்ராவண்யத்திலும் மிகுந்தவராய், திருமொழி திருவாய்மொழித் திருநாள்களிலே அழகிய மணவாளப் பெருமாள் விப₄வாவதாரத்தில் செய்தருளின அபதா₃நங்களை நாடகமாகத் திருக்கோலமடுக்குச் சாத்தி அபி₄நயித்து மிகவும் உகப்பிக்க; பெருமாளும் போரவுகந்தருளி, "கோயிலுடைய பெருமாளரையர்" என்று திருநாமம் சாத்தி, ஸகல வரிசைகளையும் ஸாதி₃த்தருளினார். ஒரு காலவிசேஷத்திலே, திருவூறல் மஹோத்ஸவத்திலே, திருக்காவேரியிலும் நடைக்குப் பரியாயமான தோளுக்கினியான் மேலே புறப்

பட்டருளி, அரையரை அழைத்து: "நம் நடையழகுக்கீடாகப் பாடும்" என்று அருளப்பாடு ஸாதிக்க; அவரும், இசையிலே ஏத்திக்கொண்டுவர, கோயிலிலே எழுந்தருளினர். ஒருகால விசேஷத்திலே, பங்குனி உத்தரத்தில் நாய்ச்சியார் கொலுக்குளிர் சோலையிலே, நாய்ச்சியாரும் தாமுமாய்க் குமிழ்நீருண்டு வைத்து விட்டு, அந்த அரையரைக் கடாக்ஷித்து வஸந்தனுக்கு அருளப்பாடு ஸாதிக்க; கோயிலுடைய பெருமாளரையரும், திருவுள்ளமறிந்து ரஸிக்க; பெருமாளும் போர உகந்தருளினர். அந்த அரையர் தொட்டு "கோயிலுடைய பெருமாளரையர்" என்கிற பட்டப்பேரும், அடுக்குச் சாத்திக்கொண்டு அந்தந்த திருக்கோலத்துடனே தசாவதாராதி விபவாவதாராபதாநாபிநயங்களும், திரு ஆறலுத்ஸவத்திலே திருக்காவேரிக்கெழுந்தருளித் திரும்பியெழுந்தருளும்போது இசையுடனே எழுந்தருளுகிறதும் பங்குனி உத்தரத்திலும் நாய்ச்சியார் சேர்த்தியிலே வஸந்தனுக்கு அருளப்பாடிட்டு கானம் கேட்டருளுகிறதும் நடந்துவருகிறது.

**21. திருவரங்கப்பெருமாளரையர் அருளிய திருமாலைத் தனியன்**

மற்றொன்றும் வேண்டா மனமே !* மதிளரங்கர்
கற்றினம் மேய்த்த கழிலிணைக்கீழ்—உற்ற
திருமாலை பாடும் சீர்த்தொண்டரடிப்பொடி யெம்
பெருமானை* எப்பொழுதும் பேசு.

**22. இவர் அருளிய திருப்பள்ளியெழுச்சித் தனியன்.**

மண்டங்குடி யென்பர் மாமறையோர் மன்னியசீர்*
தொண்டரடிப்பொடி தொன்னகரம்*—வண்டு
திணர்த்தவயல் தென்னரங்கத் தம்மானை* பள்ளி
யுணர்த்தும் பிரானுதித்த வூர்.

**23. வாழித்திருநாமம்.**

நாதமுனி குலந்திகழ நன்குதித்தோன் வாழியே*
நற்றமிழின் மறைக்கிசையை நவின்றுரைப்போன் வாழியே*
காதலரங்கேசரிருகழல் பணிவோன் வாழியே*
கானவரநயவிசையால் களிப்பிப்போன் வாழியே*
ஏதமில் வண்கச்சியனை ஏத்திசைப்போன் வாழியே*
எதிபதியைப் பரிசாகவேற்று வந்தோன் வாழியே*
தீதில் யமுனைத்துறைவன் சேவடியோன் வாழியே*
திருவரங்கப்பெருமாளரையர் திருவடிகள் வாழியே.

# திருக்கச்சிநம்பி வைபவம்



திருக்கச்சிநம்பிகள் — பூவிருந்தவல்லி

**தே₃வராஜ த₃யாபாத்ரம் ஸ்ரீகாஞ்சீபூர்ணமுத்தமம் ।
ராமாநுஜமுநேர் மாந்யம் வந்தே₃ஹம் ஸஜ்ஜநாஶ்ரயம் ॥**

[ஸ்ரீவரத₃ராஜனின் கருணைக்கு இருப்பிடமாய், மிகச் சிறந்தவராய், ராமானுஜமுனிக்கும் மதிக்கத்தக்கவராய், நல்லோர்கள் சென்று சேருமிடமான திருக்கச்சி நம்பியை வணங்குகிறேன்.]

எம்பெருமானாரால் தம் ஆசார்யர்களில் ஒருவராக அபி₄மானிக்கப் பெற்றவரும், ஆளவந்தாருடைய அந்தரங்க₃சிஷ்யர்களில் ஒருவருமான திருக்கச்சிநம்பியின் வைப₄வம் இனி சுருக்கமாக விவரிக்கப்படுகிறது. மயிலைக்கு மேற்கேயும், காஞ்சிக்குக் கிழக்கேயும் உள்ள பூவிருந்தவல்லியில் வைஶ்யகுலத்தில் வீரராக₄வருக்குப், கமலைக்கும் நான்காவது குமாரராய், ஸௌர்யம்பூ₄தராய், ஸௌம்ய வருஷம் (கி. பி. 1009) மாசி மிருகசீர்ஷ நக்ஷத்திரத்தில் "க₃ஜேந்த்₃ரதா₃ஸர்" என்னும் திருநாமம் உள்ள திருக்கச்சிநம்பி அவதரித்தார். தாம் கைங்கர்யம் செய்துவந்த ப₄ார்க்க₃வரான திருமழிசையாழ்வாருடைய அருளாலே பிறந்தமையாலே, தந்தையார் இவருக்கு ப₄ார்க்க₃வப்ரியர் என்றும் பெயரிட்டார். திருக்கச்சிநம்பிகள் ஆளவந்தாருடைய சிஷ்யராவர். அவரளித்த திருநாமம் 'பேரருளாள தா₃ஸர்' என்பது. கச்சியில் வாழ்ந்தமையால் திருக்கச்சிநம்பி, காஞ்சீமுனி, காஞ்சீபூர்ணர் என்றும் அழைக்கப்பட்டார். இவர் ஸ்ரீகாஞ்சி வரத₃ராஜப்பெருமாளுக்குத் திருவாலவட்ட கைங்கர்யம் செய்துகொண்டிருந்தவர். அப்பெருமாள் அர்ச்சாஸமாதி₄யைக்கடந்து இவரோடு வார்த்தை சொல்லிக்கொண்டிருந்தார் என்பது ப்ரஸித்₃த₄ம். அந்திமகாலத்தில் மோக்ஷம் விரும்பிய நம்பிக்கு "நீர் விசிறி வீசினீர்; நான் பேசினேன். இரண்டுக்கும் சரியாயிற்று; ஓர் பரமபா₄க₃வதரின் அபி₄மானத்தைப் பெற்றாலே உமக்கு மோக்ஷம்" என்று வரதன் கூறிவிட்டார்; அதற்குப் பின் மாறுவேஷத்துடன் திருக்கோட்டியூர் நம்பியிடம் மாடு மேய்க்கும் கைங்கர்யம்செய்து, "நம் பையல்" என்று அவரால் அபி₄மானிக்கப்பெற்று, அவ்வபி₄மானமே காரணமாக வரத₃னிடம் மோக்ஷம்பெற்றார் திருக்கச்சிநம்பிகள் — என்று வரலாறு கூறுகிறது. ஸ்ரீராமானுஜர் இவரிடம் சிஷ்யராக ஆஶ்ரயிக்க ஆசைப்பட்டார், நம்பி மறுத்துவிட்டார். இவர் உண்ட கலத்திலே உண்ணவேணும் என்று ஆசைப்பட்டார் ராமானுஜர். அதை ஸ்ரீராமானுஜருடைய பா₄ர்யை நிறைவேறாமல் செய்துவிட்டாள். தேவப்பெருமாளிடமிருந்து ஸ்ரீராமானுஜருக்கு ஆறு வார்த்தைகளைப் பெற்றுக்கொடுத்து த₃ர்ஶநார்த்தங்களை உறுதிப்படுத்திய மஹாநுபா₄வர் இவரே. தேவப்பெருமாளைப்பற்றிய எட்டு ஶ்லோகங்கள் கொண்ட "தே₃வராஜாஷ்டகம்" என்னும் துதிநூல் இவர் அருளிச்செய்தது. இவர் வைப₄வத்தின் விரிவு யதிராஜவைபவத்தில் காணலாம்.

## ஐதிஹ்ய நிர்வாஹங்கள்

1. ஆருயிரப்படி கு₃ருபரம்பராப்ரபா₄வம். அநந்தரம் இளையாழ்வாரும் பயணக₃தியிலே பெருமாள் கோயிலுக்கு எழுந்தருளித் திருக்கச்சிநம்பி ஸ்ரீபாத₃த்திலே தண்டனிட்டு ஆளவந்தார் திருநாடடைந்த இச்செய்தியை விண்ணப்பஞ்செய்ய, அவரும் போரக்லேஶிக்க. இவரும் எண்ணினவாறு ஆகாமையாலே அத்யந்தம் அவஸந்நராய் க்லேஶிக்க, திருக்கச்சிநம்பியும் 'பேரருளாளர் ஸர்வஜ்ஞரும் ஸர்வஶக்தருமன்றோ? உம்முடைய நினைவின்படியே தலைக்கட்டியருளுவர்; அஞ்சவேண்டா' என்று தேற்றமிட்டு, பின்பு ஆளவந்தாருக்கு ஸ்ரீசூர்ணபரிபாலனஞ்செய்து பெருக்கத் திருவத்₄யயநம் நடத்தியருளினர்.

2. ஆருயிரப்படி கு₃ருபரம்பராப்ரபா₄வம். இளையாழ்வாரும் தை₄ர்யாவலம்பி₃யாய்ப் பேரருளாளரை ஸேவித்துப் பூர்வம்போலே திருமஞ்சநகைங்கர்யம் செய்துகொண்டிருந்தார். பின்பு நம்பிபக்கல் இளையாழ்வாருக்கு ப்ரேமம் முதிர்ந்துவர, நம்பிக்கும் இவர்பக்கல் க்ருபை மிகுந்துவர, நம்பியுடைய ப்ரபா₄வமெல்லாம் அறிந்து 'அவர் ஸ்ரீபாத₃த்திலே ஆஶ்ரயிக்கவேணும்' என்று சென்று தண்டன் ஸமர்ப்பித்து 'இவ்வாத்மாவை தேவரீர் உஜ்ஜீவிப்பித்தருளவேணும்' என்ன, நம்பியும் "வாரீர் இளையாழ்வீர்! பேரருளாளர் பொருளல்லாத என்னைப் பொருளாக்கி அடிமைகொண்டது கண்டு நீர் விரும்பினீர்; 'கிமப்யத்ராபி₄ஜாயந்தே யோகி₃நஸ் ஸர்வயோநிஷு। ப்ரத்யக்ஷிதாத்மநாத₂நாம் நைஷாம் சிந்த்யம் குலாதி₃கம்॥' [மேலும், யோகிகள் எல்லா யோனிகளிலும் விசேஷமாகப் பிறக்கிறார்கள். எல்லா ஆத்மாக்களுக்கும் தமக்கும் நாதனான ஸர்வேஶ்வரனை நேரில் கண்டவர்களுடைய குலம், கல்வி, ஒழுக்கம் முதலானவற்றைப்பற்றி ஆராயக்கூடாது] என்கிறபடியே ஆத்மகு₃ணத்துக்குச் சேர்ந்திருந்துள்ள பரம வைதி₃கநிஷ்டை₂யையுடையராய் ஆஶ்ரயிக்க நினைத்தீர்; ஆகிலும் வர்ணாஶ்ரமத்துக்கடுத்த வைதி₃கமர்யாதை₃க்குப் போந்திராது" என்று விலக்கியருளினர். அதின் மற்றைநாள், இளையாழ்வாருக்குத் திருக்கச்சி நம்பியினிடத்தில் ப்ரஸாத₃ப்ரதிபத்தி பிறந்து, ததந்வய பு₃த்₃த்₄யா நம்பியை 'அடியேன் குடிசையிலே அமுதுசெய்யவேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் ஸம்மதித்தருள, இளையாழ்வாரும் அதிப்ரீதியோடே தம் திருமாளிகையிலே எழுந்தருளி இச்செய்தியை தேவியாருடன் அருளிச்செய்து 'தளிகைக்குப் பாங்காகப்பண்ணி நன்றாக ஸவ்யஞ்ஜநாந்நம் செய்' என்று நியமித்

தருளித் தாமும் நீராடி, நித்யகர்மாநுஷ்டா₂நங்களையும் செய்தருளித் திருமஞ்சநமும் சடக்கெனக் கொண்டுவந்து பேரருளாளர்க்கு ஸமர்ப்பித்துத் தம்முடைய க்₃ருஹார்ச்சனையான பேரருளாளரையும் அமுது செய்தருளப்பண்ணி, நம்பியையழைக்கத் தெற்குத் திருவீதியாலே நம்பி மடத்தை நோக்கி மேற்கே எழுந்தருளினார். அதற்குமுன்னே நம்பியும் மடத்தினின்றும் புறப்பட்டுப் பெருமாளையும் ஸேவித்து மற்றொரு திருவீதியாலே இளையாழ்வார் திருமாளிகையிலே எழுந்தருளி 'திருவாலவட்ட கைங்கர்யத்துக்கு உதவப் போகவேணும்' என்று சடக்கென அமுதுசெய்து எழுந்தருளினார். அநந்தரம் இளையாழ்வார் தேவிகளும் அவர் அமுது செய்தருளின தளிகையைக் கோலாலே தள்ளி, அவ்விடத்தைக் கோ₃மயத்தாலே ஸ்த₂லஶு₂த்₃தி₄பண்ணித் தெளித்துத் தாமும் நீராடி நிற்கிறவளவிலே, இளையாழ்வாரும் மடத்தே தேடிக் காணாமல் மீண்டு எழுந்தருளி, தேவிகள் நீராடின படியைக் கண்டு 'இதென்?' என்று கேட்டருள, தேவிகளும் 'அந்த ஸ்ரீவைஷ்ணவர் எழுந்தருளி அமுதுசெய்து திருவாலவட்ட கைங்கர்யஞ் செய்யவேணுமென்று மீண்டு எழுந்தருளினார்; அவர் சாத்தாதவராகையாலே அவர் அமுதுசெய்த இலைத்தளிகையைக் கோலாலே தள்ளி கோ₃மயத்தாலே ஸ்த₂லஶு₂த்₃தி₄ பண்ணினேன்; அத்தாலே ஶரீரம் அலம்பவேண்டிற்று' என்ன, இவரும் அவளைப் பார்த்து நீராடினதற்கு மிகவும் கோபித்துத் தம் அபீ₄ஷ்டம் ஸித்₃தி₄யாதபடியாலே போர க்லேஶித்து 'இனி நமக்குச் செய்ய அடுப்பதென்?' என்று "எண்ணாதனகளெண்ணும்" என்கிறபடியே தம் திருவுள்ளத்திலே விசாரித்தருளி நம்பிமடத்தேற எழுந்தருளி நம்பி பாடே சென்று, 'அடியேன் சில நினைவுகள் நினைத்திருந்தேன்; அவை எவையென்று தேவரீர் பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்து, அவர் அருளிச்செய்ததை தேவரீர் அடியேனுக்கு அருளிச்செய்யவேணும்' என்று இளையாழ்வார் விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் அன்று ராத்ரி பெருமாளை அநுப₄வித்து ஏகாந்தமானவளவிலே, 'நம்பீ! நம்முடன் சிலவார்த்தை சொல்லுவான்போலேயிருந்தாயீ!' என்று பெருமாள் திருவுள்ளமாயருள, நம்பியும் பெருமாளுடனே "இளையாழ்வார் 'சில நினைவுகள் நினைத்திருந்தேன், அவை எவை என்று தேவரீரைக் கேட்டுவந்து சொல்லவேணும்' என்று மிகவும் ஆத₃ரவாயிராநின்றார்; அவற்றை அருளிச்செய்யவேணும்" என்று விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும் "ஸஹஜதா₃ஸ்யத்தை உடையனாய், ச₂ந்தா₃நுவர்த்தநம் பண்ணியிருப்பானொருத்தன் நாம் ஸாந்தீ₃பனுடனே வித்₃யாப்₄யாஸம் பண்ணினாப்போலே பலவிடங்களிலே ஸகல ஶாஸ்த்ரங்களையும் அலகலகாக அறிந்திருப்பானொருத்தன் நம்மைக் கேட்பிக்கிறானித்

தனை, பரதத்வம் நாமே. பே₄த₃மே த₃ர்ாநம், உபாயமும் ப்ர பத்தியே. அந்திம ஸ்ம்ருதியும் வேண்டா, ஶரீராவஸாநத்திலே மோக்ஷம். பெரியநம்பி திருவடிகளிலே ஆஶ்ரயிப்பது" என்று இவ் வாறு வார்த்தையையும் (பேரருளாளர்) திருவுள்ளமாயருள, நம்பியும் இவற்றைக் கேட்டுவந்து விடிவோரை இவரையழைத்து 'இளையாழ் வீர்! பேரருளாளர் திருவுள்ளம்பற்றியருளின வார்த்தைகளைக் கேளீர்' என்று அவற்றை அருளிச்செய்து 'இவையோ உமக்கு நினைவு?' என்ன, 'ஆம்' என்று இளையாழ்வார் போர ப்ரீதராய் நம்பி ஸ்ரீபாத₃த் திலே தண்டன் ஸமர்ப்பிக்க, நம்பியும் 'இவர் நினைவும் பெருமாள் திருவுள்ளமும் ஒன்றுயிருந்தபடி என்!" என்று மிகவும் உகந்தருளினர்.

3. சரமோபாய நிர்ணயம். திருக்கச்சிநம்பி ஒருநாள் ராத்ரிகாலத் திலே பேரருளாளர் ஸன்னிதி₄யிலே நெடும்போது திருவாலவட் டம் பரிமாற, 'நம்பி! ஒன்று சொல்லுவாரைப்போலே இரா நின்றீர்; என்?' என்ன, "நாயிந்தே! இளையாழ்வார் 'சில நினைவுகள் நினைத் தேன்; அவை எவை என்று தேவரீரிடத்திலே கேட்டுவந்து சொல்ல வேணும்' என்றூர். அவற்றை அருளிச்செய்யவேணும்" என்ன; "வாரீர்! அவர் அறியாததோ நாம் சொல்லப்போகிறது. ஸாந்தீ₃ பனிபக்கலிலே நாம் அத்₄யயனம் பண்ணினுப்போலேகாணும் அவர் இருக்கும்படி. ஸகலஶாஸ்த்ரங்களும் ஸகலோபாயங்களும் அறிந்த ஸாரவித்தமராய், நம் முதன்மையிலே அடிமை செய்வாரில் தலைவராய், தம் பக்கலிலே ஸகலார்த்த₂ங்களும் கேட்டு நாடடங்க வாழவேண்டியிருக்க, நாமொன்று சொல்லக்கிடக்கிறதோ? பின்னை யும் உம்மையிடுவித்துக் கேட்கிருரித்தனை" என்றருளிச்செய்தார்.

4. பெரியதிருமுடியடைவு. ஶ்ரீபூ₃ர்ணபூ₄தரான திருக்கச்சி நம்பிக்குத் திருவவதாரஸ்த₂லம் தொண்டை மண்டலத்தில் பெரு மாள் கோயிலுக்குப் பூர்வபா₄க₃த்திலே த₄ர்மபுரி என்னும் பூவிருந்த வல்லி, திருநக்ஷத்ரம் ஸோப₄க்ருத் வருஷம் மாசி மாஸத்தில் மிருக ஶீர்ஷம். திருவவதாரம் சதுர்த்த₂வர்ணத்தில், திருநாமங்கள் திருக் கச்சிநம்பி, ஸ்ரீகாஞ்சீபூர்ணர். இருப்பிடம் பெருமாள் கோயில். திருவாராத₄னம் பேரருளாளப் பெருமாள், ஆசார்யர் மஹாபூர்ணர். கைங்கர்யம் தேவப்பெருமாளுக்குத் திருவாலவட்டம் ஸமர்ப்பிக்கிறது. இவர் செய்தருளின க்₃ரந்த₂ம் வரத₃ராஜாஷ்டகம். தேவப்பெருமா ளுக்கு அத்யந்தம் அந்தரங்க₃ர், ஸ்ரீ பா₄ஷ்யகாரருக்கு ஹிதப்ரவத் தகர்,

5. வார்த்தாமாலை 160: திருக்கச்சிநம்பி ஸ்ரீபாத₃த்திலே ஒரு ஸ்ரீவைஷ்ணவர் ஆஶ்ரயித்து 'அடியேனை அங்கீ₃கரித்தருளவேணும்'

என்ன; நம்பி, பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும், 'நம்மை அவனுக்குச் சொல்லும்' என்ன, நம்பியும் பெருமாள் ப்ரபத்தியை அருளிச்செய்ய, ஸ்ரீவைஷ்ணவரும், க்ருதார்த்த2ராய் க்ஷணகாலமும் நம்பியைப் பிரியாதே ஸேவிக்க, இவருடைய ப்ரக்ருதி ப3ந்து4க்கள் இதுகண்டு பொறுக்கமாட்டாமல் இவரைப் பிரித்துக் கொண்டுபோய் ப்ராயஶ்சித்தம் பண்ணவேணுமென்ன; இவரும் ஆகில், அநந்தஸரஸ்ஸில் தீர்த்த2மாடிவாராநின்றேனென்று போந்து, நம்பி ஸ்ரீபாத3த்திலே தண்டனிட்டு நிற்க, 'நீர் போகாவிட்டதென் அவர்கள் பொல்லாங்கு சொல்லாமே?' என்ன, 'அத்தனையோ அடியேனுக்கு' என்று ஶோகம் பொறுக்கமாட்டாமல், ஶோகார்த்தராய்ப் பரமபதத்திற்கு எழுந்தருளினார்.

6. திருவிருத்தம் நம்பிள்ளையீடு 8; பெரியநம்பி வைப4வம் ஐதிஹ்ய நிர்வாஹம் 21 காண்க.

7. யதிராஜவைபவம் 39, 40, 41 ஶ்லோகங்களின் அர்த்த2ம்:

39. அக்காஞ்சியிலிருந்தவராய், வர்ணாஶ்ரமாசாரங்களைத் தாமும் அநுஷ்டி2த்துப் பிறரையும் அநுஷ்டி2க்கச்செய்பவராய், வரத3னுக்கு அந்தரங்க3ராய், (திருவாலவட்ட கைங்கர்யம் செய்யும்) திருக்கச்சி நம்பியைப்பார்த்து, "நம்பியே! நான் நெஞ்சில் கொண்டுள்ள அர்த்த2ங்களைத் தேவப்பெருமாளிடமிருந்து அறிந்து, அவை பெருமாள் உகந்தவையா என்பதை எனக்குச் சொல்லுவீர்" என்று ப்ரார்த்தி2த்தார்.

40, 41. (1) "ஸ்ரீமானான நானே பரதத்துவம். (2) 'உலகிற்கும் எனக்கும் பே4த3ம் உண்டு' என்பதே என் மதம் (3) என்னை ஶரணமடைவதே என்னைப் பெறுவதற்குக் கண்ணழிவற்ற உபாயம். (4) அப்படி ஶரணமடைந்தவர்களுக்கு அந்திமகாலத்தில் என் நினைவு தேவையில்லை. (5) இப்பிறப்பின் இறுதியிலேயே (அவர்களுக்கு) மோக்ஷம் உறுதி. (6) பெரியநம்பியே ராமாநுஜரால் ஆசார்யராக ஆஶ்ரயிக்கத்தக்கவர்" என்னும் ஆறு வார்த்தைகளையும் வரத3ராஜப்பெருமாளிடமிருந்து பெற்ற ரஹஸ்யவாதி3யான திருக்கச்சிநம்பி அவ்வார்த்தைகளை ராமாநுஜருக்கு ரஹஸ்யமாகக்கூறி அதனால் "ராமாநுஜ மாந்யர்" [ராமாநுஜராலும் கௌரவிக்கப் பட்டவர்] என்னும் பெயரைப்பெற்றார்.

8. குருபரம்பராஸாரம், பெரியநம்பி வைப4வம் ஐதிஹ்ய நிர்வாஹம் 29 காண்க.

9. திவ்யஸூரிசரிதம். 17வது அத்தியாயம் 46-54 ஶ்லோகங்கள்.

10. ப்ரபந்நாம்ருதம், அத்தியாயம் 10, 114 முதல் 117 பகுதிகள்.

11. திருக்கச்சிநம்பி அருளிய திருச்சந்தவிருத்தத் தனியன்கள்,

தருச்சந்தப் பொழில்தழுவு தாரணியின் துயர்தீர*
திருச்சந்தவிருத்தம் செய் திருமழிசைப் பரன்வருமூர்*
கருச்சந்தும் காரகிலும் கமழ்கோங்கு மணநாறும்*
திருச்சந்தத்துடன் மருவு திருமழிசை வளம்பதியே,

உலகு மழிசையு முள்ளுணர்ந்து* தம்மில்
புலவர் புகழ்க் கோலால் தூக்க*—உலகுதன்னை
வைத்தெடுத்த பக்கத்தும்* மாநீர் மழிசையே
வைத்தெடுத்த பக்கம் வலிது.

12. திருநக்ஷத்திரத்தனியன்.

கும்பே₄ ம்ருக₃ஶிரோத்₃பூ₄தம் யாமுநார்ய பதா₃ஶ்ரிதம் ।
தே₃வராஜ த₃யாபாத்ரம் ஸ்ரீ காஞ்சீபூர்ணமாஶ்ரயே ॥

13. வாழித்திருநாமம்,

மருவாருந் திருமல்லி வாழ வந்தோன் வாழியே*
மாசிமிருகசீரிடத்தில் வந்துதித்தான் வாழியே*
அருளாளருடன் மொழிசொல் லதிசயத்தோன் வாழியே*
ஆறுமொழி பூதூரர்க் களித்த பிரான் வாழியே*
திருவாலவட்டம்செய்து சேவிப்போன் வாழியே*
தேவராசாட்டகத்தைச் செப்புமவன் வாழியே*
தெருளாரு மாளவந்தார் திருவடியோன் வாழியே*
திருக்கச்சிநம்பி யிருதிருவடிகள் வாழியே,

---

முக்கியமான குறிப்பு:— திருக்கச்சிநம்பி வைஶ்யர் என்று ப்ரஸித்₃தி₄யிருந்தபோதிலும் ஆறாயிரப்படி குருபரம்பரை, பெரிய திருமுடியடைவு, ப்ரபந்நாம்ருதம் ஆகியவற்றில் அவரை நாலாவது வர்ணமாகக் குறித்திருக்கிறார்கள். அக்காலத்திலேயே க்ஷத்ரிய வைஶ்யர்கள் வேதா₃த்₄யயனம் முதலானவற்றைவிட்டு நாலாவது வர்ணத்தவரோடு ஒத்தவராகிவிட்டதால் இப்படிக்கூறியிருக்கலாம்.

# மாறனேரிநம்பி வைபவம்

**யாமுநாசார்யஸச்சிஷ்யம் ரங்கஸ்தலநிவாஸிநம்।**
**ஜ்ஞாநபக்த்யாதிஜலதிம் மாறனேரிகுரும் பஜே॥**

[யாமுநாசார்யருடைய நல்ல சீடரும், திருவரங்கம் பெரிய கோயிலிலே வாழ்பவரும், ஞானம் பக்தி முதலானவற்றுக்குக் கடலாயிருப்பவருமான மாறனேரி நம்பியை பஜனம் செய்கிறேன்.]

ஆளவந்தார் சிஷ்யர்களில் ஒருவராய், சதுர்த்த (பஞ்சம?) வர்ணத்தில் பாண்டியதேசத்தில் புராந்தகம் என்னும் கிராமத்தில் ஆடிமாதம் ஆயில்யநக்ஷத்திரத்தில் அவதரித்தவர் மாறனேரிநம்பி. ஆளவந்தாருக்கு ஏற்பட்ட ராஜபிளவையை அவரிடம் பிரார்த்தித்து ஆசார்ய ப்ரஸாதமாகப் பெற்றுக்கொண்டார் இவர் என்று கூறுவர். இவர் அந்திமதசையில் "புரோடாஸத்தை நாய்க்கிடுவதுபோலே, ஆளவந்தார் உகந்த அடியேனது ஶரீரத்தை அவைஷ்ணவர்களான எனது உறவினர் ஸம்ஸ்கரிக்கும்படி விட்டு விடாதீர்" என்று பெரிய நம்பியைப் பிரார்த்தித்தார். அதன்படி, இவர் பரமபதித்தவுடன் பெரியநம்பி தாமே இவருக்கு ப்ரஹ்மமேத ஸம்ஸ்காரம் செய்தார், "இது தகுமோ?" என்று ஆக்ஷேபித்த எம்பெருமானாரிடம் "ஸ்ரீராமபிரான் ஜடாயுவிற்கு ஸம்ஸ்காரம் செய்தார். தர்மபுத்ரர் ஸ்ரீவிதுரருக்கு ஸம்ஸ்காரம் செய்தார். ஜடாயுவையும், ஸ்ரீவிதுரரையுங்காட்டிலும் இவர் தாழ்ந்தவர் அல்லர். தர்மபுத்திரரையும், ஸ்ரீராமபிரானையுங்காட்டிலும் நான் பெரியவனும் அல்லன். இத்தகைய அதிகாரிகள் விஷயத்திலாவது இதைச் செய்யாவிடில், ஆழ்வார் அருளிச்செய்த 'பயிலும் சுடரொளி' [திருவாய் 3-7] 'நெடுமாற்கடிமை' [திருவாய் 8-10] என்னும் திருமொழிகள் கடலோசைபோலே பொருளற்றவையாகிவிடாவோ?" என்று அருளிச்செய்தார். உடையவரும் உகந்து இசைந்தார், பெரியநம்பி செய்த இக்காரியத்தைக் கண்டு ஸ்ரீரங்கத்தில் பெரும்பாலோர் அவரைத் தள்ளிவைத்திருந்தனர் என்றும், நம்பெருமாள் சித்திரைத்தேரில் எழுந்தருளும்போது இவர் திருமாளிகை வாசலில் தேர் புறப்படாமல் நின்று, அவருக்கு அருளப்பாடிட்டு தீர்த்தப்ரஸாதம் முதலானவை ஸாதித்து அவர் பெருமையை அனைவர்க்கும் உணர்த்திய பின்பே தேர் மேலே புறப்பட்டது என்றும் வரலாறு வழங்குகிறது.

மாறனேரிநம்பி வைபவம் முற்றிற்று.

## ஐதிஹ்யநிர்வாஹம்

1. ஆருயிரப்படி குருபரம்பரா ப்ரபாவம். பெரிய நம்பி மாறனேரி நம்பியை ப்ரஹ்மமேதத்தாலே ஸம்ஸ்கரித்துப் பள்ளிபடுத்தருள, இதுகேட்டு எம்பெருமானார் நம்பி ஸ்ரீபாதத்தே றச்சென்று தண்டன் ஸமர்ப்பித்து "சீயா! ஸம்ஸாரம் சிலுகிடாதபடி அடியேன் ஒரு வழியாலே வேலியிட்டுவர, தேவரீர் ஒருவழியாலே பிரித்தருளாநின்றதே!" என்று விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் 'வீரீர் உடையவரே இக்ஷ்வாகு வம்சத்திலே அவதரித்து ஸாமாந்யதர்மத்தை வெளியிட்டருளின பெருமாளைக்காட்டில் நான் பெரியவனோ? பெரியவுடையாரைக்காட்டில் இவர் தண்ணியரோ? ஸாமாந்ய தர்மநிஷ்டரான தர்மபுத்ரரைக் காட்டில் நான் பெரியவனோ? ஸ்ரீவிதுரரைக் காட்டில் இவர் தண்ணியரோ? 'பயிலுஞ்சுடரொளி,' 'நெடுமாற்கடிமை' கடலோசையோ?' என்று அருளிச்செய்ய, உடையவரும் உகந்து ஸம்மதித்திருக்கச்செய்தே, 'மாறனேரி நம்பி திருநாட்டுக்கெழுந்தருளும் போது பெரிய பெருமாள் திருவடிகளே சரணமென்னுதல், ஆளவந்தார் திருவடிகளே சரணமென்னுதல் செய்யக்கண்டிலோம்; இது என்?' என்று உடையவருடனே பெரியநம்பி அருளிச்செய்தருள, உடையவரும் 'அவர்க்கு அப்போது ஶ்லோகத்வயாநுஸந்தாநமாயிருந்ததாய்க் கொள்ளீர்' என்று விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் 'அது பெண்கண்டபிச்சன் வார்த்தையன்றோ?' என்று அருளிச்செய்தருள, உடையவரும் 'பெண்ணினுடைய நித்யயோகத்தைத் திருவுள்ளம் பற்றுதொழிகிறதென்?' என்று விண்ணப்பஞ்செய்தார்.

2. பெரியதிருமுடியடைவு: மாறனேரி நம்பிக்குத் திருவவதார ஸ்தலம் பாண்டிய மண்டலத்தில் புராந்தகம் என்கிற கிராமம். இருப்பிடம் கோயில், ஆசார்யர் யாமுநாசார்யர். திருநக்ஷத்ரம் (ஆடி னி?) மாஸம் ஆயில்யம். திருவவதாரம் சதுர்த்தவர்ணத்தில்.

3. முதல் திருவந்தாதி முதற்பாட்டு வ்யாக்யானம்: மாறனேரி நம்பி 'எம்பெருமானை மறக்க விரகில்லையோ' என்றாராம்.

4. பெரியதிருமொழி 7—4. பெரியநம்பி வைபவம் ஐதிஹ்ய நிர்வாஹம் 20 காண்க.

5. ஸ்ரீவசநபூஷணம் 234 வ்யாக்யானம்: பெரியநம்பி வைபவம் ஐதிஹ்ய நிர்வாஹம் 24 காண்க.

6. ஆசார்ய ஹ்ருதய வ்யாக்யானம் 85. பெரியநம்பி வைபவம் ஐதிஹ்ய நிர்வாஹம் 25 காண்க.

7. ப்ரபந்நாம்ருதம் நாற்பத்திரண்டாம் அத்தியாயம் பகுதி.

8. திருநக்ஷத்ரத்தனியன்

மிது₂நே ஸார்ப்பபே₄ ஜாதம் யாமுநார்யபத₃ாஶ்ரிதம் /
உத்தாரகம் யதீந்த்₃ரஸ்ய மாறநேரி கு₃ரும் ப₄ஜே//

9. வாழித் திருநாமம்

ஆனிதனில் ஆயிலியம் அவதரித்தான் வாழியே*
ஆளவந்தார் திருவடிகள் ஆச்ரயித்தோன் வாழியே*
மாநிலம் எதிராசர்மனம் வாழ்வித்தோன் வாழியே*
மதிளரங்கநகரமதில் வாழ்ந்தருள்வோன் வாழியே*
தேனமரும் தென்மொழியின் சிறப்பறிந்தோன் வாழியே*
திகழ்ஞான பத்திகளால் சேர்ந்திருப்போன் வாழியே*
வானவரில் பொருவரிங்கு மகிழ்ந்துவந்தோன் வாழியே*
மாறனேரி நம்பியிணை மலரடிகள் வாழியே.

## ஆளவந்தார் சிஷ்யர்கள்.

ஸ்ரீவேத₃ாந்ததேசிகர் கு₃ருபரம்பராஸாரத்தில் ஆளவந்தாருக்குப் பதினைந்து சிஷ்யர்களைக் குறிப்பிட்டிருக்கிறார். (ஆளவந்தார் வைபவம் ஐதிஹ்யநிர்வாஹம் 95 காண்க) ஆறுயிரப்படி கு₃ருபரம்பராப்ரப₄ாவத்தில் 20 சிஷ்யர்கள் என்று உள்ளது, (ஷை ஐதிஹ்ய நிர்வாஹம் 1 காண்க.) பெரியதிருமுடியடைவில் 22 சிஷ்யர்கள் என்று உள்ளது. (ஷை ஐதிஹ்யநிர்வாஹம் 8 காண்க) இவர்களில் இதுவரை விவரிக்கப்பெற்ற எழுவரைத் தவிர மற்ற சிலரைப்பற்றி க்₃ரந்த₂ங்களில் சில குறிப்புகள் உள்ளன. அவற்றைக்கொடுப்போம் இனி.

## 1. தெய்வவாரியாண்டான்

1. ஆறுயிரப்படி கு₃ருபரம்பராப்ரபாவம், ஆளவந்தார் வைப₄வம் ஐதிஹ்ய நிர்வாஹம் 4 காண்க.

2. வார்த்தாமாலை 209. குருகைக் காவலப்பன் வைபவம் ஐதிஹ்ய நிர்வாஹம் 3 காண்க.

3. வார்த்தாமாலை 284 g. வகுளாப₄ரணஸோமயாஜியார், தெய்வவாரியாண்டானை, 'எம்பெருமான் இங்கேவந்து அவதரிக்கைக்கு ஹேதுவென்?" என்ன; 'ப₄ாக₃வதாபசாரம் பொறுமை' என்றார்; ஆகையாலே ஸ்ரீவைஷ்ணவர்களை நெருக்க, எம்பெருமான் நெஞ்சுளுக்கும் ;

4. வார்த்தாமாலை 441. "என்னுடைய திருவநந்தபுரம் எதிரே வந்தது" என்றார் தெய்வவாரியாண்டான்.

## 2. வகுளாப₄ரணஸோமயாஜியார்

வார்த்தாமாலை 284 g. தெய்வவாரியாண்டான் ஐதிஹ்ய நிர்வாஹம் 3 காண்க

## 3. வானமாமலையாண்டான்

வார்த்தாமாலை 284 f. (வார்த்தை & விவரணம்) இவ்வர்த்த₂த்திலே வானமாமலையாண்டான் பணிக்கும்படி:- ஸாத்விகரை நெருக்குகையாவது-மிது₂ந பே₄த்₃யமான ஸ்ரீகௌஸ்துப₄த்திலே கரியிட்டுக் கீறின மாத்ரம். (விவரணம்)—ப₄க₃வத்₃ப₄க்தர்கள் பெருமாளுக்கும் பிராட்டிக்கும் ஸ்ரீகௌஸ்துப₄ம்போலே இனியவர்களாகையாலே அவர்களிடம் அபசாரப்படுவது ஸ்ரீகௌஸ்துப₄த்திலே கரிக்கோடு கிழிப்பது போன்றது.

## 4. அம்மங்கி

1. வார்த்தாமாலை 303. (வார்த்தை & விவரணம்) அம்மங்கிக்குப் பெரியமுதலியார் அருளிச்செய்த வார்த்தை:- "உன்னுடைய பா₃ால்யத்தைப் பாராதே ப₄க₃வத்₃விஷயஞ் சொன்னோம்; விபூ₄தியென்படக் கடவதென்றறிகிலோம்! உடம்பையிட்டு வெருட்டாதே, உயிரையிட்டு மருட்டிக்கொண்டுபோரு" என்று. (விவரணம்)—பெரியமுதலியார் என்னும் திருநாமமுள்ள ஆளவந்தார் தமது சிஷ்யர்களில் ஒருவரான அம்மங்கி என்னும் வாலிபனுக்குச் சொன்ன வார்த்தை இது—"உன்னுடைய யௌவன வயஸ்ஸைக் கணிசியாமல் உனக்கு ப₄க₃வத்₃விஷயத்தைச் சொல்லிவிட்டேன். உன்னிடம் நல்வார்த்தை கேட்கவரும்போது ப₄க₃வத்₃விபூ₄தியான (எம்பெருமானுக்குச் செல்வமான) ஸ்த்ரீகள் உன்னையடைந்து ஆத்மோஜ்ஜீவனத்தைப் பெறுவார்களா? அல்லது ஆத்மநாஶத்தைப் பெறுவார்களா? என்று எனக்குப் புரியவில்லை. ஆகையால் உடம்புக்கு இரையிட்டு ஆத்மநாஶத்தை விளைக்காமல், உடலைப் பட்டினிபோட்டு உயிர்க்கு இரையிட்டு ஆத்மோஜ்ஜீவனத்தை விளைத்துக்கொண்டு போவாயாக" என்று.

2. வார்த்தாமாலை 317. (வார்த்தை & விவரணம்) உடையவர் திருக்கண்ணபுரத்துக்கு எழுந்தருளுகிறபோது அம்மங்கிக்குப் போய் வருகிறேனென்ன, அம்மங்கி உடையவர்க்கு ப்ரஸாதி₃த்த வார்த்தை—அக்₃நிஜ்வாலையிலகப்படாதேகிடீர், அருநஞ்சு தின்னாதேகிடீர்; அஶுசி மிதியாதேகிடீர். அபா₄லைகளோடு செறியாதேகிடீர், ஆஸ்திகரோடு செறிந்துபோருங்கிடீரென்று; (விவரணம்)—ஆளவந்தார் ஶிஷ்யரான

(303ம் வார்த்தையில் எடுக்கப்பட்ட) அம்மங்கி என்னுமாசார்யர் திருக்கண்ணபுரத்தில் எழுந்தருளியிருந்தார். அங்கு உடையவர் எழுந்தருளி அவரிடம் விடைபெற்றுக்கொள்ளும்போது அவர் உடையவர்க்கு அருளிய வார்த்தை இந்த முற்பகுதி. அம்மங்கியினுடைய முற்கூறிய வார்த்தைகளுக்கு-உடையவர் தம் ஶிஷ்யர்களுக்கு அருளிய விளக்கமிது. (1) அக்₃னிஜ்வாலையிலகப்படாதேகிடீர்-பௌ₃ளத்₃த₄ர்கள், ஜைனர்கள் முதலானுர் வேத₃பா₃ஹ்யர்கள் (வேத₃த்துக்குப் புறம்பானவர்கள்). அத்₃வைதிகள், ஶைவர்கள் முதலானுர் வேத₃த்துக்கு அவப்பொருள் கூறும் குத்₃ருஷ்டிகள். உடையவர் த₃ர்ஶன ஸ்த₂ாபனத்துக்காக இவர்களோடு வாதாடும்போது பாம்பு அக்₃னி முத₃லானவற்றேடு பழகுவதுபோலே அவர்களோடு நெருங்கிவிடக்கூடாது என்பது முதல் உபதே₃ஶம். (2) அருநஞ்சு தின்ருதேகிடீர் — ஶ்ரீவைஷ்ணவர்களுடைய நாமரூபங்களை த₄ரித்துக்கொண்டு ஶ்ரீவைஷ்ணவ ஸமூஹத்தில் உட்புகுந்து ஶாகஸாரணர்களைப்போலே மறைந்து நின்று ஶ்ரீவைஷ்ணவர்களைக் கெடுப்பவர்கள் அருநஞ்சு எனப்பட்டார்கள். பார்ப்பதற்கு அழகாயிருக்கும் எலுமிச்சம்பழமும் கர்ப்பூரமும் கலந்து உண்டால் உயிரை முடிப்பதுபோலே, பார்ப்பதற்கு வைஷ்ணவர்கள் போலேயிருக்கும் இவர்களோடு கலந்தால் ஆத்மநாஶத்தை விளைத்துவிடுவார்களாகையாலே இவர்கள் அருநஞ்சு எனப்பட்டார்கள். (3) அஶுசி மிதியாதேகிடீர்—ஶரீரத்தை வளர்ப்பதிலேயே ஈடுபட்ட ஸம்ஸாரிகள், மலம் முதலான அஶுசிகளைப்போலவும் வீதியில் கிடக்கும் கட்டை கல் முதலானவற்றைப்போலவும் ஶ்ரீவைஷ்ணவர்களுக்கு விலகிச் செல்லவேண்டிய விரோதி₄கள். (4) அப₃லைகளோடு செறியாதேகிடீர்—அநுகூலரான ஶ்ரீவைஷ்ணவர்களாயிருந்தபோதிலும், கைக்கொள்ளத்தக்கவைகளையும் கைவிடவேண்டியவைகளையும் தெளிவாக அறியாதவர்கள் பக்குவமாகாத கன்னிகளைப்போலே பயனற்றவர்கள். அதனுல் அவர்களோடும் நெருங்கிப் பழகக்கூடாது. (5) ஆஸதிகரோடு செறிந்து போருங்கிடீர்—ப₄க₃வத்₃ப₄ாக₃வத விஷயங்களை அநுப₄விக்கத்தக்க பூர்ணுதி₄காரிகள், யௌவனமுடைய புருஷர்களுக்குக் காமினிகளைப்போலே ஶ்ரீவைஷ்ணவர்களுக்கு அநுப₄விக்கத்தக்கவர்கள். ஆகையால் இவர்களோடு நெருங்கிப் பழகவேண்டும்.

3. வார்த்தாமாலை 441 k, (வார்த்தை & விவரணம்) வைத்த கையிலும் வாங்கின கை தஞ்சம் என்ருர்—அம்மங்கி; (விவரணம்)—'வைத்து அஞ்சல் என்ற கை'யாகிற நம்பெருமாளுடைய கையைக் காட்டிலும், அவரிடம் உப₄யவிபூ₄திச் செல்வத்தையும் வாங்கின கையாகிற எம்பெருமானுருடைய கையே தஞ்சம் என்று கருத்து.

## ★ எம்பெருமானார் வைபவம் ★



ஸ்ரீரங்கம் உடையவர் ஸந்நிதி உத்ஸவர்

யோ நித்யமச்யுதபத₃ாம்பு₃ஜயுக்₃மருக்ம-
வ்யாமோஹதஸ்ததி₃தராணி த்ருணாய மேநே।
அஸ்மத்₃கு₃ரோர் ப₄க₃வதோऽஸ்ய த₃யைகஸிந்தோ₄:
ராமாநுஜஸ்ய சரணௌ ஶரணம் ப்ரபத்₃யே॥

[எவரொருவர் அச்யுதனுடைய திருவடித்தாமரையிணையாகிற பொன்னில் பேராசையாலே, மற்ற பொருள்களைப் புல்லென மதித்தாரோ' என்னுடைய ஆசார்யராய், ஜ்ஞாநாதி₃கு₃ணபூர்ணராய், கருணைக்கோர் கடலான அத்தகைய ராமாநுஜருடைய திருவடிகளை ஶரணமடைகிறேன் ]

பிங்க₃ள வருஷம் (கி. பி. 1017) சித்திரை மாதம் பதின்மூன்றும் தேதி வியாழக்கிழமை ஶுக்லபக்ஷ பஞ்சமி திருவாதிரை நக்ஷத்திரத்தில் ஸிம்ஹ லக்₃னத்தில் த₃ர்ஶன ஸ்த₂ாபகரான ஸ்ரீ ராமானுஜர் ஸ்ரீபெரும்பூதூரில் ஆதி₃ஶேஷனின் அம்ஶமாய் அவதரித்தார். மிக விரிவான இவருடைய வைப₄வம் இவருடைய அந்தரங்க₃சிஷ்யரான வடுகநம்பியாலே நூற்றுப்பதினொரு ஶ்லோகங்களாகச் சுருக்கமாக அருளிச்செய்யப்பட்டுள்ளது. அந்த ஶ்லோகங்களின் பொழிப்புரை கீழே தரப்படுகிறது.

### வடுகநம்பி இயற்றிய

# ஸ்ரீ யதிராஜ வைபவம் (பொழிப்புரை)

## இரு திருமணங்கள்

1-5 பெரியதிருமலை நம்பிவைபவம் ஐதிஹ்யநிர்வாஹம் 15 காண்க.

## ஸ்ரீராமாநுஜர் அவதாரம்

6-8 பெரியதிருமலை நம்பி வைபவம் ஐதிஹ்ய நிர்வாஹம் 15 காண்க.

## உபநயனமீறுன ஸம்ஸ்காரங்கள்

9.10. திருமலைநம்பியின் கடாக்ஷங்களாலே வளர்ந்த அக்குமாரனுக்கு அப்₃த₃பூர்த்தியையும், (ஶிகை₂வைத்தலாகிற) சௌளத்தையும், ஸத்வகு₃ணம் மிகுந்த ஐந்தாம் வயஸ்ஸில் அக்ஷராப்₄யாஸத்தையும் தந்தையான கேஶவஸோமயாஜி செய்தருளினார். தமது தந்தையாலே உபநயனம் செய்விக்கப்பெற்ற ஸ்ரீராமாநுஜரும் வேத₃வேதா₃ங்க₃ ஶாஸ்த்ரங்களைக் கற்கின்றவராய், சிறந்த ப்₃ரஹ்ம தேஜஸ்ஸையும், மிகுந்த பெருமைகளையும், இன்புறு நல்லொழுக்கங்களையும் உடையராக இருந்தார்.

## விவாஹம்

11. அதற்குப்பின், ஒரு கன்னியை மணம்புரிந்து இல்லறம் மேற்கொண்டவராய், பூர்வபக்ஷஶாஸ்த்ரங்கள் வாசிப்பதற்காகக் காஞ்சியில் வாழ்ந்த மாயாவாதி₃ (அத்₃வைதி) ஸந்யாஸியான யாத₃வப்ரகாஶரை அடைந்தார்.

## ஶ்ருத்யர்த்த₂த்தைத் தெளிவுபடுத்தல்

12. ஒருநாள் யாதவர் "ஸர்வம் க₂ல்வித₃ம் ப்₃ரஹ்ம" [சா₂ந் 3.14-1] [இவ்வுலகனைத்தும் ப்₃ரஹ்மமே] என்னும் வேத₃வாக்யத்திற்குப் பொருள் கூறுகையில், அதன் பொருளை உணராத யாத₃வர் அவப்பொருள் உரைத்தவுடன், ராமாநுஜர் உண்மைப் பொருளைக் கூறி, வேத₃ார்த்த₂ஸாரத்தை அவருக்கு அறிவுறுத்தினர்.

## ஆளவந்தார் கடாக்ஷித்தல்

13 16. ஸ்ரீரங்க₃த்தில் வாழ்ந்த யாமுனாசார்யர் எனும் மஹா புருஷரான ஆளவந்தார், ராமாநுஜர் காட்டிய அவ்வேத₃ப் பொருளைக் கேள்வியுற்று, அந்தரங்க₃ஶிஷ்யர்களோடு கூடக் காஞ்சிக்கு எழுந்தருளி, பெருந்தேவித் தாயாரோடு கூடிய பேரருளாளனை வணங்கினர். அதன்பிறகு, ஶிஷ்யர்களால் சூழப்பெற்ற யாத₃வரையும், அவர்களிடையே ஒளிவீசும் ராமாநுஜரையும் கண்டு "இந்த யாத₃வர் ராமாநுஜருக்கு ஶிஷ்யராயிருக்கவே தக்கவர்" என்று திருவுள்ளம் பற்றினர். ஆளவந்தார், "ஸ்ரீவைஷ்ணவர்கள் பல்கிப் பெருகுவதற்காக ராமாநுஜரைக் கடாக்ஷிப்பீர்" என்று மிகுந்த ப₄க்தியுடன், பெருந்தேவியோடு கூடிய ஶரண்யனான தேவப்பெருமானை ஶரணமடைந்தார் யாமுநாசார்யர். "இப்போது நாம் ராமாநுஜரோடு வார்த்தையாடினல், அவர் பாடம் படிப்பதற்கு இடையூறு ஏற்படும்" என்று கருதிய ஆளவந்தார், அவரோடு வார்த்தை சொல்லாமலே ஶிஷ்யவர்க்க₃ங்களோடு கூட ஸ்ரீரங்க₃த்திற்கு எழுந்தருளிவிட்டார். ராமாநுஜரும் யாத₃வரிடம் பாடம் படித்துவந்தார்.

## பிஶாசமோட்டுதல்

17-19. அந்த நாட்டு அரசனுடைய பிள்ளை பிஶாசத்தால் பீடிக்கப்பட்டு, எவர் செய்யும் மந்த்ரத்திற்கும் கட்டுப்படாதிருந்தவளவில், அரசன் 'இப்பிஶாசம் யாத₃வருடைய மந்திரத்தாலே விரட்டப்படும்' என்று செவியுற்று, யாத₃வரை வரவழைத்தான். அந்தரங்க₃ஶிஷ்யர்களோடு கூடிய யாத₃வனைக்கண்டு சிரித்து, அவனை மிகவும் அவமானப்படுத்தி, பிஶாசமானது ராமாநுஜரை ஶரணமடைந்து, அரசனின் பிள்ளையையும், தனது பெருப்பாவத்தையும் ஒருங்கே விட்டது. அத்₃ய₃த்₃பு₄தமான அச்செய்தியைக் கண்ட அரசன் ராமாநுஜருக்கு விஶேஷமாகப் பரிசளித்தான், ராமாநுஜரும் தமது ஆசார்யரான யாத₃வரிடம் அந்தப் பரிசை மிகுந்த அடக்கத்தோடு கொடுத்தார்.

## யாதவரின் பொறாமை

20. அதற்குப்பிறகு காஞ்சியை அடைந்த யாதவரும் ராமாநுஜரிடம் பிரீதியுடையவர் போலிருந்துகொண்டு, நெஞ்சில் பொறாமையுடையவராய், அது முதற்கொண்டு அவரது கருத்தைப் பரீக்ஷிப்பதில் நாட்டம் கொண்டவராய், அவரோடு வேதா₃ந்த வாக்யார்த்த₂ விசாரங்களைச் செய்துவந்தார்.

## கப்யாஸஶ்ருதிக்குப் பொருளுரைத்தல்

21-22. ஒருசமயம்—"கப்யாஸம் புண்ட₃ரீகம் ஏவமக்ஷிணீ" என்று பரமாத்மாவின் திருக்கண்களை வர்ணிக்கும் ச₂ாந்தோ₃க்₃ய வாக்யத்திற்கு, "குரங்கின் ஆஸனவாய்போல் சிவந்த தாமரை போன்ற கண்களை உடையவன் பரமபுருஷன்" என்று யாத₃வர் அவப்பொருள் கூறுகையில், யாத₃வருக்கு எண்ணெய் தேய்த்துக் கொண்டிருந்த ராமாநுஜரின் துன்பக்கண்ணீர் விழுந்து யாதவரின் தொடையைச் சுட்டது. அதைக்கண்ட யாத₃வர் நிமிர்ந்து பார்த்துப் பரபரப்படைந்தார். "கண்ணீர் வருவது எதனாலே?" என்று கேட்ட யாத₃வருக்கு 'ஸூர்யனால் மலர்ந்த (அல்லது பருத்த தண்டை உடைய, அல்லது ஆழமான நீரில் முளைத்த) தாமரைபோன்ற கண்ணையுடையவன் பரமபுருஷன்' என்ற அழகான பொருள்களிருக்க, குரங்கின் ஆஸனவாயாகிற நிஹீந (தாழ்ந்த) த்₃ருஷ்டாந்தம் சொன்னதாலே வருந்திக் கண்ணீர் விட்டேன்" என்று சொல்லி ஜைமிந்யுபாக்₂யானத்தையும் கூறிய ராமாநுஜரை "இனி இங்கே படிக்கவேண்டாம்" என்றுரைத்தார் யாத₃வர்.

## யாதவரின் சதி

23-24. அதன்பிறகு, து₃ஷ்டபு₃த்₃தி₄யையுடைய யாத₃வர் அந்தரங்க₃ர்களோடு கூடிச் சதியாலோசனை செய்து, ராமாநுஜரையும் தந்திரோபாயங்களாலே மயக்கி, க₃ங்கா₃ஸ்நானத்தின் பொருட்டுக் காசியாத்திரை செய்யும் வியாஜத்தைவிட்டு அவரையும் அழைத்துக் கொண்டு, அவரைக் கொலை செய்வதற்காகப் புறப்பட்டார். நல்லொழுக்கமுடையவராய், ராமாநுஜரோடு கூடப்படித்து வந்த நண்பராய், அவருடைய சிறிய தாயாரான ஸ்ரீதே₃வியின் பிள்ளையான கோ₃விந்த₃ப₄ட்டரும், யாத₃வருடைய கெட்ட எண்ணத்தை நடுக்காட்டில் ராமாநுஜருக்கு அறிவித்து அவரை நிறுத்தி, தான் யாத்திரை செய்யும் யாத₃வரோடு தொடர்ந்துசென்றார்.

## பெருந்தேவி நாயகனின் கருணை

25-27. ராத்ரியிலே நடுக்காட்டில் அகப்பட்ட ராமாநுஜரும் மிக வருந்திய நெஞ்சினராய், பெருந்தேவியோடு விளங்கும் தீனரக்ஷகனான பேரருளாளனை ஶரணமடைந்தார். தனது மனத்துக்கினிய பெருந்தேவியோடு கூடிய வரத₃ராஜனும் வேடவுருவை த₄ரித்து வந்து "ராமாநுஜரே! காஞ்சியை எளிதில் அடைவோம்" என்று கூறி, அவருக்கு முன்னே வழிகாட்டிச்சென்று, ராமாநுஜரிடம் வேண்டிப்பெற்ற சாலைக்கிணற்று நீரை தே₃வியோடு கூடப்பருகி மறைந்தான். விடியற்காலை வேளையான அப்போது அத்திகிரியின் புண்யகோடிவிமானம் மிக அருகில் தெரிவதைக்கண்டு நீர் பருகியவன் பேரருளாளனே என்று அறுதியிட்டு, ராமாநுஜர் பேராச்சரியமடைந்தார்.

## சாலைக்கிணற்றுநீர்க் கைங்கர்யம்

28. அருகிலிருக்கும் நல்லதொரு குளத்தில் ஸ்நாநம் ஸந்த்₄யாவந்த₃னம் முதலான காலைக்கடன்களை முடித்துக்கொண்டு, பெருந்தே₃வியையும், பேரருளாளனையும் ஸேவித்துப் பேரானந்த₃ம் கொண்டவராய், அவ்வரதன் விரும்பிப் பருகிய சாலைக்கிணற்று நீரை தினந்தோறும் தாமே சுமந்துசென்று அளித்து அவனை உகப்பித்துவந்தார்.

## கோ₃விந்த₃ர் உள்ளங்கைக்கொணர்ந்தநாயனர் ஆனது

29. யாத₃வரின் மந்திரசக்திக்குக் கட்டுப்பட்ட கோ₃விந்த₃ரும் கங்கையில் நீராடும்போது தமது உள்ளங்கையில் சிவலிங்கத்தைப் பெற்றவராய், தமது கிராமமான மது₄ரமங்க₃லத்திற்குச்சென்று அந்த லிங்க₃த்தைப் பிரதிஷ்டைசெய்து, காளஹஸ்திக்குச் சென்று, அங்குள்ள சிவாலய கார்யங்களை நிர்வஹிப்பவராய் அங்கு வஸித்து வந்தார்.

## ராமாநுஜர் யாத₃வரை அடியோடு கைவிடுதல்

30-31. காஞ்சிக்கு வந்து சேர்ந்த யாத₃வரும் ராமாநுஜரைக் கண்டு அவர் திருப்பிவந்த விதத்தையும் கேள்விப்பட்டு, அவரை அழைத்து மயக்கி, மறுபடியும் தமது சிஷ்யர்களோடு சேர்த்துப் பாடம்சொல்லி வந்தார். "ஸதே₃வ ஸோம்யேத₃மக்₃ர ஆஸீதே₃கமேவாத்₃விதீயம்" [சா₂ந் 6-2-1] என்னும் உபநிஷத்வாக்யம்—ஸஜாதீய விஜாதீய ஸ்வக₃த பே₄த₃மற்ற சிந்மாத்ரவஸ்துவைச் சொல்லுகிறது என்னும் அவப்பொருளை ஒருநாள் யாத₃வர் உரைத்த

வுடன், அந்த வாக்யம் உலகிற்கு நிமித்த உபாதா₃ந ஸஹகாரி காரணங்கள் மூன்றுமான ஸகலசேதநாசேதந ஸகல கல்யாண கு₃ணவிஶிஷ்ட ப்₃ரஹ்மத்தையே சொல்லுகிறது என்னும் பொருந்திய பொருளை அவருக்கு அறிவுறுத்தி. ராமாநுஜர் யாத₃வரிடம் படிப்பதை அடியோடு கைவிட்டார்.

## ஆளவந்தார் பெரியநம்பியை அனுப்புதல்

32-33 பேரொளிவீசும் ரத்தினம்போன்றவரான ராமாநுஜர் யாத₃வராகிய குரங்கின் கையிலிருந்து விடுபட்டு அத்திகிரியருளாளனின் நெஞ்சுக்கு இனிய(ஹ்ருத்₃ய)ரானர் என்று கேள்விப்பட்டு உகந்த யாமுநாசார்யர் (ஆளவந்தார்) ராமாநுஜரை ஸ்ரீரங்க₃த்திற்கு அழைத்து வருவதற்காகத் தமது சிஷ்யரான பெரியநம்பியை அனுப்பினார். காஞ்சிக்குச் சென்ற அப்பெரியநம்பியும், தமது ஆசார்யர் அருளிய ஸ்தோத்ரரத்னத்தை அநுஸந்தி₄த்து ராமாநுஜரை உகப்பித்து, (அவரால் ஸத்கரிக்கப்பெற்றுத்) தாமும் மிகவுகந்தார்.

## ஆளவந்தார் பரமபத₃ப்ராப்தி

34-35. பெரியநம்பியோடு கூடிய ராமாநுஜாசார்யரும், ஆளவந்தாரை ஸேவிப்பதற்கு ஸ்ரீரங்க₃ம் செல்லாநிற்கும்போது, வடதிருக்காவேரிக்கரையிலேயே மிகுதியான ஸ்ரீவைஷ்ணவ ஸமூஹத்தைக் கண்டார். (ஆளவந்தார் திருக்குமாரரான) திருவரங்கப்பெருமாளரையர் முதலான அந்த ஸ்ரீவைஷ்ணவர்கள், அவ்விருவரையும் பார்த்து ஆளவந்தார் பரமபத₃மடைந்ததை அவர்களுக்கு விண்ணப்பித்து ஒருவாறு ஆறுதலடைந்தவர்களாய், ஆளவந்தாருடைய திருவிரல்கள் மூன்று மடங்கியிருப்பதையும் காட்டினார்கள்.

## திருவிரல்கள் நிமிர்தல்

36-37. (திருவிரல்கள் மடங்கியிருப்பதற்குக் காரணமான ஆளவந்தாருடைய மூன்று மனக்குறைகளைப்பற்றிக் கேள்விப்பட்ட ஸ்ரீராமாநுஜர், அவருடைய மனக்குறைகளைத் தீர்ப்பதற்காக) "(1) வ்யாஸருடைய ப்₃ரஹ்மஸூத்ரத்திற்கு பா₄ஷ்யமெழுதி விவரிப்பேன். (2) அவருடைய தகப்பனரான பராஶரரின் பெயரையும், (3) நம்மாழ்வாரின் திருநாமத்தையும் இருவர்க்கு இடுவதன் மூலம் அவர்களுக்கு நன்றி செலுத்துவேன்" என்று ப்ரதிஜ்ஞை செய்து, அவரது திருவடித் தாமரையிணையை வணங்கினார். அக்கணத்திலேயே, ஆளவந்தாருடைய மடங்கிய மூன்று விரல்களும் முன்போல் நிமிர்ந்தன. அதைக்கண்ட அனைவரும் "இவரே வைதி₃கஸித்₃தா₄ந்தத்தை நிலைநிறுத்துமவர்களுக்குத் தலைவராவார் என்பது உறுதி" என்று உரைத்தார்கள்.

## ஆறு வார்த்தைகள்

38—41. (அதற்குப்பின் ஆளவந்தாரை உயிரோடு ஸேவிக்காத மனக்குறையாலே) அரங்கநகரப்பனை ஸேவிக்காமலே காஞ்சிக்குத் திரும்பிய ராமாநுஜர் வரத₃ராஜனை வணங்கி அவருக்குச் சாலைக் கிணற்றுநீரை அளித்தல் முதலான கைங்கர்யங்களைச் செய்கின்றவராய் ஒரு சமயம் "நான் இனிச்செய்யவேண்டியது என்ன" என்று சிந்தித்தார்.

இதற்குமேல் திருக்கச்சிநம்பி வைபவம் ஐ நி. 7 காண்க.

## பெரியநம்பியை ஆஶ்ரயித்தல்

42-45. பெரியநம்பி வைபவம் ஐதிஹ்ய நிர்வாஹம் 35 காண்க.

## க்₃ரந்தோ₂பதே₃ஶம்

46-47. அத்தகைய பெருமை படைத்த தி₃வ்யதே₃ஶமாகிற மது₄ராந்தகத்திலிருந்து சிஷ்யரான ராமாநுஜரோடு காஞ்சியை அடைந்த ஆசார்யரான பெரியநம்பி, பொருந்திய பெயரையுடைய வரத₃ராஜப்பெருமானை வணங்கி ராமாநுஜருடைய இருப்பிடத்தை அடைந்தார். மிகவுகந்த அப்பெரியநம்பி, நாலாயிர தி₃வ்யப்ரப₃ந்த₄ங்களில் முதல் மூன்று ஆயிரங்களையும் வ்யாஸருடைய ப்₃ரஹ்ம ஸூத்ரங்களின் பொருளையும் ராமாநுஜருக்கு உபதே₃ஶித்தார். மனைவியோடுகூடிய அவரை ராமாநுஜநும் அவருகந்த கைங்கர்யங்களைச் செய்து ஆராதி₄த்து வந்தார்.

## ஸந்யாஸாஶ்ரம ஸ்வீகாரம்

48-51. ஒரு காரியத்தை முன்னிட்டு ராமாநுஜர் ஸ்ரீபெரும்பூதூருக்குச் சென்றிருந்தபோது அவரது பத்னியாலே ஜாதியில் தாழ்வைக்காட்டி அவமதிக்கப்பெற்றுக் கோபமடைந்த தனது பத்னியைப் பெரியநம்பி கோபித்தார். அதற்குப்பின் பெரியநம்பி தமது மனைவியையும் அழைத்துக்கொண்டு ஸ்ரீரங்க₃ம் சென்றுவிட்டார். (ஸ்ரீபெரும்பூதூரிலிருந்து திரும்பிவந்து) அச்செய்தியைக் கேள்விப்பட்ட ஆசார்யப₄க்திமிக்க ராமாநுஜரும் மிகக்கோபங்கொண்டவராய், தமது மனைவியைத் தாய்வீட்டிற்கு அனுப்பிவிட்டார். இல்லறத்தில் வைராக்₃யமடைந்த அந்த ராமாநுஜர் மனைவியைக் கைவிட்டு ஸ்ரீதே₃வராஜப்பெருமானை வணங்கி, அவரிடமிருந்தே ஸந்யாஸா

ஸ்ரமத்தை ஏற்றுக்கொண்டார். அப்பெருமானும் அவருக்கு யதிராஜர் என்னும் திருநாமத்தை அளித்தான். அதற்குப்பின் யதிகட்கிறைவரான ராமாநுஜர் த்ரித3ண்ட3த்தையுடையவராய் ஶிகை2, யஜ்ஞோபவிதம், காஷாயம் ஆகியவற்றோடு கூடியவராய் மந்திர ரத்னமான த்3வயத்தை அநுஸந்தி4ப்பவராய், வர்ணாஸ்ரமாசாரங்களின்படி நடப்பவராக விளங்கினர்.

## கூரத்தாழ்வானும், முதலியாண்டானும் ஆஸ்ரயித்தல்

52. அக்காஞ்சியிலேயே, கூரத்தாழ்வானும், (ராமாநுஜருடைய மருமக்களான) வாத்ஸ்யகுலத் தலைவரான நடாதூராழ்வானும், வாதூலகுலத்தலைவரான முதலியாண்டானும் ராமாநுஜரை ஆஸ்ரயித்தனர். ராமாநுஜரான யதிராஜர் அவர்களுக்குப் பஞ்சஸம்ஸ்காரங்களையும் செய்வித்தார்.

## யாத3வப்ரகாஶர் ஆஸ்ரயித்தல்

53. ஆளவந்தா3ருடைய கடாக்ஷத்தால் ஶுத்3தி4யடைந்த யாத3வப்ரகாஶரும் யதிராஜ ஶிஷ்யராகி, 'கோ3விந்த ஜீயர்' எனனும திருநாமப்பெற்று, ஸந்யாஸிகளின் த4ர்மங்களை விளக்கும் 'யதித4ர்ம ஸமுச்சயம்' எனும் நூலை இயற்றினர்.

## ஸ்ரீரங்க3நிர்வாஹத்தை ஏற்றுக்கொள்ளல்

54-56. ஒரு சமயம், திருவரங்கப்பெருமாளரையர், காஞ்சிக்குச் சென்று வரத3னை வணங்கி, அவரிடமிருந்து ராமாநுஜரை வரமாகப் பெற்று அழைத்துக்கொண்டு, ஸ்ரீரங்க3த்தைக் குறித்துப் புறப்பட்டார். அதற்குப்பின் கூரத்தாழ்வான் முதலான அந்தரங்க3 ஶிஷ்யர்களோடு கூடிய யதிகட்கிறைவர், மது4ராந்தகத்திலிருக்கும் பெருமாளை வணங்கி, ஸ்ரீரங்க3த்திற்கு வந்து பெரியபெருமாளை ஸேவிக்க விருப்பங்கொண்டவராய் எழுந்தருளும்போது, ரங்க3நாத2னின் ஆஜ்ஞையாலே எதிர்கொண்டழைத்தவர்களாலே, (பெருமாளுடைய) மாலை முதலானவையளித்து ப3ஹுமானம் செய்யப்பெற்றவராய், பெரியபிராட்டியாரையும், பிறகு பெரியபெருமாளையும் வணங்கி, ஸ்ரீரங்க3ஸ்ரீகார்ய நிர்வாஹத்திற்குத் தலைவரானார்.

### உப₄யவிபூ₄தி ஸாம்ராஜ்யமடைதல்

57. (அரங்கனுல் அளிக்கப்பெற்ற) உப₄யவிபூ₄தி ஸாம்ராஜ்யத்தைப் பெரியநம்பியின் கடாக்ஷத்தால் கிடைத்ததாக எண்ணி, அவரது திருவடித் தாமரையிணையை வணங்கி, அவருக்கு வசப்பட்டவராய் விளங்கினுர் உடையவர்.

### திருக்கோட்டியூர் நம்பியிடம் உடையவர் திருமந்த்ர சரமஶ்லோகார்த்த₂ங்களைப் பெறுதல்

58. திருக்கோட்டியூர் நம்பிவைபவம் ஐதிஹ்யநிர்வாஹம் 40 காண்க.

### எம்பெருமானுர் தா₃ர்ஶனம்

59. திருக்கோட்டியூர் நம்பிவைபவம் ஐதிஹ்யநிர்வாஹம் 40 காண்க.

### திருவரங்கப்பெருமாளரையரிடம் உபதேசம் பெறுதல்

60-61. திருவரங்கப்பெருமாளரையர் வைபவம் ஐதிஹ்யநிர்வாஹம் 15 காண்க.

### திருமாலையாண்டானிடம் அருளிச்செயலர்த்த₂ம் பெறுதல்

62-63. திருமாலையாண்டான் வைபவம் ஐதிஹ்யநிர்வாஹம் 49 காண்க

### ஶ்ரீரங்க₃வாஸம்

64. இவ்வண்ணமாக ரஹஸ்யார்த்த₂ங்களோடு கூடிய உப₄ய வேதா₃ந்தங்களையும் ஆசார்யர்களிடமிருந்து கற்று, கூரத்தாழ்வான் ஶ்ரீவத்ஸகுலதிலகரான நடாதூராழ்வான் முதலான சிஷ்யர்களோடு மிகவுகந்து திருவரங்க₃த்தில் வாழ்ந்தார் யதிராஜர்.

### ஆச்சான் ஆஶ்ரயித்தல்; பிள்ளானைக் கடாக்ஷித்தல்

65-67. அதற்குப்பின், ஆத்ரேயகுலத்திலுதித்த ப்ரணதார்த்திஹரர் என்னும் கிடாம்பியாச்சான் யதிராஜரின் திருவடியில் ஆஶ்ரயித்தார். தனது அத்தைக்கும், (ராமாநுஜரின் மாமாவான) திருமலைநம்பிக்கும் பிள்ளையான பிள்ளானைக் காட்டிக்கொடுத்து, அப்பிள்ளானுடைய இயல்வான நல்லொழுக்கத்தையும், யதிராஜப₄க்தியையும், அவருக்குக் கைங்கர்யம் செய்வதில் விருப்பம் முதலானவற்றையும் விண்ணப்பித்து, "இந்த யதிராஜரையே திருவேங்கடமுடையானுக நினைத்து அடைவாயாக" என்று திருமலைநம்பி தனக்குச் சொன்ன வார்த்தையையும் ஆச்சான் ராமாநுஜருக்குக் கூறினுர். இளம் வயதினரான அப்பிள்ளானைக் கடாக்ஷித்து, அப்

போதே ஆச்சானுக்கு எல்லா மந்திரங்களையும். அவற்றின் பொருளையும் உபதேசித்தார். அதனாலேயே அவரும் யதிராஜருடைய திவ்யமங்களவிக்ரஹத்தைப் பரிவுடன் நோக்குமவரானார்.

## ஆச்சானுக்கு மடைப்பள்ளி கைங்கர்ய நியமனம்

**68-69.** அப்போது ஒருஸமயம் தம்மிடம் விரோதங்கொண்ட சிலர் விஷங்கலந்த பிக்ஷையை இடுவித்ததை அறிந்த யதிராஜர், மூன்று தினங்கள் உபவாஸமிருந்தார். அதைக்கேட்டவுடன் திருக்கோட்டியூர் நம்பியும், பெரிய நம்பியும் திருக்கோட்டியூரிலிருந்து ஸ்ரீரங்கத்திற்கு விரைவில் வந்து சேர்ந்தார்கள் அப்போது எதிர்கொண்டு அழைக்கவந்த யதிராஜர், (நடுப்பகலில் காவேரி மணலில்) அவர்களைக் கீழே விழுந்து வணங்காநிற்க, (அவர் திருமேனியில் பரிவாலே கிடாம்பியாச்சான் பதற), 'உமது திருமேனியில் பரிவுடைய இந்தக் கிடாம்பியாச்சானால் பரிசோதிக்கப்பட்ட பிக்ஷையையே நீர் தினந்தோறும் கொள்வீர்' என்று நம்பிகளிருவரும் யதிராஜர்க்கு நியமித்தனர். அவரும் அப்படியே செய்து வந்தார்.

## கோவிந்தபட்டர் திருந்திய செய்தி

**70.** பெரியதிருமலை நம்பி வைபவம் ஐதிஹ்ய நிர்வாஹம் 16 காண்க.

## க்ரந்தங்கள் அருளல்

**71-74.** அதற்குப்பின் யதிராஜர் வேதார்த்தஸங்க்ரஹத்தையும், ப்ரஹ்மஸூத்ர வ்யாக்யானங்களான வேதாந்தஸார தீபங்களையும், கீதா வ்யாக்யானமான கீதாபாஷ்யத்தையும் அருளி, கூரத்தாழ்வான் முதலான சிஷ்யர்களுக்கு உபதேசித்தார். ஆதியந்தமற்ற வேதவாக்யங்களுக்கு முரண்படாத பொருளை விளக்குவதன்மூலம் வ்யாஸருடைய ப்ரஹ்மஸூத்ரங்களுக்கு உண்மைப் பொருளை விளங்கும் ஸ்ரீபாஷ்யத்தை அருளிச்செய்து, ஆளவந்தாரின் மநோரதமான தமது பொறுப்புகளில் முதலாவதை நிறைவேற்றினார் யதிராஜர். அதற்குப்பின் ஒருபங்குனி உத்தரத் திருநாளிலே ஸ்ரீரங்கநாயகியும், ஸ்ரீரங்கநாதனும் சேர்த்தியிலே பேரானந்தத்தோடு திருமஞ்சனம் கண்டருளியபின் அவர்களை சரணமடைந்து, அதை விளக்கும் கத்யத்ரயத்தையும் அருளிச்செய்தார் யதிராஜர். ஸ்ரீபாஷ்ய கீதாபாஷ்ய ஸார தீப வேதார்

த்த₄ ஸங்க்₃ரஹங்களால் தத்வஹித புருஷார்த்த₂ங்களை அறிந்த வனாய். மூன்று க₃த்₃யங்களாலும் ஸ்ரீமந்நாராயணனை ஶரணமடைந்த வனாய், அந்த ஸ்ரிய:பதிக்கே கைங்கர்யம் செய்யும் அதி₄காரிக்கு. அந்த லக்ஷ்மீபதியை அடையும் வரையில் செய்யவேண்டிய நித்ய கைங்கர்யங்களை 'நித்ய க்₃ரந்த₂ம்' என்னும் நூலின் மூலம் தெரிவித்தார் யதிராஜர்.

## திருமலைநம்பியிடம் ஸ்ரீராமாயணம் கேட்டது

75-76. பெரியதிருமலைநம்பி வைபவம் ஐதிஹ்ய நிர்வாஹம் 17காண்க

## பிள்ளானையும் கோ₃விந்த₃ப₄ட்டரையும் பெறுதல்

77-78. திருமலைநம்பியின் பிள்ளைகள் இருவரும், அவராலே நியமிக்கப்பெற்று யதிராஜரை ஆஶ்ரயித்து, அவரிடமிருந்து எல்லா அர்த்த₂ங்களையும் உபதே₃ஶம் பெற்றனர். அவர்களில் கடைசிப் பிள்ளையான பிள்ளானைத் திருமலைநபபி யதிராஜருக்கு அபி₄மான புத்ரராக அளித்தார். யதிராஜரும் நம்பியால் அளிக்கப்பெற்ற அப்பிள்ளானையும், தானே யாசித்துப்பெற்ற (தனது சிறியதாயார் பிள்ளையான) கோ₃விந்த₃ப₄ட்டரையும் அழைத்துக்கொண்டு, காஞ்சீமார்க்க₃மாகவே ஸ்ரீரங்க₃த்தை அடைந்தார்.

## எம்பாரும் ப₄ட்டரும்

79. அந்த கோ₃விந்த₃ப₄ட்டர் விஷயவைராக்₃யமுள்ளவரா யிருப்பதைக்கண்டு, அவருக்கு ஸந்யாஸாஶ்ரமத்தையும் (தனது பெயரைச்சுருக்கி) 'எம்பார்' என்னும் திருநாமத்தையும் அளித்தார் எம்பெருமானார். ஸ்ரீரங்க₃நாத₂னுடைய அருளாலே கூரத்தாழ்வா ருக்குப் பிள்ளையாகப்பிறந்தார் பிஞ்சாய்ப் பழுத்தவரான ப₄ட்டர்.

## இரண்டாவது யாமுநாசார்ய மநோரத₂பூர்த்தி

80. அந்த ப₄ட்டருக்குப் பராஶரர் என்னும் (பராஶரமஹர்ஷி யின்) பெயரை அளித்து அவரால் இயற்றப்பெற்ற ஸஹஸ்ரநாம பா₄ஷ்யத்தையும் அரங்கேற்றி, ஆளவந்தாரின் இரண்டாவது மநோரத₂த்தை நிறைவேற்றினார் யதிராஜர்.

## பிள்ளான் ஜ்ஞாநபுத்ரராதல்

81-82. ஒருசமயம் தமது மட₂த்திநுள்ளிருந்துகொண்டு தி₃வ்யப்ரப₃ந்த₄த்தில் ஒரு பாசுரத்திற்குப் பொருளைப்பற்றி

ஆராய்ந்துகொண்டிருந்த யதிராஜரைக்கண்டு, திருமலைநம்பியின் பிள்ளையான பிள்ளான், அவர் ஆராய்ந்து முடிவுகட்டிய பொருள் இதுவன்றோ என்று உரைத்தார். தாம் முடிவுகட்டிய பொருளும், அவர்கூறிய பொருளும் ஒன்றாயிருப்பதைக்கண்ட எதிராஜரும் மிகவும் ஆச்சர்யமடைந்தவராய், 'நாத₂முனிகளின் (ஜ்ஞான) வம்ஶத்தில் உதி₃த்த பெருமையால் இவர் இப்பொருளை அறிந்தார்' என்று எண்ணி, 'எனது ஜ்ஞாநபுத்ரரே!' என்று அவரை அணைத்துக்கொண்டார்.

## ஆறாயிரப்படி அருளல்

83. யதிராஜரான ராமாநுஜாசார்யருக்கு ஜ்ஞாநபுத்ரர் என்றும், அவருடைய பாது₃கையென்றும் புகழ்பெற்றவரான (திருக்குருகைப் பிரான்) பிள்ளான், நம்மாழ்வாருடைய கடைசிப் பிரப₃ந்த₄மான திருவாய்மொழிக்கு (ஆறாயிரப்படி) வ்யாக்₂யானம் அருளிச்செய்தார்.

## மூன்றாவது யாமுநாசார்ய மநோரத₂பூர்த்தி

84. 'பிள்ளான்' என்று பெயர்பெற்றிருந்த அவருக்கு, நம்மாழ்வாரின் திருநாமமான 'திருக்குருகைப்பிரான்' என்னும் பெயரை இட்டு அவர் அருளிய ஆறாயிரப்படி வ்யாக்₂யானத்தையும் அரங்கேற்றி, ஆளவந்தாரின் மூன்றாவது மநோரத₂த்தையும் நிறைவேற்றினார் யதிராஜர்.

## யஜ்ஞமூர்த்தி அருளாளப்பெருமாளெம்பெருமானார் ஆனது

85-86. அதற்குப்பின், யதிராஜருக்கும், யஜ்ஞமூர்த்தி எனும் அத்₃வைதிக்கும் "இவ்வாத₃த்தில் தோற்பவர் ஜயிப்பவருடைய மதத்தைப் பின்பற்றவேணும்" என்னும் நியமத்துடன் ஸ்ரீரங்கத்தில் பதினெட்டுநாள் வாத₃ப்போர் நிகழ்ந்தது. ஸ்வப்நத்தில் (தமது ஆராத₄னமூர்த்தியான) வரத₃ராஜப் பெருமாளால் கடாக்ஷிக்கப்பட்ட யதிராஜர் (பதினெட்டாவதுநாள்) மாயாவாதி₃மதத்தின் தலைவரான யஜ்ஞமூர்த்தியை வாத₃த்தில் ஜயித்தார். (அருளாளப்பெருமாளின் கடாக்ஷத்தாலே தம்மால் வாத₃த்தில் ஜயிக்கப்பட்ட காரணத்தாலே) அவருக்கு அப்பெருமாளின் திருநாமத்தையும் தமது பெயரையும் சேர்த்து, 'அருளாளப்பெருமாள் எம்பெருமானார்' என்னும் திருநாமத்தை இட்டார் எதிராஜர். சிஷ்யராகி அவரும் மிகவுகந்தார்.

## பரமதநிரஸநம்

87. அதற்குப்பின் யதிராஜர் திக்விஜயம் செய்ய எண்ணி, பல சிஷ்யர்களோடு புறப்பட்டு ஆங்காங்கு சென்று புறமதத்தினர் அனைவரையும் ஜயித்து, (காஷ்மீரதேசத்தில்) ஸரஸ்வதீ பீடத்தை அடைந்தார்.

## ஸ்ரீபாஷ்யகாரரானது

88-89. அங்கு அவருடைய ப்ரஹ்மஸூத்ரபாஷ்யத்தை ஶிரஸாவஹித்த ஸரஸ்வதிதேவி "இதுவே ஸ்ரீபாஷ்யம்; மிகச் சிறந்த பாஷ்யத்தைச் செய்த நீர் இனி ஸ்ரீபாஷ்யகாரர் என்றே புகழ்பெறுவீர்" என்று கூறி, அந்த ஸ்ரீபாஷ்யஸ்ரீகோஶத்தையும், தனது ஆராதனமூர்த்தியான ஹயக்ரீவரையும் அவரிடம் அளித்தாள். அடிபணிந்து ஸ்ரீகோஶத்தையும் ஹயக்ரீவரையும் ஏற்றுக்கொண்டு, குலக்ரமப்படி திருவாராதனப்பெருமாளாயிருந்த வரதராஜனோடு அவரையும் தினந்தோறும் ஆராதித்துக்கொண்டு புறமதங்களை ஜயித்துத் திருவேங்கடமலைக்கு மறுபடியும் எழுந்தருளினார் எதிகட்கிறைவர்.

## அப்பனுக்குச் சங்காழி அளித்தது

90-92. பக்தனான தொண்டைமான் சக்ரவர்த்திடம் ஶங்க சக்ரங்களைக் கொடுத்திருந்ததைப் பற்றாகக்கொண்டு, 'ஸ்ரீநிவாஸன் சிவனேயொழிய விஷ்ணுவல்ல' என்று சைவர்கள் வாதம்புரிய முற்பட, அப்பெருமான் விஷ்ணுவே என்பதை நிலைநாட்டினார் யதிராஜர். (அப்படியும் சைவர்கள் பிடிவாதம் பிடித்தமையால் அனைவரும் சேர்ந்து நிஶ்சயித்து) ஶங்கசக்ரங்களையும், சூலத்தையும் கர்ப்பக்ருஹத்தினுள் வைத்துக் கதவைச் சாத்தி, எல்லோரும் ஒன்றுயிருந்து காவல்காத்து, காலையில் ஒன்றாகவே கதவைத் திறந்து உள்ளே புகுந்து திருவேங்கடமுடையானைக் கண்டனர்: சூலத்தை ஒழித்தெறிந்து, ஶங்கசக்ரங்களை தரித்துக்கொண்டிருந்த ஸ்ரீநிவாஸனைக் கண்ட சைவர்கள் உடனே ஓடிவிட்டார்கள். யதிராஜரோடு திருமலைநம்பியும் மிகவுகந்தார்.

## புறமதத்தவரின் பொறாமை

93. திருமலைநம்பியால் பரிபூர்ணமாகக் கடாக்ஷிக்கப்பட்ட யதிராஜர் எல்லா சிஷ்யர்களோடும் ஸ்ரீரங்கத்திற்கு எழுந்தருளி,

வேத₃ாந்த ஸித்₃த₄ாந்தத்தை நிலை நாட்டுவதில் வல்லவரானார். புற மதத்தவர்கள் அதனால் பொறாமை கொண்டனர்.

## சோழராஜாவின் உபத்₃ரவம்

94-96. அதற்குப்பின் அப்புறமதத்தவர்களால் து₃ர்போ₃த₄ணை செய்யப்பட்ட சோழராஜா, "சிவனைக்காட்டிலும் மேலானவன் இல்லை" என்று ஏட்டில் எழுது" என்று நல்லவர்கள் அனைவரையும் துன்புறுத்தி வந்தான். அவன் இதற்காக யதிராஜரை அழைத்து வரத் தன் வேலைக்காரர்களை அனுப்பினான். சிஷ்யர்கள் மூலம் இச்செய்தி ஸ்ரீரங்க₃த்தை எட்டியது. இதைச் செவியுற்ற கூரத்தாழ்வான் காஷாயத்தையும் த்ரித₃ண்ட₃த்தையும் த₄ரித்தவராய், பெரிய நம்பியோடுகூட ராஜசபைக்குச் சென்றார். நடாதூராழ்வான் முதலானாரோடு கூடியவராய், யதிராஜரும் வெள்ளை வஸ்த்ரம் சாத்திக்கொண்டு மேற்கு தி₃க்கை நோக்கிப் புறப்பட்டார். அப்படிச் செல்லும்போது, ஓரிடத்திலிருந்த சில சிஷ்யர்களால் ஸமர்ப்பிக்கப்பட்ட காஷாயத்தையும் த்ரித₃ண்ட₃த்தையும் சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட முறையில் மறுபடியும் ஏற்றுக்கொண்டு, முறைப்படி எம்பெருமான்களுக்குத் திருவாராத₄னம் செய்துவந்தார் யதிராஜர்.

## மேல்நாட்டு அரசன் ஆச்ரயித்தல்

97. மேல்நாட்டை (மைஸூரை) அடைந்த யதிராஜரை, அந்த தே₃சத்து அரசனும், சில அந்தணர் தலைவர்களும் ஆச்ரயித்தனர். (அவ்வரசனை வசப்படுத்தியிருந்த) ஜைனர்களும் யதிராஜரால் தோற்கடிக்கப்பட்டு (அரசனால்) நிரஸிக்கப்பட்டனர். இதனால் எம்பெருமானாருடைய மஹாப்ரப₄ாவமும் வெளிப்பட்டது.

## திருநாராயணபுர ப்ரதிஷ்டை

98-99. அங்கு யதிராஜரின் கனவில் தோன்றிய திருநாரணன், "யாத₃வாத்₃ரியில் பூ₄மிக்கு அடியில் இன்ன அடையாளமுள்ள இடத்தில் நான் இருக்கிறேன். என்னை அங்கு ப்ரதிஷ்டை₂ செய்வாய்; (ஊர்த்₄வபுண்ட்₃ரத்திற்கான) வெள்ளை மண்ணையும் எடுத்துக்கொள்வாய்" என்று அவரிடம் அருளினான். அப்போது யதிராஜரும் மிகவுகந்தவராய், கல்யாணஸரஸ்ஸில் நீராடிப் பரிசுத்₃தி₄ பெற்றவராய், அவ்வடையாளங்களைக்கொண்டு (திருநாரணனோடு கூடிய) விமானத்தைக் கண்டுபிடித்து, அக்கோயிலிலே (மூலமூர்த்தியான) திருநாரணனை ப்ரதிஷ்டை₂ செய்தார்.

## செல்வப்பிள்ளையைக் கொண்டு வருதல்

100. வெள்ளைமண்ணையும் சிஷ்யர்களைக்கொண்டு எடுத்து த₄ரித்துக்கொண்டு திருநாரணனின் உத்ஸவவிக்₃ரஹமான ராமப்ரியரைத்தேடி டில்லிக்குச்சென்று, டில்லி அரசனின் பெண்ணின் அந்த:புரத்திலிருந்த அப்பெருமாளை 'என் செல்வப்பிள்ளாய்! வருக' என்று கூவினார்.

101. ஓடிவந்து மடியில் ஏறிய ராமப்ரியரை அழைத்துக்கொண்டு வந்து திருநாராயணபுரத்தில் உத்ஸவமூர்த்தியாகச் சேர்த்து அந்தச் செல்வப்பிள்ளையான திருநாரணனுக்கு உத்ஸவம் முதலானவற்றைச் செய்து இன்புற்றார் எதிராஜர், அப்பெருமாளைத் தேடிவந்த டில்லி அரசனின் பெண், அவரோடு அங்கேயே ஒன்றுபட்டு மறைந்தாள்.

## தூ₃ர்ஶனத்யாக₃மும் க்ருமிகண்ட₂மரணமும்

102. பெரியநம்பியும் கூரத்தாழ்வானும் த₃ர்ஶனத்திற்காக (மதத்திற்காக) த₃ர்ஶனத்தை (கண்ணை) இழந்ததைக் கேள்விப்பட்டு மிக வருந்திய யதிராஜர், (பெரியநம்பி பரமபதமடைந்தபோதிலும்) கூரத்தாழ்வான் க்ஷேமமாயிருப்பதையும், சோழ அரசன் விரைவிலேயே (அஸஹ்யாபசாரப₂லமாகக் கழுத்தில் புழுத்து) துர்மரணம் அடைந்ததையும் கேள்விப்பட்டு, (ஸ்ரீரங்க₃ச்செல்வத்திற்கு உபத்₃ரவம் நீங்கியது காரணமாக) ஆனந்த₃மடைந்தார்.

## யது₃கி₃ரி யதிகி₃ரியானது

103. அதற்குப்பின்னே—கல்யாண தீர்த்த₂ம் பொருந்திய பெயர் பெற்றது. அந்த நக₃ரமும் திருநாராயணபுரமாயிற்று. அங்குள்ள ஸ்ரிய:பதியும் ஸம்பத்குமாரர் (செல்வப்பிள்ளை) ஆனார், யதிராஜரின் ஜயஸ்த₂ானமாக ஆயிற்று அவ்வூர். மேலும், ஸ்ரீமானான யதிராஜர் தமது திருவடிகளை ஆஸ்ரயித்த ஜனங்களின் ஹிதத்திற்காகத் தமது அர்ச்சாமூர்த்தியை (மூலவரை) அவர்களுக்கு அளித்தார். அதனால் அந்த யாத₃வாத்₃ரி யதிகி₃ரி என்றும் பெயர் பெற்றது.

## ஸ்ரீரங்க₃த்தை அடைதல்

104. செல்வப்பிள்ளையையும், யது₃கி₃ரிநாச்சியாரோடு கூடிய திருநாரணனையும் வணங்கி, அங்குள்ள சிஷ்யர்களை (திருநாரணனை

ரக்ஷிக்கும்படி) நியமித்துவிட்டு, சில அந்தரங்க₃ஶிஷ்யர்களோடு கூடிய யதிராஜர் ஸ்ரீரங்கத்திற்குச் சென்று மிகவுகந்து, ஸ்ரீரங்க₃ நாத₂னை ஆனந்த₃க்கண்ணீரோடு வணங்கினர். அப்போது அங்குள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள் நம்மாழ்வாரின் அருளிச்செயல்களுக்கான திருவத்₄யயநோத்ஸவம் (ஆழ்வார்திருநகரியிலிருந்து ஆழ்வார் எழுந்தருள இயலாமையால்) தடைபட்டுவிட்டது என்று அவரிடம் கூறினர்.

## ஆழ்வார்கள் ப்ரதிஷ்டை₂யும், அத்₄யயநோத்ஸவமும்

105. அந்த ஸ்ரீரங்க₃த்திலேயே ஸ்ரீமானன யதிராஜர் நம்மாழ்வார் விக்₃ரஹமொன்றை ப்ரதிஷ்டை செய்வித்து, அவரைக்கொண்டு ஸ்ரீரங்க₃ராஜனுக்கு இருபது நாள் அத்₄யயனோத்ஸவத்தைச் செய்வித்து, பிற்காலத்தில் மற்ற ஆழ்வார்களின் ப்ரப₃ந்த₄ங்களையும் தன் விஷயமான இராமாநுச நூற்றந்தாதியையும் சேர்த்துத் திருவரங்கன் செவிசாத்தும்படி செய்து, அந்த மற்றையாழ்வார்களுக்கும், ஆண்டாளுக்கும் விக்₃ரஹப்ரதிஷ்டை₂யும் செய்து வைத்தார்.

## கோயிலண்ணரானது

106. அதுபோலவே மிகச் சிறப்புற்ற தி₃வ்யதே₃ஶங்கள் அனைத்திலும், ஆழ்வார்களுடையவும், ஆண்டாளுடையவும் விக்₃ரஹங்களை ப்ரதிஷ்டை₂ செய்வித்து அத்₄யயநோத்ஸவமும் நடக்கும்படிசெய்து (ஆண்டாள் பாரித்தபடியே) நூறுதடாவில் வெண்ணெயும், நூறு தடா நிறைந்த அக்காரவடிசிலும் திருமாலிருஞ்சோலை அழகர் உகக்கும்படி ஸமர்ப்பித்து, யதிராஜர் ஆண்டாளின் கடாக்ஷத்தாலே 'கோயிலண்ணர்' என்று அழைக்கப்பெறும் ஸந்மானத்தைப் பெற்றார்.

## கோவிந்தராஜ ப்ரதிஷ்டை

107. (க்ருமிகண்ட₂னால் இடிக்கப்பட்ட) தில்லைத் திருச்சித்திர கூடத்திலிருந்து ரஹஸ்யமாக எடுத்துச்செல்லப்பட்ட கோ₃விந்த₃ ராஜப்பெருமாளின் உத்ஸவமூர்த்தியை வேங்கடமலை அடிவாரத்திலே ப்ரதிஷ்டை₂செய்து, நம்மாழ்வார் முதலான ஆழ்வார்களையும் ப்ரதிஷ்டை₂செய்து, ஶிஷ்யஸமூஹங்களோடு கூடிய யதிராஜர் திருவரங்கத்திற்குத் திரும்பிச் சென்றபின், மற்ற மதங்களைப்பற்றியிருந்த ஜனங்களைத் தனது அடியார்களாக்கிக்கொண்டு, சிஷ்யர்களுக்கு முறைப்படி ஒவ்வொரு கைங்கர்யத்தைப் பிரித்துக்கொடுத்து, கவலை நீங்கப்பெற்றவராய் இன்புற்றார்.

## ஸிம்ஹாஸநாதி₄பதிகளை நியமித்தல்

108. அந்த எழுபத்துநாலு ஸிம்ஹாஸநாதி₄பதிகளையும், அவரிலும் முக்கியமானவராக நால்வரை ஸ்ரீபா₄ஷ்ய ஸிம்ஹாஸநாதி₄ பதிகளாகவும், அந்நால்வரிலும் தமது ஜ்ஞாநபுத்ரரான பிள்ளானை உப₄யவேதா₃ந்த பா₄ஷ்ய ஸிம்ஹாஸநாதி₄பதியாகவும், யதிகளுக்குச் சக்ரவர்த்தியான ராமாநுஜாசார்யர் நியமித்தருளினுர்.

## ஶிஷ்யஸம்ருத்₃தி₄

109. அந்த எழுபத்துநாலு ஸிம்ஹாஸநாதி₄பதிகளோடும், எழுநூறு ஸந்யாஸிகளோடும், பன்னீராயிரம் பரமைகாந்திகளோடும் ஆஶ்சர்யமான ஶிஷ்யஸம்ருத்₃தி₄பெற்றவராய் எழுந்தருளியிருந்த யதிராஜர், பெரியவர்களான கூரத்தாழ்வான், முதலியாண்டான் முதலானுர், தப்பியான எம்பார், தனது ஜ்ஞானபுத்ரரான பிள்ளான் ஆகிய அனைவரையும் கடாக்ஷித்து, மற்ற சிஷ்யர்களையும் அவர்களுடைய அபி₄மானத்தில் ஒதுங்கியிருக்கும்படி கடாக்ஷித்து மிகவும் உகந்தார்.

## மூன்று திருமேனிகளை அளித்தல்

110. ஶாஸ்த்ரங்களில் சொன்ன ஆசாரத்தின்படியே நடப்பவர்களாய், நல்லொழுக்கமுடையவர்கள் என்று புகழ்பெற்றவர்களான ஶிஷ்யஸமூஹங்களோடு கூடிய யதிராஜர், சில சிஷ்யர்களால் ப்ரார்தி₂க்கப்பட்டவராய், (உத்ஸவமூர்த்திகளான) தமது அர்ச்சாவிக்₃ரஹங்கள் மூன்றைத் தழுவி, அவற்றை முறையே ஸ்ரீரங்க₃த்திலும் ஸ்ரீபெரும்பூதூரிலும், திருநாராயணபுரத்திலும் ப்ரதிஷ்டை₂ செய்ய வேண்டியவை என்று சொல்லி அவர்களுக்கு அளித்து உலகனைத்தையும் ரக்ஷித்துவருமவராய், தமது கடாக்ஷத்தாலே அடியேனையும் ரக்ஷிக்கக்கடவாராக.

## கலிகோலாஹலத்தைத் தவிர்த்தல்

111. "இப்பார்முழுவதிலிருந்தும் என்னை விரட்டி, நான் தங்குவதற்கு இடமில்லாமல் நீர் செய்ததால், நான் எனக்குச் சமயம் வாய்க்கும்போது, உமது மதத்தையும் கலக்குவேன் என்று ஆணையிடுகிறேன்" என்று கலிபுருஷன் சொன்ன வார்த்தையைக்கேட்டு, ஆதி₃ புருஷனுன ஸ்ரீயःபதியை ஶரணடைந்து, 'எனது மதம் தடையற்றதாய்

வாழக்கடவது' என்று ப்ரார்த்தித்த யதிராஜர் என்னைத் தமது கடாக்ஷங்களால் ரக்ஷிக்கக்கடவர்.

## யதிராஜருக்குப் பல்லாண்டு

112. (தமது அந்திமதசையில்) குலதெய்வமான தேவப்பெருமாளையும், ஸரஸ்வதி அளித்த ஹயக்ரீவனையும் ஜ்ஞாநபுத்ரரான பிள்ளானுக்கு அளித்து, மூவுலகிலும் சிறப்புற்ற புகழையுடைய மஹா ப்ரபாவரான யதிராஜர், ஆளவந்தார், அவரது சிஷ்யர்களான பெரிய நம்பி, பெருமைபெற்ற திருக்கோட்டியூர் நம்பி, திருமலைநம்பி, திருவரங்கப்பெருமாளரையர், திருமாலையாண்டான் ஆகிய ஆசார்யர்களோடு என்றும் வெற்றிபெறுவாராக.

## நான் (வடுகநம்பி) பெற்றபேறு

113. தனது அந்தரங்கசிஷ்யர்களில் ஒவ்வொருவரையும் ஒவ்வொரு கைங்கர்யத்தில் நியமித்த ஸ்ரீமானான யதிராஜர், மிகவும் தகுதியற்ற என்னையும் தமக்குப் பால் காய்ச்சும் கைங்கர்யத்தில் நியமித்தருளினார்; இது என்ன ஆச்சர்யம்! அத்துடன் தன்னடியார்க்கு அடியார்க்கு அடியார்க்கு அடியவனாகவும், மிகுந்த அன்புடையவனாகவும், தமக்கு நல்லது செய்பவனாகவும் கொண்டு என்னையும் ரக்ஷிக்கிறவரான அவர் பல்லாண்டு வாழ்க!

## பலஶ்ருதி

114. ஸ்ரீய:பதி தொடக்கமான ஆசார்யர்களின் வரிசையின் பெருமைக்கு அலங்காரமாய் விளங்கும் எதிராஜரின் வைபவத்தை விளக்குவதாய், கலியின் குற்றங்களைப் போக்குவதான இந்நூலை எவர்கள் படிக்கிறார்களோ, அவர்கள் உபயவிபூதி நாயகராவார்கள் என்பது உறுதி.

## ஐதிஹ்ய நிர்வாஹங்கள்.

1. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம்;- ஆளவந்தார் ஸ்ரீபாதத்தில் ஆஶ்ரயித்த முதலிகளில் பெரிய திருமலைநம்பி "வேங்கடத்தைப் பதியாக வாழ்வீர்காள்" என்கிறபடியே திருவேங்கடமுடையானை "அடிக்கீழமர்ந்து புகுந்து ஸேவித்

துக்கொண்டு எழுந்தருளியிராநிற்க அவரிடம் பிறந்த பெண் பிள்ளைகளாய் ஸ்ரீபூ₄மிப்பிராட்டியாரென்றும் பெரியபிராட்டியாரென்றும் பெயரையுடைய இருவரிலே. மூத்த ஸ்ரீபூ₄மிப்பிராட்டியார் ஸ்ரீபெரும்பூதூரில் ஆஸூரி கேஸவப்பெருமான் என்கிற ஸர்வக்ரதுதீ₃க்ஷிதர்க்கு வாழ்க்கைப்பட்டாள். இளைய ஸ்ரீபெரியபிராட்டியார் மழலைமங்கலத்தில் வட்டமணிக் குலத்திலே கமலநயநபட்டரைத் திருமணம் புணர்ந்தாள். அவர்களும் தந்தம் புக்ககங்களிலே வாழும் காலத்திலே—

"அநந்த: ப்ரத₂மம் ரூபம் லக்ஷ்மணஶ்ச தத: பர: |
ப₃லப₄த்₃ரஸ் த்ருதீயஸ்து கலௌ கஶ்சித்₃ ப₄விஷ்யதி ||"

[நாரதீ₃யம் யாதவாத்ரி மாஹாத்மியம் 1-32]

[திருவனந்தாழ்வான் முதல் மூர்த்தியானவன், லக்ஷ்மணன் அவனுடைய அடுத்ததான அவதாரமாவான். பலராமன் அவனுடைய மூன்றாவது மூர்த்தியாவான். நாலாவது மூர்த்தியாகக் கலியுகத்தில் ஒரு மஹாபுருஷர் அவதரிக்கப்போகிறார்.] என்கிற வசனத்தின்படியே திருவநந்தாழ்வானும், கலியுகத்திலே அகி₂லாத்மோஜ்ஜீவநார்த்த₂மாகத் தம் திருவவதாரத்துக்கு இடம் பார்த்து, ராம தி₃வாகராச்யுதபா₄நுக்கள் கௌஸல்யா தே₃வகீ தே₃விகளுடைய க₃ர்ப்ப₄ங்களை விரும்பினாற்போலே ராமாநுஜதி₃வாகரராய் ஸ்ரீபெரும்பூதூரிலே ஸ்ரீபூமிப்பிராட்டியார் க₃ர்ப்ப₄த்தை ப்ராபித்தருளி

"ஶ்ருதிர் நஷ்டா ஸ்ம்ருதிர் லுப்தா ப்ராயேண பதிதா த்₃விஜா: |
அங்கா₃நி ச விஶீர்ணாநி ஹா வ்ருத்₃தோ₄ வர்த்த₄தே கலி: ||"

[வேதம் (காது) நாசத்தையடைந்தது; ஸ்ம்ருதி (நினைவு) அழிவுற்றது. இருபிறப்பாளர்கள் (பற்கள்) பெரும்பாலும் பதிதரானார்கள் (விழுந்தன). வேதாங்கங்களும் (அவயவங்களும்) சிதறிவிட்டன. (இப்படி காது, நினைவு, பற்கள், அவயவங்கள் அழிவுற்றபோதிலும்) கிழவனான கலி மேலும்மேலும் வளர்கிறான் என்பது என்ன ஆச்சர்யம்.] என்கிறபடியே கலி ஸாம்ராஜ்யம் பண்ணுகிற * இருள் தருமாஞாலத்திலே, "கலியும் கெடும் கண்டுகொண்மின்" என்கிறபடியே, * கலியிருள் நீங்கிப் பெரிய கிதயுகம்பற்றிப் பேரின்ப வெள்ளம் பெருகும்படி "தீ₄ர்லப்₃த₄ா" என்கிற கணக்கின்படியே சகவர்ஷம் தொள்ளாயிரத்து முப்பத்தொன்பது சென்ற வர்த்தமான பிங்க₃ளஸம்வத்ஸரத்தில் ஸ்ரீமத்தான சைத்ரமாஸத்தில் ஶுக்லபக்ஷத்தில் பஞ்சமி கு₃ருவாஸர ஸஹிதமான திருவாதிரை நக்ஷத்ரத்துடன் ஶுப முஹூர்த்தத்திலே * பாரெல்லாம் உய்யும்படி ப்ராது₃ர்ப்ப₄வித்தருள, ஆஸூரி கேஸவப்பெருமான் இவர்க்கு ஜாதகர்மம் செய்தருளினார்.

இச்செய்தியைப் பெரிய திருமலைநம்பி கேட்டருளி ஸ்ரீபெரும் பூதூரேறச் சென்று ஸர்வக்ரதுகேஶவஸோமயாஜியாரைக் கண்டு ஸத்கரித்து அவர் புத்ரனையும் * முகவொளிதிகழக் கடாக்ஷித்தருளி 'இவன் ஸர்வலக்ஷண ஸம்பந்நன்; ஸகலஶாஸ்த்ரங்களையும் அதி₄ கரிப்பன்; ஆகையாலே.

"ஸர்வப்ரியகரஸ்தஸ்ய ராமஸ்யாபி ஶரீரத꞉ ।
லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்நோ ப₃ஹி꞉ ப்ராண இவாபர꞉ ॥"

[ரா.பா₃ 18-28]

[கைங்கர்யலக்ஷ்மியை உடைய லக்ஷ்மணன், ராமனுக்கு சரீரத்தைக் காட்டிலும் எல்லாப் பிரியத்தையும் செய்பவனாகவும், வெளியிலிருக்கும் மற்றொரு ப்ராணன் போலவும் விளங்கினான்.] என்கிற இளைய பெருமாள் திருநாமம் சாத்துகைக்குத் தகுதியாயிருந்தான்' என்று பன்னிரண்டாம் தி₃வஸத்திலே.

"த₃க்ஷிணந்து பு₄ஜம் பூர்வம் சக்ரேண ப்ரதபேச்சி₂ஶோ꞉ ।
வாமாம்ஸம் ப்ரதபேத் பஶ்சாத் ஶங்கே₂நைவ த்₃விஜோத்தம꞉ ॥"

[அந்தணர் தலைவனான ஆசார்யன், குழந்தையின் வலதுதோளை (காய்ச்சப்பட்ட) சக்கரத்தினால் அடையாளமிடவேண்டியது. அதற்குப் பின் இடதுதோளை (காய்ச்சப்பட்ட) சங்கத்தினால் அடையாளமிட வேண்டியது.] என்கிறபடியே இவர்க்கு நாமகரணத்திலே திருவிலச்சினை முன்னாக 'இளையாழ்வார்' என்று திருநாமஞ்சாத்தியருளி, பின்பு அந்நப்ராஶநசௌளோபநயநாதி₃களையும் தத்தத் காலங்களிலே ஶாஸ்த்ரோக்தப்ரகாரத்திலே செய்விக்க, இளையாழ்வாரும் அங்கோ₃பாங்க₃ங்களோடே கூடப் பத₃க்ரமஸஹிதமாக வேதா₃த்₄யயநத்தையும் பண்ணிச் சதுர்த்த₃ஶவித்₃யாபாரங்க₃தராய், ஷோட₃ஶகலா பூர்ணனான சந்த்₃ரனைப்போல ஷோட₃ஶகர்ம ஸமஸ்க்ருதராய் ஷோட₃ஶவார்ஷிகரானவாறே, ஸர்வோபகாரக்ஷமமான க்₃ருஹஸ்தா₂ஶ்ரமத்தை அங்கீ₃கரித்தருளி, பெருமாள்கோயிலுக்கருகான திருப்புட்குழியிலே யாத₃வ ப்ரகாசனென்பானொரு ஏகத₃ண்டி₃ மாயிஸந்யாஸி பூர்வபக்ஷி வேதா₃ந்தம் வாசிப்பிக்கிறானென்று கேட்டருளி அங்கே எழுந்தருளி, அவன் பக்கல் ஶ்ரோதாக்களோடே தாமும் ஸஹஶ்ரோதாவாய் வேதா₃ந்தம் வாசித்தருளாநிற்க.

அவ்வளவிலே மழலை மங்கலத்துக் கமலாயநபட்டருக்கு ஒரு புத்ரன்—அவர் பத்னிபெரியபிராட்டியாரிடத்திலே க்ரோத₄ந ஸம்வத்ஸரத்

தில் தைமாஸமும் பௌர்ணமியும் ஸோமவாரமும் கூடின புநர்ப்பூச நக்ஷத்ரத்திலே அவதரித்தருள, ஜாதகர்மாநந்தரம் திருமலை நம்பியும் அங்கேற எழுந்தருளி, கமலநயநபட்டரையுங் கண்டு ஸத்கரித்துப் பெரியபிராட்டியார் புத்ரனையும் தம் தாமரைக்கண்களால் நோக்கி: 'இவன் ஸத3ாத்மகு3ணங்களையுடையவனாய், ஸர்வ வித்3யைகளையும் அதி4கரித்து வைதி3கபக்ஷவானும்' என்று திருவுள்ளம் உகந்தருளி கமலநயநபட்டரைக்கொண்டு "கோ3விந்த3ன்" என்று திருநாமஞ்சாத்துவித்தருளினார். இவரும் சௌளோபநயநாதி3ஸம்ஸ்காரவிஶிஷ்டராய் க்3ருஹஸ்த2ாஶ்ரமத்தை ப்ராபித்தருளி ஸர்வ ஶாஸ்த்ரங்களையும் அப்4யஸித்து, திருப்புட்குழியிலே யாத3வப்ரகாசனிடத்திலே இளையாழ்வார் வாசிக்கிறாரென்று கேட்டுப்போர ஆசையோடே அங்கே வந்து தாமும் வேதா3ந்தம் வாசிக்கத் தொடங்கினார். யாத3வப்ரகாசனும்,

"ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்3ரஹ்ம" [தை-ஆந-1]

[ஸத்யமாகவும் (எப்போதுமிருப்பதாகவும்), ஜ்ஞாநஸ்வரூபமாகவும், அநந்தமாகவும் (தே3ஶகாலவஸ்துக்கள் மூன்றாலும் அளவுபடாததாகவும்) இருப்பது ப்3ரஹ்மம்,] என்கிற ஶ்ருதிவாக்யத்துக்கு 'க3ண்ட3த்வ முண்ட3த்வ பூர்ண ஶ்ருங்க3த்வங்கள் ஒரு கோ3வ்யக்தியிலே க4டிக்கும்போதிறே ப்3ரஹ்மத்துக்கு இந்த விஶேஷணம் கூடுவது' என்று அபார்த்த2ப்ரதிபாத3நம் பண்ண, இளையாழ்வார் அத்தை நிஷேதி4த்து ஸத்யஶப்3த3த்தாலே க்ஷணிகவ்யாவ்ருத்தியையும், ஜ்ஞாந ஶப்3த3த்தாலே அசித்3வ்யாவ்ருத்தியையும், அநந்தஶப்3த3த்தாலே பரிச்சி2ந்நவ்யாவ்ருத்தியையும் பண்ணி, 'சேதநாசேதந விலக்ஷணமாய் நித்யமாயிருக்கும் ப்3ரஹ்மம்' என்ன, அவனும் ஹூங்காரம் பண்ணினான்.

பின்பு ஒருநாள், இளையாழ்வார், யாத3வப்ரகாசனுக்கு அப்4யஞ்ஜநத் தொழில் செய்யாநிற்க, அவ்வளவிலே,

"ய ஏஷோऽந்தராதி3த்யே ஹிரண்மய: புருஷோ த்3ருஶ்யதே
ஹிரண்யஶ்மஶ்ருர் ஹிரண்யகேஶ: ஆப்ரணக2ாத்
ஸர்வ ஏவ ஸுவர்ண: ।
தஸ்ய யதா2 கப்யாஸம் புண்ட3ரீகமேவமக்ஷிணீ ॥"
[சாந் 1-6.6 & 7]

[ஸூர்யனுக்கு நடுவில் தங்கப்போல் அழகிய உருவையுடைய எந்த இந்தப் பரமபுருஷன் காணப்படுகிறானோ, அவன் ஸுவர்ணம் போன்று அழகான மீசையையும், கேஶங்களையும், நகம் முதலிய எல்லா அவயவங்களையும் உடையவன், அவனுக்கு ஸூர்யனால் மலரும் தாமரைபோன்ற இருகண்கள் உள.] என்கிற

ஶ்ருதிக்கு அவன் அநுசிதார்த்தஞ்சொல்ல, அது கேட்டு இவர்க்கு ஶோகமுண்டாய் அந்த ஶோகாஶ்ரு அவன் தொடையிலே விழ, அது நெருப்புப்பட்டாற்போலே, அவன் தொடையைச்சுட, அவனும் பதறி இவர் முகத்தைப்பார்த்து 'உமக்கு து:க்கமாவானென்?' என்ன. இவரும், 'கம் பிபதீதி கபி;' என்று ஸூர்யனாய்,

"ஆஸ-உபவேஶநே" (தாதுபாடம்) (ஆஸ-என்னும் தாது வீற்றிருப்பது என்னும் பொருளைக் காட்டுகிறது.) என்று உபவேஶநமாய், ஸூர்யாஶ்ரயணத்தையுடைத்தான கமலம்போலே என்று இத்யாதி, யோஜனையிருக்க, அயதார்த்தங் கேட்டவாறே து:க்கமாயிற்று" என்ன, யாதவப்ரகாசனும் அது கேட்டுக் குபிதனாய் 'நான் சொன்னபடி கேட்கில் வாசித்திரும்; இல்லாவிடில் விட்டுப்போம்' என்ன, இவரும் அப்படியே * சிந்தை கலங்கித் தவிர்ந்திருக்க,

அவனும் ஏகாந்தத்திலே தன்னுடைய ஶிஷ்யர்களில் அநுகூலரை அழைத்து 'நீங்கள் நான் சொன்ன அர்த்தத்தை ஸம்மதித்திருக்க இளையாழ்வான் ஒருவனுமே எதிர்த்தட்டாக வாதியா நின்றான்; இவனாலே நம்முடைய அத்வைதரீதி சிறுக்கும்; இவன் முடியும் விரகு என்?' என்று கேட்க அவர்களும் பலபடி படும்வகை சொல்ல, அவனும் 'அவ்வோ வகைகளுக்குப் பழிபாவங்களுண்டாம்; அவை வராமல் நினைத்தபடி கூடுகைக்கு மணிகர்ணிகையிலே ம்ருதியுண்டாக்குகையே என்னகவாயில் உள்ளது' என்ன, அழகிதென்று ஸர்வரும் ஐகமத்யம்பண்ணிக்கொண்டு, துர்யோதநன் தர்மபுத்ரர் விஷயத்திலே ஜதுக்ருஹத்திலே விஶஸநம் எண்ணினாற்போலே அந்தரங்கித்து, இளையாழ்வாரை அழைத்து 'நீரில்லாவிடில் எங்களுக்கு ஒரு சாயலாயிருக்கிறது. கோபியாமல் க்ரந்தத்தை அவிச்சிந்நமாக நடத்தும்' என்று நன்மையுரைத்து உள்ளிட்டுக்கொண்டு, ஒருநாள் கங்காயாத்ரையை உத்யோகித்துப் புறப்பட்டுப்போம்போது நின்றநின்றவிடங்களிலே இளையாழ்வாரும் கோவிந்தபட்டரும் கூட்டுரவுபடாதபடி பண்ணிக் கொண்டு சாத்ரகோடி கணிதஶிஷ்யர்கள் ஶுஶ்ருஷிக்க வழிசெல்லாநிற்க, விந்த்யப்ரதேசத்திலே ஒரு பள்ளக்கரையிலே ஜலஸ்பர்ஶார்த்தமாக இளையாழ்வாரும் கோவிந்தபட்டரும் கூடிநின்றவாறே கோவிந்தபட்டரும் விஜநமான ஸமயம் அறிந்து இவர்களுடைய கங்காயாத்ரா நிமித்தத்தை இளையாழ்வாருக்கு ஸூசிப்பித்து அகன்றுபோகச் சொல்லித் தாம் ஒருவரே போந்தார்,

2 ஆருயிரப்படி குருபரம்பராப்ரபாவம்: இளையாழ்வாரும் வ்யாகுலப்பட்டு அவ்வழியைவிட்டுக் குறுக்கறுத்துப்போய் ஒருமரத் தடியிலே நின்று பார்க்க, அவ்விடம் * வெம்பியெரிகானகமாய் நிர்ஜல ப்ரதேசமுமாய் ஶுஷ்ககண்டகாவ்ருதமாய் 'பொருந்தார்கைவேல் நுதி போல் பரல்பாய மெல்லடிக்கள் குருதி சோர விருப்பாத கான்விரும்பி வெயிலுறைப்ப வெம்பசிநோய்கூர' என்கிறபடியே ஊன்று வெம்பரற் களை யுடைத்தாய்த் தீக்ஷ்ணதாபகர ரவிகிரணங்களை யுடைத்தான

"விந்த்யாடவீஷ்வதோயாஸு"

[ஜலமற்ற விந்தியமலைக்காடுகளில்] என்று சொல்லுகிற விந்த்யாடவியாயிருக்க, சிறந்த அக்காட்டிலே தனியே நின்று * ஆவாரார் துணையென்று *பக்கம் நோக்கி *வழிதிகைத்தலமருகின் றேன் என்னும்படி திக்விப்ரமம்பிறந்து *மதியெல்லா முள்கலங்கி அடியிடத் திமிர்த்துக்கொண்டு திகைத்து நிற்க, ஸர்வேஶ்வரனும்

'நாஹமாத்மாநமாஶாஸே மத்பக்தைஸ்ஸாதுபிர்விநா"

[நல்லோர்களான என்னுடைய பக்தர்களைவிட்டு என்னை ஒரு பொரு ளாக நான் மதிக்கிறேனல்லேன்] என்றிருக்குமவனுகையாலே,

"ஸதாரஸ் ஸர்வஸுலப: கட்கபாணுஸநேஷுப்ருத் |
ஆபந்நாபயதாநார்த்தம் ஆவிராஸ ஜநார்த்தந: ||

[அனைவர்க்கும் எளியவனாய், வாளும், வில்லும், அம்பும் தரித்த வனாய், பத்தினியான பெரியபிராட்டியாரோடு கூடியவனான பரம புருஷன் வருந்தியவர்களுக்கு அபயமளிப்பதற்காகத் தோன்றினான்.] என்கிறபடியே * வாளும் வில்லுங்கொண்டு * இடர்கெடப் பத்நீ ஸஹிதனாய் ஒரு வில்லியாய் வந்து இவர் முன்னே தோன்ற, இவரும் அவர்களைக் கண்டு கலக்கந்தீர்ந்து உள்ளந்தேறி நின்று "நீங்கள் எங்குநின்றும் வந்தீர்கோள்? எங்கேறப் போகிறிகோள்?" என்று கேட்க, அவர்களும் 'உத்தரதேசத்தில் ஸித்தாஶ்ரமத்தினின்றும் வருகிறோம்; ஸத்யவ்ரதக்ஷேத்ரமேறப் போகிறோம்' என்ன, இவரும் "நானும் உங்களுடனே புண்யகோடியேற வருவானாக நினைத்திரா நின்றேன்" என்ன, 'நல்லது வாரும்' என்று அவர்கள் முன்னடியிட இவரும் அவர்கள் பின்னே செல்ல, அவர்களும் ஸ்வாதீனமாக வழி நடத்த, விந்த்யம் பிற்காலித்து ஸந்த்யாகாலமானவளவிலே, காலோசித கர்மாநுஷ்டாநங்களையுஞ்செய்து அவர்களுடனே

ஓரிடத்தே உபவஸித்திருக்க * வல்லிரவாய் முன்னடி தோன்றாமல் கா₃டா₄ந்த₄கார பூ₄யிஷ்ட₂மாய் * நள்ளிரவானவாறே * கண்புதைய மூடி ஒரு ராஜவ்ருக்ஷத்தடியிலே இருந்தார்கள். அப்போது வ்யாத₄ பத்நியும் நல்ல தண்ணீர் மடுக்க ஆசைப்பட, வ்யாத₄புருஷனும் விடிவோரை 'ஸமீபத்தில் பாநார்ஹமான கிணற்றிலே மது₄ர நிர்மல ஶீதள க₃ந்த₄யுத பாநீயம் காட்டுகிறேன்' என்ன, இளையாழ்வாரும் அதுகேட்டு "ஐயோ! பரமோபகாரிகளான இவர்களை லப்₃த₄ மநோரத₂ராக்குகைக்கு இது நமக்கு அநபி₄ஜ்ஞதே₃ஶமாய் விட்டதே!" என்று நிர்விண்ணராயிருக்க. * கனவிருளகன்று * கீழ் வானம்வெள்ளென்றவாறே * தொழுமலரணவிக்கூர்ந்தது குணதிசை மாருதம் வீச, அரியென்ற பேரரவங்கேட்டு எழுந்திருந்து சடக்கெனக் காலிககர்மத்தைச் செய்து வழிநடத்துமவர்களைத்தேடிக் காணமல் ஸர்வதோதி₃க்கமாக நோக்கிக் கூப்பிட்டு நாலடி தோன்றின வழியே நடந்துவர, * கதிரவன் குணதிசைச் சிகரம்வந்தணைய ஜநபத₃ங்கள் ஸ்பஷ்டங்களாகத் தோற்றக்கண்டு 'நேற்று நின்ற நிலைக்கு இப்படியும் * ஒருநல்விடிவு காணப்பெற்றதே!' என்று போர ஆஶ்சர்யயுக்தராக, அங்கே ஒருதோப்பும் கிணறும் நாலிரண்டுபேருமாய் நிற்கக் கண்டு இவரும் 'இது எத்தேசம்? எவ்வூர்?' என்று அவர்களைக் கேட்க, அவர்களும் 'இதென்ன ப்₃ராஹ்மணா! புண்யகோடி விமாநம் முன்னே நிற்கத் தெரியாதோ?' என்ன, இவரும் அதுகேட்டு ஸந்துஷ்டராய், ராவணவத₄ங்கேட்ட பிராட்டியைப்போலேயும்,

> 'ஏதத₃ர்த்த₂மயம் ப்ராப்தோ வக்தும் மது₄ரவாகி₃ஹ
> நாம்நா த₃தி₄முகோ₂ நாம ஹரி: ப்ரக்₂யாதவிக்ரம: ||
> த்₃ருஷ்டா ஸீதா மஹாபா₃ஹோ ஸௌமித்ரே! பஶ்ய தத்த்வத: ||" [ரா-ஸு 63-22]

[நீண்ட கையையுடைய இலக்குவனே! புகழ்பெற்ற பராக்ரமத்தையுடைய த₃தி₄முக₂ன் என்னும் இனிய சொல்லையுடைய வானரன் செய்தி சொல்வதற்காக வந்திருக்கிறான். ஸீதை காணப்பட்டாள். உண்மையைக் காண்பாயாக] என்ற வார்த்தையைக் கேட்ட பெருமாளைப்போலேயும், மதுவநத்திற் புகுந்த திருவடியைப்போலேயும் தத்க்ஷணத்திலே கர்த்தவ்யதாமூட₄ராய் அவர்களைப் பிராட்டியும் பெருமாளுமாக நினைத்து, க்ருஷ்ணாவதார ஸௌலப்₄யத்தை நினைத்து "எத்திறம்!" என்ற ஆழ்வாரைப்போலே மோஹித்துக்கிடந்தார். பின்பு

" ஶனைராஶ்வாஸிதஸ் ஸ்வயம் '

[மெல்ல மெல்லத் தானாகவே ஆறுதல் அடைந்தார்] என்னும்படியே தன்னிலே வ்யாமோஹம் தெளிந்தவாறே

ஸகே₂தி மத்வா ப்ரஸப₄ம் யது₃க்தம்
ஹே க்ருஷ்ண ஹே யாத₃வ ஹே ஸகே₂தி ।
அஜாநதா மஹிமாநம் தவேத₃ம்
மயா ப்ரமாத₃ாத் ப்ரணயேந வாபி ॥
யச்சாபஹாஸார்த்த₂மஸத்க்ருதோऽஸி
விஹாரஶய்யாஸநபோ₄ஜநேஷு ।
ஏகோऽத₂வாப்யச்யுத! தத்ஸமக்ஷம்
தத் க்ஷாமயே த்வாமஹமப்ரமேயம் ॥ [கீ₃தை 11-4, 5]

[அச்யுதனே! உன்னுடைய இந்த மஹிமையை அறியாத என்னால், கவனமின்மையாலும், அன்பினாலும் (உன்னை) நண்பனென எண்ணி 'ஏ க்ருஷ்ணா! யாதவா! நண்பா!' என்று (உன் விஷயத்தில்) சொல்லப்பட்டது யாதொன்றுண்டோ. பரிஹாஸத்திற்காக விளையாடும்போதும், படுத்திருக்கும்போதும், உட்கார்ந்திருக்கும் போதும், உண்ணும்போதும், ஒருவனுயிருக்கும்போதும், பலர் முன்னிலையிலும் (நீ என்னால்) அவமதிக்கப்பட்டது யாதொன்று உண்டோ அது அனைத்தையும் நான் அளத்தற்கரிய உன்னைப் பொறுக்குபடி வேண்டுகிறேன்] என்னும்படியே கூடத்திரிந்த அர்ஜுநனை ப்₄ரமிப்பித்தாற்போலே என்னையும் "நீர்மையால் நெஞ்சம் வஞ்சித்துப் புகுந்து உருக்காட்டாதே ஒளிப்பதே!' என்று பலவகை சொல்லிப் புலம்பித் தம்மிலேயுள்ளந்தேறி, ஆநந்த₃ நிர்ப்ப₄ரராய்ப் பெரிய ராஜமார்க்க₃த்தாலே சென்று வையமாளிகையேறி "தென்னத்தியூரர் கழலிணைக் கீழ்ப்பூண்ட அன்பாளன்" என்னும்படி திருப் பொலிந்த சேவடிகளை ஸேவித்து எழுவது தொழுவதாய் ஆநந்த₃ாஶ்ருக்கள் பனிப்பப் புளகீக்ருதகா₃த்ரராய் ஆநந்தி₃த்து, அவன் அந்தர்த்தா₄நம் பண்ணினதின் கருத்தறிந்து அச்சாலைக்கிணற்றிலே பேரருளாளர் திருவாராத₄நத்துக்கு உதவத் திருமஞ்சநங் கொண்டுவந்து ஸமர்ப்பித்துப் போராநின்றார்.

அங்கே யாத₃வப்ரகாசனும் திரளுமாக இவர்கள் வருமளவும் நிற்க, அவ்வளவிலே கோவிந்தபட்டர் வர, 'வந்தீரோ? இளையாழ்வார் எங்கே?' என்று கேட்க, 'அவரை நான் கண்டிலேன்' என்ன; அவனும் தன் ஸமீபவர்த்திகளைப் பார்க்கவிட, அவர்களும்

தேடிப்பார்த்துக் காணாமையாலே, 'ஐயோ! காட்டிலே என்ன தீங்கு வந்ததோ!' என்று ஸர்வரும் து3:க்கா2குலராய் முன்னே நடந்து ப்ரயாணக3தியில் போய் க3ங்கா3தீரத்தையடைந்து க3ங்கை3யிலே மாக4ஸ்நாநம் பண்ணுநிற்க, ஒருநாள் கோவிந்த பட்டர், அக4மர்ஷண ஸ்நாநம் பண்ணுகிறபோதிலே ஒருலிங்க3ம் கையில் வந்துசேர, விஸ்மிதராய் இதென்னென்று யாத3வப்ரகாச னுக்குக் காட்ட, போரப்ரீதனாய் 'நீர் செய்த ஜ்ஞாநகையால் க3ங்கா3 ஸ்நாநப2லம் கைசேர்ந்தாற்போலே க3ங்கா3த4ரனே கைபுகுந்தான்' என்று யாத3வப்ரகாசனும் இவரிடத்தே விசேஷப்ரதிபத்தி யுக்தனாக, எல்லாரும் லிங்க3ம் கை சேர்ந்ததுவே நிரூபகமாக இவர்க்கு 'உள்ளங்கை கொணர்ந்த நாயனார்' என்று பேரிட்டு அழைக்கத் தொடங்கினார்கள். யாத3வப்ரகாசனும் க3ங்கா3 ஸ்நாநம் பண்ணி மீண்டு ஜக3ந்நாத2ம் அஹோபி3லம் வழியாக வர, உள்ளங்கைகொணர்ந்த நாயனாரும் 'இந்த லிங்க3த்தை ஒரு உசித ஸ்த2லத்திலே ப்ரதிஷ்டா2ப்பித்து வருகிறேன்' என்ன, யாத3வப்ரகாசனும் 'அப்படியே செய்யும்' என்று இவரை மார்க்க3மத்4யே அனுப்பி விட்டுப் பெருமாள் கோயிலேறப்போந்தான்.

பின்பு உள்ளங்கை கொணர்ந்த நாயனாரும் தம் ஜந்ம பூ4மியான மழலைமங்கலத்திலே சென்று அங்குள்ள அசேஷ வித்3வந்மஹாஜநங்களையும் திரட்டி ஸ்வகரஸ்த2லிங்க3த்தை அங்கே ப்ரதிஷ்டி2ப்பித்துத் தத்3ப4க்தராயிருக்கிறவளவிலே காளஹஸ்திநாத2ன் இவர் இருப்புக்கு விரும்பி 'நீர் நம் பக்கல் வந்திருக்கவேணும்' என்று நாயனாருக்கு ஸ்வப்னங்காட்டித் தன் ஸ்தா2நத்தார் ஸ்வப்நத்திலும் 'உள்ளங்கை கொணர்ந்த நாயனாரை அழைத்துக்கொண்டு வாருங்கோள்' என்று ப்ரேரிக்க, அப்படியே அனைத்துக் கொத்திலுள்ளாரும் மழலைமங்கலத்திலே வந்து இவரைப் பலவகை ப3ஹுமாநம் பண்ணி அழைத்துக்கொண்டுபோய் ஸ்தா2ந நிர்வாஹத்துக்கு வேண்டின இலச்சினை மோதிரமும் கொடுத்து இவரைத் தங்களுக்கு முக்2யராக்க, இவரும் தத்3ப4க்தியுக்தராய் அங்கேயிருந்தார்.

அநந்தரம் யாத3வப்ரகாசனும் பெருமாள் கோயிலிலே வந்து இளையாழ்வாரைக் கண்டு ஆஶ்சர்யப்பட்டு மிகவும் ஸந்தோஷித்து, 'விந்த்4யப்ரதேசத்திலே உம்மைக் காணாமையாலே அந்யதா2ஶங்கை பண்ணிக் கனக்க நிர்வேத3ப்பட்டிருந்தோம், இவ்வளவு காணப் பெற்றதே!' என்ன, இவரும் வழிதப்பிக் காணாமல் அகன்றுபோய் வில்லிவ்யாஜேந போந்த வ்ருத்தாந்தத்தை ஸவிஸ்தாரமாகச் சொல்ல,

அவனுங்கேட்டு 'இவர்நடை லோகாதீதமாயிருந்தது' என்று நினைத்து ஸாபரீதனாய் ஸ்வகோ₃ஷ்டி₂யிலே கூட்டிக்கொண்டு க்₃ரந்த₂த்தை நடத்தாநிற்க.

3. ஆறுயிரப்படி கு₃ருபரம்பராப்ரப₄ாவம் :— ஆளவந்தார் வைபவம் ஐதிஹ்ய நிர்வாஹம் 5 காண்க.

4. ஆறுயிரப்படி கு₃ருபரம்பராப்ரப₄ாவம் :-அநந்தரம் யாத₃வப்ரகாசனும் தம்பக்கல் ஶ்ரோதாக்களுடன் வேதா₃ந்த வ்யாக்₂யாநம் பண்ணிக்கொண்டிருக்கச்செய்தே, அந்த ராஜ்யத்தில் ராஜாவின் பெண்பிள்ளையை ப்₃ரஹ்மரக்ஷஸ்ஸு பிடிக்க, 'இவ்விடங்களிலே இத்தைப் பரிஹரிக்கத்தக்க மந்த்ரவாதி₃களுண்டோ?' என்று ஆராய, 'யாதவப்ரகாசன் போர மந்த்ரவாதி₃யாயிருக்கும்' என்று சிலர் சொல்லக் கேட்டு, ராஜாவும் 'அவனுக்கு இச்செய்தியை அறிவியுங்கோள்' என்று ஆள்போகவிட ராஜமனுஷ்யர் வந்து இவனுடன் 'ராஜாவின் பெண்பிள்ளையை ப்₃ரஹ்மரக்ஷஸ்ஸு பிடித்ததென்று ராஜா உமக்கு அறிவிக்கச் சொன்னார்' என்று சொல்ல, இவனும் 'யாத₃வப்ரகாசன் உன்னைப் போகச் சொன்னானென்று ப்₃ரஹ்மரக்ஷஸ்ஸுக்குச் சொல்லுங்கோள்' என்று வந்தவர்களுடன் சொல்லிப் போகவிட, அவர்களும் போய் 'யாத₃வப்ரகாசன் உன்னைப் போகச் சொன்னான்' என்று சொன்னவாறே 'அவன் தன்னை அங்கு நின்றும் போகச் சொன்னேனென்று சொல்லுங்கோள்' என்று அந்த ப்₃ரஹ்மரக்ஷஸ்ஸு சொல்ல, ராஜமநுஷ்யர் இச்செய்தியை யாத₃வப்ரகாசனுக்கு அறிவிக்க, அவனும் மிகவும் குபிதனாய்த் தானும் திரளுமாகப் போய் ராஜகோ₃ஷ்டி₂யிலே மஹாமந்த்ரத்தை ஜபித்துக்கொண்டு, ப்₃ரஹ்மரக்ஷஸ்ஸின் அருகில் நின்று முஷ்டிபிடிக்க, அதுவும் முடக்கின காலை நீட்டி 'அடா! யாத₃வப்ரகாசா! நீ ஜபிக்கிற மந்த்ரம் நான் அறியேனோ?' என்று அந்த மந்த்ரத்தையுஞ் சொல்லி 'நான் இந்த மந்த்ரத்துக்கும் உனக்கும் போவேனோ? நீ உன் ஜந்மமும் அறியாய்; என் ஜந்மமும் அறியாய்' என்ன, யாத₃வப்ரகாசனும் 'ஆகில் நீ பிராஜ்ஞனுமாய் ஸர்வஜ்ஞனுமாய் இருந்தாய்; என்னுடைய ஜந்மம் எது? உன்னுடைய ஜந்மம் எது?' என்று கேட்க, அதுவும் 'உன்னுடைய ஜந்மம் மது₄ராந்தகத்து ஏரிக்கரையிலே இருப்பதொரு புற்றிலே ஒரு உடும்பாயிருப்புதி; கோயில் வைஷ்ணவர்கள் திருமலைக்கு எழுந்தருளும்போது அங்கே நீராடி அமுது செய்கிறவிடத்திலே சிந்தின ப்ரஸாத₃த்தையும் தீர்த்த₂த்தையும் ஸ்விகரித்தாய்; அத்தாலே உனக்கு இந்த வித்₃வஜ்ஜந்மம் உண்டாய்த்து; நான் ப்₃ராஹ்மண வர்ணத்திலே பிறந்து யாகமும் பண்ண அதிலே மந்த்ரலோபக்ரியாலோபங்கள் பிறந்து, அத்தாலே ப்₃ரஹ்மரக்ஷஸ்ஸானேன்' என்று

சொல்ல, 'ஆகில், நீ யாருக்குப் போவுதி?' என்ன, ரக்ஷஸ்ஸும் 'உன் பக்கலிலே வாசிக்கிறவர்களிலே ஒருவர் நித்யஸூரிகளில் தலைவராய் இருப்பர்காண்' என்ன, இவனும் 'அவரார்?' என்று கேட்க, அதுவும் இவரென்று இளையாழ்வாரைக் காட்டி அவரைத் தண்டனிட்டு 'இவர் போகச்சொன்னாராகில் போகிறேன்' என்ன, 'ஆகில், இளையாழ்வீர்! நீர் இத்தைப்போகச் சொல்லும்' என்று அவன் சொல்ல, இவரும் 'நீ இவனை விட்டுப் போ' என்ன, அதுவும் 'உம்முடைய திருவடித் தாமரைகளை என் தலைமேலே வைத்தாலொழியப் போகேன்' என்ன, இவரும் உகந்து அப்படியே செய்தருள, அதுவும் ஸந்துஷ்டமாய்ச் சிரித்துக் கும்பிட்டு எழுந்திருந்து 'போகிறேன்' என்ன, இளையாழ்வாரும் 'ஆகில், நீ போகிறதற்கு அடையாளம் காட்டிப்போ' என்ன, அதுவும் 'இவ்வரசிலே நான் இருப்பேன், இப்போது இவ்வரசை முறித்துக்கொண்டு போகிறேன்' என்று சொல்லி, அவ்வரசை முறித்துக்கொண்டு போய்த்து. யாத₃வப்ரகாசனும் இளையாழ்வாரை மிகவும் ஶ்லாகி₄த்து மீண்டு தன்னுடைய மடமே வந்து புகுந்தான்.

அநந்தரம், ஆளவந்தார் கோயிலிலே ஒருநாள் வ்யாக்₂யாந ஸமயத்திலே "இலிங்கத்திட்டபுராணத்தீரும்" என்கிற பாட்டு ப்ரஸ்துதமாக, அப்போது 'நமக்குப்பின்பு இத்த₃ர்ஶநம் நிர்வஹிப்பாரொருவரையுங் காணப்பெற்றிலோமே' என்கிற விசாரத்திலே இளையாழ்வார் பக்கல் திருவுள்ளமாய் 'இப்போது இளையாழ்வாரை யாத₃வ ப்ரகாசனோடு உறவறுத்து, நம் பக்கல் சேர்க்கும் விரகு உண்டோ!' என்று அருளிச்செய்து, பின்னையும் பேரருளாளரைக் குறித்து 'நம் ப்ரபத்தியை ஸப₂லமாக்கியருளவேணும்' என்று மிகவும் ப்ரார்த்தி₂த்தருளினார்.

பின்பு யாத₃வப்ரகாசனும் மீளவும் ஒருநாள் க்₃ரந்த₂ம் நடத்தா நிற்கச்செய்தே,

"ஸர்வம் க₂ல்வித₃ம் ப்₃ரஹ்ம" [சாந் 3-14-1]

[(ப்₃ரஹ்மத்திடமிருந்தே பிறந்து வாழ்ந்து லயிப்பதால்) இவ்வெல்லாவுலகும் ப்₃ரஹ்மமே.]

"நேஹ நாநாஸ்தி கிஞ்சந" [ப்₃ருஹ 6-4-19]

[(ப்₃ரஹ்மப்ரகாரமாய் இருப்பதொழிய) வேறு வகையாயிருப்பது இவ்வுலகில் எதுவுமில்லை.] இத்யாதி₃ வாக்யங்களை அத்₃வைதபரமாக யோஜித்து ஜீவப்₃ரஹ்மணோரைக்யம் ப்ரதிபாதி₃க்க, இவரும் அத்தை நிராகரித்து அவ்வாக்யங்களை விஶிஷ்டாத்₃வைத பரமாக யோஜித்து அர்த்த₂ஞ்சொல்ல, அவனும் அதிகுபிதனாய், 'இன்று தொடங்கி

என்னிடம் வாசிக்கவேண்டாம். உம்முடைய பு₃த்₃தி₄க்குத் தகுதி யானவிடத்தே போய் க்₃ரந்த₂ங்கேளும்' என்று போகச் சொன்னான்.

இவரும் அதிப்ரீதியோடே மீண்டும் தம் திருமாளிகையிலே வந்து திருத்தாயாருக்கு இச்செய்தியைச்சொல்ல, அவரும் 'வாரீர் பிள்ளாய்! இதுவரைக்கும் நீர் படித்தது போதும்; திருக்கச்சிநம்பி பேரருளாளனுக்கு அந்தரங்க₃ராயிருக்கிறார்; நீர் அவரை ஸேவித்து அவர் அருளிச்செய்வதைச் செய்துகொண்டிரும்' என்று சொல்ல அப்படியே இளையாழ்வாரும் திருக்கச்சிநம்பியை ஸேவித்து க்ருதார்த்த₂ராய்,

"ப₄ரவாநஸ்மி காகுத்ஸ்த₂ த்வயி வர்ஷஶதம் ஸ்தி₂தே ।
ஸ்வயம் து ருசிரே தே₃ஶே க்ரியதாமிதி மாம் வத₃ ॥"

[ரா-ஆ 15.7]

(ககுஸ்த₂ வம்ஶத்தில் பிறந்தவரே! நீர் இருக்கையில் எப்போதும் நான் (உமக்கு) அடிமையாயிருக்கிறேன். நீராகவே 'அழகிய தேசத்தில் பர்ணசாலை கட்டப்படட்டும்" என்று எனக்கு ஆஜ்ஞையிடுவீராக)
என்றாப்போலே அடியேன் செய்யும் கைங்கர்யத்தை நியமித்தருள வேணும் என்று விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் 'பேரருளாளர்க்குச் சாலைக்கிணற்றுத் தண்ணீர் உகப்பாயிருக்கும்; திருவாராத₄ந காலத்துக்கு உதவும்படி முன்புபோலே ப்ரதிதி₃நம் ஒரு குடம் திருமஞ்சனங் கொண்டுவந்து ஸமர்ப்பியும்' என்று அருளிச்செய்ய, இளையாழ்வாரும் அப்படியே தப்பாமல் அந்தக் கைங்கர்யஞ் செய்துகொண்டிரா நிற்க.

5. ஆறாயிரப்படி கு₃ருபரம்பராப்ரப₄ாவம் :—ஆளவந்தார் வைப₄வம் ஐதிஹ்ய நிர்வாஹம் 6 காண்க.

6 ஆறாயிரப்படி கு₃ருபரம்பராப்ரப₄ாவம்: அங்கே பெரியநம்பி பயணக₃தியிலேபோய்ப் பெருமாள்கோயிலுக்கு எழுந்தருளி இச்செய்தியைத் திருக்கச்சிநம்பிக்கு அருளிச்செய்து, அவர் புருஷகாரமாகப் பேரருளாளர் ஸந்நிதி₄க்குச் சென்று அவர் முன்பே ஸ்தோத்ரத்தை அநுஸந்தி₄த்துத் தீர்த்த₂ப்ரஸாத₃மும் ஸ்வீகரித்து ஸந்நிதி₄யினின்றும் புறப்பட்டு, இளையாழ்வார் திருமஞ்சநங்கொண்டு வருகிற சாலைக்கிணற்று வழியிலே ஆளவந்தார் ஸ்தோத்ரத்தை அநுஸந்தி₄த்துக்கொண்டிருக்க

"ஸ்வாப₄ாவிகாநவதி₄காதிஶயேஶித்ருத்வம்
நாராயண! த்வயி ந ம்ருஷ்யதி வைதி₃க: க: ।
ப்₃ரஹ்மா ஶிவ: ஶதமக₂: பரம: ஸ்வராடி₃தி
ஏ'தேऽபி யஸ்ய மஹிமார்ணவவிப்ருஷஸ்தே ॥"

(ஸ்தோ-ர 11)

[நாராயணனே! பிரமன், சிவன், இந்திரன், இவர்களைக் காட்டிலும் மேலானவனும், கர்மவசப்படாதவனை முக்தாத்மா என்கிற அனைவரும் எந்த உன்னுடைய பெருமைக்கடலில் துளிகளாயிருக்கிறார்களோ (அப்படிப்பட்ட) உன்னிடத்தில் — இயற்கையாகவும், எல்லையற்ற மேன்மையை உடையதுமான ஐஶ்வர்யத்தை வைதிகன் எவன்தான் பொறுக்கமாட்டான்?] என்கிற ஶ்லோகத்தை இளையாழ்வாரும் கேட்டருளி 'இது அருளிச்செய்தார் ஆர்?' என்று பெரிய நம்பியைக் கேட்க 'ஆளவந்தார் தி₃வ்யஸூக்தி' என்று பெரியநம்பி அருளிச்செய்ய, இவரும், 'அவரை அடியேன் ஸேவிக்கவேணும்' என்ன, நம்பியும் 'ஆகில், நீர் நம்மோடே சேரவாரீர்' என்று அருளிச்செய்ய, இவரும் திருமஞ்சனத்தைப் பெருமாள் திருமுன்பே ஸமர்ப்பித்துப் பெருமாளை ஸேவித்து விடைகொண்டு திருக்கச்சிநம்பியையும் ஸேவித்து அவர்க்கு இச்செய்தியை விண்ணப்பஞ்செய்து பெரிய நம்பியுடனே புறப்பட்டுக் கோயிலுக்கு ஆஸந்நமாக எழுந்தருளி வாரா நிற்க, திருக்கரப்பன் துறையிலே பெரிய திரளைக்கண்டு 'இத்திரள் ஏது?' என்று எதிரே வருகிறவர்களைக் கேட்க, அவர்களும் 'ஆளவந்தார் திருநாட்டுக்கு எழுந்தருளினார்' என்ன, இத்தைக் கேட்டு இவரும் ஏங்கி மோஹித்து விழுந்து ஶோகார்ணவ நிமக்₃நராய்க் கிடந்து துடிக்க, அவ்வளவிலே இளையாழ்வாரும்

"ப₃ஹுதா₄ விலலாப ஹ"

[பலவாறுகப் புலம்பினர்] என்னுமாபோலே பலவகையாகப் புலம்பி அஸ்தமிதாந்யபா₄வராய் நிவர்த்தநோந்முக₂ராய்க் * கண்பனி சோர நிற்க, பெரியநம்பியும் வாளேறுகாணத் தேளேறு மாயுமா போலே தம்முடைய வ்யஸநத்தை மறந்து

"ஶ்ரேயாம்ஸி ப₃ஹுவிக்₄நாநி ப₄வந்தி மஹதாமபி"

[பெரியோர்களுக்கும் நல்ல காரியங்களைச்செய்யப் பல இடையூறுகள் ஏற்படுகின்றன.] என்கிறபடியே ஶ்ரேயஸ்ஸுக்களுக்கு அநேக விக்₄நங்கள் பெரியோர்களுக்கும் உண்டாம்; ஆகையாலே, நீர் ஶோகிக்க வேண்டா — என்று இளையாழ்வாரைத் தேற்றி அவரைக் கையைப் பிடித்துக்கொண்டுபோய் ஆளவந்தாருடைய விமலசரமவிக்₃ரஹத்தை ஸேவிக்கப்பண்ண, இளையாழ்வாரும் அவரை தண்டனிட்டு 'இது ஒரு அலப்₄யலாப₄மிருந்தபடி யென்!' என்று விஸ்மிதராய் ஆபாத₃சூட₃மாக ஸேவிக்குமளவில் மூன்று திருவிரல்கள் மடங்கியிருக்க, இவரும் அதுகண்டு 'முன்னும் இவர்க்கு இப்படியுண்டோ?' என்று முதலிகளைக் கேட்க, அவர்களும் 'முன்பு இல்லை; இப்போது கண்டதித்தனை' என்ன

இளையாழ்வாரும் 'இவர் திருவுள்ளத்தில் ஏதேனும் ஒரு கருத்து உண்டாகவேணும்' என்று விசாரித்தருளி முதலிகளைப் பார்த்து 'முன்பு வ்யாக்₂யாநஸமயங்களிலே அபி₄மதஸல்லாபங்களைக் கேட்டிருந்தவர்கள் உண்டோ?' என்ன, ஸ்ரீபாதத்துமுதலிகளெல்லாருங் கூடி 'வேறொன்றுமறியோம்; வ்யாஸபராஶரரிடத்திலே உபகார ஸ்ம்ருதியும், நம்மாழ்வார்பக்கல் ப்ரேமாதிஶயமும், வ்யாஸ ஸூத்ரத்திற்கு விஶிஷ்டாத்வைதபரமாக வ்யாக்யாநவாஞ்சை₂யும் பலகாலும் அருளிச்செய்யக் கேட்டிருக்கையாயிருக்கும்' என்ன, இவரும் அகவாயிலெண்ணமறிந்து 'இஶ்ஶரீரம் த்₃ருட₄மாய், இவ்வாசார்யக்ருபையும் அடியேனிடத்தில் பரிபூர்ணமாய், ஸர்வேஶ்வரன் அடியேன் நினைத்தபடி கூட்டுவானாகில் இம்மூன்றிழவுகளையும் தீர்க்கக்கடவேன்' என்ன, உடனே திருவிரல்கள் நிமிர, இத்தை அகிலரும் கண்டு ஆஶ்சர்யப்பட்டு 'இவ்வாசார்யக்ருபையும் உம்மிடத்திலேயுண்டு; இவருடைய தி₃வ்யஶக்தியும் உம்மிடத்திலே கூடும்; நீரே இத்த₃ர்ஶநத்துக்கு நிர்வாஹகராவீர்' என்று ஸர்வரும் இவரை மங்களாஶாஸநம் பண்ண, இளையாழ்வாரும் "கண்ணுள் நீங்கா என் நெஞ்சுள்ளும் நீங்காவே" என்கிறபடியே அவ்விக்₃ரஹத்தை ஸேவித்துக் கண்ணிலும் நெஞ்சிலும் தேக்கிக்கொண்டு 'நம்பெருமாள் நமக்குச் செய்தபடி என்!' என்று போரக்லேஶித்து அவப்₄ருதஸ்நாநம் செய்தருளிப் பெரியநம்பியை தண்டன்ஸமர்ப்பித்து, நம்பெருமாளையும் திருவடி தொழாதே அவரைவெறுத்து மீண்டு பெருமாள் கோயிலேற எழுந்தருளினார். பின்பு ஆளவந்தாரைக் க₃நித்துக் திருப்பள்ளிபடுத்துச் செய்யவேண்டும் க்ருத்யங்களெல்லாம் செய்தருளினார்கள்.

7. ஆறாயிரப்படி கு₃ருபரம்பராப்ரபா₄வம் :— திருக்கச்சிநம்பி வைப₄வம் ஐதிஹ்ய நிர்வாஹம் 1 & 2 காண்க.

8. ஆறாயிரப்படி கு₃ருபரம்பராப்ரபா₄வம்:— பெரியநம்பிவைப₄வம் ஐதிஹ்ய நிர்வாஹம் 1 காண்க.

9. ஆறாயிரப்படி கு₃ருபரம்பராப்ரபா₄வம்:— "இல்லறமல்லேல் துறவறம்" என்கிறபடியே 'அதிதி₂ஸத்காரயோக்₃யையன்றிக்கே ப்ரதிகூலையாயிருக்கிற பா₄ர்யையை ஸவாஸநமாக த்யஜித்து ஸந்யஸிக்கக்கடவன்' என்கையாலே இளையாழ்வாரும் 'நமக்கு இஸ்ஸம்ஸாரம் த்யாஜ்யம்' என்று அத்₄யவஸித்து,

"அநந்தஸரஸி ஸ்நாத்வா விமாநச் ச₂ாயயாऽந்விதே |
விமுக்தஸ்ஸர்வபாபேப்₄யோ விஷ்ணுலோகம் ஸ க₃ச்ச₂தி" ||
[ஹஸ்திகிரி மாஹாத்ம்யம் 15.24]

[புண்யகோடி விமான நிழலில் உள்ள அநந்தஸரஸ்ஸில் தீர்த்தமாடுகிறவன் எல்லாப் பாபங்களினின்றும் விடுபட்டு விஷ்ணுலோகத்தை அடைகிறான்.] என்னும் மாஹாத்ம்யமுடைய திருவநந்த ஸரஸ்ஸுக்கு எழுந்தருளி,

"ஸம்யங்நாக₃ாஹ்வயே தீர்த்தே₂விகா₃ஹ்ய க₃தகில்பி₃ஷ: |
நிரஸ்தேதரபோ₄க₃ாஸோ வரத₃ம் ஶரணங்க₃த:" ||

[அநந்தனின் பெயரையுடைய தீர்த்தத்தில் குடைந்தாடிப்பாபம் நீங்கப்பெற்று, மற்ற போகங்களில் ஆசை நீங்கப்பெற்றவராய், வரதனைச் சரணமடைந்தார்] என்கிறபடியே திருவநந்தஸரஸ்ஸிலே நீராடி,

"யதோ₂க்தகாரிணம் பி₄க்ஷும் ப₄க₃வந்தம் வா
கு₃ருத்வேநாங்கீ₃க்ருத்ய ஸந்யாஸாஶ்ரமமாஶ்ரயிஷ்யாமி"

[சாஸ்திரத்தில் கூறியபடி அநுஷ்டிக்கும் ஸந்யாஸியையோ, (அர்ச்சாரூபியான) பகவானையோ ஆசார்யனாக அங்கீகரித்து ஸந்யாஸாஶ்ரமத்தை மேற்கொள்ளப்போகிறேன்.] என்கிறபடியே ஸந்யஸிக்க ஸங்கல்பித்துக்கொண்டு * தொழுதெழுதொண்டர்கள் தமக்குப்பிணியொழித்தமரர் பெரும்விசும்பருளும் பேரருளாளர் ஸந்நிதியிலே எழுந்தருளி ஸேவித்து, "தாயே தந்தையென்றும் தாரமே கிளைமக்களென்றும், நோயே பட்டொழிந்தேன்" என்கிறபடியே ப₄க₃வத்₃ப₄ாக₃வதாசார்யாநுவர்த்தநத்துக்குவிலக்கடியான இஸ்ஸம்ஸாரஸப₃ந்த₄ம் வேண்டுவதில்லை; அடியேனுக்கு தேவரீர் திருவடித்தாமரைகளின் ஸேவையே வேண்டுவது; ஆகையாலே

"த்ரித₃ண்ட₃ம் வைஷ்ணவம் லிங்க₃ம் விப்ராணும் முக்தி ஸாத₄நம் |
நிர்மாணம் ஸர்வத₄ர்மாணுமிதி வேத₃ாநுஶாஸநம் ||"
[யதித₄ர்ம ஸமுச்சயம் பர்வம் 2]

[திரிதண்டம் எனப்படும் முக்கோல் விஷ்ணுவோடு தொடர்புள்ள அடையாளம்; அந்தணர்களான துறவிகளுக்கு மோக்ஷஸாதனம்; எல்லா தர்மங்களுக்கும் மூலமாயிருப்பது என்று வேதங்கள் ஆணை

விடுகின்றன] என்று இப்படிச்சொல்லப்பட்ட த்ரித₃ண்ட₃காஷாயாதி₃களை தேவரீர் அடியேனுக்கு ப்ரஸாதி₃த்தருளவேணும்' என்று இளையாழ்வார் பேரருளாளரை ஆசார்யத்வேந அங்கீ₃கரித்து விண்ணப்பஞ் செய்ய, தேவப்பெருமாளும் திருவுள்ளமுகந்தருளி

"த்ரித₃ண்ட₃முபவீதஞ்ச வாஸ: கௌபீநவேஷ்டநம் |
ஶிக்யங்கவசமித்யேதத் பி₃ப்₄ருயாத்₃யாவதா₃யுஷம் ||
[ஶாட்யாயந உபநிஷத்]

[முக்கோல், யஜ்ஞோபவீதம், காஷாயம், கௌபீனம், (பிக்ஷை ஏற்றுக் கொள்ளும் வஸ்திரமான) சிக்கம், மேற்போர்வைக் காஷாயம் ஆகிய இவ்வனைத்தையும் ஸந்யாஸியானவன் [தரிக்கக்கடவன்] என்கிறபடியே த்ரித₃ண்ட₃காஷாயாதி₃களை நீருள்ளதனையுந் தரிக்கக்கடவீர்'' என்று அர்ச்சகமுகே₂ந நியமித்து ப்ரஸாதி₃த்தருளி, 'இராமாநுசமுனி' என்று திருநாமஞ்சாத்தியுகந்தருளி. 'நம்மிராமாநுசனை மடத்திலே வைத்துவாரும்' என்று திருக்கச்சிநம்பிக்கு அருளிச்செய்தருள, அவரும் அப்படியே உபலாளித்துக்கொண்டுபோய் மடத்திலேவைத்து எழுந்தருளினர்.

பின்பு ராமாநுசனும் ஆஶ்ரம த₄ர்மங்களைக் குறைவற நடத்திக் கொண்டு 'நமக்கு ஆளவந்தார் விஶேஷகடாக்ஷம் பண்ணினதற்கு ஈடாக விரோதிகளும் கழிந்து ஆநுகூல்யமும் கூடாநின்றதே. ஆளவந்தார் திருவுள்ளக்கருத்து நிறைவேறும்படி நமக்கு ஒரு ஸஹாயம் உண்டாகவேணும்' என்று விசாரமுண்டாய், தத₃நுரோதே₄ந கோ₃விந்த₃ப₄ட்டரை நினைத்து 'அவன் நமக்கு ஹிதப்ரவர்த்தகன்; ஸர்வவிஷயவிரக்தன்; ஶாஸ்த்ரவைத₃க்₃த்₄யமுள்ளவன்; இனி அவனை நம்மோடே சேர்ப்பாருண்டாகில் நல்லது; இப்போது அவன் தே₃வதாந்தரபரனுயிராநின்ருன்; அவ்வுள்ளங்கை கொணர்ந்த இடததே சுருள் நாற்றமெழுப்பி

"ஸர்வக₃ந்த₄ஸ் ஸர்வரஸ:" [ச₂ாந் 3-14.1]

[எல்லா நறுமணங்களையும் உடையவராய்; எல்லா நற்சுவைகளையும் உடையவராய் இருப்பவர் பரமாத்மா.] என்னுமவனுடைய ஸௌக₃ந்த்₄யத்தைக் காட்டிமீட்கும் விரகர் ஆரோ?' என்று நினைவிட, 'விஶேஷாத்ம கு₃ணங்களையுடையராய், வேத₃வேதா₃ந்தவித₃க்₃ரேஸரராய், வகுளாப₄ரணப்ரப₃ந்த₄முகுளாமோதி₃தசித்தராய், * திலதமுலகுக்காய் நின்ற திருவேங்கடத்தெம்பெருமானை அநவரதபா₄வனை பண்ணி * பிரியாவடிமை செய்யாநின்றுள்ள தே₃ஶிகாக்₃ரேஸரரான பெரிய திருமலைநம்பி கடவர்' என்று நிஶ்சயித்து, ஒரு அநுகூல ஸ்ரீவைஷ்ண

வரை அவர் ஸந்நிதிக்குப்போகச் சொல்லி 'தேவரீருடைய மரு மகனை வட்டமணி கோவிந்தபட்டன் அடியேனுடன் ஸஹாத்₄ யாயியாய் அநுகூலித்திருந்தவன், து₃ர்வாஸநாதிஶயத்தாலே அந்ய பரனாய்க் காளஹஸ்தியாகிற சுடுங்காட்டிலே நில்லாநின்றான்; தேவரீர் அடியேனுக்காக அவனிடத்தே நிர்ஹேதுகக்ருபை பண்ணி தேவரீர் திருவடிகளுக்கு அவனை ஆட்கொண்டருளவேணும்' என்று விண் ணப்பஞ்செய்து போகவிட்டருளினார்.

## கூரத்தாழ்வானும் முதலியாண்டானும் இளையாழ்வாரிடம் ஆச்ரயித்தல்

அநந்தரம் இவர் இப்படி ஆஶ்ரமப்ராப்திபண்ணியருளின செய்தியைக் கந்தாடை முதலியாண்டானும், ஹாரீத குலதிலகரான திருமறுமார்பனென்கிற திருநாமத்தையுடைய கூரத்தாழ்வானும் கேட்டருளி, அதிப்ரீதியோடே பெருமாள் கோயிலுக்கு எழுந் தருளி ராமாநுசனை ஸேவித்து 'அடியோங்களுக்குப் பஞ்சஸம்ஸ் காராதி₃களை ப்ரஸாதி₃த்தருளவேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய, ராமாநுஜனும் திருவுள்ளமுகந்தருளி அவர்கள் ப்ரார்த்தி₂த்தபடியே செய்தருள அவர்களும் பஞ்சஸம்ஸ்காராதி₃களை லபி₄த்து க்ருதார்த் த₂ர்களாய்,

" அதீ₄த்ய மந்த்ரமாசார்யம் பூஜயேச்ச₂க்திதோ த்₃விஜ: ।
ஆசார்யாதீ₄நவ்ருத்திர்து யாவஜ்ஜீவம் ஸதா₃ ஶுசி: ॥"
[பராசரவிஶிஷ்ட பரமதர்ம ஶாஸ்த்ரம் 3-21]

[ப்₃ராஹ்மணனாயிருப்பவன் மந்திரத்தைக்கற்று (அம்மந்திரத்தை அளித்த) ஆசார்யனை இயன்றவரையில் பூஜிக்கவேண்டியது; எப் போதும் பரிசுத்தனாகி உயிருள்ள வரையிலும் எல்லாக் காரியங் களிலும் ஆசாரியனுக்கு வசப்பட்டவனாயிருக்கவேண்டும்] என்கிற படியே ஸ்வாசார்யரான ராமாநுஜனை ஒருகாலும் பிரியாமல் தத் கைங்கர்யைகரஸராய் ஸேவித்துக்கொண்டிருந்தார்கள்.

## யாதவப்ரகாசன் இளையாழ்வாரை ஆச்ரயித்து உஜ்ஜீவித்தல்.

பின்பு யாதவப்ரகாசனுடைய மாதாவுக்குப் பலகாலும் பேரருளா ளர் ஸேவையும் திருக்கச்சிநம்பி பார்வையும் ராமாநுஜனிடத்தே ப்ரேமஸம்பா₄ஷணமும் நடக்கையாலே அதுவே நிதா₃நமாக அவ

ளுக்கும் நம் தர்சநத்திலே ஊற்றம் பிறந்து 'இத்தர்சநத்திலே
நர் யாதவனும் இறங்கினாலோ!' என்று நினைத்து வையமாளிகைப்படி
ஏறநிற்க, 'நல்லது நல்லது' என்று கிம்வதந்தியுண்டாக, அது
கேட்டு ஸந்தோஷத்துடனே யாதவப்ரகாசன்பக்கல் சென்று இச்
செய்தியைச் சொல்லி 'நீயும் ராமாநுசனைப்போலே சிகாயஜ்ஞோப
வீதபூர்வகமாக த்ரிதண்டத்தை தரியாய்' என்ன யாதவப்ரகாசனும்
ஸ்வமதாபிமாநத்தாலே அர்த்தஞ்சொல்லுகையொழிந்து பாரமார்த்தி
கதயா ஸ்வாபிமதார்த்தத்தில் அருசி தோன்றாநிற்கையாலும், இளை
யாழ்வார் அந்நாள்களில் ப்ரதியோகித்வேந சொன்ன அர்த்தங்
கள் நெஞ்சிலே புண்படுத்தாநிற்கையாலும், அவர் மாஹாத்ம்யங்
களை ப்ரஹ்மரக்ஷஸ்ஸு சொல்லியிருக்கையாலும், அவருக்கு கங்கா
யாத்ரையிலே வ்யாதரூபேண வந்த ராம ஸாக்ஷாத்கார ஹாஸ்யத்தா
லும், மாத்ருவாக்யத்தாலும் ஸம்மதித்து, ஸ்வமாதாவுடனே 'த்ரி
தண்டதாரணம்பண்ணுமிடத்தில் நான் சிகாயஜ்ஞோபவீத
த்யாகம்பண்ணுகையாலே அதுக்கு ப்ராயஸ்சித்தமாக பூப்ரதக்ஷிணம்
பண்ணவேண்டியிருந்தது; அது வயோவ்ருத்தனான என்னால் செய்ய
முடியாது; இனி அசக்தனான நான்செய்ய அடுப்பதென்?' என்று
சொல்லி முசித்துக்கிடக்க, அவ்விரவிலே பேரருளாளர் அவன் ஸ்வப்
நத்திலேயெழுந்தருளி 'நம்மிராமாநுசனை ஒரு ப்ரதக்ஷிணம்
பண்ணி அவர்தர த்ரிதண்டகாஷாயாதிகளைத் தரித்து ஸந்யஸியாய்'
என்ன, யாதவனும் அத்தை விஸ்வஸியாமல் திருக்கச்சி நம்பியுடனே
'நான் ஒருநினைவு நினைத்திராநின்றேன்; அத்தைப் பேரருளாளர்க்கு
விண்ணப்பஞ்செய்து அவர் திருவுள்ளமானபடியை எனக்கு அருளிச்
செய்யவேணும்' என்ன, நம்பியும் அன்று ராத்ரி பெருமாளை
ஸேவித்து விடைகொள்ளுகிறவளவிலே 'யாதவப்ரகாசன்
ஒரு நினைவு நினைத்திருந்தேனென்றான்' என்று விண்ணப்பஞ்
செய்ய, பேரருளாளரும் 'அவன் தாயார் இராமாநுசனைப்போலே
நீயும் த்ரிதண்ட ஸந்யாஸியாகாயென்றாள்; தான் பூப்ரதக்ஷிணம்
பண்ணவேணுமென்று முசித்துக்கிடந்தான்; நாம் நம்மிராமாநுசனை
ஒரு ப்ரதக்ஷிணம்பண்ணி ஸந்யஸியாயென்று சொன்னோம்; நாம்
ஸ்வப்நமுகேந சொன்ன வார்த்தையை விஸ்வஸியாமல் உம்மை
யிடுவித்துக் கேட்கிறானித்தனை' என்று அருளிச்செய்ய, நம்பியும்
இச்செய்தியை விடிவோரை யாதவப்ரகாசனுக்கு அருளிச்செய்ய,
அவனும் விஸ்வஸித்து வந்து ராமாநுசன் திருவடிகளிலே தண்டன்
ஸமர்ப்பித்து 'அடியேனுக்கு த்ரிதண்டதாரணம் பண்ணுவித்தருள
வேணும்' என்ன, இவரும் அவனுடைய உசித நிர்வேதத்தைக்கண்டு

'அதுசெய்யுமிடத்து ப்ராயஸ்சித்தாபேக்ஷையுண்டு' என்ன, அவனும் பு₄க்₃வதுக்திப்ரகாரத்தை விண்ணப்பஞ்செய்து அவர்தம்மையே வலம்வந்து ஸவிநயனாய் நிற்க. அவ்வளவிலே ஆழ்வானும் ஆண்டானும் 'ப₄க₃வத₃நுகூல்யமும் இவருடைய நினைவும் ஒத்திருந்தபடியே!' என்று விஸ்மிதராய்.

**"காமாத் கோ₃ப்யோ ப₄யாத் கம்ஸோ**
**த்₃வேஷாச்சைத்₃யாத₃யோ ந்ருபா: ।**
**ஸம்ப₃ந்த₄ாத் வ்ருஷ்ணய: ஸ்நேஹாத் யூயம்**
**ப₄க்த்யா வயம் ந்ருப ॥"** [பாகவதம் 7-1-30]

[அரசனே! (கண்ணனிடம்) கோபிகள் காமத்தினாலும், கம்ஸன் அச்சத்தினாலும், சேதிதேசத்து அரசனான சிசுபாலன் முதலானோர் துவேஷத்தினாலும், வ்ருஷ்ணி குலத்துதித்தவர்கள் ஸம்பந்தத்தினாலும், நீங்கள் ஸ்நேஹத்தினாலும், நாங்கள் பக்தியினாலும் புனிதமடைந்தோம்.] என்கிறபடியே தேவரீர்க்குப் பண்ணுநின்ற த்வேஷந்தானே இவருக்கு உஜ்ஜீவந ஹேதுவாய்த்து என்றுசொல்லி ஆஶ்சர்யப்பட்டு,

**"அஸ்மாபி₄ஸ் துல்யோ ப₄வது"** [ரா-யு 18-38]

[(விபீஷணன்) நம்மோடு ஒருவனாக ஆகட்டும்] என்று விண்ணப்பஞ்செய்ய, ராமாநுசனும் போரவுகந்தருளி ஶாஸ்த்ரோக்தப்ரகாரேண ப்ராயஶ்சித்தபூர்வகமாகச் சௌளோபநயநாதி₃களையும் பண்ணுவித்து த்ரித₃ண்ட₄காஷாயாதி₃களையும் ப்ரஸாதி₃த்து 'கோவிந்தசீயர்' என்று திருநாமமும் ப்ரஸாதி₃த்தருளி, இப்படி பஞ்சஸம்ஸ்காரயுக்தராக்கி கு₃ருபரம்பரா பூர்வகமாக மந்த்ரரத்நார்த்த₂த்தையும் ப்ரஸாதி₂த்தருளி ஶாஸ்த்ரங்களிலே இதரேதரவசநவையர்த்₂யம் வாராதபடி 'யதித₄ர்மஸமுச்சயம்' என்கிற ப்ரபந்தத்தைப் பண்ணும்" என்ன, கோவிந்தசீயரும்,

**"விதி₄: கர்த்ருத₃ஶா லிங்க₃ம் ப்ரயோகோ₃ முக்₂யகர்ம ச ।**
**அஹோராத்ரக்ரியாऽऽசாரோ லிங்க₃த₄ர்மோ க₃திஸ்தி₂தி: ॥**
**"ப்ராயஶ்சித்தாநி ஸம்ஸ்கார இத்யேகாத₃ஶ பர்வக: ॥"**
[யதிதர்ம ஸமுச்சயம் அவதாரிகை 4-5 ஶ்லோகங்கள்]

[(1) ஸந்யாஸ விதி. (2) ஸந்யாஸம் செய்துகொள்ள வேண்டும் காலம். (3) ஸந்யாஸியின் சரீரத்திலுள்ள சிகை முதலிய அடையாளங்களும். ஶரீரத்துக்கு வெளியிலுள்ள தண்டம் முதலிய அடையாளங்களும். (4) ஸந்யாஸ ஸ்வீகாரக்ரமம். (5) ஸந்யாஸி முக்கியமாக அநுஷ்டிக்கவேண்டிய யோகா₃ப்₄யாஸம் முதலியவை (6) ஸந்யாஸி

இரவும் பகலும் செய்யவேண்டிய கிரியைகள். (7) ஸந்யாஸிக்குரிய ஶமம் த3மம் முதலான ஒழுக்கம். (8) யதிகளுக்குரிய சாதுர்மாஸ்ய வ்ரதம் முதலியவை, (9) ஸந்யாஸி ஓரிடத்திலிருக்கைக்கும் ஸஞ்சரிக்கைக்கும் உரிய தேசகாலங்கள். (10) ஸந்யாஸிக்கு அக்ருத்யகரணமும் க்ருத்யாகரணமும் நேரிட்டால் செய்யவேண்டிய ப்ராயஶ்சித்தங்கள். (11) ஸந்யாஸிக்கு சரீர வியோக3த்திற்குப்பின் செய்யவேண்டிய ஸம்ஸ்காரங்கள் என்னும் பதினொரு பர்வங்களுடைய யதித4ர்மஸமுச்சயம் என்னும் நூல் யாதவரால் இயற்றப்படுகிறது] என்று ஏவம்ப்ரகாரேண ஸங்க்3ரஹப்ரப3ந்த4த்தைச்செய்து ஸந்நிதியிலே வைத்து தண்டன்ஸமர்ப்பிக்க ராமாநுசனும் ஆத்3யந்தமாகத் திருக்கண்சாத்தி ஸந்தோஷித்தருள இவரும் ஆசார்யபரதந்த்ரராய்ச் சில காலம் எழுந்தருளியிருந்து அசிரேண பரமபதத்தை ப்ராபித்தருளினர்.

10. ஆறுயிரப்படி கு3ருபரம்பராப்ரப4ாவம்:—திருவரங்கப்பெருமாளரையர் வைப4வம் ஐதிஹ்யநிர்வாஹம் 3 காண்க.

11. ஆறுயிரப்படி கு3ருபரம்பராப்ரப4ாவம்:— உடையவரும்

**"ஸ்ரீரங்க3மதுலம் க்ஷேத்ரம் ஸ்ரியா ஜுஷ்டம் ஶுப4ாஸ்பத3ம் |**
**யத்3க3த்வா ந நரோ யாதி நரகம் சாப்யதோ4க3திம் ||**

[ஸ்ரீரங்க மாஹாத்ம்யம் - தஶாத்யாயீ 1-7]

[செல்வம் நிறைந்ததாய், மங்களங்களுக்கு இருப்பிடமான ஸ்ரீரங்கம் ஒப்பற்ற க்ஷேத்ரமாகும்: அதையடைந்த மனிதன் நரகத்தையும் தாழ்ந்த கதிகளையும் அடைவதில்லை] என்று சொல்லுகிற பெருமையையுடைய ஸ்ரீரங்கத4ாமமாகிற திருவரங்கந் திருப்பதியைநோக்கிப் பயணகதியிலே எழுந்தருளி வடவாற்றிலே நீராடிக் கோலவாதி3த்3வாத3ஶோர்த்4வபுண்ட்3ரங்களைச் சாத்திக்கொண்டு இருந்தவளவிலே, இவர் எழுந்தருளின செய்தியை ஆளவந்தார் ஸ்ரீபாதத்துப் பெரியநம்பி முதலான முதலிகளும் ஜீயர்களும் ஏகாங்கிகளும் ஸ்ரீவைஷ்ணவர்களும் வேட்டருளிப் பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும் ஸேனை முதலியாருக்கு அருள்பாடிட்டருளி 'நம்மிராமாநுசனை எதிர்கொண்டு அழைத்துவாரும்' என்று திருவுள்ளமாயருள, அவர் பெரியநம்பியுள்ளிட்ட முதலிகள் சீயர்கள் ஸ்ரீவைஷ்ணவர்களுடனே பெருமாள் பரிகரமான அனைத்துக்கொத்திலவர்களும் ஸேவிக்க அகிலந்ருத்தகீ3தவாத்3யத்துடனே முக்தராய்ப்போருமவர்களை நித்யஸூரிகள் விரஜைக்கரையளவாக வந்து எதிர்கொள்ளுமாபோலே திருக்காவேரி வடவாற்றின் கரையளவாக வந்து எதிர்கொள்ள, ராமாநுசனும் ஸேனை முதலியாரையும் பெரியநம்பி முதலானோரையும் ஸேவித்து அவர்களைப் பின்சென்று கொண்டுபோய் 'கொடியணி நெடுமதிள் கோபுரங்குறுகினர்' என்கிறபடியே திட்கொடிமதிளையும் தாமோதரன் திருக்கோபுரத்தையும் கிட்டி ஸாஷ்டாங்க3ப்ரணாமம்பண்ணி, திரு

மாலைதந்த பெருமாள் திருவீதி முன்னாகப்புகுந்து ப்ரதக்ஷிணமாக எழுந்தருளி த்ரிவிக்ரமன் திருவீதியையும் ப்ரதக்ஷிணமாக எழுந்தருளிப்புகுந்து பெரிய பலிபீடத்தடியிலே சென்று தண்டன்ஸமர்ப்பித்து. ஸேவாக்ரமத்திலே ஆளரியையுந் திருவடிதொழுது ஸ்ரீரங்க நாய்கியாரையும் ஸேவித்து, ஸ்ரீ சந்த்ரபுஷ்கரிணியிலே தீர்த்த ஸ்வீகாரம் பண்ணியருளி, திருக்கோபுரத்து நாயனார்களையும் ஸேவித்துப் புகுந்து கடைத்தலையிருந்து வாழும் சோம்பரான நம்மாழ்வார் முதலான ஆழ்வார்களையும் ஸேவித்து மற்றும் சுற்றியுள்ள எம்பெருமான்களையும் ஸேவித்து, அணியினார்செம்பொனாய அருவரையனைய கோயிலாகிய அணியரங்கன் திருமுற்றத்தே புகுந்து தண்டன் ஸமர்ப்பித்து உள்ளேசென்று ப்ரதக்ஷிணமாக எழுந்தருளி ப்ரணவாகாரமான திவ்யவிமானத்தையும் ஸேவித்து ஸேனைமுதலியாரையும் திருவடிதொழுது அழகியமணவாளன் திருமண்டபத்தேற எழுந்தருளினவளவிலே 'வந்தவரெதிர்கொள்ள மாமணிமண்டபத்து' என்கிறபடியே முக்தனைப்போருமவனை ஸ்ரீவைகுண்டநாதன் எதிர்கொள்ளுமாபோலே நம்பெருமாள் திருக்கைத்தலத்திலே எழுந்தருளிப் புறப்பட்டு அழகியமணவாளன் திருமண்டபத்தளவாக எழுந்தருளி எதிர்கொண்டு உள்ளே புகுந்தருள, உடையவரும் விழுவது எழுவது தொழுவதாய் ஸேவித்துத் திருப்பள்ளியறையிலே புகுந்து அரங்கந்தன்னுள் பாம்பணைப் பள்ளிகொள்ளும் கடல்விளங்கு கருமேனியம்மான்றன்னைக் கண்ணாரக்கண்டு உகந்து மணத்தூணைபற்றி நின்று வாயாரவாழ்த்தி ப்ரேமபரவஶராய், அமலனாதிபிரானிற்படியே பாதாதி கேஶாந்தமாக 'கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே' என்னும்படி பெரியபெருமாளை அநுபவித்து, திருப்பல்லாண்டையும் அநுஸந்தித்து

"நமோ நமோ வாங்மநஸாதிபூமயே
நமோ நமோ வாங்மநஸைகபூமயே।
நமோ நமோऽநந்தமஹாவிபூதயே
நமோ நமோऽநந்ததயைகஸிந்தவே॥"

"ந தர்மநிஷ்டோऽஸ்மி ந சாத்மவேதீ
ந பக்திமாம்ஸ்த்வச் சரணாரவிந்தே।
அகிஞ்சநோऽநந்யகதிஸ் ஶரண்ய
த்வத்பாதமூலம் ஶரணம் ப்ரபத்யே॥"

[ஸ்தோ-ர 21, 22]

[(ஸ்வயத்னத்தால் அறிய நினைப்பவர்களுடைய) வாக்குக்கும், மநஸ்ஸுக்கும் எட்டாதவனான உனக்கு நமஸ்காரம்; (நீ காட்டக் கண்டவருடைய) வாக்குக்கும், மனஸ்ஸுக்குமே நிலமாயிருக்கிற உனக்கு நமஸ்காரம், அளவற்ற பெரிய ஐச்வர்யத்தை உடைய உனக்கு நமஸ்காரம்; அளவற்ற கருணைக்கு ஒரு கடலாயிருக்கும் உனக்கு நமஸ்காரம். சரணமடையத்தக்க எம்பிரானே! (அடியேன்) கர்மயோகத்தில் நிலைநின்றவனல்லேன், ஆத்மஜ்ஞானமும் உடையேனல்லேன். உன் திருவடித் தாமரைகளில் பக்தியை உடையவனல்லேன். ஒரு உபாயமுமற்றவனும், வேறு புகலற்றவனுமான அடியேன் உன் திருவடித் தாமரைகளை உபாயமாக நிச்சயிக்கிறேன்.] என்று தம் பரமாசார்யரான ஆளவந்தார் திவ்யஸூக்தியை அநுஸந்தித்து ஸேவித்துநிற்க, பெரியபெருமாளும் ராமாநுசனை மிகவும் க்ருபைபண்ணியருளி, தீர்த்தப்ரஸாதங்களும் ப்ரஸாதித்து "நின் செம்மாபாதபற்புத்தலைசேர்த்து" என்கிறபடியே தேனேமலரும் திருக்கமலபாதமான துயரறுசுடரடிகளாலே இவருடைய உத்தமாங்கத்தை அலங்கரிக்க, இவரும் தாளிணைக்கீழ் வாழ்ச்சியைப்பெற்று நிரதிசயாநந்த நிர்ப்பரராய் ஸேவித்துக்கொண்டு நிற்க. பெரியபெருமாளும் உடையவரைத் தம் தாமரைக் கண்களால் நோக்கி, சோதிவாய் திறந்து "'பொங்கோதஞ்சூழ்ந்த புவனியும் விண்ணுலகும்' என்கிற உபய விபூத்யைச்வர்யத்தையும் உமக்கும் உம்முடையார்க்குந் தந்தோம்; நம்முடைய வீட்டின் கார்யத்தையெல்லாம் ஆராய்ந்து நடத்தும்" என்று (திருவுள்ளமாயருளி உடையவரென்ற திருநாமமும்) ப்ரஸாதித்தருள, உடையவரும் தீர்த்தப்ரஸாதமும், சூடிக்களைந்த தண்டுழாய்விரைநாறு கண்ணித்திருமாலை ப்ரஸாதமும், பொதுநின்றபொன்னங்கழலான ஸ்ரீ சடகோபனும், "வானவர் நாட்டையும் நீ கண்டுகொள்" என்கிற உபயவிபூத்யைச்வர்யமும் கரதலாமலகமாக ப்ரஸாதிக்கப்பெற்று, பெரியநம்பி திருமுக மண்டலத்தைப் பார்த்தருளி "'பெரியார்க்காட்பட்டக்கால் பெறுத பயன் பெறுமாறு!' என்று தேவரீர் திருவடிகள் ஸம்பந்தத்தைவிட்டுப் பெருமாள் இப்படி அடியேனை வாழ்வித்தருளினர்" என்று விண்ணப்பஞ்செய்ய, பெரியநம்பியும் "'கலியுங்கெடுங் கண்டுகொண்மின்' என்று ஆழ்வார் அருளிச்செய்த பவிஷ்யதர்த்தம் ப்ரத்யக்ஷமாச்சுது" என்று அருளிச்செய்து, 'பெருமாள் நியமித்தருளின கார்யம் செய்தருள

லாகாதோ?' என்ன. உடையவரும் பெரிய திருமண்டபத்தே எல்லா ருடனும் எழுந்தருளியிருந்து கருவூலங்களையெல்லாம் ஆராய்ந்து அமுதுபடி சாத்துப்படி திருமாலை திருவிளக்குகளெல்லாம் ஆராய்ந்து நடத்தி. மற்றும் திருவாராதநத்துக்கு வேண்டினவையெல்லாங் குறைவறநடத்தி. கோயிலனைத்துக் கொத்திலவர்களுடையவும் ஏற்றத் தாழ்வுகளும் ஆராய்ந்து. திருமதிள்கள் முதலானவிடங்களில் திருப்பணிகளும் நடத்தியருளி * வண்டினமுரலுஞ் சோலை மயி லினமாலுஞ் சோலை கொண்டல்மீதணவுஞ் சோலை குயிலினங்கூவுஞ் சோலை, * கடியார் பொழில்களில் திருச்சண்பகந் தொடக்கமான திருப்பூமரங்களும் திருநந்தவனங்களும் ஆராய்ந்தருளி. மற்றுமுண் டான திருவிளையாட்டு ஸீமைகளுமெல்லாம் ஆராய்ந்துகொண்டு போருகிறவளவிலே, அகளங்க நாட்டாழ்வானை ஶிஷ்யனுக்கிக் கோயி லுக்கு மேல்காவலாக வைத்தருளி ''திங்களும் நாளும் விழாவருத'' என்கிறபடியே நித்யோத்ஸவ பக்ஷோத்ஸவ மாஸோத்ஸவ ஸம்வத்ஸ ரோத்ஸவம் முதலான மஹோத்ஸவங்களெல்லாம் தாழ்வற நடத்திக் கொண்டு போருகிற காலத்திலே.

12 ஆருயிரப்படி கு₃ருபரம்பராப்ரப₄ாவம்:—பெரியதிருமலைநம்பி வைப₄வம் ஐதிஹ்ய நிர்வாஹம் 3 காண்க.

13. ஆருயிரப்படி கு₃ருபரம்பராப்ரப₄ாவம் :— அநந்தரம் இராமாநுசனும் பெரியநம்பி திருமாளிகைக்கு எழுந்தருளி அவர் திருவடிகளிலே தாளுந்தடக்கையுங் கூப்பித் தண்டன் ஸமர்ப்பித்து 'ஆளவந்தார் ஸ்ரீபாதத்திலே ஸேவியாத இழவுதீரத் தேவரீர் திருவடி களிலே ஆஶ்ரயிக்கப்பெற்றேன்; தேவரீர் திருவுள்ளத்திலுண்டான அர்த்த விஶேஷங்களை அடியேனுக்கு ப்ரஸாதித்தருளவேணும்' என்று விண்ணப்பஞ் செய்ய. நம்பியும் 'அப்படியே ஆகிறது' என்று

''அஹோ த்₃வயஸ்ய மாஹாத்ம்யமஹோ
வீர்யமஹோ ப₃லம் ।
மந்த்ரரத்நம் ஶுப₄கரம் வேத₃ஸாரம் ஸநாதநம் ॥
ஸர்வபாபக்ஷயகரம் ஸர்வபுண்யவிவர்த்த₄நம் ।
ஸ்ரீகரம் லோகவஶ்யஞ்ச ஸத்யம் ஸம்ஸாரதாரணம் ॥''

[ப்ரபந்நாம்ருதம் 108.40ல் எடுக்கப்பட்ட ஸ்ம்ருதி]

[த்வயத்தின் பெருமையும், வீர்யமும், பலமும் எத்தகையது! மங்க ளத்தை அளிப்பதாய், வேதஸாரமாயிருப்பதாய், பழையதாயிருப்பது மந்த்ரரத்னமான த்வயம், எல்லாப் பாபங்களையும் போக்குவதாயும்,

எல்லாப் புண்ணியங்களையும் வளர்ப்பதாயும், செல்வங்களைத் தருவதாயும், ஜனங்களை வசப்படுத்துவதாயும், உண்மையாகவே (அல்லது உடனே) ஸம்ஸாரத்தைத் தாண்டச்செய்வதாயுமிருப்பது அது] என்கிறபடியே பாபஹரமுமாய், புண்யவர்த்த₄கமுமாய், ஸம்ஸார பந்தத்தையறுக்கவற்ருய், மிகவும் ஶ்லாகிக்கப்பட்டு வேதஸாரதமமாய், மாங்கள்யகரமாய், மந்த்ரரத்நமாகிற த்வயார்த்தத்தை ஸவிஶேஷமாக ப்ரஸாதித்தருளி, 'இன்னமும் சில அர்த்தவிஶேஷங்களுண்டு; அவற்றை ஆளவந்தாருடைய அபி₄மாநாந்தர்ப்பூ₄தரான திருக்கோட்டியூர் நம்பி ஸ்ரீபாதத்திலே சென்று கேளும்' என்று அருளிச்செய்தார்.

14. ஆருயிரப்படி கு₃ருபரம்பராப்ரப₄ாவம்:— திருக்கோட்டியூர் நம்பி வைப₄வம் ஐதிஹ்ய நிர்வாஹம் 1 காண்க.

15. ஆருயிரப்படி கு₃ருபரம்பராப்ரப₄ாவம்:—திருமாலையாண்டான் வைப₄வம் ஐதிஹ்ய நிர்வாஹம் 1 காண்க.

16. ஆருயிரப்படி கு₃ருபரம்பராப்ரப₄ாவம்:—திருவரங்கப்பெருமாளரையர் வைப₄வம் ஐதிஹ்ய நிர்வாஹம் 1 காண்க.

17. ஆருயிரப்படி கு₃ருபரம்பராப்ரப₄ாவம்:— 'பெரியநம்பி ஸ்ரீபாதத்திலே ஆஶ்ரயித்தபோதே ஸ்வரூப ஸித்₃தி₄யுண்டாயிருக்க, இவர் பலர் ஸ்ரீபாதத்திலும் உபதே₃ஶங்கேட்கைக்கு அடியென்? அவர்கள் தாம் மேல்விழுந்து அர்த்தங்களை உபதேசிக்கைக்கு அடியென்?' என்னில்—ஒருராஜா ஸ்வகுமாரார்த்த₂மாகப் பல மந்த்ரிகளிடத்தே நிதிகளை வைத்துத் தன்குமாரன் ப்ரபு₃த்₃த₄னைவாறே கொடுக்கச்சொல்லிப் போமாபோலே, ஆளவந்தாரும் இவர்களிடங்களிலே ஒவ்வொரு அர்த்த விஶேஷத்தை உபதேசித்து வைக்கையாலே, ஆளவந்தார் ஸ்ரீபாதத்திலே ஸேவித்து அவ்வர்த்தங்களைப் பெருத இழவுதீர, இவர்கள் பக்கல் அவ்வர்த்தங்களைப் பெற்று இழவுதீர்ந்தாரித்தனை; இனி, இவ்வாசார்யர்களுக்கு ஆளவந்தார் இளையாழ்வாரை 'ஆம் முதல்வன்' என்று கடாக்ஷித்து, 'நாம் உங்களுக்குச் சொல்லும் பரமரஹஸ்யத்தை இளையாழ்வாருக்குச் சொல்லுங்கோள்' என்று நியமித்தருளுகையாலே 'ஶிஷ்யனுகிலுமாம், ஆசார்யனுகிலுமாம்; விலக்ஷண ஸம்பந்தமே வேண்டுவது' என்று மேல்விழுந்து உபதேசித்தார்கள்; ஆகையாலே முன்புள்ள ஆசார்யர்கள் இவர்க்கு ஆசார்யர்களாய் வீறுபெற்ருர்கள்;

பின்புள்ளவர்கள் இவர்க்கு ஶிஷ்யர்களாய் ஸ்வரூபம் பெற்றார் கள்: ஒரு ஹாரத்தின் நடுவே மாணிக்கம் கிடந்து அந்த ஹாரத்தை ஶோபி₄தமாக்குமாபோலே, இடையே இராமாநுச முனியாய் விளங்கினாரிறே.

18. ஆறாயிரப்படி கு₃ருபரம்பராப்ரப₄ாவம்:— திருக்கோட்டியூர் நம்பி வைப₄வம் ஐதிஹ்ய நிர்வாஹம் 2 காண்க.

19. ஆறாயிரப்படி கு₃ருபரம்பராப்ரப₄ாவம்:—அருளாளப்பெருமா ளெம்பெருமானார் உடையவரை ஆச்ரயித்தல். பின்பு, யஜ்ஞமூர்த்தி என்கிற மஹாவித்வானொருவன் ஒரு ப்ராஹ்மணன் கங்காஸ்நாநத்துக்குப் போய் அங்கு ஸ்நாநம் பண்ணி அங்குள்ள வித்வான்களை ஜயித்து அங்கே மாயாவாத₃ஸந்யாஸாஶ்ரமத்தையும் பரிக்₃ரஹித்து வித்யையாலும் ஶிஷ்யஸம்பத்தாலும் மிகுந்தவனாயிரா நிற்க, அவனும் அங்கே உடையவருடைய வைபவத்தைக் கேட்டு 'நாம் அங்கேறப் போய் அவருடனே தர்க்கிக்க வேணும்' என்று அநேக ஶாஸ்த்ரங் களையெழுதி க்ரந்தங்களையும் சுமை சுமையாகக் கட்டி எடுப்பித்துக் கொண்டு தன் வித்₃யாக₃ர்வமெல்லாம் தோற்றப் பெரியமதிப் புடனே அதித்வரையில் கோயிலேற வந்து உடையவரைப் பார்த்து 'என்னுடன் தர்க்கிக்க வேணும்' என்ன, இவரும் 'அப்படியே செய்கிறோம்; நீ தோற்றால் என்ன செய்கிறாய்?' என்ன, அவனும் 'நான் தோற்றேனாகில் உம்முடைய பாத₃ரக்ஷையைச் சுமந்து உம் முடைய பேரையுமிட்டுக்கொண்டு உம்முடைய ஸித்₃த₄ாந்தத்திலே புகுரக்கடவேன்' என்ன, உடையவரும் 'நாம் தோற்றோமாகில் க்₃ரந்த₂ஸந்யாஸம் பண்ணித் தோற்றோமென்கிறோமித்தனை' என்ன, அவனும் ஸம்மதித்து இப்படி அந்யோந்யம் ப்ரதிஜ்ஞை பண்ணிக்கொண்டு பதினெட்டு நாள் அவதியுமிட்டு இருவரும் ஒருவருக்கொருவர் தோலாமல் மத்தக₃ஜங்கள் பொருமாபோலே தர்க்கிக்க, இப்படி பதினாறுநாள் ஒருவருக்கொருவர் தோலாமல் தர்க்கித்து அவனை ஜயிக்கப்போகாமல் பதினேழாம்நாள் அவ னுடைய யுக்திப்ரப₃லமாக, இவரும் அதுக்குமேல் ஒன்றுந் தோன்றா மல் நிற்க, அவ்வளவிலே அவனும் தன் வெற்றிதோற்ற எழுந் திருந்து அற்றைக்குப் போக, இராமாநுசனும் வ்யாகுலாந்த: கரணராய் மடமே எழுந்தருளித் தம் திருவாராதநமான பேரரு ளாளரையுந் திருவடிவிளக்கி அமுதுசெய்யப் பண்ணி, பெருமா

னுடன் வெறுத்து 'பெருமாளே! ஆழ்வார் தொடங்கி ஆளவந்தா ரளவாக இத்தனை காலம் ஓராண் வழியாய் ப்ரதிஷ்டி₂தமாய் வந்த இத்தர்ஶநம் அடியேனைத் தோற்றித் தோற்கக்கடவதோ! இந்நாள்வரையில் தேவரீர் ஸ்வரூபரூபகுணவிபூதிகள் ஸத்ய மென்று ப்ரமாணத்தை நடத்திக்கொண்டு போந்தீர்; இப்போது ஒரு ம்ருஷாவாதி₃யைக் கொண்டுவந்து என்னுடைய காலத்திலே எல்லா ப்ரமாணங்களையும் அழிந்துப்போகட்டு லீலைகொண்டாடத் திருவுள்ளமாகில் அப்படியே செய்தருள' என்று விண்ணப்பஞ் செய்து தாமும் அமுது செய்யாமல் கண்வளர்ந்தருள, பேரருளா ளரும் அன்று ராத்ரி இவர் ஸ்வப்நத்திலே எழுந்தருளி 'இளையாழ்வீர்! நீர் முசிப்பானேன்? உமக்கு ஸமர்த்தனாயிருப்பா னொரு ஶிஷ்யனை உண்டாக்கித் தந்தோங்காணும்; உம்முடைய பரமாசார்யரான ஆளவந்தார் அருளிச்செய்த மாயாவாத₃க₂ண்ட₃ நத்தைச் சொல்லி அவனை ஜயியும்' என்று அருளிச்செய்தருள, உடையவரும் விடிவோரை திருநாமோச்சாரணம் பண்ணியெழுந் திருந்து திருக்கண்களை விழித்து 'இதொருஸ்வப்நமிருந்தபடியென்' என்று மிகவும் திருவுள்ளமுகந்து ஸ்வப்நத்தில் அருளிச்செய்த யுக்தி யைத் தம் திருவுள்ளத்திலே கொண்டு எழுந்தருளியிருந்து ஸந்தோ ஷத்துடனே நித்யகர்மாநுஷ்டா₂நஞ் செய்தருளித் தம் திருவாராத₄ன மான பேரருளாளரையும் ஸேவித்துப் புறப்பட்டு ப்ரஸந்நக₃ம் பீ₄ரமாய்க்கொண்டு தர்க்ககோஷ்டியிலே எழுந்தருள. அவ்வளவிலே அந்த வித்₃வானும் ப₄ாவஜ்ஞனாகையாலே உடையவர் எழுந்தருளுகிற கா₃ம்பீ₄ர்யத்தையும் ஸந்தோஷத்தையுங்கண்டு 'இவர் நேற்று இங்கு நின்றும் எழுந்தருளும்போது சோம்பிக்கொண்டு போனார்; இப்போது மத்தகஜம்போலே இங்கே வாராநின்றார்! ஆகை யாலே இது மாநுஷமன்று. அதிமாநுஷ சேஷ்டித மாயிராநின்றது' என்று நிஶ்சயித்து, சடக்கென எழுந்தி ருந்து எதிரே சென்று உடையவர் திருவடிகளிலே ஸேவித்து 'தேவரீ ருக்குத் தோற்றேன்' என்று ஶ்ரீபாத₃ரக்ஷைகளை ஶிரஸாவஹித்துக் கொண்டு 'அடியேனை இரங்கியருளவேணும்' என்ன, உடையவரும் 'இதென்!' என்று திகைத்து 'தர்க்கிக்கலாகாதோ?' என்ன, அவனும் உடையவரைக்குறித்து 'தேவரீருக்குப் பெரியபெருமாள் ப்ரத்யக்ஷமான பின்பு, தேவரீரென்ன பெரியபெருமாளென்ன பேதமில்லையென்று

அறிந்தேன்; இனி அடியேன் தேவரீர் ஸந்நிதியில் வாய்திறந்து ஒருவார்த்தை சொல்ல ப்ராப்தியில்லை' என்ன, உடையவரும் உகந்தருளி 'ஆகிலும் நீர் சொன்ன மாயாவாதஸித்தாந்தத்திலும், ப்ரஹ்மம் நிர்குணமென்கையாலே அந்த ப்ரஹ்மத்திற்கு ஸத்யத்வாதி குண யோகங்களைச் சொல்லுகிறவேதவாக்யங்கள் அப்ரமாணங்களாய்விடும். அவித்₃யா திரோஹிதமான ப்₃ரஹ்மத்துக்கு கு₃ணயோக முண்டாகை யாலே ஸகு₃ண ஶ்ருதியில் விரோதமில்லை என்றீராகில் அது கூடாது; எங்ஙனேயென்னில்:—

"ஜ்ஞாநரூபம் பரம் ப்₃ரஹ்ம தந்நிவர்த்யம் ம்ருஷாத்மகம் ।
அஜ்ஞாநஞ்சேத் திரஸ்குர்யாத் க:ப்ரபு₄ஸ்தந்நிவர்த்தநே ॥"

[ஸ்ரீபாஷ்யம் ஜிஜ்ஞாஸாதிகரணம் மஹாஸித்ததந்தம் அவித்யாப₄ங்க₃ ப₄ாக₃த்தில் எடுக்கப்பட்ட நாதமுனிகள் அருளிய ஶ்லோகம்] [ஞானஸ்வரூபமான பரம்பொருளை, அந்த ப்ரஹ்மத்தால் போக்கடிக்கத் தக்கதாய், பொய்யானதான அஜ்ஞானம் (அவித்யை) மறைக்குமாகில் அந்த அஜ்ஞானத்தை யாரால் அழிக்கமுடியும்?] என்கிற படியே ஜ்ஞாநரூபமாயிருந்துள்ள பரப்₃ரஹ்மத்தை அஜ்ஞான ரூபமான அவித்யை மறைத்ததாகில் அந்த அவித்யைக்கு நாசமில்லையாகையாலே, அது நித்யமாய்விடும்; அப்படியாகிலென்னென்னில்;- அவித்யை என்றும், ப்ரஹ்மம் என்றும் இரண்டு வஸ்து உண்டாகை யாலே அத்வைதமென்கிற மஹாக₃ஜம் த்₃வைதமாகிற ஆழங்காற் சேற்றிலே அமிழ்ந்தது' இத்யாத்₃யுக்திகளை அருளிச்செய்ய, அவனும் இசைந்து இவர்க்குத் தோற்று, ஏகதண்டத்தை முறித்தெறிந்துவிட்டு எம்பெருமானார் திருவடிகளிலே ஸாஷ்டாங்க ப்ரணாமம் பண்ணிக் கொண்டு கிடக்க, எம்பெருமானாரும் தம் திருவடி மலர்களாலே அவன் முடியை ஶோபி₄தமாக்கி எடுத்தணைத்துக்கொண்டு மிகவும் க்ருபை செய்தருள, அவனும் 'அடியேனுக்கு த்ரித₃ண்ட₃காஷாயாதி₃களை ப்ரஸாதித்தருளவேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய, உடையவரும் 'அப்படியே செய்கிறோம்' என்று திருவுள்ளம் பற்றி, 'முன்பு ஶிகா₂ யஜ்ஞோபவீதத்யாக₃ம் பண்ணுகையாலே அதற்கு ப்ராயஶ்சித்தம் பண்ணவேணும்' என்று

"ஹீநோ யஜ்ஞோபவீதேந யதி₃ஸ்யாத் த்₄யாந பி₄க்ஷுக: ।
தஸ்ய க்ரியா நிஷ்ப₂லாஸ்ஸ்யு: ப்ராயஶ்சித்தம் விதீ₄யதே ॥
கா₃யத்ரீ ஸஹிதாயைவ ப்ராஜாபத்யாந் ஷட₃ாசரேத் ।
புநஸ் ஸம்ஸ்கார மாஹ்ருத்ய தா₄ர்யம் யஜ்ஞோபவீதகம் ॥"

[ப்ரபந்நாம்ருதம் 25-46, 47ல் எடுக்கப்பட்ட ஸ்ம்ருதி]

[பரப்₃ரஹ்மத்₄யானஞ் செய்யும் துறவி யஜ்ஞோபவீதமற்றவனுனல் அவனுடைய கிரியைகளெல்லாம் பயனற்றவைகளாகும். அவனுக்கு ஶாஸ்திரங்களில் பிராயச்சித்தம் விதிக்கப்படுகிறது. அவன் காயத்ரீ மந்திரஜபம் செய்தபோதிலும் ஆறு ப்ராஜாபத்ய க்ருச்ச்₂ரங்களைச் செய்விக்கவேண்டும். அவனுக்கு மறுபடியும் உபநயனம் முதலான ஸம்ஸ்காரத்தைச் செய்வித்து யஜ்ஞோபவீதம் அணிவிக்கவேண்டும்.] என்கிறபடியே ஶாஸ்த்ரோக்த ப்ரக்ரியையாலே ப்ராயஶ்சித்தமும் பண்ணுவித்து ஶிகா₂யஜ்ஞோபவீதங்களையும் த₄ரிப்பித்து.

‘ ப்ரத₄ார்யஸ்தாபஸம்ஸ்காரோ வைஷ்ணவோ
முநிபி₄ஸ்ஸ்ம்ருதः ।
ஸர்வாஶ்ரமேஷு வஸதாம் ஸ்த்ரீஶூத்₃ராணாம்
த்₃விஜோத்தம ॥”

[ப்ரபந்நாம்ருதம் 4-8ல் எடுக்கப்பட்ட ஸ்ம்ருதி]

[அந்தணர் தலைவரே! ப்ரஹ்மசர்யம், இல்லறம், வாநப்ரஸ்தம், ஸந்யாஸம் (துறவறம்) என்னும் நாலு ஆஶ்ரமங்களிலிருக்கும் இருபிறப்பாளர்களுக்கும், பெண்களுக்கும், ஶூத்ரர்களுக்கும் விஷ்ணு ஸம்பந்தியான தாபஸம்ஸ்காரம் நன்கு தரிக்கத்தக்கதாக முனிவர்களால் கூறப்பட்டது.] என்கிறபடியே திருவிலச்சினை முதலாகப் பஞ்சஸம்ஸ்காரங்களையும் ப்ரஸாதித்து,

“உபவீதம் த்ரித₃ண்ட₃ஞ்ச பாத்ரம் ஜலபவித்ரகம் ।
கௌபீநம் கடிஸூத்ரஞ்ச ந த்யாஜ்யம் யாவதா₃யுஷம் ||”

[ப்ரபந்நாம்ருதம் 4-9ல் எடுக்கப்பட்ட ஸ்ம்ருதி]

[பூணூல், திரிதண்டம், கரகமெனப்படும் பாத்ரம், ஜலபவித்ரம், கோவணம், அரைநாண் ஆகியவை ஆயுளுள்ளவரையில் (ஸந்யாஸிகளால்) கைவிடத்தகாதவை] என்கிறபடியே ‘த்ரித₃ண்ட₃காஷாயாதி₃களை நீர் உள்ளதனையும் த₄ரியும்’ என்று ப்ரஸாதித்தருளி, உகப்பின் மிகுதியாலே பேரருளாளர் தமக்கு ஸ்வப்நமுகே₂ந அருளிச்செய்தருளின உபகாரத்திற்கு ஸ்மாரகமாக ‘அருளாளப் பெருமானெம்பெருமானர்’ என்று திருநாமஞ்சாத்தியருளினர்.

அநந்தரம் அவரை அழைத்துக்கொண்டுபோய் நம்பெருமாளையும் ஸேவிக்கப்பண்ணித் தீர்த்தப்ரஸாதமும் ஸ்ரீசட₂கோபனும் ப்ரஸாதிப்பித்துப் புறப்பட்டு மடமே கொண்டுபோய்த் தம் திருவாராதனமான பேரருளாளரை ஸேவிக்கப்பண்ணுவித்து ‘இவர்

காணும் உப்மை நப்பக்கல் சேர்த்தருளினவர்' என்று அருளிச்செய்து அவரைத் திருவாராதநம் பண்ணி அமுதுசெய்வித்துத் தாமும் அமுது செய்து இவர்க்குத் தளிகைப்ரஸாதமும் ப்ரஸாதித்தருள, இவரும் அமுது செய்து ஸௌஹ்ருஷ்டராய் வாழ்ந்து கொண்டிருக்கும் காலத்திலேயே, உடையவர் இவரைப் பார்த்து 'வாரீர், அருளாளப்பெருமாளெம்பெருமானாரே! ஆழ்வார்கள் அருளிச்செய்த திவ்யப்ரபந்தங்களை ஓதீர்' என்று அருளிச்செய்து, திருப்பல்லாண்டுதொடங்கி நாலாயிரமும் ஓதுவித்து, மற்றும் வேண்டும் தத்வஶிக்ஷைகளையும் ப்ரஸாதித்தருளினார்.

அநந்தரம் உடையவர், ஆழ்வானையும், ஆண்டானையும், அருளாளப்பெருமாளெம்பெருமானாரையும் க்ருபை பண்ணிக்கொண்டு, வித்வத்கோஷ்டியாக நடக்குங்காலத்திலே, ஆசார்யர்களெல்லாரும் வந்து உடையவர் திருவடிகளிலே ஆஶ்ரயித்ததைக்கேட்டு அநந்தாழ்வானும், எச்சானும், தொண்டனூர் நம்பியும், மருதூர் நம்பியும் உடையவர் திருவடிகளிலே ஆஶ்ரயிக்கவேணுமென்று எழுந்தருள, அவர்களை அருளாளப்பெருமாளெம்பெருமானார் ஸ்ரீபாதத்திலே ஆஶ்ரயிப்பித்தருளினார். அப்போது அவரும் பீதராய் அவர்களைக் குறித்து 'குருவியின் கழுத்திலே பனங்காயைக் கட்டினாற்போலே உடையவர் செய்தார்; நீங்கள் எம்பெருமானார் திருவடிகளே தஞ்சம் என்றிருங்கோள்' என்று அருளிச்செய்தருளினார்.

பின்பு உடையவரும் அமர்சுவையாயிரமான திருவாய்மொழிக்கு அர்த்தமருளிச்செய்துகொண்டு திவ்யகோஷ்டியாக எழுந்தருளியிருக்கிறவளவிலே "ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி" என்கிற திருவாய்மொழி நடவாநிற்க, "சிந்துபூ மகிழுந் திருவேங்கடம்" என்கிறவிடத்திற்கு அர்த்தமருளிச்செய்கிறவர், முதலிகளைப் பார்த்தருளி, 'புஷ்பமண்டபமான பெரியதிருமலையிலே திருவேங்கடமுடையானுக்கு உகப்பாகத் திருநந்தவனஞ்செய்து திருமாலை கட்டிச்சாத்துவார் ஆரேனும் உண்டோ?' என்று அருளிச்செய்ய, அவ்வளவிலே அநந்தாழ்வான் எழுந்திருந்து 'அடியேன் விடைகொள்ளுகிறேன்' என்று விண்ணப்பஞ்செய்து, தண்டன் ஸமர்ப்பித்துத் திருமலைக்கு எழுந்தருளித் திருவேங்கடமுடையானையும் திருவடித்தொழுது திருநந்தவனஞ்செய்து, அத்திருநந்தவனத்திற்கு 'இராமாநுசன்' என்று திருநாமஞ்சாத்தித் திருமாலை கட்டித் திருவேங்கடமுடையானுக்கு ஸமர்ப்பித்துக்கொண்டு எழுந்தருளியிருக்க, அத்தை உடையவர் கேட்டு உகந்தருளி, திருவாய்மொழி ப்ரபந்தார்த்தத்தைத் தீவ்ரமாக நடத்திச் சாத்தியருளினார்.

பின்பு உடையவரும் நம்பெருமாளை ஸேவித்து "அடியேன் பேரருளாளரையும், திருவேங்கடமுடையானையுந் திருவடிதொழுது மீண்டு விடைகொள்ளுகிறேன்" என்று விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும் 'போய்க் கடுகவருவது' என்று திருவுள்ளமாயருள, உடையவரும் முதலிகளுடனே புறப்பட்டு, திருக்கோவலூரில் ஆழ்வார்கள் நாயனாரையும் திருவடிதொழுது பெருமாள்கோயிலேற எழுந்தருளித் திருக்கச்சிநம்பி மடமே சென்று,

**"ஸ்ரீமத் காஞ்சீ முநிம் வந்தே, கமலாபதி நந்த₃நம் ।**
**வரத₃ாங்க்₄ரிஸத₃ா ஸங்க₃ரஸாயநபராயணம் ॥"**

[திருக்கச்சிநம்பி தனியன்]

[கமலாபதியின் (கமலையாரின் கணவரான வீரராகவரின்) பிள்ளையாய், பேரருளாளனுடைய திருவடிகளிலே எப்போதும் அன்பு செலுத்துவதாகிற போஷக் மருந்தைப் பருகுகின்றவரான திருக்கச்சிநம்பியை வணங்குகிறேன்.] என்று விண்ணப்பஞ்செய்துகொண்டு நம்பி திருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பித்து நிற்க, அவரும் க்ருபைபண்ணியருள, அவருடனேகூட எழுந்தருளி, அவர் புருஷகாரமாக ஸ்ரீ கோபுரராஜனையும் ஆனைகாத்தபெருமாளையும் ஸேவித்து உள்ளே புகுந்து

**"மஹாவராஹம் தே₃வேஶம் த்₃ரஷ்டுகாமோ ரஸாதலாத் ।**
**நிர்யயௌ யத்ர ப₄க₃வாநநந்த: பந்நகே₃ஶ்வர: ॥**
**தீர்த்தே₂தஸ்மிந் மஹாபுண்யே ஸித்₃த₄ஸங்க₄நிஷேவிதே ।**
**ஸமாஹ்ருதாநி தீர்த்த₂ாநி ஸர்வாணி முநிபி₄ஸ்தத₃ா ॥"**

[அயர்வறுமமரர்களதிபதியான வராஹப்பெருமாளை ஸேவிக்கவிரும்பி ஜ்ஞாநாதி₃கு₃ணபூர்ணராய், பாம்புகட்கரசரான அநந்தன் ரஸாதலத்திலிருந்து எதில் நின்று வெளிவந்தாரோ, ஸித்தர்கள் பலரால் ஸேவிக்கப்படும் அந்த அநந்த ஸரஸ்ஸாகிற பெரிய புண்ய தீர்த்தத்தில் அப்போது முனிவர்களாலே கங்கை முதலான எல்லா நதிகளின் தீர்த்தங்களுங்கொண்டுவந்து சேர்க்கப்பட்டன] என்று சொல்லப்பட்ட மாஹாத்ம்யத்தையுடைய திருவனந்த ஸரஸ்ஸிலே நீராடி, கேஶவாதி₃ த்₃வாத₃ஶ நாமங்களையுஞ் சாத்தியருளி எறிதிரைவையம் முற்றும்

நாத:பரதரம் தீர்த்தம் வைஷ்ணவாங்க்ரிஜலாச்சுபம் ।
தேஷாம் பாதோதகம் புண்யம் கங்காமபி புநாதி ஹி ॥"
[பராஶரவிஶிஷ்டபரமதர்மசாஸ்திரம் 10–15, 16]

[வைஷ்ணவர்களின் ஸ்ரீபாததீர்த்தத்தைக் காட்டிலும் மங்களமான தீர்த்தம் எங்குமில்லை; அதிபரிசுத்தமான அவர்களுடைய ஸ்ரீபாத தீர்த்தம் கங்கையையும் பரிசுத்தப்படுத்துகிறதன்றோ.] என்னும் வைபவமுடைய பாகவத ஸ்ரீபாததீர்த்தத்தையும் ஸ்வீகரித்தருளி,

"ஶுபாரம்பே த்விஜவர்யஶ்ச ஸர்வஸம்பச்சுபாவஹம் ।
ஸஹஸ்ரஶாகாத்யயநம் காரயேத்வைதிகோத்தம: ॥
அஶுபாந்தே விஶேஷேண த்ராமிடப்ரஹ்மஸம்ஹிதா ।
அத்யேதவ்யா த்விஜவரைராஶௌசாகவிநாஶிநீ ॥"
[ப்ரஹ்மாண்டபுராணத்திலிருப்பதாக ப்ரபந்நாம்ருதம் (58-32,33 34, 35)லும் எடுக்கப்பட்டது,]

[வைதிகர்களில் சிறந்த ஸ்ரீவைஷ்ணவன் சுபகார்யங்களின் ஆதியில் சிறந்த நற்செல்வங்களையும், மங்களங்களையும் அளிக்கும் திருவாய் மொழி ஸேவையை அந்தணர் தலைவர்களைக்கொண்டு செய்விக்கக் கடவன்; அஶுபகாரியங்களின் முடிவிலும் ஆஶௌசப்பாபத்தைப் போக்கடிக்கும் திராவிடவேதமானது அந்தணர் தலைவர்களால் ஸேவிக்கப்படவேண்டும்] என்றும்,

'வ்ருத்திகாவாஶௌசக்ஷயே சாந்தே த்ராமிடப்ரஹ்ம ஸம்ஹிதா ।
அத்யேதவ்யா த்விஜஶ்ரேஷ்டைராத்யா கீதஸஹஸ்ரகீ ॥'

[ப்ரஹ்மாண்டபுராணத்திலிருப்பதாக ப்ரபந்நாம்ருதம் (58-32, 33, 34, 35)லும் எடுக்கப்பட்டது] [குழந்தையின் பிறப்பினால் தீட்டு ஏற்படும்போது முதலிலும், சாவினால் தீட்டு ஏற்படும்போது முடிவிலும் முதன்மைபெற்ற திருவாய்மொழி ஆயிரமும் அந்தணர் தலைவர்களால் ஸேவிக்கப்படவேண்டியது] என்றும் ப்ரஹ்மாண்டபுராணத்திலே சொல்லுகிறபடியே திருவாய்மொழி ப்ரபந்தத்தை அநுஸந்தித்து, அநந்தரம் புஷ்பாஞ்ஜலிபண்ணிச் சாத்தியருளி,

"யதா துஷ்யதி தேவேஶோ மஹா பாகவதார்ச்சநாத் ।
ததா ந துஷ்யதே விஷ்ணுர் விதிவத்ஸ்வார்ச்சநாதபி ॥"
[பராஶரவிஶிஷ்டபரமதர்ம சாஸ்திரம் 10-7-8]

[மஹாபாகவதர்களை அர்ச்சிப்பதால் தேவர் தலைவனான விஷ்ணு உகப்பதுபோல், முறைப்படி தன்னை அர்ச்சிப்பதாலும் உகப்பதில்லை] என்று சொல்லுகையாலே ஸ்ரீவைஷ்ணவர்களையும் அமுது செய்யப்பண்ணி ஸத்கரித்தருளினார்.

கூரத்தாழ்வான் திருநக்ஷத்திரம் தையில் ஹஸ்தம், அவர்தனியன்

"ஸ்ரீவத்ஸசிஹ்நமிஶ்ரேப்₄யோ நம உக்திமதீ₄மஹே ।
யது₃க்தயஸ்த்ரயீகண்டே₂ யாந்தி மங்க₃ளஸூத்ரதாம் ॥"
[ர-ஸ்த 1-1]

[எவருடைய ஸ்ரீஸூக்திகள் வேதத்தின் கழுத்தில் கட்டப்பட்ட தாலிபோல் விளங்குகின்றனவோ, அத்தகைய ஸ்ரீவத்ஸாங்கமிஶ்ரரைக் குறித்து 'நம:' என்னும் சொல்லை ஓதுகிறோம்]

"ஸ்ரீமத்கூரகுலாதீ₄ஶம் ஸ்ரீவத்ஸாங்க முபாஸ்மஹே ।
அக்₃ர்யம் யதீந்த்₃ரஶிஷ்யாணும் ஆத்₃யம் வேதா₃ந்த
வேதி₃நாம் ॥" [கூரத்தாழ்வான் தனியன்]

[எம்பெருமானாரின் சிஷ்யர்களில் தலைவராய், வேதாந்தமறிந்தவர்களில் முதல்வராய், கூரகுலத்தின் தலைவரான ஸ்ரீவத்ஸாங்கர் என்னும் கூரத்தாழ்வானை உபாஸிக்கிறோம்.]

அதின்மற்றைநாள், உடையவர் பட்டரை அழைத்துக்கொண்டு நம்பெருமாளை ஸேவிக்க எழுந்தருளி அழகிய மணவாளன் திருமண்டபத்திலே தண்டன் ஸமர்ப்பித்து பட்டரைக் கையைப் பிடித்துக் கொண்டுபோய்ப் பெரியபெருமாள் திருவடிகளிலே காட்டிக் கொடுக்க, பெருமாளும் மீளவும் மஞ்சள் நீர் குடித்து பட்டரை விஶேஷித்துப் புத்ரஸ்வீகாரம் பண்ணியருளி அர்ச்சகமுகே₂ந திருவாய் மலர்ந்து 'ஆழ்வானை யிழந்தோமே என்று வ்யாகுலப் படாதே, நம்மை ஆழ்வானாக நினைத்திரும்' என்று அருளிச்செய்தருள, இத்தைக் கண்டு உடையவரும் ஸந்தோஷித்துப் பெருமாளைக் குறித்து 'தேவரீர் இவர்க்கு ஆயுஸ்ஸை ப்ரஸாதித்தருளும்; அடியேன் வித்யைகளை அப்யஸிப்பிக்கிறேன்' என்று விண்ணப்பஞ்செய்ய, பெருமாளும் வாய் திறவாதே தீர்த்தப்ரஸாதமும் ப்ரஸாதித்து விடை கொடுத்தருள, உடையவரும் பட்டரையழைத்துக்கொண்டு மீண்டு தம் மடமேயெழுந்தருளி

எம்பாரைப் பார்த்து 'இவரை நம் தர்சநப்ரவர்த்தகராம்படி ஶாஸ்த்ராப்யாஸம் பண்ணுவியும்' என்று அவர் கையிலே காட்டிக் கொடுத்து முதலிகளுக்கு பகவத்விஷயம் அருளிச்செய்யாநின்று கொண்டு எழுந்தருளியிருந்தார்.

இப்படி யிருக்கிற உடையவர் ப்ரபாவத்தைப் பெரிய பெருமாளும், திருவேங்கடமுடையானும், பேரருளாளரும், திருநாராயணப்பெருமாளும், அழகரும், திருக்குறுங்குடி நம்பியும், நம்மாழ்வாரும், ஸ்ரீமந்நாதமுனிகளும், ஆளவந்தாரும், பெரியநம்பியும், திருக்கோட்டியூர் நம்பியும், திருமலை நம்பியும், திருமாலையாண்டானும், ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையரும், மற்றும் ஸ்ரீபாதத்து முதலிகளும், ப்ரஹ்மரக்ஷஸ்ஸும், ஊமையும் வெளியிட்டார்கள்,

பெரியபெருமாள் வெளியிட்டபடி எங்ஙனே என்னில்:—திருப்பவளச் செவ்வாய் திறந்து 'உபயவிபூத்யைஶ்வர்யத்தையும் உமக்கும் உம்முடையார்க்குத் தந்தோம்' என்று அருளிச் செய்கையாலும்;

அப்பன் வெளியிட்டபடி எங்ஙனேயென்னில்;— 'உமக்கும் உம்முடையார்க்கும் உபயவிபூத்யைஶ்வர்யத்தையும் தந்தோமென்று நம் தெற்கு வீட்டிலே சொன்னோமே' என்று திருப்பவளவாய்திறந்து அருளிச் செய்கையாலும்; உடையவர் திருமலைக்கு எழுந்தருளும்போது தாதிவிக்ரயம் பண்ணுமவளான தும்பையூர்க் கொண்டியென்பாளொரு கோபாங்கனை வந்து க்ரயத்ரவ்யார்த்தமாக உடையவரையும் முதலிகளையும் ஸேவித்து நிற்க, உடையவர் அவளுக்குத் தளிகை ப்ரஸாதம் ப்ரஸாதிக்கச் சொல்லிக் கிடாம்பியாச்சானை நியமித்தருளி அவரும் அப்படியே செய்தருள. அவர் ப்ரஸாதித்த ஸ்ரீபாததீர்த்த தளிகைப்ரஸாதங்களாலே ஸம்யக்ஜ்ஞாநோதயமுண்டாய் 'அடியேனுக்கு ததிமூல்யம் தரவேண்டா; மோக்ஷம் தரவேணும்' என்று பிரார்த்திக்க, உடையவர் 'அதற்குத் திருவேங்கடமுடையான் கடவர்' என்ன, அவளும் 'அதற்கு தேவரீர் ஒரு சிறுமுறி தரவேணும்' என்ன, உடையவரும் உகந்துதரப் பெற்றுத் திருமலையேறி த்வரித்து வரக்கண்டு திருவேங்கடவர் எதிரே அச்சிறுமுறியை வாங்கி வாசித்துக்கொண்டு திருநாடு தந்தருளுகையாலும்;

பேரருளாளர் வெளியிட்டபடி எங்ஙனேயென்னில்:— அருளாளப் பெருமாளெம்பெருமானுருடனே தர்க்கித்தபோது உத்தரஞ் சொல்லமாட்டாமல் பேரருளாளர்க்கு விண்ணப்பஞ்செய்ய. அப்போது 'இன்னபடி உத்தரஞ் சொல்லும்' என்று * செங்கனிவாய் முறுவல்தோன்ற அருளிச்செய்கையாலும்; யாதவப்ரகாசனுக்கு ஸ்வப்நமுகே₂ந 'நம் இராமானுசனை ஒரு ப்ரதக்ஷிணம்பண்ணி த்ரிதண்டி ஸந்யாஸியாவாய்' என்று அருளிச்செய்கையாலும்;

திருநாராயணப் பெருமாள் வெளியிட்டபடி எங்ஙனேயென்னில்:—தொண்டனூரிலே ஸ்வப்நங்காட்டியருளி அழைத்துக் கொண்டுபோய் அவருக்கு ப்ரஸந்நராயருளுகையாலும், 'என்னுடைய செல்வப்பிள்ளையன்றோ!' என்று எடுத்தணைக்கும்படி யதிராஜகுமாரரான ஸௌசீல்யத்தாலும்;

அழகர் வெளியிட்டபடி எங்ஙனேயென்னில்:—ஒருநாள் திருவோலக்கத்திலே 'நம் இராமானுசனடியார்க்கு அருள்பாடு' என்று திருவுள்ளமாயருள, 'நாயன்தே' என்று ஆசார்யர்களெல்லாரும் எழுந்தருளித் திருவடிகளிலே ஸேவித்து நிற்க. பெரியநம்பிவழியிற் சிலர் வாராமலிருக்க. அழகரும் 'அதுவென்? நீங்கள் நாம் அழைக்க வராதிருப்பானேன்?' என்று கேட்டருள. அவர்களும் "'இராமானுசனடியார்க்கு அருள்பாடு' என்று தேவரீர் திருவுள்ளமாயருளுகையாலே. அவர் எங்களுக்கு ஶிஷ்யரென்று வாராதிருந்தோம்" என்று விண்ணப்பஞ்செய்ய அழகரும் 'த₃ஶரத₂ வஸுதே₃வாதி₃கள் நம்மைப் புத்ரப்ரதிபத்தி பண்ணிருப்போலேயிருந்தது நீங்கள் இராமானுசனை ஶிஷ்யப்ரதிபத்தி பண்ணினது' என்றும், பின்பு ஒருநாள் கிடாம்பியாச்சானை அருளப்பாடிட்டு 'ஒன்றுசொல்லாய்' என்று திருவுள்ளமாயருள, அவரும்

" அபராத₄ஸஹஸ்ரபா₄ஜநம் ... [ஸ்தோ-ர 48]

[துக்கங்களைப்போக்கும் எம்பிரானே! கணக்கற்ற குற்றங்களுக்கு இருப்பிடமாகவும், பயங்கரமான ஸம்ஸாரமாகிய கடலினுள் விழுந்தவனுகவும், (உன்னையொழிய வேறு) கதியற்றவனுகவும், 'ஶரணாக₃தன்' என்று சொல்லிக்கொள்ளுகிறவனுகவுமிருக்கிற அடியேனை (உன்) அருளினாலேயே உன்னுடையவனுகக்கொள்வாயாக]

என்று தொடங்கி "அகூதிம்" என்று சொல்ல, அழகரும் "நம் இராமாநுசனை யுடையனுயிருந்து 'அகூதிம்' என்று சொல்லப் பெறுவுப்" என்றும் திருவுள்ளமாயருளுகையாலும்;

திருக்குறுங்குடி நம்பி வெளியிட்டபடி எங்ஙனே யென்னில்:— உடையவரும் முதலிகளும் நம்பியை ஸேவிக்க எழுந்தருளினவளவிலே திருக்குறுங்குடி நம்பியும் திருவோலக்கமாக எழுந்தருளியிருந்து உடையவரை அருளப்பாடிட்டு,

"பஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி தவ சார்ஜுந"
[கீதை 4-5]

[அர்ஜுநா! உனக்குப்போலே எனக்கும் பல பிறப்புக்கள் கடந்துவிட்டன. (ஆயினும் யான் அவற்றை அறிவேன்; நீ அறியமாட்டாய்,)] என்கிறபடியே இத்தனை ஜந்மம் பிறந்தோமென்று தெரியாது; அஜ்ஜந்மங்களிலே ஒருவரும் நமக்கு அகப்படாமல்

"ஆஸுரீம் யோநிமாபந்நா மூடா ஜந்மநி ஜந்மநி ।
மாமப்ராப்யைவ கௌந்தேய ததோ யாந்த்யதமாம் கதிம்॥"
[கீதை 16-20]

[அர்ஜுநா! அஸுரஸ்வபாவமுள்ள ஜன்மத்தை அடைந்து, ஜந்மந்தோறும் மூடர்களாய், உன்னை அடையாமலே அதிலும் கீழான கதிக்குப் போகிறார்கள்.] என்கிறபடியே ஆஸுரப்ரக்ருதிகளாய்ப் பிறந்து, பிறந்த ஜந்மங்கள்தோறும் மூடராய் நம்மை வந்து கிட்டாதே அதமமான கதியை யடைந்தார்கள்; இவ்வாத்மாக்களெல்லாரும் உமக்கு அகப்பட்ட விரகை நமக்குச் சொல்லவேணும்— என்று திருவுள்ளமாக, உடையவரும் 'தேவரீர் கேட்கும் க்ரமத்திலே கேட்கில் சொல்லுகிறேன்' என்ன, நம்பியும் திவ்யஸிம்ஹாஸநத்தினின்றும் இறங்கியருளி நிலத்திலே ஒரு ரத்நகம்பளத்திலே எழுந்தருளியிருந்து இவருக்கு ஒரு திவ்யஸிம்ஹாஸநத்தை இட்டு 'இனிச் சொல்லும்' என்ன. உடையவரும் அவ்வாஸநத்திலே பெரியநம்பி ஆளவந்தார் எழுந்தருளியிருக்கிறார்களாக பாவித்துக்கொண்டு அவர் திருச்செவியிலே ஹிதத்தை விண்ணப்பஞ்செய்ய அன்று தொடங்கி நம்பியும் 'நம் இராமாநுசனுடையோம்' என்று அருளிச்செய்கையாலும்:

நம்மாழ்வார் வெளியிட்டபடி எங்ஙனே யென்னில்:— லோகத்தைத் திருத்துவதாக எம்பெருமானோடே மார்தட்டி 'நின்கண் வேட்கை யெழுவிப்பனே' என்றவர் தாமே 'ஏபாவம் பரமே!' என்று க்லேசித்து. 'அகலிடத்தை ஆராய்ந்து அது திருத்தலாவதே!'— 'ஈச்வரன் அவதரித்துத் திருத்த வொண்ணாத லோகத்தை நாமோ திருத்தக்கடவோம்?' என்று கைவாங்கி, 'யானுமென்னெஞ்சமிசைந்தொழிந்தோம்' என்று தாமும் தம் திருவுள்ளமுமேயாய், த்ரிகாலஜ்ஞராகையாலே 'கலியுங்கெடும் கண்டுகொண்மின்' என்று உடையவர் திருவவதாரத்தைக் குறித்து அருளிச் செய்கையாலும்.

ஸ்ரீமந்நாதமுனிகள் வெளியிட்டபடி எங்ஙனேயென்னில்:— "குளப்படியிலே தேங்கினால் குருவிகுடித்துப்போம்; வீரநாராயணபுரத்தேரியிலே தேங்கினால் நாடுவிளையும்" என்று அருளிச்செய்தது உடையவர் திருவவதாரத்தைக் குறித்து என்னுமிடம், எம்பார் "பெரிய பெருமாளாகிற பெருங்கடலிலே ஆழ்வாராகிற காளமேகம் படிந்து தத்கல்யாண குணாம்ருதௌகத்தைப் பருகிவந்து நாதமுனிகளாகிற மஹாமேருவிலே வர்ஷித்து உய்யக்கொண்டார் மணக்கால் நம்பியாகிற அருவிகளாலே யிறங்கி ஆளவந்தாராகிற பேராற்றிலே கூடி (பெரியநம்பியாகிற வாய்க்காலாலே புறப்பட்டு)* எம்பெருமானாராகிற பெரிய ஏரியிலே வந்து தேங்கி, நம் ஆசார்யர்களாகிற மதகுகளாலே புறப்பட்டு இஸ்ஸம்ஸாரமாகிற கழனிக்கு ஏறிப் பாய்கிறது' என்று அருளிச் செய்தவிடத்தில் ஓத்திருக்கையாலும்;

ஆளவந்தார் வெளியிட்டபடி எங்ஙனேயென்னில் :— 'இம்மஹாபுருஷன் இத்தர்சநத்திலே புகுந்தானாகிலோ!' என்றும், 'இவன் முதல்வன் ஆம்' என்றும் அருளிச்செய்கையாலும்; சரமதசையில் *(சரமவிக்ரஹ ஸேவையிலே குஞ்சிதஸ்வாங்குலித்ரயமோசநத்தாலும்;)

பெரியநம்பி வெளியிட்டபடி எங்ஙனேயென்னில் :—அத்துழாயும் தாமுமாக எழுந்தருளியிருக்கச்செய்தே. உடையவரும் முதலிகளுமாக எழுந்தருள, பெரியநம்பி எழுந்திருந்து தண்டனிட, 'இதுவென்! உடையவர் உமக்கு சிஷ்யரன்றோ? இப்படி செய்யலாமோ?' என்று அத்துழாய் விண்ணப்பஞ்செய்ய, நம்பியும்

* ( ) சில பிரதிகளில் இல்லை.

'அத் தானுக்குத் தக்க தலைகாண் இது' என்றும்; ஒருநாள் உடையவரும் முதலிகளுமாக நீராடி எழுந்தருளும்போது பெரிய நம்பி எதிரே கண்டு தானுந்தடக்கையும் கூப்பித் தண்டனிட, உடையவரும் அஞ்ஜலித்து க்ருபை செய்து எழுந்தருள, இத்தை முதலிகள் கண்டு 'இதுவென்? சீயா!' என்ன. உடையவரும் 'இப்போது அவரிஷ்டம் அநுவர்த்திக்கையன்றோ நமக்குள்ளது?' என்ன, முதலிகளும் பெரியநம்பி ஸந்நிதியில் சென்று 'உடையவரை நீர் ஸாஷ்டாங்க₃ ப்ரணாமம் பண்ணுகைக்கு அடியென்?' என்று கேட்க, நம்பியும் 'ஆளவந்தாரும் முதலிகளுமென்று இருந்தேன்' என்ன, அவர்களும் 'அதுக்கு நிதா₃னமென்?' என்ன, நம்பியும் 'ஆளவந்தாருக்குப் பின்பு அகி₂லார்த்த₂ ஸ்தி₂தி பூர்த்தியுள்ளது இவர்க்கேயாகையாலே, ஸத₃ாசார்ய ஸந்நிதி₄யோடு ஸச்சி₂ஷ்ய ஸந்நிதி₄யோடு வாசியில்லாமையாலே ஸேவித்தேன்' என்றும் அருளிச்செய்து, தம் குமாரர் புண்ட₃ரீகாக்ஷரையும் உடையவர் திருவடிகளிலே ஆச்ரயிப்பிக்கையாலும்.

திருக்கோட்டியூர்நம்பி வெளியிட்டபடி எங்ஙனே யென்னில்:— தாம் திருமந்த்ரார்த்த₂ம் ப்ரஸாதிக்கும்போது 'ஆருக்கும் சொல்லாதே கொள்ளும்' என்று ஆஜ்ஞாபித்தருளிச்செய்ய; இவரும் அதைத் தெற்காழ்வார் திருவோலக்கத்திலே தா₄ளித₃ாநமாக ஸர்வர்க்கும் அருளிச்செய்ய, நம்பியும் அத்தைக்கேட்டுக் குபிதராய் உடையவரையழைத்து 'ஆசார்யாஜ்ஞாதிலங்க₄நத்துக்குப் ப₂லம் ஏது?' என்ன, உடையவரும் 'நரகமே பலம்' என்ன, நம்பியும் 'ஆகில் அறிந்திருந்தும் செய்வானென்?' என்ன, இவரும் 'அடியேனொருவனுமன்றோ நரகம்புகுவது; தேவரீர் ஸம்பந்தத்தாலே இவ்வாத்மாக்களெல்லாம் உஜ்ஜீவிக்குமென்று சொன்னேன்' என்று விண்ணப்பஞ்செய்ய, நம்பியும் போர ப்ரீதராய், 'எம்பெருமானரே! வாரும்' என்று எடுத்து அணைத்துக்கொண்டு 'இந்தப் பரஸம்ருத்₃தி₄ நமக்கு இல்லையாய்விட்டதே, அவரோ நீர்!' என்று அருளிச்செய்து 'இன்றுமுதல் எம்பெருமானர் த₃ர்ஶநமென்னுங்கோள்' என்று சொல்லி, தம் குமாரர் தெற்காழ்வாரையும் அவர் திருவடிகளிலே ஆச்ரயிப்பிக்கையாலும்.

திருமலைநம்பி வெளியிட்டபடி எங்ஙனேயென்னில்:— உடையவர் திருமலைக்கு எழுந்தருளும்போது திருப்பரியட்டப் பாறையளவாக எதிரே சென்று தீர்த்தப்ரஸாதம் ப்ரஸாதிக்க, உடையவரும் ஸ்வீகரித்தருளி, நம்பியைப்பார்த்து, 'தேவரீர் எழுந்தருளவேணுமோ? வேறே சிறியார்களில்லையோ?' என்ன. நம்பியும் 'நாலுதிருவீதியிலும் ஆராய்ந்த விடத்தில் என்னிலும் சிறியாரைக் கண்டிலேன்' என்கையாலும்; எம்பாரை உடையவருக்கு உதக பூர்வகமாகக் கொடுக்கையாலும்; தம் குமாரர் இராமாநுசனையும் பிள்ளை திருமலை நம்பியையும் அவர் திருவடிகளிலே ஆஶ்ரயிப்பிக்கையாலும்.

திருமாலையாண்டான் வெளியிட்டபடி எங்ஙனேயென்னில்— அவர்தம் பக்கல் திருவாய்மொழிக்கு அர்த்தங்கேளாநிற்க. "அறியாக்காலத்துள்ளே" என்கிற பாட்டுக்கு இவர் உபகார ஸ்ம்ருதிபரமாக விஶேஷார்த்தம் அருளிச்செய்ய, ஆண்டானும் 'இது விஶ்வாமித்ர ஸ்ருஷ்டி' என்று அருளிச்செய்கை தவிர்ந்திருக்க; பின்பு திருக்கோட்டியூர்நம்பி எழுந்தருளி ஆண்டானை யழைத்து 'ஸாந்தீபநி பக்கலிலே க்ருஷ்ணன் அத்யயநம் பண்ணினாற் போலே காணும் இவர் உம்முடைய பக்கல் திருவாய்மொழி கேட்கிறது; இவ்விரண்டர்த்தமும் ஆளவந்தார் அருளிச்செய்தார்' காணும் என்ன, உடையவரும் பின்னையும் ஒரு அர்த்தப்ரஸ்தாவத்திலே ஆளவந்தார் இப்படி அருளிச்செய்யார் என்ன, ஆண்டானும் 'நீர் ஆளவந்தாரைக் கண்ணாலும் காணாதிருக்க, இப்படியருளிச் செய்யாரென்கைக்கு ஹேதுவென்? என்ன, இவரும் 'நான் ஆளவந்தாருக்கு ஏகலவ்யனன்றோ?' என்ன, ஆண்டான் தண்டனிட்டு 'இதுவும் ஒரு திருவவதாரமோ?' என்று அருளிச்செய்து, தம் குமாரர் சுந்தரத்தோளுடையாரை உடையவர் திருவடிகளிலே ஆஶ்ரயிப்பிக்கையாலும்.

திருவரங்கப்பெருமாளரையர் வெளியிட்டபடி எங்ஙனேயென்னில்:— தம்பக்கல் உடையவர் ஆறுமாஸம் ஸேவித்திருந்து பாங்காக மஞ்சட்காப்பு அரைத்துச்சாத்தி நீராடப் பண்ணுவித்தருள, திருவரங்கப்பெருமாளரையரும் ப்ரீதராய் 'என்னுடைய ஸர்வஸ்வத்தையும் கொள்ளைகொள்ளவோ நீர் இப்படி செய்தது?' என்று அருளிச்செய்து, பஞ்சமோபாயநிஷ்டையை அருளிச்செய்து, தம் குமாரர் திருவாய்மொழியரையரையும் உடையவர் திருவடிகளிலே ஆஶ்ரயிப்பிக்கையாலும்.

வடுகநம்பி, 'ஆசார்யபத₃மென்று தனியே ஒருபதமுண்டு; அதுவுள்ளது எம்பெருமானார்க்கேயாகையாலே, எல்லார்க்கும் எம்பெருமானார் திருவடிகளொழிய வேறு உபாயோபேயமில்லை; அவர் திருவடிகளே தஞ்சமென்றிருங்கோள்' என்று அருளிச் செய்தருளுவர்.

கணியனூர்ச்சிறியாச்சான், ஸசேலஸ்நாந பூர்வகமாக ஆர்த்தியோடே உபஸந்நராய் தி₃வ்யாஜ்ஞையிட்டு 'எம்பெருமானார் திருவடிகளொழிய வேறு தஞ்சமில்லை' என்றருளினார்; /(எங்ஙனே யென்னில்,

**''ஸத்யம் ஸத்யம் புநஸ் ஸத்யம் யதிராஜோ ஜக₃த்₃கு₃ரு: |**
**ஸ ஏவ ஸர்வலோகாநாமுத்₃த₄ர்த்தா நாத்ர ஸம்ஶய: ||''**

[முக்காலும் சத்தியம் செய்து கூறுகிறேன்! யதிராஜரே உலக குருவாவார். எல்லாவுலகையும் உய்விக்கச் செய்யவல்லவர் அவரே] என்று இவர் தாமே பெரியபெருமாள் திருவோலக்கத்திலே ஸ்ரீஶடகோபனைத் தம் திருமுடியிலே நிறுத்திக்கொண்டு அருளிச் செய்தருளினார்.)

அருளாளப் பெருமாளெம்பெருமானார் தம் திருவடிகளிலே ஆஶ்ரயித்த எச்சான் அநந்தாழ்வான் தொண்டனூர்நம்பி மருதூர் நம்பி இவர்களுக்கு ஹிதோபதேஶஞ்செய்து 'உடையவர் குருவியின் கழுத்திலே *பனங்காயைக் கட்டினாற்போலே செய்தருளினார்; நீங்கள் எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்றிருங்கோள்' என்று அருளிச்செய்தருளினார்.

பிள்ளைப்பிள்ளையாழ்வான் ஆழ்வான் திருவடிகளிலே ஆஶ்ரயித்தவளவில், ஆழ்வான் 'ஆசார்யத₃க்ஷிணையாக த்ரிவித₄கரணங்களையும் பரிஹரித்துக்கொண்டு ப₄ாக₃வதர்களிடத்தே ஆநுகூல்யைகரஸராய்ப்போரும்' என்று அருளிச் செய்ய; அவரும் 'இது பரிஹரித்து முடியாது' என்று பயப்பட்டு முசித்துக்கிடக்க, ஆழ்வான் அவரையழைத்து, 'எதிரியைக்குத்தினால் எதிரிகூடக் குத்தும்; ரஜத₃ண்ட₃மும் வரும்; ஆகையாலே, காயிகாபாரத₄ம் செய்யக்கூடாது.;

/() பல பிரதிகளிலில்லை. * (பா) கிண்டுக்கல்லை.

''யதீ₃ச்ச₂ஸி வஸீ₂கர்த்தும் ஜக₃தே₃கேந கர்மணா |
பராபவாத₃ஸஸ்யேப்₄யோ கா₃ஸ்₂சரந்தீர் நிவாரய || ''

[உலகனைத்தையும் ஒரே செயலால் வசப்படுத்த விரும்பினையாகில், பிறர் குற்றம் கூறுவதாகிற பயிரில் மேய்கின்ற இயல்வையுடைய மாடுகளாகிற உன் சொற்களை அப்படி மேயாதபடி தடுப்பாயாக] என்கிறபடியே பராபவாத₃ஞ் சொல்லுகிற வாக்கு ஒன்றையும் பரிஹரித்துக்கொள்ளும்' என்று அருளிச்செய்து. 'இனி மநஸ் ஸாலே நினைத்தீராகில் அநுதபித்து. இது எம்பெருமான் திருவுள் ளத்தே படாதபடி எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்றிரும்' என்று அருளிச்செய்தருளினார்.

மிளகாழ்வான். முதலியாண்டானை 'என்னோடு தர்க்கிக்க வாரும்' என்ன. முதலியாண்டானும் 'நீர் தோற்றீராகில் செய்வ தென்?' என்ன. மிளகாழ்வானும் 'நான் தோற்றேனாகில் உம்மை என்தோளிலே சுமந்துகொண்டு போகிறேன்' என்ன. அநந்தரம் உப₄யரும் தர்க்கிக்க. மிளகாழ்வான் தோற்று முதலியாண்டானை ஸ்ரீபாத₃ந்தாங்கிக்கொண்டு சுற்றிடம்போய் 'இனி அடியேனை இரங்கியருள வேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய. ஆண்டானும் உடையவர் திருவடிகளிலே காட்டிக்கொடுத்து ஆஸ்₂ரயிப்பித்தருளி 'எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்றிரும்' என்று அருளிச் செய்தருளினார்.

எம்பார், பட்டரைப்பார்த்து ''நம்பெருமாள் நம்மைப் புத்ரஸ்வீ காரம் பண்ணியருளினார். நாம் ஆழ்வானுடைய பிள்ளை; அகி₂ல ஸா₂ஸ்த்ரங்களையும் அதி₄கரித்தோம்' என்கிற மேன்மையை நினைத்து இருமாந்திராதே, எம்பெருமானார் திருவடிகளே தஞ்ச மென்றிரும்'' என்று அருளிச்செய்தருளினார்.

பட்டர் நஞ்சீயரைப்பார்த்து '' 'வேதா₃ந்தியென்கிற பேறை யுடையோம்: நம்முடையபக்கல் ஆஸ்₂ரயித்தோம்; நமக்கு ப₃ஹு த்₃ரவ்யத்தை ஆசார்ய த₃க்ஷிணையாகத் தந்தோம்' என்று இருமாந் திராதே, 'எம்பெருமானார் திருவடிகளே தஞ்சம்' என்றிரும் ''என்று அருளிச்செய்தருளினார்.

நஞ்சீயர் நம்பிள்ளையைப் பார்த்து "'லோகாசார்யரென்கிற பேரையுடையோம்; திருவாய்மொழிக்குப் பொருள் சொல்ல வல்லோம்' என்று இறுமாந்திராதே 'எம்பெருமானார் திருவடிகளே தஞ்சம்' என்றிரும்" என்று அருளிச்செய்தருளினார்.

நம்பிள்ளை * சிவக்கரைப்பிள்ளையைத் திருக்கையைப் பிடித்துக் கொண்டு எழுந்தருளாநிற்க, ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் நம்பிள்ளை திருமாளிகைத்திருவிடைகழியிலே கண்வளராநிற்க, சிவக்கரைப் பிள்ளை அவரை 'காலைமுடக்கும்' என்ன. நம்பிள்ளையும் "மயர்வறமதிநல மருளப்பெற்ற ஆழ்வார் 'திருத்தாள்' என்று அருளிச்செய்ய நீரோ காலென்பீர்?" என்று அவர் கையை விட்டருள, அவரும் சிவக்கரையிலே போயிருந்து பின்பு ரோகார்த்தராய் 'இரண்டாற்றுக்கு நடுவே நின்று கவணிலே கல்லைவைத்து வீசினாப் போலே தள்ளிவிட்டருளிற்றே; இனி அடியேனுக்குக் கதியென்?' என்று பிள்ளைக்கு விண்ணப்பஞ்செய்து வரக்காட்டியருள, நம்பிள்ளையும் 'உமக்கு ஒரு குறையுமில்லை: எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்றிருப்பது' என்று அருளிச்செய்து போகவிட்டு அழைத்து க்ருபைசெய்தருளினார்.

திருக்குருகைப்பிரான் பிள்ளான், சிறுப்புத்தூரிலே எழுந்தருளியிருக்கச்செய்தே, சோமாசியாண்டான் பிள்ளான் ஸ்ரீ பாதத்திலே மூன்றுஉரு ஸ்ரீபாஷ்யம் வாசித்தருளி மீண்டு எழுந்தருளும்போது சோமாசியாண்டான் அநுவர்த்தித்து 'அடியேனிருக்கிற தேசம் இதுவாயிருந்தது; அடியேனுக்குத் தஞ்சமாயிருப்பதொன்று அருளிச்செய்யவேணும்' என்ன. பிள்ளானும் ஆண்டானைக்குறித்து 'நீர் பாட்ட ப்ரபாகரமீமாம்ஸை இவை இத்தனைக்கும் பொருள் சொல்லவல்ல கர்த்தா; ஸ்ரீபாஷ்யத்துக்கு ப்ரவர்த்தகர் என்று மேன்மை பாராட்டித் திரியாதே. எம்பெருமானார் திருவடிகளே சரணமென்றிரும்' என்று அருளினார்.

கோமடத்துப்பிள்ளான், தம் ஸ்ரீபாதத்தில் காக்கைப்பாடியாச்சான் பிள்ளை மூன்று உரு ஸ்ரீபாஷ்யம் வாசித்து அத்தால் மிகவும் மேன்மையுடையவராயிருக்குமது கண்டு, இவர்க்கு இம்முகத்தாலே அபசாரம் வருமென்று அஞ்சி 'எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்றிரும்' என்று அருளிச்செய்தருளினார்.

---

* 'சிவக்கரை' என்றும் சில ப்ரதிகளில் காண்கிறது.

எங்களாழ்வான், காக்கைப்பாடியாச்சான்பிள்ளையைப் பார்த்து 'உம்மைப் பெருமாள் முனிந்தருளினபோது என் நினைத்திருந்தீர்?' என்று கேட்டருள, அவரும் 'எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்றிருந்தேன்' என்று விண்ணப்பஞ் செய்தார்.

நடாதூரம்மாள் ஸ்ரீபாதத்திலே பத்துப் பன்னிரண்டு திருநாமம் ஸ்ரீபாஷ்யம் வாசிக்கிறபோது, அம்மாள், அவர்களுக்கு ஸ்ரீபாஷ்யத்தை உபந்யஸித்துக் காட்டியருள, அவர்களும் 'பக்தி துஷ்கரமாக இருந்தது' என்ன, பின்பு அவரும் ப்ரபத்த்யுபாயத்தை அருளிச்செய்து காட்டியருள. 'பக்தியிலும் ப்ரபத்திதான் அரிதாயிருந்தது' என்று அவர்கள் விண்ணப்பஞ்செய்ய, 'ஆகில், எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்று விஸ்வஸித்து உஜ்ஜீவியுங்கோள்' என்றருளினார்.

நடுவிலாழ்வான் திருநாராயணபுரத்திலேயிருந்து ஸ்ரீ பாஷ்யம் வாசிப்பிக்கிற காலத்திலே, வங்கிப்புரத்தாய்ச்சி சொட்டையம்மாளுள்ளிட்டார் ஸ்ரீபாஷ்யத்தைக்கேட்டு, 'இது அரிதாயிருந்தது' என்ன, ஆகில், 'இது அருளிச்செய்தருளின எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்றிருங்கோள்' என்றருளினார்,

ஸ்ரீவேதவ்யாஸபட்டர், திருநாராயணபுரத்திலே எம்பெருமானார் திருமுன்பே கோஷ்டிபண்ணி ஸ்ரீபாஷ்யத்தை உபந்யஸிக்க, 'இது கங்காப்ரவாஹமாயிருந்தது; எங்களால் அவகாஹிக்கப்போகாது' என்று ஐம்பத்திருவர் விண்ணப்பஞ் செய்ய, பட்டரும் 'ஆகில் உங்கள் "குலதெய்வமான எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்று உஜ்ஜீவியுங்கோள்' என்றருளினார்.

நடுவில் திருவீதிப்பிள்ளை, வெள்ளைக்குளத்து ஆனைகாத்த சிங்கர் முன்பே கோஷ்டி பண்ணி ஸ்ரீபாஷ்யம் உபந்யஸிக்க, தம் ஶிஷ்யரான இளையவழகியார் எழுந்திருந்து 'இது கங்காப்ரவாஹமாயிருந்தது; என்னால் அவகாஹிக்கப்போகாது' என்று விண்ணப்பஞ்செய்ய, 'ஆகில், எம்பெருமானார் திருவடிகளே ஶரணமென்றிரும்' என்று அருளிச்செய்தருளினார்.

வடுகநம்பி, 'எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், நம்பெருமாள் திருவடிகளே ஶரணம்' என்று இரண்டையும் சேர அநு

ஸந்திக்கும் ஆழ்வானையும், ஆண்டானையும் 'இருகரையர்' என்பர், வடுகநம்பி எம்பெருமானர் திருவடிகளே ஶரண மென்னுமாபோலே யும், பட்டர் அழகியமணவாளப்பெருமாள் திருவடிகளே ஶரணமென் னுமாபோலேயும். அநந்தாழ்வான் திருவேங்கடமுடையான் திரு வடிகளே ஶரணமென்னுமாபோலேயும். திருக்கச்சிநம்பி பேரரு ளாளர் திருவடிகளே ஶரணமென்னுமாபோலேயும். எம்பெருமானர் செல்வப்பிள்ளை திருவடிகளே ஶரணமென்னுமாபோலேயும் ஒரு வர்க்கும் இசைந்திராது.

ப்3ரஹ்மரக்ஷஸ்ஸு வெளியிட்டபடி எங்ஙனே யென்னில்:— யாத3வப்ரகாஶனுக்கு உடையவரைக்காட்டி 'இவர் நித்யஸூரி களில் தலைவர்' என்று சொல்லுகையாலே.

ஊமை வெளியிட்டபடி எங்ஙனேயென்னில்:— "பெருமாள் கோயிலிலே பூ4கவத ஜந்மத்தில் பிறந்தானொருபிள்ளை ஐந்தாறு வயஸ்ஸளவாக ஊமையாயிருந்து, பின்பு இரண்டு ஸம்வத்ஸரம் காணுதிருந்து, பின்பு எல்லாருங்காணவந்து வார்த்தைசொல்ல வல்லனுக. இவ்வாஶ்சர்யத்தைக்கண்டு எல்லாரும் திரளாக விருந்து ஊமையைப் பார்த்து 'நீ இத்தனைநாளும் எங்கேறப் போனாய்?' என்று கேட்க, அவனும் 'நான் க்ஷீராப்3தி4க்குப் போனேன்' என்ன. இவர்களும் 'அங்கு விஶேஷமென்?' என்று கேட்க. 'ஶ்ரீஸேநாபதியாழ்வான் உடையவராய் வந்து அவதரித் தருளினுரென்று ஒருவிஶேஷம்' என்ற அநந்தரம் அவனைக் கண்ட தில்லை" என்று ஶ்ரீப4க3வத்ஸேநாபதி சீயர் அருளிச் செய்கையாலே

இப்படி இவர் ப்ரப4ாவத்தை எல்லாரும் ப்ரகாசிப்பித்தார்கள்.

ஶ்ரீமந்நாத2முநிகள் தொடக்கமான ஆசார்யர்களிற் காட்டில் இவருக்கு ப்ராத4ாந்யங்கொள்ளும்படி எங்ஙனேயென்னில்:— ப4க3வத3வதாரங்களெல்லாம் ஒத்திருக்கச்செய்தே ஶ்ரீராமக்ருஷ் ணாத்3யவதாரங்களுக்கு ப்ராத4ாந்ய முண்டானாற்போலேயும், திவ்ய தேஶங்களெல்லாம் ஒத்திருக்கச்செய்தே கோயில் திருமலை பெரு மாள்கோயில் திருநாராயணபுரங்களுக்கு ப்ராத4ாந்ய முண்டானாற் போலேயும். ரிஷிகளெல்லாரிலும் வைத்துக்கொண்டு வ்யாஸ பராஶர ஶுக ஶௌநக நாரத3ாதி3களுக்கு ப்ராத4ாந்யமுண்டானாற் போலேயும். ஆழ்வார்களெல்லாரும் ஒத்திருக்க நம்மாழ்வாருக்கு

ப்ராதா₄ந்யமுண்டானாற்போலேயும், ஆசார்யர்களெல்லாரிலும் வைத்துக்கொண்டு உடையவருக்கு ப்ராதா₄ந்யங்கொள்ளத் தட்டில்லையிறே.

ஸ்ரீராமாவதாரத்திற்கு ப்ராதா₄ந்யம் எத்தாலே யென்னில்:— பெருமாள் அப₄யப்ரதா₃நம் அருளிச்செய்தும், குஹப்பெருமாளுடன் *சீரணிந்த தோழமைகொண்டும், பெரியஉடையாரை ப்₃ரஹ்மமேத₄த்தாலே ஸம்ஸ்கரித்துப் பள்ளிபடுத்தும், ஸ்ரீஸபரீ₃ கையாலே ஸம்யக்₃போ₄ஜநஞ் செய்தும், திருவடியுடன் "உண்பன் நானென்ற ஒண்பொருள்" என்னும்படி ஸஹபோ₄ஜநம் பண்ணியும் போருகையாலே;

ஸ்ரீ க்ருஷ்ணாவதாரத்துக்கு ப்ராதா₄ந்யம் எத்தாலேயென்னில்:— கீ₃தோபநிஷத்தை வெளியிட்டுச் சரமஸ்லோகம் அருளிச்செய்கையாலும், பீ₄ஷ்ம த்₃ரோணாதி₃களுடைய க்₃ருஹங்களைவிட்டு ஸ்ரீவிது₃ரர் திருமாளிகையிலே

"ஸுசீநி கு₃ணவந்தி ச"

[பரிசுத்தமானவையும், இனியவையுமான விதுரனுடைய அன்னங்களை (க்ருஷ்ணன்) புசித்தான்] என்கிற பாவநத்வ போ₄க்₃யத்வங்களையுடைத்தா யிருந்ததென்று அமுதுசெய்து

''த்₃விஷத₃ந்நம் ந போ₄க்தவ்யம்
த்₃விஷந்தம் நைவ போ₄ஜயேத் |
பாண்ட₃வாந் த்₃விஷஸே ராஜந்!
மம ப்ராணா ஹி பாண்ட₃வா: ||

[பா₄ர–உத்₃-74-27]

[த்வேஷிப்பவனின் அன்னம் புசிக்கத்தக்கதன்று; த்வேஷிப்பவனைப் புசிப்பிக்கவும் கூடாது. அரசனே! நீ பாண்டவர்களை த்வேஷிக்கிறாய். பாண்டவர்கள் எனக்கு ப்ராணனன்றோ.] என்று முறை கூறுகிற சோற்றை நிராகரித்து, இதுதன்னையே ஸத்ரு கோ₃ஷ்டி₂யிலும் ப்ரஸித்₃த₄மாக்குகையாலும்.

கோயிலுக்கு ப்ராதா₄ந்யம் எத்தாலேயென்னில்:—திருப்பாணாழ்வாரோடு கலந்து பரிமாறுகையாலே; திருமலைக்கு ப்ராதா₄ந்யம் எத்தாலேயென்னில்!—குறும்பறுத்த நம்பிக்கும் தொண்டைமான் சக்ரவர்த்திக்கும் வார்த்தையருளிச்செய்து பரிமாறுகையாலே;

பெருமாள் கோயிலுக்கு ப்ராத₄ாந்யம் எத்தாலேயென்னில்:—திருக் கச்சிநம்பியோடு ஸ்மிதபூர்வகமாக ஸம்ப₄ாஷணம்பண்ணி மிகவும் கலந்து பரிமாறுகையாலே; திருநாராயணபுரத்திற்கு ப்ராத₄ாந்யம் எத்தாலே? என்னில்:—ஸுசரிததநயன் பக்கல் ஆத₃ராதிஶயத் தாலே தந்நிவேதி₃தாந்நத்தை ஸம்யக்₃போ₄ஜநம்பண்ணி அவனே வாழ்விக்கையாலும், யதிராஜ புத்ரரான ஸௌஶீல்யத்தாலும்.

வேத₃வ்யாஸப₄க₃வானுக்கு ப்ராத₄ாந்யம் வேத₃ங்களை விஸ் தரிப்பித்து, அதில் கர்மகாண்ட₃த்தைவிட்டு ப்₃ரஹ்ம ப₄ாக₃த்திலே புருஷஸூக்த ச₂ாந்தோ₃க்₃ய வாஜஸநேய தைத்திரீயக ஶ்வேதாஶ் வதர மஹோபநிஷதா₃தி₃களாலும், தது₃பப்₃ரும்ஹணங்களான புராணேதிஹாஸாதி₃களாலும்

"ஸத்யம் ஸத்யம்" என்று தொடங்கி

"ந தை₃வம் கேஶவாத் பரம்"

[நாரதீ₃யபுராணம் 18-33]

[முக்கால் சத்தியம் செய்து கைதூக்கிநின்று கூறுகிறேன்; வேதங் களைக்காட்டிலும் மேலான சாஸ்திரமில்லை; கேசவனைக்காட்டிலும் மேலான தெய்வமில்லை] என்று ஸத்ய புரஸ்ஸரமாகப் பரதத்வ நிர்ணயம் பண்ணுகையாலே. ஸ்ரீ பராஶரப்₃ரஹ்மரிஷிக்கு ப்ராத₄ாந்யம்:—

வேதே₃ஷு பௌருஷம் ஸூக்தம் புராணேஷு ச
வைஷ்ணவம் ।
பா₄ரதே ப₄க₃வத்₃கீ₃தா த₄ர்மஶாஸ்த்ரேஷு மாநவம் ॥

[வேதங்களில் புருஷஸூக்தமும், புராணங்களில் விஷ்ணுபுராண மும், பாரதத்தில் பகவத்கீதையும் தர்ம சாஸ்திரங்களில் மநுஸ்ம் ருதியும் சிறந்தவை.] என்னும்படியான ஸ்ரீ விஷ்ணுபுராணத்திலே சித₃சிதீ₃ஶ்வர தத்வங்களை விஶத₃மாக ப்ரதிபாதி₃த்த உதா₃ரன்— என்று ஆளவந்தார் நமஸ்கரித்தருளுகையாலே; ஸ்ரீஶுகப்₃ரஹ்ம ரிஷிக்கு ப்ராத₄ாந்யம்:—பரீக்ஷித்து ராஜாவுக்கு ஸ்ரீப₄ாக₃வதத் திலே தத்வ நிர்ணயத்தைப்பண்ணி,

ஶுகோ முக்தோ வாமதே₃வோऽபி முக்த:

[ப்ரபந்நாம்ருதம் 112-50ல் எடுக்கப்பட்ட ப்ரமாணம்]

[சுகரும் முக்தரானுர்; வாமதேவரும் முக்தரானுர்] என்னும்படியான வைப₄வத்தையுடையராகையாலே; ஸ்ரீ ஶௌநகப₄க₃வானுக்கு

ப்ராதா₄ந்யம்:—ஸ்ரீவிஷ்ணுத₄ர்மத்திலே பலவிடங்களிலும் தத்வ நிர்ணயம் பண்ணுகையாலே; ஸ்ரீநாரத₃ ப₄க₃வானுக்கு ப்ராதா₄ந்யம்:—

**"பு₄ஜயுக₃மபி சிஹ்நைரங்கிதம் யஸ்ய விஷ்ணோ:**
**பரமபுருஷ நாம்நாம் கீர்த்தநம் யஸ்ய வாசி**
**ருஜூதரமபி புண்ட்₃ரம் மஸ்தகே யஸ்ய கண்டே,**
**ஸரஸிஜமணிமாலா யஸ்ய தஸ்யாஸ்மி தா₃ஸ: ||"**

[ப்ரபந்நாம்ருதம் 62-41ல் எடுக்கப்பட்ட ப்ரமாணம்]

[எவருடைய திருத்தோள்களிரண்டும் விஷ்ணுவின் சின்னங்களான சங்கசக்ரங்களால் அடையாளம் செய்யப்பெற்றவையோ, எவருடைய வாயில் பரம புருஷனின் திருநாமஸங்கீர்த்தனமே காணப்படுகிறதோ, எவருடைய நெற்றியில் நேரான ஊர்த்₄வபுண்ட்₃ரம் விளங்குகிறதோ, எவருடைய கழுத்தில் தாமரைமணிமாலை இருக்கிறதோ அத்தகைய வைஷ்ணவருக்கு அடியேனாகிறேன் நான்] என்று இப்படிப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு தா₃ஸனென்று சொல்லுகையாலும், பெரியாழ்வாரும் "சேமமுடை நாரதனார்" என்னும்படியான வைப₄வத்தாலும்.

ஆழ்வார்களில் நம்மாழ்வாருக்கு ப்ராதா₄ந்யம் எத்தாலே யென்னில்:— ஸஹஸ்ரஶாகை₂யான நாலு வேத₃த்தினுடைய பொருள்களையும் நாலு ப்ரப₃ந்த₄ முக₂த்தாலே ஸர்வாதி₄காரமாக்குகையாலும், நாத₂முநிகளுக்கு ப்ரஸந்நராய் அருளிச்செயல் நாலாயிரத்தையும் ப்ரஸாதித்து, மற்றுமுண்டான த₃ர்ஶநதாத்பர்யங்களையெல்லாம் அருளிச்செய்து த₃ர்ஶநத்தை நிலைநிறுத்துகையாலும் * ('பயிலுஞ்சுடரொளி', 'நெடுமாற்கடிமை' முதலான இடங்களில் வர்ணாத்₄யுத்கர்ஷங்களை நிராகரித்து வேத₃ப்ரமாணமுக்₂ய தாத்பர்யமான ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணம் எல்லாருக்குந் தெரியும்படி அருளிச்செய்கையாலும்).

உடையவர், கீழ்ச்சொன்னவர்களைப் போலன்றிக்கே பெருமான் அருளிச்செய்த அப₄யப்ரதா₃நத்தை விஶத₃மாக்குகையாலும், கீ₃தாசார்யன் அருளிச்செய்த சரம ஶ்லோகார்த்த₂த்தை ப்ரகாஶிப்பிக்கையாலும், ரிஷிப்ரோக்தமான ப்ரமாணங்களுக்கு அர்த்த₂மருளிச் செய்கையாலும், மற்றையாழ்வார்கள் அருளிச்செய்த திவ்ய ப்ரப₃ந்த₄ங்களை அங்கோ₃பாங்க₃மாகவுடைய திருவாய்மொழி

* ( ) அடைப்பிலுள்ளது சில ஸ்ரீகோஶங்களிலேயே உள்ளது.

ப்ரப₃ந்த₄த்தை அர்த்த₂வத்தாக விஸத₃மாக ப்ரகாஸிப்பிக்கையாலும் நாத₂முனிகள் அருளிச்செய்த திவ்யப்ரபந்தங்களையும், ஆளவந்தார் அருளிச்செய்த திவ்ய ப்ரபந்தங்களையுங்கொண்டு ஸூத்ர வாக்யங்களை ஒருங்கவிட்டும், ஸ்ரீபா₄ஷ்யம் க₃த்₃யத்ரயம் முதலான ப்ரபந்தங்களை அருளிச்செய்தும், நிகி₂ல குமதிஸமயங்களையும் நிராகரித்து, ஸ்வமதஸ்த₂ாபநம் பண்ணி "எம்பெருமானார் த₃ர்ஸநம்" என்னும்படி பண்ணுகையாலும் இவர் எல்லாரிலும் ப்ரத₄ாநரிறே; இனி, ஸிஷ்யர்களான கூரத்தாழ்வான் முதலியாண்டான் தொடக்கமானவர்களில் ப்ரத₄ாநரென்னுமிடம் சொல்லவேண்டாவிறே; ஆக, ப்ராத₄ாந்யம் சொல்லிற்றாய்த்து.

**"ஆசார்யவாந் புருஷோ வேத₃"** [ச₂ாந் 6-14-2]

[ஆசார்யனையுடைய புருஷனே உண்மையை அறிவான்] என்றும்,

**"பாபிஷ்ட₂: க்ஷத்ரப₃ந்து₄ஸ்ச புண்ட₃ரீகஸ்ச புண்யக்ருத் ।**
**ஆசார்யவத்தயா முக்தௌ தஸ்மாதா₃சார்யவாந் ப₄வேத் ॥"**

[பாபம் நிறைந்த கத்திரபந்துவும் புண்ணியம் புரிந்த புண்டரீகனும் (ஆகிய இருவரும் வாசியற) ஆசார்யனை அடைந்து முக்தி பெற்றனர். ஆகையால் சேதனன் ஆசார்யனை அடையவேண்டும்.] என்றும்.

**"ஆசார்யஸ் ஸ ஹரிஸ்ஸாக்ஷாச் சரரூபீ ந ஸம்ஸய:"**

[ஆசார்யனே நேரே நடமாடும் பரம புருஷன்; இதில் ஐயமில்லை] என்றும்.

**"ஆசிநோதி ஹி ஸாஸ்த்ரார்த்த₂ாநாசாரே ஸ்த₂ாபயத்யபி ।**
**ஸ்வயமாசரதே யஸ்து ஆசார்யஸ்ஸோ ऽபி₄தீ₄யதே ॥"**

[ப்ரபந்நாம்ருதம் 63-5, ல் எடுக்கப்பட்ட ப்ரமாணம்]

[எவனொருவன் சாஸ்திரார்த்தங்களை சேகரித்துத் தானும் அவற்றின்படி நடந்துகாட்டிப் பிறரையும் ஆசாரத்தில் நிலைநிறுத்துகிறானோ அவனே ஆசார்யன் எனப்படுவான்] என்றும்,

**"கு₃ஸப்₃த₃ஸ்த்வந்த₄காரஸ்ஸ்யாத் ருஸப்₃த₃ஸ்தந்நிரோத₄க: ।**
**அந்த₄காரநிரோதி₄த்வாத் கு₃ருரித்யபி₄தீ₄யதே ॥"**

[ப்ரபந்நாம்ருதம் 6-7ல் எடுக்கப்பட்ட ப்ரமாணம்]

[கு₃ஸப்₃த₃ம் இருளைக் குறிப்பது; 'ரு' ஸப்₃த₃ம் அதன் அழிவைக் குறிப்பது; இருளை அழிப்பவனாகையாலே ஆசார்யன் 'கு₃ரு' எனப்படுகிறான்] என்றும்,

"குருரேவ பரம் ப்ரஹ்ம குருரேவ பரா கதி: |
குருரேவ பரா வித்யா குருரேவ பரம் தநம் ||"
"குருரேவ பர: காமோ குருரேவ பராயணம் |
யஸ்மாத் தது3பதேஷ்டாऽஸௌ தஸ்மாத்3கு3ருதரோ
குரு: ||"

[குருவே மேலான ப்ரஹ்மம்; குருவே மேலான தனம்; குருவே மேலான காமம்; குருவே மேலான ப்ராப்யம்; குருவே மேலான கல்வி; குருவே மேலான ப்ராபகம்; அப்பரம்பொருளையே உபதேசிப்பதால் குரு அதைக்காட்டிலும் உயர்ந்தவர்.] என்றும், "பீதகவாடைப் பிரானார் பிரம குருவாகி வந்து" என்றும், "தேனார் கமலத் திருமாமகள் கொழுநன் தானே குருவாகி" என்றும் ஈஸ்வரன் தானாகச் சொல்லப்பட்ட ஆசார்யனே ஸிஷ்யனுக்கு

"தஸ்ய வைகுண்டது3க்3தா3ப்3தி3த்3வாரகாஸ்ஸர்வ ஏவ ஸ:"

[எந்த குருவினாலே ஒரு சீடனுக்கு சரணாகதிவித்யை உபதேசிக்கப் படுகிறதோ, அந்தச் சீடனுக்கு வைகுண்டமும், திருப்பாற்கடலும், துவாரகையும் மற்றுமுள்ள எல்லா திவ்யதேசங்களும் அவ்வாசார்யனேயாவான்.] என்று திருநாடும் திருப்பாற்கடல் முதல் நூற்றெட்டுத்திருப்பதிகளும் "அன்னையாயத்தனாய்" என்னும்படியான ஸர்வவித4 உத்தாரக ப3ந்து4வும் மாடும் மனையும் தேடும் பொருளும் பூமியும் எல்லாம் ஆகக்கடவன்.

ஆழ்வான், ஆண்டான். அருளாளப் பெருமாளெம்பெருமானார், எம்பார், ஸ்ரீபராஸரபட்டர் முதலானோர் தந்தம் ஸிஷ்யர்களுக்கு 'எம்பெருமானார் திருவடிகளே தஞ்சமென்றிருங்கோள்' என்கைக்கு ஹேது என்னென்னில் - ஸ்வாசார்ய ப்ரீதிநிப3ந்த4நமாகவும் "மாறனடி பணிந்துய்ந்தவன்" என்று சொல்லுகையாலும், ஆழ்வார்க்கும் உடையவர்க்கும் நடுவுள்ள ஆசார்யர்கள் நம்மாழ்வாருக்குக் கரணபூ4தராகையாலே இவர்க்கு நேரே ஆசார்யர் திருக்குருகூர்நம்பியாகையாலும், அவர் "கலியும் கெடும்" என்று இவரவதாரத்தைக் குறித்து அருளிச்செய்கையாலே ஆழ்வாராலே ப்ரவர்த்திதமான த3ர்ஸநத்தை நிலைநிறுத்தி அவர் வைப4வத்தை

"குரும் ப்ரகாஸயேத் தீமாந் மந்த்ரம் யத்நேந கோ3பயேத் |
அப்ரகாஸப்ரகாஸாப்4யாம் க்ஷீயேதே ஸம்பதா3யுஷீ ||"

[ஸேஷஸம்ஹிதை 14-50]

[அறிவாளியாயிருப்பவன் குருவை வெளிப்படுத்தக்கடவன்; மந்திரத்தை மிகமுயன்று (அநதிகாரிகளிடமிருந்து) மறைக்கக் கடவன்; (ஆசார்யனை) வெளிப்படுத்தாததாலும், (மந்திரத்தை) வெளிப்படுத்துவதாலும் (முறையே) செல்வமும் ஆயுளும் நசிக்கும்] என்று ப்ரகாஶிப்பிக்கையாலும், ஆழ்வார்க்கு நேரே ஶிஷ்யர் உடையவராகக்கடவர், பெரியநம்பி முதலான பூர்வாசார்யர்கள் இவருக்கு ஆசார்யர்களாய் வீறுபெற்றார்கள்; ஆழ்வான் முதலானோர்கள் இவர்க்கு ஶிஷ்யராய்ப் பேறுபெற்றார்கள். ஆகையாலே, ஸர்வாசார்யத்வ பூர்த்தியுள்ளது உடையவர்க்கேயாகையாலே அருளிச்செய்தருளினார்களிறே.

ஆளவந்தாரும் இவ்வர்த்தத்தை அநுஷ்டித்துக் காட்டியருளினார்; எங்ஙனே? என்னில்:— மணக்கால்நம்பி உய்யக்கொண்டார் இவர்கள் உகப்பைப் பின்சென்று,

"அக்ருத்ரிமத்வச்சரணாரவிந்தப்ரேமப்ரகர்ஷாவதி
பிதாமஹம் நாதமுநிம் விலோக்ய ப்ரஸீத மத்வ்ருத்தமசிந்தயித்வா ||" [ஸ்தோ-ர-65]

[என்னுடைய நடத்தையை நினைக்காமல், உன்னுடைய திருவடித் தாமரைகளில் இயற்கையாயிருக்கும் மேலான அன்பிற்கு எல்லை நிலமாயிருப்பவரும், ஆத்மஸ்வருபத்தை உணர்ந்தவரும், எனக்குப் பாட்டனுருமாகிய நாதமுனிகளைத் திருவுள்ளத்திற்கொண்டு (என்னை) க்ஷமித்தருளவேண்டும்] என்றும்,

"தஸ்மை நமோ மதுஜிதங்க்ரிஸரோஜதத்வ-
ஜ்ஞாநாநுராக மஹிமாதிஶயாந்தஸீம்நே |
நாதாய நாதமுநயேऽத்ர பரத்ர சாபி
நித்யம் யதீயசரணௌ ஶரணம் மதீயம் ||"

[ஸ்தோ-ர 2]

[இவ்வுலகிலும் மேலுலகிலும் எப்போதும் எந்த ஸ்ரீமந்நாதமுனிகளின் திருவடிகள் எனக்குப் புகலிடமோ, மதுவை அழித்த எம்பெருமானுடைய திருவடித் தாமரைகளைப்பற்றிய உண்மையறிவினுடையவும், அன்பினுடையவும் பெருமேன்மையின் முடிவே எல்லையாயிருப்பவரும், (எனக்கு) நாதராயிருப்பவருமான அந்த நாதமுனிகளுக்கு நமஸ்காரம்.] என்றும் இங்கும் அங்கும் ஆசார்யன் திருவடிகளே ஶரணம், ஆசார்யவிஷயத்தில் க்ருதஜ்ஞதை யாவதாத்மபாவி-என்று அருளினார். ஆகையாலே, ஸ்வருபோஜ்ஜீவ

நத்திற்கு ஆசார்யனே தஞ்சமென்று பற்றுதலொழிய வேறே இவ் வாத்மாவுக்கு உஜ்ஜீவிக்க விரகில்லையிறே. இவ்வர்த்த$_2$த்தை அநுஷ்டி$_2$த்தார் ஆரென்னில்:—ஸ்ரீமது$_4$ரகவி ப்ரப்$_4$ருதி ஸஜ்ஜநங் களிறே.

உடையவர் புழுவன் வ்யாஜேந மேல்நாட்டுக்கு எழுந்தருளின போது, உபந்யஸித்த கட்டளையைக் கேட்டு ஆசார்யர்களெல்லா ரும் ஆஸ்சர்யப்பட, உடையவரும் 'என் பரமாசார்யரான ஆளவந் தார் வார்த்தைகொண்டு சொன்னேன் இது; ஆளவந்தார் கோஷ்டி யிலே ஒருநாளாகிலும் ஸேவிக்கப்பெற்றேனாகில் பரமபதத்திற்கும் இங்கும் சுருளும் படியும் கட்டிவிடேனோ?' என்று அருளிச் செய்தாரிறே.

உடையவர். அப$_4$யப்ரத$_3$ாநம் அருளிச்செய்யாநிற்க, பிள்ளை யுறங்காவில்லிதாஸர் கோஷ்டியினின்றும் எழுந்துநிற்க, 'இது வென்? பிள்ளாய்!' என்று உடையவர் கேட்டருள,

" பரித்யக்தா மயா லங்கா மித்ராணி ச த$_4$நாநி ச |
ப$_4$வத்$_3$க$_3$தம் மே ராஜ்யம் ச ஜீவிதம் ச ஸுக$_2$ாநி ச || "
[ரா-யு - 19-5]

[என்னால் நண்பர்களும் செல்வங்களும் லங்காராஜ்யமும் கைவிடப் பட்டது. என்னுடைய அரசும், உயிரும், ஸுகங்களும் தேவரீரிடத் தில் அடங்கியுள்ளன ] என்றும்,

" த்யக்த்வா புத்ராம்ஸ்ச த$_3$ாராம்ஸ்ச ராக$_4$வம் ஸரணம் க$_3$த: ||" [ரா.யு-17-16]

[பெண்டுபிள்ளைகளைவிட்டு ராகவனை சரணமடைந்தேன் ] என்றும், ப$_4$கவத்ஸமாஸ்ரயணத்திற்கு விலக்கடியானவைகளையடைய விட்டு 'பெருமாள் திருவடிகளே தஞ்சம்' என்றுவந்து,

" தேஷாம் ஸம்ப$_4$ாஷமாணாநாமந்யோந்யம் ஸ விபீ$_4$ஷண: |
உத்தரம் தீரமாஸாத்$_3$ய க$_2$ஸ்த$_2$ ஏவ வ்யதிஷ்ட$_2$த ||"
[ரா-யு 17-8]

[ஒருவர்க்கொருவர் அவர்கள் பேசிக்கொண்டிருக்கையில் அவ்விபீ ஷணன் (கடலின்) வடக்குக்கரையை அடைந்து ஆகாயத்தி லேயே நிலைநின்றான் ] என்று நிலத்திலே கால்பாவாதே க$_3$க$_2$ நஸ்த$_2$னாய் நிராலம்ப$_3$நனாய்நின்ற ஸ்ரீவிபீஷணாழ்வானையுமகப்பட

" வத்$_4$யதாமேஷ த$_3$ண்டே$_3$ந தீவ்ரேண ஸசிவைஸ் ஸஹ |
ராவணஸ்ய ந்ருஸம்ஸஸ்ய ப்$_4$ராதா ஹ்யேஷ விபீ$_4$ஷண: ||"
[ரா-யு-17-29]

[கடுமையான தண்டனையினுல் மந்திரிகளுடன் கூட இவன் ஹிம்ஸிக்கப்படட்டும்; இந்த விபீஷணன் க்ரூரனுன ராவணனுடைய தம்பியன்றே.] என்று கல்லும் தடியுங்கொண்ட ராமகோஷ்டிக்கும் ஸுக்ரீவாதிகளோடு கூடின அடியேன் ஆளாகப்புகுகிறேனே?' என்றார். உடையவரும் 'கேளாய் பிள்ளாய்! அஞ்சாதே கொள்ளும்; நான் பெற்றேனுகில் நீர் பெறுகிறீர்! பெரியநம்பி பெற்றாராகில் அடியேன் பெறுகிறேன்; ஆளவந்தார் பெற்றாராகில் பெரியநம்பி பெறுகிறார்; மற்றும் மேலுள்ளார் பெற்றார்களாகில் இவர்களும் பெறுகிறார்கள். நம்சடகோபர் "அவாவற்று வீடுபெற்ற" என்று தம் வாக்காலே அருளிச்செய்கையாலே அவர் பெற்றது ஸித்தம். ஆனபின்பு நமக்கும் ஸித்தமென்றிரும்: எல்லார்க்கும் நாச்சியார் புருஷகாரமுண்டாம்போது அச்சம் வேண்டா; ஆகையிறே நித்யயோகம்; ஆனபின்பு நித்யஸம்ஸாரிகளும் எம்பெருமானும் ஒரு சங்கிலித்துவக்கிலேகாணுமிருப்பது; ஆகையால், நம்முடைய ஒழுக்குக்கூட்டம் நம்மை விட்டகலாதென்றிரீர்; கமுகு உண்ணில் வாழையும் உண்ணுமென்றிரும் ஸ்ரீவிபீஷணுழ்வானேடு வந்த நால்வரையும் அருளப்பாடிட்டபோது தனித்து அருளப்பாடிட்டதில்லையே; தகையென்றபோதும் தனித்துத் தகை என்றதில்லையே. ஆனபின்பு நான் பெற்றேனுகில் நீர் பெறுகிறீர்; அஞ்சாதே ஸுகமேயிரும்' என்று அருளிச்செய்தருளினர். "ஏத்தியிருப்பாரை வெல்லுமே மற்றவரைச் சார்த்தியிருப்பார் தவம்" ஏத்தியிருந்தார் - ஸ்ரீ பரதாழ்வான். அவரைச் சார்த்தியிருந்தார்-ஸ்ரீமத்ருக்நாழ்வான்; ஏத்தியிருந்தார் - நம்மாழ்வார். அவரைச் சார்த்தியிருந்தார் - ஸ்ரீ மதுரகவிகள்; ஏத்தியிருந்தார் – பெரியாழ்வார். அவரைச் சார்த்தியிருந்தார் - நாச்சியார்.

* 'இனி, எம்பெருமானுரைப் பற்றுமவ்வளவே ஸ்வரூபமாகில் திவ்யதேசங்களைக் கைவிட்டானுகானே?' என்னில்:—கைவிட்டானுகான்; அது எங்ஙனேயென்னில்:— "இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம் மாலிருஞ்சோலையென்னும் பொருப்பிடம் மாயனுக்கென்பர் நல்லோர் அவைதன்னெடும் வந்து, இருப்பிடம் மாயன் இராமாநுசன் மனத்து" என்கையாலே எம்பெருமானர் திருவடிகளைத் தொழவே திவ்யதேசங்களெல்லாம் திருவடிதொழுதானுகக்கடவன்; உடையவரை ஆராதித்து அமுதுசெய்யப் பண்ணவே, எல்லா திவ்யதேசங்களிலெம்பெருமான்களையும் ஆராதித்து அமுது செய்யப் பண்ணினனுகக்கடவன்.

* 'இனி ஸ்வாசார்யபரமாசார்யர்களைப் பற்றுமவ்வளவே' என்றும் பாடம்.

"நின்றவண்கீர்த்தியும்" என்கிற பாட்டிலும், "பேறொன்று மற்றில்லை" என்கிற பாட்டிலும் 'கர்மமும் உபாயமன்று. ஜ்ஞாநமும் உபாயமன்று. ப₄க்தியும் உபாயமன்று. ப்ரபத்தியும் உபாய மன்று. எம்பெருமானார் திருவடிகளே உபாயோபேயம்' என்கை யாலே. எம்பெருமானாரைப் பற்றுகையே ப்ரபத்தி. ராமாநுஜ னென்கிற சதுரக்ஷரியே திருமந்த்ரம். அவர் திருவடிகளிலே பண்ணுங் கைங்கர்யமே பரமபுருஷார்த்த₂ம். இதுவே நிஸ்சிதார்த்த₂ மான என் ஸித்தாந்தம்—என்று நடாதூரம்மாள் அருளிச்செய் தருளுவர்.

கூரத்தாழ்வான் நாராயண ராமாநுஜ என்கிற திருமந்த்ரங் களுக்கு வாசி ப₃ந்த₄மோக்ஷங்களிரண்டுக்கும் பொதுவாகையும் மோக்ஷைகஹேதுவாகையுமாகிற இது தோன்ற,

**" ந சேத்₃ ராமாநுஜேத்யேஷா சதுரா சதுரக்ஷரீ |**
**காமவஸ்த₂ாம் ப்ரபத்₃யேரந் ஜந்தவோ ஹந்த மாத்₃ருஸா:**

['ராமாநுஜ' என்னும் வல்லமைமிக்க நான்கு எழுத்துக்கள் இல்லை யாகில் என்னைப்போன்ற ஜந்துக்கள் என்ன நிலையை அடைந் திருப்பார்கள்?] என்றாரிறே.

"கையிற்கனி" என்கிறபாட்டிலே "ஈஸ்வரனைக் கரதலாமலகமா கக் காட்டித் தந்தாலும் உன்விக்₃ரஹஸௌந்த₃ர்யாநுப₄வமே பர மப்ராப்யம்" என்றும் "இராமாநுசனைத் தொழும் பெரியோர், எழுந் திரைத்தாடுமிட மடியேனுக்கிருப்பிடம்" என்று 'இராமாநுசனைத் தொழும் பெரியோர் நித்யவாஸம் பண்ணுமிடமே அடியேனுக்கு ப்ராப்யபூ₄மி' என்றும், "உன்தொண்டர்கட்கே, அன்புற்றிருக் கும்படி என்னை யாக்கி அங்காட்படுத்தே" என்று 'இராமா நுசனே! உன்னடியார் திறத்தில் ஊற்றம்மாறுத ப₄க்தியை உண் டாக்கி அவர்களுக்கே என்னையாட்படுத்தாய்' என்றும் உடைய வர் திருமுகமண்டலத்தைப் பார்த்து விண்ணப்பஞ்செய்ய, இசைந்து எழுந்தருளியிருந்தாரிறே. 'இதுவே இவ்வர்த்த₂நிர்ண யத்திற்கு த்₃ருட₄தர முக்₂யப்ரமாணமென்று நமக்கெல்லார்க்கும் பு₃த்₃தி₄பண்ணக் குறையில்லை; எங்ஙனேயென்னில்:— "அங்க யல்பாய் வயல்" என்கிற பாட்டிற்படியே ஸங்வஸ்மாத்பரனாய் ஸர்வநியந்தாவான எம்பெருமானையும் நாச்சியாரையும் புருஷகார மாகக்கொண்டு எம்பெருமானார் திருவடிகளைப்பெறவேணுமென்று ப்ரபந்தத்தைத் தலைக்கட்டியருளினாரிறே அமுதனாரும்.

இங்ஙனன்றிக்கே,

"வேதா₃ந்தாந் ஶங்கராத்₃யை: குமதிபி₄ரஸது₃ர்த்த₂ ந
ஹிநீதாம்ஶ்ச பூ₄யஸ்ஸ்வார்த்தே₃ தாத்பர்யயுக்தாந் கலயிது-
மபி ச ஶ்ரீஶடா₂ர்யாத்₃யப₄க்தை: ।
ப்ரோக்தாந் தி₃வ்யப்ரப₃ந்த₄ாந் ஶரணவரண யோக₃ாத்-
மகாந் ப்ரஸ்பு₂டார்த்த₂ாந் க்ருத்வோத்₃த₄ர்த்தும் பு₄வாப்₃-
தே₄ரகி₂லஜநமபூ₄த்₃ யோ மஹாபூ₄தத₄ாம்நி ॥"

[ஶங்கரர் முதலான வக்ரபுத்தியுடையவர்களாலே அவப்பொரு ளுரைக்கப்பட்ட வேதாந்த வாக்கியங்களை மறுபடியும் உண்மைப் பொருள் விளங்குமவையாகச் செய்வதற்காகவும், அதற்கும்மேலே நம்மாழ்வார் முதலிய ஆழ்வார்களாலே அருளிச்செய்யப்பட்ட ஶரணுகதி சாஸ்திரங்களான திவ்யப்ரபந்தங்களைப் பொருள் விளங்கச்செய்து ஸம்ஸாரக்கடலினின்றும் எல்லா ஜனங்களையும் கைதூக்கிவிடுவதற்காகவும் எம்பெருமானுர் ஶ்ரீபெரும்பூதூரில் அவதரித்தருளினுர்] என்றும்,

"வேத₃ாந்தாநாமஸீம்நாம் கு₃ருதரக₃ஹநார்த்தை க வாக்ய
த்வபூர்வம் வ்யாக்₂யாத்ருத்வாச்ச ஶேஷம் கு₃ருப₄ர-
வஹநாதீ₃ஶிதுஸ்ஸைந்யநாத₂ம் ।
ஸாது₄த்ராணத் தத₃ந்யப்ரமத₂நகரணச்சாபி தத்பஞ்ச-
ஹேதீநாசார்யத்வஸ்ய பூர்த்யா யமுருதரக்ருபம் ஶ்ரீபதிம்
சாஹு-ரார்யா: ॥"

[எல்லையற்ற வேதாந்தங்களுடைய மிகப் பரந்த ஆழ்ந்த கருத் துக்கள் ஒருமிடமுனவையே என்று நிலைநாட்டி வியாக்கியானம் செய்கையால் ஆதிசேஷனின் அவதாரமென்றும், பகவந்நியமன மாகிற பெரும் ப₄ாரத்தை ஏற்கையால் ஸர்வேஶ்வரனுடைய சேனை முதலியாரின் அவதாரமென்றும், நல்லோர்களை ரக்ஷிக்கை யாலும், தீயவர்களைத் தொலைப்பதாலும் அவனுடைய பஞ்சா யுதங்களின் அவதாரமென்றும், ஆசார்யத்வபூர்த்தியாலே ஶ்ரிய: பதியான அவனுடைய அவதாரமென்றும் பெருங்கருணையுடைய உடையவரைப்பற்றி நல்லோர்கள் கூறுகின்றனர்] என்றும்,

"ஶ்ருத்யர்த்த₂ாந் ப்ராப்ய தத்வேந ச வரத₃முக₂ாத₃ாஜ்ஞயா
தஸ்ய ஸர்வம் ஸங்க₃ழ்ய த்யக்த்வா த்ரித₃ண்ட₃ாஞ்சித-
மஹிதகரோ ரங்க₃த₄ாம்ந்யாஸ்த பஶ்சாத் ।

ஆர்யைஸ்ஸாகஞ்ச லக்ஷ்மீரமணக்ருதபதாந் திவ்ய-
தேஶாந்தராயாம் ஸேவம் ஸேவம் ப்ரகல்ப்யாதச
மஹிதஸமாராதநம் தத்ர தத்ர ||"

[வேதார்த்தங்களைப் பேரருளாளன் மூலமாக (திருக்கச்சிநம்பி களிடமிருந்து) உள்ளபடி அறிந்து, அந்தப் பேரருளாளனுடைய ஆணையாலே எல்லாப் பற்றுக்களையும் துறந்தபின்பு திரிதண்டத் தினால் அலங்கரிக்கப்பட்ட பெருமைபெற்ற திருக்கையை உடைய வராய் ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருந்தார் எம்பெருமானார், பிறகு. ஸ்ரிய:பதியினாலே அவதாரங்களில் நடமாடப்பெற்ற இந்நிலவுலகி லுள்ள திவ்யதேசங்களில் ஸ்ரீவைஷ்ணவர்களுடன் கூடிநின்று ஸேவித்துக்கொண்டு ஆங்காங்கு சிறந்ததான ஆராதனமுறைகளை ஏற்படுத்திவிட்டு (ஸ்ரீரங்கம் எழுந்தருளினார்)] என்றும்,

"யாதோ யஶ்ஶாரதாயாஸ்ஸவிதமத, தயா ஸத்க்ருதஸ்வ-
ப்ரபந்தோ பாஹ்யாந் வேதாத் குத்ருஷ்டீநபி கபடபடூந்
வாததோ நிர்ஜிகாய |
ப்ராதக்ஷிண்யேந கச்சந் புவமகிலஜநம் வைஷ்ண
வாக்ர்யஞ்ச குர்வந் ந்யாஸாக்யம் தேவகுஹ்யம்
பரமஹிதமபி த்ராக் ப்ரகாஶஞ்ச க்ருத்வா ||"

[ஸரஸ்வதியினுடைய ஸமீபத்தையடைந்து, அவளால் தம் க்ரந்த மான ஸ்ரீபாஷ்யத்தை அங்கீகரிக்கப்பெற்றவராய், வேதத்துக்குப் புறம்பானவர்களையும் (வேதத்தை ஒப்புக்கொண்டபோதிலும்) அதற்கு அவப்பொருளுரைத்து வஞ்சனைசெய்யவல்ல குத்ருஷ்டி களையும் ஜயித்தருளினார் யதிராஜர்; பாரததேசத்தை ப்ரதக்ஷிண மாக வலம்வந்துகொண்டு, சேதனர் அனைவரையும் பரமபாகவதர் களாகச் செய்துகொண்டு, பரமபுருஷார்த்தத்தையடையச் சிறந்த ஸாதனமாய், தேவரஹஸ்யமாயிருக்கும் 'ந்யாஸம்' எனப்படும் சரணாகதி தர்மத்தை விரைவில் வெளிப்படுத்திக்கொண்டு எழுந் தருளியிருந்தார்,] என்றும்,

ரங்கே வேதாந்தபாஷ்யம் வ்யதநுத ச தத: கீடகண்டஸ்ய
ஹேதோர் கத்வா யோ ஹோஸலாக்யம் ஜநபதமமலே
யாதவாத்ரௌ நிவேஶ்ய |
பஶ்சாதாகத்ய ரங்கம் குருவரமுகதோ வைதிகாக்ர்யம்
வஶிஷ்டாத்வைதம ஸித்தாந்தமஸ்மிந் ஜகதி பஹு-
முகம் விஸ்த்ருதம் காரயித்வா |"

[அதன்பிறகு ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீபாஷ்யத்தை அருளிச்செய்தார்; கிருமிகண்டன் காரணமாக 'ஹோசளம்' என்னும் தேசத்திற்குச் சென்று, குற்றமற்ற யாதவ கிரியிலே சேர்ந்து, பின்பு ஸ்ரீரங்கத்தை அடைந்து எழுபத்து நான்கு ஆசார்யர்களைக்கொண்டு வைதிக மதங்களுள் சிறந்த விசிஷ்டாத்வைதம் என்னும் ஸித்தாந்தத்தை ஸ்ரீபாஷ்யகாரர் இவ்வுலகில் பலவிதமாகப் பரப்பிக்கொண்டு எழுந்தருளியிருந்தார்] என்றும்,

"அத்₃யாப்யாஸ்தே யது₃க்ஷ்மாப்₄ருதி மஹிதத₄யஶ்சாக்ஷுஷீம் ஸ்வீய மூர்த்திம் குர்வாணஸ்தம் யதீந்த்₃ரம் கு₃ருகுலந்ரு-
பதிம் நௌமி ராமாநுஜார்யம் ॥"

[ஸ்ரீயதுகிரியில் தம்முடைய திவ்யமங்களவிக்ரஹத்தைக் கண்ணுக்கு விஷயமாக்கிக்கொண்டு, புகழ்பெற்ற கருணையுடையவராய், இப்போதும் (அர்ச்சாரூபியாய்) எழுந்தருளியிருக்கிறார் எம்பெருமானார்; குருபரம்பரைக்குத் தலைவரான அவரை வணங்குகிறேன்] என்றும்.

"கீ₃தாப₄ாஷ்யம் பூ₄ஷ்ய வேத₃ாந்தப₄ாஷ்யம் ஸாரம் தீ₃பம்
கிஞ்ச க₃த்₃யத்ரயஞ்ச ।
வேத₃ார்த்த₂ாநாம் ஸங்க்₃ரஹம் நித்யயாக₃ம் ப்ராஹைதாந்
யஸ்தம் யதீந்த்₃ரம் ப₄ஜேஹம் ॥"

[கீதாபாஷ்யத்தையும், புகழத்தக்க வேதாந்த (ஸ்ரீ)பாஷ்யத்தையும் வேதாந்த ஸாரத்தையும், வேதாந்த தீபத்தையும், கத்யத்ரயத்தையும், வேதார்த்த ஸங்க்ரஹத்தையும், நித்ய திருவாராதனம் பற்றிய க்ரந்தத்தையும் அருளிய யதிராஜரை ஆஶ்ரயிக்கிறேன்] என்றும்,

"ஹஸ்த்யத்₃ரீஶப்ரஸாத₃ாத₃தி₄க₃தநிக₃மாந்தார்த்த₂கோ
யோ ஹி ஜித்வா ப₃ாஹ்யாந் வேத₃ாத் குத்₃ருஷ்டீநபி
நிகி₂லஜநம் வைஷ்ணவாக்₃ர்யஞ்ச க்ருத்வா ।
ரங்கே₃ வேத₃ாந்தப₄ாஷ்யம் வ்யதநுத தமஹம் நௌமி
ராமாநுஜார்யம் ஸ்ரீரங்க₃ாத்₃யாலயேஷு ப்ரகடகு₃ணக₃ணம்
ஸ்ரீபதிம் ஸேவமாநம் ॥"

[அத்திகிரியருளாளனின் அருளினாலே வேதாந்த விழுப்பொருள் அனைத்தையும் அறிந்தவராகி, வேதத்துக்குப்புறம்பான பாஹ்யர்களையும், அவப்பொருளுரைக்கும் குத்₃ருஷ்டிகளையும் வென்று சேதனரனைவரையும் சிறந்த ஸ்ரீவைஷ்ணவர்களாகச் செய்து ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீபாஷ்யத்தையும் அருளிச்செய்தருளினார் எதிகட்கி

றைவர்; ஸ்ரீரங்கம்முதலிய திவ்யதேசங்களிலே பிரஸித்திபெற்று விளங்கும் திருக்குணங்களை உடைய ஶ்ரிய:பதியை மங்களாஶாஸனம் செய்துகொண்டிருக்கும் அத்தகைய எம்பெருமானுரை யான் துதிக்கிறேன்.] என்றும் இப்படி பெரியபெருமாள் முதலானுர் ப₃ஹு முக₂மாகப் பேசிவெளியிட்டார்கள். இப்படி ஸத்துக்களாலே ப்ராக் உக்தவைப₄வம் ஸங்க்₃ரஹேண உக்தமாய்த்து.

ஏவம்வித₄வைப₄வயுக்தரான இந்த எம்பெருமானுரைத் தத்₃ப₄ரகி₃நேய ஸூநுவாய்த் தந்நாமத்தையுடையராய்த் தந்நாம கு₃ணஹர்ஷிதரான கந்தாடை(முதலி)யாண்டான் கனக்க அநுவர்த்தித்து "பரித்ராணுய" [கீ₃தை 4-8] [ஸாதுக்களை ரக்ஷிப்பதற்கும், தீயவர்களை அழிப்பதற்கும் வைதிக தர்மத்தை நிலைநிறுத்துவதற்கும் யுகந்தோறும் பிறக்கிறேன்] இத்யாதி₃ப்படியே தேவரீர்,

"புண்யாம்போ₄ஜவிகாஸாய பாபத்₄வாந்தக்ஷயாய ச ।
ஸ்ரீமாநாவிரபூ₄த்₃பூ₄மௌ ராமாநுஜதி₃வாகர: ॥"

[புண்யமாகிற தாமரை மலருவதற்காகவும். பாவமாகிற இருள் அழிவதற்காகவும் ஸ்ரீராமாநுஜராகிய ஸூர்யன் இப்புவியில் அவதரித்தருளினுர்] என்னும்படி அவதரித்தருளின ஸ்ரீபெரும்பூதூரிலே ஸர்வகாலத்திலும் ஸர்வசேதநர்க்கும் ஸேவ்யமாம்படி தேவரீருடைய அர்ச்சாவிக்₃ரஹத்தை ஏறியருளப்பண்ணவேணும் என்று விண்ணப்பஞ்செய்ய ஸ்வாமியும் 'அப்படியே செய்யும்' என்று அநுமதிபண்ணியருள அப்போதே ஆண்டானும் அநுகூலனுன சில்பியை அழைப்பித்து.

"புண்ட்₃ரைர் த்₃வாத₃ஶபி₄ர்யுதம் விலஸிதம் த₃ண்டை₃ஸ் த்ரிபி₄ர்மண்டி₃தம் காஷாயேந ஶிகோ₂பவீதருசிரம் தோ₃ர்மூலசக்ராம்பு₃ஜம் ।
ஆஸீநம் ஜலஜாஸநே ச துலஸீபத்₃மாக்ஷமாலாஞ்சிதம் யுக்தஞ்சாஞ்ஜலிமுத்₃ரயா ரவிநிப₄ம் ஸ்ரீபா₄ஷ்யகாரம் ப₄ஜே ॥"

[பன்னிரண்டு ஊர்த்வபுண்ட்ரங்களை அணிந்திருப்பவரும், த்ரிதண்டத்தால் விளங்கி நிற்பவரும், காஷாயத்தினுல் அலங்கரிக்கப் பெற்றவரும். ஶிகையினுலும், பூணூலாலும் அழகு பெற நிற்பவரும். திருத்தோள்களில் சக்கரம் சங்குகளால் திருவிலச்சினையிடப்பெற்றவரும், பத்மாஸனத்தில் வீற்றிருப்பவரும், துளஸிமணிமாலையும் தாமரைமணிமாலையும் அணிந்தவரும், அஞ்ஜலிமுத்ரையுடன் கூடியவரும், ஸூர்யனை நிகர்த்தவருமான ஸ்ரீ பா₄ஷ்யகாரரை

ஆஶ்ரயிக்கிறேன்:] என்கிற ப்ரார்த்₂யமான வார்த்த₂கவிக்₃ரஹாகாரத்தை ஸேவிக்கப்பண்ண, அவனும் "ஆதி யஞ்சோதியுருவையங்குவைத்திங்குப்பிறந்த" என்கிறபடியே அர்ச்சாவிக்₃ரஹமாக எழுந்தருளப்பண்ணி ஸந்நிதியிலே கொண்டு வந்து வைக்க, திருக்கண்சாத்தியுகந்தருளி. அந்த விக்ரஹத்திலே தம்முடைய ஸர்வ ஶக்தியும் ப்ரகாஶிக்கும்படி கா₃டா₄லிங்க₃நம் பண்ணி 'இவ்விக்₃ரஹத்தைப் புஷ்ய மாஸத்தில் கு₃ருபுஷ்யத்திலே ப்ரதிஷ்டி₂ப்பியும்' என்று திருமுகமெழுதி தி₃நங்குறித்து அனுப்பியருள. ஆண்டானும் அப்படியே திருவடிகளிலே ஸேவித்து அந்த விக்ரஹத்தை எழுந்தருளுவித்துக்கொண்டு வந்து மூல விக்ரஹத்தையும் ஏறியருளப் பண்ணுவித்துத் திருமுகப்படியே திருப்ரதிஷ்டையும் செய்வித்தருளினர்.

இங்கே ப்ரதிஷ்டி₂ப்பிக்கிற அற்றைத்திவஸத்திலே திருமேனியிலே மிகவுந் தளர்ச்சியாய் ப₃லஹாநியுண்டாக இராமாநுசனும் இதேதென்று பராமர்ஶித்து 'ஆண்டானுக்கு எழுதிக்கொடுத்த தி₃வஸம் எது?' என்று கேட்டருள, அந்தத் திவஸம் அன்றுதானு யிருக்கக்கண்டு விஸ்மயப்பட்டு 'ஶீக்₄ரம் வருவது' என்று ஆண்டானுக்குத் திருமுகம் போகவிட்டருள. அவரும் திருமுகத்தை ஶிரஸா வஹித்து அப்படியே மீண்டெழுந்தருளித் திருவடிகளை ஸேவித்துக்கொண்டிருந்தார்.

அநந்தரம் அங்குத்தைக்கு அத்யந்தம் அந்தரங்கரான ஆண்டான் முதலான முதலிகளெல்லாரும் பழுத்திருக்கிற தேமாவைக் கிளித்திரள்கள் காத்துக்கொண்டிருக்குமாபோலே. தத்துல்யரான இவர்களும் விமலசரமவிக்ரஹத்தை 'கையிற்கனி' இத்யாதிப்படியே *மெய்யிற் பிறங்கியசீரைப் பழுக்க ஸேவித்துக் கொண்டு. "அடையார்கமலத்து அலர்மகள் கேள்வன்கையாழி யென்னும். படையோடு நாந்தகமும் படர்தண்டு மொண்சார்ங்க வில்லும் புடையார் புரிசங்கமும் இந்தப் பூதலங் காப்பதற்கென்று இடையே யிராமாநுச முனியாயின விந்நிலத்தே" என்றும்,

"ஶேஷோ வா ஸைந்யநாதோ₂ வா ஶ்ரீபதிர்வேதி ஸாத்விகை:|
விதர்க்யாய மஹாப்ராஜ்ஞைர்யதிராஜாய மங்க₃ளம் ||"

[ஶ்ரீப₄ாஷ்யகாரமங்க₃ளம் 19]

[இவர் ஆதிசேஷனோ? ஸேனைமுதலியாரோ? ஶ்ரிய:பதியோ? என்று பேரறிவாளர்களான ஸாத்விகர்களாலே உல்லேகி₂க்கப்படும் யதிராஜர்க்கு மங்க₃ளம்] என்றும்,

"தத்ரோத,ஞ்சதி மண்டபே யதிவர: கக்ஷ்யாந்தரஸ்தே, வஸந்
பூர்வம் ராவணிகம்ஸமுக்,யத,நுஜாந் ராமாநுஜாப்,யாம்
ஹதாந்
மத்வா ஶங்கர யாத,வாதி,முக,தோ பூ,யோऽவதீர்ணாந்
பு,வம் தத்,ப,ங்க,ாய க்ருதோத,யஸ் தது,சிதாம்
ராமாநுஜாக்,யாம் வஹந் ॥"

[திரேதை, துவாபரம் ஆகிய முன் யுகங்களில் ராமாநுஜர்களால் (தசரத ராமனின் தம்பியான லக்ஷ்மணனாலும் பலராமனின் தம்பியான கண்ணனாலும்) அழிக்கப்பட்ட ராவணி (ராவணபுத்ரனான இந்திரஜித்து) கம்ஸன் முதலான அஸுரர்களே சங்கரர், யாதவப்ரகாசர் முதலானவராக இப்புவியில் பிறந்திருப்பவர்களாக அறுதியிட்டு, அவர்களை அடக்குவதற்காக அவதரித்தருளியவரும், அதற்குத்தக்க ராமாநுஜன் என்னும் திருநாமத்தை வஹிப்பவருமான யதிராஜர் இரு மதிள்களுக்கு இடையிலுள்ள மண்டபத்தில் எழுந்தருளிப் பெருமைபெற்று விளங்குகிறார்.] என்றும்,

"வ்யாஸோ வா ப,க,வாந் பராஶரமுநி: ஸ்ரீஶௌநகோ வாऽத,வா, ஸாக்ஷாந்நாரத, ஏவ வா ஶட,ரிபுர் வாகீ,ஶ்வரோ வா ஸ்வயம் ।
லோகேஶ: புருஷோத்தம: ப,ணிபதிஶ் ஶேஷீ ஜக,ச்சே,ஷிணீத்யாக்,யாதும் ஜக,தாம் ஹிதாய ஸமபூ,த் ராமாநுஜார்யோ முநி: ॥"

[முனிவரான ஸ்ரீராமாநுஜர் பகவான் வ்யாஸரோ என்றும், பராசர முனிவரோ என்றும், ஸ்ரீசௌனகரோ என்றும், ஸாக்ஷாத் நாரதரோ என்றும், சடகோபரோ என்றும், ப்ருஹஸ்பதியோ என்றும், ஆதிசேஷனோ என்றும், லோகநாதனும் சேஷியான புருஷோத்தமன் தானோ என்றும், உலகுக்கு சேஷிணியான பெரிய பிராட்டியார் தானோ என்றும், யாவரும் புகழலாம்படி உலகங்களுக்கு நன்மையின் பொருட்டு அவதாரம் செய்தருளினார்] என்றும் சொல்லுகிறபடியே அநேக அவதார விசேஷமென்று ஆதரித்துக்கொண்டிருந்தார்கள்.

இத்தால், ஏவம்வித,மாஹாத்ம்யயுக்தரான இவருடைய வைப,வமும்,

"சரிதம் ரகு,நாத,ஸ்ய ஶதகோடி ப்ரவிஸ்தரம் |
ஏகைகமக்ஷரம் ப்ரோக்தம் மஹாபாதகநாஶநம்" ||

[ரகுநாதனின் சரித்திரம் நூறுகோடி கிரந்தம் விஸ்தாரமுள்ளது. அதில் ஒவ்வோரக்ஷரமும் பஞ்சமஹாபாதகங்களையும் போக்க வல்லது.] என்கிற சக்ரவர்த்தித் திருமகன் வைபவம்போலே அவாங்மநஸகோ₃சரமிறே. ஸாக₃ரத்தைக் கைந்நீச்சாலே கடந்து அக்கரையேறினாலும், உத₃தி₄யைச் சிருங்கித்தாலும் உடையவர் வைபவம் அடையச் சொல்லப் போகாதிறே. யதா₂மதி யதா₂ஶ்ருதமாகச் சொன்னதித்தனை. ப₃ஹுஶ்ருதராய் பு₃த்₃தி₄ப₃ாஹுள்ய முடைய பெரியோர்கள் விஶத₃மாகக் கண்டு கொள்ளக்கடவர்களே.

இப்படி அவதாரவிஶேஷமான இவருக்கு

"ஶரச்ச₂தம் வ்யதீயாய ஸவிம்ஶமதி₄கம் ப்ரபே₄:"

[ஜக₃த்₃கு₃ருவான எம்பெருமானாருக்கு நூற்றுக்குமேல் இருபது வருடங்கள் கழிந்தன] என்கிறபடியே நூற்றிருபத்தஞ்சிலே நூற்றிருபது திருநக்ஷத்ரம் பூர்ணமாய்த்து.

"வையம்மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே" என்னும்படியான இவர், தம்முடைய அவதார ரஹஸ்யஜ்ஞானத்தாலும், தம்முடைய விக்₃ரஹஸேவையாலும், தத்ப்ரத₃க்ஷிணநமஸ்காராதி₃களாலும், சதுரக்ஷரியாய்ச் சதுரமான தம்முடைய திருநாம வைப₄வத்தாலும், ஸ்வதி₃வ்யமங்க₃ள விக்₃ரஹத்₄யானத்தாலும், ததே₃க நிஷ்டை₂யாலும், தத்கைங்கர்யைகபரதையாலும், ப₄க்ஷ்ய ப்ரதா₃நாதி₃களாலும், மந்த்ரரத்ந ப்ரதா₃நாதி₃களாலும், ததர்த்₂யாம்ருத த₃ப்ரதிபாத₃நத்தாலும், ஸ்வபாது₃கா ப்ரதா₃நத்தாலும், ஸ்வபாத₃தீர்த்த₂ஸ்வீகாரத்தாலும், ஸ்வாபாவநமான ப்ரஸாத₃ ஸ்வீகாரத்தாலும், பாத₃ஸ்பர்ஶபவித்ரதையாலும், ஸஞ்சாரபூதமான பாத₃ஸஞ்சரணத்தாலும், ஸ்வபாவந கரஸ்பர்ஶத்தாலும், அப்படியேயான கடாக்ஷ விஶேஷத்தாலும், பஞ்சஸம்ஸ்காராதி₃களாலுண்டான ஸம்ப₃ந்த₄ விஶேஷத்தாலும்,

"புநந்தி பு₄வநம் யஸ்ய பாதா₃ஶ்ரிதபதா₃ஶ்ரிதா: |
கடாக்ஷாதி₃பி₄ரேவாத்ர ..."

[எவருடைய திருவடியை ஆஶ்ரயித்தவர்களின் திருவடியை அண்டினவர்கள்—தம் கடாக்ஷம், பேச்சு முதலானவற்றால்

உலகையே பரிசுத்தப்படுத்துவரோ] என்ற ஸ்வகீய ஸம்பந்தத்தாலும்,

"பா₃லமூகஜடா₃ந்தா₄ஸ்ச பங்க₃வோ ப₃தி₄ராஸ்ததா₂ |
ஸதா₃சார்யேண ஸந்த்₃ருஷ்டா: ப்ராப்நுவந்தி பராங்க₃திம் ||"
[பா₄ரத்₃வாஜஸம்ஹிதை 1-32]

[குழந்தைகளும், ஊமைகளும், மந்தர்களும், குருடர்களுங்கூட நல்லாசிரியனாலே கடாக்ஷிக்கப்பட்டார்களாகில் பரமபதமடைகிறார்கள்.] என்றும்,

"ஸாக்ஷாந் நாராயணோ தே₃வ: க்ருத்வா மர்த்யமயீம் தநும் |
மக்₃நாநுத்₃த₄ரதே லோகாந் காருண்யாச் சா₂ஸ்த்ர பாணிநா ||" [ஜயாக்₂யஸம்ஹிதை]

[தேவனான நாராயணனே மனிதவுருவை எடுத்துக்கொண்டு சாஸ்திரமாகிற கையினாலே ஸம்ஸாரத்தில் அழுந்திக் கிடப்பவர்களைத் தூக்கி விடுகிறான்] என்றும்,

"அந்வயாத₃பி சைகஸ்ய ஸம்யங்ந்யஸ்தாத்மநோ ஹரௌ |
ஸர்வ ஏவ ப்ரமுச்யேரந் நரா: பூர்வே ऽபரே ததா₂ ||"
[பா₄ரத்₃வாஜஸம்ஹிதை 1-31]

[ஹரியிடம் நன்கு ஆத்மஸமர்ப்பணம் செய்தவன் ஒருவனோடு ஸம்பந்தத்தாலேயே, அவனுக்கு முற்பட்டவர்களும் பிற்பட்டவர்களும் மோக்ஷமடைகின்றனர்.] என்றும்,

"பஸு₂ர்மநுஷ்ய: பக்ஷீவா யே ச வைஷ்ணவஸம்ஸ்₂ரயா: |
தேநைவ தே ப்ரயாஸ்யந்தி தத், விஷ்ணோ: பரமம் பத₃ம் ||"
[ஸா₂ண்டி₃ல்யஸ்ம்ருதி 1-15]

[வைஷ்ணவன் ஒருவனை ஆஸ்₂ரயித்திருப்பவர்கள், பசுவாகவோ, மனிதனாகவோ, பக்ஷியாகவோவிருந்தாலும், அவ்வொருவனாலேயே அவர்கள் அனைவரும் விஷ்ணுவின் பரமபதத்தை அடைகின்றனர்] என்றும் சொல்லுகிறபடியே ஏதேனுமாயுள்ளதொரு ஸ்வஸம்ப₃ந்த₄ விஶேஷத்தாலும், ஜ்ஞாத்ரஜ்ஞாத்ருவிபா₄க₃மற ஜக₃த்தையெல்லாம் உஜ்ஜீவிப்பித்தும், இனிமேலும் ஸ்வஸம்ப₃ந்தி₄களாயுள்ளவர்களை "ஆரியர்காள் கூறும்" என்று நியமித்தும் இப்படி அவதாரகார்யம் தலைக்கட்டினவாறே;

அங்கே அயர்வறும் அமரர்களோடே கூடி அடிமை செய்யத் திருவுள்ளமாய். — சேனையர்வானத்திருக்குந் தேவபிரானும் அயர் வறுமமரர்களதிபதியாய், 'பாம்பணை மேலாற்கு — பலபலவே ஆபரணம்' என்னும்படி பன்மணிப் பூணாரத்தையுமுடையனாய், "உடையார்ந்த வாடையன்" இத்யாதிப்படியே நடையாவுடைத் திருநாரணனாய், அரவினணையம்மானாய், எழில்மலர்மாதருந்தானும் இன்பம்பயக்க இனிதுடன் வீற்றிருந்து அமர்ந்து கூந்தல் மலர் மங்கைக்கும் மண்மடந்தைக்குங் கேள்வனாய், ஏழுலகுந் தனிக் கோல்செல்ல இப்படி "ஒண்டொடியாள் திருமகளும் நீயும்" என் னும்படி ததே₃கபோ₄க₃மாயுள்ள போ₄க₃ விபூ₄தியில் அம்ருதநச் சேர்த்தியாயெழுந்தருளியிருக்கிற அவ்விருப்பிலே தேவிமாராவார் திருமகள் பூமி ஏவ மற்று அமரர் ஆட்செய்ய, கருளப்புட் கொடி சக்கரப்படை வானநாடவெங்கார்முகில்வண்ணனாய், வைகுந்தங்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீ வைகுண்ட நாதனுக்கு "சென்றால் ஊரும் நிவாஸத₃ாஸபே₄த₃ங்கொண்டு வழுவிலா அடிமை செய்யவேண்டும்" என்று அபி₄வ்ருத்₃த₄ மநோரத₂த்தை யுடையராய், அதுசெய்யுமிடத்து 'முகப்பே கூவிப் பணிகொள்ளவேணும், செம்மாபாதபற்புத்தலை சேர்க்கவேணும், ஈறில் இன்பத்திருவெள்ளத்திலே மூழ்கவேணும், தாமரைக் கண்க ளாலே குளிரநோக்கவேணும்' என்றாப்போலே சில பரிமாற்றங் களை ஆசைப்பட்டு, "வானார் சோதி மணிவண்ணா! மதுசூதா! நீ அருளாய் உன் தேனே மலருந் திருப்பாதஞ் சேருமாறு வினையேனே" என்றும், "இமையோர்கள் குழாம் தொழு வதுஞ் சூழ்வதுஞ் செய் தொல்லைமாலைக் கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கு முண்டோ கண்கள் துஞ்சுதலே" என்றும் சொல்லுகிறபடியே கண்ணழிவற்ற ப்ராப்யத்வரை யையுடையராய், அத்தை ஆராத காதலையுடைய ஆழ்வார் அர்த்தித்தபடியே இவரும் அத்தை அடியொற்றிக்கொண்டு

**" ஸ்ரீமதி வைகுண்டே₂ தி₃வ்யலோகே "** [ஸ்ரீவைகுண்டகத்யம்-3]

[கைங்கர்யச் செல்வம் நிறைந்த வைகுண்டம் எனும் அப்ராக்ருத லோகத்தில்,] என்று தொடங்கி,

**"ஆத்மாநுரூபயா ஸ்ரியா ஸஹாஸீநம்"** [ஸ்ரீவைகுண்ட கத்யம்-3]

[(குணங்களால்) தனக்குத் தகுந்தவளாயிருக்கும் பெரிய பிராட் டியாரோடு கூட எழுந்தருளியிருப்பவனை] என்றும்.

"ப்ரத்யக்₃ரோந்மீலித ஸரஸிஜஸத்₃ருஶ நயநயுக₃ளம்"
[ஸ்ரீவைகுண்ட கத்யம்-3]

[அப்போதலர்ந்த தாமரைப் பூப்போலேயிருக்கிற திருக்கண்களை உடையவனை,] என்று தொடங்கி,

"தத்க்ஷணோந்மீலித புண்ட₃ரீக ஸத்₃ருஶ சரணயுக₃ளம்"
[ஸ்ரீவைகுண்ட கத்யம்-3]

[அப்போதலர்ந்த தாமரைப் பூப்போலேயிருக்கிற திருவடியிணையை உடையவனை] என்னுமளவும் இணைப்பாதங்களின் இடையிலுண்டானவற்றின் வடிவழகுகளையும், அநந்தரம் அதிமநோஹர கிரீட மகுட நூபுராந்தமாக முடிச்சோதி தொடங்கி அடிச்சோதியளவும் சாத்தின திருவணிகலன்களின் அழகையும்,

"ஸ்ரீமத்யா வைஜயந்த்யா வநமாலயா விராஜிதம்"
[ஸ்ரீவைகுண்ட கத்யம்-3]

[அழகையுடையதாய், வைஜயந்தி எனப்படுவதான வநமாலையாலே விளங்காநிற்பவனை] என்று கீழில் திருவாபரணஶோபைக்கு ப்ரபை₄போலவும் அதின் காந்திபூரம் நிறம்பெற வெள்ளமிட்டாற் போலவும் இருக்கிற மங்கலநல்வந மாலையையும், கீழில் ஆபரணத் தோபாதியாயிருக்கிற "அணியாராழியுஞ்சங்கமும்" என்னும்படியான ஶங்க₂சக்ரக₃தா₃(அ)ஸிஶார்ங்கா₃தி₃களாயுள்ள அமர் கொள் ஆழி சங்கு வாள் வில் தண்டாதி பல்படைகளையும்,

"ஸ்ரீமதி விஷ்வக்ஸேநே ந்யஸ்தஸமஸ்தாத்மைஶ்வர்யம், வைநதேயாதி₃பி₄: ஸ்வபா₄வதோ நிரஸ்த ஸமஸ்தஸாம் ஸாரிக ஸ்வபா₄வைர் ப₄க₃வத்பரிசர்யாகரண யோக்₃யைர் ப₄க₃வத் பரிசர்யைகபோ₄கை₃: நித்ய ஸித்₃தை₄ரநந்தைர் யதா₂யோக₃ம் ஸேவ்யமாநம்." [ஸ்ரீவைகுண்ட கத்யம்-3]

[கைங்கர்யச் செல்வத்துக்கு இட்டுப்பிறந்த ஸேனைமுதலியாரிடம் வைக்கப்பட்ட தம்முடைய எல்லா ஐஶ்வர்யத்தையுமுடையவனும், ஸம்ஸார ஸம்பந்தத்தால் ஏற்படும் எல்லாத் தன்மைகளும் இயல்வாகவே அற்றவர்களாய், பகவானுக்குக் கைங்கர்யம் பண்ணுவதற்கு இட்டுப் பிறந்தவர்களாய், பகவத் கைங்கர்யத்தைத் தவிரத் தங்களுக்கு ஒரு த₄ாரகமின்றிக்கேயிருப்பவர்களான கருடன் முதலான கணக்கற்ற நித்யஸூரிகளால் நின்ற நிலைகளுக்குத் தக்கபடி ஸேவிக்கப்படுமவனை.] என்னுமளவும் அமரர்கோன் அர்ச்சிக்கின்று அங்ககப்பணி செய்வர் விண்ணோர்களையும், அதற்குமேலே.

"தி₃வ்யாமலகோமலாவலோகநேந விஶ்வமாஹ்லாத₃-
யந்தம்" [ஸ்ரீவைகுண்ட கத்₃யம்-3]

[மிகத்தெளிவான அழகிய கடாக்ஷத்தாலே எல்லாச் சேதனரையும் உகப்பிக்கின்றவனை] என்று தொடங்கி வானுடமருங்குளிர் விழிகளாலே குளிரநோக்கும்படியையும், பன்னிலா முத்தந்தவழ்கதிர் முறுவல்செய்து சோதிவாய்திறந்து தி₃வ்யலீலாலாபாம்ருதங்களாலே அகிலஜநங்களையும் ஆநந்திப்பித்துத் தளிர்ப்பிக்கும்படியையும்,

"ப₄க₃வந்தம் நாராயணம் த்₄யாநயோகே₃ந த்₃ருஷ்ட்வா"
[ஸ்ரீவைகுண்ட கத்₃யம்-3]

[பகவானான நாராயணனை மனத்தாலே ஸாக்ஷாத்காரம் செய்து] என்று ப்ராப்ய ப₄க்தியோக₃ரீதியாலே "பகற்கண்டேன் நாரணனைக் கண்டேன்" என்று காணும்படியையும்,

"நித்யதா₃ஸ்யம் ச யதா₂வஸ்தி₂தம் அநுஸந்தா₄ய"
[ஸ்ரீவைகுண்ட கத்₃யம்-3]

[பகவான் எப்போதும் தனக்கு ஸ்வாமியாயிருப்பதையும், தான் எப்போதும் அவனுக்கு தாஸனாயிருப்பதையும் இயல்வானதாக அநுஸந்தித்து] என்று "அடியேனடைந்தேன் முதல் முன்னமே" என்கிற ஸ்வாப₄ாவிக ஸம்ப₃ந்த₄த்தை அநுஸந்திக்கும்படியையும்,

"கதா₃ஹம் ப₄க₃வந்தம் நாராயணம்...ஸாக்ஷாத்கரவாணி சக்ஷுஷா" [ஸ்ரீவைகுண்ட கத்₃யம்-3]

[பகவானான நாராயணனை நான் எப்போது கண்ணால் காண்பேன்?] என்று "மாண்குறள்கோலப்பிரான் மலர்த்தாமரைப் பாதங்கள் காண்பது எஞ்ஞான்றுகொலோ" என்றும் "பைகொள் பாம்பேறியுறை பரனே! உன்னை மெய்கொள்ளக் காணவிரும்பும் என் கண்களே" என்றும் சக்ஷுஸ்ஸுக்களாலே ப்ரத்யக்ஷஸாக்ஷாத்காரம் பண்ணும்படியையும்,

"கதா₃வா ப₄க₃வத்பாதா₃ம்பு₃ஜத்₃வயம் ஶிரஸா ஸங்க்₃ரஹீஷ்யாமி" [ஸ்ரீவைகுண்ட கத்₃யம்-3]

[பகவானுடைய திருவடித்தாமரையிணையைத் தலையாலே எப்போது நான் தரிப்பேன்] என்று "திருவல்லவாழ் நகருள் நின்ற பிரான் அடிநீறு அடியோங்கொண்டு சூடுவது என்றுகொலோ" என்றும், 'உலகு படைத்துண்ட எந்தை அறைகழற்சுடர்ப்பூந்தாமரை சூடுதற்கு அவா" என்றும் சொல்லுகிறபடியே பாதாரவிந்தங்களை ஶிரோபூஷணமாக த₄ரிக்கும்படியையும்,

"கதா₃ऽஹம் ப₄க₃வத்பாத₃ாம்பு₃ஜத்₃வயபரிசர்யாஶயா"
[ஸ்ரீவைகுண்ட கத்யம்-3]
என்று தொடங்கி
"தத்பாத₃ாம்பு₃ஜத்₃வயம் ப்ரவேக்ஷ்யாமி"
[ஸ்ரீவைகுண்ட கத்யம்-3]
[ஸர்வேஶ்வரன் திருவடிகளில் கைங்கர்ய ருசியாலே இதர விஷய போ₄காஸ்ரத்₃தை₄ நீங்கப்பெற்றவனும், ஸம்ஸார ஸம்பந்தத்தால் வரும் ராகம், த்வேஷம் முதலான இயல்வுகள் தன்னடையே அழியப்பெற்றவனும், என்றைக்கு நான் அத்திருவடித்தாமரை யிணையைக் கிட்டுவேன்?] என்னுமளவாக, பாதமடைவதன் பாசத் தாலே மற்றவன் பாசங்கள் முற்ற விடும்படியையும், திருவடிக்கீழ்க் குற்றேவல் செய்யும்படியையும்,
"கதா₃ மாம் ப₄க₃வாந் அதிஶீதலயா த்₃ருஶாऽவலோக்ய"
[ஸ்ரீவைகுண்ட கத்யம்-3]
[புருஷோத்தமனானவன் தன்னுடைய மிகக் குளிர்ந்த திருக்கண்க ளாலே கடாக்ஷித்து (இனிய பேச்சாலே கைங்கர்யத்திலே என்னை ஏவப்போவது எப்போதோ?)] என்று தொடங்கி எல்லாவற்றுலும் பக்கம் நோக்கறியாதே அமலங்களாக விழிக்கும்படியையும், முகப்பே கூவிப் பணிகொள்ளும்படியையும் அநுஸந்தித்துத் திரு வடிக்கீழ்க் குற்றேவல் செய்யும் பெரிய காதலை உடையராய் அத் தாலே "அடியேனடைந்தேன்" என்னும்படி மாநஸமாகக்கிட்டி,
"தூ₃ராதே₃வ ப₄க₃வந்தம் ஶேஷபோ₄கே₃ ஸ்ரீயா ஸஹாஸீநம் வைநதேயாதி₃பி₄: ஸேவ்யமாநம் 'ஸமஸ்தபரிவாராய ஸ்ரீமதே நாராயணாய நம:' இதி ப்ரணம்ய"
[ஸ்ரீவைகுண்ட கத்யம்-3]
[திருவனந்தாழ்வான் மடியிலே, பெரியபிராட்டியாரோடு கூட எழுந்தருளியிருப்பவனும், கருடன் முதலான நித்ய ஸூரிகளால் ஸேவிக்கப் படுமவனாயிருக்கிற பகவானை, 'எல்லாப்பரிவாரங்க ளோடும் கூடிய ஸ்ரீமானான நாராயணனுக்கு நமஸ்காரம்' என்று தூரத்திலேயே தண்டனிட்டு]என்று தொடங்கி அப்பேரோலக்கத் தைத் தூரக்கண்டு ஸேவிக்கும்படியையும், அணைவதரவணைமேற் பூம்பாவையாகம் புணருமவனை இமையோர்கள் குழாம் தொழு வதுஞ் சூழ்வதுஞ் செய்தொல்லைமாலைக் கண்ணாலே காணும் படியையும், "உற்றேன் உகந்து பணிசெய்து உனபாதம் பெற்றேன். ஈதே இன்னம் வேண்டுவது எந்தாய்' என்று மீளவும் பு₃ஹுமநோரத₂ங்களைப் பண்ணிநின்றுகொண்டு வாசலில் வான வர் அநுமதியுடனே உள்ளே புகும்படியையும் மநோரதித்து, "அடைந்தேன் உன்திருவடியே" என்று அவனைக்கிட்டி,

"ஃ நாராயணாய நம:" [திருமந்திரம்]
[நாராயணனுக்கு நமஸ்காரம்] என்று வழுவிலாவடிமையை அர்த்தித்துத் தத்ஸித்திக்கு "அடியேனடியாவி யடைக்கலமே" என்று ஆத்மாவை நிவேதிக்க, அவனும் குளிர்விழிகளாலே கரையழியும்படி கடாக்ஷிக்க, 'ஏது ஏது என்பணி?' என்னுது எல்லாவடிமைகளுஞ்செய்ய ஒருப்பட்டு "கைகளாலாரத்தொழுது தொழுது" "இரங்கி நீர்தொழுது" என்னும்படி ப்ரஹ்வாஞ்ஜலிபுடராய் அநுபவியா நின்றுகொண்டு—அத்யந்தம் ப்ரீதியுக்தனாய் ப்ரீதிப்ரகர்ஷத்தாலே கோவைவாய் துடிப்ப, மழைக்கண்ணுடன் நிற்கும்படியையும்

"ததோ ப₄க₃வதா ஸ்வயமேவ ஆத்மஸஞ்ஜீவநேந அவலோகநேந அவலோக்ய ஸஸ்மிதமாஹூய ஸமஸ்த க்லேஶாபஹம் நிரதிஶய ஸுக₂ாவஹம் ஆத்மீயம் ஶ்ரீமத் பாத₃ாரவிந்த₃யுக₃ளம் ஶிரஸிக்ருதம் த்₄யாத்வா அம்ருத ஸாக₃ராந்தர் நிமக்₃ந ஸர்வாவயவஸ் ஸுக₂மாஸீத"
[ஸ்ரீவைகுண்ட கத்யம் சூர்ணை-6]

[அதற்குப்பின் பகவான் தானே ஆத்மாவை உயிர்ப்பிக்கும் அழகிய கடாக்ஷத்தாலே குளிரக்கண்டு, புன்முறுவலோடு கூப்பிட்டு, எல்லாத் துன்பங்களையும் போக்கடிப்பதாய், எல்லையற்ற இன்பமளிப்பதான தன் திருவடித்தாமரைகளைத் தலையிலே வைப்பதாக தியானித்து, ஆநந்தமாகிற அமுதக்கடலில் மூழ்கிய எல்லா அவயவங்களையும் உடையவனாகி ஸுகமாக வாழக்கடவன்,] என்று மீளவும் தாமரைக்கண்களாலே அவலோகநதா₃நம் பண்ணும்படியையும் அபேக்ஷித்து, சோதிச்செவ்வாய்முகுளம் அவலோகியா அலராதிருந்தது. இப்போது ஸவிலாஸஸ்மிதத்தாலே அலர்ந்து

"ஆநயைநம் ஹரிஶ்ரேஷ்ட₂ த₃த்தமஸ்யாப₄யம் மயா !
விபீ₄ஷணோ வா ஸுக்₃ரீவ! யதி₃வா ராவண: ஸ்வயம் ||
[ரா: யு. 18-34]

[வானரர்களுள் சிறந்தவனான ஸுக்ரீவனே! இவனை அழைத்து வா; விபீஷணனாயிருந்தாலும், ராவணன் தானேயாயிருந்தாலும் இவனுக்கு என்னால் அபயமளிக்கப்பட்டுவிட்டது.] என்று ஆளிட்டழையாதே தானே வாவென்று அழைத்து, "துயரறுசுடரடி" என்றும் "பாதபங்கயமே தலைக்கணியாய்" என்றும் சொல்லும்படியான கமலமன்ன குரைகழல்களை "தலைசேர்த்து" "தன் தாளிணைக்கீழ்ச் சேர்த்து" என்னும்படியே பாதே₃பதா₄நம்போலே சேர்த்தருள

வேணும். மாயன் கோலமலரடிக்கீழ்ச் சுழிபட்டோடுஞ் சுடர்ச் சோதி வெள்ளமான அமுதவெள்ளத்து இன்பத்திரு வெள்ளத் திலே "சூழ்ந்ததனிற் பெரிய என் அவா" என்னும்படி அவகா ஹித்து, 'இங்கே ஶோகாபி₄கர்ஶிதமான கூ₃ாத்ரங்களாலே தாப த்ரயங்கள் போலன்றிக்கே, அங்கே நிரதிஶயஸுகத்தை அநுபவிக்க வேணும்' என்று ஸ்ரீவைகுண்ட₂க₃த்₃யத்திலே அர்த்தியாநின்று கொண்டு பரமப₄க்தி தலையெடுத்துப் பெரிய அபி₄நிவேஶத்துடனே பெரியபெருமாள் ஸந்நிதியிலே எழுந்தருளிப் பெரியபிராட்டியாரைப் புருஷகாரமாக முன்னிட்டுக்கொண்டு பெரியக₃த்₃யமான ஶரணா க₃திக₃த்₃யத்தைப் பெரிய ஆற்றாமையோடே திருவுள்ளத்திலே படும்படி விண்ணப்பஞ்செய்து ஶரணம்புக்கு, அநந்தரம் ஸ்ரீரங்க₃ க₃த்₃யத்தையும் விண்ணப்பஞ்செய்து, அத்தலையிலுண்டான ஸர்வ ஶக்தித்வாதி₃ கல்யாண கு₃ணங்களையும் தம்முடைய அஜ்ஞாந ஶக்திமுதலான அஸத்₃கு₃ணங்களையும் ஆவிஷ்கரித்து, ஆகிஞ்சந் யத்தையும் அறிவியாநின்று கொண்டு ஶரணம்புக்கு அத்யார்த்தராய் நிற்க, பெரியபெருமாளும் இவரபிப்ராயமறிந்து 'உமக்கு வேண்டு வதென்?' என்று வினவியருள.

உடையவரும் 'ஸம்ஸாரத்தில் அருசிபிறந்து வய:பரிணாம காலாதிக்ரமணம் பிறந்தது' என்று விண்ணப்பஞ்செய்ய, பெரு மாளும் 'காலத்துக்கு நாமன்றோ கடவோம்? இன்னம் சிறிது காலம் உம்மைக்கொண்டு இவ்வுலகந் திருத்தப் பார்த்தோம்; அறப்பதறினீரே' என்று திருவுள்ளம் உடைகுலைப்பட்டு 'இனி உமக்குச் செய்ய வேண்டுவது என்?' என்று கேட்டருள, அதுக்கு உடையவரும் 'அடியேனைக் காலக்கழிவு செய்யாமல் உன்பொன்னடிசேர்த்து ஒல்லை வேறேபோக எஞ்ஞான்றும் விடாதொழியவேணும்' என்ன, பெரியபெருமாளும் உகந்து

"சதுர்த₃ஶே ஹி ஸம்பூர்ணே வர்ஷே(அ)ஹநி ரகூ₄த்தம !
நத்₃ரக்ஷ்யாமி யதி₃ த்வாம் து ப்ரவேக்ஷ்யாமி ஹுதாஶநம் ॥
[ரா. அ. 112-25, 26]

[ராகவரே! பதினாலாவது வருஷம் முடிந்தபின் அடுத்த பகலில் உம்மைக் காணாவிடில் அக்னியில் நுழைந்துவிடுவேன்.] என்று நாட்கடலாகத் தம்பிக்கு இட்டதாகாமல்,

"க₂ட்வாங்கோ₃ நாம ராஜர்ஷி: ஜ்ஞாத்வேயத்தாமிஹாயுஷ: !
முஹூர்த்தாத் ஸர்வமுத்ஸ்ருஜ்ய க₃தவாநப₄யம் ஹரிம் ॥
தவாப்யேதர்ஹி கௌரவ்ய ஸப்தாஹம் ஜீவிதாவதி₄ ॥
[பாகவதம் 2-1-13, 14]

[கட்வாங்கனென்னும் ராஜரிஷியானவன் தன் ஆயுள் முஹூர்த்த நேரமே என அறிந்து அந்த நேரத்துக்குள் எல்லாற்றையும் விட்டு ஹரியைப் புகலாக அடைந்தான். குருகுலத்துதித்தவனே! இப்போது உனக்கு ஆயுளின் எல்லை ஏழுநாளாவாக உள்ளது.] என்கிறபடியே

" கர்மபாஶப்ரக்₃ரதி₂த:" [ஶ்ரீரங்ககத்யம் சூர்ணை 2]

[கர்மமாகிற கயிற்றுலே கட்டுண்டவன்.] என்ற இவர்க்கு 'இற்றைக்கு ஏழாநாள் அப்படியே செய்கிறோம்' என்ன, உடையவரும் 'நம்முடைய வாழ்வு வாய்க்கின்றவா!' என்று ஹர்ஷப்ரகர்ஷத்துடன் 'என்னுடைய ஸம்பந்த ஸம்பந்திகளெல்லாரும் நான் பெற்ற லோகம் பெறவேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய, 'பெருமாளும் 'அப்படியே பெறக்கடவர்கள்' என்று திருவாய்மலர்ந்தருளி, உடையவர்க்குத் தீர்த்தம் திருமாலை திருப்பரியட்டம் பூவார்கழல் ப்ரஸாதம் ப்ரஸாதித்தருளி விடைகொடுத்தருள. இவரும் 'மஹாப்ரஸாதம்!' என்று ஸார்வபௌ₄மரான ராஜாக்கள் பக்கல் நின்றும் நாடு பெற்றவர்கள் பெரிய ப்ரீதியோடே ராஜப₄வநத்தில்நின்றும் புறப்படுமாபோலே பொங்கோதஞ்சூழ்ந்த புவனியும் விண்ணுலகும் அங்காதுஞ்சோராமே ஆள்கின்ற எம்பெருமான் செங்கோலுடைய திருவரங்கச்செல்வனாரான ஶ்ரீரங்கராஜர் பக்கல்நின்றும் திருநாடாகிற மஹாராஜ்யத்தைப் பெற்று அந்த ராஜகுல மாஹாத்ம்யத்தாலே வந்த ப்ரீத்யுத்₃த₄ருதிதோன்ற ஶ்ரீரங்கராஜதாநியிலும் புறப்பட்டு மடமேயெழுந்தருளி அணைத்துக்கொத்திலுண்டானவர்களையும் சித்தமகிழ்ச்சியுடன் அனுப்பியருளி ஶிஷ்யவர்க்கங்களாயுள்ளவரெல்லார்க்கும் ஒருகாலும் அருளிச்செய்யாத அர்த்த₂ விஶேஷங்களையெல்லாம் மூன்று நாளாக ப்ரஸாதித்தருளி 'இவ்வர்த்தங்களையெல்லாம் நீங்களும் விஶ்வஸித்து உங்களைப்பற்றினார்க்கும் பரம்பரையாய் உபதேஶித்துப் போருங்கோள்' என்று அருளிச்செய்ய. முதலிகளெல்லாரும் அதிஶங்கைபண்ணி. 'இது என்?' என்று விண்ணப்பஞ்செய்ய 'இனி ஒளிக்கவொண்ணாது' என்று திருவுள்ளம்பற்றி 'இற்றைக்கு நாலாநாள் பெரியபெருமாள் திருவடிகள் ஏறப்போக நினையாநின்றோம்' என்று அருளிச்செய்தருள, இதைக்கேட்டு முதலிகளெல்லாரும் கடல்கலங்கினாப்போலே கலங்கி " உடையவர் வியோகத்திலே ஆத்மத்யாகம் பண்ணக்கடவோம்" என்று தேறியிருந்தமையைத் திருவுள்ளம்பற்றியருளி. உடையவரும் 'வாரிகோள் முதலிகாள்! நம்முடைய வியோகத்தில் ஆத்மத்யாகம் பண்ணினருண்டாகில், பெரியநம்பி ஆளவந்தார் ஶ்ரீபாதமே! நம்

மோடு அவர்களுக்கு ஸம்பந்தமில்லையாய் நித்யஸூரிகளோலக்கத்திலும் புகுரப்பெறுதே. நம் சடகோபர் திருவுள்ளத்தையும் மறுத்தவர்களாய் அத₄:பதிக்கக்கடவீர்கள்" என்று அருளிச்செய்து அவர்களைத் தேற்றித் தரிக்கப்பண்ணினார். அநந்தரம்

" அத்₃யைவாஹம் க₃மிஷ்யாமி லக்ஷ்மணேந க₃தாம் க₃திம் "
[ரா-உ. 107-3)]

[லக்ஷ்மணன் சென்ற (பரலோக) வழியில் இன்றே செல்வேன்.] என்கிறபடி தாமும் ஆழ்வான் வழியே பின்சென்று,

"இத்த₂ம் ப்ராப்தே ஸபதி₃ பரமவ்யோமஶிஷ்டாக்₃ரக₃ண்யே"
கூராதீ₄ஶே நிக₃மஶிக₂ர வ்யாக்ரியாலம்படத்வம் ।
ஶிஷ்யஸ்தோமாந் ஶ்ருதிகு₃ரு முகே₂ ரங்கி₃கார்யேணஸாகம்
விந்யஸ்யோச்சை:பரமபத₃மத₃ாரோடு₄மைச்ச₂த்₃-
யதீந்த்₃ர: ॥' [தி₃வ்யஸூரிசரிதம் 18-95.]

[இவ்வண்ணமாக சிஷ்டர்களுள் சிறந்தவரான கூரத்தாழ்வான் சடக்கென ஸ்ரீ வைகுண்டத்தை அடைந்தவளவில், வேதாந்த வ்யாக்யானத்தில் திறமையையும், ஶிஷ்ய ஜனங்களையும், ஸ்ரீரங்க நாதனுடைய கைங்கர்யத்தையும், வேதாசார்யபட்டர் முதலானோரிடத்திலே வைத்தருளிப் பின்பு உயர்ந்ததான பரமபதத்தை ஏறியருளுவதற்கு உடையவர் திருவுள்ளம் பற்றியருளினார்.]

' காஸாராதி₃மதி₃வ்யஸூரி க்ருதிஸத் ஸோபாநப த்₃த₄ாம்
த்₃வய ஸ்ரீமந்த்ரோப₄ய பார்ஶ்வத₃ண்ட₃க₄டிதாம்
ஸ்ரீப₄ாஷ்யகீலாந்தி₃ராம் ।
நிஶ்ரேணிம் நிகி₂லோ ஜநஶ்ச பரமவ்யோமஸ்த₂லீப்ராபிகாம்
ஸ்வஸ்வாசார்யநிருபிதார்த்த₂வஶத: ப்ராப்யாதி₄ ரோஹேத்
ஸதா₃ ॥' [தி₃வ்ய ஸூரிசரிதம் 18-96]

[பொய்கையாழ்வார் முதலான ஆழ்வார்களுடைய அருளிச்செயலாகிற சிறந்த படிகளாலே கட்டப்பட்டதும், துவயம், திருமந்திரம் என்னும் இரண்டு பக்கத்தடிகளை உடையதும், ஸ்ரீபாஷ்யமாகிற் முளைகளாலே அசையாமலிருப்பதும், பரமபதத்தை அடைவிப்பதுமான ஏணியை-தத்தம் ஆசார்யர்களாலே உபதேசிக்கப்பட்ட அர்த்தங்களாகிற வழியாலே அடைந்து எல்லா ஜனங்களும் எப்போதும் ஏறி இன்புறக்கடவர்கள்.]

" இத்யாஶாஸ்ய ஸரஸ்ஶட2ாந்தகமுக2 ஸ்ரீதி3வ்யஸூரியாக்ருதி:
ஆசார்யஸ்ய ச தத் ப்ரப3ந்த4 நிவஹைஸ்ஸார்த்த4ம்
ப்ரதிஷ்ட2ாப்ய ச |
ஸ்ரீரங்க3ாதி3மத4ாமஸு ஸ்வபரமபூ4ச்ச்2ரீதி3வ்யஸூரிவ்ரஜை:
ஸாகம் தத்பரமம் பத3ம் ஜிக3மிஷு: ஸ்ரீமாந் ஸ
ரர்மாநுஜ: ||" [திவ்யஸூரிசரிதம் 18-97]

[முற்கூறியபடியாக மங்களாஶாஸனம் செய்தருளி, அந்த ஸ்ரீபகவத் ராமானுஜர், பொய்கையாழ்வார். நம்மாழ்வார் முதலிய ஆழ்வார்களுடைய அர்ச்சா விக்ரஹங்களையும், ஸ்ரீமந்நாத2முனிகள் முதலான ஆசார்யர்களுடைய விக்3ரஹங்களையும், அவர்களுடைய பிரபந்தங்களோடு கூட ஸ்ரீரங்கம் முதலான திருப்பதிகளிலே பிரதிஷ்டை செய்து தாம் நித்யஸூரிகளோடுகூடிய அப்பரமபதத்தை அடையத் திருவுள்ளமுடையவரானர்.] என்கிறபடியே இங்குச் செய்ய வேண்டும் கார்யங்களெல்லாம் செய்து தலைக்கட்டி க்ருதக்ருத்யராய், நாலாநாள் அங்கே திருநாடேற எழுந்தருளத் திருவுள்ளமாயிருக்க;

அவ்வளவிலே பெரியபெருமாளைத் திருவாராத4நம் பண்ணிப் போரும் ஸ்ரீரங்க3ராஜபட்டர், பெரியபெருமாள் பட்டர் முதலானர் பெரியபெருமாள் உடுத்துக்களைந்த பீதகவாடை சூடிக்களைந்த தி3வ்யமால்யப்படி சாத்துப்படிகள் அவர்ப்ரஸாத3ம் தொடக்கமான ப்ரஸாத3 விஶேஷங்களையும் போரத் தளிகையிலே எடுப்பித்துக் கொண்டு ஸர்வவாத்3யகே4ாஷத்துடன் கொண்டுவந்து ப்ரஸாதி3த்தவற்றை ஶிரஸாத4ரித்து ஸேவித்து ஸ்விகரித்த அநந்தரம், அவர்களுக்கு உகப்பான பாஞ்சராத்ர ஸம்ஹிதைகளில் ஜ்ஞானகாண்ட3ங்களை அநுஸந்தி4த்து ஸேவித்துக்கொண்டிருந்து ஏவம்வித4மான தூர்யகே4ாஷத்தைக்கேட்டு ஹ்ருஷ்டராய் வைகுண்ட2 நிர்யாணநிரதராய் அதுக்கு ப்ரயாணபாதே2யமான த்3வயத்தை ஆவ்ருத்தி பண்ணுநிற்கிறவர் தடஸ்த2ரைக் கடாக்ஷித்தருளித் தாம்ரஸ்த2மான கூடஸ்த2 ஸ்ரீஸூக்தியையும் ஸ்ரீப4ாஷ்யத்தையும் க்ஷேமமான நிக்ஷேபமாக ஸ்த2ாபிக்கும்படி ஆஜ்ஞாபித்து, ஸ்ரீப4ாஷ்யத்தை வர்த்தி4த்து நடத்திக்கொண்டு போரும்படி நடாதூராழ்வானைக் கடாக்ஷித்து, அவர்க்கு

" ஸத்குர்வதா ஸம்ஸதி3 ஶிஷ்யவர்க்க3ாநநந்யலப்4யைரதி4-
கைஶ்ச சிஹ்நை: |
ஸ்ரீப4ாஷ்யஸிம்ஹாஸநமாத்மகீயம் யஸ்மை ச த3த்தம் யதி
ஶேக2ரேண ||" [நடாதூராழ்வான் தனியன்]

[திருவோலக்கத்தில் சிஷ்யவர்க்கங்களுக்குப் பரிசளித்து வந்த யதி ராஜராலே, மற்றவர்களிடமில்லாத அதி₄கமான தகுதிகளைக் கொண்டு தன்னுடையதான ஸ்ரீபாஷ்யஸிம்ஹாஸனம் யாதொரு நடாதூராழ்வான் பொருட்டுக் கொடுக்கப்பட்டதோ.] என்னும்படி ஸ்ரீபா₄ஷ்யஸிம்ஹாஸநத்தை ப்ரஸாதி₃த்து, அநந்தரம் மூந்தற ப்ரஸாதி₃த்த வேதா₃ந்தா₃சார்ய பூ₃தத் திற்குமேல்

"கிந்து ப்ரபத்திப₃லதாரித விஷ்ணுமாய-
மத்₃வம்ஶ்ய ராஜகுல து₃ர்லலிதம் கிலேவம் |
ஸ்ரீரங்க₃ராஜகமலாபத₃லாலிதத்வம்
யத்₃வாऽபராத்₄யதி மம ஸ்துதிஸாஹஸேऽஸ்மிந் ||"
[ரங்கராஜஸ்தவம் 1-17]

[ஆயினும் ப்ரபத்தியின் மிடுக்கினால் தாண்டுவிக்கப்பட்ட எம் பெருமானுடைய மாயையை உடையவர்களான என் முன்னோர் களின் சிறந்த குலத்தில் பிறந்ததனாலுண்டான செருக்கு (என்னை) இப்படித் துதிபாடும்படி செய்ததன்றோ. அல்லது ஸ்ரீரங்கநாச்சியார், ஸ்ரீரங்கநாதன் ஆகிய இருவருடைய திருவடிகளிலும் சீராட்டி வளர்க்கப்பெற்றமை எனக்குண்டான இந்தத்துதிசெய்தலாகிற துணிச்சலான காரியத்தில் குற்றவாளியாகின்றது,] என்னும்படி யான ராஜகுலமாஹாத்ம்யத்தை உடையராகையாலே ப்ரபத்த் யர்த்த₂ ப்ரதிபாத₃கமாய் ப்ரமாணசரமமான ஸ்ரீஸூக்திஸிம்ஹா ஸனத்தையும் அந்தப்பெரிய பரிஷத்திலே பெரிய பட்டர்க்கு இட் டருளி, கந்தாடையாண்டானைக் கடாக்ஷித்து ப்ரமாத்ருசரமமான தம்முடைய சரமவிக்₃ரஹ கைங்கர்யத்தைக் கல்பித்தருளி, திருக் குருகைப்பிரான் பிள்ளான் முதலான முதலிகளைப் பார்த்து 'ப₄ட்ட ருக்கு இஷ்டமாயிருங்கோள்' என்று அருளிச்செய்து கோயிலனைத்துக் கொத்தையும் அழைப்பித்து அபராத₄க்ஷாமணம் பண்ணிக்கொண்டு வேண்டிக்கொள்ள, அவர்களும் 'தே₃வரீருக்கு ஒரு அபராத₄ம் உண்டோ? உலகங்கட்கெல்லாம் ஒருயிரான தேவரீரை இழந்து எங்ஙனே த₄ரிப்போம்?' என்று கண்பனி சோரநிற்க, உடைய வரும் 'அன்பொடு தென்திசை நோக்கிப் பள்ளிகொள்ளும் அணி யரங்கனிருக்க, உங்களுக்கு ஒரு தாழ்வில்லை; பெரியபெருமாள் ஸ்ரீகார்யம் ஆராயுமிடத்து ப₄ட்டரை முன்னிட்டு ஆராய்ந்து போருங்கோள்; நம்பெருமாள் கைங்கர்யத்தைக் குறைவற நடத்திக் கொண்டு ஸ்ரீவைஷ்ணவர்களையும் வரவணைத்துக்கொண்டு போருங்

கோள்' என்று கல்பித்தருளி, அவர்களை பட்டர் திருக்கையிலே காட்டிக்கொடுத்தருளி, பட்டரைப்பார்த்தருளி 'உமக்குத்தந்தையும் தாயுமாவாராய் ப்ரமேயசரமமான பெரியபெருமாள் திருவாராதநத்தைப் பெருக்க நடத்திக்கொண்டு, நம்முடைய தர்ஶநத்தையும் நன்றாய்ப் பராமர்ஶித்து நடத்திக்கொண்டு போரும்' என்று நியமித்தருளினார்.

அநந்தரம் ஸமூஹத்திலுண்டான ஸ்ரீவைஷ்ணவர்களைப் பார்த்துப் பின்னையும் அவர்களுக்கு அருளிச்செய்தபடி:— 'ஒருவன் ப்ரபந்நனானால் அவனுடைய ஆத்மயாத்ரை ஈஶ்வராதீநமாகையாலே அதுக்குக் கரையவேண்டா; கரைந்தானாகில் ஆத்மஸமர்ப்பணம் பொய்யாமித்தனை. இனி இவனுடைய தேஹயாத்ரை கர்மாதீநமாகையாலே, அதுக்குக் கரையவேண்டா; கரைந்தானாகில் நாஸ்திகனுமித்தனை, ஆகையாலே, உபயயாத்ரையிலும் இவனுக்கு அந்வயமில்லை' என்று அருளிச்செய்ய. முதலிகளும் 'ஆகில் எங்களுக்கு இருக்கும் நாளைக்குக் காலக்ஷேபமிருக்கும்படி எங்ஙனே?' என்ன. உடையவரும், 'உபாயாம்ஶத்தில் அந்வயியாதே ப்ராப்யமான பகவத்பாகவத கைங்கர்யத்திலே அந்வயியுங்கோள், ப்ரபந்நாதிகாரிக்கு முன்னடிபார்த்து வர்த்திக்க வேண்டுவன-மூன்று விஷயமுண்டு; அவையாவன-அநுகூலரென்றும், ப்ரதிகூலரென்றும், அநுபயரென்றும்; அநுகூலராவார்-ஸ்ரீவைஷ்ணவர்கள்; ப்ரதிகூலராவார்-பகவத் த்வேஷிகள்; அநுபயராவார் ஸம்ஸாரிகள். இதில் அநுகூலரைக் கண்டால் சந்தநகுஸுமதாம்பூலாதிகளைக் கண்டாற்போலவும், நிலாத் தென்றல்களைக் கண்டாற்போலவும், அபிமதவிஷயத்தைக் கண்டாற்போலவும் உகந்து போரக்கடவன்; ப்ரதிகூலரைக்கண்டால் ஸர்ப்பாக்நிகளைக் கண்டாற்போலே வெருவி வர்த்திக்கக் கடவன்; அநுபயரைக் கண்டால் காஷ்ட லோஷ்டாதிகளைக் கண்டாற்போலே த்ருணீகரித்து வர்த்திக்கக்கடவன். அவர்கள் அநுகூலித்தார்களாகில் ஆத்மஜ்ஞானத்தை உபதேஶிக்கவும்; அநுகூலியார்களாகில் ஐயோ! என்று க்ருபைபண்ணிப் போரவும்; இப்படி செய்யவொட்டா தொழிகிறது, அர்த்தகாமப்ராவண்யம். அர்த்தகாமமடியாக ஸ்ரீவைஷ்ணவர்களை அநாதரிக்குமாகில், ஸார்வபௌமனை ராஜபுத்ரனை ராஜஸந்நிதியிலே பரிபவித்தால் ராஜா வெறுத்திருக்குமாபோலே எம்பெருமான் திருவுள்ளம் வெறுக்கும். அர்த்தகாமமடியாக ப்ரதிகூலரை ஆதரிக்குமாகில்

ஸார்வபௌமனை ராஜாவின் மஹிஷீ க்ஷுத்ர ஜந்துக்கள் பக்கல் மடிப்பிச்சைபுக்கால் ராஜாவுக்கு அவத்யமாகையாலே ராஜா வெறுக்குமாபோலே எம்பெருமான் இவனை வெறுத்திருக்கும்; அர்த்தகாமமடியாக அநுபயரை ஆதரிக்குமாகில், ரத்நத்திற்கும் பலகறைக்கும் வாசியறியாதாப்போலே பிறந்த ஜ்ஞாநம் கார்யகரமாய்த்தில்லையென்று எம்பெருமான் இவனை அநாதரிக்கும்' என்று அருளிச்செய்தருளினர்.

பின்பு எம்பெருமானர் நம்பெருமாள் ஸந்நிதிக்கு பட்டரைக் கூட்டிக்கொண்டு எழுந்தருளிப் பெருமாளை ஸேவித்து பட்டருக்கு முன்னாகத் தீர்த்த ப்ரஸாதங்களை ப்ரஸாதிப்பித்து. பின்பு தாமும் தீர்த்தப்ரஸாதமும்பெற்று, முதலிகளைக் குறித்து 'முன்னுக்கு தர்ஶந ப்ரவர்த்தகராவார் இவர்' என்று பட்டரைக் காட்டியருளி. 'வாரீர் பட்டரே! மேல்நாட்டிலே வேதாந்தியென்று ஒரு பெரிய வித்வான் இருக்கிறனென்று கேட்டோம். நீர் அங்கேறப்போய் அவனை நம் தர்ஶநப்ரவர்த்தகனாம்படி திருத்தும்' என்று அருளிச்செய்து, பட்டரையுங் கூட்டிக்கொண்டு மடமே யெழுந்தருளி, ஸ்ரீபாதத்து முதலிகளெல்லாரையும் அழைத்து, 'நம்முடைய விஶ்லேஷத்தில் அவிவேகம் பண்ணினீர்களாகில் நம்மாணை' என்று ஆஜ்ஞாபித்து. எல்லார் கையாலும் தம் திருவடிகளைத் தொடுவித்துச் சூளுறவுகொண்டு முதலிகளைத் தீர்த்தங் கொண்டு அமுது செய்யப்பண்ணி. பின்னைப் பிள்ளையாழ்வான் உக்கலாழ்வான் கோமடத்தாழ்வான் சேட்டலூர்ச்சிறியாழ்வான் வேதாந்தியாழ்வான் முதலானவர்களைக் கந்தாடையாண்டான் திருக்கையிலே காட்டிக்கொடுத்தருளியும். எச்சான் அநந்தாழ்வான் தொண்டனூர்நம்பி மருதூர்நம்பி முதலானவர்களை அருளாளப்பெருமாளெம்பெருமானர் திருக்கையிலே காட்டிக் கொடுத்தருளியும். பட்டர் கணியனூர்ச் சிறியாச்சான் சட்டம் பள்ளிச்சீயர் பெரியாண்டான் சிறியாண்டான் முதலானவர்களை எம்பார் திருக்கையிலே காட்டிக்கொடுத்தருளியும், கிடாம்பியாச்சான் கிடாம்பிப்பெருமாள் எங்களாழ்வான் நடாதூராழ்வான் முதலானவர்களைத் திருக்குருகைப்பிரான் பிள்ளான் திருக்கையிலே காட்டிக்கொடுத்தருளியும், மாருதிப்பெரியாண்டான் மாறெனேர் நில்லா மாருதிச்சிறியாண்டான் அரணபுரத்தாழ்வான் ஆசூரிப் பெருமாள் முனிப்பெருமாள் அம்மங்கிப்பெருமாள் முதலானவர்களை நடுவிலாழ்வான் திருக்கையிலே காட்டிக்கொடுத்தருளியும் இன்னும் இருந்தவர்களை இருந்தவர்கள்கையிலே காட்டிக்கொடுத்தருளியும்,

பின்பு பட்டரைப் பார்த்தருளி 'கூரத்தில் ஆழ்வானையும் கந்தாடை ஆண்டானையும்போலே, கூரகுல திலகரான நீரும் வாதூலகுலதிலகரான கந்தாடையாண்டானும் தம்மடியாகவுண்டான ஸௌப்ராத்ரத்தையுடையராய்,

"மச்சித்தா மத்₃க₃தப்ராணா போ₃த₄யந்த: பரஸ்பரம்"
[கீதை 10-9]

[என்னிடமே நெஞ்சை வைத்தவர்களாய் என்னிடம் உயிரையே வைத்தவர்களாய், ஒருவர்க்கொருவர் (என் குணங்களை) உணர்த்துகின்றவர்களாய்] என்னும்படியா யிருங்கோள்' என்று அருளிச் செய்து. ஸ்ரீவைஷ்ணவர்களைப்பார்த்து,

"படி₂த்வா பா₄ஷ்யம் தத்ப்ரவசநமஸக்தௌ ஶடா₂ரிபோர்
கி₃ரி ஶ்ரத்₃த₄ா வாஸ: ப்ரபு₄பரிசிதஸ்தா₂நநிவஹே |
ப்ரபே₄ா: கைங்கர்யம் வா ப்ரபத₃நமநோரர்த்த₂மநநம்
ப்ரபந்நாநாம் வா மே ப₄வது பரிசர்யாபரிசய: |
குடீம் க்ருத்வா தஸ்மிந் யது₃கி₃ரிதடே நித்யவஸதி:
ஷட₃ர்த்தா₂ஶ்ஶீலஸ்ய ப்ரபத₃நவிதௌ₄ ஸாத₄கதமா: ||"
[எம்பெருமானார் ஸ்ரீஸூக்தி]

[(1) ஸ்ரீபாஷ்யத்தைக் கற்று சிஷ்யர்களுக்கு உபதேசிக்கை (இது இயலாவிடில்) (2) நம்மாழ்வார் முதலானோருடைய அருளிச் செயல்களில் ஈடுபட்டு ஓதியும் ஓதுவித்தும் செல்லுகை (இதுவும் இயலாவிடில்) (3) எம்பெருமான் உகந்தருளின திவ்யதேசங்களில் வாழ்ந்து அவனுக்குக் கைங்கர்யம் செய்வது (இதுவும் இயலாவிடில்) (4) திருநாராயணபுரம் போன்ற திவ்யதேசத்தில் ஒரு குடில்கட்டி வாழ்வது (இதுவும் இயலாவிடில்) (5) ப்ரபத்திமந்திரமான த்வயத்தின் அர்த்தத்தை அநுஸந்தித்தல் (இதுவும் இயலாவிடில்) (6) என்னை சரணமடைந்தவனுக்குக் கைங்கர்யம் செய்துவாழ்வது என்னும் ஆறு செயல்கள் ப்ரபத்தி நிலைக்கு மிகச்சிறந்த உதவிசெய்பவை] என்று இருக்கும் நாள் பண்ணலாங்கைங்கர்யம் ஆறுஉண்டு; அவையாவன:—ஸ்ரீபாஷ்யத்தை வாசித்தும் வாசிப்பித்தும் போருகை; அதற்கு யோக்யதை இல்லாவிடில், அருளிச்செயலை ஓதியும் ஓதுவித்தும் போருகை; அதற்கும் யோக்யதை இல்லாவிடில் உகந்தருளின நிலங்களிலே அமுதுபடி சாத்துப்படி முதலானவற்றையுண்டாக்கி நடத்திக்கொண்டு போருகை; அதற்கும் யோக்யதையில்லையாகில் திருநாராயணபுரத்திலே ஒரு குடில் கட்டிக் கொண்டிருக்கை; அதற்கும் யோக்யதையில்லையாகில், த்₃வயத்தை

அர்த்த₂ாநுஸந்த₄ாநம் பண்ணிப் போருகை; அதற்கும் யோக்யதையில்லையாகில், என்னுடையவனென்று அபி₄மாநிப்பான் யாவனொருவன் பரமபா₄க₃வதன் அவனுடைய அபி₄மானத்திலே ஒதுங்கிப்போருகை' என்றும், இவற்றின் ப்ரிய ப்ரியதர ப்ரியதமங்கள் இன்னதென்றும், "ப்ராப்தி ப்ரதிப₃ந்த₄கமான ப₄க₃வத் பா₄க₃வத ஆசார்யவிஷயங்களில் அபசாரத்தை வருந்தியும் பரிஹரித்தும் போருங்கோள்" என்றும் இவை முதலானவைகளாயுள்ள அநேக ஹிதங்களை ப்ரஸாதித்து அவற்றை உபஸம்ஹரித்தருளினார்.

அநந்தரம் ஸகலமங்களவாத்யங்களும் ஆரவாரிக்க, அநேக திவ்ய ப்ரப₃ந்த₄ாநுஸந்த₄ாநத்₄வநி எங்கும் பூரிதமாக அலங்காரத் திருமஞ்சநங் கண்டருளித் திருவொற்றுடை சாத்தித் திருப்பரியட்டஞ்சாத்தி, ஶுத்₃த₄ாசமநபூர்வகமாக நித்யாநுஷ்ட₂ாநங்கள் நடத்தியருளுகையில் அரைக்திபாராமல் அர்க்யத்தையும் உத்திஷ்ட₂மாநராய்நின்றே செய்தருளி, தச்சே₂ஷத்தையுந் தலைக்கட்டியருளி, திருத்வாதஶநாமங்களையுந் தரித்தருளி, திருமணிவடம் திருப்பவித்ரம் திருமாலைப்ரஸாதம் பரியட்ட ப்ரஸாதங்கள் முதலானவற்றையுஞ் சாத்தியருளி, தீர்த்தங்களும் ஸ்வீகரித்து, குருபரம்பராபூர்வகமாக ரஹஸ்யத்ரயத்தையும் ஸார்த்த₂மாக அநுஸந்தி₄த்து, பெரியபெருமாள் திருவடிகளை உத்தேஶித்து த₃ண்டன் ஸமர்ப்பித்து, முதலிகளையும் அநுவர்த்தித்து அநுமதிகொண்டு ஆளவந்தார் திவ்யமங்களவிக்ரஹத்தை த்₄யாநித்துக்கொண்டு பத்மாஸநஸ்தராய் எழுந்தருளியிருந்து பரவாஸுதேவரிடத்திலே பரமபக்தி நடந்து செல்ல, அநந்தரம் யோகத்தில் பரமயோகியான தம்மைப்பரமயோகி₃ க₃ம்யவிஷயமான தத்விஷயத்திலே விநியோகித்து, பின்பு "பத்₃மநேத்ரே ந்யமீலயத்" [தாமரைக்கண்களை மூடியருளினார்] என்கிறபடியே திருக்கண்களைச் செம்பளித்தருளிப்பரவஶகா₃த்ரராய், எம்பார் திருமடியிலே திருமுடியும் வடுகநம்பி திருமடியிலே திருவடிகளுமாகக் கண்வளர்ந்தருளி,

"மாகு₄ஶுத்₃த₄த₃ஶம்யாம் து மத்₄யாஹ்நே மந்த₃வாஸரே ।
யோகி₃ராஜஸ் ஸ்வபே₄ாகீ₃ஶபா₄வம் ஸ்வே பே₄ ஸமப்₄யகா₃த் ॥"
[ப்ரபந்நாம்ருதத்தில் எடுக்கப்பட்ட ஶ்லோகம் 68-25, 26.]

[மாசி மாதத்தில் சுக்லபக்ஷத்தில் தசமிதிதியில் சனிக்கிழமையில் நடுப்பகலில் தன்னுடையதான திருவாதிரை நக்ஷத்ரத்தில் யதிராஜரான உடையவர் ஆதிசேஷனாகிற தாமான தன்மையை

அடைந்தார்.] என்னும்படியான திவஸத்திலே தம்முடைய பூர்வாவதாரமான ஆயிரஞ்சுடர்வாய் அரவணையோடே நம்பி மூத்தபிரானைப்போலே எம்பெருமானாரான இவரும் கூடியருளினர், இவ்வ்ருத்தாந்தத்தைப் பின்னும்:—"பின்பு மன்பருடன்களித்த சீர் பெரும்பூதூரெதிராசன், இன்பமுடனு மிசைந்தொரு நூற்றிருப தாண்டிங் கிருந்ததற் பின், அன்பாலாழ்வானுண்டானற் குமரர்க் கடியா முடிபுனைந்து; மன்பதையை வாழ்வித்தாங் கமருமென வாழ் வித்தருளா," "ஆராமஞ்சூழரங்கர்தமை மலர்மாமகளையடி யிறைஞ் சித், தாரீர்சரணந்தனையென்னத் தந்தோமெனலுமெதிராசன், பாரோர்பரவும் பாகவதர் பிரிவால் பரிவில் படர்கூரச் சீரார் திரு நாடடைந்திருந்த சீடனுடனே சேர்ந்தனனால்." இப்படி சொல்லப் படுமதான வைபவத்தையுடைய இவரும்

"யதா பாதோதரஸ் த்வசா விநிர்முக்த:"
[ப்ரஸ்நோபனிஷத் 5-5.]

[எப்படிப் பாம்பானது தன் தோலினின்றும் விடுபடுகிறதோ (அப்படியே இவன் பாபங்களினின்றும் விடுபடுகிறான்)] என்றும்.

"யாவஜ்ஜிஹாமி காத்ராணி ஜீர்ணாம் த்வசமிவோரக:"

[பழையதான தோலைப் பாம்பு விடுவதுபோல் சரீரத்தை விடப் போகிறேன்,] என்றும் சொல்லுகிறபடியே,

"ஜீர்ணமிவ வஸ்த்ரம் ஸுகேநேமாம் ப்ரக்ருதிம்
ஸ்தூலஸூக்ஷ்மரூபாம் விஸ்ருஜ்ய"
[ஶரணாகதிகத்யம் 20]

[ஸ்தூலஶரீரமாகவும் ஸூக்ஷ்ம ஶரீரமாகவுமிருக்கும் ப்ரக்ருதியை, பழைய வஸ்திரத்தைக் கழிக்குமாபோலே சிரமமில்லாமல் விட்டு] என்று ஸுகமாகவே திருமேனியை உபேக்ஷையோடே விட.

அநந்தரம் கந்தாடையாண்டான் அருளாளப் பெருமாளெம் பெருமானர், எம்பார் வடுகநம்பி முதலான முதலிகளெல்லாரும் கேஶா ஷித்துக்கொண்டு வேரற்றமரம்போலே விழுந்து கிடந்து துடித்து, திருமிடறு தழுதழுப்பத் திருமூக்கு வெப்படிக்க அவஶராய்க் கிடந்து இட்டகால் இட்டகைகளாய்ச் சிந்தித்துத் திகைத்து, இணைமலர்க் கண்ணீர்ததும்ப தாராவர்ஷமாகத் திருமுத்துதிர்த்து ப்ரலாபித்து, இவர் அவதாரத்தில் "தீர்லப்தா" [கடபயாதி ஸங்க்யைப்படி சக

வருஷம் 939 எம்பெருமானார் அவதார வருஷம், அறிவு அடையப் பட்டது என்று பொருள்படுகிறது] என்றும், இவர் அந்திம தசையில் "த$_4$ர்மோ நஷ்ட:" [கடபயாதிஸங்க்யைப்படி சக வருஷம் 1059 எம்பெருமானார் பரமபதித்த வருஷம், அறம் அழிந்தது என்று பொருள்படுகிறது] [ப்ரபந்நாம்ருதம் (68-26) ஶ்லோகத்தில் எம்பெருமானார் பரமபதித்தவுடன் 'த$_4$ர்மோ நஷ்ட:' என்று அசரீரிவாக்கு ஏற்பட்டதாக உள்ளது] என்றும் இப்படி வருவதோ" என்று ஆஶ்சர்யப்பட்டு விஷண்ணராய் நிற்க, அவ்வளவிலே பெருமாளும் 'நம் உடையவரையிழந்தோமே' என்று திருவுள்ளம் நொந்து 'நமக்குச் செவ்வாய் வக்ரமாய்த்து' என்று சுருளமுதும் அமுது செய்யாமல் நாச்சிமாருடனே புறப்பட்டருள, அவ்வளவில் பராங்குசன் பரகாலன் முதலான ஆழ்வார்கள் பதின்மர்களும் ஸேவித்துச் செல்ல, ஆயிரக்கால் திருமண்டபத்திலே எழுந்தருளியிருந்து, திருமுத்தின் பணி காளாஞ்சி திருவெண்சாமரம் திருவாலவட்டம் திருவெண்கொற்றக்குடை வெண்முத்தின் கலசம் திருமேற்கட்டு முத்துத்தாமம் தொடக்கமானவையும், உடுத்துக் களைந்த பீதகவாடை சூடிக்களைந்த தொடுத்த துழாய் மலர் எண்ணெய் சுண்ணம் எல்லாம் பொற்றளிகையிலே கொண்டு போம்படி உத்தமநம்பிக்கு விடைகொடுத்தருள, நம்பியும் அப்படியே தரித்துக்கொண்டு பெருமாள் பரிகரம் அணைத்துக்கொத்தோடும் ஸகலவாத்யத்துடனே மடத்து வாசலிலே செல்ல, அது கண்டு முதலிகளெல்லாரும் தேறிநின்று 'இனிச்செய்யவேண்டும் க்ருத்யத்தைச் செய்ய வேணும்' என்று எம்பெருமானாருடைய விமல சரமவிக்ரஹத்தைத் தூய்தாக நீராடப் பண்ணிவைத்து அலங்கரித்துக் கேஶவாதி$_3$த்$_3$வாத$_3$ஶோர்த்$_4$வபுண்ட்$_3$ரங்களையுஞ்சாத்தி, பெருமாள் சாத்திக்களைந்து வரவிட்டருளின பெருமானரையிற் பீதகவண்ணவாடைகொண்டு திருமுடியிலே சாத்தி, அவன் மார்வணிந்த வனமாலையும் சாத்தி அலங்கரித்து, உடையவர் திருவடிகளைத் தங்கள் கண்ணிலும் மார்பிலும் நெஞ்சிலும் ஒற்றிக்கொண்டு; ஆசார்யவிஶ்லேஷாஸஹிஷ்ணுக்களாய், "ஐயோ! கண்ணபிரான்! அறையோ! முறையோ! அரவணைமேற் பள்ளிகொண்ட முகில்வண்ணனே!" என்று கையெடுத்துப் போரப்பெருமிடறு செய்து கூப்பிட்டு மூர்ச்சித்துக்கிடக்க, அருகிருந்த முதலிகள் வந்து எடுத்துத்தேற்ற, தேறிநின்று உடையவர்க்குச் சாத்திக்களைந்து தச்சே$_2$ஷமாயிருந்துள்ள எண்ணெய் சுண்ணம், திருமண் ஸ்ரீசூர்ணங்களை எல்லாரும் ப்ரஸாதப்பட்டுத் தீர்த்தங்கொண்டு,

திருக்குருகைப்பிரான் பிள்ளான் திருக்கையாலே ஆளவந்தார்க்குப் போலே உடையவர்க்கு ப்₃ரஹ்மமேத₄த்தாலே ஸம்ஸ்கரித்து, பீட₂யாநமான தி₃வ்யவிமாநத்திலே ஏறியருளப்பண்ணி, ஸகல வாத்யங்களும் முழங்க, பெருமாள் பரிகரமடைய ச₂த்ர சாமர தாலவ்ருந்தாதி₃களை த₄ரித்து ஸேவிக்க, அவ்வளவிலே ஆட் கொண்ட வில்லிசீயர் யதிவரசீயர் உள்ளிட்ட எழுநூறு சீயர் களும் ப்₃ரஹ்மவல்லி ப்₄ருகு₃வல்லி நாராயணுநுவாகம் முதலான உபநிஷத்துக்களை ஓத, பட்டர் கந்தாடையாண்டான் நடாதூ ராழ்வானுள்ளிட்ட முதலிகளும் தத்தத்பரிசர்யாஸாத₄நங்களை த₄ரித்துக்கொண்டு பரிவுடன் பரிவ்ருதராய் ஸேவித்துக்கொண்டு வர, மற்றுமுண்டான உபவீதத₄ரிகளான ஸ்ரீவைஷ்ணவர்கள் ஒன்பதிணுயிரம் பேரும், ஏகாந்திகளான ஸ்ரீவைஷ்ணவர்கள் பன்னீராயிரம்பேரும் அருளிச்செயல் மூவாயிரம் முன்னடி பின் னடியாக ஸேவிக்க, திருவரங்கப்பெருமாளரையர் பரிகரமான திருவாய்மொழியரையர் ஆப்பான் திருவழுந்தூரரையர் திருநறை யூரரையர் அழகிய மணவாளரரையர் முதலான எழுநூறு திருவாய் மொழி விண்ணப்பஞ்செய்யுந் தம்பிரான்மார் பண்ணிசைத்தாளத் துடன் திருவாய்மொழிபாட, திருவரங்கத்தமுதனுர் பொய்யில் (பெரியகோயில்) வள்ளலார் தொடக்கமானவர்கள் உடையவர் நூற்றந்தாதி ஸேவிக்க, எம்பார் பிள்ளான் உள்ளிட்டவர்கள் தத₃தி₄கப்ரீதிஹேதுவான ஸ்தோத்ரக₃த்₃யங்களை ஸேவிக்க, வடுக நம்பியும் ராமாநுஜதாஸரான கோமடத்துச் சிறியாழ்வானும் உடையவர் ப்ரபத்தியை அநுஸந்தித்துக்கொண்டு வர, திருவீதி யெங்குங் கோடித்துப் பொரியும் புஷ்பமும் சிதற, நடைபாவாடை யிட்டு, கரும்பும் குடமும் ஏந்த, திருப்பதியில் ஸுமங்கலிகள் மங்களதீபமேந்தி முன்னே செல்ல, இருபக்கமும் சாமரமிரட்டிக்க வெள்ளைவட்டமிட, 'த₄ர்மநத்தில் எம்பெருமானுர் திருநாட்டுக்கு எழுந்தருளினுர்' என்று ஒற்றைத் திருச்சின்னம் பணிமாற, திரு வீதிகள்தோறும் எழுந்தருளுவித்துக்கொண்டுபோய், *(பெரிய பெருமாளும் அந்தத் திருமேனியில் அபி₄மத விஷயத்தில் அழுக்கு உகக்குமாபோலே அதிசபலராய் **"மங்கவொட்டு" என்னும்படி இவர் விக்ரஹத்தை ஆதரித்துப் புறம்பே கொண்டுபோகவொட்

( ) அடைப்பிலுள்ளவை *சில பிரதிகளிலில்லை. ** திருவாய் 10-7-10.

டாமல், அந்த:புர மஹிஷிகளைத் தத்பரிஸரத்திலே ஆராமத்திலே அடக்கிவைக்குமாபோலேயும் நிதி₄யை உள்ளே இட்டுவைக்குமாபோலேயும், லக்ஷ்மீதுல்யராம்படியான லக்ஷ்மங்களையுடையராய் விலக்ஷணமான நிதி₄போலே "இராமாநுசன் என்தன்மாநிதி" "இராமாநுசன் என்தன் சேமவைப்பு" என்னும்படியான இவர் திருமேனியையும் ஆழ்வார் திருமேனியை ஆவரணத்துக்குள்ளே பள்ளிபடுத்தாற்போலே ஆவரணத்துள்ளில் உட்கோப்பிலே அந்தரங்கமாக, கௌந்தேயனுன அர்ஜ*நனைப்போலே அந்தரங்கரான கந்தாடையாண்டான் திருமுடி காத்துநோக்க) தத₃நுகு₃ணமாக யதிஸம்ஸ்காரவிதி₄யடங்கச் செய்து க₂நித்துப் பள்ளிபடுத்தருளினூர்கள்.

*(இப்படி நிதி₄யை நிக்ஷேபித்தவநந்தரம் பெருமாளும் நாச்சிமாருடனே கூடத் திருமஞ்சனங்கண்டருளித் திருமுத்துதிர்த்துத் திருமுகங்கன்றிச் சுருளமுதும் அமுது செய்யாமல் அலப்புப்படவிடத் திருவுள்ளமாய், கந்தாடையாண்டான் பட்டர் முதலானுரைப் பார்த்து 'நம்முடைய அவப்₄ருதே₂ாத்ஸவங் கொண்டாடுமாபோலே நம் உடையவர்க்கும் அவப்₄ருதே₂ாத்ஸவங் கொண்டாடுங்கோள்' என்று திருவுள்ளம்பற்றிச் சேர்த்தியிலே ஏறியருளி உடையவர்க்கு அக்காரவடிசில் தளிகை அனுப்பியருளினூர்.)

அநந்தரம் கந்தாடையாண்டான் தொடக்கமான அனைவரும் புத்ரஶிஷ்யர் செய்யுங் காரியங்களையெல்லாஞ் செய்துகொண்டு அவப்₄ருத₂ஸ்நாநமாக எல்லாரும் நீராடியருளித் தத்₃விஶ்லேஷாஸஹராய்ப் பரிதபித்துக்கொண்டிருக்க, பின்பு ஆண்டான் நம்பெருமாளநுமதியுடனே எம்பெருமானுரை எல்லாரும் ஸேவித்து உஜ்ஜீவிக்கும்படி மீளவும் அவ்விடத்திலே ஆவிர்ப்பவித்தாப்போலேயிருக்க அர்ச்சாவதாரமாக ஏறியருளப் பண்ணி ப்ரதிஷ்டிப்பித்தருளினூர்.

"ஸ்வாவதாரஸ்த₂லேऽர்ச்சாऽபூ₄த் ஶ்ரீரங்கே₃ ச யதீஶ்வர: ।
யந்முதே₃ தம் கு₃ணவாஸம் ராமாநுஜகு₃ரும் ப₄ஜே ॥"

[தம்முடைய அவதாரஸ்தலமான ஸ்ரீபெரும்பூதூரிலும், ஸ்ரீரங்கத்திலும் எவருடைய உகப்புக்காக யதிராஜர் அர்ச்சாவதாரமாக எழுந்தருளினரோ, குணங்களுக்கு இருப்பிடமான அந்த ராமாநுஜார்யர் என்னும் கந்தாடையாண்டானிடம் பக்தி செய்கிறேன்.] என்றூர்கள்.

அநந்தரம் ஶாஸ்த்ரார்த்தமான கைங்கர்யங்களையும் ஆப்த ரான தாங்கள் ஸமாப்தமாக நடத்தி, பட்டரும் கந்தாடையாண்டானும் மிகவும் ஸௌப்ராத்ரத்தையுடையராய், உடையவர் காலத்தில் அர்த்தவிஶேஷங்களையும் ஒருவர்க்கொருவர் உசாவிக் கொண்டு ஸ்ரீராமக்ருஷ்ணாதிகளுடைய புநர்வஸ்வாதி திருநக்ஷத்ரங்களோபாதியும் ஆழ்வார்களுடைய ஶ்ரவணாதி திருநக்ஷத்ரங்களோ பாதியும் இவருடைய சித்திரையில் திருவாதிரையையும் மற்றும் மாஸந்தோறும் வருவதான அந்தத்திருநக்ஷத்ரத்தையும் மஹோத்ஸவமாக நடத்திக்கொண்டு வாசாமகோசரமான தத்வைபவங்களை ப்ரகாஶிப்பித்துக்கொண்டு கிடாம்பியாச்சான் தொடக்கமானவரோடே பாடாற்றிக்கொண்டிருந்தார்கள்.

அநந்தரம் திருவேங்கடநாட்டினின்றும் அநந்தாழ்வான் ஸ்ரீகுஹதாஸர் முதலான முதலிகளையும் கூட்டிக்கொண்டு அநந்தாம்ஶமான இவர் அவதாரஸமாதியை ஆராய்ந்தறியும்படி எழுந்தருளி, திருக்காவேரியருகே பரந்திருக்கிற தத்ஸூசகங்களைக் கண்டு எழுந்தருளினபடியறிந்து ஶோகாவிஷ்டராய் அநந்தரம் பட்டரையும் ஆண்டானையும் கண்டு ஆஶ்வஸித்து உடனே வரே மீண்டு எழுந்தருளினார்.

அநந்தரம் அப்படியே கீழைத்திக்கில் சோழவளநாட்டுத் திருக்கண்ணபுரம் முதலான திருப்பதிகளில் எச்சான் முதலானவர்களும் தெற்குத்திக்கான பாண்டிநாட்டுத் திருக்கோட்டியூர் நம்பிகுமாரரான யாமுநாசார்யர், சொக்கத்தேவர், திருமாலையாண்டான் குமாரரான சுந்தரத்தோளுடையார் முதலானவர்களும் மேல் நாட்டிலும் சோமாசியாண்டான் மருதூர்நம்பி தொண்டனூர்நம்பி முதலானாரும் மற்றும் அங்கே எம்பெருமானாராலே திருத்தப்பட்ட திருநாராயணபுரம் முதலான ஸ்தலங்களில் ஸ்ரீவைஷ்ணவர்களும் மற்றுமுண்டான தேஶாந்தரஸ்தரெல்லாரும் திரண்டு பெருங் கூட்டமாகக் கோயிலிலே வந்து எம்பெருமானாருடைய விஶ்லேஷத்தாலே மிகவும் க்லேஶித்து, அநந்தரம் பட்டரை ஸேவித்துத் தங்கள் வ்யஸநமெல்லாம் தீர்ந்து பட்டரை இஷ்டதேவதையான எம்பெருமானாரைப்போலே கண்டு தந்தாமுக்கு வேண்டும் இஷ்டார்த்தங்களையும் கேட்டுக்கொண்டு தல்லாபத்தாலே,

"ஸ்ரீபராஸரப₄ட்டார்ய சரணௌ ஸம்ஸ்ரயேமஹி ।
யத்₃வக்த்ரரங்கே₃ ரங்கே₃ஸ கே₃ாஷ்ட₂யாம் ப்₃ராஹ்மீ
ப்ரந்ருத்யதி ॥"

[நம்பெருமாளுடைய திருவோலக்கத்திலே எந்த பட்டருடைய முகமாகிய நாடகமேடையிலே ப்ரஹ்மவித்யையானது நடனமாடுகிறதோ அந்த ஸ்ரீபராசரபட்டருடைய திருவடிகளை ஆச்ரயிக்கக் கடவோம்.]

"ப்ரமாணநக₂ நிர்ப்பி₄ண்ணவாதி₃மத்தேப₄மஸ்தக: ।
ராஜதே நிக₃மாந் க₃ர்ஜந் ஸ்ரீபராஸரகேஸரீ ॥"

[ப்ரமாணங்களாகிற நகங்களாலே வாதிகளாகிற மதங்கொண்ட யானைகளின் மத₃ங்களாகிற மத்தகங்களைப் பிளக்கின்றவராய், வேதவாக்குகளை கர்ஜிப்பவரான ஸ்ரீபராசரபட்டராகிய சிங்கம் வெற்றிபெற்று விளங்குகிறது.]

"ஸ்ரீபராஸரப₄ட்டார்யம் பூ₄யோ பூ₄யோ நமாம்யஹம் ।
யதா₂த்மநா ஸ்வயம் ரங்கீ₃ பே₄ஜே கூரேஸபுத்ரதாம் ॥"

[ரங்கேசனே கூரேசபுத்திரரான யாவரொருவராக அவதரித்தானோ அத்தகைய ஸ்ரீபராசரபட்டார்யரைப் பலகால் வணங்குகிறேன்.] இத்யேவமாதி₃ஸூக்திகளையும் தத்₃விஷயத்திலே அநுஸந்தித்துக்கொண்டு தத₃நுஜ்ஞையோடே தந்தாமூர்களிலே சேர்ந்தார்கள்.

ஸம்ஸாரஸ்தி₂த்யருசிநிவேத₃நமும் தத₃நுகு₃ணமான ப₄க₃வத்₃துக்தாந்திமதி₃ந நிஸ்சயமும், சரமகாலத்தளவும் ஸ்வாபி₄மாநாந்தர்ப்பூ₄தரானவர்களுக்கு உபகாராநுகுணமாக வ்ருத்திவிஸேஷோபதேஸமும், பரிஹரணீயவ்ருத்தி விஸேஷோபதேஸமும், சரமகாலத்தில் ஸ்வாபி₄மத சரமாதி₄காரிஸ்பர்ஸ விஸேஷமும் திருமுடியைப் பற்றிப் பூர்வாசார்யர்கள் விளங்கத் திருவடிகளைப்பற்றி அபராசார்யர்கள் விளங்கப் பூர்வாபராசார்யரூப ஹார நாயகரத்நமான உடையவர்க்கேயுள்ளதொன்றிறே.

இத்தால் ஸ்ரீராமக்ருஷ்ண சரிதங்கள்போலே ஸ்ரீராமாநுஜார்ய சரிதமும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸதாநுஸந்தேயமென்ற தாய்த்து,

எம்பெருமானுர் திருநக்ஷத்ரம் சித்திரையில் திருவாதிரை.

இவர் தனியன் ப்ரஸித்தமிறே.

''யோநித்யமச்யுத'' இத்யாதி, [ஸ்ரீவைகுண்டஸ்தவம்-1]

[எவரொருவர் அச்யுதனுடைய திருவடித்தாமரையிணையாகிய பொன்னில் பேராசையாலே, மற்ற பொருள்களைப் புல்லென மதித்தாரோ, என்னுடைய ஆசார்யராய், ஜ்ஞாநாதிகுணபூர்ணராய், கருணைக்கோர் கடலான அத்தகைய ராமாநுஜருடைய திருவடிகளை ஶரணமடைகிறேன்.]

இளையாழ்வார் வைபவம் முற்றிற்று.

2. நாயனுராச்சான்பிள்ளை அருளிய சரமோபாய நிர்ணயம் முழுவதும்

3. பெரியதிருமுடியடைவு:-ஸ்ரீமத்வேதமார்க்க ப்ரதிஷ்டாபநாசார்யோபயவேதாந்தாசார்ய தர்ஶநஸ்தாபனசார்ய பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்யோபய விபூதி நாயகரான எம்பெருமானுர்க்குத் திருவவதாரஸ்தலம் தொண்டைமண்டலத்தில் பெருமாள் கோயிலுக்கு ஈஶானபாகத்தில் இருக்கிற ஸ்ரீபெரும்பூதூர்; திருநக்ஷத்ரம் கலியுகம் சகாப்தம் தொள்ளாயிரத்து முப்பத்தொன்பதுக்குமேல் (?) பிங்கள வருஷம் சித்திரை மாஸம் பதின்மூன்ரும் தேதி வியாழக்கிழமை பூர்வபக்ஷத்தில் பஞ்சமி, திருநக்ஷத்ரம் திருவாதிரை, ஆயுஷ்மாந்நாமயோகம், பத்ரகரணம், கர்க்கடக லக்னம்.

ஶ்லோகம்.

யதாவதாராந்மதுரா முராரே ராமஸ்ய ஸாகேதபுரீ
ச யத்வத்।

ததா யதீந்த்ரஸ்ய க்ருபாஶ்ரயஸ்ய புண்யோத்தரா
பூதபுரீ பபூவ ॥

[கண்ணனின் அவதாரத்தால் மதுரையைப்போலவும், ராமனின் அவதாரத்தால் அயோத்தியைப்போலவும், கருணைக்கோர் இருப்பிடமான யதிராஜருடைய அவதாரத்தால் ஸ்ரீபெரும்பூதூர் மிகப் புண்ணியமான நகரமாயிற்று.]

என்கிற ஶ்லோகார்த்த விவரணமான திவ்யாவதாரம். ஶேஷாம்ஶம். திருத்தகப்பனார் ஸர்வக்ரது கேஶவதீக்ஷிதர். திருத்தாயார் காந்திமதி அம்மையார். திருத்தமக்கையார் நாச்சியாரம்மன். குடி ஆஸூரி. குலம் வடமாள். ஹாரீதகோத்ரம் யஜுஶ்ஶாகை ஆபஸ்தம்ப ஸூத்ரம். ஜாதகர்மநாமகரண சௌளோபநயனாதி ஸத்கர்மங்களும் வேதாத்யயன நித்யாநுஸந்தானங்களும் ஸாதித்தருளினார் திருத்தகப்பனார். சாத்தின திருநாமம் இளையாழ்வார். இவர்க்கு சாஸ்த்ரங்கள் விண்ணப்பஞ்செய்தவர் யாதவப்ரகாசர். அப்போதிவர் ஊமைக்கும் ப்ரஹ்மரக்ஷஸ்ஸுக்கும் மோக்ஷம் ஸாதித்தருளினார். இவர்க்கு ஹிதப்ரவர்த்தகர் திருக்கச்சி நம்பி. கைங்கர்யம் ப்ரதிதினமும் தேவப்பெருமாளுக்குத் திருமஞ்சனம், மதுராந்தகத்திலே சக்ரவர்த்தித்திருமகனார் ஸந்நிதியில் இவர்க்குப் பெரியநம்பி

> தாப: புண்ட்ரஸ் ததா நாம மந்த்ரோ யாகஶ்ச பஞ்சம:]
> அமீ பரமஸம்ஸ்காரா: பாரமைகாந்த்யஹேதவ: ||

](1) சக்ராதிதாரணமான தாபஸம்ஸ்காரம் (2) ஊர்த்வ புண்ட்ரதாரணம் (3) தாஸ்யநாமம் (4) மந்திரோபதேசம் (5) திருவாராதனம் என்னும் (இவ்வைந்து) மேலான ஸம்ஸ்காரங்களும் பரமைகாந்தி நிலையை விளைப்பவை.] என்கிற ஶ்லோகார்த்த விவரணமான சக்ராங்கநமும், திருமண் ஸ்ரீசூர்ணங்களும் ராமாநுஜனென்கிற தாஸ்யநாமமும், ஸ்ரீ அஷ்டாக்ஷரீமஹாமந்த்ரமும், த்வயசரமஶ்லோகங்களும், மந்த்ர ப்ரதிபாத்யனான பேரருளாளப்பெருமாளையும் ஸாதித்தருளி அநந்தரம் பெருமாள் கோயிலுக்கு எழுந்தருளி திருமாலை, திருப்பள்ளியெழுச்சி, திருப்பாவை, நாச்சியார்திருமொழி, பெரியாழ்வார் திருமொழி முதலான ஈராயிரமும் ஸாதித்தருளினார். ததநந்தரம் இவர் திருவனந்தஸரஸ்ஸுதீரத்தில் பேரருளாளர் ஸந்நிதியிலே சதுர்த்தாஶ்ரமஸ்வீகாரம் பண்ணியருளினார். அப்போது இவர்க்கு தேவப்பெருமாள் யதிராஜரென்னும் திருநாமஞ்சாத்தியருளினார். தத்ஸமயத்திலே பூர்வாஶ்ரமத்திலே முதலியாண்டானையும்? தாஶரதியும் ஸகோதரரான கூரத்தாழ்வானும் வந்து இவரை ஆஶ்ரயித்தார்கள். பின்பு யாதவப்ரகாஶரும் வந்து ஆஶ்ரயித்தார். அவருக்கு தாஸ்யநாமம் கோவிந்ததாஸரென்று திருநாமம் சாத்தியருளினார்.

நம்பெருமாள் உபயவிபூதிகளுக்கும் யதிராஜரைப் பட்டங்கட்டி உடையவரென்று திருநாமம் சாத்தியருளினார். இவர்க்குத்

திருவரங்கப்பெருமாளரையர் பெரியதிருமொழியும் திருவாய்மொழியும் மூலம் கண்ணிநுண்சிறுத்தாம்பு வ்யாக்₂யானம் ஸாதித்தருளி மஞ்சள் காப்பு கைங்கர்யத்துக்குத் திருவுள்ளமுகந்து, த்₃வயார்த்த₂ம் ஸாதித்தருளி லக்ஷ்மணமுனி என்கிற திருநாமமும் சாத்தித் தம்முடைய திருத்தம்பியாரான சொட்டை நம்பியை இவர் திருவடிகளில் ஆஶ்ரயிப்பித்தருளினார், பெரிய நம்பி தம்முடைய குமாரரான புண்டரீகாக்ஷரை இவர் திருவடிகளிலே ஆஶ்ரயிப்பித்தருளினார், திருக்கோட்டியூர் நம்பி திருமந்த்ரார்த்த₂மும் எம்பெருமானார் என்கிற திருநாமமும் சரமஶ்லோகார்த்த₂மும் ஸாதித்தருளி, தம்முடைய குமாரரான தெற்காழ்வானை இவர் திருவடிகளிலே ஆஶ்ரயிப்பித்தருளினார். திருமாலையாண்டான் பெரிய திருமொழி திருவாய்மொழி முதலான நாலாயிரத்துக்கும் வ்யாக்யானங்கள் ஸாதித்தருளி, சடகோபன் பொன்னடி என்கிற திருநாமம் சாத்தி, தம்முடைய குமாரரான சுந்தரத்தோளுடையாரை இவர் திருவடிகளிலே ஆஶ்ரயிப்பித்தருளினார். பெரிய திருமலைநம்பி ஸ்ரீமத்ராமாயண வ்யாக்யானம் ஸாதித்தருளி, கோயிலண்ணனென்கிற திருநாமம் சாத்தி, தம்முடைய குமாரரான பிள்ளை திருமலை நம்பியையும், மருமக்களான எம்பாரையும், கோவிந்தப்பெருமாளையும் இவர் திருவடிகளிலே ஆஶ்ரயிப்பித்தருளினார். ஆகையாலே எம்பெருமானார்க்கு ஆசார்யர் ஐவர். ஸ்ரீப₄ாஷ்யமருளிச்செய்கையாலே ஸ்ரீப₄ாஷ்யகாரரென்று ஶாரதை₃ திருநாமம் சாத்தினாள். ஆதி₃கேசவப் பெருமாள் சாத்தின திருநாமம் பூ₄தபுரீஶர். திருவேங்கடமுடையான் சாத்தின திருநாமம் தே₃ஶிகேந்த்₃ரர். ஆக இவர்க்குத் திருநாமங்கள் பதினொன்று. அவை இளையாழ்வார், ராமாநுஜர், யதிராஜர், உடையவர், லக்ஷ்மணமுனி, எம்பெருமானார், சடகோபன் பொன்னடி, கோயிலண்ணன், ஸ்ரீப₄ாஷ்யகாரர், பூ₄தபுரீசர், தே₃சிகேந்த்₃ரர் என்பனவாம். பின்னும் விசேஷ திருநாமங்கள் — யதீந்த்₃ரர், யதிகுலது₄ர்யர், யதிஸார்வபௌ₄மர், யதிசக்ரவர்த்தி, யதிபதி, யதிநாத₂ர், யோகீ₃ந்த்₃ரர், க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யர். இவர் செய்தருளின க்ரந்தங்கள் ஸ்ரீப₄ாஷ்யம் வேத₃ாந்தஸாரம், வேத₃ாந்ததீ₃பம், வேத₃ார்த்த₂ஸங்க்₃ரஹம், க₃த்₃யத்ரயம், உடையவர் நித்யம், கீ₃தாப₄ாஷ்யம். இவரே யஜ்ஞமூர்த்தி முதலான மாயாவாதி₃களை ஜயித்து தி₃க்₃விஜயார்த்த₂

மாக பூ₄ப்ரத₃க்ஷிணம் பண்ணினர். திருவேங்கடமுடையானுக்கு வக்ஷஸ்ஸ்த₂லத்தில் அலர்மேல் மங்கை நாச்சியாரை எழுந்தருளப் பண்ணி, திருவாழி திருச்சங்குகளும் சாதித்தருளினர்.; ஆகை யாலே திருவேங்கடமுடையானுக்கு மாமனுருமாசார்யருமானர். திருக்குறுங்குடி நம்பிக்கு த்₃வயோபதே₃ஶம்பண்ணி, ராமானுஜ நம்பி என்று தா₃ஸ்யநாமம் சாதித்தருளினர். ஆகையாலே அவ ருக்கும் ஆசார்யரானர், ஸுல்தான் க்₃ருஹத்திலே எழுந்தருளி யிருந்த செல்வப்பிள்ளையை எழுந்தருளப்பண்ணிக்கொண்டு வந்து திருநாராயண ஸ்வாமி சேர்த்தியிலே எழுந்தருளப்பண்ணி, தாமங்கே அர்ச்சாவதாரமாய் நின்ருர். லோகோபகாரார்த்த₂மாக ஸாளக்₃ரா மத்திலே வடுகநம்பிக்குத் திருவடிகளும் ஸ்ரீபாத₃தீர்த்த₂மும் ஸாதித்தருளினர். இப்படி ஸர்வரக்ஷகரான பெருமாள்களுக்கும் அவர்களுக்குத் திருவுள்ளமான கைங்கர்யங்களும் செய்தருளிப் பரமதநிரஸனம் ஸ்வமதஸ்தா₂பனம் பண்ணுகையாலே இவர் திரு நாமத்திலே த₃ர்ஶனம் விளங்கிற்று. இவர் திருவடிகளில் ஆஶ்ர யித்த முதலிகள்

> ஏகாந்திபி₄ர் த்₄வாத₃ஶபி₄ஸ்ஸஹஸ்ரை:
>
> பீடை₂ஶ்சதுஸ்ஸப்ததிபி₄ஸ் ஸமேத: |
>
> அந்யைரநந்தைரபி விஷ்ணுப₄க்தை:
>
> ஸ்ரீரங்க₃ ஆஸ்தே யதிஸார்வபௌ₄மஃ ||

[யதிராஜரான உடையவர் பன்னீராயிரம் ஏகாந்திகளாலும், எழு பத்துநாலு ஸிம்ஹாஸநாதிபதிகளாலும். மற்றும் கணக்கற்ற விஷ்ணு பக்தர்களாலும் நன்கு ஸேவிக்கப்பட்டவராய் ஸ்ரீரங்கத்தில் எழுந் தருளியிருக்கிருர்] என்று சொல்லுகிறபடியே ஏகாந்திகள் பன்னீரா யிரவரும், ஸிம்ஹாஸனஸ்த₂ரான ஆசார்ய புருஷர் எழுபத்துநால் வரும், ஜீயர்களெழுநூறுபேரும், சாத்தின கொத்தம்மையார்களும், சாத்தாத கொத்தியம்மையார்களும், சாத்தின முதலிகளும், சாத்தாத முதலிகளும், பிள்ளையுறங்காவில்லிதாஸர் முதலான திருநாமதாரி களும், பொன்னுச்சியார் முதலான திருநாமதாரி ஸ்திரீகளும் அஸங்க்₂யேயர்.

அதில் ப்ரதா₄ன சிஷ்யர் முதலியாண்டான், கந்தாடையாண்டான், மாருதிப்பெரியாண்டான், மாறெுன்றில்லா மாருதிச் சிறியாண்டான், ஈஶ்வராண்டான், ஜீயராண்டான், ஆண்டு கொண்டான், ஆள்கொண்டான், ஈயுண்ணரியாண்டான், சேட்டலூராழ்வான், ஸோமாசியாண்டான், கூரத்தாழ்வான், தெற்காழ்வான், நெய்யுண்டாழ்வான், ஈயுண்ணிப்பிள்ளையாண்டான், மிளகாழ்வான், அநந்தாழ்வான், கோமடத்தாழ்வான், வேதாந்தியாழ்வான், மாடபூசையாழ்வான், அம்மங்கியாண்டான், கிடாம்பியாழ்வான், உக்கலாழ்வான், அரணபுரத்தாழ்வான், உருப்புட்டூராழ்வான், சொட்டைநம்பி, பிள்ளைதிருமலைநம்பி, தொண்டனூர் நம்பி, மருதூர்நம்பி, மழலூர்நம்பி, திருக்குறுங்குடிநம்பி, முடும்பை நம்பி, ஸ்ரீபராங்குஶநம்பி, ஸ்ரீவில்லிபுத்தூர்நம்பி. வடுகநம்பி, வங்கிபுரத்துநம்பி, செடியெடுத்தநம்பி, சொக்கத்தூர்நம்பி, வங்கிபுரத்தாச்சி, புண்டரீகாக்ஷர், ஸ்ரீபராங்குஶபட்டர், சிறுப்பள்ளி தேவராஜபட்டர், ஸ்ரீகோவிந்தபட்டர், நம்பியூரில் ஸ்ரீரங்கராஜ பட்டர், உள்ளூரில் பெரியபெருமாள்பட்டர், வரந்தரும் பெருமான் பட்டர், எம்பார், சிறியகோவிந்தப்பெருமாள், சுந்தரத்தோளுடையார், திருக்குருகைப்பிரான் பிள்ளான், ஆர்க்காட்டுப் பிள்ளான், ராமாநுஜம்பிள்ளான், திருமலைநல்லான், வங்கிபுரத்தாச்சான், கோமாண்டூராச்சான், கிடாம்பியாச்சான், கொங்கிலாச்சான், ஈச்சம்பாடியாச்சான், கணியனூர் சிறியாச்சான், மஞ்சப்பூர் சிறியாச்சான், என்னுச்சான், எச்சரன், ஆஸூரி ஆதிகேசவப் பெருமாள், கிடாம்பிப் பெருமாள், மஹாமுனிப்பெருமாள், அம்மங்கிப் பெருமாள், பிள்ளை திருநறையூரரையர், பிள்ளை ராஜமஹேந்த்ரப் பெருமாளரையர், பிள்ளை திருநாராயணபுரத்தரையர், பிள்ளை திருக்குறுங்குடியரையர், பிள்ளை திருவாய்மொழியரையர், திருவரங்கப்பெருமாளரையர், ஆழ்வார்திருவரங்கப்பெருமாளரையர், ராஜநாராயணப் பெருமாளரையர். திருமாலிருஞ் சோலையரையர், திருக்கண்ணபுரத்தரையர், திருவரங்கத்தமுதனர், ஈயுண்ணிப்பிள்ளை, கோமாண்டூர்ப் பிள்ளை, தேவராஜப்பிள்ளை, தோழப்பர்பிள்ளை, ஸ்ரீஸாலக்₃ராமையர், பெரியையர், சிறியய்யர், ஏறுதிருநீதியப்பன், தந்தையப்பன், மணல் பாக்கமப்பன் ஆகிய இத்தனைபேரும் ஆசார்யபுருஷர்கள். அருளாளப்பெருமாளெம்பெருமானர் ஜீயர், திருவெள்ளறை ஜீயர், ஈச்சம்பாடி ஜீயர், ஆள்கொண்டவில்லி ஜீயர், ஸ்ரீகோவிந்த ஜீயர், குன்றத்தூர்ஜீயர், நம்பெருமாள் கோவில் ஜீயர், இவர்கள் முதலான ஜீயர்கள் எழுநூறுபேர்கள். திருமஞ்சனமெடுக்கும் துய்யமுனிவேழம்,

ஸ்ரீபண்டாரம் காக்கும் திருவரங்கமாளிகையார், ஆண்டவர், அரியவர், ஆண்டவென்மாயவர், வைத்தமாநிதி, ஆதியார்பிள்ளை, நம்பெருமாள் திருமேனிகாக்கும் சடகோபன், ராமாநுஜர் திருமேனிகாக்கும் பராங்குசர், திருப்பதிகளில் ஸ்ரீகார்யங்கள் பண்ணும் ஏகாந்திகள் முதலானவர்கள் பன்னீராயிரம். காராஞ்சி சோமயாஜியார், அணியரங்கத்தமுதனார், அலங்காரர், திருவேங்கடவர், நம்பி குறுந்தேவர், ஸ்ரீத₄ரபண்டி₃தர், நத்தத்தில் முதலிகள் மூவர், அழகியமணவாளப் பெருமாள் தாஸர், திருவேங்கட தாஸர், பேரருளாள தாஸர், பாண்டியநாட்டில் முதலிகள் மூவர், நம்பி கருந்தேவர், மகிழலங்கார தாஸர், ஸ்ரீபராங்குசதாஸர், பெரியகோயில் வள்ளலார், நத்தத்து முதலிகள் மூவர், யதிவர தாஸர், யதிராஜதாஸர், ராமாநுஜதாஸர், பருத்திக்கொல்லையம்மாளய்யங்கார் முதலான ஸ்ரீவைஷ்ணவர்கள் அஸங்க்₂யர்; குருகை நம்பிதாஸர், குலசேக₂ரதாஸர், பட்டர்பிரான்தாஸர், நாராயண தாஸர், ஸ்ரீவில்லிபுத்தூர் தாஸர், பகவல்லிதாஸர், ஸ்ரீகே₃ாவர்த்த₄னதாஸர், திருவழுதி வளநாட்டுதாஸர் முதலான சாத்தாத வைஷ்ணவர்கள் அஸங்க்₂யர்; பிள்ளையுறங்காவில்லிதாஸர், வண்டர், சுண்டர், பிள்ளையுறந்தையுடையார், பிள்ளை ராமாநுஜ வேளக்காரர்; ஜகந்நாத₂ப்₃ரஹ்மராயர், ஸேனாநாத₂ ப்ரஹ்மராயர், தொண்டைமான் சக்ரவர்த்திமுதலான திருநாமத₄ாரிகள் அஸங்க்₂யேயர். உக்கலம்மாள், பருத்திக்கொல்லையம்மாள், அம்மங்கியம்மாள், கோமடத்தம்மாள், கோமாண்டூரிளையவில்லி, திருவனந்தபுரத்தம்மை, திருவண்பரிசாரத்தம்மை, திருவாட்டாற்றம்மை, மன்னார்கோயில் பொரத்தம்மை, திருப்பதியில் ஸ்ரீகாரியம் ஆரியூரம்மை, நாயகத்தேவியார், சிறியபெருந் தேவியார், பெரியபெருந் தேவியார், திரிபுராதேவியார், கொங்கிற் பெரியபிராட்டியார், ஸ்ரீபெரும்பூதூரம்மை, திருவரங்கத்தம்மை, திருக்கோட்டியூராண்டாள், கூரத்தாண்டாள், தேவகி பிராட்டியார், அத்துழாய், அம்மங்கி, இன்னிளவஞ்சியார், ஆசூரியம்மாள், சூடிக்கொடுத்தாள், பொன்னாச்சியார் இவர்கள் முதலான அம்மையார்கள் அஸங்க்₂யேயர்.

இவர்களில் வைத்துக்கொண்டு எம்பெருமானாருக்கு அந்தரங்க₃சிஷ்யர் கூரத்தாழ்வான், முதலியாண்டான், கந்தாடையாண்டான், எம்பார், வங்கிபுரத்துநம்பி, வடுகநம்பி, திருவரங்கத்தமுதனார், திருக்குருகைப்பிரான்பிள்ளான், ஆள்கொண்ட வில்லி ஜீயர், அருளாளப்பெருமாளெம்பெருமானார் ஜீயர், புண்ட₃ரீ

காக்ஷர், தெற்காழ்வான், சுந்தரத்தோளுடையார், சொட்டைநம்பி, பிள்ளை திருமலைநம்பி, திருமலை நல்லான், பிள்ளை திருநறை யூரரையர், ஐயங்கார், குருகைநம்பி தாஸர், அநந்தாழ்வான், பிள்ளையுறங்காவில்லிதாஸர், அத்துழாயம்மன், கூரத்தாண்டாள், திருக்கோட்டியூராண்டாள், தேவகிபிராட்டியார், பருத்திக்கொல்லை யம்மாள், கொங்கில் பெரியபிராட்டியார், திருநறையூரம்மை, அம்மங்கியம்மாள், பொன்னுச்சியார். இவர்களில் எம்பெருமா னூர்க்கு ஆண்டானும், ஆழ்வானும் தண்டபவித்ரங்களாயிருப் பார்கள். கந்தாடையாண்டான், எம்பார், வங்கிபுரத்துநம்பி, வடுக நம்பி, அருளாளப்பெருமாளெம்பெருமானர் ஜீயர், இவர்கள் ஐவரும் பஞ்சரத்னங்களாயிருப்பார்கள். திருவரங்கத்தமுதனூர், திருக் குருகைப்பிரான் பிள்ளான், புண்டரீகாக்ஷர், தெற்காழ்வார், சுந்த ரத்தோளுடையான், பிள்ளை திருமலைநம்பி, திருமலை நல்லான், ஆள் கொண்ட வில்லி ஜீயர், பிள்ளையுறங்கா வில்லிதாஸர் ஆகிய இவ ரொன்பது திருநாமமும் நவரத்னங்களாயிருப்பார்கள். இனி அம்மங் கார்களில் நவரத்னங்கள்:—அத்துழாயம்மன், தேவகிபிராட்டியார், திருக்கோட்டியூராண்டாள், கூரத்தாண்டாள், அம்மங்கியம்மாள், பருத்திக்கொல்லையம்மாள், கொங்கில் பிராட்டியார், திருநறை யூரம்மை, பொன்னுச்சியார். இவர்களில் மிகவும் அத்யந்தாந் தரங்கர்கள் கூரத்தாழ்வான், முதலியாண்டான், எம்பார், வங்கி புரத்துநம்பி, வடுகநம்பி, அருளாளப்பெருமாளெம்பெருமானர் ஜீயர். இவர்களுக்குக் கைங்கர்யம்:—கூரத்தாழ்வானுக்கு ஸ்ரீகோச பண்டாரம், உக்ராணமடம், ஸர்வாத்யக்ஷபானுபத்யம். முதலியாண்டானுக்குக் கைங்கர்யம் திருமண்காப்புக்கும், திருவா ராதனைக்கும் பரிசாரகமும், திருவடிநிலைகள் ஸமர்ப்பிக்கவும். எம்பாருக்குக் கைங்கர்யங்கள் திருமேனி திருவடிகள் பிடிக்கவும், எண்ணெய்க்காப்பு சாத்தவும், திருப்பரியட்டங்கள் திருத்தவும், திருக்கை ஸமர்ப்பிக்கவும், திருப்படுக்கை சோதிக்கவும், திருமேனி காவல் முதலான கைங்கர்யங்கள். அருளாளப்பெருமாளெம்பெருமா னுருக்குக் கைங்கர்யம் திருவாராதனம். வங்கிபுரத்துநம்பிக்குக் கைங் கர்யம் தளிகை பண்ணவும்; வடுகநம்பிக்குக் கைங்கர்யம் பாலமுது திருத்தி ஸமர்ப்பிக்கவும், திருமேனிக்காவலும். இப்படி எல்லாருக்கும் ஸ்வரூபோபாய புருஷார்த்தங்களை நியமித்துக்கொண்டு எம்பெரு மானர் ஜகத்குருசார்யராய் யதிஸார்வபௌமராய், நம்பெருமாள் கோயிலிலே நூற்றிருப(த்தைந்)து திருநக்ஷத்திரங்கள் எழுந்தருளி யிருந்தார். இவர்க்குத் தீர்த்த திவஸம் துர்மதி (?) வருஷம் மாசி மாஸத்தில் சுக்லபக்ஷத்தில் தசமி. இவர்க்குத் தனியன்;— "யோநித்யம்" இத்யாதி.

4. நாலூராச்சான்பிள்ளை அருளிய சரமோபாயதாத்பர்யம் முழுவதும் — அடுத்தபடி அச்சிடப்படுகிறது.

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

# நாலூராச்சான் பிள்ளை அருளிச்செய்த

# சரமோபாய தாத்பர்யம்

சரமோபாய தாத்பர்யம் யதீந்த்₃ர விஷயேऽகரோத் ।
யஸ்தமார்யவரம் வந்தே₃ தே₃வராஜாஹ்வயம் கு₃ரும் ॥

[யதிராஜர் விஷயமாக 'சரமோபாய தாத்பர்யம்' எனும் நூலை அருளிய ஆசார்ய ஶ்ரேஷ்ட₂ரான தேவராஜரெனும் நாலூராச்சான் பிள்ளையை வணங்குகிறேன்.]

ப₄க₃வத்ப்ராப்தி ப்ரதிப₃ந்த₄கமான ஸம்ஸாரத்தில் அருசி பிறந்து, ப₄க₃வச்சரணாரவிந்த₃ ப்ராப்தி ரூபமான மோக்ஷத்தில் இச்சை₂ பிறந்த அதி₄காரி தத்ஸித்₃த்₄யர்த்த₂மாக, சரம பர்வமான எம்பெருமானாரபி₄மானத்திலே ஒதுங்கி, தத்₃விஷய ப்ரபத்தி நிஷ்டை₂யை உடையவனாயிருக்கவேணும், ப₄க₃வத் ப்ராப்தி ரூப மோக்ஷத்தைப்பெறுகைக்கு உடலாக வேதா₃ந்தங்களிலே கர்மாத்₃யுபாய சதுஷ்டயத்தைச்சொல்லிப் போரா நிற்க, அத்தை விட்டு, அதில் லகு₄வான சரம பர்வவிஷயத்தில் ப்ரதிபத்தியைப் பேற்றுக்குடலாக அவலம்பி₃க்கும்படி எங்ஙனே? என்னில்:—

யத்₃யதா₃சரதி ஶ்ரேஷ்ட₂ஸ் தத்ததே₃வேதரோ ஜந: ।
ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ்தத₃நுவர்த்ததே ॥
[கீ₃தை 3-21]

[சிறந்தவன் எது எதை அனுஷ்டி₂க்கிறானோ அது அதையே மற்ற ஸாமான்ய மனிதனும் பின்பற்றுகிறான். அவன் எந்த அளவுக்கு அனுஷ்டி₂க்கிறானோ அதையே உலகம் பின்பற்றுகிறது] என்கிற கணக்கிலே ஜ்ஞானாதி₄கரான நம் பூர்வாசார்யர்கள் யாதொன்றை அநுஷ்டி₂த்தார்கள், யாதொன்றை அதற்கு ப்ரமாணமாக அங்கீ₃கரித்தார்கள், அவை இரண்டுமிறே பின்புள்ள அஸ்மதா₃தி₃களுக்கு க்₃ராஹ்யங்கள்.

கர்ம ஜ்ஞாநம் ச ப₄க்தி: ப்ரபத₃நமிதி ச
ப்ராப்யஸித்₃த்₄யர்த்த₂மேதாந்
ஆலோச்யாலோச்ய ஹேதூந்
புநரிஹ ஸுதராம் தோ₃ஷ த்₃ருஷ்டிம் விதா₄ய ।

கர்த்தும் ஶக்தா ந பூர்வே
யதிவரசரணத்₂வந்த்₃வ மூர்த்₃த₄ாபி₄யுக்தா:
தத்காருண்யாபி₄மாநாத்
தத₃நு ச கு₃ரவோ முக்திமாப்தா மஹாப்தா: ll

[பரம ஆப்தர்களான பூர்வாசார்யர்கள்–கர்மயோக₃ம், ஜ்ஞாந யோக₃ம், ப₄க்தியோக₃ம், சரணாக₃தி என்னும் மோக்ஷப்ராப்திக்கு உறுப்பான உபாயங்களைத் திரும்பத்திரும்ப ஆராய்ந்த விடத்தில், அவை ஒவ்வொன்றும் குற்றமுடையவை என்று உணர்ந்து அவற்றை அனுஷ்டிக்காதவர்களாய், யதிராஜருடைய திருவடி ஸம்ப₃ந்த₄த்தையும் திருமுடி ஸம்ப₃ந்த₄த்தையும் உடைய வர்களாய், அவருடைய கருணையினாலும் அபி₄மானத்தாலும் முக்தி யடைந்தார்கள்] என்று கர்ம ஜ்ஞான பக்தி ப்ரபத்திகளாகிற உபாய சதுஷ்டயத்தையும் பேற்றுக்கு உடலாகப் பற்றலாமோ என்று உணர்ந்துணர்ந்து பார்த்த இடத்தில் ஸ்வரூப விருத்₃த₄த்வ து₃ஶ்ஶகத்வ விஶ்வாஸ பூ₄யஸ்த்வாதி₃ தோ₃ஷங்களைக் காண்கை யாலே, 'இவைகளெல்லாம் அருந்தேவைகளாயிருந்தது' என்று பரித்யஜித்து, எம்பெருமானார்க்கு முன்புள்ள ஆசார்யர்களும் பின்புள்ள ஆசார்யர்களும், தாங்கள் ஜ்ஞாநாதி₄கருமாய் ப்ரா மாணிகாக்₃ரேஸரருமாய் இருக்கையாலே, பரம காருணிகராய் ப்ர பன்ன ஜன கூடஸ்த₂ரான எம்பெருமானாருடைய திருவடிகள் ஸம்ப₃ந்த₄த்தையும், திருமுடி ஸம்ப₃ந்த₄த்தையும் பெற்றுடைய ராய், எம்பெருமானாருடைய காருண்ய ப்ரவாஹ ஜனிதமான அபி₄மாநத்தாலே பேறு பெற்றார்களிறே. பூர்வர்களுடைய அநுஷ் டா₂னத்தைப் பிடித்து நடத்தும்போது அது ப்ரமாண புரஸ்ஸர மாகாவிடில் நிரஸ்தகோடியில் அந்தர்ப₄வியாதோ? என்னில்:—

"த₄ர்மஜ்ஞ ஸமய: ப்ரமாணம்" [ஆபஸ்தம்ப₃ த₄ர்மம்]

[த₄ர்மம் அறிந்தவர்களின் அனுஷ்டானமே (வேத₃ங்களைக் காட்டி லும்) முக்கியமான ப்ரமாணம்] என்றும் "மேலையார் செய்வன கள்" என்றும் சிஷ்டாசாரமே ப்ரப₃ல ப்ரமாணமாகச் சொல்லக் காண்கையாலே ப்ரமாண ஸித்₃த₄மாயிருக்கும். இவர்களநுஷ் டா₂னம் ப்ரமாணாநுகு₃ணமாயல்லதிராதிறே.

வித₄யஶ்ச வைதி₃காஸ்த்வதீ₃ய க₃ம்பீ₄ரமநோநுஸாரிண:
[ஸ்தோ-ர20]

[வேத₃விதி₄களும் உன் அடியார்களுடைய ஆழ்ந்த திருவுள்ளத் தைப் பின்பற்றி நிற்கின்றன.] என்றதிறே. இதுக்கு

மேலே முக்த கண்ட₂மாக ப்ரமாணமுண்டாகில் முக்₂யமன்றோ வென்னில்: அது தானுமுண்டு. எங்ஙனே? என்னில், ஸ்ரீஶாஸ்த்ரத்திலே பெரிய பிராட்டியைக் குறித்து ஈஶ்வரன் தன்னுடைய அவதார வைப₄வத்தைச் சொல்லுகிற இடத்திலே,

லக்ஷ்மீ;—

ஸம்யகு₃க்தம் த்வயா விஷ்ணோ ஜந்மநாம் தவ வைப₄வம்।
த்வத₃ாசார்யாவதாரத்வ ப்ரகாரமபி மே வத₃ ॥
த்வயாசார்யாவதாரஸ்து கிமர்த்த₂ம் க்ரியதே ப்ரபே₄ா ।
க்ருதஸ்யாப்யவதாரஸ்ய ப₂லம் வா கிமவாப்ஸ்யஸி ॥
இதி ப்ருஷ்டோ மஹாலக்ஷ்ம்யா ப₄க₃வாந் புருஷோத்தம:।
குருரூபாவதாரஸ்ய மாஹாத்ம்யம் வக்துமுத்₃யத: ॥

ஸ்ரீப₄க₃வாந்:-

ஸாது₄ ப்ருஷ்டஸ்த்வயா தே₃வி ஸாராம்ஶ: ஸாரவித்தமே
ஶ்ருணு வக்ஷ்யே மத₃ாசார்யஜந்மநோ வைப₄வம் தவ ॥

ஸம்ஸார ஸாக₃ரே மக்₃நாந் சேதநாநுஜ்ஜிஹீர்ஷயா ।
ஶ்ருதி ஸ்ம்ருதி புராணநி சேதிஹாஸா: ப்ரத₃ர்ஶிதா: ॥

தேந மார்க்கே₃ண கேநாபி முக்திர் லப்₃த₄ா ந பூ₄தலே ।
ததோ விப₄வ ரூபேண ஜந்மாநி ஸுப₃ஹூநி மே ॥

ஜாதாநி தே₃வி! தத்ராபி மோக்ஷார்த்தீ₂ கோபி நாப₄வத்।
வேத₃ாந்தே விவிதே₄ாபாயா ப₄க்த்யாத்₃யா விஹிதா மயா ॥

தேஷ்வப்யஶக்தா ஹ்யாத்மாநஸ் ஸம்ஸரந்தி புந: புந: ।
ஏவம் ப₃ஹுவிதே₄ாபாயேஷ்வநிஷ்பந்நப₂லேஷ்வஹம் ॥

ஸத₃ாசார்யஸ்வரூபேண ஜநித்வா ஸர்வசேதநாந் ।
வ்யூஹ க்₃ராஹம் க்₃ருஹீத்வைவ க₃மிஷ்யாமீத்யசிந்தயம்॥

ஏவம் ஸம்சிந்த்ய பத்₃மாக்ஷி! கு₃ரு ரூபேண வை புரா ।
அவதீர்ணோ ஜநாந் காம்ஶ்சித் ப₄வாத₃ப்₄யுத்₃த₄ரம் ரமே ॥

இத: பரம் சாபி கரிஷ்யதே மயா
யத₂ாபுரா தே₃வி ஜநி:க்ருதா தத₂ா ।
கு₃ரு ஸ்வரூபேண நிமக்₃நசேதநாந்
ஸமுத்₃த₄ரிஷ்யாமி நிஜப்ரப₄ாவத: ॥

லக்ஷ்மீ:—

கஸ்மிந் குலே ப₄வாந் விஷ்ணோ கரிஷ்யதி கு₃ரோர்ஜநிம்।
கஸ்மிந் யுகே₃ऽவதீர்ணஸ்த்வம் ப₄விஷ்யஸி வத₃ ப்ரபோ₄॥

ஸ்ரீப₄க₃வாந்:—

அஹமாசார்ய ரூபேண ப₄விஷ்யாமி யுகே₃ யுகே₃ ।
தத்ராபி யோகி₃நாம் பும்ஸாம் குலே மஹதி ஜந்ம மே ॥

விஶிஷ்ய மே தே₃வி கலௌ யுகே₃ கு₃ரோர்
ஜநிர் ப₄வித்ரீ க₂லுஸத்குலே ரமே ।
த்ரித₃ண்ட₃ காஷாயபடோர்த்₄வபுண்ட்₃ரப₄ாக்
ப₄விஷ்யதீ ஸா ஹி ஸுஶிஷ்ய பூ₄யஸீ ॥

ஸர்வோபாய த₃ரித்₃ராணும் சேதநாநாம் வராநநே ।
மமாபி₄மாநாத் ஸர்வேஷாம் முக்திர் கு₃ருஶரீரிண :॥

மத்₃ப₄க்தா ஜ்ஞாநபூர்ணா யே ப₄விஷ்யந்தி கலௌ யுகே₃।
த்ரித₃ண்டி₃நோபி₄மாநாந் மே தே ஸர்வே கு₃ரு-
ரூபிண: ॥

முக்திபா₄ஜோ ப₄விஷ்யந்தி ஸத்யேநாஹம் ப்₃ரவீமி தே ।
மத்க்ருதோ யோபி₄மாந: ஸ்யாதா₃சார்யத்வே
ஶுப₄ாநநே ॥

ஸ ஏவ முக்திதே₃ா தே₃வி ப₄விஷ்யதி ந ஸம்ஶய:।
கு₃ரு ரூபஸ்ய மே நாம்நா ஸமயோ விஜயீ ப₄வேத் ॥

யத்காலாத₃நு பத்₃மாக்ஷி ஸமயோ லோபமேஷ்யதி ।
கு₃ரு ரூபஸ்ய மே ஶக்திம் தத்ர தத்ர நித₄ாய வை ॥

ஸமயம் ஸங்க்₃ரஹீஷ்யாமி நாதிலுப்தோ யதா₃
ப₄வேத் ।
மமாசார்யாவதாரே து யேஷாம் ப₄க்திர் ப₄விஷ்யதி ॥

தேஷா மேவ ப₄வேந் முக்திர் நாந்யேஷாம் ஸுலப₄ா
ப₄வேத் ।
அஸ்மிந்நர்த்தே₂ஹி விஶ்வாஸ: ஸர்வேஷாம் ந ஜநிஷ்யதி

மத்கடாக்ஷோ ப₄வேத்₃யஸ்மிந் மய்யேவ ப்ரவணோ ஹி ய: ।
தஸ்ய தஸ்ய ஹ்ருதி₃ஸ்தே₂ாயம் ப₄விஷ்யதி ந ஸம்ஶய: ॥

[லக்ஷ்மீ தேவி கேட்கிருள்:— "எம்பெருமானே! உம்முடைய அவதாரங்களின் பெருமை உம்மால் நன்கு சொல்லப்பட்டது. உம்முடைய ஆசார்யாவதாரத்தின் பெருமையையும் எனக்குக் கூறுவீராக, ஆசார்யாவதாரத்தை நீர் எதற்காக எடுக்கிறீர்? அந்த அவதாரம் எடுப்பதனுல் உமக்கு என்ன பயன் உண்டாகும்?" என்று மஹாலக்ஷ்மியால் கேட்கப்பட்ட புருஷோத்தமனுகிற ப₄க₃வான் ஆசார்யாவதாரத்தின் பெருமையைக் கூறத்தொடங்கினுன். ஸ்ரீப₄க₃வான் கூறுகிருன்:— "ஸாரமானதை அறிந்தவர்களில் சிறந்த தேவியே! பரமஸாரமான விஷயம் உன்னுல் நன்கு கேட்கப் பட்டது. என்னுடைய ஆசார்ய அவதாரத்தின் பெருமையைக் கூறு கிறேன் கேட்பாயாக. ஸம்ஸார ஸாக₃ரத்தில் மூழ்கிக் கிடக்கும் சேதனர்களைக் கைதூக்கிவிடுவதற்காக, ஸ்ருதி, ஸ்ம்ருதி, புரா ணங்கள், இதிஹாஸங்கள் ஆகியவை என்னுல் உபதேசிக்கப் பட்டன. அவைகளைக் கொண்டு எவனும் மோக்ஷத்தை அடைய வில்லை, அதற்குப் பிறகு நான் பல விப₄வாவதார ரூபங்களோடு பிறந்தேன். அந்த அவதாரங்களிலும் மோக்ஷத்தை விரும்புகிற வன் எவனும் எனக்குக் கிடைக்கவில்லை. உபநிஷத்துக்களில் ப₄க்தி முதலான பல மோக்ஷோபாயங்கள் என்னுல் விதி₄க்கப் பட்டன. அவற்றையும் அனுஷ்டி₂க்கவல்லமையற்றவர்களாய் ஜீவாத்மாக்கள் ஸம்ஸாரத்தில் மறுபடியும் மறுபடியும் பிறக்கிருர் கள். இவ்வண்ணமாகப் பலவிதமான உபாயங்களும் பலனளிக் காதவளவில், நான் ஆசார்யனுகப் பிறந்து எல்லாச் சேதனர்களை யும் வாரிப் பிடியாகப் பிடித்துப் பரமபத₃த்திற்கு எடுத்துப்போக நினைத்தேன். தாமரைத்தடங்கண்ணியான லக்ஷ்மியே! இவ்வண் ணம் நினைத்து ஆசார்யனுக முற்காலத்தில் அவதரித்து, ஸம்ஸா ரத்திலிருந்து சில ஜனங்களைக் கைதூக்கி விட்டேன். இனிமேலும் முன்போலவே ஆசார்யனுக அவதரித்து ஸம்ஸாரத்தில் மூழ்கிக் கிடக்கும் ஜனங்களை அவ்வவதாரத்தின் மஹிமையினுலே கை தூக்கி விடப்போகிறேன்". லக்ஷ்மீதே₃வி கூறுகிருள்:— "எம் பெருமானே! ஆசார்யாவதாரத்தை எந்தக் குலத்தில் எடுக்கிறீர்? எந்த யுகத்தில் அவதரிக்கிறீர் என்பதைக் கூறுவீராக" ஸ்ரீப₄க₃வான் கூறுகிருன்:- 'லக்ஷ்மீதே₃வியே' ஒவ்வொரு யுக₃த்தி லும், ஆசார்யரூபத்தோடு நான் அவதரிக்கிறேன். அதிலும் யோகி களுடைய சிறந்த குலத்திலேயே அவதரிக்கிறேன். குறிப்பாகக் கலி யுகத்தில் திரித₃ண்ட₃த்தையும், காஷாயவஸ்திரத்தையும், ஊர்த்₄வ புண்ட்₃ரங்களையும் த₄ரித்து, நற்குடியில் சிஷ்யச் செல்வம் மிக்க ப₄விஷ்யதா₃சார்யரூபமான அவதாரத்தை எடுக்கப்போகிறேன்.

அழகிய முகத்தை உடையவனே! எந்த உபாயத்திலும் சக்தியற்ற எல்லா ஜீவர்களுக்கும் அந்த ஆசார்யாவதாரத்தில் என் அபி₄மானத்தாலே மோக்ஷம் உண்டாகப்போகிறது. த்ரித₃ண்டி₃ வேஷத்திலிருக்கும் என்னுடைய அபி₄மானத்தாலே கலியுகத்திலே அறிவு நிறைந்த எனது ப₄க்தர்கள் பலர் ஆசார்யர்களாகி மோக்ஷமடையப்போகிறார்கள், இதை நான் ஸத்யம் செய்து கூறுகிறேன். அந்த ஆசார்யாவதாரத்தில் என்னுடைய அபி₄மானமே மோக்ஷமளிக்கப்போகிறது. அந்த ஆசார்ய ரூபியான என்னுடைய பெயராலே வைதிகமதம் வெற்றியடையப்போகிறது. எந்த எந்தக் காலங்களில் வைதிகமதம் தளர்ச்சியடைகிறதோ அந்தந்தக் காலங்களில் ஆசார்யரூபியான என்னுடைய ஶக்தியை நிலைநாட்டி வைதிகமதம் அடியோடு அழியாதபடி ரக்ஷிக்கிறேன். என்னுடைய ஆசார்யாவதாரத்திலே எவர்களுக்கு பக்தி உண்டாகிறதோ அவர்களுக்கு மோக்ஷம்கிடைக்கும், மற்றவர்களுக்கு அது எளிதன்று. இவ்விஷயத்தில் எல்லோருக்கும் நம்பிக்கை உண்டாகாது. எனது கடாக்ஷத்திற்கு எவன் பாத்திரமாகிறானோ, எவன் என்னிடமே அன்பு செலுத்துகிறானோ, அவனவனுக்குத்தான் இவ்வர்த்த₂ம் நெஞ்சில்படும். இதில் ஐயமில்லை.] என்றிப்படி ப்ரப₃லப்ரமாணங்களை எம்பெருமான்தானே அருளிச்செய்துவைக்கையாலே முக்த கண்ட₂மாக முக்₂ய ப்ரமாணங்களும் இவ்வர்த்த₂த்தில் குறைவறக் காண்கின்றன. இவையெல்லாவற்றையும் உட்கொண்டு இந்த ப்ரமாணப்ரதிபாத்₃யமான அர்த்த₂ங்களைத் தெளிய அறிந்து நம்மாசார்யர்களனைவரும் தந்நிஷ்ட₂ராய், தங்களைப் பற்றினார்க்கும் இத்தையே யோக்₃யதானுகு₃ணமாக உபதே₃ஶித்துப் போந்தார்கள்.

இப்படி ஆசார்யாபி₄மானமே உத்தாரகமென்றும், த்ரித₃ண்ட₃ த₄ாரியாய், ஆசார்யரூபேண தானே அவதரிப்பன் என்றும் ஈஶ்வரனருளிச் செய்கையாலே மற்றும் அவனருளிச்செய்த அர்த்த₂ங்களெல்லாம் எம்பெருமானாரிடத்திலேயாயிற்று நிலைநின்றிருப்பது, ஆகையால் ஆசார்யத்வ பூர்த்தி உள்ளதும் அவரிடத்திலேயிறே. அவரபி₄மானமே நமக்கெல்லாம் உத்தாரகமென்று ஸம்ஶய விபர்யயமற நம் பூர்வாசார்யர்களும் அறுதியிட்டார்களிறே. ஆகையாலே நம் பூர்வாசார்யர்களநுஷ்ட₂ானமே நமக்கெல்லாம் ப்ரமாணம் என்பது "த₄ர்மஜ்ஞ ஸமயம்" என்னும் ப்ரப₃லப்ரமாண ப்ரதிபந்நமென்றும் சொல்லிற்றாயிற்று.

இனி சரம பர்வமான எம்பெருமானாரபி₄மாநத்திலே ஒதுங்கி "தேவு மற்றறியேன்" என்னுமதி₄காரிக்கு, ப₄க்தி ப்ரபத்திகளிரண்

டும் ப4யாவஹமாயிருக்கும். எங்ஙனே? என்னில்: ப4க்திதான் ஸ்வயத்ன ஸாத்4யமாகையாலும் ப4க3வத் பரதந்த்ரமான ஸ்வரூபத்துக்கு ஸ்வப்ரவ்ருத்தி விரோதி4யாகையாலும், ஸ்வஸ்வாதந்த்ரிய ரூபமான அஹங்காரத்தை விளைவித்து, பாரதந்த்ரிய ஸ்வரூபமான ஆத்ம ஸத்தையை அழிக்குமென்று ப4யம் பிறக்குமிறே; பாரதந்த்ரிய ஸ்வரூபத்துக்கு அனுகு3ணமாய் ப4க3வத்3விஷய விஶ்வாஸரூபமான ப்ரபத்த்யுபாயமும்

ப4வமோக்ஷணயோஸ்த்வயைவ ஜந்து: க்ரியதே
ரங்க3நிதே4! [ர-ஸ்த 2-88]

[ரங்க3நாத2ா! ஒரு ஜீவன் ஸம்ஸாரத்தில் கட்டுப்பட்டிருப்பவனாகவும், மற்றொரு ஜீவன் மோக்ஷத்திற்குரியவனாகவும் உன்னாலேயே செய்யப்படுகிறான்.] என்கிறபடியே ப3ந்த4 மோக்ஷங்களிரண்டுக்கும் பொதுவாய் நிரங்குஶ ஸ்வதந்த்ரனான எம்பெருமான் தன்னுடைய ஸ்வாதந்த்ரியத்தாலே மீளவும் ஸம்ஸரிப்பிக்கில் செய்வதென்னென்று ப4யப்படப்பண்ணும், இப்படி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தி ஸாத்4யமான ப்ரபத்த்யுபாயமும் ப4யஜநகமாகையாலே, சரமபர்வ நிஷ்ட2னுக்கு நெஞ்சில் தங்காது. ஆகையாலிறே இவ்வதி4காரிக்கு ப4க்தி ப்ரபத்திகள் உபாயமன்றென்றும், எம்பெருமானாருடைய அபி4மானமே உத்தாரகமென்றும் நம் பூர்வாசார்யர்கள் அறுதியிட்டதும்; (ப்ரயாணகாலே) இத்யாதி3.

ப்ரயாணகாலே சதுர: ஸ்வஶிஷ்யாந்
பத2ாந்திகஸ்த2ாந் வரதே2ா ஹி வீக்ஷ்ய ।
ப4க்திப்ரபத்தீ யதி3 து3ஷ்கரே வ:
ராமாநுஜார்யம் நமதேத்யவாதீ3த் ॥

[தன் சரமகாலத்தில் தன் திருவடிவாரத்திலிருந்த நாலு ஶிஷ்யர்களைப் பார்த்து நடாதூரம்மாள் 'ப4க்திப்ரபத்திகள் உங்களுக்கு செயற்கரியவையாகில் எம்பெருமானாரை ஶரணமாகக்கொள்ளுங்கள்' என்று உபதே3ஶித்தார்.] அதாவது—ப4க்தி ப்ரபத்திகள் உபாயமல்லாமையாலே நிர்ஹேதுகமாகக் கடாக்ஷித்து ப4வ்யனாக்கிக்கொண்டு போரும் பரமகாருணிகராய் ஸத3ாசார்யரான எம்பெருமானார், இவன் நம்முடையவனென்று அபி4மானித்திருக்கும் அந்த அபி4மானமே இவனுக்கு ஸம்ஸாரோத்தாரகம் என்றபடி. ஆசார்யாபி4மானமே உத்தாரகமென்று ஸ்தோத்ரத்தின் முடிவிலே பரமாசார்யரான ஆளவந்தாரும் அருளிச்செய்தாரிறே. இனி இந்த ஆசார்யாபி4மானந்தான் ஸ்வேதரோபாயங்களுக்கு அங்க3மோ? ஸ்வதந்த்ரோபாயமோ? என்னில்; உப4யமுமாயிருக்கும்; எங்ஙனே? என்னில்: மஹாவிஶ்வாஸ ரூபையான ப்ரபத்தி

யானது கர்மஜ்ஞான ப₄க்திகளாகிற உபாயாந்தரங்களுக்கு, விச்சே₂த₃ாபாத₃கபாபஹரத்வேந தத்₃வர்த்த₄கமான அங்க₃முமாய்,

"ஸாத்₄யப₄க்திஸ்து ஸா ஹந்த்ரீ ப்ராரப்₃த₄ஸ்யாபி பூ₄யஸீ"

[ப₄க்தியிலும் சிறந்ததான ப்ரபத்தியானது ப்ராரப்₃த₄ கர்மத்தையும் போக்கி மோக்ஷமளிக்கும்.] என்கிறபடியே அநிஷ்ட நிவ்ருத்தி பூர்வகமான இஷ்ட ப்ராப்திக்கு ஸ்வதந்த்ரோபாயமுமாயிருக்குமா போலே, இதுவும் ஸ்வேதரோபாயங்களுக்கு உபதே₃ஷ்ட்ருத்வப்ரவர்த்தகத்வாதி₃களாலே அங்க₃முமாய்,

"தே₃வமிவாசார்யமுபாஸீத" [பரமனைப்போலே ஆசார்யனை தியானிக்கவேண்டும்.]

"ஆசார்யவாந் புருஷோ வேத₃"

[ஆசார்யனையுடைய மனிதனே உண்மையை அறிவான்.]

"உபாயோபேயபா₄வேந தமேவ ஶரணம் வ்ரஜேத்"

[ஆசார்யனையே உபாயமாகவும், உபேயமாகவும் நினைத்து ஶரணமடையவேண்டும்] என்றித்யாதி₃களில் சொல்லுகிறபடியே, இஷ்டாநிஷ்ட ப்ராப்தி பரிஹாரத்தில் தனக்கு மேலற்ற ஸ்வதந்த்ரோபாயமுமாயிருக்கும். ப₄க்தி ஸ்வதந்த்ரோபாய மாயிருக்க, ப்ரபத்தி ஸ்வதந்த்ரோபாயமானாப்போலே, இந்த ஆசார்யாபி₄மானமாகிற சரம ப்ரபத்தியும் ஸ்வதந்த்ரோபாயமாய் வந்தது. ப₄க்திக்கு அந்தர்யாமி விஷயம். ப்ரபத்திக்கு அர்ச்சாவதாரம் விஷயம். சரம ப்ரபத்திக்கு ப₄க₃வதா₃வதாரமான எம்பெருமானுர் விஷயம். ப்ராக்ருத விக்₃ரஹயுக்தராய் எழுந்தருளியிருக்கையாலே, ஸஜாதீய பு₃த்₃தி₄பண்ணலாம்படி இருந்ததேயாகிலும், எம்பெருமானுரிடத்திலே எம்பெருமான் ஸ்வரூபேண நின்று விஶேஷாதி₄ஷ்டா₂னம் பண்ணுகையாலும், இவ்வர்த்த₂த்தை ஸ்வயமேவ அருளிச்செய்கையாலும் ப₄க₃வதா₃வதாரம் எம்பெருமானுர் என்கிற அம்ஶத்தில் ஸம்ஶயமில்லை.

ததுக்தம் பஞ்சராத்ரே ப₄க₃வதா ஸேநேஶம் ப்ரதி —

"மம ஸ்வரூபம் ஸர்வஸ்மாத் பரஸ்ய ஜக₃தீ₃ஶிது: ।
ஷட்₃வித₄ம் பரிபூர்ணம் தத் ஸேநேஶ பரிபட்₂யதே ॥
பரத்வவ்யூஹவிப₄வமந்தர்யாமித்வமேவ ச ।
அர்ச்சாசார்யாவதாரௌ த்₃வௌ ஷாட்₃வித்₄யம் மே
ப்ரகீர்த்திதம் ॥
பூர்வஸ்மாத₃பி பூர்வஸ்மாத் ஸுலபோ₄ ஹ்யுத்தரோத்தர: ।
தேஷ்வாசார்யாவதரணே காருண்யம் பரிபூரிதம் ॥

ஜ்ஞாநாதி₃கு₃ணதஸ்தத்ர விஸேஷாதி₄ஷ்டி₂திர் ப₄வேத் ।
ஆஸந்நத்வாத்₃த₃யாளுத்வாத் ஜ்ஞாநித்வாத் கு₃ருப₄ாவத: ॥
சரமஸ்யாவதாரஸ்ய கு₃ருரூபஸ்ய மே ஸதா₃ ।
ப்ராப்யத்வப்ராபகத்வே த்₃வே ஸ்வநிஷ்டே₂
நகு₃ணௌ மதௌ ।
தஸ்மாந்மத்பாத₃யுக₃ளம் ஶரண்யம் மோக்ஷகாமிநாம் ॥''

[இவ்விஷயம் பாஞ்சராத்ரத்தில் எம்பெருமானால் விஷ்வக்ஸே னரைக் குறித்துச் சொல்லப்பட்டது — ''அனைத்திலும் மேலான வனாய், உலகை நியமிப்பவனான எனது ஸ்வரூபம் ஆறு வகையாக நிறைந்துள்ளது என்று சொல்லப்படு கிறது:— (1) பரநிலை, (2) வ்யூஹநிலை (3) விப₄வநிலை (4) அந்தர் யாமிநிலை (5) அர்ச்சாவதாரநிலை (6) ஆசார்யாவதாரநிலை என் பவையே எனது அந்த ஆறு நிலைகளாகும். இவற்றில் ஒவ்வொரு முன்நிலையைக்காட்டிலும் ஒவ்வொரு பின் நிலையும் எளியதாகும். இவற்றில் (கடைசியான) ஆசார்யாவதாரத்தில் கருணை நிறைந் துள்ளது. ஞானம் முதலான கு₃ணங்களால் அவ்வாசார்யாவ தாரத்தில் நான் சிறப்பாக அதி₄ஷ்டி₂த்து நிற்கிறேன். அருகி லிருப்பதாகையாலும், கருணைமிக்கதாகையாலும், ஞானியாயி ருக்கையாலும், ஆசார்யனாயிருக்கையாலும் கடைசி அவதாரமான ஆசார்யாவதாரத்தில் எனக்கு ப்ராப்யத் தன்மையும், ப்ராபகத் தன்மையும் எப்போதும் இயல்வாயிருப்பவை. வந்தேறியான கு₃ணங் களன்று. ஆகையால் மோக்ஷத்தை விரும்புகிறவர்களுக்கு ஆசார்ய னான என்னுடைய திருவடியிணையே ஶரணமடையத்தக்கது.'']
என்று ப₄க₃வான் தானே அருளிச் செய்தானிறே. இத்தாலும், எம்பெருமானார் திருவடிகளே ஸம்ஸாரோத்தரணோபாயம்.

இனி ஸ்வதந்திரனாயிருப்பானொரு மஹாப்ரபு₄வைக்கொண்டு கார்யம் கொள்ளுமவன் அவன் கையைப் பிடித்து வேண்டிக் கொள்ளுமளவில் அவன் இனியனாய் இவன் கார்யம் செய்கைக் கும், ஸ்வதந்த்ரனாய்ச் சீறி உதறி உபேக்ஷிக்கைக்கும் உடலாயி ருக்கும்; அந்த ப்ரபு₄தன்னையே காலைப்பிடித்துக் கொள்ளுமள வில், அவன் த₃யாபரவஶனாய், உதற மாட்டாமல் அப்போதே கார்யம் செய்துவிடுமோபாதி, சரண ஸ்த₂ாநீயரான எம்பெரு மானாரைப் பற்றினால் அவன் பரம த₃யாளுவாய் இவன் கார்யம் செய்யுமிடத்தில் ஸம்ஶயமில்லையிறே.

லோகே ச பாத₃பதநம் பாணிஸங்க்₃ரஹணாத₃பி ।
த₃யாஹேதுதயா த்₃ருஷ்டமித்யுக்தம் சரணாவிதி ॥

[உலகிலும் கையைப்பிடிப்பதைக்காட்டிலும் காலில் விழுவது கருணைக்கு உறுப்பானதாகக் காணப்படுகிறது; இதனாலேயே (த்₃வயத்தில்) 'சரணௌ' என்று சொல்லப்படுகிறது] என்றும்,

"அநதிக்ரமணீயம் ஹி சரணக்₃ரஹணம்"

[காலைப்பிடிப்பது தட்டமுடியாத உபாயமன்றோ] என்றும் சொல்லுகிறபடியே சரண க்₃ரஹணம் அமோகோ₄பாயமிறே.

நம்பெருமாள் பெரிய திருவோலக்கமாக எழுந்தருளியிருக்க, திருவடித்தொழ வந்தவர்கள், எம்பெருமானாரை நோக்கி த₃ண்ட₃னிட, தத்காலவர்த்தியான ராஜா, எம்பெருமானாரை த₃ண்ட₃னிட்டு "எல்லாரும் பெருமாளைவிட்டு உம்மையே த₃ண்ட₃னிடாநின்றார்கள்; இதுக்குப்பொருளருளிச்செய்யவேணும்" என்ன, "உம்முடைய பக்கலிலே சிலர் கார்யம் கொள்ள வந்தால் அவர்களில் ஒருவன் உடுவரைக் கொண்டு வந்தான். ஒருவன் உம்முடைய பாது₃ கையைப் பிடித்து நின்றான். இதிலே யாருக்கு நீர் முந்துறக் கார்யம் செய்வீர்? ஆரிடத்திலே உமக்கு ப்ரீதி விளையும்?" என்ன. "காலைப்பிடித்தவனிடத்திலே ப்ரீதி விளையும்?" என்ன, "அப்படியே நாம் நம்பெருமாளுக்குத் திருவடிகளாயிருப்போம்; அதனால் நம்மைப் பற்றினார்க்குக் கார்யாம்ஶத்தில் ஒரு குறையுமின்றியிலே அமோக₄மாகப் ப₂லிக்கும்" என்றருளிச்செய்தார்.

உத்தாரகமான எம்பெருமானார் திருவடிகளில் ஸம்ப₃ந்த₄ம் தேவதாந்தர மந்த்ராந்தர தே₃ாஷ ஸ்பர்ஶத்தாலே கலங்கிக் குலையாமல் ஸத்தையுடன் கிடக்கப்பெறில், ஸ்வரூபாலங்காரமான தத்வஜ்ஞானமும், அநந்ய ப₄க்தியும், அந்ய வைராக்₃யமும் இல்லாவிடிலும், மேல் அந்த ஸம்ப₃ந்த₄த்தாலே உண்டாக்கிக் கொள்ளலாம்: ம்ருதஸஞ்ஜீவினியான எம்பெருமானாரோட்டை ஸம்ப₃ந்த₄ம் நிஷித்₃த₄ாநுஷ்ட₂ாநாந்வய லேஶத்தாலே அவர் கைவிடும்படி குலைந்தால் அநர்த்த₂மே விளைந்து, அத்தால், ஜ்ஞானாதி₃கள் சிலதுண்டானாற்போலே தோற்றிற்றாகிலும் ப்ரயோஜனமில்லையாம், ஸத₃ாசார்யரான எம்பெருமானாரோடு ஸம்ப₃ந்த₄மற்ற ஜ்ஞானாதி₃களும் இவனுக்கு அவத்₃யகரமாய்த் தலைக்கட்டும்; அவத்₃யகரமாகையாவது — ப₄க₃வந்நிக்₃ரஹத்தை விளைத்து யாவதா₃த்மபா₄வி நரகத்திலே தள்ளிவிடுமென்றபடி.

"எம்பெருமானாரோடுண்டான ஸம்ப₃ந்த₄ம் ஸ்வரூப விகாஸ ஹேது; தத₃ப₄ாவம் ஸ்வரூபவிநாஶஹேது" என்று வங்கிபுரத்து நம்பி வார்த்தை.

"மய்யாசார்யாவதாரே து யஸ்ய ப₄க்திர் ந வித்₃யதே ।
தஸ்யாத்ம நாஶ: ஸேநேஶ! ப₄விஷ்யதி ந ஸம்ஶய: ॥"

[விஷ்வக்ஸேனரே! ஆசார்யாவதாரமெடுத்த என்னிடம் எவனுக்கு ப₄க்தி இல்லையோ, அவனுக்கு ஆத்மநாஶமே உண்டாகும் என்பதில் ஐயமில்லை] என்று எம்பெருமான் தானே அருளிச்செய்தானிறே.

"ஶ்ரீமல்லக்ஷ்மண தே₃ஶிகேந்த்₃ர சரணத்₃வந்த்₃வாஶ்ரயாத் ஶ்ரீபதிர்
மாமாத்₃ருத்ய மஹாப₂ல ப்ரஸவிதா ஜாதோ ஹி ரங்கே₃ஶ்வர: ।
தத்₃த்₃ருஷ்ட்வா மயி ரங்க₃நாத₂ரமணீ ஶ்ரீரங்க₃நாயக்யஹோ
ஶ்ரீராமாநுஜபாத₃ப₄ாக₃யமிதி ப்ராஸீகஶத்ஸ்வாம் த₃யாம்॥"

[ஶ்ரீராமாநுஜரின் திருவடியிணைகளின் ஸம்ப₃ந்த₄ம் பெற்றிருக்கையால், ஶ்ரீரங்க₃நாத₂னாகிற திருமகள் கேள்வன் என்னை ஆத₃ரித்துப் பெரும் பேறுகளை வழங்கினானன்றோ; ஶ்ரீரங்க₃நாத₂னின் தே₃வியான ஶ்ரீரங்கநாயகி, அதைக்கண்டு "இவன் ஶ்ரீராமாநுஜரின் திருவடி ஸம்ப₃ந்த₄ம் பெற்றவன்" என்று என்னிடம் தன் கருணையைப் பெருகவிட்டாளன்றோ] என்றிறே நம்பிள்ளை அருளிச் செய்யும்படி. அதாவது—" 'எம்பெருமானாருடைய திருவடிகளில் ஸம்ப₃ந்த₄முடையவனன்றோ' என்று பெரிய பெருமாள் என்னை ஆதரித்து, 'அந்தமில் பேரின்பத்து அடியரோடிருந்தமை' யாகிற மஹா ப₂லத்தைத் தருவாராக ஒருப்பட்டார்: அத்தைப் பெருமாளுக்குப் பத்னியாய் இனிய விஷயமாயிருக்கிற ஶ்ரீரங்க₃ நாச்சியார் கண்டு, எம்பெருமானார் திருவடிகளில் ஸம்ப₃ந்த₄ முண்டான பின்பு தத் ஸத்₃ருஶமாகக் கொடுக்கலாவதிதுவன்று, வேறு தகுதியாயிருப்பதொரு ப₂லம் கொடுக்க வேணும் என்று நினைத்துக் காருணையாலே, தம்முடைய நிர்ஹேதுகமான க்ருபையை, என் பக்கலிலே ஒரு மடையாக வெளியிட்டாள்; இதென்ன ஆச்சர்யம்" என்று உகந்தருளினாரென்றபடி. இத்தால் எம்பெருமானாரோடு ஸம்ப₃ந்த₄முண்டாகவே, பிராட்டியும் எம்பெருமானும் ஒருவர்க்கொருவர் பரிந்து மேல் விழுவார்களென்னும் அர்த்த₂ம் சொல்லப்பட்டது.

"நிர்ஹேதுகமாக விஷயீகரிக்கும் பரமகாருணிகரான எம்பெருமானார் 'இவன் நம்முடையவன்' என்று அபி₄மானிக்கும் அபி₄மானமே ஸம்ஸாரோத்தாரகம்" என்று ஸாரார்த்த₂ சதுஷ்டய விவரணத்தில் அம்மங்கி அம்மாளுக்கு எங்களாழ்வான் தாமும் அருளிச் செய்தாரிறே.

ஸோமாசியாண்டானும், 'ப₄க₃வத் ப்ரவ்ருத்தி விரோதி₄ ஸ்வப்ரவ்ருத்தி ஸாத்₄யாயா ப₄க்தே: ஸ்வாதந்த்ரியரூபாஹங்காரஜநகத்வாத் ப₄க₃வந்தமுபேத்ய தச்சரணாரவிந்த₃ யுக₃ள ஶரணாக₃தேரபி நிரங்குஶைஶ்வர்ய ப₄க₃வத் ஸ்வாதந்த்ர்ய ஸ்மரண த்₃வாரா பீ₄திஹேதுத்வாச்ச தது₃ப₄யவிஷயப₄க₃வ த₃வதாரபூ₄தபரமகாருணிக - ராமாநுஜயோகி₃ - சரணாரவிந்த₃-ஶரணாக₃திரேவ ஸர்வோஜ்ஜீவநாய ப₄வதீதி ஸமர்த்தி₂தம்''

[எம்பெருமான் சேதனரக்ஷணத்தின் பொருட்டுத் தான் முயல்வதற்குத் தடையாயிருக்கும் ஜீவப்ரயத்னத்தினால் விளையும் ப₄க்தி ஸ்வாதந்த்ரியரூபமான அஹங்காரத்தை ஜீவனுக்கு விளைப்பதாயிருக்கையாலும், எம்பெருமானின் திருவடித்தாமரைகளை ஶரணமடைவதாகிற ப்ரபத்தியும் எல்லையற்ற ஐஶ்வர்யமுடைய எம்பெருமானின் ஸ்வாதந்த்ரியத்தை நினைத்து ஜீவன் அச்சமடையக் காரணமாயிருக்கையாலும், இந்த ப₄க்தி ப்ரபத்திகளுக்கு விஷயமான எம்பெருமானின் அவதாரமாய், பரமகாருணிகரான ஸ்ரீராமாநுஜமுனிவரின் திருவடித்தாமரைகளில் ஶரணமடைவதே அனைவரையும் உய்விக்கும் உபாயமாகும் என்று நிரூபிக்கப்பட்டது] என்று ஸ்வப்ரணீதமான சரமோபாய விவரணத்திலே அருளிச் செய்தாரிறே. வாதி₃கேஸரி அழகிய மணவாளச் சீயரும்,

''பாரதந்த்ரியம் ஸ்வரூபம் ஹி ஸர்வஜீவாத்மநாமபி ।
தத்₃விருத்₃தா₄ ஹி ப₄க்திஸ்து ஜீவயத்நாபி₄லாஷிணீ ॥
த்யாகே₃ ந நிவ்ருத்திஸாத்₄யோயம் நிர்மலாநந்தஶாயிந: ।
ஸ்வாதந்த்ரியஸ்ம்ருதிமாத்ரேண பீ₄திஹேதுர் ப₄விஷ்யதி ॥
தஸ்மாத்₃ ப₄க்திம் ப்ரபத்திஞ்ச விஹாய விமலாஶயா: ।
அஸ்மதா₃ர்யா மஹாத்மாநஸ்ஸதா₃ர்ய சரணாஶ்ரயா: ॥
தத்க்ருதேநாபி₄மாநேந நிஸ்தரந்தி ப₄வார்ணவம் ।
லகூ₄பாயேந லப்₃த₄வ்யே ப₂லே மஹதி தே₃ஹிநாம் ॥
கு₃ருபாயத்₄வயாத் கிம் வா கர்த்தவ்யம் ஸ்யாந்முமுக்ஷுபி₄:''

[எல்லா ஜீவாத்மாக்களுக்கும் ஈஶ்வரனுக்குப் பரதந்திரமாயிருக்கையே ஸ்வரூபமாகும். ஜீவனின் முயற்சியை எதிர்பார்க்கும் ப₄க்தி அந்த ஸ்வரூபத்திற்கு முரண்பட்டதாகும். அந்த முயற்சியினின்று நீங்குவதால் உண்டாகும் ஶரணாக₃தி குற்றமற்ற அரவணையானின் ஸ்வாதந்த்ரியத்தை நினைத்த மாத்திரத்தில்

அச்சமுறச்செய்யும், ஆகையால், குற்றமற்ற திருவுள்ளமுடைய மஹாத்மாக்களான நமது பூர்வாசார்யர்கள் ப₄க்திப்ரபத்திகளைக் கைவிட்டு, ஸத₃ாசார்யரின் திருவடிகளையே உபாயமாகப்பற்றின வர்களாய், அவரது அபி₄மானத்தாலே ஸம்ஸாரக்கடலைத் தாண்டுகிறார்கள். தே₃ஹமுடைய ஜீவர்களுக்குக் கிடைக்கும் பெரும்பேறு எளிதான ஆசார்யாபி₄மானத்தாலேயே கிடைக்கும் போது முமுக்ஷுக்களுக்கு அரிய உபாயங்களான ப₄க்திப்ரபத்திகள் எதற்குப் பயன்படும்?] என்று சரமகு₃ருசரிதையிலே அருளிச்செய்தாரிறே.

ப்ராமாணிகாக்₃ரேஸரரான ப₄ட்டரும்,

“பரம காருணிகஸ்ய பரம கு₃ரோர் ப₄க₃வத: ஸ்ரீமந் நாராயணஸ்ய புண்ட₃ரீகத₃ளாமலாயதேக்ஷணமுக₂கமலவிகாஸ ஹேதுபூ₄தம் ஹி ப₄க₃வத்₃ராமாநுஜ சரணாரவிந்த₃ ஶரண வரணம் । தஸ்மாத் ததே₃வாஸ்மாகமுஜ்ஜீவநாயாலம் இதி அஸ்மத்தாதபாதா₃ மேநிரே ॥”

[பரமகாருணிகனாய், பரமாசார்யனாய், ப₄க₃வானான ஸ்ரீமந்நாராயண னுடைய தாமரை இதழ்போல் குற்றமற்ற நீண்ட திருக்கண்களை யுடைய திருமுகத்தாமரை மலர்வதற்குக் காரணமாயிருப்பதன்றோ ப₄க₃வத்₃ராமானுஜரின் திருவடிகளில் ஶரணமடைவது. ஆகையால் அதுவே நாம் உஜ்ஜீவிப்பதற்குப் போதுமானது என்று நமது திருத்தகப்பனாரான கூரத்தாழ்வான் திருவுள்ளம் பற்றினார்.] என்று ஆழ்வானுடைய ஸித்₃த₄ாந்தமாக கு₃ருப்ரபா₄வ தீ₃பிகை யிலே அருளிச்செய்தார்.

“லக்ஷ்மணார்ய கு₃ருபாத₃ ஸேவிநாம்
ரக்ஷணாய க₂லு தத் க்ருபா பரம் ।
யத் க்ஷணேந நிஜ முக்₂யமாநிதாம்
வ்யுத்க்ஷிணோதி ப₂லரீதிதத்த்வத: ॥ ”

[யாதொரு ஸ்ரீராமானுஜ க்ருபை, தன்னை அடைந்தவர்களுடைய முக்குறும்பை அதனால் விளையும் ப₂லனை உள்ளபடி காட்டிக் கணநேரத்தில் போக்கடிக்கிறதோ, அந்தக் கருணையே அவரை யடைந்தவர்களை ரக்ஷிப்பதற்குப் போதுமானதன்றோ] என்று பூர்வர்கள் சொல்லும் முக்தகமிறே.

ஸ்வவ்யாபாரேண ஸாத்$_4$யா ப$_4$ஜநக$_3$திரியம்
ஸ்வாநுரூபத்வஹாநாத்
த்யாஜ்யா பூஜ்யை: ப்ரபந்நைஶ்ஶரணவரணிதா
தே$_3$ஶிகைர்நாப்யுபாத்தா |
கிந்த்வாசார்யாபி$_4$மாநாத் பரமபத$_3$மஹோ
லப்$_4$யதே நாந்யதோ ந:
தஸ்மாத்$_3$ராமாநுஜாங்க்$_4$ரித்$_3$விதயமநுபமம்
ஸாத$_4$நம் பா$_4$வயாம: ||

[தன் முயற்சியினால் ஸாதி$_4$க்கப்படும் ப$_4$க்தி (அத்யந்த பாரதந்த்ரியத்தினால்) மிகச் சிறப்புற்ற ப்ரபன்னர்களுக்கு ஸ்வரூபவிருத்$_3$த$_4$மாகையால் கைவிடத்தக்கது. (ப$_4$க$_3$வத்ஸ்வாதந்த்ரியப$_4$யத்தாலே) ஶரணாக$_3$திமார்க்க$_3$மும் ஆசார்யர்களால் கைக்கொள்ளப்படவில்லை. ஆனால், ஆசார்யாபி$_4$மானத்தாலேயே பரமபத$_3$ம் அடையப்படுகிறது; வேறொதனாலுமில்லை. ஆகையால், ஸ்ரீராமாநுஜருடைய திருவடிகளையே ஒப்பற்ற உபாயமாக நாம் கொள்ளக்கடவோம்.]

என்று ப$_4$க்தி ப்ரபத்திகளை த்யாஜ்யகோடியிலே ஆக்கி எம்பெருமானாருடைய அபி$_4$மாநத்தாலே பேறு தப்பாதென்று தச்சரணாரவிந்த$_3$ங்களை உபாயமாக அறுதியிட்டாரிறே நாயனாராச்சான்பிள்ளையும்.

இப்படி நம் பூர்வாசார்யர்களனைவரும் ப்ரமாண புரஸ்ஸரமாக எம்பெருமானாரிடத்திலே உத்தாரகத்வத்தை அறுதியிட்டு, அவரபி$_4$மானத்திலே ஒதுங்கி "தேவு மற்றறியேன்" என்று ததே$_3$கநிஷ்ட$_2$ராய்ப்போந்தார்களிறே. ஆகையால் எம்பெருமானாரோடு உண்டான ஸம்ப$_3$ந்த$_4$த்துக்கு இசையாதே, "தொண்டுக்கே கோலம் பூண்டு" என்கிறபடியே குழச்சியிடுவதும் கும்பிடுவதுமாய்க்கொண்டு பரப$_4$ரமகராய்த்திரியும் து$_3$ர்மாநிகளான கள்ளக்கழனிமிண்டர்க்கு யாவதா$_3$த்மபா$_4$வி ஈஶ்வரன் ப$_2$லப்ரதா$_3$னன்றிக்கே ஸம்ஸார ஸாக$_3$ரத்திலே அழிந்து போரும்படியிட்டு வைப்பன். இவ்வர்த்த$_2$த்தை, "இராமாநுசன் மன்னு மாமலர்த்தாள் பொருந்தாநிலையுடைப் புன்மையினோர்க்கு ஒன்றும் நன்மை செய்யாப் பெருந்தேவரைப்பரவும் பெரியோர்" என்று ஸ்பஷ்டமாக அருளிச்செய்தாரிறே.

''ய: ஸ்ரீலக்ஷ்மணயோகி₃வர்யசரணத்₃வந்த்₃வாஶ்ரயீ
நாப₄வத்
தஸ்யாத்யந்தத₃யாதி₃ஸத்₃கு₃ணநிதி₄ர்நாராயண: ஸ்ரீபதி: I
தா₃தும் முக்திமநாத₃ரோ ப₄வப்₃ருஹத்₃வாராஶயே
ஸந்ததம்
நிக்ஷிப்யைவ ஹ்ருத₃யாபி நோ க₃ணயதி ப்ராக்ஸித்₃த₄
கர்மேரித: II ''

[எவனொருவன் ஸ்ரீராமாநுஜமுனிவர்யரின் திருவடித்தாமரையை ஆஶ்ரயிக்கவில்லையோ, மிக்க கருணை முதலான கு₃ணங்களையுடையவனும், லக்ஷ்மீநாத₂னுமான நாராயணனும் அவனுக்கு மோக்ஷமளிக்க விரும்புவதில்லை. அவன் அநாதிகாலமாகச்செய்த கர்மத்தால் தூண்டப்பட்டவனாய், அவனைப் பிறவிப்பெருங் கடலில் எப்போதும்தள்ளி, அவனைத் தன் திருவுள்ளத்தில் ஒரு பொருளாகக் கொள்ளாமலேயிருந்துவிடுகிறான்.]

என்று நஞ்ஜீயர் இவ்வர்த்த₂த்தை அருளிச் செய்தார். அதாவது "எம்பெருமானார் திருவடிகளில் ஸம்ப₃ந்த₄ ரஹிதனாய் நான் வைஷ்ணவனென்று யாதொருத்தன் ப்ரஸித்₃தி₄ தோற்றவிருக்கிறான்; அவனுக்கு நிரவதி₄க வாத்ஸல்ய யுக்தனான ஸர்வேஶ்வரன் புருஷகார பூ₄தையான பெரிய பிராட்டியார் அருகில் இருந்தாலும், த₃யாதி₃ கு₃ணபரிபூர்ணனாயிருந்தாலும், மோக்ஷ ப₂லம் கொடாமல் அநாத₃ரித்து யாவதா₃த்மபா₄வி ஸம்ஸாரமாகிற பெருங்கடலிலே தள்ளி இட்டுவைத்து அவன்தான் தன்னுடைய அநாதி₃ ஸித்₃த₄மான கர்மத்துக்குப் பரவஶனாகி இப்படி அநர்த்த₂ப்பட்டானென்றுகொண்டு 'என் செய்தான், என் பட்டான்' என்று திருவுள்ளத்தாலும் எண்ணான்" என்றபடி.

இப்படி பரம காருணிகராய், பரமோத்தாரகரான எம்பெருமானாரபி₄மானத்திலே ஒதுங்கி வர்த்திக்கும் வைஷ்ணவாதி₄காரி தனக்கு ஸஹவாஸ யோக்₃யரும், ஸதா₃நுப₄வ யோக்₃யரும், ஸத்கார யோக்₃யரும் உண்டாம்படி தேடிக்கொண்டிருக்க வேணும். இல்லையாகில் ஸ்வஸ்வரூப ப்ரச்யுதி வந்து அத₄:பதித்து விடுவன். இதில் ஸஹவாஸ யோக்₃யராகிறார்—மறுவற்ற சரம பர்வ நிஷ்ட₂ராய், எம்பெருமானாருடைய (கு₃ணப்ரதிபாத₃கமான) தி₃வ்ய ஸூக்திகளை ப்ரஸங்கி₃க்கில், "இவையும் சில ஸூக்திகளீ

ருந்தபடியே! பாவியேன், இவற்றை அநாதி3காலம் இழந்து கெட்டேன்'' என்று நெஞ்சுருகி ஈடுபட்டிருக்குமவர்கள்; ஸத்3ாநு ப4வ யோக்3யராகிறார்—எம்பெருமானர் திருநாமத்தை உச்சரியா விடில் நாக்கு வற்றுமென்று தத்3ேகாநுஸந்த4ான தத்பரராய், தது3க்திஸ்ரவணத்தில் ப்ரவணராய், ஸ்வர நேத்ராங்க3விக்ரியையை உடையராய், தத்3விஷயத்தில் ப்ரவணராயிருக்குமவர்கள்; ஸத்கார யோக்3யராகிறார்—தே3ஹயாத்ரையில் உபேக்ஷை பிறந்து ஆத்மயாத்ரையில் மிக்க அபி4நிவேஶத்தை உடையராய் ததீ3யாபி4மானத்திலே ஒதுங்கி, எம்பெருமானருடைய திருநாமாநு ஸந்த4ானத்தாலே மாது4கரங்கொண்டு தே3ஹ த4ாரணம்பண்ணி வர்த்திக்குமவர்கள். எம்பெருமானருடைய கல்யாண கு3ணங் களிலே மக்3நாஶயரல்லாதாரோடு ஸஹவாஸம் சரம பர்வாதி4 காரிக்கு அவத்3யமாயிருக்கும். ''இராமாநுசன் தன் பிறங்கிய சீர் சாராமனிசரைச் சேரேன் எனக்கென்ன தாழ்வினியே'' என்றும் அருளிச்செய்து வைத்தாரிறே. இவ்வதி4காரிக்கு க்ஷணமு மிடைவிடாமல் காலக்ஷேபத்துக்கு விஷயமாகிறது— ''த்வத் ப்ரப3ந்த4 பரிஶீலநை: காலக்ஷேபோஸ்து,'' [ப்ரார்த்த2நா பஞ்சகம்] [தேவரீருடைய நூல்களை ஆராய்வதிலேயே என்பொழுது போகட்டும்.] என்கிறபடியே, தத்ப்ரதிபாதி3தமான வேத3ாந்த க்3ரந்த2ங்களும் ப4க3வத்3 கு3ணுநுப4வரூப தி3வ்ய ஸூக்திகளும்; தி3வ்ய ஸூக்திகளாவன — ஆழ்வார்களுடைய அருளிச்செயல்களும், திருப்பாவையும், பூர்வாசார்யர்களருளிச் செய்த ரஹஸ்யங்களும்.

இனி இந்தச் சரமாதி4காரிக்கு நாலு நிலையுண்டு. அதாவது:— ஸ்வரூபஜ்ஞானமென்றும், ஸ்வரூப நிஷ்டை2யென்றும், ஸ்வரூப யாத2ாத்ம்யஜ்ஞானமென்றும், ஸ்வரூப யாத2ாத்ம்ய நிஷ்டை2 யென்றும் நாலு வகையாயிருக்கும்; இவற்றில் ஸ்வரூபஜ்ஞானமா வது—ப4க3வத் பரதந்த்ரமாயிருக்கிற அஸாத4ாரணுகாரத்தை எவ் வழியாலும் ஸத்தை குலையாமல் நின்றுணர்ந்து, அதுதான் ததீ3ய பர்யந்தமாகாவிடில் குலையுமாகையாலே எம்பெருமானருக்கும் ததீ3 யர்க்கும் அத்யந்த பரதந்த்ரமாயிருக்குமென்று அறுதியிட்டு, தத்3ேக நிஷ்ட2ராயிருக்குமிருப்பை உள்ளபடி அறிகை; ஸ்வரூபநிஷ்டை2 யாவது—இஷ்ட விநியோக3ார்ஹஸ்வரூபமான ததீ3யஶேஷத்வம்;

“அகிஞ்சித்கரஸ்ய ஶேஷத்வாநுபபத்தி:” [கைங்கர்யம் செய்யாதவனுக்கு ஶேஷத்வம் பொருந்தாது.] என்கிறபடியே கிஞ்சித்காரமில்லாதபோது அந்த ஶேஷத்வம் நிலைநில்லாமையாலே தத் ஸித்3த்4யர்த்த2மாக, தத்ப்ரதிஸம்ப3ந்தி4களாய், பரம ஶேஷிகளான எம்பெருமானார் அபி4மானநிஷ்டர்2 விஷயத்திலும் த்ரிவித4கரணத்தாலும் கிஞ்சித்கரித்துப்போரும் நிலையிலே ஒருப்படப்பண்ணுகை. ஸ்வரூப யாதா2த்ம்யஜ்ஞானமாவது:— எம்பெருமானாருடைய அபி4மானத்திலொதுங்கி, தத்3விஷய கிஞ்சித்காரத்தாலே நிலையையுடைய ஸ்ரீவைஷ்ணவர்கள் பக்கல் அவ்யபி4சாரிணியான ப4க்தியைப்பண்ணி, தத்3விஷயவிஷயீகாரத்திலே ஸ்வஸ்வரூபத்தைச் சொருகியிட்டு இந்த ஸ்வரூபம் அத்தலைக்கே உறுப்பாய், விநியோக3ப்பட வேணுமென்னும் இவ்வர்த்த2த்தினுடைய நித்ய ப்ரார்த்த2னையிலே நிலையுடையனாயிருக்குமிருப்பை உள்ளபடி அறிகை. “உன் தொண்டர்கட்கே அன்புற்றிருக்கும்படி என்னையாக்கி அங்காட்படுத்தே” என்று அமுதனாரும் இவ்வர்த்த2த்தை அருளிச்செய்தாரிறே. ஸ்வரூப யாதா2த்ம்ய நிஷ்டை2யாவது — சரம பர்வமான எம்பெருமானாருடைய முக2விகாஸத்துக்குடலாகத் ததீ3ய விஷய கிஞ்சித்காரத்தாலும் தந் முக2விகாஸ ஹேதுவான தச்சே2ஷவிஷய கிஞ்சித்காரத்தாலும் ஸ்வரூபத்தை விநியோகா3ர்ஹமாம்படி தத்தச்ச2ந்த3ானுவர்த்தநபூர்வகமாக அஶேஷ ஶேஷ வ்ருத்தியிலும் அந்வயிப்பித்து, அதுதான் தத்தத்3விஷயபூ4தரான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய பரம்பராபர்யந்தமாக த்ரிவித4 கரணத்தாலும் பர்யவஸிக்கும்படி பண்ணி, தத்3விஷயகிஞ்சித்காராப4ாவத்தில் ஆத்மஸத்தையில்லை என்னும்படியான நிலை பிறந்து, ததே3க நிஷ்டை2யிலே தத்பரனாயிருக்கை. இனி இவ்வர்த்த2 நிஷ்டை2தான் ஓரொருவர்க்குச் சரமஶேஷியான எம்பெருமானாருடைய கடாக்ஷ விஶேஷத்தாலே லபி4க்குமதொழிய மற்றபடி து3ர்லப4மாயிற்று. ஆகையாலேயிறே நம் த3ர்ஶனத்தில் சரம ஶேஷியான எம்பெருமானார் விஷயத்தில் ப்ராவண்யம் ஸார்வத்ரிகமன்றிக்கே, தேடிப்பிடிக்க வேணும்படி க்வாசித்கமாயிருக்கிறது.

“அஸ்மிந்நர்த்தே2ஹி விஶ்வாஸஸ் ஸர்வேஷாம் ந ஜநிஷ்யதி|
மத்கடாக்ஷோ ப4வேத்3யஸ்மிந் மய்யேவ ப்ரவணோ ஹி ய:||
தஸ்ய தஸ்ய ஹ்ருதி3ஸ்தே2ாயம் ப4விஷ்யதி ந ஸம்ஶய: ||”

[பாஞ்சராத்ரம்] [ஆசார்ய நிஷ்டை₂யாகிற இவ்விஷயத்தில் நம்பிக்கை அனைவர்க்கும் உண்டாகாது. எனது கடாக்ஷம் எவனிடம் விழுகிறதோ, என்னிடமே எவன் ஈடுபட்டிருக்கிருனே, அந்த அந்த மனிதனிடமே இந்த நம்பிக்கை பிறக்கும்.] என்று எம்பெருமான்தானே சரம பர்வ விஷயமான ப்ரதிபத்தி தன் கடாக்ஷமடியாக உண்டாகவேணுமென்று சொல்லிவைத்தானிறே. உஜ்ஜீவநேச்சு₂வான அதி₄காரி தனக்கு ப்ரத₂மத்திலே சரம பர்வமான எம்பெருமானர் விஷயத்தில் ப்ராவண்யம் விளைகைக்குடலாக, தத₃பி₄மான நிஷ்ட₂ரான ஸ்ரீவைஷ்ணவர்கள் பக்கல் கரணத்ரயத்தாலும் அநுவர்த்தனம் பண்ணி, தத₃வஸரப்ரதீக்ஷனாய், தனக்கு அவர்கள் ஸ்வரூபஶோத₄னம் கொடுத்து, தன்னை விரும்பி மேல் விழுந்து தத்₃கு₃ணவைப₄வத்தை உபதே₃ஶிக்க, சுக்கான்பாறைபோலே கடி₂ன ஹ்ருத₃யனன்றிக்கே நெஞ்சிரக்கம் உடையனாய், செவி தாழ்த்து, கண்ணும் கண்ணீருமாய் இருக்கும்படியான பரிபாக த₃ஶை பிறந்தால், சரமஶேஷி கடாக்ஷம் பிறந்து, தடையின்றியிலே அவன்பக்கல் ப்ரவஹிக்கும்; பின்பு தத் ஸம்ப₃ந்த₄ம் அவிச்சி₂ந்ந ஸ்ரோதோ ரூபேண நடந்து செல்லுமிறே; இப்படிப்பட்ட ஸம்ப₃ந்த₄த்தை இவனுக்கு அவர்கள் உணர்த்தும்போது, இவன் அறியாததாய், எம்பெருமானாரும் ததீ₂யரும் அறிந்ததாய் இருப்பன சில கைம்முதல் இவன்பக்கல் உண்டாயிருக்கவேணுமிறே. அவையாவன:—நிரங்குஶ ஸ்வதந்த்ரனாய், நிருபாதி₄க ஶேஷியான எம்பெருமான், இவ்வதி₄காரியினிடத்திலே நன்மையை நினைக்கும்படியான குளிர்ந்த திருவுள்ளத்தை உடையனாகவேணும்; அதுக்கடியாக இவனுக்கு அஜ்ஞாதமாய் அவனுக்கு ஜ்ஞாதமாயிருப்பதொரு யாத்₃ருச்சி₂க ஸுக்ருதம் பிறந்திருக்க வேணும்; 'இவன் பக்கல் ஏதேனும் யாத்₃ருச்சி₂கமாக ஒரு நன்மை காணும் போது என்றோ?' என்று, எங்கு மொக்க வ்யாப்தி பண்ணி அவகாஶம் பார்த்திருக்கும் ஸர்வேஶ்வரனுடைய கடாக்ஷ விஶேஷம் இவன் பக்கல் அபி₄முக₂மாயிருக்க வேணும். இப்படி எம்பெருமானுடைய விஶேஷ கடாக்ஷம் அபி₄முக₂மான த₃ஶையிலே, ப₄க₃வத்ப்ரஸங்க₃ம் வந்தால் சிவிட்கென்று த்₃வேஷம் கொண்டாடாமல் அநுமதிப்ரத₃னாயிருக்க வேணும்; இதடியாக ப₄க₃வத்₃ கு₃ண விக்₃ரஹ விபூ₄தி த₃ர்ஶனத்தில் முகம் மாருடாமல், அபி₄முக₂னாயிருக்கும்படியான நினைவு பிறக்கவேணும்; இதுக்கெல்லாமடியாக இவை இத்தனையும்

பெற்று ப₄க₃வத்ஸ்வரூபரூபகு₃ணவிபூ₄திவிஷயஜ்ஞானத்தை உடையராய், நிஷ்க்ருஷ்ட ஸத்வ குணநிஷ்ட₂ரான ஸ்ரீவைஷ்ண வர்களோடு ஸம்ப₃ந்த₄த்துக்குப் பூர்வப₄ாவியான ஸம்ப₄ாஷண முண்டாக வேணும், இவையித்தனையும் உண்டாகிலிறே இவனுக்கு ஸத₃ாசார்யராய், சரம பர்வமான எம்பெருமானாரோடு ஸம்ப₃ந்த₄ம் ஸித்₃தி₄ப்பது.

"ஈஶ்வரஸ்ய ச ஸௌஹார்த்த₃ம் யத்₃ருச்ச₂ாஸுக்ருதம் தத₂ா।
விஷ்ணோ: ப்ரஸாத₄அத்₃வேஷ ஆபி₄முக்₂யம் ச ஸாத்விகை: ।
ஸம்ப₄ாஷணம் ஷடே₂தாநி ஹ்யாசார்ய ப்ராப்தி ஹேதவ:॥"
[பாஞ்சராத்ரம்]

[(1) ஸர்வேஶ்வரனுடைய நல்ல திருவுள்ளமும், (2) (அதற்குறுப்பாக அவன் கணக்கில் எடுத்துக்கொண்ட) சேதன னுடைய யாத்₃ருச்சி₂க ஸுக்ருதமும், (3) (அதற்குக்காரணமான) விஷ்ணுவின் அருளும், (4) அத்₃வேஷமும் (த்₃வேஷமின்மையும்), (5) ஆபி₄முக்₂யமும் (ஈடுபாடும்), (6) (அதற்குக்காரணமான) அவனடியார்களோடு ஸம்ப₄ாஷணமும் ஆகிய இவ்வாறும் நல்ல ஆசார்யனை ஓர் சேதனன் அடையக்காரணமாகின்றன.] என்றிறே இதுக்கு ப்ரமாணம்.

இனி எம்பெருமானாருடைய அபி₄மானத்திலே ஒதுங்கி வர்த் திக்கும் சரமாதி₄காரியான ஸ்ரீவைஷ்ணவனுக்கு வஸ்தவ்யபூ₄மி யாவது:— "இராமாநுசனைத் தொழும் பெரியோர் எழுந்திரைத் தாடும் இடம் அடியேனுக்கு இருப்பிடமே" என்கையாலே, எம் பெருமானார் திருவடிகளில் ப்ராவண்யமுடையராய், பெரிய மதிப் பராய், தத் ஸம்ப₃ந்த₄ வைலக்ஷண்யாபி₄வ்ருத்₃தி₄ உண்டாகப் பெற்றோமென்கிற ஹர்ஷ ப்ரகர்ஷத்தாலே ஸஸம்ப்₄ரமந்ருத்தம் பண்ணி வர்த்திக்கிற ஸாத்விக ஸ்ரீ வைஷ்ணவர்கள் எழுந்தருளி யிருக்கும் பரமபாவனமான தே₃ஶம்.

"அஸ்மத்₃தே₃ஶிக ப₄க₃வத்₃ராமாநுஜயோகி₃சரணயுக₃ளம் ஆஶ்ரிதாநாம் தத₃பி₄மாநைக நிஷ்ட₂ாநாம் தத்₃கு₃ண ஸந்தே₃ாஹாநுப₄வாநந்த₃ாம்ருத ஸாக₃ரதரங்க₃ ஶீகரஸம்ப₃ந்த₄ ஶீதளஹ்ருத₃யாநாம் தத்₃யதி₂வ்யநாமோச்சாரணஜநித ஹர்ஷப்ரகர்ஷவஶாத் ஸஸம்ப்₄ரமநர்த்தநம் குர்வதாம் ஸாத்வி

காக்₃ரேஸராணும் ஶமத₃மாதி₃கு₃ணோபேதாநாம் தத்வவித்தமாநாம் அஸ்மத் ஸ்வாமிநாம் ஆநந்த₃ரபூர்ணகே₃ாவிந்த₃ார்யதுல்யஸ்வப₄ாவாநாம் உபாதே₃யதமதி₃வ்யஜ்ஞாந ப₄க்தி வைராக்₃ய நிஷ்ட₂ாநாம் ஶ்ரீவைஷ்ணவாநாமாவாஸஸ்த₂ாநமேவ அஸ்மத₃ாதி₃சரமாதி₄காரிணமப்யாவாஸபூ₄மி:”

[நமது ஆசார்யரான ஸ்ரீராமாநுஜமுனிவரின் திருவடியை அடைந்தவர்களாய், அவரது அபி₄மானத்திலேயே ஊன்றியிருப்பவர்களாய், அவரது கு₃ணஸமூஹங்களை அநுப₄விப்பதால் உண்டான ஆனந்த₃மாகிற அமுதக்கடலின் அலைத்துளிகளினாலே குளிர்ந்த நெஞ்சுடையவர்களாய், அவரது தி₃வ்யநாமங்களை உச்சரிப்பதாலே உண்டான பேரானந்த₃த்தாலே பரபரப்போடு நடனமாடுபவர்களாய், ஸாத்விகர் தலைவராய், நெஞ்சடக்கம் புலனடக்கம் முதலான கு₃ணங்களை உடையவர்களாய், உண்மையை அறிந்தவர்களில் தலைமை பெற்றவர்களாய், வடுக நம்பியையும், எம்பாரையும்போன்ற தன்மையுடையவர்களாய், அனைவராலும் மிகவும் கைக்கொள்ளத்தக்க மிகச்சிறந்த ஜ்ஞாந ப₄க்தி வைராக்₃யங்களில் ஊன்றி நிற்பவர்களாய், நமக்கு ஸ்வாமிகளாயிருக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களின் இருப்பிடமே நம்மைப் போன்ற சரமாதி₄காரிகளுக்கும் இருப்பிடமாகும்.] என்று நாயனாராச்சான்பிள்ளை அருளிச் செய்தாரிறே.

இனி அந்தச் சரமாதி₄காரிக்கு, பரிஹரிக்க வேண்டும் அம்ஶங்கள் சிலவுண்டு: அவையாவன:—பரம காருணிகரான எம்பெருமானாருடைய கு₃ணாநுஸந்த₄ான ஶ்ரவணத்தில் சிவிட்கென்று நெஞ்சிரக்கமற்றிருக்கும் து₃ர்மாநிகளுடன் ஸம்ப₄ாஷணமும், அவர்களுடன் ஸஹவாஸமும், அவர்களுடன்கூடி பு₄ஜிக்குமதுவும், தத்பாத₃ தீர்த்த₂மும், பாணிபக்வாந்நபோ₄ஜனமும், ஶரீரஸம்ப₃ந்த₃ ப்ரயுக்தமாக அவர்களுடன் ப₃ாந்த₄வாஸக்தியுண்டாகையும் தத்க்ருத ப₄க₃வத்₃கு₃ணாநுஸந்த₄ான ஶ்ரவணமும், தத்ததீ₃யஸத்காரமும், தத்₃த்₃ரவ்ய ஸ்வீகாரமும், தத்₃ விஷய ப்ரணாமமும் ஆக இந்தப் பத்து க்ருத்யமும் சரம பர்வமான எம்பெருமானார் விஷயத்தில் மறுவற்ற ப்ராவண்யமுடையனாய், தத₃பி₄மானத்தில் ஒதுங்கி வர்த்திக்கும் உத்தமாதி₄காரிக்கு விஶேஷித்துப் பரிஹரிக்கவேணும்; இல்லையாகில் ஒருதலை *தோதவத்தியும் ஒருதலை விழுப்புமாய்ப்போரும் இவனுக்கு உப₄ய ஸம்ப₃ந்த₄மும் குலைந்து யாவதா₃த்மப₄ாவி ஸம்ஸாரம் அநுவர்த்திக்குமதொழிய, கரை காண்கிறதில்லை.

* தோதவத்தி-தௌ₄தவஸ்த்ரீ; பரிசுத்தியென்றபடி.

"ஶ்ரிய:பதியாய், பரமத₃யாளுவாய், பரமஶேஷியாய், ஸர்வஶக்தி யுக்தனான எம்பெருமானுடைய திருவடிகளை உபாயமாகப் பற்றி, தத்₃கு₃ணப்ரதிபாத₃கதி₃வ்யப்ரப₃ந்த₄ங்களை அநுஸந்த₄ானத் துக்கு விஷயமாக்கி 'பொழுதெனக்கு மற்றதுவே போதும்' என்கிறபடியே போதுபோக்கி வர்த்திக்கிற நமக்குப் பேற்றுக் கண்ணழிவுண்டோ" என்று நினைத்து, சரமபர்வத்திலிரங்காமல் து₃ரபி₄மானிகளாய் இருக்கும் கழனிமிண்டரான ஸ்ரீவைஷ்ணவர் கள், அவர்கள் தங்கள் தங்கள் நினைவாலே பேறுண்டென்றிருக் கிலும், ஈஶ்வரன் ஸர்வஜ்ஞனாகையாலே, சரமபர்வமான எம் பெருமானார் பக்கல் கண்வையோமென்றிருந்த அதுவே ஹேது வாக அவர்களுக்குப் பேற்றைப் பண்ணிக்கொடாதமாத்ரமே யன்றியே இவர்கள் ஸ்வரூபத்தையும் காலக்ரமத்திலே ஸங்கு சிதமாம்படி பண்ணிவிடுவன்.

"ஸ்ரீஶஶ்ஸ்ரீமத்பத₃ாப்₃ஜே ஶரணமிதி தி₄யா தத்ர ப₄க்தி (தத் ப்ரபத்தி) த்வராணாம்
ஸ்ரீமத்₃ ராமாநுஜார்ய ப்ரணதிமப₄ஜதாம் கூ₂ட₄சித்தா-ஶயாநாம் ।
காருண்ய க்ஷாந்தி ஸிந்து₄: ஸ்வபத₃நிவஸதிம் நேஶ்வரோ த₃ாதுமிச்சே₂-
தி₃த்யேவம் சிந்தகாநாமபி பரமபத₃ம் த₃ாதுகாமஸ்ஸ ஜாது॥"

[ஸ்ரீமந் நாராயணன் தன் திருவடித்தாமரையில் ஶரணடைந்து, அவ னிடம்ப₄க்தி (அல்லது ப்ரபத்தி)செய்து அவனை அடையத் துடிப்ப வர்களாய், உள்ளக்கருத்தில் கபடத்தன்மையை வைத்துக் கொண்டு ராமாநுஜாசார்யரை ஶரணமடையாமலிருக்குமவர் களுக்கு, கருணை பொறுமை முதலான கு₃ணங்களுக்குக் கடலாயிருந்தபோதிலும், தன் திருவடிகளில் வாழ்ச்சியை அருளமாட்டான். இதை அறிபவர்களுக்கு ஈஶ்வரனான அவன் பரமபதத்தைத் தக்க காலத்தில் கொடுக்க விரும்புகிறான்.]

என்று எம்பாரருளிச்செய்த இந்த தி₃வ்ய ஸூக்தி உக்தமான அர்த்த₂த்துக்கு ப்ரமாணமாக அநுஸந்தே₄யமாகக்கடவது.

இன்னமும் ராமாநுஜ பத₃ச்ச₂ாயை என்று புகழ் பெற்ற இவர் "ஸ்ரீமந்நாராயண சரணாரவிந்த₃ ஶரணாக₃திரேவோஜ்ஜீவநாய ப₄வதிதி பு₃த்₃த்₄யா, ப₄க₃வந்தம் பரம காருணிகம் பர மோதா₃ரம் அபாரகல்யாணகு₃ணாகரம் அபரிமிதவாத்ஸல்ய ஸௌஶீல்யஸாக₃ரம் அஶரண்யாகி₂லஜநஶரண்யம் அநவரதம் ஆஶ்ரயணீயசரணகமலயுக₃ளம் அபி₄மதாநுரூப நிரவதி₄காநந்த₃ ஸந்தே₃ாஹ ஜநகநித்யஸூரி பரிஷ த₃ந்தர்ப₄ாவ மஹார்ப₂ல ப்ரஸாத₃கம் அஸ்மது₃த்தாரகம் அதிரமணீய விமலதர லாவண்யாகர தி₃வ்யமங்க₃ள விக்₃ர ஹம் அதிஶீதலவிமலக₃ம்பீ₄ர ஜலாஶயப்ரப₄வ மிஹிரதருண கிரணநிகர விகஸிதவிராஜமாந கமலத₃ளாயததி₃வ்யநயநயுக₃ ளம் ஸ்வவஶக₃மித சித₃சிதீ₃ஶ்வரதத்வத்ரயஸூசக த₃ண்ட₃ த்ரயரூப மண்ட₃ந மண்டி₃தம் அஸ்மந்மாதரம் அஸ்மத்பிதரம் அம்ருத லஹரீவத₃நுகூல நவ்யதி₃வ்யகோமளவிமல மது₄ ராயமாந நிஜஸூக்திகலாபை: ஆஶ்ரிதாந் அகி₂லஜநாந் ஆஹ் லாத₃யந்தம் ஸ்ரீமந்தம் ஆர்யஜநாபி₄வந்த்₃யம் அஸ்மத் குல நாத₂ம் அஸ்மத₃ஸாத₄ாரண ஶேஷிணம் அஸ்மத₃ாதி₃ ரக்ஷ்ய வர்க்க₃ ஸர்வப்ரகார ரக்ஷணைகதீ₃க்ஷாகு₃ரும் ஸ்ரீராமாநுஜா சார்யமநாத்₃ருத்ய, பரம காருணிக: ப₄க₃வாநேவ ஸ்வ சரணகமல ஸமாஶ்ரிதாநாம் அஸ்மாகம் ஸ்வப்ராப்தி ரூப ப₂லம் ப்ரயச்ச₂தீதி ஸ்வமதேந விசிந்த்ய வர்த்தமாநாநாம் தத்வஜ்ஞாந லவலேஶ தே₃ஶாதிக₃ாநாம் து₃ரபி₄மாந ஸஹக்ருத பரப்₄ராமக வ்ருத்தாநாம் ரூபவேஷத₄ாரிணாம் 'வயமேவ ஸ்ரீவைஷ்ணவா:' இதி ஸ்வமதேநாத்மாநம் ப₃ஹு-மந்யமாநாநாம் சேதநாநாம் அபார காருண்யௌ தா₃ர்ய வாத்ஸல்ய ஸௌஶீல்யைக நிதி₄ரபி ப₄க₃வாந் புரு ஷோத்தம: ஸ்ரீமந் நாராயண: அஸ்மத் குல ஸ்வாமிநோ ப₄க₃வத: ஸ்ரீமத்₃ராமாநுஜ கு₃ரோ: சரண யுக₃ள ஸம்ப₃ந்த₄ ராஹித்யம் ஹ்ருதி₃ நித₄ாய கத₃ாசித₃பி ஸ்வப்ராப்தி ரூப மோக்ஷ ப₂லமகுர்வாண: யாவத₃ாத்மப₄ாவி ஸம்ஸாரநிரய

க₃ர்த்தே "க்ஷிபாம்யஜஸ்ரம்" இதி வத₃ந் நிக்ஷிப்ய, கத₃ாசி த₃பி தாந் ஹ்ருத₃ா ந க₃ணயந் ராமாநுஜ கு₃ரு க்ருபாபி₄ மாநாந்தர்பூ₄த ஸாத்விக ஜநேஷு நித்ய த₃த்தத்₃ருஷ்டி: தேப்₄ய: ஸர்வஸ்வத₃ாந கரணேபி கிமபி ந த₃த்தமே வேத்யத்₃ யாபி அபரிதுஷ்ட: ராமாநுஜகு₃ருசரணயுக₃ள ப்ராவண்ய நைரந்தர்ய ப்ரதா₄நைக நிஷ்ணு தோ வர்த்ததே"

[ஸ்ரீமந் நாராயணனுடைய திருவடித் தாமரைகளில் சரணமடைவதே உய்வுபாயமாகும் என்னும் நினைவாலே பெருங்கருணையுடையவராய், பெரிய வள்ளலாய், எல்லையற்ற கல்யாண கு₃ணங்களுக்கு இருப்பிடமானவராய், அளவற்ற வாத்ஸல்யஸௌஶீல்ய கு₃ணங்களுக்குக் கடலாய், புகலற்ற எல்லாச் சேதனர்களுக்கும் புகலாய், எப்போதும் அடையத்தக்க திருவடித்தாமரையிணையையுடையவராய், இனியதும் தகுந்ததும் எல்லையற்றதுமான பேரின்ப வெள்ளத்தை விளைக்கும் நித்ய ஸூரிகள் கூட்டத்தில் சேர்க்கையாகிற பெரும் பயனை அருள்பவராய், நம்மைக் கரை சேர்ப்பவராய், மிக அழகியதாய். குற்றம் சிறிதுமற்றதாய், ஸமுத₃ாய சோபைக்கு இருப்பிடமான தி₃வ்ய மங்க₃ள விக்₃ரஹத்தையுடையவராய், மிகக்குளிர்ந்ததாய், குற்றமற்றதாய், ஆழமான நீர்நிலையிலிருந்து உண்டானதாய் ஸூர்யனுடைய இளங்கிரணங்களாலே மலர்ந்து விளங்குவதான தாமரை இதழ் போல் நீண்டு அழகிய இரு திருக்கண்களையுடையவராய், "சித் அசித் ஈஶ்வரன் என்னும் மூன்று தத்துவங்களும் தன் வசப்பட்டிருக்கின்றன" என்று உணர்த்தும் த்ரித₃ண்ட₃மாகிற அலங்காரத்தால் அலங்கரிக்கப் பெற்றவராய், நமக்குத் தாயாய், நமக்குத் தந்தையாய் அமுத அலைகள் போலே அனுகூலமாய், புதிதாய், திவ்யமாய், அழகியதாய், குற்றமற்றதாய், இனியதான தமது ஸ்ரீஸூக்திகளாலே தம் அடியவர்களான அனைவரையும் உகப்பிப்பவராய், கைங்கர்யச் செல்வம் மிக்கவராய், பல நல்லவர்களால் வணங்கப்படுபவராய், நமக்குக் குலநாத₂ராய், நமக்கேயுரிய ஶேஷியாய், நம்மைப் போன்ற ரக்ஷ்ய வர்க்க₃ங்களை எல்லாப்படியாலும் ரக்ஷிப்பதையே விரதமாகக் கொண்ட ஆசார்யரான ஸ்ரீப₄க₃வத்₃ராமாநுஜாசார்யரை உபேக்ஷித்து "பரமகாருணிகனன ப₄க₃வானே தன் திருவடித்தாமரையையடைந்திருக்கும் நமக்குத் தன்னை அடைவதாகிற ப₂லத்தை அளிப்பான்" என்று தம் அறிவைக்கொண்டே நிர்ணயித்திருப்பவர்களாய், உண்மையறிவு ஒரு சிறிதுமற்றவர்

களாய் துரபிமானத்தோடுகூடப் பிறரை மயக்கும் ஆசாரத்தை உடையவர்களாய், வைஷ்ணவரூப வேஷங்களை த₄ரிப்பவர் களாய் "நாமே ஸ்ரீவைஷ்ணவர்கள்" என்று தம்மைத்தாமே பெரிதாக நினைப்பவர்களான சேதனர்களுக்கு, எல்லையற்ற கருணை வண்மை வாத்ஸல்யம் ஸௌஶீல்யம் ஆகிய கு₃ணங் களுக்குக் கொள்கலமாயிருந்தபோதிலும், ப₄க₃வானாய்,புருஷோத்த மனான ஸ்ரீமந்நாராயணன் நம் குலஸ்வாமியான ஸ்ரீப₄க₃வத்₃ ராமாநுஜாசார்யருடைய திருவடியிணைகளில் தொடர்பில்லாமை யைத் திருவுள்ளத்தில்கொண்டு, அவர்களுக்குத் தன்னை அடைவ தாகிற மோக்ஷபலத்தை ஒருபோதும் அருளாதவனாய், 'எப்போதும் இவர்களை ஆஸுரயோனிகளிலேயே தள்ளுகிறேன்' [கீ₃தை] என்று சொல்லிக்கொண்டு அவர்களை என்றும் ஸம்ஸார நரகப் படுகுழியில் தள்ளி, ஒருபோதும் அவர்களைத் தன் திருவுள் ளத்தில் கணிசியாதவனாய் ஸ்ரீராமாநுஜாசார்யருடைய கருணைக் கும் அபி₄மானத்துக்கும் பாத்திரமான ஸாத்விக ஜனங்களிடமே எப்போதும் திருக்கண் செலுத்துபவனாய், அவர்களுக்கு அனைத்தை யும், அளித்தாலும் ஒன்றுமே செய்யவில்லை என்று இன்றுவரை குறையோடு இருப்பவனாய், ஸ்ரீராமாநுஜாசார்யரின் திருவடியிணை களில் ஈடுபாட்டை இடைவிடாமல் அளிப்பவனாய் விளங்குகிறான்]

என்று, எம்பெருமானாரோடு ஸம்ப₃ந்த₄ம் இல்லாதவர்களுக்கு, ஸர்வ ப்ரகாரத்தாலும் ஈஶ்வரன் ஸ்வப்ராப்தி பண்ணிக் கொடா மல் யாவதா₃த்மபா₄வி ஸம்ஸாரமாகிற நரகக்குழியிலே தள்ளி இட்டுவைத்து, திருவுள்ளத்தாலும் அவனை நினையானென்று அருளிச் செய்தாரிறே. ஆகையாலே, ஸர்வ ப்ரகாரத்தாலும் உஜ்ஜீவிக்க வேணுமென்னும் நினைவுடையவன் அஶரண்ய ஶரண்யராய், பரம காருணிகராய், பரமோதா₃ரரான எம்பெருமானாருடைய அபி₄மா னமே உத்தாரகமென்றறுதியிட்டு, ததே₃கநிஷ்ட₂னாய் "தேவு மற்றறியேன்" என்று ஶேஷித்வ ஶரண்யத்வ ப்ராப்யத்வங்களை எம்பெருமானார் பக்கலிலே அறுதியிட்டு, பேற்றுக்குடலாக ப்ரத₂ம பர்வத்தில் நெஞ்சு தாழ்ந்து இருகரையனாய் யாதா யாதம் பண்ணி அலமாவாதே, எம்பெருமானாரபி₄மானத்திலே ஒதுங்கி, தமக்குப்பேற்றில் கண்ணழிவில்லை என்று நெஞ்சில் தேற்றமுடையவனாய் எம்பெருமானார் விஷயத்தில் ப்ராவண்ய ஸீமா பூ₄மிகளான பரம ஸாத்விக வர்க்க₃த்துடன் "போ₃த₄ யந்த: பரஸ்பரம்" [கீ₃தை 10-9] [ஒருவருக்கொருவர் ப₄க₃வத்₃ விஷயத்தை அறிவிப்பதைப்] பண்ணிக்கொண்டு பரஸம்ரு

த்ருத்யேக ப்ரயோஜனனாய், எம்பெருமானார் விஷயத்தில் ப்ராவண்யமுடையாரைக் கண்டால் "இந்தளத்திலே தாமரை பூத்தாப்போலே இருள் தருமா ஞாலமான இக்கொடுவுலகத்திலே இங்ஙனேயும் சிலருண்டாகப்பெறுவதே" என்று ஹ்ருஷ்ட புலகித ஶரீரனாய், யாவச் சரீர பாதம் த்ரிவித கரணத்தாலும் ஒருபடிப்பட ஸ்வரூபத்தை நோக்கிக்கொண்டு எம்பெருமானாருடைய திருநாமோச்சாரணமில்லாவிடில் நாக்கு வற்றும்படியான நிலையோடு பொருந்தி மனஸ்ஸை ஸாவதானமாய்ப் பண்ணிக்கொண்டு ஸ்வரூபானுகுணமாக வர்த்திக்கவேணும்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

நாலூராச்சான் பிள்ளை திருவடிகளே சரணம்.

சரமோபாய தாத்பர்யம் ஸமாப்தம்.

5. வார்த்தாமாலை (20) வார்த்தை: திருக்கோட்டியூர் நம்பி வைபவம் ஐதிஹ்ய நிர்வாஹம் 8 காண்க.

6 வார்த்தாமாலை (72) வார்த்தை; பெரியநம்பி வைபவம் ஐதிஹ்யநிர்வாஹம் 6 காண்க.

7. வார்த்தாமாலை (92) வார்த்தை & விவரணம். பட்டினிப் பெருமாளென்றொருவரை எம்பெருமானார் நாலில் பத்தில் கண்டருளினால், "பெருமாளே!" என்றருளிச்செய்ய; இவரும் "ஜீய! ஜீய!" என்பர்; இவரும் அற்றைக்கு க்ருதார்த்தரானோம் என்றருளிச்செய்வர்; இவரும் நாலுமூன்றுநாள் திருமுடிக்குறையிலே அநுஸந்தித்துக் கொண்டிருப்பர்: ஒருநாள் ராத்ரி கள்ளர் களவுகண்டு போகாநிற்கச்செய்தே இவரைக்கண்டு, இங்கே ஓராள் இருந்ததென்று அவர்களிலே ஒருவன் சொல்ல, 'அது அங்கே பண்டேயிருப்பதொன்று; இம்மரம் பிறர்க்குச் சொல்லில் காண் அவன் நம்மைச் சொல்லுவது' என்று மற்றுள்ளார்க்குச் சொல்ல, இத்தை எம்பெருமானார் கேட்டுநின்று அருளிச்செய்தார். [பட்டினிப்பெருமாள் பெரிய பெருமாளுடைய திருமுடிப்பார்ஶ்வத்திலே உள்ள திருமுடிக்குறையிலே ஏகாந்தமாக இருந்துகொண்டு எம்பெருமானாரால் விஷயீகரிக்கப்பெற்ற இப்பேற்றை அநுஸந்தித்துக்கொண்டு யோகிகளைப்போலே பல நாட்கள் அசையாமல் எழுந்தருளியிருப்பர். சில கள்வர்கள் பொருள்களைத் திருடிச்செல்கையில் இந்தப்பட்டினிப்பெருமாளைப் பார்த்து அவர்களில் ஒருவன் 'இங்கே ஒரு ஆள் இருந்தது' என்று

சொல்ல, அவர்களில் மற்றொருவன் "அது பலநாட்கள் அங்கேயே மரம்போலே உட்கார்ந்திருக்கும், எதிரில் தெரியும் மரம் நம்மைக் காட்டிக்கொடுக்கும்போதுதான் மரம்போல் உணர்ச்சியற்ற இம்மனிதனும் நம்மைக்காட்டிக்கொடுப்பான். இந்த ஆளைக் கண்டு கவலைப்படவேண்டாம்" என்று மற்ற திருடர்களுக்குச் சொல்ல, இவ்வார்த்தையைத் தற்செயலாகக்கேட்ட எம்பெருமானார் பட்டினிப்பெருமாளுடைய நிஷ்டை₂யைக் கொண்டாடி அருளிச்செய்தார் என்று கருத்து.]

8. வார்த்தாமாலை (105 வார்த்தை & விவரணம். எம்பெருமானார் தம்முடைய ஸ்ரீபாத₃த்திலே ஆஸ்ரயித்ததொரு ஸ்ரீவைஷ்ணவருடைய பிள்ளைக்கு ஏகாயநரோட்டை ஸம்ஸர்க்க₃முண்டாக, நம்மோடு ஸம்ப₃ந்த₄முடையவன் வ்யபி₄சரித்து அநர்த்த₂ப்படவொண்ணாதென்று, பெருமாள் திருவடிகளிலே எழுந்தருளியிருக்கச்செய்தே அவனும் அங்கே ஸந்நிஹிதனாக, "வாசய்! உனக்கு ப்ரமாணங்களால் காட்டலாம்படி ஜ்ஞாநபௌஷ்கல்யமில்லை;" நான் வேத₃ாந்தங்களில் அறுதியிட்டிருக்கும் பொருள். - "இவ்வாத்மாவுக்குத் தஞ்சமாயிருக்கும் அர்த்த₂ம் த்₃வயமல்லதில்லை" என்று பெருமாள் திருவடிகளில் ஶட₂கோபனையெடுத்து ஸத்யம்பண்ணிக் கொடுத்தருளினார்; அவரும் அன்று தொடங்கி த்₃வயநிஷ்ட₂ரானார். [ஏகாயநர்—"பிராட்டி என்னும் தத்துவம் இல்லை. ப்ரஹ்மசாரி நாராயணனே ப்ராப்யம்" என்னும் மதத்தைப் பற்றியவர்]

9. வார்த்தாமாலை (106) வார்த்தை. ப₄ட்டர் "த்₃வயத்தின் அர்த்த₂த்தை பு₃த்₃தி₄பண்ணி ஶப்₃த₃ாந்தரத்தாலே இவ்வர்த்த₂த்தை அநுஸந்தி₄க்கவொண்ணாதோ?" என்று உடையவருக்கு விண்ணப்பஞ்செய்ய; "அதுக்குக் குறையில்லை; ஆகிலும் இப்பாசுரத்துக்குச் சுரக்கும் அர்த்த₂ம் வேறொரு பாசுரத்துக்குச் சுரவாதே" என்று அருளிச்செய்தார்.

10. வார்த்தாமாலை (116-a) வார்த்தை & விவரணம் எம்பெருமானாரருளிச்செய்த வார்த்தை :- ஸ்வஸ்வரூப வைஶத்₃ய த₃ஶையாவது - பரஸ்வரூபவிஷயத்தில் ஸ்வீகார த்யாக₃ப்ரகார ப்ரதிபத்திநிவ்ருத்தியில் வ்யவஸ்தி₂தனாய்ப் போருகை [தன் ஸ்வரூபத்தைத் தெளிவாக அறிகையாவது — எம்பெருமானுடைய பரத்வத்தை அறிவதிலும், அவனையே பற்றுவதிலும், தன் முயற்சியான எல்லா உபாயங்களையும் வாஸனையோடு விடுவதிலும் 'தான்பற்றும் பற்று உபாயம்' என்னும் நினைவு நீங்குவதிலும் உறுதியோடிருக்கையேயாகும்.]

**11.** வார்த்தாமாலை (132) வார்த்தை. எம்பெருமானார், புழுவன் காலத்திலே வெள்ளைசாத்தி மேல்நாட்டுக்கு எழுந்தருள; அங்கே நம்பெருமாள் ப்ரஸாத₃ங் கொண்டு காணவந்த அம்மங்கியம்மா ளுக்கு உடையவர் ஒருரு த்₃வயத்தை அருளிச்செய்தார். பார்ஶ்வஸ்தர் 'இதுவென் ஜீயா! அங்கீ₃கரித்தருளிற்றே' என்ன; 'இத்தனை தூரம் பெருமாள் ப்ரஸாத₃ங்கொண்டு வந்த இவர்க்கு த்₃வயமொழிய ப்ரத்யுபகாரமுண்டோ?' என்று அருளிச்செய்தார்.

**12.** வார்த்தாமாலை (136 h) வார்த்தை & விவரணம். ராஜகுலத்துக்கு முடியும் மாலையும்போலே இப்ரபந்நனுக்கு த்₃வயோச்சாரணமென்றருளிச்செய்வர் ஸ்ரீப₄ாஷ்யகாரர்; [ "ராஜ குலத்துக்கு முடியும் மாலையும்போலே, அடிசூடுமரசையுடைய ப்ரபந்நனுக்கு இரண்டு வாக்யமுடைய த்₃வயத்தை உச்சரிப்பது" என்று ஸ்ரீப₄ாஷ்யகாரர் அருளிச்செய்வர்.]

**13.** வார்த்தாமாலை (170) வார்த்தை & விவரணம். உடையவர், ஸந்யஸித்தருளுகிறபோது 'ஶரீரஸம்ப₃ந்த₄த்தை விட்டுவிட வேண்டுகிறதோ?' என்று கேட்க, 'முதலியையொழிய ஸந்யஸித்தோம்' என்றார்; 'இப்படி செய்யலாமோ?' என்று அருகிருந்தார் கேட்க, 'த்ரித₃ண்ட₃த்தை விடிலன்றோ முதலியை விடுவது' என்று அருளிச்செய்தார்: [முதலி முதலியாண்டான்.]

**14.** வார்த்தாமாலை (173 a) வார்த்தை. திருக்கோட்டியூர் நம்பி வைபவம் ஐதிஹ்ய நிர்வாஹம் 10 காண்க.

**15.** வார்த்தாமாலை (180) வார்த்தை. பெருமாள்கோயி லிலே ஒரு ப₄ாக₃வதஜந்மத்திலே பிறந்தானொரு ஊமை, அஞ்சாறு வருஷம் ஊமையாயிருந்து அநந்தரம் இரண்டு மூன்று ஸம்வத்ஸரம் காணாதிருந்து, பின்பு அவன் வார்த்தை சொல்ல வல்லனாய்வர, இந்த ஆஶ்சர்யத்தைக் காண்கைக்காக எல்லாரும் திரண்டு, 'ஊமாய்! எங்குப்போனாய்?' என்று கேட்க; அவனும் 'நான் க்ஷீராப்₃தி₄க்குப் போய்வந்தேன்' என்ன, 'அங்கு விஶேஷ மென்?' என்று கேட்க, 'சேனைமுதலியார் உடையவராய் வந்து அவதரித்தார்' என்று சொன்ன அநந்தரம் அவனைக் கண்டதில்லை—என்று ஸேநாபதிஜீயர் அருளிச்செய்தார்.

யாத₃வப்ரகாஶனோடே எம்பெருமானார் படித்தருளுகிற காலத்திலே அந்த ராஜ்யத்தின் ராஜாவினுடைய புத்ரியை ப்₃ரஹ்மரக்ஷஸ்ஸு பிடிக்கையாலே யாத₃வப்ரகாஶனுக்கு அறிவிக்க, "யாத₃வப்ரகாஶன் போகச்சொன்னானென்று சொல்லுங்கோள்"

என்று சொல்லிப் போகவிட; "அவன்றன்னை அங்குநின்றும் போகச்சொன்னேன்" என்று ப்ரஹ்மரக்ஷஸ்ஸு சொல்ல, யாதவ ப்ரகாசனும் போர குபிதனாய், சிஷ்யர்களையும் கூட்டிக்கொண்டு மஹாமந்த்ரத்தையும் ஜபித்துக்கொண்டு ப்ரஹ்மரக்ஷஸ்ஸின் முன்னேபோய் நிற்க, ரக்ஷஸ்ஸும் முடக்கின காலைப் பின்னையும் நீட்டி, "வாராய் அடா யாதவப்ரகாசா! நீ ஜபிக்கிற மந்த்ரம் நானறியேனோ" என்று அந்த மந்த்ரத்தையும் சொல்லி, "நான் இவற்றுக்குப் போவேனோ? நீ உன் ஜன்மமுமறியாய், என் ஜந்மமு மறியாய்" என்ன, "ஆகில் நீ பிரானே; ஸர்வஜ்ஞனாயிருந்தா யாகில் உன்னுடைய ஜந்மமேது? என்னுடைய ஜந்மமேது?" என்று யாதவப்ரகாசன் கேட்க; "உன்னுடைய ஜந்மம், ஸ்ரீமதுராந்தகத்தில் ஏரிக்கரையிலே ஒரு புற்றாய் அதிலே ஒரு உடும்பாயிருப்புதி; திருமலைக்குப் பெருங்கூட்டம் போகிறபோது ஸ்ரீவைஷ்ணவர்கள் ஏரிக்கரையிலே நீராடி அங்கே ஸ்வயம்பாகம் செய்து அமுது செய்தருளின தளிகையின் கீழே சிந்தின ப்ரஸாதத்தையும் தீர்த்தத்தையும் ப்ரஸாதப்பட்டாய்; அத்தாலே நீ இப்படி வித்வானாய்ப் பிறந்தாய்; இனி என்னுடைய ஜந்மம் ப்ராஹ்மணஜந்மம்; யாகம்பண்ணினேன்; மந்த்ரலோப க்ரியாலோபம் வந்தவாறே ப்ரஹ்மரக்ஷஸ்ஸானேன்" என்ன, "ஆனால் நீ யார்க்குப் போவுதி?" என்ன; உன்னுடன் வாசிக்கிறவரிலேயொருவர் அநந்த கருட விஷ்வக்ஸேநாதிகளென்கிற நித்யஸூரிகளிலே ஒருவர்" என்று உடையவரைக்காட்டி, அவர் திருவடிகளை தண்டனிட்டு, 'இவர் போகச்சொன்னாராகில் போகிறேன்' என்ன, 'ஆகில் இளையாழ்வீர்! நீர் போகச்சொல்லீர்' என்ன; 'ஆனால் நீ போகிறத்துக்கு அடையாளத்தைக் காட்டிப்போ' என்ன, "இவ்வரசு முறிந்து விழும்" என்று அவ்வரசை முறித்துக்கொண்டு போயிற்று; யாதவப்ரகாசனும் "இளையாழ்வீர்! நீர் ஸர்வஜ்ஞராயிருந்தீர்" என்று மிகவும் உபஶ்லோகித்து மீண்டு தன்னுடைய மடமே வந்தான்.

16. வார்த்தாமாலை (182) வார்த்தை. பெருமாள் ஆழ்வானைப்பார்த்து 'நீ உனக்கு வேண்டுவது நம்மை வேண்டிக்கொள், என்று திருவுள்ளமாக: 'நாயன்தே! அடியேனுக்குப் பண்டே எல்லாம் தந்தருளிற்றே' என்று விண்ணப்பஞ்செய்ய: 'இல்லை, இப்போது நம்மை வேண்டிக்கொள்' என்ன; 'ஆகில் நாயன்தே, அடியேனோடு ஸம்பந்தமுடையாரெல்லாரும் பரமபதம் பெற வேணும்' என்ன, 'தந்தோம்' என்று திருவுள்ளமாக; இத்தை உடையவர் கேட்டருளிக் காஷாயத்தை முடிந்தேறிட்டு ஆர்த்துக்கொள்ள, 'இது என்?' என்ன, நமக்கு ஆழ்வானோடே ஸம்பந்தமுண்டாகையாலே பரமபதம் பெறலாமே' என்று அருளிச்செய்தார்.

17. வார்த்தாமாலை (188) வார்த்தை & விவரணம். உடையவர் அப₄யப்ரதா₃நம் அருளிச்செய்யா நிற்க, பிள்ளையுறங்காவில்லி தா₃ஸர் கோ₃ஷ்டி₂யில் நின்றும் புறப்பட்டு “ஸ்ரீ விபீ₄ஷணப் பெருமாள் ஸ்வாபி₄மானத்தைவிட்டுப் பெருமாள் திருவடிகளே தஞ்சமாக 'ஸர்வலோகஶரண்யாய ராக₄வாய' என்று பற்றின வரைக் கல்லுந்தடியுங்கொண்டது பெருமாள் பரிகரம்; நாம் என்செய்யக்கடவோம்?” என்று ப₄யப்பட: உடையவர் அருளிச் செய்தபடி: “கமுகுண்ணில் வாழை உண்ணும்; எனக்குப் பெரிய நம்பியுண்டு: உமக்கு நானுண்டு” என்று அருளிச்செய்தருளினர். [பெருமாள் பரிகரம்-ராமனுக்குத் துணைவரான ஸுக்₃ரீவன் முதலான வானரஸேனை; “நெல்லுக்கிறைத்த நீர் வாய்க்கால் வழியோடிப்புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம்” என்கிற ரீதியிலே கமுகு பயிரிடுவோர் அதற்குத் தண்ணீர் பாய்ச்சும்போது அதனருகிலிருக்கும் வாழையும் அத்தண்ணீரை உண்டு வளருவது போலே பெரியநம்பி ஸம்ப₃ந்த₄த்தைப் பார்த்துப் பெருமாள் என்னைக் கடாக்ஷிப்பர், என்னோடு ஸம்ப₃ந்த₄த்தைப் பார்த்து உம்மையும் கடாக்ஷிப்பர். ஆகையால் பெருமாள் கடாக்ஷமாகிற வெள்ளம் நம்மீதும் ஏறிப்பாய்ந்து நம்மையும் உஜ்ஜீவிக்கச் செய்யும் என்று கருத்து.]

18. வார்த்தாமாலை (184) வார்த்தை & விவரணம் “எம்பெருமானாரிலும் ஆளவந்தாரிலும் வாசி யார்க்குண்டு?” என்று ஆழ்வானை முதலிகள் கேட்க; ஓரிராவெல்லாம் விசாரித்து, 'பெருமாளிலும் பெரியபிராட்டியாரிலும் வாசி யார்க்குண்டு?' என்றார்; (ந த்யஜேயம்) என்றார் பெருமாள்; (ந கஶ்சிந்நாபராத₄ யதி) என்றாள் பிராட்டி; இப்படி இருவர்க்கும் வாசி என்று அருளிச்செய்தார். [பெருமாள் பிராட்டி இருவரில் எவர்க்குச் சிறப்பு என்று ஆராயும்போது பரப்₃ரஹ்மத்வத்தையிட்டுப் பெருமாளுக்கே சிறப்பிருந்த போதிலும் “நண்பனாக வந்தவனைக் கைவிடமாட்டேன்” [ரா-யு18 8] என்ற பெருமானைக் காட்டிலும் “இவ்வுலகில் குற்றம் செய்யாதவன் ஒருவனுமில்லையே” [ரா-யு 116-44] என்று கூறும் பிராட்டியே கருணை முதலான கு₃ணங்களில் மிக விஞ்சியவளாகிறாள்; அதுபோலே ஆளவந்தார் எம்பெருமானாருக்கு ப்ராசார்யராகையாலும், அவருடைய கடாக்ஷத்தாலேயே எம்பெருமானார் உய்வுபெற்றவராகையாலும் ஆளவந்தார்க்கே சிறப்பிருந்தபோதிலும், “ஆசையுடையார்க்கெல்லாமாரியர்காள் கூறும்” என்ற க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யத்வம் காரேய் கருணையிராமாநுசரிடத்திலேயே நிலைநிற்கையாலே இவர்க்கே சிறப்பு என்று கருத்து.]

19. வார்த்தாமாலை (185) வார்த்தை. பெரியநம்பி வைபவம் ஐதிஹ்ய நிர்வாஹம் 10 காண்க.

20. வார்த்தாமாலை (187) வார்த்தை. எம்பெருமானுர் மேற்கே வெள்ளைசாத்தி எழுந்தருளினபோது இவருடைய உபந்யாஸத்தைக்கண்டு ஸர்வரும் விஸ்மிதராக "என் பரமாசார்யர் வார்த்தையைக்கேட்டுச் சொன்னேனித்தனை; அவரைக் கண்ணாலே கண்டேனாகில் பரமபதத்தளவும் ஸோபாநமாகக் கட்டேனோ?" என்று அருளிச்செய்தார்.

21. வார்த்தாமாலை (189) வார்த்தை. திருமாலையாண்டான் வைபவம் ஐதிஹ்ய நிர்வாஹம் 6 காண்க.

22. வார்த்தாமாலை (190) வார்த்தை. எம்பெருமானுர் வெள்ளை சாத்தி எழுந்தருளினபோது திருமலை நல்லான் சிஷ்யரான சில வேடர் புனம் பாராநிற்க. அம்மலையடியே ஒரு ஸ்ரீவைஷ்ணவர் எழுந்தருள: இந்த வேடர் அவரைத் திருநாமமே குறியாக "நீர் எங்குநின்றெழுந்தருளுகிறீர்?" என்று கேட்க; "கோயில் நின்றும் வருகிறேன்" என்ன; "எம்பெருமானுர் திருவடிகளுக்கு ஒரு குறைகளுமில்லையே; பெரியதிருச் செல்வத்துக்கு ஒரு குறைகளுமற நடவாநின்றதோ?" என்று கேட்க; "என்ன எம்பெருமானுரும் என்ன திருச்செல்வமும்? எம்பெருமானுர் வெள்ளைசாத்திக்கொண்டு எழுந்தருளினுர்; இன்ன விடத்திலே எழுந்தருளினுரென்று தெரிந்ததில்லை" என்று அருளிச்செய்ய; அவர்களும் ஆறுநாள் பட்டினியே கிடந்தார்கள்; ஆரும்நாள் ராத்ரி எம்பெருமானுர் மழையும் இடியுமாய்க் குளிரிலே ஈடுபட்டு இவர்கள் மலையிலேநெருப்பொளிகண்டு 'அங்கே நம்மைக்கொண்டுபோங்கோள்' என்று அருளிச்செய்ய, முதலிகளும் அங்கே எழுந்தருளி 'வழியெங்கே பிள்ளைகாள்!' என்று அழைக்க; 'ப்ராஹ்மணக் குரலாயிருந்தது; பெருவிடாயோடே ஒருகாலமழையாநின்றது' என்றோடிவந்து வேலியையும் பிரித்து, இங்கேவாருங்கோளென்று. சாத்துகைக்குப் புடவையும் கொடுத்து. சாத்தின புடவையும் காம்புலரவிட்டுக் காய்ச்சியொற்றி, 'எங்குநின்றுமெழுந்தருளுகிறது?' என்று கேட்க, 'கோயில் நின்றும் வருகிறோம்' என்று அருளிச்செய்ய: 'எம்பெருமானுர் செய்தருளு

கிறதென்?' என்று கேட்க, 'நீங்கள் எம்பெருமானுரை அறிந்த படியென்?' என்ன. "நாங்கள் நல்லானடிமைகள்; எங்களுக்கு ஹிதமருளிச்செய்கிறபோது. 'எம்பெருமானுர் திருவடிகளே தஞ்ச மென்றிருங்கோள்' என்றருளிச்செய்தார்; அன்றுதொடங்கி எம் பெருமானுர் திருவடிகளே தஞ்சமென்றிருந்தோம்" என்ன; 'ஆகில் அவரிறே இவர்' என்று முதலிகள் உடையவரைக்காட்ட, இவர்களும் உடையவர் திருவடிகளைப் பிடித்துக்கொண்டு வ்யா குலப்பட்டு ஸேவித்துநிற்க, உடையவரும் "'நல்லான்' என்கிற காளமேக₄ம் இங்கும் வர்ஷித்ததோ?" என்று உகந்தருள; பின்பு தினைக்கதிரைக் கொண்டுவந்து தேனமுதையும் மிடாவோடே ஸமர்ப்பித்து, 'இத்தை வறுத்து இடித்துத் தேனிலே குழைத்து அமுதுசெய்யுங்கோள்' என்று விண்ணப்பஞ்செய்ய, அவர்களும் அப்படிசெய்து அமுதுசெய்து கண்வளர்ந்தார்கள்; மற்றைநாள் விடிந்தவாறே அந்த வேடமுதலிகளிலே ஒருவரையும் ஸ்ரீபாத₃த் தில்முதலிகளிலே ஒருவரையுமாகக் கோயிலுக்குப் போகவிட; அவர்களுடனே நாற்பத்தஞ்சு திருநாமம் எழுந்தருளினுர்கள்; அந்த வேடமுதலிகள் அந்த மலைக்கு மேற்கே அறுகாதவழி கொண்டுபோய் ஒரு வேடனகத்திலே விட்டுவர; அந்தவேடன் பகலெல்லாம் வேட்டைக்குப் போய்வந்து ராத்ரி உண்ணப்புக்க வாறே, ப்₃ராஹ்மணர் உண்ணுதிருக்க நாம் உண்ணலாகா தென்று அருகாக ஒரு க்₃ராமத்திலே கட்டளை வாரியனென்பான் ஒருவனகத்திலே வேண்டுங் கட்டளைகளும் பண்ணிக்கொடு வந்து 'இவர்களைக் கொண்டுபோய்ச் சடக்கென அமுதுசெய்வி யுங்கோள்' என்று மீண்டான். அவ்வகமுடைய மணவாட்டுப் பெண் 'உங்களுக்கு அமுது செய்யவேண்டாவோ?' என்ன; 'வேண்டா' என்ருர்கள்; 'உங்களுக்கு ப₄யப்படவேண்டா; நானும் எம்பெருமானுர் ஸ்ரீபாத₃த்தையுடையேன்' என்ருள்; 'நீ எம் பெருமானுரை ஆஶ்ரயித்தபடியென்?' என்று கேட்க; "நாங்கள் இவ்விடம் வர்ஷமின்றிக்கே இருந்தவாறே அங்கே கோயிலிலே வந்திருந்தோம்; என்னகமுடையானும் நானும் ஒரு மச்சிலே இருக்கையாயிருக்கும்; அப்போது எம்பெருமானுர் ஏழகத்திலே மாது₄கரம்பண்ணி அமுதுசெய்தருளுவர்; திருவீதியிலே எழுந்தரு ளும்போது அகளங்க நாட்டாழ்வான் முதலான பட்டமுதலிக ளெல்லாரும் இவர் திருவடிகளிலே ஸேவித்துக்கொண்டு வருவார் கள்; இவர் மாது₄கரத்துக்கு அந்த அகத்திலெழுந்தருளினுர்; நான் மச்சினின்றுமிழிந்து தகைந்தேன்; 'இதுவென்பெண்ணே?'

என்றார்; 'உம்மை ராஜாக்களும் பட்டமுதலிகளும் தண்டனிடா நின்றார்கள்! நீர் மாது₄கரம் பண்ணாநின்றீர்' என்றவாறே; 'அவர்களுக்கு நாம் ப₄க₃வத்₃விஷயத்திலே சில வார்த்தை சொல்லுகையாலே காண்' என்று அருளிச்செய்ய; 'அந்த வார்த்தையை எனக்கும் அருளிச்செய்யவேண்டும்' என்ன; அப்போது அருளிச்செய்தருளினார்; பின்பு எங்கள் தே₃ஶம் வர்ஷமுண்டாய், நாங்கள் எங்கள் நாட்டேறப்போகிறபோது, அவரருளிச்செய்த வார்த்தையை மறந்தேன் என்றவாறே, அத்தை நெஞ்சிலே படும்படி அருளிச்செய்து போகப்புக்கவாறே; 'அடியேனுக்கு ஆத்மரக்ஷையாக ஏதேனும் தந்தருளவேணும்' என்று விண்ணப்பஞ்செய்தேன்; அப்போது சாத்தியிருந்த ஸ்ரீபாத₃ரக்ஷையை ப்ரஸாதி₃த்தெழுந்தருளினார்; நாங்களும் அன்றே போந்தோம்; பின்னையும் ஸேவிக்கப்பெற்றிலேன்'' என்றவாறே, திருவுள்ளத்திலே விசாரித்தருளித் திருப்போனகம் சமைக்க அருளிச்செய்து 'இவள் செய்யுமது பார்த்திரும்' என்று ஒரு ஸ்ரீவைஷ்ணவரை வைக்க; அவளும் அடைவாகச் சமைத்து முன்புடுத்த புடவையையும் விழுத்து, ஶுத்₃த₄மான புடவையையும் உடுத்து உள்ளே புகுந்து, ''எம்பெருமானார் திருவடிகளே ஶரணம்'' என்று உச்சரித்து ஸ்ரீபாத₃ரக்ஷையையும் ஏறியருளப்பண்ணித் திருவடி விளக்கி அமுது செய்யப்பண்ணிப் புறப்பட்டு தண்டன் ஸமர்ப்பித்து, முதலிகளை 'ஸ்ரீபாத₃ம் விளக்க எழுந்தருளவேண்டும்' என்று விண்ணப்பஞ்செய்ய; முன்பு பார்த்திருக்கச்சொன்ன ஸ்ரீவைஷ்ணவரை அழைத்து 'இவள் செய்ததேது?' என்று கேட்டருள; 'இவளும் திருப்போனகத்தைச் சமைத்து முன்புடுத்த புடவையை விழுத்து, ஶுத்₃த₄மான புடவையை உடுத்து, திருப்போனகத்தை உள்ளே கொண்டு புகுந்து கதவையடைத்து த்₄யாநம் பண்ணிக்கொண்டிருந்தாள்; கறுத்து நீண்டிருந்தது; எம்பெருமானாருயிருந்ததில்லை' என்றவாறே; அவள் தன்னை அழைத்து 'நீ உள்ளே செய்ததேது?' என்று கேட்க; 'முன்பு ஏறியருளப்பண்ணித்தந்த ஸ்ரீபாத₃ரக்ஷையை ஏறியருளப்பண்ணித் திருவடிவிளக்கி அமுது செய்யப்பண்ணியாக்கும் அடியேன் ப்ரஸாத₃ப்படுவது; இப்போதும் அப்படியே செய்தேன்' என்று விண்ணப்பஞ்செய்ய; 'அவைதன்னைக் கொண்டுவந்து காட்டு' என்ன; அவளும் கொண்டுவந்து காட்ட; அங்குத்தைக்குத் தகுதியாயிருந்தவாறே, 'எம்பெருமானார் அருளிச்செய்த வார்த்தை ஒத்திருந்ததில்லையாகில் முதலிகள் அமுது

செய்யார்கள்; அத்தை என் செவியிலே சொல்லிக் காணாய்' என்ன; அவளும் விண்ணப்பஞ்செய்தாள்; வார்த்தையும் ஒத்திருந்தது. 'ஆகில் இதுக்குள்ளே எம்பெருமானாருண்டோவென்று பார்த்துக் காணாய், என்ன; அவளும் திருவிளக்கேற்றிக்கொண்டு வந்து அடைவே பார்த்தாள். எம்பெருமானார் திருவடிகளானவாறே அங்கே திகைத்து "எம்பெருமானார் திருவடிகள்போலேயிருக்கிறது. காஷாயமில்லாமையாலே தெரிகிறதில்லை" என்றவாறே 'நான்காண்!' என்ன; அவளும் திருவடிகளைப் பிடித்துக்கொண்டு அழப்புக்கவாறே கண்ணநீரைத்துடைத்து, "(விது₃ராந்நாநி பு₃பு₄ஜே ஶுசீநி கு₃ணவந்தி ச) என்று பாவநத்வபோ₄க்₃யத்வங்களையுடைத்தாயிருந்தது; முதலிகாள்! இனி அமுது செய்யுங்கோள்" என்றருளிச்செய்ய, அவர்களும் அமுதுசெய்து கண்வளர, இவளும் தளிகைப்ரஸாத₃மும் கூட்டி, பாலையும் கலந்து மச்சிலே கிடக்கிற ப₄ர்த்தாவையெழுப்பி ப்ரஸாத₃த்தையுமிட்டூட்டி ப்ரஸாத₃ப்படப்பண்ணி தான் ப்ரஸாத₃ப்படாதேகிடக்க; 'இதென்?' என்று கேட்க, 'கோயில் நின்றும் எம்பெருமானாரும் முதலிகளும் எழுந்தருளி அமுது செய்யமாட்டோமென்று கண்வளருகிறார்கள்' என்றவாறே: 'நான் இதுக்கு என் செய்யவேணும்?' என்ன; 'நீ எம்பெருமானார் திருவடிகளை ஆஶ்ரயிக்கவில்லையோ?' என்ன; இவனும் ராத்ரியிலே ஸம்வதி₃த்து ப்ரத்யயம் பண்ணிக்கொடுக்க, இவளும் ப்ரஸாத₃ம்சூடி நித்₃ரை பண்ணி, விடிந்தவாறே எம்பெருமானார் திருவடிகளிலே தண்டனிட்டு 'இற்றைக்கெழுந்தருளிநிற்கவேண்டும்; இவனை க்ருபை பண்ணி எழுந்தருளவேணும்' என்று விண்ணப்பஞ்செய்ய, எழுந்தருளிநின்று அவனை க்ருபைபண்ணி அந்த க்₃ராமத்திலே நாலஞ்சு நாளெழுந்தருளியிருந்து த்ரித₃ண்ட₃காஷாயாதி₃களையும் ஸம்பாதி₃த்துத் தம்முடைய திருவாராத₄நமான பேரருளாளர் திருமுன்பே வைத்து த₃ண்ட₃ஸமர்ப்பித்து முன்புபோலே அவற்றை உடையவர் தரித்தருளினார்.

23. வார்த்தாமாலை 201, 205, 206 வார்த்தை. திருக்கோஷ்டியூர் நம்பி வைப₄வம் ஐதிஹ்யநிர்வாஹம் 12, 13. 14 காண்க.

24 வார்த்தாமாலை (211) வார்த்தை. பெரியநம்பி வைப₄வம் ஐதிஹ்யநிர்வாஹம் 12 காண்க.

25. வார்த்தாமாலை (224) வார்த்தை. உடையவர் அந்திமத₃ஶையிலே அருளிச்செய்த வார்த்தை; ஒருவன் ப்ரபந்நனானால்

அவனுடைய தே3ஹயாத்ரை கர்மாதீ4நமாகையாலே கரையவேண்டா; கரைந்தானாகில் நாஸ்திகனுமித்தனை; ஆத்மயாத்ரை ப4க3வத3தீ4நமாகையாலே அதில் தனக்கு அந்வயமில்லை; உண்டென்றிருந்தானாகில் ஆத்ம ஸமர்ப்பணம் பொய்யாமித்தனை; ஆகையாலே உப4யயாத்ரையுங்கொண்டு அந்வயமில்லை; ஆகையால் கரணத்ரயங்களையுங்கொண்டு வேண்டிற்றுச் செய்து திரியவோ? என்னில்; அது ஸ்வரூபமன்று; இனி உபாயாந்தரத்தில் அந்வயமில்லாவிட்டால் ப்ராப்யமான கைங்கர்யத்தில் அந்வயிக்குமித்தனை; இங்கேயிருக்கும் நாள் செய்யும் கைங்கர்யம் ஆறு; அவையாவன:— ஸ்ரீப4ாஷ்யத்தை வாசித்து வாசிப்பிக்கவும், அதுவும் மாட்டானாகில் அருளிச்செயலை ஓதி ஓதுவிக்கவும், அதுவும் மாட்டானாகில் உகந்தருளின தி3வ்யதே3ஶங்களிலே அமுதுபடி சாத்துபடி ஆராய்ந்து போரவும், அதுவும் மாட்டானாகில் திருநாராயணபுரத்திலே ஒரு குடில்கட்டியிருக்கவும், அதுவும் மாட்டானாகில், த்3வயத்தின் அர்த்த2ாநுஸந்த4ாநம் பண்ணவும், அதுவும் மாட்டானாகில், என்னுடையவனென்று அபி4மாநிப்பான் ஒரு ஸ்ரீவைஷ்ணவன் அபி4மாநத்திலே ஒதுங்கியிருக்கவும்; இப்படி வர்த்திக்கும் அதி4காரிக்கு முன்னடி பார்த்து வர்த்திக்கவேண்டுவது மூன்று விஷயங்களுண்டு; அவர்களாரென்னில்;— அநுகூலரும், ப்ரதிகூலரும், அநுப4யரும்; இதில் அநுகூலராவார்— ஸ்ரீவைஷ்ணவர்கள், ப்ரதிகூலராவார்— ப4க3வத்3த்3விட்டுக்கள்; அநுப4யராவார் — ஸம்ஸாரிகள். அநுகூலரான ஸ்ரீ வைஷ்ணவர்களைக்கண்டால் சந்த3ந குஸும தாம்பூ3லாதி3களைப்போலேயும் நிலாத்தென்றல் சந்த3னம்போலேயும், அபி4மதவிஷயம்போலேயும் உகந்து வர்த்திப்பான்; ப4க3வத்3த்3விட்டுக்களைக் கண்டால் ஸர்ப்பாக்3நிகளைக் கண்டாற்போலே வெருவி வர்த்திப்பான்; அநுப4யரைக் கண்டால் காஷ்ட2லோஷ்டாதி3களைக் கண்டாற்போலே உபேக்ஷித்து வர்த்திப்பான். இப்படி வர்த்திக்கவொட்டாதொழிகிறது அர்த்த2காமப்ராவண்யம்; அர்த்த2காமமடியாக அநுகூலரான ஸ்ரீவைஷ்ணவர்களை அவமாநம்பண்ணினானாகில் ராஜபுத்ரனை அவமாநம்பண்ணினால் ராஜஹ்ருத3யம் புண்படுமாபோலே தத்3த்3வாரா எம்பெருமான் திருவுள்ளம் புண்படும்; ப்ரதிகூலரான ப4க3வத்3த்3விட்டுக்களை அர்த்த2காமமடியாக ஆதரித்தானாகில், ராஜா ஸார்வபௌ4மனாயிருக்க, ராஜமஹிஷி க்ஷுத்3ர ஜந்துக்கள்பக்கலிலே மடிபி4க்ஷை புக்கால் ராஜாவுக்கு அவத்3யமாமாப்போலே எம்பெருமானுக்கு அவத்3யமாய், தத்3த்3வாரா எம்பெருமான் திருவுள்ளம் புண்படும்; அநுப4யரான ஸம்ஸாரிகளை அர்த்த2காமமடியாக ஆத3ரித்தானாகில், 'ரத்நத்துக்கும் பாஷா

ணத்துக்கும் வாசி அறியாதாரைப்போலே நமக்கும் பிறர்க்கும் வாசியறிந்திலன், இவனுக்குப் பிறந்த ஜ்ஞாநம் கார்யகரமாகப் பெற்றிலோமே!' என்று இவனளவில் ஈச்வரன் உதா3ஸீநனுய்ப் போரும்.

26. வார்த்தாமாலை (227) வார்த்தை. எம்பெருமானார் தம்முடைய ஸ்ரீபாத3த்திலே ஆச்ரயித்திருப்பார் ஒரு ஸ்ரீவைஷ்ணவருடைய பிள்ளைக்கு ஏகாயநரோட்டை ஸம்ஸர்க்க3முண்டாக, 'நம்மோடு ஸம்ப3ந்த4முடையவன் வ்யபி4சரித்து அநர்த்த2ப்படவொண்ணாது' என்று பெருமாள் எழுந்தருளிநிற்கச்செய்தே அவனும் அங்கே ஸந்நிஹிதனாக, 'வாராய்! உனக்கு ப்ரமாணங்களால் காட்டலாம்படி ஜ்ஞாநபௌஷ்கல்யமில்லை; நான் வேதா3ந்தங்களில் அறுதியிட்டிருக்கும் பொருள் இவ்வாத்மாவுக்குத் தஞ்சமாயிருக்கும் அர்த்த2ம் த்3வயமல்லதில்லை என்று பெருமாள் திருவடிகளில் ஸ்ரீ ஶட2கோபனை எடுத்து ஸத்யம்பண்ணிக்கொடுத்தருளினார்; அவரும் அன்றுதொடங்கி த்3வயநிஷ்ட2ரானார்.

27. வார்த்தாமாலை (273) வார்த்தை. எம்பெருமானார் தம்முடைய அந்திமத3சையிலே அருளிச்செய்த வார்த்தை; உடையவர் தம்முடைய திருவுள்ளத்திலே ஆர்த்தியோடே விசாரித்து, பெரிய பெருமாளைத் திருவடித்தொழுது விண்ணப்பஞ்செய்தபடி:— ஸம்ஸாரத்தில் அருசிபிறந்ததென்று ஸாங்க3ப்ரபத்தியைப் பண்ணியருளினார்; இப்போதிதுவென்னவென்று பெரியபெருமாள் வினவியருள; காலாதிக்ரமம் பிறந்ததேயென்ன; காலத்திற்கு நாமன்றோ கடவோம்; சிறிதுகாலம் உம்மைக்கொண்டு லோகத்தைத் திருத்தப்பார்த்தோம்; அறப்பதறினீர்; இனி உமக்கு வேண்டுவதென்னென்ன; சடக்கெனத் திருவடிகளிலே சேர்த்துக்கொள்ளவேண்டுமென்ன; ஆகில் இற்றைக்கிழமைக்கு நாலாம்நாள் அப்படியே செய்கிறோமென்ன, 'அப்போது என்னுடைய ஸம்ப3ந்தி4, ஸம்ப3ந்தி4களெல்லாம் நான்பெற்ற லோகம் பெறவேணும்' என்று விண்ணப்பஞ்செய்து மட2த்துக்கெழுந்தருளி, அப்போது முதலிகளெல்லோரையும் அழைத்தருளி, ஒருகாலும் அருளிச்செய்யாத அர்த்த2ங்களெல்லாம் அருளிச்செய்தார்; இவ்வர்த்த2ங்களையெல்லாம் கேட்டு அதிஶங்கைபண்ணி விண்ணப்பஞ்செய்ய; இவரும் வெள்ளக்கேடாகவொண்ணாதென்று இற்றைக்கு நாலாம்நாள் பெரிய பெருமாள் திருவடிகளிலே போகிறோமென்றருளிச்செய்ய, இவருடைய விச்லேஷத்தில் ஆத்மத்யாக3ம் பண்ணக்கடவோமென்று முதலிகள் தேறியிருக்கிற ப்ரகாரத்தைத் திருவுள்ளம்பற்றி, 'ஆளவந்தார் ஸ்ரீபாத3மே, ஆத்மத்யாக3ம் பண்ணினுருண்டாகில் நம்

மோடு அந்வயமில்லை' என்றருளிச்செய்ய, இவர்களும் இத்தைக் கேட்டு மிகவும் ஶோகார்த்தராய் 'இனி எங்களுக்குச் செய்ய அடுப்பதென்? பட்டிபுகுதல், பட்டினி கிடத்தலன்றோ?' என்று விண்ணப்பஞ்செய்ய, அருளிச்செய்த வார்த்தை; ஸகல வேத3ங்களிலும் ஸகல ஶாஸ்த்ரங்களிலும், ஸகலமான ஆழ்வார்கள் திவ்ய ப்ரப3ந்த4ங்களிலும், ஸகலாசார்ய பாசுரங்களிலும் பார்த்த விடத்தில்—ஒரு அதி4காரிக்கு த்3வயமொழிய மந்த்ரமில்லை; மிது2நமொழிய வஸ்துவில்லை; மிது2ந கைங்கர்யமொழியப் புருஷார்த்த2மில்லை, ஆசார்யாபி4மாநமொழிய மோக்ஷோபாயமில்லை, பா4க3வதாபசாரமொழிய மோக்ஷவிரோதி4யில்லை.

பா4க3வதாபசாரந்தான் ப3ஹுவித4ம்;- அதில் ப்ரதா4நமான அபசாரம் பன்னிரண்டு; அவையெவை? என்னில்;- ஜந்ம நிரூபணம், ஶரீர நிரூபணம், பா4வ(பாக)நிரூபணம், ஆஶ்ரம நிரூபணம், அவயவ நிரூபணம், ஆலஸ்ய நிரூபணம், வாஸ நிரூபணம், ப3ந்து4 நிரூபணம், ப்ரகாஶ நிரூபணம், ப்ரகார நிரூபணம், வர்த்தந நிரூபணம், தே3ஶ நிரூபணம். (1) இதில் ஜந்ம நிரூபணமாவது – "ஶூத்3ரம் வா ப4க3வத்3ப4க்தம் நிஷாத3ம் ஶ்வபசம் ததா2 । வீக்ஷதே ஜாதிஸாமாந்யாத் ஸ யாதி நரகம் நர: ॥ ந ஶூத்3ரா ப4க3வத்3ப4க்தா: விப்ரா பா4க3வதாஸ்ஸ்ம்ருதா: । ஸர்வவர்ணேஷு தே ஶூத்3ரா: யே ஹ்யப4க்தா ஜநார்த்த3நே ॥ ய: பஶ்யதி ஶுபா4சாரம் வைஷ்ணவம் வீத கல்மஷம் । ஸ வை யஸ்மிந் குலே ஜாதம் ப்ரணமேத்3த3ண்டவத்3பு4வி ॥ கிமப்யத்ராபி4ஜாயந்தே யோகி3நஸ்ஸர்வயோநிஷு । ப்ரத்யக்ஷிதாத்மநாதா2நாம் நைஷாம் சிந்த்யம் குலாதி3கம் ॥" என்றித்யாதி3 புராணங்களிலே சொல்லப்பட்டிருக்கையாலே தான் வைஷ்ணவர்களை ஜந்மநிரூபணம் பண்ணுவது அபசாரம். (2) ஶரீர நிரூபணமாவது – புருஷஶரீரமென்றும், ஸ்த்ரீஶரீரமென்றும், திருவநந்தாழ்வானைப் பாம்புஶரீரமென்றும், ஸ்ரீக3ருடா3ழ்வானையும் ஜடாயு மஹாராஜரையும் பக்ஷிஶரீரமென்றும், ஸ்ரீக3ஜேந்த்3ராழ்வானையும், திருவடியையும், ஸுக்3ரீவமஹாராஜரையும் ம்ருக3ங்களென்றும், ப்ரஹ்லாத3ாழ்வானையும் ஸ்ரீவிபீ4ஷணப்பெருமாளையும் மஹாப3லியையும் இவர்கள் முதலான ப4க3வத்3த3ாஸரை ராக்ஷஸரென்றும், தே3வதிர்யங்மநுஷ்ய ஸ்தா2வரரூபங்களான சதுர்வித4 ஶரீரங்களில் ப4க3வத்3ப4க்தர் யாதொரு ஶரீரம் பரிக்3ரஹித்திருந்தாலும் இந்த ஶரீரமென்று ஶரீர நிரூபணஞ்செய்கை அபசாரம். (3) பா4வ (பாக) நிரூபணமாவது - ஷட்3பா4வவிகாரமான பா3ல்ய யௌவந வ்ருத்3த4(த்வ)ாதி3 வயோநிரூபணஞ் செய்கை அபசாரம். (4) ஆஶ்ரம நிரூபணமாவது - ப்3ரஹ்மசர்ய க்3ருஹஸ்த2 வாநப்ர

ஸ்த₂ யத்யாதி₃களில் ஸ்ரீவைஷ்ணவர்களை இந்த ஆஶ்ரமத்தவர்க ளென்று ஆஶ்ரம நிரூபணஞ்செய்கை அபசாரம். (5) அவயவ நிரூபணமாவது - திருமேனியிலேயாதல், அவயவங்களிலேயாதல் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஒரு தோ₃ஷமுண்டாகிலும் அவர்கள் ஜ்ஞாநமே ஸர்வாவயவபூர்த்தியென்று பாராமலிருக்கை அபசாரம். (6) ஆலஸ்யநிரூபணமாவது-ப்ரபந்நனானவன் தன்னுடைய திருமேனியை உபேக்ஷைபண்ணி ஹேயமாயிருக்குமிடத்தில் குத்ஸியாமல் அவர் விக்₃ரஹமே போ₄க்₃யமாகப் பாராதிருத்தல் அபசாரம். இதுக்கு விண்ணப்பஞ்செய்வார் கதை. (7) வாஸநிரூபணமாவது - கோயில் திருமலை பெருமாள் கோயில் நின்றும் எழுந்தருளின ஸ்ரீவைஷ்ணவர்களை எத்தனை ஆத₃ரிப்பார்கள், அப்படியே ஒரு குப்பத்திலிருந்து எழுந்தருளின ஸ்ரீவைஷ்ணவரை அவரிருந்த ஸ்த₂லமே தி₃வ்யதே₃ஶமென்று உத்₃தே₃ஶ்யப்ரதிபத்தி செய்யாதிருக்கை அபசாரம்; (8) ப₃ந்து₄நிரூபணமாவது - தன்னுடைய ப்ரக்ருதி ப₃ந்து₄க்களிலே ஒரு ஸ்ரீவைஷ்ணவருண்டாகில் தன்னுடைய ஸ்வாமியென்று உத்₃தே₃ஶ்ய ப்ரதிபத்தி செய்யாதிருக்கை அபசாரம்; (9) ப்ரகாஶநிரூபணமாவது - ஆசார்யரையும், ஸிம்ஹாஸநத்தில் அவர்களையும், பூஜ்யரானவரையும், ப்ரஸித்₃த₄மாக ஆசார்ய கைங்கர்ய தா₃ஸ்யக்ருத்யம் பண்ணுமவர்களையும், உபாயஶூந்யராய் ஒதுங்கி வர்த்திக்குமவர்களையும், ஏகப்ரகாரத்திலே ரக்ஷகரென்று பாராதிருத்தல் அபசாரம்; (10) ப்ரகார நிரூபணமாவது - திருநந்த₃வனம் செய்கிற ப்ரபந்நரையும், திருமுற்றங்கள் கட்டுவிக்கிற ப்ரபந்நரையும், சாத்துப்படி திருமாலை திருவிளக்கிடுகிற ப்ரபந்நரையும், மற்றும் இத்யாதி₃ பரிசாரகங்கள் செய்கிற ப்ரபந்நரையும், பார்வைக்கு ஒன்றும் செய்யமாட்டாதே வெறுமனேயிருக்கிற ப்ரபந்நரையும், ஏகப்ரகாரத்தில் உத்₃தே₃ஶ்யரென்று பாராதிருக்கை அபசாரம்; (11) வர்த்தநநிரூபணமாவது - ஸ்ரீவைஷ்ணவர்கள் திருமேனியாத்ரையான ப்ரக்ருதிவஶ்யர் நிரூபணத்தில் வ்யவஹாரம் பண்ணுதல்! க்ருஷிபண்ணுதல், ஆயுத₄ம் பிடித்து ஸேவித்தல், எவ்வகையில் பாங்காயிருந்தாலும் இவ்வகையிலிருக்கிறார்களென்று நினைக்கை அபசாரம்; இதுக்கு அவரை வ்யாபாரி (கவரை வ்யவஹாரி) கதை; (12) தோ₃ஷநிரூபணமாவது—ஸ்ரீவைஷ்ணவர்கள் திருமேனி போ₄க₃மான ப்ரவ்ருத்தி - "ஸா கத₂ா ப₄ாரதீ புண்யா த்₃ரௌபதீ₃ ச பதிவ்ரதா| தத்₃வித₄ா: பாண்ட₃வா த₄ந்யா: ப்ரஸந்நே புருஷோத்தமே||" என்று த்ரிவித₄கரணங்களிலும் அவிஶேஷஜ்ஞரென்றும், அநுஷ்ட₂ாதா அன்று என்றும், ஸ்ரீவைஷ்ணவர்களை ஏவமாதி₃தோ₃ஷங்கள் நிரூபிக்கை அபசாரம்.

இனி, இவ்வார்த்தையின் எஞ்சிய பகுதியின் ஸாரம் கொடுக்கப்படுகிறது:—

கோடி மன்மதர்களைவிட அழகுமிக்க பஞ்சோபநிஷத்துக்களாலான திவ்யமங்கள விக்ரஹத்தையுடைய எம்பெருமானிருக்க, அப்ராக்ருத தேசத்தில் "ஹாவுஹா வுஹா வு" என்று முக்தர் அனுபவிக்கும் திருமேனியை விரும்பியபின் ஒரு பொன்மானை விரும்பி பகவதபசாரப் படுகையாலும், பரம பாகவதரான இளையபெருமாளைக் கடுஞ்சொற்கள் சொல்லி பாகவதாபசாரப் படுகையாலும் ஸர்வ ஜகந்மாதாவான பிராட்டிக்கே ராக்ஷஸர்களிடம் அகப்பட்டுப் பத்துமாதம் சிறையிருக்க வேண்டி வந்தது. ஆகையால், ஸ்ரீவைஷ்ணவர்கள் திறத்தில் குற்றங்களைப் பார்க்கவே கூடாது. கண்ணாலே பார்த்து, நெஞ்சாலே நினைத்து, வாக்காலும் சொன்னால் அதுக்கு ப்ராயஶ்சித்தமே கிடையாது. "சண்டாளனாகிலும் என் பக்தனாயிருப்பவனை நிந்திப்பவனை எவ்வளவு கற்பகோடி காலமானாலும் பொறுக்கமாட்டேன்" என்று வராஹப்பெருமாள் பூமிப் பிராட்டியிடம் சொன்ன வசனத்தை இங்கு அநுஸந்திக்கவேணும். இந்த பாகவதாபசாரம் ஒன்று செய்தால் பலவாகப் பெருகும். இவற்றைத் தான் பண்ணுவது கூடாது என்பதோடன்றியில், தன் மதிப்புக்குரிய ஆசார்யனே பண்ணினாலும் "ஆசார்யன் செய்யும் வரம்பு மீறிய செயல்களை ஶிஷ்யன் ரஹஸ்யத்தில் உணர்த்தவேண்டும்" [ ] என்கிறபடியே ஆசார்யனையும் பாகவதாப்சாரம் செய்யாமலிருக்கும்படி எடுத்துச் சொல்லவேணும். தனக்கு வஶப்பட்ட குடும்பத்தினர் நண்பர் முதலானோர் பாகவதாபசாரம் செய்தால், அவர்களை அடித்தும் திருத்தவேணும். ஸ்ரீவைஷ்ணவர்கள் ஒருவருக்கொருவர் அபசாரம் செய்வதைப் பார்த்தால் அவர்கள் திருவடிகளைக் கட்டிக்கொண்டு முடிந்தவரையில் எடுத்துச்சொல்லி அவ்வபசாரத்தை விலக்கவேண்டும். அவர்கள் விலகாவிடில் அவர்களைத் திருத்தும்படி எம்பெருமானை ஶரணம் புகவேண்டும். இப்படியெல்லாம் செய்யாதிருப்பதும், ஸ்ரீவைஷ்ணவர்கள் தனிமையில் செய்த குற்றங்களை ஸபையில் வெளிப்படுத்துகையும், ப்ரக்ருதி வாஸனையால் பாகவதாபசாரப்பட்டு மன்னிப்பு கேட்டுக்கொண்டவர்களை 'பாகவதாபசாரங்கள் பண்ணினார்கள்' என்று நினைக்கையும் முற்கூறிய பன்னிரண்டுவகை பாகவதாபசாரங்களுக்கும் காரணமாகும்.

28. வார்த்தாமாலை (288) வார்த்தை 8 விவரணம்: உடைய வர் திருமலைக்கு எழுந்தருளுகிறபோது உத்தரநல்லூரிலே எழுந் தருளினவளவிலே வானமாமலை த3ாஸர் என்று ஒரு கோ3பால ஸ்ரீவைஷ்ணவர், பாலமுதுகாய்ச்சிக் கொண்டுவந்து உடையவர்க்குப் பாங்காகப் பரிமாற, உடையவர் விரும்பி அமுதுசெய்ய, மீண்டு எழுந்தருளுகிறபோதும் அப்படியே பாங்காகக் கொண்டுவந்து பரிமாற, 'இது நன்றாயிருந்ததீ' என்ன; ஸ்ரீவைஷ்ணவர் 'முன்பு விரும்பி அமுது செய்தவாறே, இப்போதும் பாங்காகக் கொண்டு வந்தேன்' என்ன; 'அங்ஙனேயோ' என்று ஒருநாள் உபவஸித் தருளினார். [ஆய்க்குலத்தைச் சேர்ந்த ஒரு ஸ்ரீவைஷ்ணவர் 'ஏற்க னவே திருமலைக்கு எழுந்தருளும்போது விரும்பி அமுதுசெய்ததால் இப்போதும் பாலைப் பக்குவமாகக் காய்ச்சிக்கொண்டு வந்தேன்' என்றார். இப்படி அவர் சொன்னதிலிருந்து தன் பாலைத் தான் கொண்டுவந்து ஸமர்ப்பிப்பதுபோன்ற அஹங்காரம் த்4வ னிக்கையாலே, எம்பெருமானார் தாம் அதை எடுத்துக்கொண்ட துக்கு வருந்தி ஒருநாள் உபவாஸமிருந்தார் என்று தாத்பர்யம்.]

29. வார்த்தாமாலை (317) வார்த்தை 8 விவரணம்: உடைய வர் திருக்கண்ணபுரத்துக்கு எழுந்தருளுகிறபோது அம்மங்கிக்குப் போய்வருகிறேனென்ன, அம்மங்கி உடையவர்க்கு ப்ரஸாதித்த வார்த்தை:—அக்3நிஜ்வாலையிலகப்படாதேகிடீர்' அருநஞ்சு தின்னா தேகிடீர், அஶுசி மிதியாதே கிடீர், அப3லைகளோடு செறியாதே கிடீர், ஆஸ்திகரோடு செறிந்துபோருங்கிடீரென்று. [அம்மங்கியி னுடைய முற்கூறிய வார்த்தைகளுக்கு உடையவர் தம் ஶிஷ்யர் களுக்கு அருளிய விளக்கமிது:- (1) அக்3னிஜ்வாலையிலகப்படாதே கிடீர்— பௌத்3த4ர்கள் ஜைனர்கள் முதலானோர் வேத3 பா3ஹ்யர்கள் (வேத3த்துக்குப் புறம்பானவர்கள்). அத்3வைதிகள் ஶைவர்கள் முதலானோர் வேத3த்துக்கு அவப்பொருள் கூறும் குத்3 ருஷ்டிகள், உடையவர் த3ர்ஶனஸ்த2ாபனத்துக்காக இவர்க ளோடு வாதாடும்போது பாம்பு அக்னி முதலானவற்றோடு பழகு வதுபோலே அவர்களோடு நெருங்கிவிடக்கூடாது என்பது முதல் உபதே3ஶம். (2) அருநஞ்சு தின்னாதேகிடீர் — ஸ்ரீவைஷ்ண வர்களுடைய நாமரூபங்களை த4ரித்துக்கொண்டு ஸ்ரீவைஷ்ணவ ஸமூஹத்தில் உட்புகுந்து ஶாகஸாரணர்களைப்போலே மறைந்து நின்று ஸ்ரீவைஷ்ணவர்களைக் கெடுப்பவர்கள் அருநஞ்சு எனப்பட் டார்கள். பார்ப்பதற்கு அழகாயிருக்கும் எலுமிச்சம்பழமும் கர்ப்பூர மும் கலந்து உண்டால் உயிரை முடிப்பதுபோலே, பார்ப்பதற்கு வைஷ்ணவர்கள் போலேயிருக்கும் இவர்களோடு கலந்தால் ஆத்ம

நாஸத்தை விளைத்துவிடுவார்களாகையாலே இவர்கள் அருநஞ்சு எனப்பட்டார்கள். (3) அஶுசி மிதியாதேகிடீர்—ஶரீரத்தை வளர்ப்பதிலேயே ஈடுபட்ட ஸம்ஸாரிகள், மலம் முதலான அஶுசிகளைப் போலவும் வீதியில் கிடக்கும் கட்டை கல் முதலானவற்றைப்போலவும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு விலகிச்செல்லவேண்டிய விரோதிகள். (4) அபக்வைகளோடு செறியாதேகிடீர்—அநுகூலரான ஸ்ரீவைஷ்ணவர்களாயிருந்தபோதிலும், கைக்கொள்ளத் தக்கவைகளையும் கைவிட வேண்டியவைகளையும் தெளிவாக அறியாதவர்கள் பக்குவமாகாத கன்னிகைகளைப்போலே பயனற்றவர்கள். அதனால் அவர்களோடும் நெருங்கிப் பழகக்கூடாது. (5) ஆஸ்திகரோடு செறிந்து போருங்கிடீர்—பகவத்பாகவத விஷயங்களை அநுபவிக்கத்தக்க பூர்ணாதிகாரிகள் யௌவனமுடைய புருஷர்களுக்குக் காமினிகளைப்போலே ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அநுபவிக்கத்தக்கவர்கள். ஆகையால் இவர்களோடு நெருங்கிப்பழகவேண்டும்.]

30. வார்த்தாமாலை (326) வார்த்தை சவிவரணம். பெரியதிருநாள் தீர்த்தமும் ப்ரஸாதித்துப் பெருமாளெழுந்தருளுகிறபோது எம்பெருமானார் தாமும் தீர்த்தமாடி ஸேவித்தெழுந்தருளுகிறவர், பிள்ளை உறங்காவில்லிதாஸர் திருக்கை கொடுத்து வர 'இதென்?' என்று சிலர் விண்ணப்பஞ்செய்ய; 'ஜந்மம் உயர்ந்திருக்கத் தாழ நின்றோமே என்கிற அபிமாநமுண்டிறே எல்லார்க்கும்; அக்கொத்தையுமில்லாதவரிறேயிவர்' என்றருளிச் செய்தருளினார். ["உயர்ந்த ப்ராஹ்மணாதி வர்ணங்களில் பிறந்தவர்களுக்கு, சிலருக்கு அடிமைத் தொழில் செய்வதென்றால் 'உயர்ந்த குலத்தில் பிறந்து இழிதொழில் செய்கிறோமே' என்று குலாபிமானமும், அதனால் வரும் தயக்கமும், வருத்தமும் ஏற்படக்கூடும். மற்றவர்களுக்குக் கைங்கர்யம் செய்வதற்கே ஏற்பட்ட ஶூத்ரவர்ணத்திலே பிறந்த பிள்ளையுறங்காவில்லிதாஸருக்கு அந்த அபிமானமும், தயக்கமும், வருத்தமும் ஏற்பட இடமில்லை. அதனால் உள்ளத்தால் பரிஶுத்தரான அவருடைய ஸ்பர்ஶம் தமக்கும் வர்ணாஶ்ரமாபிமானத்தைப் போக்கிப் பரிஶுத்தியளிக்கவல்லது" என்று எம்பெருமானார் திருவுள்ளம்.]

31. வார்த்தாமாலை (373) வார்த்தை. முதலியாண்டான் திருவாய்மொழி ஓதுகிறபோது, உடையவரெழுந்தருளியிருந்து ஒருபாட்டுச் சந்தையிட்ட அளவிலே இதினுடைய அர்த்தாநுஸந்தாநத்தாலே பரவஶரானார்.

32. வார்த்தாமாலை (402) வார்த்தை. எம்பெருமானார் எம்பாரை நோக்கி, 'ஸ்ரீகோவிந்தப் பெருமாளே! எம்பெருமான் எளியனென்று பலபடியாலுஞ் சொன்னோமே' என்ன; ''இப்படி எளியனாகில் 'நமக்கென்?' என்று எல்லாரும் உபேக்ஷிக்கைக்கு உடலாமித்தனையன்றோ'' என்ன, 'இப்படியிருக்கிற அவனைக் காணவேண்டும் என்னும் ஆசையுள்ளது உமக்கொருவர்க்கு மன்றோ' என்றருளினார்.

33. வார்த்தாமாலை (441) வார்த்தை. ''ஆளவந்தார்க்கு எம்பெருமானார் ஏகலவ்யனன்றோ'' என்றார் எம்பார்.

34. வார்த்தாமாலை (445) வார்த்தையின் விவரணம். கர்மம், ஜ்ஞானம், பக்தி இம்மூன்றும் ஸாதனம் என்னும் ஆகாரத்தில் ப்ரபந்நனுக்குக் கைவிடத்தக்கவையாயிருந்த போதிலும், வேறு ஆகாரத்தில் இம்மூன்றும் ப்ரபந்நனுக்கும் உண்டு என்று எம்பெருமானார் ஆழ்வானுக்கு அருளிச்செய்த வார்த்தை இது. ராஜகுமாரன் பச்சைக்கர்ப்பூரக்கட்டியை வாயிலே யிட்டுப் பல்லாலே மெல்லுவதுபோலே, பரமபோக்யமான த்வயத்தை உச்சரிப்பது என்னும் ஆகாரத்தில் ப்ரபந்நனுக்குக் கர்மம் உண்டு. அவன் அந்தக் கர்ப்பூர ரஸத்தைப் பருகி, அதின் இனிமையை அநுஸந்திப்பது போலே, த்வயத்தின் அர்த்தத்தை இடைவிடாமல் அநுஸந்திப்பது என்னும் ஆகாரத்தில் ப்ரபந்நனுக்கு ஜ்ஞானம் உண்டு. அவன் அக்கர்ப்பூர ரஸத்தின் இனிமையால் தன்னை மறந்திருப்பதுபோலே த்வயார்த்தாநுஸந்தானத்தாலே மிகவும் ஆநந்தம் அடைந்து தன்னை மறந்திருக்கையாகிற பக்தியும் ப்ரபந்நனுக்கு உண்டு. ராஜகுமாரன் எல்லாக் காலத்திலும், பச்சைக்கர்ப்பூரக்கட்டியை வாயிலே இட்டு அதன் ரஸத்தை நாவால் விழுங்கிக்கொண்டே யிருப்பதுபோலே, ப்ரபந்நனுக்கும் த்வயத்தின் அர்த்தத்தை அநுஸந்தித்துக் கொண்டே இல்லாவிடில் வாழ்க்கை நடத்தமுடியாது.

35. வார்த்தாமாலை (450) வார்த்தை. உடையவர் பிள்ளை யுறங்காவில்லிதாஸர் விஷயமாக முதலியாண்டானுக்குப் பணித்த பத்து வார்த்தை. முதலியாண்டான், உள்ளம் விம்மிப் புறம் பொசிந்து உடையவர் ஸ்ரீபாதத்திலே தண்டனிட்டு, ''நமக்கும் நம் முதலிகளுக்குமுள்ள தன்னேற்றம் அருளிச்செய்ய வேணும்'' என்ன; உடையவரும், 'நாமே உமக்குச் சொல்லவேணுமென்றி ருப்பதொரு அர்த்தத்தை நீர்தாமே கேட்டீரே' என்று ப்ரீதராய், ஸகல வேதசாஸ்த்ரங்களிலும் இதிஹாஸ புராணங்களிலும்

உள்ளத்தைப் பொறுக்கிச் சேர்த்து, நம் ஆழ்வார்கள் அருளிச் செயல்களிலும் சொல்லப்பட்ட குஹ்யமாயிருப்பதொரு அர்த்தத்தை உடையவர் முதலியாண்டானுக்கு இப்பத்து வார்த்தையாலே அருளிச்செய்கிறார். ["ஆசார்யஸ்தானத்தில் இருப்பவர்களாய், வேதத்தில் அதிகாரமுள்ளவர்களான பூணூல் சாத்திய நமக்கும், ஶிஷ்யர்களாகவே இருப்பவர்களாய், வேதத்தில் அதிகாரமில்லாதவர்களான பிள்ளையுறங்காவில்லிதாஸர் போன்ற பூணூல் சாத்தாத முதலிகளுக்கும் உள்ள வாசியை (ஏற்றத்தாழ்வை) அருளிச்செய்யவேணும் என்று முதலியாண்டான் எம்பெருமானாரைக்கேட்க, பத்து வாசிகளை எம்பெருமானார் அருளிச் செய்கிறார் இவ்வார்த்தையில். அவையாவன :—]

இதில் முதல் வார்த்தை — நமக்கும் நம் முதலிகளுக்குமுள்ள தன்னேற்றம். எங்ஙனேயென்னில் :- நாம் நாடு பரிக்ரஹிக்கைக்காகச் செய்வுதோம்; அவர்கள் நாட்டாரோடியல்வொழிந்து நாரணனை நண்ணியிருப்பர்கள். [ஆசார்யர்கள் உலகைத் திருத்துவதற்காக உலகில் உழல வேண்டியிருக்கிறது. சாத்தாத முதலிகளுக்கு இத்தக் கடமையில்லாமையாலே "நாட்டாரோடியல்வொழிந்து நாரணனை நண்ணினமே" [திருவாய் 10-6-2] என்கிறபடியே நாட்டாரோடுழலாமல் நாரணனையே பற்றியிருக்கும் பெருமையுண்டு.] 1.

இரண்டாம் வார்த்தை — திருப்பதிகளுக்கும் கோயில் திருமலை பெருமாள் கோயிலுக்குமுள்ள தன்னேற்றம். எங்ஙனேயென்னில் : நாம் தெப்பக்கையரைப்போலே இரண்டையும் விடோம்; அவர்கள் ஸாரஜ்ஞராய்க்கொண்டு விட்டத்திலிருப்பாரைப்போலே முதலடியிலே நிற்பர்கள். [தெப்பத்தை ஒரு கையால் பிடித்துக்கொண்டு மற்றொரு கையால் நீந்துகிறவர்களைப்போலே நாம் ப்ரதானக்ஷேத்ரமொன்றிலே வாழ்ந்து நிர்ப்பரராயிராமல் "மாமலராள் புணர்ந்த பொன்மார்பன் பொருந்தும் பதிதொறும்" [இராமாநுச 60] புக்கு நிற்போம். அவர்கள் கோயில், திருமலை, பெருமாள்கோயில் போன்ற ப்ரதான க்ஷேத்ரமொன்றில் ஈடுபட்டு, படகின் மேல் விட்டத்திலே இருப்பவர்களைப்போலே நிர்ப்பரராயிருப்பர்கள்.] 2.

மூன்றும் வார்த்தை — ஆழ்வார்களுக்கும் பெரியாழ்வார்க்குமுள்ள தன்னேற்றம். எங்ஙனேயென்னில்:- நாம் கலக்கங்களும் தேற்றமுமாய்ப் போருவுதோம்; அவர்கள் கலக்கமில்லா நற்றவர்களாய், பல்லாண்டு கூறியிருப்பர்கள். [பகவதநுபவத்தில் த்வரையாலே எம்பெருமானையும் அவனடியாரையும் வெறுத்து

வார்த்தை சொல்லுவது, மடலெடுப்பது, நோன்புநோற்பது முதலான அதிப்ரவ்ருத்திகளைக் கலங்கின தசையிலே செய்பவர்களாய், தேறினபோது மங்களாஸாஸன பரராயிருப்பவர்களான மற்ற ஆழ்வார்களைப்போலே நாம் 'கலக்கங்களும் தேற்றமுமாய்' [திருவாய் 6-8-2] இருப்போம். சாத்தாத முதலிகள் பெரியாழ்வாரைப்போலே 'கலக்கமில்லா நற்றவமுனிவர்' [திருவாய் 8-8-10] என்னும் பெருமையையுடையவர்களாய் "பல்லாண்டு கூறுதுமே" "பல்லாண்டு கூறுவனே" [திருபல்லாண்டு 8, 11] என்று மங்களாஸாஸனபரராயிருப்பர்கள்.] 3.

நாலாம் வார்த்தை — அந்தரத்துக்கும் (கரைக்கும்)? கடலுக்குமுள்ள தன்னேற்றம். எங்ஙனேயென்னில்:- நாம் ஸம்ஸாரமாகிற கடலிலும் மழையிலும் பெருங்காற்றிலும் அவற்றிலுள்ள லாப₄ச்சே₂த₃ங்களாலும் ஶோகஹர்ஷங்களைப் பண்ணுநிற்புதோம்; அவர்கள் இரண்டிலும் "தளர்தலதனருகுஞ்சாரார்" "தருதுயரந் தடாயேல்" என்கிற திருமொழிப்படியே நிற்பர்கள். "ஆறாரார் துணையென்று அலைநீர்க் கடலுளழுந்தும் நாவாய்" [திருவாய் 5-1-9] போல் ஸம்ஸாரமாகிற கடலிலும் மழையிலும் பெருங்காற்றிலும் அலைப்புண்டு, ஸம்ஸாரத்திலுள்ள லாப₄ நஷ்டங்களில் இன்ப துன்பங்களை அடைகின்றோம் நாம். அவர்கள் கரையிலே நங்கூரம் பாய்ச்சப்பெற்று நிலையாயிருக்கும் கப்பல்போலே லாப₄நஷ்டங்களில் இன்ப துன்பங்களை அடையாதவர்களாய் "உளதென்றிறுமாவார் உண்டில்லையென்று தளர்தல் அதனருகும் சாரார்" [இர-திருவ 45] "தருதுயரம் தடாயேல் உன் சரணல்லால் சரணில்லை" [பெரு-திரு 5-1] என்கிறபடியே எம்பெருமானாகிற கரையைப்பற்றி நிலையாயிருப்பர்கள். 4.

அஞ்சாம் வார்த்தை — அணுவுக்கும், மஹாமேருவுக்குமுள்ள தன்னேற்றம். எங்ஙனேயென்னில் :- நாம் ஸம்ப₃ந்த₄மும் குடி கோ₃த்ரமும் ஸூத்ரமுமாகப் பண்ணுவுதோம்: அவர்கள் ஸம்ப₃ந்த₄ ஜ்ஞாநாநுஷ்டா₂நமே குடிகோ₃த்ர ஸூத்ரமென்றிருப்பர்கள். [நாம் பண்டைக்குலமான ப்₃ராஹ்மண்யத்தைப் பற்றி நின்று, குடி, கோ₃த்ரம், ஸூத்ரம் முதலானவற்றில் உழல்கின்றோம்; அவர்கள் தொண்டக்குலத்துக்குரிய ஜீவபரஸம்ப₃ந்த₄ ஜ்ஞானத்தையும் அதற்குரிய அநுஷ்டா₂னத்தையுமே குடி, கோ₃த்ரம், ஸூத்ரம் முதலான அனைத்துமாகக் கொண்டிருப்பர்கள்.] 5.

ஆறாம் வார்த்தை—கரும்புக்கும் கண்டுக்குமுள்ள தன்னேற்றம். எங்ஙனேயென்னில்:- நாம் வேத₃மாகிற கரும்பைக்கடித்துப் பல்லு முறிவுதோம்; அவர்கள் ஸாரத்₃வயமாகிற கண்டைக் கடித்து இன்புறுவர்கள். ['மறையாய நால்வேத'மாகையாலே சக்கை கலந்ததான வேத₃மாகிற கரும்பைக் கடித்து, பல் முறிவது போலே அர்த்த₂நிஷ்கர்ஷம் செய்வதில் நாம் கஷ்டப்படுகிறோம். அவர்கள் ஸகலவேத₃ஸாரமான த்₃வயமாகிற கற்கண்டைச் சுவைத்து இன்புறுகிறார்கள்.] 6.

ஏழாம் வார்த்தை—மண்ணுக்கும் விண்ணுக்குமுள்ள தன்னேற்றம். எங்ஙனேயென்னில்:- நாம் "மண்ணுளென்னைப்பெற்றாலென்செய்யா" என்றும், "அருவித்தின்றிட அஞ்சி நின்னடைந்தேன்" என்றும், "பல நீ காட்டிப் படுப்பாயோ" என்றும், "திருமாலே! இனிச்செய்வதொன்றறியேன்" என்றும் ப₄யப்பட்டுக் கலங்காநிற்புதோம்; அவர்கள் "இங்கே திரிந்தேற்கிழுக்குற்றென்?" என்றும், "வானுயரின்பமெய்திலென்?" என்றும், "நம்புவார்பதி வைகுந்தங்காண்மின்" என்றும், "செய்த்தலையெழு நாற்றுப்போல் அவன் செய்வன செய்துகொள்ள" என்றுமிருப்பர்கள். 7.

எட்டாம் வார்த்தை—இரவுக்கும் பகலுக்குமுள்ள தன்னேற்றம். எங்ஙனே யென்னில்:- நாம் வேத₃மாகிற அந்த₄காரத்திலே தடுமாறுநிற்புதோம்; அவர்கள் அவன் பேராயிரமுமோதின விளக்கொளியாலே, மாதவன் தன் துணையா நடந்து, மாயன் அன்று ஐவர் தெய்வத் தேரினிற் செப்பிய கீதையின் செம்மைப் பொருள் வழியே நடப்பர்கள். [செம்மைப் பொருள்—சரமஶ்லோகம்] 8.

ஒன்பதாம் வார்த்தை—ரத்நத்துக்கும் பாஷாணத்துக்குமுள்ள தன்னேற்றம். எங்ஙனேயென்னில்:- நாம் "மந்திரத்தை மந்திரத்தால் மறவாதென்றும் வாழுதியேல் வாழலாம் மட நெஞ்சமே" என்று - அந்திதோறும் மந்திரத்தைச் சொல்லாநிற்புதோம்; அவர்கள் "அந்தியாலாம் பயன் அங்கென்?" என்று - மந்த்ரரத்நத்தைச் சிந்திப்பர்கள். [அந்திதோறும் மந்திரம் — கா₃யத்ரீ.] 9.

பத்தாம் வார்த்தை—பதிவ்ரதைக்கும் பரநாரிக்குமுள்ள தன்னேற்றம். எங்ஙனேயென்னில்:- நாம் ஆக்₃நேயாதி₃களுக்கு ஶேஷமாயிருப்புதோம்; அவர்கள் அவனுக்கே ஶேஷமென்று அவனையொழிந்தவர்களுக்கு ஶேஷமன்றென்று அறுதியிட்டிருப்பர்கள். இது இருவர்களுக்குமுள்ள தன்னேற்றம். 10.

இந்தத் தன்னேற்றந்தான் பெருமாள்பக்கலிலும், நம்பெருமாள் பக்கலிலும், அப்பன்பக்கலிலும், பெரியநம்பிபக்கலிலும் காணலாம். இதின் ஏற்றந்தான் நமக்கும் உமக்கும் பெரியோர்களுக்கும்

நித்யாநுஸந்த4நமென்று உடையவர் முதலியாண்டானுக்கு அருளிச்செய்தார்; முதலியாண்டானும் "அடியேன் இத்தனை காலம் அபசாரம் பண்ணிப்போந்தேன்; இனிச்செய்யவடுப்பதென்?" என்று விண்ணப்பஞ் செய்ய; "ஶரணாக3தனான முமுக்ஷுவுக்கு இப் பத்து வார்த்தையும் நெஞ்சில் பட்டவன்று திருவடிகள் ஸித்3தி4க் கும்" என்று உடையவர் முதலியாண்டானுக்கு அருளிச்செய்தார். [இவ்வார்த்தையில் சொன்ன ஏற்றங்கள் ப்3ராஹ்மணரல்லாத ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இருக்கிறது என்று திருவுள்ளம்பற்றியே பெருமாளாகிற ஸ்ரீராமபிரான் ரிஷிகளைக்காட்டிலும் சபரியிடமும், குஹப் பெருமாளிடமும், வாநரமுதலிகளிடமும், விபீ4ஷணாழ்வானிடமும் ஈடு பட்டார். நம்பெருமாள் லோகஸாரங்க3 மஹாமுனியைக் காட்டிலும் திருப்பாணாழ்வாரிடம் ஈடுபட்டார். திருமலையப்பன் முடிமன்னனான தொண்டைமான் சக்கரவர்த்தியைக் காட்டிலும், குயவரான குறும் பறுத்த நம்பியிடம் ஈடுபட்டார். பெரியநம்பி ப்3ராஹ்மண ஸ்ரீவைஷ்ணவர்களுடைய விரோத4த்தையும் பொருட்படுத்தாமல் மாறனேரிநம்பிக்கு ப்3ரஹ்மமேத4 ஸம்ஸ்காரம் செய்தருளினார். ஆகையால் ப்3ராஹ்மண ஸ்ரீவைஷ்ணவர்கள் இந்தப் பத்து வார்த்தையையும் அநுஸந்தி4த்தால் சாத்தாத முதலிகளின் பெருமையை அறிவார்களாகையாலே அவர்களிடம் அபசாரம் ஏற்படாது; எம்பெருமான் திருவடிகள் எளிதில் கிட்டும்—என்று எம்பெருமானார் முதலியாண்டானுக்கு அருளிச்செய்தார்.]

36. வார்த்தாமாலை (451) வார்த்தை "முமுக்ஷுவாய் ப்ரபந் நனாயிருக்குமவனுக்கு இருக்கும் நாளைக்குக் காலக்ஷேப ப்ரகாரம் இருக்கும்படி எங்ஙனே?" என்று உடையவர் திருவடிகளிலே விழுந்து முதலியாண்டான் விண்ணப்பஞ்செய்ய; "கு3ருபரம்பரா பூர்வகமாக த்3வயத்தை அநுஸந்த4நம் பண்ணுவான்: உப4ய விபூ4திநாத2னாய் ஶ்ரிய:பதியான ஸர்வேஶ்வரனும் நாய்ச்சிமாரும் நித்யஸூரிகளும் கூட எழுந்தருளியிருக்கும் பீடக்கட்டாயிருக்கும் த்3வயம்; பெரியபெருமாள் திருவடிகளைப் பார்த்தவாறே, "பொது நின்ற பொன்னங்கழல்" என்கிறபடியே ஸர்வாத்ம ஸாத4ரண மாயிருக்கும்; பெரியபெருமாள் அப4யஹஸ்தத்தைப் பார்த்தவாறே அநந்யஶரணரான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கே அஸாத4ரணமாயி ருக்கும்; பெரியபெருமாள் திருமுகமண்ட3லத்தைப் பார்த்தவாறே நித்யஸூரிகளுக்கே அஸாத4ரணமாயிருக்கும்: ப்ராப்யபரமான திருமந்த்ரத்தை—பெரியபெருமாள் திருவடிகளிலே அநுஸந்த4 நம் பண்ணுவான்; ப்ராபகபரமான சரமஶ்லோகத்தை—பெரிய பெருமாள் அப4யஹஸ்தத்திலே அநுஸந்த4நம் பண்ணுவான்; இரண்டுங்கூடி பே4ாக3ரூபமான த்3வயத்தைப் பெரியபெருமாள் திருமுகமண்ட3லத்திலே அநுஸந்த4நம் பண்ணுவான்."

37. பெரியாழ்வார் திருமொழி (2-1-1) மாமுனிகள் வ்யாக்யானம் ச விவரணம் :— (அத்தூதனப்பூச்சி காட்டுகின்றான்) இவ்விடத்தை உய்ந்தபிள்ளை (ஆ)பாடாநிற்க, திருவோலக்கத்திலே அத்தூதனென்று பெருமானைக்காட்டுவது அப்பூச்சியென்று கண்ணையிறுத்துக்கொண்டு வருவதாய் அபி₄நயிக்க, உடையவர் பின்னே ஸேவித்தெழுந்தருளியிருந்த எம்பார் திருக்கைகளைத் திருத்தோள்களோடு சேர்த்துக்காட்ட, அவரும் அப்படியே அபி₄நயித்துக்கொண்டுவர, 'இதுக்கடியென்?' என்று விசாரித்துப் புரிந்து பார்த்தருளி 'ஸ்ரீ கோவிந்தப் பெருமாள்! இருந்தீரோ?' என்றருளிச்செய்தாரென்று ப்ரஸித்₃த₄மிறே. [விவரணம்:— குழந்தைகள் ஒருவரையொருவர் ப₄யப் படுத்தும்போது கண்களைப் புரட்டி விழிப்பது முதலான செயல்களைச் செய்வது வழக்கம் 'அப்பூச்சிகாட்டுதல்' என்பது அச்செயலேயாகையால், உய்ந்த பிள்ளை என்னும் அரையர் "அப்பூச்சிகாட்டுகின்றான்" என்ற இடத்துக்கு அபி₄நயிக்கும்போது அப்படியே கண்ணைப் புரட்டி விழித்துக்காட்டினார். கோஷ்டியில் எம்பெருமானாருக்குப் பின்னேயிருந்த எம்பார் 'கண்ணன் ஸங்க₂ சக்ரங்களோடு கூடிய சதுர்பு₄ஜ ரூபத்தைக் காட்டுவதே ஆயர்சிறுமிகளை ப₄யமுறுத்துவதற்காக அப்பூச்சிகாட்டுதலாகும்' என்பது தோற்ற, திருக்கைகளைத் திருத்தோள்களோடு சேர்த்துக்காட்ட, இரண்டாவது முறை அபி₄நயிக்கும்போது அரையர் அப்படியே அபி₄நயித்தார். இதைப் பார்த்த எம்பெருமானார் இது எம்பார் உணர்த்திய திருத்தமாகவேயிருக்கும் என்று ஊஹித்துப் பின்புறம் பார்த்து எம்பாரைக் கொண்டாடினார் என்றபடி.]

38. பெரியாழ்வார் திருமொழி (3-8-4) வ்யாக்யானம்: ஆழ்வான் திருநாட்டுக்கெழுந்தருளினபோது உடையவர் விஶ்லேஷம் பொறுக்கமாட்டாமல் "ஒருமகள் தன்னையுடையேன்" என்றும், "உலகம் நிறைந்த புகழால் திருமகள்போல வளர்த்தேன்" என்றும், "செங்கண்மால்தான் கொண்டுபோனான்" என்றும் அருளிச்செய்தாரென்று ப்ரஸித்₃த₄மிறே. "உபமாநமஶேஷாணாம் ஸாதூ₄நாம் யஸ்ஸதா₃பு₄வத்" என்கிறபடியே ஸாது₄க்களுக் கெல்லாம் உபமாந பூ₄மியாகச் சொல்லலாம்படியிருக்கையாலே உலகம் நிறைந்த புகழுள்ளது ஆழ்வானுக்கேயிறே.

39. பெரியாழ்வார் திருமொழி (4-4-1). திருவரங்கப்பெருமாள் அரையர் ஐதிஹ்ய நிர்வாஹம் 8 காண்க.

40. பெரியாழ்வார் திருமொழி (4-4-7) வ்யாக்யானம் ஈ விவரணம்: ஆழ்வான் ஸம்ஸாரத்தில் ஆர்த்தியின் கனத்தாலே கலங்கிப் பெருமாள் திருவடிகளிலே 'அடியேனைத் திருநாடேறப் போம்படி திருவுள்ளமாகவேணும்' என்று விண்ணப்பஞ் செய்ய, பெருமாள் திருவுள்ளமாய் ஆழ்வார்திருவரங்கப் பெருமாளரையர் திருமாளிகையிலே புறவீடு விட்டிருக்கிறவளவிலே, இத்தை உடையவர் கேட்டருளி, பஞ்சுக்கொட்டன் திருவாசலளவாக எழுந்தருளி, பெருமாளுக்கு விண்ணப்பஞ் செய்தால் விண்ணப்பஞ்செய்தது பெருமாளுஞ் செய்தருளுவர்; நாமடியாகப் பெருமாள் இரண்டு வார்த்தை அருளிச்செய்தாராகவொண்ணாதென்று மீண்டும் ஆழ்வானிருக்கிறவிடத்தேற எழுந்தருளி, 'ஏன் ஆழ்வான்!' என்ன, அடியேன் மறந்தேனென்று விண்ணப்பஞ் செய்தான். [விவரணம்:—ஆழ்வான் பிரார்த்தித்தபடி நம்பெருமாள் அவருக்குத் திருநாட்டை அருள, உடையவர் அதை மாற்றும்படி செய்ய வேணும் என்று கோயிலுக்குப் புறப்பட்டு, பாதிதூரம் சென்ற பின்பு 'நாம் மறுபடி பிரார்த்தித்து, பெருமாளை இரண்டு வார்த்தை சொன்னவராக ஆக்கிவிடக் கூடாது' என்று திரும்பி ஆழ்வான் இருக்குமிடம் சென்று அவரை 'ஏன் இப்படிச் செய்தீர்' என்று கேட்க, 'அடியேன் தேவரீரை மறந்து அப்படி வரம் கேட்டு விட்டேன்' என்று கூறினர் என்றபடி]

41. பெரியாழ்வார் திருமொழி (5-4-3) "எம்மனா! என் குல தெய்வமே! என்னுடை நாயகனே!" என்ற இம்மூன்றாலும், தேஹாத்மாபிமானமும், அந்ய ஶேஷத்வமும், ஸ்வஸ்வாதந்த்ர்யமும் கழிந்தபடி — என்று உடையவர்.

42. திருப்பாவை (1) பெரியநம்பி ஐதிஹ்ய நிர்வாஹம், 18 காண்க.

43. திருப்பாவை (12) (இனித்தானெழுந்திராய்) எம்பெருமானார் திருவவதரித்தாப் போலே காணும் இப்பெண்பிள்ளையும்.

44. திருப்பாவை (18) (உந்துமதகளிற்றன்) எம்பெருமானார் விசேஷித்து உகந்திருக்கும் இப்பாட்டு. [விவரணம்;— திருக்கோட்டியூர் நம்பி வைபவம் ஐதிஹ்ய நிர்வாஹம் 14ல் எடுத்துக் காட்டப்பட்ட வார்த்தாமாலை 206ல் இவ்வைதிஹ்யம் விளக்கப் பட்டது. "உடையவரும் அதைக்கேட்டு, அதிப்ரீதராய், ஆநந்தாஶ்ருவோடே 'பயின்றதரங்கம் திருக்கோட்டி' என்கிறபடியே பெரிய த்வரையுடனே புறப்பட்டுத் திருக்கோட்டியூரேற எழுந்

தருளி, நம்பி திருமாளிகை வாசலிலே திருப்பாவையனுஸந்தாநத்துடனே தண்டன் ஸமர்ப்பித்து 'சீரார் வளையொலிப்ப வந்து திறவாய் மகிழ்ந்து' என்ற அநந்தரத்திலே நம்பி குமாரத்தியான தேவகிப்பிராட்டியார் திருக்காப்பை நீக்க, விஸ்மிதராய், அவரை விழுந்து ஸேவித்து, தேவகீ புத்ரரத்நத்தைப் பெறுகைக்கு அந்த தேவகிப்பிராட்டி புருஷகாரமாக ஸந்நிதியில் சென்று நம்பியை ஸேவித்து'' என்று இவ்விருத்தாந்தம் ராமாநுஜார்யதிவ்ய சரிதையில் சொல்லப்பட்டது,

''மாதுகரத்துக் கெழுந்தருளி வரும்போதன்றிப் போம்போதும்
ஓதும்கோதை திருப்பாவை உரையோடுலாவித் திரிபவரும்
வேதம் வல்ல திருக்கோட்டி நம்பிமனையில் மெய்ஞ்ஞானப்
போதமுடையார் ஆங்கொருநாள் புக்கார் உந்துமதகளிற்றில்

[மாதுகரம் — உஞ்சவ்ருத்தி; மெய்ஞ்ஞானப்போதம் — மெய்ஞ்ஞான அறிவு.]

''பந்தார் விரலியுன் மைத்துனன் பேர்பாடச்
செந்தா மரைக்கையால் சீரார் வளையொலிப்ப
வந்தா ரணங்கே திறவென்ன வாசலின்முன்
எந்தாதை நின்றார் அவ்வெல்லையினில் நம்பிதரும்

அன்னமென் னடையாள் தேவகி யென்னும்
அரும்பெய ருடையஆ ரணங்கு
தன்னொரு கரத்தால் கந்துக மொன்று
தாங்கியோர் தாமரைக் கையால்
இன்னிசை எதிகட் கிறைவனார் திறவென்
றிசைத்தசொல் இறுமுனம் திறந்தாள்
மின்னுமா மணிசேர்ந் திலங்கிய கபாடம்
விண்டுவின் தொண்டர்மெல் லியலே.

கண்டனர் பின்னைப் பிராட்டிமற் றிவளும்
கள்வனேன் பொருட்டினா லலர்ந்த
புண்டரீ கச்சீர்த் திருவடி வருந்தப்
போந்திவை திறந்தன ளென்னப்
பண்தரும் பனுவல் மறந்தனர் மண்ணில்
பதைப்பற வொடுங்கினர் விழுந்தார்
ஒண்டொடி கண்டு வெருளியோ டேகி
உற்றதைப் பெற்றவர்க் குரைப்பாள்.

என்றிவை மகனார் இயம்பிட நம்பி
இன்பமுற் றிருந்(து)இனி யாழ்வீர்!
ஒன்றுசீர் உந்து மதகளி றென்ன
ஓதிய பாடலோ சந்தை
இன்றுநம் வாசல் தலையுறு மளவில்
என்றனர் ஆம்என எழுந்து
சென்றுமா மாது கரர்பரி மாறத்
தேசிகக் குன்றையும் வணங்கி''

என்று வடிவழகிய நம்பிதாஸராலும் இந்த விருத்தாந்தம் மிக அழகாக வர்ணிக்கப்பட்டது. பன்னீராயிரப்படி குருபரம்பராப்ர பாவத்திலும் இப்படியே காணப்படுகிறது. இப்படிப் பல கிரந் தங்களில் விவரிக்கப்பட்டிருக்க, அரும்பதவுரைகாரரொருவர் இவ் விருத்தாந்தம் பெரியநம்பிகள் திருமாளிகையில் அத்துழாய் கதவைத் திறக்கும்போது நடந்தது என்று எழுதியிருப்பது ஆதரிக்கத்தக்கதல்ல வென்றே தோன்றுகிறது.]

45. திருப்பாவை (23) (யாம் வந்த காரியமாராய்ந்தருள்) அழகர் கிடாம்பியாச்சானை அருள்பாடிட்டு 'ஒன்று சொல்லிக் காணும்' என்ன. 'அபராத₄ ஸஹஸ்ரப₄ாஜநம்' என்று தொடங்கி 'அக₃திம்' என்ன, ''நம்மிராமாநுசனையுடையையாயிருந்துவைத்து 'அக₃திம்' என்னப்பெறாய்'' என்றருளிச்செய்தார்.

46. நாச்சியார் திருமொழி (9-6) (வாய் நேர்ந்து) '' 'நூறு தடா நிறைந்த வெண்ணெய்' என்று பெண்பிள்ளை ப்ரார்த்தி₂த்து வைத்தாள்; கொடுத்தாளாகச் சொல்லக் கேட்டிலோம்; பாரித் தவற்றையிறுக்கை அஸ்ஸந்தாநஜாதர்க்கு ப₄ரமிறே'' என்று தாம் அமுது செய்யப் பண்ணியருளினாராம் எம்பெருமானார்.

47. நாச்சியார் திருமொழி (12-2). திருக்கோட்டியூர் நம்பி ஐதிஹ்ய நிர்வாஹம் 19 காண்க.

48. பெருமாள் திருமொழி (8-6) (சுற்றமெல்லாம் பின் தொடரத் தொல்கானமடைந்தவனே) எல்லாரும் போனார்களோ? சிறிதிடப்போய் மீண்டதென்றன்றோ சொல்லிற்று? — என்ன; ''அஹம் ஸர்வம் கரிஷ்யாமி'' என்று சொன்ன எல்லாவடிமையும் செய்யும் இளையபெருமாள் போகையாலே எல்லா ப₃ந்து₄க்களும் கூடப்போனார்களாய்த்திறே — என்று எம்பெருமானார் அருளிச் செய்தருளினார்.

49. கண்ணிநுண் சிறுத்தாம்பு (3) (அவதாரிகை) த்ரிபுரா தேவியார், "வடகீழ் மூலையில் தத்வத்தையும் 'ஆஶ்ரயணீயம்' என்று உடையவர் அருளிச்செய்தாராகில் எனக்கும் அதுவாமத்தனை யன்றோ" என்றாள். [வடகீழ்மூலையில் தத்வம்—ஈசான்ய (வட கிழக்கு) திக்கிற்கு அதிபதியான உருத்திரன்.]

50, கண்ணிநுண் சிறுத்தாம்பு (3) உடையவர் வெள்ளை சாத்தியெழுந்தருளின காலத்திலே, திருவடிகளில் ஸம்பந்தமுடையாரை "பெருமாளைத் திருவடித்தொழ வேண்டா" என்று விலக்க, ஆழ்வானை "நீராரேனுக்கும் விரோதியோ, நீர்புக்குத் திருவடித் தொழலாகாதோ?" என்ன; 'ஆத்மகுணம் மோக்ஷ ஹேதுவென்றிருந்தோம், அது பந்தஹேதுவான பின்பு எம்பெருமானார் திருவடிகளில் ஸம்பந்தத்தையறுத்துக்கொள்ளவோ?" என்று மீண்டுபோந்தார். [திருப்பாவை 15-ம்பாட்டு மூவாயிரப்படியிலும் இவ்வைதிஹ்யம் சுருக்கிக் கூறப்பட்டுள்ளது.]

51. பெரிய திருமொழி 2-7-6) நம்குடி என்னாதே 'தன்குடி' என்கிறாளாயிற்று; "எம்பெருமானார் தர்சனம்" என்னுமாபோலே. நம் ப்ரதிபத்தியாலே சொன்னோமாகையன்றிக்கே பெருமாள் "இராமாநுசனுடையார்" என்றே அருளிச்செய்வர். "பெருவிலையனான ரத்நத்தை நடுவே இட்டுக்கோர்த்தால் முன்னும் பின்னும் ஒக்க விலை போமாபோலே காண்" என்று பிள்ளான்.

52 பெரியதிருமொழி (3-7) பெரியநம்பி ஐதிஹ்ய நிர்வாஹம் 19 காண்க.

53. பெரியதிருமொழி (3-7-3) பட்டர் இப்பாட்டை அருளிச்செய்து, "ஒரு ஸ்த்ரீயை விரூபையாக்கினவனுடைய திறம்கேட்கில் அஞ்சுவன் — என்கையால், இத்தலைக்கு குணஹாநியாய்த் தோற்றுநின்றது; இது ஆழ்வாரருளிச்செய்யக்கூடாது. இது எங்ஙனே சேரும்படி?" என்று ஆச்சானைக் கேட்க, "துடுப்பிருக்கக் கை வேகவேணுமோ? எம்பெருமானார்தாமே அருளிச்செய்து வைத்தாரிறே" என்ன, "அருளிச்செய்தபடி எங்ஙனே?" என்று கேட்க; "முன்பொரு புணர்ந்துடன் போக்கிலே பிறந்த ப்ரமாதத்தைக் கேட்டு, அத்தை நினைத்து இப்போது பயப்படுகிறாள்" என்றருளிச்செய்தார். [விவரணம் :— அப்போது சூர்ப்பணகையை அங்கபங்கம் செய்து ஆபத்தை வரவழைத்துக்கொண்டது போல இப்போது யாருக்காவது பங்கம் செய்து ஆபத்தை விளைத்துக் கொள்வனோ என்று தாய் அஞ்சுவதாக எம்பெருமானார் நிர்வாஹம்]

54. பெரியதிருமொழி (6-7-4). (ஆப்புண்டு) வங்கிப் புரத்து நம்பி, பலகாலும் "திருவாராத₄னக்ரமம் அருளிச்செய்யவேணும்" என்று போருமாய், அவஸரஹாநியாலே அருளிச்செய்யாதே போந்தாராய், திருமலையிலே (எம்பெருமானார்) எழுந்தருளியிருக்கச் செய்தே, ஆழ்வானுக்கும் நம்பி ஸ்ரீஹநுமத்₃தா₃ஸர்க்கும் அதுதன்னை அருளிச்செய்தாராய்ச் சமைகிறவளவிலே நம்பிதோற்ற, திருவுள்ளம் துணுக்கென்றஞ்சி, அப்போதருளிச்செய்த வார்த்தை:— "என்றுமுள்ள இஸ்ஸம்ஶயந்தீரப் பெற்றோமாகிறது — 'நியாமகன் நியாம்யங்களிலே சிலர்க்கு அஞ்சிக் கட்டுண்டு அடியுண்டு அழுது நின்றான்' என்றால் இது கூடுமோ என்றிருந்தோம், இரண்டு இழவுக்கும் நம்முடைய ஹ்ருத₃யம் அஞ்சி நொந்தபடியால் அதுவும் கூடும்.' என்று. [விவரணம்: எம்பெருமானாருடைய சிஷ்யரான வங்கிப்புரத்து நம்பி அவரிடம் திருவாராதனக்ரமம் உபதேசிக்கும்படி கேட்டு வந்தார். அவகாசமில்லாமையால் அருளிச் செய்யாதிருந்தஎம்பெருமானார் திருமலையில் இரு சீடர்களுக்கு அதை அருளிச்செய்து முடிக்கும் போது நம்பி வர, அவரைக் கண்டு அஞ்சிய எம்பெருமானார் "ஸர்வேஶ்வரன் தன் ஆளுகைக் குட்பட்ட யசோதை முதலானோரிடம் எப்படி அஞ்சி நடந்தான் என்ற ஐயம் — சீடரான உமக்கு நெடுநாள் திருவாராதனக்ரமம் உபதேசியாமலிருந்தது, இருவர்க்கு உபதேசிக்கும் இப்போது உம்மைக் கூட்டிக் கொள்ளாமலிருந்தது என்னும் இரண்டு குற்றங்கள் செய்த எனக்கு உம்மிடம் அச்சம் விளைவதைக் கண்டதும் தீர்ந்து போயிற்று என்று அருளினார்.]

55. பெரியதிருமொழி (7-4) ப்ரவேசம்: பெரியநம்பி வைபவும் ஐதிஹ்ய நிர்வாஹம் 20 காண்க.

56. பெரியதிருமொழி (9-3-1) எம்பெருமானார் "அங்கு ஆருயிர்பட்டது இங்கு எனதுயிர்பட்டது?" என்று அருளிச் செய்தார்.

57. பெரியதிருமொழி (10-4-1) எம்பெருமானார் ஸ்ரீபாதத்தில் அந்வயமில்லாதார், ப₄க₃வத்₃விஷயத்தில் சொன்ன ஏற்றமெல்லாம் அர்த்த₂வாத₃மென்றிருப்பர்கள். அதுடையவர்கள் 'ப₄க₃வத் ப்ரபா₄வத்துக்கு அவதி₄யில்லாமையாலே சொன்னவை சில சொன்னவித்தனை; சொல்லாததுவே பெரிது' என்றிருப்பார்கள்.

58. திருநெடுந்தாண்டகம் (5) "லோகவிக்ராந்த சரணௌ ஶரணம் தேऽவ்ரஜம் விபோ₄" என்றார் உடையவர்.

59. திருநெடுந்தாண்டகம் (11) (குணபாலமதயானாய்) பெரிய முதலியார் பக்கல் தமக்குண்டான ஆதரத்தாலே மன்னனுடைய வடிவழகையும் செருக்கையும் நிலையழகையும் பற்ற உடையவர் 'குணபால மதயானாய்' என்று — மன்னனுரை அருளிச்செய்வர்.

60. திருநெடுந்தாண்டகம் (12) (சொல்லென்னச்சொன்னாள்) நெடுநாள் அநுவர்த்தித்துக் கேட்கவேண்டும் வார்த்தையை ஏவச் சொன்னாள். எம்பெருமானுரைப் போலேயும் கீதோபநிஷதாசார்யனைப் போலேயுங் காணும் இக்கட்டுவிச்சி வைபவமிருப்பது:— செவி தாழ்த்தார்க்கெல்லாம் வார்த்தை சொல்லிப்போந்தார் உடையவர்; ருசியைப் பிறப்பித்து வார்த்தை சொல்லிப் போந்தான் கீதோபநிஷதாசார்யன்.

61. திருநெடுந்தாண்டகம் (14) (வணங்கினாளே) அஞ்சலி ஸாத்மித்ததிறேயென்னுக் காலிலே விழுந்தாள். உடையவர், முதலிகளும் தாமுமாக நீராட எழுந்தருளுகிறபோதை ஸமூஹத்தைக் கண்ட ப்ரீதியாலே பெரிய நம்பி தெண்டனிட, "விநயம் பூர்விப்போமாகில் தெண்டனை ஸ்வீகரித்தோமாவுதோம்" என்று பேசாதே எழுந்தருளினாரிறே.

62. முதல் திருவந்தாதி (44) (தமருகந்தத்யாதி) எம்பெருமானார் மாதுகரத்துக்கெழுந்தருளாநிற்க, சில பிள்ளைகள் காலாலே கீறி, "உம்முடைய எம்பெருமான் திருமேனி" என்று காட்ட, பாத்ரத்தை வைத்து தெண்டனிட்டருளினார்.

"கோயிலிலே சிலபிள்ளைகள் விளையாடுகிறவர்கள் திருவீதியிலே யிருந்து பெருமாளும் நாய்ச்சிமாரும் பெரியதிருமண்டபமும் கற்பித்துப் பெரிய திருப்பாவாடையும் அமுதுசெய்வித்து, 'எம்பெருமானார்! ப்ரஸாதப்படும்' என்று மணலைக் கையாலே முகந்தெடுக்க, தற்காலத்திலே மாதுகரத்துக்கு எழுந்தருளுகிற உடையவர், அவ்விடத்திலே அது கேட்டருளித் தெண்டனிட்டு அவர்களெடுத்த ப்ரஸாதத்தைப் பாத்ரத்திலே ஏற்றார்" என்று ஜீயர் அருளிச்செய்தார்.

63. திருவிருத்தம் (9) அவதாரிகை. எம்பெருமானார் திருமலைக்குப் போவதாகப் பிறந்தபடி கேட்டுப் பிள்ளையுறங்காவில்லி தாஸர் தம்மகத்தேபோய் மூடிக்கொண்டு கிடந்து *காண்கின்றனகளும் என்கிற பாட்டை அநுஸந்தியாநிற்க, அங்குச் செய்கிற அளவென்னென்று பார்க்க ஒரு வைஷ்ணவனைப் போகவிட, 'இப்பாட்டை யநுஸந்தித்து சோகித்துக் கிடந்தார்' என்ன, "'வண்பூமணிவல்லி யாரே பிரிபவர்தாம்' என்று சொல்லிப்போரமாட்டிற்றிலையோ" என்றருளிச்செய்தார்.

64. திருவிருத்தம் (8) ஈடு. பெரியநம்பி வைபவம் ஐதிஹ்ய நிர்வாஹம் 21 காண்க.

65. திருவிருத்தம் (9) (ஸ்வாபதேசர்) ஆழ்வாருடைய ஸ்ரீவைஷ்ணவத்வத்தைக் கண்ட வைஷ்ணவர்கள் பக்கல் பரிவாலே பிரியிற்செய்வதென்னென்று அதிசங்கையைப்பண்ண இவ்வதி சங்கை தானே சமிக்கிறதென்று ஆறியிருக்கவொண்ணாதே; பரிஹரித்தல்லது நிற்கவொண்ணாத தசாவிபாகத்தைச் சொல்லு கிறது. பண்டெழுந்தருளியிருக்கிற நாளிலே எம்பெருமானார் இங்கே சிலவெறுப்புண்டாய்த் திருமலைக்கெழுந்தருளுவதாக நினைத் தருளி, ஒரு ஸ்ரீவைஷ்ணவனுக்குச் சில நெல்லுக் கொடுக்கைக்குப் பிள்ளையுறங்காவில்லிதாஸர் பாடேறத் திருக்கையிற் சாத்தின திருப்பவித்ரத்தை வாங்கிக் கொடுத்தருள, ஸ்ரீவைஷ்ணவனுமங்கே செல்ல, பிள்ளை 'காண்கின்றனகளும் கேட்கின்றனகளும்' என்கிற பாட்டை அநுஸந்தித்துக் கண்ணும் கண்ணநீருமாயிருக்க; பிள்ளைக்கு வந்த கார்யமறிவிக்கவல்லாரில்லாமையாலே ஸ்ரீபாதத் தேறவர; 'என்தான் கடுகவந்தாய்? நெல் பெற்றிலையோ' என்ன; "அறிவிக்கவளவாயிராதே 'காண்கின்றனகளுங்கேட்கின்றனகளும்' என்கிற இத்தைச் சொல்லி மூடிக்கொண்டு கிடந்தார்" என்ன, "'வண்பூமணிவல்லி யாரே பிரிபவர்தாம்' என்னமாட்டிற்றிலையோ" என்றருளிச்செய்தாராம்.

66 திருவிருத்தம் (56) ஈடு (பிராணர்) எம்பெருமானார் எழுந்தருளியிருக்கச்செய்தே ஸ்ரீபாதத்திலே ஸேவித்திருக்கிறவர்கள் தமக்குத்தஞ்சமாக நினைத்திருப்பதென்?' என்று கேட்க; வங்கிப் புரத்துநம்பியிருந்தவர் "மூடே4ாயமல்பமதி:" என்கிற க்ஷத்ரபு3ந் து4வின் வாக்யமன்றோ — என்ன; "அதொண்ணாதுகாண் *ப்ரண தே* என்றென்றுண்டு அதிலே. ஸர்வஜ்ஞனறிய நிர்மமனாய் விழ வேணுமிறே; நம் தலையிலே ஏதேனுமொரு அம்பமொதுங்கில் செய்து தலைக்கட்டுகையிலுள்ள அருமையாலே அது இழவோடே தலைக்கட்டும்படியாயிருக்குங்காண்; இத்தலையிலே ஓரம்பமொதுங் கில் அது அப்ரதிஷேத4த்திலே ஒதுங்குமத்தனையல்லது ஸ்வதந் த்ரமாய் நின்று ப2லப்ரத3மாக மாட்டாதாயிறே இருப்பது; ஆனால் பின்னை நினைத்திருக்கவேண்டுவதென்? என்ன; காளி யனுடைய வார்த்தையை நினைத்திருக்குமத்தனை" என்றருளிச் செய்தார். [விவரணம்:- காளியன் வார்த்தையாவது:- "ஸோऽஹம் தே... க்ருபாமாத்ரமநோவ்ருத்தி: ப்ரஸீத3மே" என்று தன் கையில் வெறுமையை முன்னிட்டுக் கொண்டு எம்பெருமானுடைய கருணையையே தஞ்சமாகச் சொன்ன வார்த்தை.]

67. திருவிருத்தம் (99) ஈடு. 'நம்பெருமாள் அமுது செய்யுமத்தை முன்னும் பின்னும் எனக்குக் காட்டிக் கொடுபோங்கோள்' என்று நியமிக்க, அவர்களும் கருத்தறியாமற்படி செய்து கொண்டு ஆறுமாஸம் போலே சென்றபின்பு ஒருநாள் பார்த்து 'இத்தை ஒருநாளாகிலும் குறியழித்திட்டு வைத்தாலாகாதோ' என்றருளிச்செய்தார். கிடாம்பியாச்சான் ஆழ்வானோடே திருவாய்மொழி கேட்கும் நாளிலே ஒருநாள் தாழ்த்துப்புக. 'ஏன் நீ வைகினாய்' என்ன; 'ஆழ்வான்பாடே திருவாய்மொழி கேளாநின்றேன்' என்ன; 'இன்றென்ன திருவாய்மொழி நிர்வஹித்தான்?' என்று கேட்டருள; 'பிறந்தவாறும்' என்று விண்ணப்பம் செய்ய; 'அதில்சொன்ன விஶேஷமென்?' என்ன; 'ஒன்றும் விஶேஷமில்லை' என்ன; 'ஆகில் நீ கேட்டபடியென், அவன் சொன்னபடியென்?' என்ன; ''நிர்வஹிப்பதாக ஆரம்பித்து இயல்சொல்லி அநந்தரம் ஆழ்வாருடைய பாரவஶ்யத்தை அநுஸந்தி₄த்து நெடும்போது கண்ணுங்கண்ணீருமாயிருந்து 'இவ்வாழ்வாரொருவரே; இவர்க்கோடுகிற ப₄ாவவ்ருத்திக்கு நாமிருந்து பாசுரமிடுகையாவதென்?' என்று 'இற்றைக்கு விடலாகாதே' என்று விட்டான்'' என்ன; கேட்டருளி எம்பெருமானார் ''என்ன பரமசேதநனோ?'' என்றருளிச்செய்தார்.

68. திருவிருத்தம் (99) ஈடு பாசுரவ்யாக்₂யானம். *தத்து ஸமந்வயாத்* என்கிற ஸூத்ரத்திலே ''ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளுக்கு அநுபயுக்தங்களான வேத₃ாந்த வாக்யங்கள் புருஷார்த்த₂ பர்யவஸாயியல்லாமையாலே ப்₃ரஹ்மணி ப்ரமாணமாகமாட்டாதே'' என்ன, ''அவை நிரதிஶயாநந்த₃ரூப ப்₃ரஹ்மத்தை ப்ரதிபாதி₃க்கையாலே அவற்றுக்கு ப்₃ரஹ்மணி ப்ராமாண்யம் கூடும்'' என்று ப₄ாஷ்யகாரரருளிச்செய்தார்.

69. திருவிருத்தம் (99) ஈடு, (அல்லாவில்லை) ஒருவிசை திருக்கோட்டியூர்நம்பி திருநாளுக்கெழுந்தருளின ஸமயத்திலே இவ்வர்த்த₂த்தை அருளிச்செய்வதாக ஒரு ஏகாந்த ஸ்த₂லத்திலே எழுந்தருளி எம்பெருமானாரையும் கூடக்கொண்டு புக்காராய், திருப்பணிசெய்வானொருவன் உறங்கிக் குறட்டை விடாநிற்க, அவனைக் கண்டு 'அநர்த்தப்பட்டோம்' என்று அவ்விசை தவிர்ந்து மற்றை விசை அருளிச்செய்யக் கேட்டருளி, எம்பெருமானார் ஆழ்வானகத்திலே அமுதுசெய்திருக்கிறவளவிலே உச்சி வெய்யிலிலே தண்டையுங்கொண்டுவந்து புகுந்து 'நம்பி இவ்வர்த்த₂த்தை ஒருவர்க்

கும் சொல்லாதேகொள் என்றருளிச்செய்தார்; உனக்குச் சொல்லாதிருக்கமாட்டுகிறிலேனிறே' என்று ஸஹகாரிநைரபேக்ஷ்யத்தை அருளிச்செய்தார்,

70. திருவாசிரியம் 1 (கவர்தலை) அனந்தாழ்வான் திருக்கோட்டியூருக்கு நடந்கவிடத்திலே பட்டரைக் கண்டு அவர் திருமேனியிலே இப்படிசெய்தானும். ஆண்டாளுக்கு முந்துற ஒரு பிள்ளையுண்டாய் அவனையிழக்க, 'அங்ஙனே செய்யவொண்ணாது; இவன் ஜீவிக்கவேணும்' என்று எம்பெருமானார் பெரிய பிராட்டியாருக்கு நீராட்டி மஞ்சள்நீர்குடித்த பிள்ளையாக வளர்க்க வேணும் என்று காட்டிக்கொடுத்தருளினாராயிற்று. அந்த வாஸனையாலே 'பெரியபிராட்டியார் மகன்' என்றுதான் பட்டரை அனந்தாழ்வான் சொல்லுவது.

71. பெரியதிருவந்தாதி (82). (கர ந் து ரு வி த் யா தி$_3$) 'பெருமாள் மாயமானையெய்து மீண்டெழுந்தருளுகிறபோது அடிக்கொதித்து நடக்கமாட்டாமை தளிர்களை முறித்திட்டு அதின் மேலே எழுந்தருளினார்' என்று ஒருவன் கவிபாட, எம்பெருமானார் கேட்டருளி 'மாறியிடுகிற திருவடிகளிலே என் தலையை வைக்கப் பெற்றிலேன்' என்றருளிச்செய்தார்.

72. சிறியதிருமடல்கண்ணி (20) (அதுகேட்டு) ப$_4$க$_3$வத்$_3$விஷயங்களைக் கேட்கைக்கு ருசியுண்டென்றறியும்த்தனையிறே வேண்டுவது; ஆசார்யர்கள் தாங்களேவந்து சொல்லுவர்களிறே. முன்புத்தை ஆசார்யர்கள் ப$_4$க$_3$வத்$_3$விஷயம் சொல்லும்போது நாலிரண்டு பேருக்காயிற்றுச் சொல்லுவது, அதுதானும் அவர்கள் படியறிந்தால் சொல்லுவது; அங்ஙனின்றிக்கே ருசியுடையார் என்று தோற்றினவளவிலே சொல்லுவர் எம்பெருமானார்; அப்படிகாணும் இக்கட்டுவிச்சியும்.

73. பகவத்விஷயம் (1-1-1) (துயரறு) 'துயரறுக்கும்'என்று முன்புள்ள முதலிகள் அருளிச்செய்யும்படி; ஸமஸ்தது$_3$:க்க$_2$பரோத$_3$நஸ்வப$_4$ாவமான திருவடிகள்; ஸகலாத்மாக்களுடையவும் து$_3$:க்க$_2$த்தைப் போக்குகையே ஸ்வபபூாவமான திருவடிகள், "துயரறும் சுடரடி" என்று எம்பெருமானாரருளிச்செய்யும்படி. "வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்$_4$ருஶம் ப$_4$வதி து$_3$:க்கி$_2$த:" என்றால், து$_3$:க்க$_2$நிவ்ருத்தியும் அவனதாயிருக்குமிறே. இவர் துயரற, தான் துயர் தீர்ந்தானாயிருக்கை. இத்தால் இவர் மயர்வற அவன் துயரற்றபடி.

74. பகவத்விஷயம் (1-2) ப்ரவேசம். ஆளவந்தார் ஐ. நி. 89 காண்க.

75. பகவத்விஷயம் (1-2-9). ஓரயனத்தினன்று குன்றத்துச் சீயர் எம்பெருமானார் ஸ்ரீபாதத்திலே புக, அவருடைய சிறு பெயரைச்சொல்லி "சிங்கப்பிரான்! இன்று அயனங்கிடாய்" என்ன, திருவுள்ளத்திலோடுகிறது இன்னதென்றறியாமையாலே அவர் பேசாதிருக்க "இத்தேஹ ஸமனந்தரத்திலே ப்ராப்தி கண்ணழிவற்ற பின்பு, நடுவு விரோதியாய்ச் செல்லுகிற நாளிலே ஓராண்டு கழியப்பெற்றவிது உனக்கொன்றாயிருந்ததில்லையோ!" என்றருளிச் செய்தார். [விவரணம்—அயநம்-பிறந்தநாள்.]

76. பகவத்விஷயம் (1-3) ப்ரவேசம். "ஸர்வேஸ்வரன் அரியனென்றால் ஸம்ஸாரத்தில் ஆள்பற்றாதென்று அவனெளிமையை உபபாதித்துக் கொண்டு போந்தோம், அதுதானே அவர்களுக்கு 'இத்தனையெளியனோ' என்று விடுகைக்குடலாயிற்று; அவ்வெளிமைதானே ஆதரிக்கைக்கு உடலாயிற்றது உமக்கொரு வருக்குமேயிறே" என்று எம்பாரைப்பார்த்து உடையவர் அருளிச்செய்தருளினாராம்.

77. பகவத் விஷயம் (1-4-3). திருமாலையாண்டான் ஐ. நி. 11 காண்க.

78. பகவத் விஷயம் (2-1-7). (தோற்றோமித்யாதி) கீழும் மேலும் போருகிறபடியொழிய ஶப்தஸ்வாரஸ்யத்தைப்பற்ற எம்பெருமானார் அருளிச்செய்துபோருவதொன்றுண்டு; அம்மங்கியம்மாளும் அத்தையே நிர்ப்பந்தித்துப்போரும். அதாகிறதுதான், பிரிவாற்றாதாரனேகர் கூடக் கூட்டிக் கொண்டு கூப்பிடா நிற்க, இருள்வந்து முகத்தை மறைக்க, அத்தைப்பார்த்து, 'ஆற்றாமைக்குப் போக்குவிட்டு தரிக்கவொட்டாதே நீ வந்து நலியக்கடவையோ?' என்கிறாள்.

79. பகவத் விஷயம் (2-3-1) ஆளவந்தார் ஐ. நி. 11 காண்க.

80. பகவத் விஷயம் (2-3-3) ஆளவந்தார் ஐ. நி. 42 காண்க.

81. பகவத் விஷயம் (2-5-1) ஆளவந்தார் ஐ. நி. 43க்கு மேல் — அங்ஙனன்றிக்கே, எம்பெருமானார் அருளிச்செய்யும்படி :— "இவரோடு ஸம்ஶ்லேஷிப்பதற்குமுன்பு அவனோடொக்க இவையும் அநுஜ்ஜ்வலமாய் அஸத்ஸமமாய் இவரோடு கலந்தபின்பு உஜ்ஜ்வலமாய் ஸத்தைபெற்றபடி சொல்லுகிறது" என்று. கல்பக தரு வாடினால் அதில் பூவும் தளிரும் வாடுமிறே.

82. பகவத் விஷயம் (2-7-5). திருமாலையாண்டான் ஐ. நி. 15 காண்க.

83. பகவத் விஷயம் (2-9-8). ஆளவந்தார் ஐ. நி. 46க்கு மேலே — "(எக்காலத்து இத்யாதி₃) எல்லாக்காலத்திலும் எனக்கு ஶேஷியான நீ நான் ஶேஷமான முறை தப்பாமே வந்து என் ஹ்ருத₃யத்திலே புகுரப்பெறில், எக்காலத்திலும் — இக்கால மெல்லாவற்றிலும், (மற்றுயாதொன்றும் வேண்டேன்) பின்னை இதொழிந்த மற்றொன்றையும் நான் வேண்டேன்"

84. பகவத் விஷயம் (2-10) ப்ரவேஶம். ஆளவந்தார் ஐ. நி. 47க்கு மேலே — எம்பெருமானர் "அங்ஙனல்ல; இவர் பாட்டுத் தோறும் 'ஒல்லை' 'ஒல்லை' என்றும், 'காலக்கழிவுசெய்யேல்' என்றும் த்வரிக்கப்புக்கவாறே, 'நமக்கும் அறிவித்து நாமும் இவர் காரியஞ் செய்யக்கடவதாக அறுதியிட்டால், 'ஶரீர ஸமநந்தரம் பேறு தப்பாது' என்று அறுதியிட்டிருக்கவாயிருக்க, இவர் இப்படி த்வரிக்கிறது இஶ்ஶரீரத்தோடே நாம் அடிமைகொள்ள வேணுமென்றுபோலே இருந்தது; இனி இவர்க்கு நாம் நினைத்தபடி பரிமாறுகைக்கு ஏகாந்தமான தே₃ஶம் ஏதோ?' என்று ஞாலத்தூடே நடந்துழக்கிப் பார்த்து வரச்செய்தே, 'இவ்விடம் சால ஏகாந்த ஸ்த₂லமாயிருந்தது' என்று திருமலையிலே ஸந்நிதி₄ பண்ணியருளி, 'நாம் உமக்கு முகந்தருகைக்காக வந்து நின்றோம்; நீர் இங்கு வந்து நினைத்த வகைகளெல்லாம் பரிமாறி அநுப₄வியும்' என்று தெற்குத் திருமலையிலே நிற்கிற நிலையைக் காட்டிக் கொடுக்க, இவரும் அத்தை அநுஸந்தி₄த்து, 'ப₄க₃வான் ப்ராப்யனானால் அவன் வர்த்திக்கும் தே₃ஶமும் ப்ராப்யமாகக் கடவதிறே; அத்தாலே, திருமலையோடு, அத்தோடு சேர்ந்த அயல்மலையோடு, புறமலையோடு, திருப்பதியோடு, போம்வழியோடு, போகக்கடவோம் என்று துணியும் துணிவோடு வாசியற ப்ராப்யாந்தர்க்க₃தமாய் அநுப₄வித்து இனியராகிறார்" என்று.

85. பகவத் விஷயம் (2-10-4). [கருமவன்பாசம் கழித்துழன்றுய்யவே] "இது நம்மாற்செய்து தலைக்கட்டப்போமோ திருமலையை ஆஶ்ரயிக்குமதொழிய?" என்றிங்ஙனே ஆழ்வான் ஒருருவிலே பணித்தானும். அங்ஙனும் நிர்வஹிக்கக் கடவது. அன்றிக்கே, 'கருமவன் பாசம் கழிக்கைக்காகவும் உழன்றுய்கைக்காகவும்' என்றிங்ஙனே எம்பெருமானர் அருளிச்செய்யும்படி.

86. பகவத் விஷயம் (3-2-1). (இனி வந்து கூடுவனே) 'இனிவந்து கிட்டுகையென்று ஒருபொருளுண்டோவென்று நிராசராகிறார்' என்று முன்புள்ள முதலிகள்; எம்பெருமானார் 'நிராசரானால் பின்னை முடிவாரொருவர்; ஒன்பதாம் பாட்டில் நிராசராக, பத்தாம் பாட்டில் அவன் வந்து ஸமாதா$_4$நம் பண்ணினானாக அமையும்' என்று அருளிச்செய்வர்.

87. பகவத் விஷயம் (3-3-6). ஆளவந்தார் ஐ. நி. 45க்கு மேலே — இத்தை எம்பெருமானார் கேட்டருளி, 'இதுக்கு வேதா$_3$ந்தத்திற் சொல்லுகிற கட்டளையிலே பொருளாக அமையாதோ?' என்று இங்ஙனே அருளிச்செய்வர்—அதாவது "உத்தர பூர்வாக$_4$யோரஶ்லேஷவிநாஶௌ" என்றும், "ஏவம் ஹாஸ்ய ஸர்வே பாப்மாந: ப்ரதூ$_3$யந்தே" என்றும் சொல்லுகிறபடியே.

88. பகவத் விஷயம் (3-4-10) (ஆவிசேர் இத்யாதி$_3$) ஆவியுண்டு — ப்ராணாஶ்ரயமான ஶரீரம்; அத்தோடு சேர்ந்திருந்துள்ள உயிருண்டு ஆத்மா; அதின் பக்கல் அந்த ஶரீரக$_3$தமான பா$_3$ல்யயௌவநாதி$_3$களொன்றாலும் ஒரு ஸம்ப$_3$ந்த$_4$முமில்லையாம்படியாக அநுஸந்தி$_4$க்கிற அநுஸந்தா$_4$னமானது அந்த ஆத்மாவுக்குக் கூடாநின்றபின்பு, அப்பொருள் அவனையுங் கூடத் தட்டில்லை. இங்ஙனன்றிக்கே, 'இதுக்கு வேறேயும் இரண்டு பொருள் சொல்லுவர்கள்' என்று அருளிச்செய்வர் :— அவன் பக்கலிலே ப$_4$க்தியுண்டாகில் அவனைக் கிட்டலாமென்றும், புறம்புண்டான உபாயாந்தரங்களிலுண்டான பற்றடையவிட்டு, அவனையே பற்றில் அவனைக் கிட்டலாமென்றும். அன்றியே, அந்திம ப்ரத்யயம் உண்டாமாகில் அவனைக் கூடலாமென்றுமாம். இத்தை எம்பெருமானார் கேட்டருளி, "கீழ் வ்யாப்தியைச் சொல்லி நின்ற பின்பு, இனி வ்யாப்யவஸ்துக$_3$தமான தோ$_3$ஷங்கள் வ்யாபகனானவனுக்குத் தட்டாதென்னுமிடம் அவஶ்யம் சொல்லவேணும்; ஆனபின்பு இத்தையே சொல்லிற்றாக அமையும்" என்று அருளிச்செய்வர்.

89. பகவத் விஷயம் (3-6-6) (அடிக்கீழ்ப்புகநின்ற செங்கண்மால்) 'ஹிரண்யன் பக்கல் சீற்றமும் செல்லாநிற்க, ஸ்ரீப்ரஹ்லாதா$_3$ழ்வானுக்குக் கிட்டலாயிருந்தபடி எங்ஙனே?' என்று எம்பெருமானாரைச் சிலர் கேட்க. 'ஸிம்ஹம் ஆனைமேலே சீறினாலும் குட்டிக்கு முலையுண்ணலாம்படியிருக்குமிறே' என்று அருளிச்செய்தார். 'ஆஶ்ரித வாத்ஸல்யத்தாலே அவர்கள் விரோதி$_4$கள் மேலே சீறின சீற்றமானால் பின்னை அவர்களுக்கு அணையவொண்ணாதபடியிருக்குமோ?' என்று அருளிச்செய்தார்.

90. பகவத்விஷயம் (8-6-8). எம்பெருமானார் திருவாராதநம் பண்ணிப்போருவது ஒரு பிள்ளையிறே; இங்ஙனேயிருக்கச் செய்தே ஒருநாள் ஒரு ஸ்ரீவைஷ்ணவர் சக்ரவர்த்தித் திருமகனை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வந்து கொடுத்தாராய், அவரைப் பார்த்து "இந்த 'மாமேகம் சரணம் வ்ரஜ' என்று தேவையிடாதார் எழுந்தருளினார்" என்றாராம்.

91. பகவத்விஷயம் (3-7)ப்ரவேசம். "தத்₃ப₄க்தைர் வா ஸமாக₃ம:" என்கிறவிடத்தில் 'வா' என்றத்தை அவத₄ாரணத்திலேயாக்கி, 'உத்₃தே₃ஶ்யந்தானே இங்கே ஸித்₃தி₄க்குங்காண்' என்று எம்பெருமானார் அருளிச்செய்த வார்த்தை.

......(கூ₃ச்ச₂தா)—இதுக்கு எம்பெருமானார் — "பயிலுஞ்சுடரொளி"யிலும் "நெடுமாற்கடிமை"யிலும் சொல்லுகிற அர்த்த₂த்தை ஸ்ரீமத்ருக்₄நாழ்வான் அநுஷ்டி₂த்துக் காட்டினான் என்று அருளிச்செய்வர்.

......எம்பெருமானார் இஸ்லோகத்துக்கு வாக்யார்த்த₂மாக 'ஸ்ரீமத்ருக்₄நாழ்வான் பெருமாளுக்கு நல்லனானபடி — பெருமாளைக் காற்கடைக்கொண்டு, பெருமாளுக்கு நல்லனான ஸ்ரீப₄ரதாழ்வானையல்லது அறியாதபடியானான்' என்று அருளிச்செய்தார்.

92. பகவத்விஷயம் (4-8-3). (ஏலுமாடையுமஃதே) திருவரைக்குத் தகுதியான ஆடையென்னுதல்; புருஷோத்தமத்வத்துக்குத் தகுதியான என்னுதல். ஒருநாள் ஸ்ரீவைஷ்ணவ வண்ணாத்தான் திருப்பரிவட்டங்களை அழகியதாக வாட்டிக் கொண்டுவந்து எம்பெருமானாருக்குக்காட்ட, போர த்ருப்தராய் அவனைப் பெருமாள் திருவடிகளிலே கைப்பிடித்துக்கொண்டுபுக்கு "நாயன்தே! இவன் திருவரைக்கீடாம்படி வாட்டினபடி திருக்கண்சாத்தியருளவேணும்" என்று இவற்றைக் காட்டியருள, கண்டு உகந்தருளி உடையவரை அருள்பாடிட்டருளி "இவனுக்காக ரஜகன் நம் திறத்திற்செய்த குற்றம் பொறுத்தோம்" என்று திருவுள்ளமாயருளினார்.

93. பகவத் விஷயம் (4-7-5) [ஏழையேன் நோக்குவனே] ஆழ்வான் பணித்த வரத₃ராஜஸ்தவத்திலே ஒரு ஸ்லோகத்தைக் கேட்டு எம்பெருமானார் 'இப்பாசுரங் கேட்டால் பெருமாள் இரங்காமையில்லை; ஆழ்வான்! உன் முகத்தைக் காட்டிக் காணாய்' என்று பார்த்தருளினார்.

94. பகவத் விஷயம் (4-8-2). [பணிமானம் பிழையாமே அடியேனைப் பணி கொண்ட]........இங்கே அருளிச் செய்யும் வார்த்தை; எழுந்தருளியிருக்கிற மடத்திலே ஸ்ரீவைஷ்ணவர்கள் அமுதுசெய்யாநிற்க, ஆச்சான் தண்ணீரமுது பரிமாறுகிறவர் ஓரருகே சாய நின்று பரிமாறினார்; அத்தை உடையவர் கண்டு ஓடிவந்து முதுகிலே மோதி, 'நேரே நின்றன்றோவுடோ பரிமாறுவது' என்றார்; என்ன, ஆச்சான் "பணிமானம் பிழையாமே அடியேனைப் பணிகொண்ட" என்று பணித்தான்.

95. பகவத் விஷயம் (5-1-9). ஆளவந்தார் ஐ. நி. 51க்கு மேலே — அத்தை எம்பெருமானார் கேட்டருளி, 'இங்ஙனேயாக வடுக்கும் — "கூராராழி வெண்சங்கேந்தி வாராய்" என்றுயிற்று இவர் ஆசைப்பட்டிருப்பது; ஆசைப்பட்டபடியே திவ்யாயுதங்களோடே வந்து கலந்தானென்கிறார்' என்று அருளிச்செய்தருளும்படி.

96. பகவத் விஷயம் (5-2). ஆளவந்தார் ஐ. நி. 52க்கு மேலே—"நண்ணாதார் முறுவலிப்பவிலே ஸம்ஸாரிகள் படுகிற க்லேசத்தை அநுஸந்தித்து அதுக்குப் பரிஹாரமாக ஒன்றுந்தேவிலே புகவத்பரத்வத்தை உபபாதித்துத்திருத்த, அத்தாலே திருந்தி ஸம்ஸாரபரமபத விபாகமற்று அங்குள்ளாரும் இங்கே வரும்படியிருக்கிற இருப்பைக்கண்டு மங்களாசாஸநம் பண்ணுகிறார்" என்று, இங்குள்ளார் பக்கலிலே ப்ராதந்யம் தோற்ற எம்பெருமானார் அருளிச் செய்யும்படி.

97. பகவத் விஷயம் (5-2-4) ஆளவந்தார் ஐ. நி. 53 காண்க.

98. பகவத் விஷயம் (5 3-6) திருவரங்கப்பெருமாளரையர் ஐ. நி. 12 காண்க.

99. பகவத் விஷயம் (5-10-4) ஆளவந்தார் ஐ. நி. 54க்கு மேலே — இத்தை எம்பெருமானார் கேட்டருளி "அழகிது, ஆகிலும் அத்தனைதூரம் தேடிப்போகவேணுமோ? இவன் தன் விஷயத்திலே முன்பு பண்ணின உபகாரத்துக்கு ஓரளவுண்டோ? இதுதானே அமையாதோ" என்று அருளிச்செய்தார்.

100. பகவத் விஷயம் (5-10-6). ஒருநாள் ஸ்ரீவைஷ்ணவ வண்ணாத்தான் திருப்பரிவட்டங்களை அழகிதாக வாட்டி எம்பெருமானார்க்குக் கொண்டுவந்து காட்ட, போர த்ருப்தராய்

இவனையுங்கூடக் கொண்டு பெருமாள்பாடேபுக்கு 'நாயந்தே! இவன் திருவரைக்கீடாம்படி இவற்றைத் தொட்டபடி பார்த்தருள வேணும்' என்று காட்ட, கண்டு போரவுகந்தருளி எம்பெருமானாரை அருள்பாடிட்டு 'இவனுக்காகக் கம்ஸனுடைய கரங் கொல்லி நம் திறத்திற்பண்ணலின குற்றம் பொறுத்தோம்' என்று திருவுள்ளமானார்.

101. பகவத் விஷயம் (5-10-6). "நின்றவாறுமிருந்தவாறுங் கிடந்தவாறும்" என்று ஆழ்வார் பாடாநிற்க. "இவையெல்லாம் தொட்டிலிலே" என்றருளிச்செய்தார் எம்பெருமானார். தொட்டிற் பழுவைப்பிடித்துக்கொண்டு நிற்கும்படியும், தரித்து நிற்கமாட்டாமை விழுந்து இருக்கும்படியும், அதுதான் பொறுக்கமாட்டாமை சாய்ந்து கிடக்கும்படியும் சொல்லுகிறது.

102. பகவத் விஷயம் (6-1-10) அவதாரிகை. ஆளவந்தார் ஐ. நி. 55க்கு மேலே — 'இத்தலையில்லையாகில் அத்தலையுண்டாகக் கூடாது, பெண்பிறந்தார் காரியமெல்லாம் செய்தோம் என்று க்ருதக்ருத்யராயிருக்கிறவர்க்கு ரக்ஷ்யவர்க்கத்திலே நானுமொருத்தியுண்டென்று சொல்லுங்கோளென்கிறாள்' என்று எம்பெருமானார் அருளிச்செய்வர்.

103. பகவத் விஷயம் (6-1-10) ஆளவந்தார் ஐ. நி. 56க்கு மேலே—இத்தை எம்பெருமானார் கேட்டருளி; "அழகிது; ஆகிலும் இன்றியமையாமை என்று தமிழரதொரு ப்ரவாதமுமுண்டு; அதாகிறது — ஒருதலையுண்டானால் ஒருதலையின்றிக்கேயிராது; இரண்டு தலையுமுண்டாதல், இரண்டுதலையும் இன்றிக்கேயொழிதலித்தனையாயிற்று; அதில் தாமுளராகையாலே இத்தலையுமுண்டென்கை நிஸ்சிதம்; ஆனபின்பு ப்ரதிகூலித்தாரைக் கிழங்கெடுத்துப்போகட்டு அநுகூலித்தார் தலையிலே முடியைவைத்து க்ருதக்ருத்யராய் இனிக் கர்த்தவ்ய ஶேஷமில்லையென்றிருக்கிறவர்க்கு இன்னமும் ரக்ஷ்ய வர்க்கமொன்றுண்டென்று சொல்லுங்கோள்" என்று.

104. பகவத் விஷயம் (6-7) (புகுமூர்) எம்பெருமானார் தெற்கே எழுந்தருளாநிற்க, எதிரே வருகிறாள் ஒரு பெண் பிள்ளையைக் கண்டு 'எங்கு நின்றும்?' என்ன; 'திருக்கோளூரில் நின்றும்' என்ன; 'அவ்வூரில் புக்க பெண்களும் போகக்கடவராயிருப்பர்களோ?' என்றருளிச்செய்தார்.

105. பகவத் விஷயம் (7-2-10) திருமாலையாண்டான் ஐ. நி. 20 காண்க.

106. பகவத் விஷயம் (7-2-10) (24000) (அடி இத்யாதி₃) "ஜீவிப்பாரைப் போலேயிருந்து முடிந்துகொடுநின்ருள்" என்று பூர்வர்கள் நிர்வாஹம். அங்ஙனேயானுல் மேல ப்ரப₃ந்த₄ம் நடவாது என்று, "ஸம்ஶ்லேஷிக்கப் பெருளோ என்று தோற்றும்படி அவஸ்த்தையான இவள் கிட்டி ஸம்ஶ்லேஷிக்கப் பெற்ருள் காளமேக₄நிப₄ ஶ்யாமமான பெரியபெருமாள் திருவடிகளை', என்று எம்பெருமானார் நிர்வஹித்தருளினுர்.

107. பகவத் விஷயம் (7-9-1) ஆளவந்தார் ஐ. நி. 63க்கு மேலே — அங்ஙனன்றிக்கே எம்பெருமானார் "இவர்தாம் சொன்னு ராகிலும் ஒருபடியாகச் சொல்வித் தலைக்கட்டுவர்; அவனும் தானே சொன்னுனுகில் நிரவத்₃யமாகத் தலைக்கட்டும்; சிறு ப்ரஜை எழுத் திடப் புக்கால் தானே ஏதேனும் ஒருபடியிட்டுத் தலைக்கட்டும் பிதாவாதல் உபாத்₄யாயனுதல் இடப்புக்கால் தானே எழுத்தாயி ருக்கும்; அங்ஙனன்றிக்கே இவன் கையைப்பிடித்து இடுவிக்கப் புக்கவாறே இவன் ஓரிடத்தேயிழுக்க அவன் ஓரிடத்தேயிழுக்கக் குதளிக் கொட்டியாய் ரூபமழிந்து சிதறிப்போம்; அப்படியே என்னை உபகரணமாகக் கொண்டு கவிபாடாநிற்கச் செய்தேயும் என்னுல் வரும் தோ₃ஷம் தன்பக்கல் ஸ்பர்ஶியாதபடி பாடுவித் தான் என்கிருர்" என்று.

108. பகவத் விஷயம் (7-9-3) ஆளவந்தார் ஐ. நி. 64 காண்க.

109. பகவத் விஷயம் (7-10-5) பெரிய நம்பி ஐ. நி. 23 காண்க,

110. பகவத் விஷயம் (7-10-11) திருக்கோட்டியூர் நம்பி ஐ. நி. 24 காண்க.

111. பகவத் விஷயம் (8-4-5) (வேள்வியுள் மடுத்த நறும் புகை) யாக₃ங்களிலே ப்ரவ்ருத்தமான ஹவிர்க₃ந்தி₄யான தூ₄மம். அநந்யப்ரயோஜநராகில், இவர்கள் அநுஷ்டா₂நத்துக்கு ப்ரயோஜநமென்? என்னில்; ஸ்வயம் ப்ரயோஜநமாதல், ப₄க₃வத் ப்ரதிபக்ஷங்களை அழியச்செய்யும் அபி₄சாரம் ப₂லமாதல். எம்பெரு மானுரைப் போலேயாயிற்று அவ்வூரில் ப்₃ராஹ்மணரும்.

112. பகவத் விஷயம் (8-7-3) திருமாலையாண்டான் ஐ. நி 21 காண்க.

113. பகவத் விஷயம் (8-9-3) (புகழும் பொருபடையான செழுங்கதிராழிமுதல் ஏந்தி) "'ஶத்ரோ: ப்ரக்₂யாத வீர்யஸ்ய ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை:' என்கிறபடியே 'கையும் ஆயுத₄மு மாய்ப்பொருத்தமிருந்தபடியென்!' என்று ஶத்ருக்கள் புகழும் படியைச் சொல்லுகிறது" என்று எம்பெருமானார் அருளிச்செய்யும்படி.

114. பகவத் விஷயம் (9-4-3) ஆளவந்தார் ஐ. நி. 66-க்கு மேலே — அத்தை எம்பெருமானார் கேட்டருளி "இது பொருள் அழகிது; ஆனால் இப்போது இவர்க்கு ஓடுகிற தசைக்குச் சேராது. ஆனபின்பு பசுக்களும் இடையரும் வர்ஷத்திலே நோவு படாதபடி மலையையெடுத்து மறித்த இம்மஹாகுணத்துக்கு நான் புறம்பாகிறேனோ என்று பேதுறுநின்றேன்" என்று.

115. பகவத் விஷயம் (9—5) (இன்னுயிர்ச்சேவல்) ப்ரவேசம். (அரும்பதவுரை) "இது எம்பெருமானார் உகந்த திருவாய்மொழி" என்று அந்த ப்ரஸங்க₃த்திலே, ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையர் கதையை ப்ரஸாதிப்பர். [விவரணம்:— "எம்பெருமானார் ஸ்ரீரங்கவாஸத்தில் விப்ரதிபத்தியாலே சிலவருடங்கள் திருவெள்ளறையில் எழுந்தருளியிருந்தபோது, நம்பெருமாள் திருவரங்கப் பெருமாளரையரை அனுப்பி, தம் பிரிவாற்றாமை தோற்ற 'இன்னுயிர்ச் சேவல்' திருவாய்மொழியை எம்பெருமானார் திருமுன்பே அபி₄நயிக்கச் செய்து அவரைத் திருவரங்கத்திற்கு அழைத்துவரச் செய்தார் என்னும் செய்தி இங்கு கருதப்படுகிறது.]

116. பகவத் விஷயம் (9-5-10) ஆளவந்தார் ஐ. நி. 67 காண்க. மேலே "நான் பட்டபாடு நாடுபடாதொழிய வேணும்" என்று எம்பெருமானார்.

117. பகவத் விஷயம் (9-6-9) (ஆருயிர்பட்டது எனதுயிர் பட்டது) "இங்கு எனதுயிர்பட்டது அங்கு ஆருயிர்பட்டது" என்று எம்பெருமானார்.

118. பகவத் விஷயம் (9-7-5) (24000) (தெளிவிசும்பு) "பரமபத₃ம் தே₃ஶமாயிருக்க, அத்தைக் காற்கடைக்கொண்டு என் நெஞ்சிலே நித்யவாஸம் பண்ணுகிறவன்" என்று சிற்றாட்கொண்டான் பணிக்கும். "பரமபத₃த்திற் பண்ணும் வ்யாமோஹத்தை என் நெஞ்சிலே பண்ணி வர்த்தியாநின்றான்" என்று எம்பெருமானார்.

119. பகவத் விஷயம் (9-8-1) (குறுக்கும்வகையுண்டு கொலோ) எம்பெருமானார் திருவடி தொழ எழுந்தருளாநிற்க, 'திருநாவாயெத்தனையிடம் போரும்?' என்று எதிரே வருகிறார் சிலரைக்கேட்டருள; "குறுக்கும்" என்றார்களாய், அத்தைக்கேட்டு 'இப்ப₄ாஷையாலே அருளிச்செய்வதே ஆழ்வார்!' என்று போர வித்₃த₄ராயருளினார்.

120. பகவத் விஷயம் (9-9) ப்ரவேசம்.ஆளவந்தார் ஐ.நி.70 காண்க. மேலே — அத்தை எம்பெருமானார் கேட்டருளி "முன்பே ஆற்றாமையாலே தரிப்பு அற்றிருக்கிறவராகையாலே அத்தனை ஆடல் கொடுக்கைக்கு வேண்டும் ஆஶ்ரயம் போராது; ஆன பின்பு அவனைப் பிரிந்து ஒரு ஸந்த்₄யையிற்பட்ட நோவைப் படுகிறார்" என்றருளிச்செய்தார்.

121. பகவத் விஷயம் (9-9-8) (24000) (அதுமணந்தகன்ற) அப்படி ஸம்ஶ்லேஷித்துப் பிரிந்த - வாக்குக்கு அவிஷயமாம்படி யாய்த்துக் கலந்து பிரிந்தபடி. இப்படி அவகா₃ஹித்த இவர் பாசுரமின்றிக்கே பாடாநிற்க, தூ₃ரஸ்த₂ரான நாம் இதுக்கு என்ன பாசுரமிட்டுச் சொல்லுவது?. "மோருள்ளதனையும் சோறேயோ?" என்று எம்பெருமானார் அருளிச்செய்வர். [விவரணம் — "மோருள்ளதனையும் சோறேயோ" என்னும் வாக்யத்தில் பொதிந்துள்ள கதை 4-6 பிரவேசத்தில் அரும்பதவுரையில் விவரிக்கப்பட்டுள்ளது. அதாவது:- ஒருவன் நாழி அரிசியைக் கொண்டுவந்து ஒரு பெண்டாட்டி (பெண்பிள்ளை) கையிலே "எனக்கு இத்தைச் சமைத்து இடவேணும்" என்று கொடுக்க, அப்படியே அவளும் சமைத்து இலையைப்படுத்து இட, இவனும் அருகே ஒரு பாத்ரத்திலே மோரைக் கொண்டு வந்து வைத்திருந்து மோரை வார்த்துக்கொண்டு "அம்மையாரே! மோர் விஞ்சிற்று, சோறிடும்" என்று ஒருகால் இருகால் இங்ஙனே சொல்லுகை யாலே, அம்மையார் அலுத்து, "நீ கொண்டுவந்த மோர் தொலை யாததாயிருந்தது; மோருள்ளதனையும் சோறிடுவேனோ?" என்றாளாம்.]

122. பகவத் விஷயம் (10.2-1) (அரும்பதவுரை) "மறந்தும் புறந்தொழா மாந்தர்" என்றவிடத்திலே "பெருமாள் ஒருநாள் கிழக்கே புறப்பட்டவளவிலே மழைவர, கீழையூரில் ஆலயத்திலே எழுந்தருளவும், எம்பெருமானாரும் முதலிகளும் புறம்பே மழையிலே நனைந்து கொண்டிருக்கிறவளவிலே, ஒருவன் வந்து,

'பெருமாள் உள்ளே எழுந்தருளினுரே; தேவரீரும் உள்ளே எழுந்தருளவொண்ணுதோ?' என்ன, 'கெடுவாய்! மஹாராஜர் வேஶ்யாக₃மநம் பண்ணினுல், தத₃ஸாத₄ாரணமஹிஷியும் பரபுருஷக₃ாமிநியாகலாமோ?' என்று எம்பெருமானுர் அருளிச்செய்தார்'' என்ற ஐதிஹ்யம் அருளிச்செய்வர். [விவரணம்:—கீழையூரில் ஆலயம்—ஆனேக்காவில் சிவாலயம்]

123. பகவத் விஷயம் (10-4-1) ஆளவந்தார் ஐ. நி. 78 காண்க.

124. பகவத் விஷயும் (10-6-1) (அது நமது விதிவகையே) 'அது நம்முடைய ப₄ாக்₃யாநுகு₃ணமாகவிறே' என்று இதுக்குப் பூர்வர்கள் நிர்வஹிக்குப்படி. இத்தை எம்பெருமானுர் கேட்டருளி ''இத்திருவாய்மொழியில் மேலோடுகிற ரஸத்தோடு சேராது. நாம் விதி₄த்தபடியே செய்வானுயிருந்தானென்கிருர்'' என்றருளிச் செய்வர்.

125. பகவத் விஷயம் (10-6-1) எம்பெருமானுர் பட்டர் கையிலே புஸ்தகத்தைக் கொடுத்துத் திருமுன்பே ஒரு ஶ்லோகத்தை விண்ணப்பம் செய்வித்துத் திருப்பிரம்புக்குப் புறம்பாகக் கொண்டு புறப்பட்டுச் சுற்றும் பார்த்தருளி ''நம்முடையாரடங்கலும் நம்மை நினைத்திருக்குமாபோலே இவனை நினைத்திருங்கோள்'' என்றருளிச்செய்தார்.

126. பகவத்விஷயம் (10-7-1) (ஆட்செய்மின்) ''ஆழங்காவிலேயிழிந்து அமிழ்வார் அவ்விடத்தே கொண்டைக்கோல் நாட்டுமாபோலே கொண்டைக்கோல் நாட்டுகிருர்'' என்று சிற்ருட்கொண்டான். உடையவர் 'இன்னுருயிரென்னுமையாலே அவனுயிரைக் காத்தாட்செய்யுங்கோள்' என்றருளிச்செய்வர்.

127. பகவத் விஷயம் (10-8-3) (மடித்தேனித்யாதி₃) எம்பெருமானுர் உலாவியருளுகிறவர் முடியப்போகாதே நடுவே மீண்டருள, எம்பார் கதவை ஒருச்சரித்து 'திருமாலிருஞ்சோலையாகாதே திருவுள்ளத்திலோடுகிறது' என்ன, 'ஆம், அப்படியே' என்றருளிச்செய்தார்.

128. பகவத் விஷயம் (4-4-10) (வல்வினையேனே) இவளை இப்படி காணும்படி மஹாபாபத்தைப் பண்ணினேன். ஆழ்வான் திருநயனங்கள் நோவுபட்ட பின்பு எம்பெருமானுர் திருவுள்ளம் நோவுபட்டாற்போலே காணும் திருத்தாயார் திருவுள்ளமும் படுகிறது.

129. பகவத் விஷயம் (5-2-6) (24000) (சென்று இத்யாதி₃) "சென்று அவர்களைத் தொழுது உஜ்ஜீவியுங்கோள்" என்று பணிக்கும் திருமாலையாண்டான். "அவர்களோடே சென்று ஸர்வேஶ்வரனைத் தொழுது உஜ்ஜீவியுங்கோள்" என்று அருளிச் செய்வர் எம்பெருமானார்.

130. ஸ்ரீவசநபூஷணம் வ்யா: 96. "க்ஷமா ஸத்யம் த₃மஶ் ஶம:" என்கிறவிடத்தில் "த₃மோ பா₃ஹ்யகரணநாம் அநர்த்த₂ விஷயேப்₄யோ நியமநம்; ஶம: அந்த:கரணஸ்ய தத₂ா நியமநம்" என்றிறே பா₄ஷ்யகாரருமருளிச்செய்தது.

131. ஷை 146 ஸர்வாபராத₄ங்களுக்கும் ப்ராயச்சித்தமாயிறே ப்ர பத்திதானிருப்பது. இப்படியிருந்துள்ள ப்ரபத்தியை "த்வத்பாதா₃ர விந்த₃யுக₃ளம் ஶரணமஹம் ப்ரபத்₃யே" என்று பண்ணியருளின பா₄ஷ்யகாரர்க்கு ஸ்வபூர்வவ்ருத்தத்தை அநுஸந்தி₄த்தவாறே அதுதானும் அபராத₄ கோடியிலேயாய் "த்வமேவ மாதா ச" என்று தொடங்கி இத்தலையிலபராத₄த்தைப் பொறுக்கைக்குறுப்பான ப₃ந்த₄ விஶேஷங்களையெல்லாம் விண்ணப்பம் செய்துகொண்டு "தஸ்மாத் ப்ரணம்ய" இத்யாதி₃யாலே இப்படி திருமுன்பே கூசாமல் வந்து நின்று ப்ரபத்தி பண்ணின இவ்வபராத₄த்தைப் பொறுத்தருளவேணுமென்று க்ஷாமணம் பண்ண வேண்டும்படி நில்லாநின்றதிறே யென்கை.

132. ஷை 160 பா₄ஷ்யகாரர் க₃த்₃யத்தில் உத்தர க₂ண்டா₃ர்த் த₂ம் அநுஸந்தி₄த்தருளின க்ரமத்திலே...

133, ஷை 180 உத்தரவாக்யத்தில் நமஸ்ஸிலே புருஷார்த்த₂த் துக்கு இடைச்சுவரான விரோதி₄களெல்லாம் தள்ளுண்ணுமென்னு மிடம் தோற்றவிறே "மநோவாக்காயை:" என்று தொடங்கி மூன்று சூர்ணையாலே ஸகல விரோதி₄ நிவ்ருத்தியையும் பா₄ஷ்யகாரரருளிச் செய்தது.

134. ஷை 234 சூர்ணை-மாறனேரிநம்பி விஷயமாகப் பெரியநம்பி உடையவர்க்கருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது (விவரணம்:- பெரியநம்பி ஐ. நி. 24 காண்க.)

135. ஷை 255 சூர்ணை- "அல்லாதவர்களைப் போலே கேட்கிற வர்களுடையவும் சொல்லுகிறவர்களுடையவும் தனிமையைத் தவிர்க்கையன்றிக்கே "ஆளுமாளார்" என்கிறவனுடைய தனிமை யைத் தவிர்க்கைக்காகவாயிற்று பா₄ஷ்யகாரரும் இவரும் உபதே சிப்பது" வ்யா:- அதாவது—பரோபதே₃ஶத்தில் வந்தால், மற்றுள்ள

ஆழ்வார்களையும் ஆசார்யர்களையும் போலே உபதேசிக்கிற அர்த்தமும் கேட்கிற ஸம்ஸாரிகளுடைய அநர்த்தயஜ்ஞாநத்தாலே நற்றுணையான பகவத்விஷயத்தை அகன்று திரிகையால் வந்த தனிமையையும், வக்தாக்களான தங்களுடைய பகவதநுஸந்தாந தசையிலே "போதயந்த: பரஸ்பரம்" பண்ணுகைக்கு உசாத்துணையில்லாமையால் வந்த தனிமையையும் தவிர்க்கை ப்ரயோஜநமாக உபதேசிக்கையன்றிக்கே, ஸௌகுமார்யாநுஸந்தாநத்தாலே வயிறுமறுகின ஆழ்வார் ஆராய்ந்து பார்த்த விடத்தில், அடைய அந்யபரராய்த் தோற்றுகையாலே, 'உபய விபூதியிலும், பரிகைக்காளில்லை, தம் வாசியறிந்து பரிந்து நோக்குகைக்கும் ஓராளுமாளுகிறிலரே' என்று பேசும்படியிருக்கிற நிரதிசய ஸௌகுமார்யயுக்தனான ஸர்வேஶ்வரனுடைய தனிமை தீர மங்களாஶாஸநத்துக்கு இவர்கள் ஆளாகவேணுமென்னு மிதுவே ப்ரயோஜநமாகவாய்த்து, ப்ராமாணிகரான ஆசார்யர்களில் பாஷ்யகாரரும், மயர்வற மதிநலம் பெற்றவர்களில் இவ்வாழ்வாரும் உபதேசித்தருளுவது என்கை. ஆகையால், இவ்வாழ்வார் ப்ரதிகூலரை அநுகூலராக்க உபதேசிக்குமிடமெல்லாம் மங்களாஶாஸநார்த்தமாகவென்னக் குறையில்லையென்று கருத்து. எம்பெருமானாரென்னாதே, பாஷ்யகாரரென்றது — ஸ்ரீபாஷ்ய முகத்தாலே வேதாந்த தாத்பர்ய நிர்ணயம் பண்ணியருளினவ ரென்னும் வைபவந் தோற்றுகைக்காக.

186. ஷை 274 பாஷ்யகாரர்க்குக் காலக்ஷேப ப்ரகாரமருளிச் செய்கிறவிடத்தில் "ஹ்ருதயம் அர்த்தாநுஸந்தாநேந ஸஹ ஸதா ஏவம் வக்தா" என்றிறே பெரியபெருமாள் அருளிச்செய்தது.

187. ஷை 885 சூர்ணை:- பாஷ்யகாரர்காலத்திலே ஒருநாள் பெருமாள் புறப்பட்டருளுந்தனையும் பார்த்துப் பெரிய திருமண்டபத்துக்குக்கீழாக முதலிகளெல்லாரும் திரளவிருந்தவளவிலே இவ் வர்த்தம் ப்ரஸ்துதமாக, பின்பு பிறந்த வார்த்தைகளை ஸ்மரிப்பது" வ்யா:— அதாவது — ஸகல வேதாந்த தாத்பர்யார்த்தங்களெல்லாம் ஸம்ஶய விபர்யயமற நடந்து செல்லாநிற்கிற நல்லடிக்காலமான பாஷ்யகாரர் காலத்திலே, ஒருநாள் பெருமாள் புறப்பட்டருளுந்தனையும் பார்த்துப் பெரியதிருமண்டபத்துக்குக் கீழாக ஜ்ஞாநாதிகரான முதலிகளெல்லாரும் திரளவிருந்தவளவிலே, ஒரு ஸ்ரீவைஷ்ணவர் "இது நெடுங்காலம் ஆர்வாசலிலே அவர்கள் புறப்பாடு பார்த் திருந்தோமோவென்று தெரியாது, இன்று வகுத்த ஶேஷியான

பெருமாள் புறப்பாடு பார்த்து வந்திருக்க என்ன ஸுக்ருதம் பண்ணினேன்!” என்ன; தத்ப்ரஸங்க3த்திலே “நித்ய ஸம்ஸாரியாய்ப் போந்தவனுக்கு ப4க3வத்3 விஷயத்தில் ருசி பிறக்கைக்கு அடியென்” என்று விசாரிக்கச்செய்தே, ‘யாத்3ருச்சி2க ஸுக்ருதம்’ என்ன, ‘அஜ்ஞாத ஸுக்ருதம்’ என்னப் பிறந்ததாய், அவ்வளவிலே கிடாம்பிப் பெருமாளிருந்தவர் “நமக்கு ப4க3வத்3 விஷயம் போலே ஸுக்ருத தே3வரென்றுமொருவருண்டோ ஆம்ப்ரயணீயர்?” என்ன; பிள்ளை திருநறையூரரையர், “ஸுக்ருதமென்று சொல்லுகிறதும் நீ நினைக்கிற விஷயந்தன்னையேகாண்” என்றருளிச்செய்ய, ஆக இப்படி பின்பு பிறந்த வார்த்தைகளை இவ்விடத்திலே நினைப்பதென்றபடி. இக்கதைதான் “தருதுயரந்தடாயேல்” என்கிற பாட்டின் வ்யாக்2யானத்திலே ஸங்க்3ரஹேண பூர்வர்கள் அருளிச்செய்துவைத்தார்களிறே. இத்தால் அஜ்ஞாத ஸுக்ருதமுண்டாய்த்தாகிலும் அது ப2லஹேது வன்று, அத்தை வ்யாஜமாக்கி அங்கீகரிக்குமீஶ்வரனே ப2லஹேது என்றதாய்த்து.

138. (தத்வத்ரய வ்யா 8.) “அஶேஷ சித3சித்3வஸ்து ஶேஷிணே” [வேதா3ர்த்த2ஸங்க்3ரஹமங்க3ளம்] என்று ப4ாஷ்யகாரரும்...

139. ஷ 10. இது தன்னை ப4ாஷ்யத்திலே “ஏவம் ஹி ஸுப்தோத்தி2தஸ்ய பராமர்ஶ:...அதத்3ருபத்வாத் ப்ரதிபத்தே:” என்று ப4ாஷ்யகாரரருளிச்செய்தார்

140. ஷ 15. இதுதான் “கு3ணாத்3வாSSலோகவத்” என்கிற ஸூத்ரார்த்த2ம். “வாஶப்3தோ3 மதாந்தரவ்யாவ்ருத்த்யர்த்த2:... ப்ரத2மஸூத்ரே ஸ்த2ாபிதம்” என்றிறே இதுக்கு ப4ாஷ்யம்.

141. ஷ18. “சே2த3நாதி3யோக்3யாநி க4டபடாதீ3நி வஸ்தூநி...இதி அவ்யக்த:” என்றிறே ப4ாஷ்யகாரருமருளிச் செய்தது.

142. ஷ34. இதெல்லாம் “கர்த்தா ஶாஸ்த்ரார்த்த2வத்த்வாத்” என்கிற ஸூத்ரத்திலே பூர்வபக்ஷஸித்3த4ாந்த ரூபேண ப4ாஷ்யகாரர் தாமே விஸ்தரேண அருளிச்செய்தார்.

143. ஷ 35. “க்ருதப்ரயத்நாபேக்ஷஸ் து” என்கிற ஸூத்ரத்திலே இதெல்லாம் ப4ாஷ்யகாரர் தாமே அருளிச்செய்தார்.

144. ஷ 37. “ஜ்ஞாநமாத்ரவ்யபதே3ஶஸ்து...உபபத்3யதே” என்றிறே தீ3பத்திலே ப4ாஷ்யகாரருமருளிச்செய்தது.

145. ஷ 40, "பரக3தாதிஶயாதா4நேச்ச2யா உபாதே3யத்வ மேவ யஸ்ய ஸ்வரூபம் ஸ ஶேஷ: பரஶ்ஶேஷீ" என்று ஶேஷ ஶேஷி லக்ஷணம் பா4ஷ்யகாரராலே அருளிச்செய்யப்பட்டது

146. ஷ 41. "அயமேவாத்மஶரீரபா4வ:..." என்றும், 'யஸ்ய சேதநஸ்ய யத்3த்3ரவ்யம்...' என்றும் வேதா3ர்த்த2 ஸங்க்3ரஹத்திலும் ஸ்ரீபா4ஷ்யத்திலும் ஆத்ம ஶரீரபா4வலக்ஷணமாக பா4ஷ்யகாரரருளிச்செய்த நியந்த்ரு நியாம்யபா4வம் ஆதா4ராதே4யபா4வம் ஶேஷஶேஷிபா4வமாகிற மூன்றும்...

147. ஷ 45. பா4ஷ்யகாரரும் இவர்களுடைய வைப4வத்தை "ஸ்வச்ச2ந்தா3நுவர்த்தி" இத்யாதி3யாலே ஸ்ரீக3த்3யத்திலே பரக்க அருளிச்செய்தார்.

148. ஷ 79. இதுதன்னை பா4ஷ்யகாரர் ஸ்ரீவைகுண்ட2க3த்3யத்திலே "தி3வ்யாவரணஶதஸஹஸ்ராவ்ருதே..." என்று தொடங்கி விஸ்தரேண அருளிச்செய்தாரிறே.

149. ஷ 79. (அங்கேயே மேல்) "தேஷாமபி இயத்பரிமாணம் இயதை3ஶ்வர்யம் ஈத்3ருஶஸ்வபா4வமிதி பரிச்சே2த்துமயோக்3யே" என்று நித்யரால் பரிச்சே2தி3க்கவொண்ணாதென்று ஸ்ரீவைகுண்ட2 க3த்3யத்திலே பா4ஷ்யகாரர் அருளிச்செய்த இது...

150 ஷ 79. (அங்கேயே, மேல்) "அநந்தாஶ்சர்யாநந்தமஹா விப4வ" என்றாரிறே பா4ஷ்யகாரர்.

151. ஷ85. "ப4க3வத்ஸ்வரூப திரோதா4நகரீம் விபரீதஜ்ஞாந ஜநநீம்" என்று இதுதன்னை பா4ஷ்யகாரர் அருளிச்செய்தாரிறே.

152. ஷ92. "ஸத்வரஜஸ்தமாம்ஸி த்ரயோ கு3ணா:..." என்றிறே பா4ஷ்யகாரரும்......

153. ஷ 117. இப்படி ஸ்ரீபா4ஷ்யத்திலே "யத3க்3நே ரோஹிதம் ரூபம்..." என்று பா4ஷ்யகாரருமருளிச்செய்தது.

154. ஷ 129. "ந ச ப்ருதி2வ்யாத்3யபா4வமாத்ரம் ஆகாஶ இதி வக்தும் ஶக்யம்" என்றிறே பா4ஷ்யகாரரருளிச்செய்தது.

155. ஷ 130. இதுதன்னை "ஆகாஶே சாவிஶேஷாத்" என்கிற ஸூத்ரத்திலே "ஆகாஶே ச நிருபாக்2யதா ந யுக்தா... ஶ்யேநாதி4பதநதே3ஶத்வேந" என்று தொடங்கி பா4ஷ்யகாரர் விஸ்தரேண அருளிச்செய்தார்.

156. ஷ132. இதுதன்னை "அண்டா3ந்தர்வர்த்திநஶ்ச ஆகாஶஸ்ய..." என்று பா4ஷ்யகாரருமருளிச்செய்தார்.

157. ஷெ 141. "அகி₂ல ஹேய ப்ரத்யநீக......ஸ்வரூப!" என்றிறே எம்பெருமானுர் அருளிச்செய்தது.

158. ஷெ (அங்கேயே, மேலே) ஆதி₃ஶப்₃த₃த்தாலே கு₃ண சூர்ணையில் எம்பெருமானுர் அருளிச்செய்த கு₃ணங்களை யெல்லாம் சொல்லுகிறது.

159. ஷெ (அங்கேயே, மேலே) "ஆர்த்த:— ப்ரதிஷ்டா₂ ஹீந: ப்₄ரஷ்டைஶ்வர்ய: புநஸ் தத் ப்ராப்திகாம:......" என்று சதுர்வித₄ாதி₄காரி வேஷத்தையும் ஸ்ரீகீ₃தாப₄ாஷ்யத்திலே அருளிச் செய்தாரிறே.

160. ஷெ (அங்கேயே, மேலே) "ஸ்வாபி₄மதாநுரூபைக ரூபாசிந்த்ய......" என்று தி₃வ்ய மங்க₃ள விக்₃ரஹ வைலக்ஷண் யத்தை அருளிச்செய்தாரிறே எம்பெருமானுர்.

161. ஷெ (அங்கேயே, மேலே) "ஸ்வாபி₄மத நித்ய நிரவ த்₃யாநுரூப......பூ₄மி நீளாநாயக!" என்றிறே எம்பெருமானுர் அருளிச்செய்தது.

162. ஷெ 195. "ஸாத₄வ:— உக்த லக்ஷணத₄ர்மஶீலா வைஷ்ணவாக்₃ரேஸரா:........" என்றிறே இந்த ஶ்லோகத்துக்கு அர்த்த₂ம் ப₄ாஷ்யகாரர் அருளிச்செய்தது.

163. (முமுக்ஷுப்படி வ்யா ) 97. தி₃வ்யபூ₄ஷணங்களாவன — ஆப₄ரண சூர்ணையிலே ப₄ாஷ்யகாரர் அருளிச்செய்தபடியே... கிரீடாதி₃நூபுராந்தமாக அத்திருமேனிக்குச் சாத்தும் அஸங்க்₂யே யமான திருவாப₄ரணங்கள்.

164. ஷெ 180. ஆகையிறே, த்₃வயவிவரணமான க₃த்₃ யத்திலே நமஸ் ஶப்₃த₃ார்த்த₂த்தை அநுஸந்தி₄த்தருளுகிறவளவில் "மநோவாக்காயை:" இத்யாதி₃ சூர்ணையாலே, அக்ருத்ய கரணுத்₃யகி₂ல கர்மநிவ்ருத்தியையும், "அநாதி₃காலப்ர வ்ருத்த" இத்யாதி₃ சூர்ணையாலே, அவித்₃யா நிவ்ருத்தியையும் "மதீ₃யாநாதி₃" இத்யாதி₃ சூர்ணையாலே, ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄ நிவ்ருத்தியையும் ப₄ாஷ்யகாரர் ப்ரார்த்தி₂த்தருளிற்று.

165. ஷெ (சரமச்லோ. அவதாரிகை.) இதிலர்த்த₂ம் கேட்கைக் காகவிறே எம்பெருமானுர் பதினெட்டு பர்யாயம் திருக்கோட்டியூர் நம்பி பக்கல் எழுந்தருளிற்று.

166. ஷ (அங்கேயே மேலே) — அதி₄காரி து₃ர்லப₄த்வத்தாலும் அர்த்த₂ கௌரவத்தாலும் இத்தை வெளியிடாதே மறைத்துக்கொண்டு போந்தார்கள் எம்பெருமானுர்க்கு முன்புள்ளார்; ஸம்ஸாரிகள் து₃ர்க்க₃தி கண்டு பொறுக்கமாட்டாதபடி க்ருபை கரைபுரண்டிருக்கையாலே அர்த்த₂த்தின் சீர்மை பாராதே அநர்த்த₂த்தையே பார்த்து வெளியிட்டருளினுர் எம்பெருமானுர்.

167. ஷ 237. ஆர்த்த₂மாக வருமதிற்காட்டில் ஶாப்₃த₃மாகச் சொல்லுமது யுக்தமாகையாலே, "ஆக்ஷேபத: ப்ராப்தாத் ஆபி₄தா₄நிகஸ்யைவ க்₃ராஹ்யத்வாத்" என்றிறே பா₄ஷ்யகாரரும் அருளிச்செய்தது.

168. ஷ 263. ௧ வ்யா:— உய்யக்கொண்டார் விஷயமாக உடையவர் அருளிச்செய்த வார்த்தையை ஸ்மரிப்பது. [வ்யா:— அதாவது— தத்வநிர்ணயம் பண்ணின உய்யக்கொண்டார் ப₄க்திநிஷ்ட₂ராயிருக்கையாலே, அவரை ப்ரபத்திநிஷ்ட₂ராம்படி பண்ணவேணுமென்று, அவருக்கு இந்த ஶ்லோகார்த்த₂த்தை அருளிச்செய்த அளவிலே, 'அர்த்த₂ஸ்தி₂தி அழகிதாயிருந்தது; ஆகிலும், அத்தைவிட்டு இத்தைப் பற்றத்தக்க ருசி எனக்கு இல்லை' என்ன, 'வித்₃வானுகையாலே அர்த்த₂த்துக்கு இசைந்தாய்; ப₄க₃வத் ப்ரஸாத₃ம் இல்லாமையாலே ருசி பிறந்ததில்லை" என்று அவர் விஷயமாக உடையவர் அருளிச்செய்த வார்த்தையை நினைப்பது — என்கை.]

169. (ஆசார்யஹ்ரு ௧ வ்யா) 36. விப்ரர்க்கு கோ₃த்ர சரணஸூத்ரகூடஸ்த்த₂ர் பராஶர பாராஶர்ய போ₃தா₄யநாதி₃கள். ப்ரபந்ந ஜநகூடஸ்த்த₂ர் பராங்குஶ பரகால யதிவராதி₃கள். [வ்யா:- "அடியார், தொண்டர்" என்கிற ப்ரபந்நஜனங்களுக்குக் கூடஸ்த்த₂ர், "பத்யு: ஶ்ரிய: ப்ரஸாதே₃ந ப்ராப்தஸார்வஜ்ஞ ஸம்பத₃ம்| ப்ரபந்நஜநகூடஸ்த்த₂ம் ப்ரபத்₃யே ஸ்ரீபராங்குஶம்||" என்கிற நம்மாழ்வார் திருமங்கையாழ்வார் தொடக்கமான ஆழ்வார்களும் எம்பெருமானுர் முதலான ஆசார்யர்களுமென்கை. கூடஸ்த்த₂ராகிருர்-மூலபூ₄தரிறே. உபதே₃ஶாநுஷ்ட்டா₂நங்களாலே ப்ரபத்திமார்க்க₃த்தைத் தலைப்பெறுத்தி வளர்த்தவர்களாகையாலே இவர்களை ப்ரபந்நஜநகூடஸ்த்த₂ர்களென்கிறது.]

170. ஷ 65. பா₄ஷ்யகாரர் இதுகொண்டு ஸூத்ர வாக்யங்களொருங்கவிடுவர். [வ்யா:- அதாவது—பா₄ஷ்யகாரர் ஸ்ரீபா₄ஷ்யம்

பண்ணியருளும்போது ஸூத்ரவாக்யங்களில் ஸந்திக்3தங்4களான அர்த்2ங்களெல்லாம் இப்ரப3ந்த4த்தில் ஸூக்திகளைக்கொண்டு நிர்ணயித்து ஒருங்கவிட்டருளுவரென்கை.]

171. ஷை 66 வ்யா:- பா4ஷ்யகாரர் அப்படி செய்தருளு கைக்கடி "வித்4யஸ் ச வைதி3காஸ் த்வதீ3யக3ம்பீ4ரமநோநு ஸாரிண:" என்று...... இவ்வாழ்வார் போல்வார் நினைவை பாஸ்த்ரங்கள் தான் பின்செல்லுமதாகப் பரமாசார்யரான ஆளவந்தார் அருளிச்செய்த வசனம்.

172. ஷை 85 வ்யா:— த்யாக3மண்டபமான பெருமாள் கோயிலில் திருவாலவட்டமும் கையுமாய்ப் பெருமாளுக்கு அந்த ரங்க3ராய் நின்ற திருக்கச்சிநம்பியை வைதி3கோத்தமரான உடையவர் அநுவர்த்தித்த க்ரமமும், (அங்கேயே, மேலே) யாக3 ஶப்33வாச்யமான திருவாராத4னத்தில் பிள்ளையுறங்காவில்லி தாஸர் ஸ்பர்ஶத்தாலே காயஶுத்தி4 பண்ணின உடையவரும்.

173. ஷை 91. ஈ வ்யா:— கலியும் கெடும்போலே ஸூசிதம். [வ்யா:- இவர்தாம் மயர்வற மதிநலம் பெற்றவராகையாலே "கலியுங் கெடும்" என்று திருமங்கையாழ்வார் உடையவர் போல்வார் அவதரித்து கலியுக3 ஸ்வபா4வமும் கழியுமென்று மேல் வரும் அம்ஶத்தை த3ர்ஶித்தருளிச்செய்தாற்போலே.]

174. ஷை 99. "அப4யம் ஸத்வஸம்ஶுத்3தி4:" என்றும், "ஸத்வாநுரூபா ஸர்வஸ்ய ஶ்ரத்3தா4 ப4வதி" என்றும் சொல்லுகிறவிடங்களில் "ஸத்வம் அந்த:கரணம்" என்று ஸத்வ ஶப்33ம் அந்த:கரணவாசியாக பா4ஷ்யகாரர் அருளிச்செய்தாரிறே.

175. ஷை 153. ஈ வ்யா:— உடையவருடையார் போல்வாரைக் கிளி பூவை குயில் மயிலென்னும். [வ்யா:- இராமானுசனுடையாரென்றே நிருபகமாம்படி உடையவர்க்குப் பரதந்த்ரரான ஆழ்வான் ஆண்டான் எம்பார் அருளாளப்பெருமாளெம்பெருமானார் முதலானவர்கள் போல்வாரைக் கிளியென்றும் பூவையென்றும் குயிலென்றும் மயிலென்றும் சொல்லும்.]

176. ஷை 155. குணந்திகழ் கொண்டல் போல்வாரை மேகமென்னும். [வ்யா:- 'குணந்திகழ் கொண்டல்" என்று கு3ணோஜ்ஜ்வலமான் மேக4மாகச் சொல்லப்பட்ட எம்பெருமானார் போல்வாரை இந்த கு3ணஸாம்யத்தையிட்டு மேக4மென்று சொல்லுமென்றபடி.]

177 ஷை 162. வைஷ்ணவ வாமநத்தில் நிறைந்த நீல மேனியின் ருசிஜநகவிப4வ லாவண்யம் பூர்ணர். [வ்யா:- திருக்குறுங்குடியிலென்னுதே வைஷ்ணவவாமநத்தில் என்றது ஸாபி4ப்ராயம். அதாவது:-வாமநாவதாரத்தில் தன்னுடைமை பெறுகைக்குத் தான் அர்த்தி2யானாற்போலே அர்த்தி2யாய்நின்று, பா4ஷ்யகாரர் பக்கலிலே வேதா3ந்தார்த்த2ம் கேட்டு சிஷ்யனாய் 'நாமும் நம்மிராமாநுசனை யுடையோம்' என்கையாலே ஸ்ரீவைஷ்ணவநம்பி என்று திருநாமமாய் வாமநாவதாராம்ஸமாகப் புராண ஸித்3த4ரா யிருக்கிற நம்பியுடைய திருப்பதியென்கை.]

178. ஷை 204. தாய்க்கும் மகனுக்கும் தம்பிக்கும் இவர்க்கும் இவரடிபணிந்தவர்க்குமே இவையுள்ளது. [வ்யா:— இப்படி அதி4காரம் பாராமல் அவர்கள் து3ர்க்க3தியைப் பார்த்து உபதேசித்தருளும் ஸ்வபா4வராய் "பாமன்னுமாறனடிபணிந் துய்ந்தவன்" என்று நிருபகமாயிருக்கும் எம்பெருமானார்க்குமே இவ்வாகாரங்கள் உள்ளதென்கை.]

179. ஷை 224 வ்யா:—புராணவித்தமராகையாலே பௌராணிகரான பா4ஷ்யகாரர் க3த்3யத்திலே இவ்வசந ப்ரக்ரியையாலே த்யாஜ்யங்களினுடைய த்யாக3பூர்வகமான ஸரணவரணத்தைப் பண்ணுகையாலும் (புராண பௌராணிகர் த்யாஜ்யாம்ஸமாக்கின) என்கிறது.

180. ஷை 228. இது வீடுமின் முற்றத்தையும் ப4க்தி பரமாக்கி யோஜித்தருளின எம்பெருமானார் நிர்வாஹக் கட்டளையைப் பிடித்தருளிச்செய்தார்...... இது எம்பெருமானார் யோஜநையாய், பின்புள்ளாரெல்லாருமருளிச்செய்துகொண்டு போந்த மர்யாதை3யைப் பற்ற...... அருளிச்செய்தார்.

181. ஷை 223. "பரப4க்திபரஜ்ஞாந பரமப4க்த்யேக ஸ்வபா4வம் மாம் குருஷ்வ" என்று ப்ரார்த்தி2த்த பா4ஷ்யகாரரைக் குறித்து "மத் ஜ்ஞாநத3ர்ஸந ப்ராப்திஷு நிஸ்ஸம்ஸயஸ் ஸுக2மாஸ்ஸ்வ" என்று சேரபாண்டியனிலும் அவனருளிச்செய்த ஜ்ஞாந த3ர்ஸந ப்ராப்த்யவஸ்தை2கள்.

182. ஸ்ரிய:பதிப்படி த்3வயப்ரகரணம்: பா4ஷ்யகாரர் சரம ஸமயத்திலே, 'த்3வயத்தை எப்போதும் அனுஸந்தி4க்கை எனக்குப்ரியம்' என்று அருளிச்செய்தவார்த்தை,

183. தனித்வயம்: எம்பெருமானாருக்கு இங்ஙனேயிருப்பதொரு நிர்ப்பந்தமுமுண்டு. எங்ஙனே? என்னில்: கண்ணழிவற்றான் ஒரு வைஷ்ணவனைக் கண்டால் அவனுக்கு ப்ரீதிக்குப் போக்கு விடாக ஓருரு த்வயத்தை அருளிச்செய்வர். பிறருடைய துர்க்கதியைக் கண்டால் திருவுள்ளத்தால் இரங்கி அருளிச் செய்வதும் த்வயத்தை. பெரியகோயில் நாராயணன் மகனை ஏகாயநரோடே கூடி யிருக்கக் கண்டார். அவனைக் கையைப் பிடித்துக் கொண்டு பெருமாள் திருவடிகளிலே புக்கு, "பாலனுகையாலே உனக்கொரு ப்ரமாணங்களால் ஸ்தாபிக்கப் போகாது. நான் ஸகல வேத ஶாஸ்த்ரங்களையும் ஆராய்ந்து பார்த்த இடத்தில் இவ்வாத்மா வுக்குத் தஞ்சம் த்வயத்துக்கவ்வருகு கண்டிலேன். நீயும் அத்தை விஶ்வஸித்திரு" என்று ஸ்ரீஶடகோபனை எடுத்துச் சூழறுத்துக் கொடுத்தார். அவரும் அன்று தொடங்கி த்வய நிஷ்டராய்ப் போனார்.

184. ஷ. எம்பெருமானார் வெள்ளைசாத்திப் போசலராஜ்யத் தேற எழுந்தருளி, திருநாராயணபுரத்திலே எழுந்தருளியிருக்கச் செய்தே. அம்மங்கியம்மாள் பிரிவாற்றாமையாலே திருமேனியும் வெளுத்து வைத்யர்களும் பரிஹாரம் பண்ணவென்று உபக்ர மித்தவாறே, "நிதானம் அறிந்து பரிஹரிக்கவேண்டாவோ? எம் பெருமானார் பிரிவாற்றாமையாலே வந்தது, அவர் திருவடிகளிலே கொண்டுபோய் விடுங்கோள்" என்றார். அங்கேற நடந்து அவ் விடத்திலே எழுந்தருளியிருக்கச்செய்தே அந்தவிடத்திலே எம் பெருமானாரைக் கண்டு அவர் அணைத்துக் தழுவிக்கொண்டார். உடம்பிலே சோகம் போய்த்து, என்னைப் பிரிந்து உடம்பு வெளுத்து இத்தனை தூரம் வந்தவருக்கு நாம் பண்ணும் உபகாரம் என்னென்று பார்த்தருளி, "முன்பு சொன்ன த்வயத் துக்கு மேற்படக் கண்டிலோம். அது தன்னையே இன்னும் கேட்க லாகாதோ" என்று ஒருரு த்வயத்தை அருளிச்செய்தார்.

185. ஷ பட்டர் தாம் எம்பாரோடே ரஹஸ்யம் கேட்டாரா யிறே இருப்பது, இப்படியிருக்கச் செய்தே எம்பெருமானார் இவர் பதஸ்தராகிறபோது இவர் கையிலே புஸ்தகத்தைக் கொடுத்து, செவியிலே த்வயத்தைச் சொல்லி, பெருமாள் திருவடி களிலே கொண்டு புக்கு, "நான் இவருக்கு வேண்டும் வித்யை கொடுத்தேன். நீர் இவருக்கு வேண்டும் ஆயுஸ்ஸைக் கொடுத் தருளவேணும்" என்று பெருமாள் திருவடிகளிலே காட்டிக் கொடுத்து த்வயத்தைச் சொல்லி ஶரணம் புக்கார்.

186 ஷ. எம்பெருமானார், அந்திமதசையிலே முதலிகளடையத் திரண்டிருந்து. "எங்களுக்குத் தஞ்சமாய்த் திருவுள்ளத்துக்கு ப்ரியமாயிருப்பதொன்றை நாங்கள் விஶ்வஸித்திருக்கும்படி அருளிச் செய்யவேணும்" என்று கேட்க, "எல்லோரும் ப$_4$ாஷ்யத்திலே வாஸனை பண்ணுகையே நமக்கு ப்ரியம். அதுக்கு மாட்டாதார் திருநந்த$_3$வனம் செய்து திருப்படித்தாமம் பறித்துத் திருமாலை எடுக்கையும் ப்ரியதரமாயிருக்கும்; அது எல்லாருக்கும் ஒக்கச் செய்யப் போகாது. த்$_3$வயத்திலே வாஸனை பண்ணி விஶ்வஸித்திருக்கை மிகவும் ப்ரியதமமாயிருக்கும்" என்று அருளிச்செய்தார்.

187. பரந்தபடி த்$_3$வயப்ரகரணம்: ஆளவந்தார் ஐதிஹ்ய நிர்வாஹம் 78 காண்க.

188. த னி ச ர ம ம், 'ப்ரபத்தி—ப்ராரப்$_3$த$_4$ கர்மத்துக்கு விநாஶிநி' என்னுமிடத்துக்கு ப்ரமாணம் என்? என்று எம்பெருமானாரை ஆண்டான் கேட்க, '"மாஶுச:" என்றதிறே' என்றருளிச்செய்தருளினார். (ஆரப்$_3$த$_4$கார்யாந்) என்று ப்ராரப்$_3$த$_4$மும் ப்ரபத்தியாலே க்ஷந்தவ்யம் என்று உடையவர் அருளிச் செய்தார், உபாஸகனுக்கு உத்தராக$_4$த்துக்குச் சொல்லுகிற அஶ்லேஷமும் ப்ராமாதிக விஷயம் என்று உடையவர் ப$_4$ாஷ்யத்திலே அருளிச்செய்தருளினார். ஆகையிறே (வர்த்தமாநம் வர்த்திஷ்யமாணஞ்ச) என்று உடையவர் அருளிச்செய்தது.

189. தனிப்ரணவம், திருக்கோட்டியூர் நம்பி ஐதிஹ்ய நிர்வாஹம் 28 காண்க.

இனி, எறும்பியப்பா அருளிய சரமகு$_3$ரு நிர்ணயத்தில் உள்ள எம்பெருமானாரைப் பற்றிய பூர்வாசார்ய வசனங்கள் கொடுக்கப் படுகின்றன.

190. "ஸம்ஸாரிஜநாநர்த்த$_2$த$_3$ர்ஶநாஸஹிஷ்ணுத்வம் தத்$_3$-விஷயகாருண்யமஹாகு$_3$ணகரத்வம் ச—அஸ்மத்குலநாதே$_2$ அஸ்மச்சே$_2$ஷிணி அஸ்மத்ஸ்வாமிநி அபரிமிதோதா$_3$ரப$_4$ாவகல்யாண கு$_3$ணஸாக$_3$ரே அநவதி$_4$காதிஶயாஶ்ரிதவாத்ஸல்ய ஸௌஶீல்யை கநிதெ$_4$ள ஶமத$_3$மாதி$_3$ஸமஸ்தாத்மகு$_3$ணௌக$_4$மஹார்ணவே ப$_4$க$_3$வதி ஶ்ரீமத்$_3$ராமாநுஜாசார்யே வ்யவஸ்தி$_2$தே ப$_4$வத:" [ஸம்ஸாரத்தில் உழலும் சேதனர்களின் அனர்த்த$_2$ங்கண்டு ஆற்ற மாட்டாமையும், அவர்கள் விஷயத்தில் கருணையாகிற பெரிய குணத்தை உடையவராயிருக்கையும்— நமது குலநாத$_2$ராய், நமது ஶேஷியாய், நமது ஸ்வாமியாய், எல்லையற்ற வண்மையுடைய

கல்யாண குணக்கடலாய், எல்லையற்ற பெருமையுடைய ஆஶ்ரித வாத்ஸல்யம், ஸௌஶீல்யம் ஆகியவற்றுக்குக் கொள்கலமாய், ஶமம் தமம் முதலான எல்லா ஆத்மகுணவெள்ளங்களும் சேரும் பெருங்கடலாயிருக்கும் பகவானான ஸ்ரீமத்ராமாநுஜாசார்யரிடம் நிலைநிற்கின்றன.] என்று ஸோமாசியாண்டானும் அநர்த்தம் கண்டு ஆற்றாமையும் மிக்க க்ருபையும் எம்பெருமானார் பக்கலிலே வ்யவஸ்திதமாயிருக்குமென்று குருகுணவிவரணத்திலே அருளிச்செய்தாரிறே.

191. "அஜ்ஞாநதமோநிவர்த்தநத்வாராயாதகுருத்வமப்யஸ்மிந் ராமாநுஜகுரௌ முக்யவ்ருத்தி| நத்விதரேஷு| தைஸ்தஸ்ய புரஸ்க்ருதத்வாத்||" [அஜ்ஞான இருளைப் போக்குவதன் மூலம் ஏற்பட்ட குருத்வமும் இந்த ராமாநுஜாசார்யரிடமே முக்கியமாகப் பொருந்தியிருக்கின்றது. மற்றவர்களிடம் அப்படியில்லை; அவர்கள் எம்பெருமானாரை முன்னிட வேண்டியிருக்கையால்.] என்றும் அருளிச்செய்தாரிறே.

192. பெரியவாச்சான்பிள்ளை அருளிய ஶ்லோகம்:-"விஷ்ணு: ஶேஷீ ததீய: ஶுபகுணநிலயோ விக்ரஹ: ஸ்ரீஶடாரி:, ஸ்ரீமாந் ராமாநுஜார்ய: பதகமலயுகம் பாதி ரம்யம் ததீயம் | தஸ்மிந் ராமாநுஜார்யே குருரிதி ச பதம் பாதி நாந்யத்ர தஸ்மாத், ஶிஷ்டம் ஸ்ரீமத்குரூணும் குலமிதமகிலம் தஸ்ய நாதஸ்ய ஶேஷ:||" [விஷ்ணுவானவர் அனைவர்க்கும் ஶேஷியாயிருப்பவர்; நற்குணங்களுக்கு இருப்பிடமான நம்மாழ்வார் அவருடைய திருமேனியாவார். கைங்கர்யச் செல்வம் நிறைந்த எம்பெருமானார் அந்த நம்மாழ்வாருடைய அழகிய திருவடித் தாமரையிணையாய் விளங்குகிறார். அந்த எம்பெருமானாரிடத்திலேயே ஆசார்ய ஶப்தம் நிறை பொருளுடையதாய் விளங்குகிறது. வேறெவரிடமும் அப்படி விளங்கவில்லை. ஆகையால், மற்ற ஸதாசார்ய பரம்பரை முழுவதும் தலைவரான அந்த எம்பெருமானார்க்கு ஶேஷமாயிருப்பது ]

193. "ஏவம் ஸர்வப்ரகாரகுருலக்ஷணபூர்ணசரமதுருரூபபங்கவதவதார ராமாநுஜகுரோரபிமாந ஏவ ஆத்மோஜ்ஜீவநாபேக்ஷாணுமகிலசேதநாநாம் ஸம்ஸாரநிரயகர்த்தநிஸ்தரணோபாய:| தத்வ்யதிரிக்தபூர்வாபரகுருஜநாநாம் உபகாரகத்வமேவ| ந தூத்தாரகத்வம்| தே புந: அஸ்ய ஸம்ஸாரிசேதநஸ்ய ஆத்மஹிதைஷிண: ப்ரதமதோ அஸ்மச்சேஷிண: பரமகாருணிகஸ்ய

அபரிமிதோதா₃ரப₄ாவஸ்ய ப₄க₃வத: ஸ்ரீராமாநுஜகு₃ரோ: வைப₄வமுபதி₃ஶ்ய தஸ்யாபி₄மாந ஏவ ஸம்ஸ்ருதிநிஸ்தரஹோபாய: தத்₃கு₃ணாநுஸந்த₄ாநமேவ காலக்ஷேபவிஷய இதி ஜ்ஞாபயித்வா தத்₃த்₃வாரா சேதநஸ்ய பரமோபகர்த்தாரோ ப₄வந்தி||" [இவ்வண்ணமாக எல்லா வகையான கு₃ருலக்ஷணங்களும் நிறைந்த சரமகு₃ருவாய், எம்பெருமானுடைய அவதாரமாயிருக்கும் ராமாநுஜாசார்யருடைய அபி₄மானமே ஆத்மோஜ்ஜீவனத்தை விரும்பும் எல்லாச் சேதனர்க்கும் ஸம்ஸாரமாகிற நரகப்படுகுழியிலிருந்து கரையேறும் உபாயமாகும். அவருக்கு முன்னும் பின்னுமுள்ள மற்ற ஆசார்யர்களுக்கு உபகாரகத்வம் உண்டேயொழிய உத்தாரகத்வம் கிடையாது. அவர்கள் இந்த ஸம்ஸாரி சேதனனுடைய ஆத்மாவுக்கு நன்மையை விரும்புகிறவர்களாய், முதன் முதலில் நமக்கு ஸ்வாமியாய், பரமகாருணிகராய், எல்லையற்ற வண்மையுடையவரான ப₄க₃வானான ஸ்ரீராமாநுஜாசார்யருடைய பெருமையை உபதே₃ஶித்து, அவரது அபி₄மானமே ஸம்ஸாரக் கடலைத் தாண்டுவதற்கு உபாயம் என்றும், அவரது கு₃ணாநுஸந்த₄ானமே போதுபோக்குக்கு விஷயம் என்றும் அறிவித்து, அவ்வழியாலே இந்தச் சேதனர்களுக்கு மேலான உபகாரத்தைச் செய்கிறார்கள்.] என்று கு₃ருகு₃ண விவரணத்திலே அருளிச்செய்தாரிறே ஸோமாசியாண்டான்.

194. வடுகநம்பி "ஆசார்யபத₃மென்று தனியே ஒரு பத₃ம்; அதுள்ளது எம்பெருமானாருக்கேயாய்த்து" என்று அருளிச்செய்தாரிறே. அவத₄ாரணத்தாலே அந்யயோக₃வ்யவச்சே₂த₃ம் பண்ணப்படுகிறது.

195. ஆசார்யத்வபத₃ம் ததை₂வ கு₃ருதா யோக₃க்ரமாத₃ர்க₃தே, ஜ்ஞாநாபஹ₄ாவதமோநிவ்ருத்திகரணஶ்ருத்யர்த்த₂விஷ்டம்₂ப₄நாத்| காருண்யைகநிதௌ₄ ப₄வாப்₃தி₄தரணப்ரரபோதகோத்தாரகே, ஸ்ரீமல்லக்ஷ்மணயோகி₃நி வ்யவஸிதே நாந்யேஷு மாந்யேஷ்வபி||" [ஆசார்யபதவியும், ஆசார்யத்தன்மையும் யோக₃க்ரமத்தாலே பொருள்கொள்ளும்போது — அஜ்ஞானமாகிற இருளைப்போக்குவதையும், வேதா₃ர்த்த₂த்திலே நிலைநிறுத்துவதையும் செய்கையாலே கருணைக்கோர் கொள்கலமும், ஸம்ஸாரக் கடலைத் தாண்டுவிக்கும் உத்தாரகருமான ஸ்ரீராமாநுஜாசார்யரிடத்திலேயே நிலைநிற்கின்றன. கௌ₃ரவிக்கத் தக்கவர்களாயினும் மற்ற ஆசார்யர்களிடம் நிலைநிற்பதில்லை.] என்றிறே ஸோமாசியாண்டான் பணிக்கும்படி.

196. "ஆசார்யத்வமுபாயதாத்மகமஹோ ராமாநுஜார்யே கு₃ரௌ நாந்யேஷ்வார்யவரேஷு தே யதிவராதீ₄நாத்மஸத்தா யத: | தஸ்மாத₃ார்யபரம்பராஶ்ரிதபத₃ாம்போ₄ஜஸ்ய பாத₃ாஶ்ரய: கர்த்தவ்யஸ்ஸ்வஹிதைஷிபி₄: கில ஜநை: ஸம்ஸாரஸஞ்சி₂த்தயே ||" [உத்தாரகத்வரூபமான ஆசார்யத்வம், ஆசார்யரான ராமாநுஜர் ஒருவரிடமே உள்ளது; வேறு எந்த ஆசார்ய ஶ்ரேஷ்ட₂ரிடமும் இல்லை; (ஏனெனில்;) அவர்கள் அனைவரும் அவ்யதிராஜரால் ஸத்தை பெற்றவர்களன்றோ; ஆகையால், தமக்கு நன்மையை விரும்புகிறவர்கள் — ஆசார்ய பரம்பரையால் உத்தாரகமாகக் கொள்ளப்பட்ட திருவடித்தாமரையையுடைய அவ்வெம்பெருமானுருடைய திருவடிகளையே ஸம்ஸாரம் அடியோடு நீங்குவதற்காக ஆஶ்ரயிக்கவேண்டும்.] என்னக்கடவதிறே.

197. "உபாயாத்மகமாசார்யஸ்வரூபம் ஸுவ்யவஸ்தி₂தம் | அஸ்மச்சே₂ஷிணி யோகீ₃ந்த்₃ரே லக்ஷ்மணார்யே மஹாத்மநி || அந்யேஷாமபி ஸர்வேஷாம் கு₃ரூணாம் ந ஸமர்த்தி₂தம் || வ்யாவஹாரிகமேவாஸ்மிந் கு₃ருவர்க்கே₃ ந முக்₂யதா || யத₃தீ₄நாத்மஸத்தாத்₃யா: தே₃ஶிகாஸ்ஸத்வவித்தமா: | தத்க்ருதே நாபி₄மாநேந தேஷாம் முக்திர் ந ஸம்ஶய: || ஏதத்₃வரணகர்த்ருத்வாத் ப்ராக்தநா கு₃ரவஸ் ஸ்வயம் | ப₄வந்த்யஸ்யோபகர்த்தார: ந முக்திப₂லதா₃ ஹி தே || தஸ்மாது₃ஜ்ஜீவநேச்சூ₂நாம் ப₄வாப்₃தி₄ம் தர்த்துமிச்ச₂தாம் | அஸ்மத்குலபதே: ஶ்ரீமல்லக்ஷ்மணார்யஸ்ய தீ₄மத: || அங்க்₄ரியுக்₃மாத்₃ருதே தேஷாமுபாயோ நைவ த்₃ருஶ்யதே ||" [உத்தாரகத்வரூபமான ஆசார்யஸ்வரூபம்— நமக்கு ஶேஷியாய், மஹாத்மாவாய் யதிராஜரான ஸ்ரீராமாநுஜாசார்யரிடம் நன்கு நிலைநிற்கிறது. மற்ற எல்லா ஆசார்யர்களிடமும் இது இல்லை. ஆசார்யத்வம் மற்ற ஆசார்யர்களிடம் ரூடி₄வழக்கினுல் வழங்கப்படுகிறதேயொழிய முக்₂யமாவதில்லை. (எம்பெருமானுருடைய) திருவுள்ளமறிந்தவர்களில் தலைசிறந்தவர்களான அவ்வாசார்யர்கள் அவருக்கு அதீ₄னமான ஸத்தாஸ்தி₂தி ப்ரவ்ருத்திகளை உடையவர்களாயிருக்கையாலே, அவரது அபி₄மானத்தாலே அவர்களுக்கு மோக்ஷம் ஏற்படும் என்பதில் ஐயமில்லை. இவரை உத்தாரகராக வரிக்கச் செய்கையால் மற்ற பூர்வாசார்யர்கள் சேதனனுக்குத் தாமே உபகாரம் புரிகின்றனர்; ஆயினும் அவர்கள் மோக்ஷமளிக்கும் உத்தாரகர்களல்லர்.

ஆகையால் உய்ய விரும்புகிறவர்களாய், ஸம்ஸாரக் கடலைத் தாண்ட விரும்புகிறவர்களுக்கு நமது குலபதியும், பேரறிவாளருமான ஸ்ரீமத்3ராமாநுஜாசார்யருடைய திருவடியிணை தவிர வேறு உபாயம் ஒருபோதும் காணப்படவில்லை] என்று வாதி3கேஸரி அழகியமணவாளஜீயர் அருளிச்செய்தாரிறே.

198. நஞ்ஜீயரும் "சித3சித3ீஶ்வரதத்வஸ்வரூபஸ்வபா4வதிரோதா4யகஸம்ஸாரஸம்ப3ந்த4நிவ்ருத்திபூர்வகநிரவதி4காநந்த3ஜநகப4க3வத்ப்ராப்திரூபமோக்ஷமஹாப2லப்ரதா3நநிபுணம் அப்ரதிஹதோபாயாத்மகம் ஆசார்யத்வம் ஹி பரமகாருணிகஸ்ய அபரிமிதோதா3ரபா4வஸ்ய அநவதி4காதிஶயாஶ்ரிதவாத்ஸல்யஸௌஶீல்யகு3ணாகரஸ்ய நிஷ்க்ருஷ்டஶமத3மாத்3யாத்மகு3ணகு3ணைகமஹார்ணவஸ்ய நிகி2லநிக3மஶிரோவிஜ்ஞாநவிசக்ஷணஸ்ய அநவரதவிதி3தப4க3வத்ஸ்வரூபரூபகு3ணவிபூ4திஜாதயாதா2த்ம்யஸ்ய ப்ரபந்நஜநகூடஸ்த2ப4க3வத்பராங்குஶபாதா3ரவிந்த3யுக3லபூ4தஸ்ய பராவரநிகி2லகு3ருஜநஸமாஶ்ரிதவிமலசரணகமலயுக்3மஸ்ய ஸம்ஸாரிஸகலசேதநோஜ்ஜீவநகரணைகத3த்தசித்தஸ்ய ப4க3வத: ஸ்ரீராமாநுஜகு3ரோரேவ வ்யவஸ்தி2தம் | ந த்விதரேஷு | தே புநஸ்ஸர்வே ராமாநுஜார்யாயத்தாத்மஸத்தாஸ்தி2திப்ரவ்ருத்தய: தத3பி4மாநாந்தர்பூ4தா: தச்சரணாரவிந்த3யுக3லமேவ ஶரணம் மந்வாநா: ஸ்வாஶ்ரிதாநாமபி தமேவ ஶரணமுபதி3ஶந்த: தத்ஸம்ப3ந்த4க4டநாதே3வ ஸ்வாஶ்ரிதஸர்வஜநோபகர்த்தாரோ ப4வந்தி ||" [சித், அசித், ஈஶ்வரன் எனும் தத்வத்ரயங்களின் ஸ்வரூப ஸ்வபா4வங்களை மறைக்கும் ஸம்ஸாரஸம்ப3ந்த4த்தை நீக்கி, எல்லையற்ற பேரின்பத்தை விளைக்கும் ப4க3வத் ப்ராப்தியாகிற மோக்ஷம் எனும் பெரும்பயனை அளிக்கவல்லதாய், தடையற்ற உபாயத்வமாயிருப்பதான ஆசார்யத்வம்—பரமகாருணிகராய், எல்லையற்ற வண்மையுடையவராய், எல்லையற்ற பெருமையுடைய ஆஶ்ரிதவாத்ஸல்யம், ஸௌஶீல்யம் எனும் கு3ணங்களுக்கு இருப்பிடமாய், சிறப்பையளிக்கும் ஶமம், த3மம் முதலான ஆத்மகு3ணங்களுக்குப் பெருங்கடலாயிருப்பவராய், எல்லா வேதா3ந்தங்களின் பொருளையும் அறியவல்லவராய், ப4க3வானுடைய ஸ்வரூபரூபகு3ணவிபூ4திகளின் உண்மையை எப்போதும் காண்பவராய், ப்ரபந்நஜன கூடஸ்த2ரான ப4க3வத் பராங்குஶரெனும் நம்மாழ்வாரின் திருவடித்தாமரையிணையாயிருப்பவராய், முன்னும் பின்னுமுள்ள எல்லா ஆசார்யர்களாலும் ஆஶ்ரயிக்கப்பெற்ற குற்றமற்ற திருவடித்தாமரை

யினையை உடையவராய், ஸம்ஸார மண்டலத்திலுள்ள எல்லாச் சேதனரும் உய்வதிலேயே திருவுள்ளம் ஊன்றியிருப்பவரான பகவான் ஸ்ரீராமானுஜாசார்யரிடமே நன்கு நிலைநிற்கிறது. வேறு எவரிடமுமில்லை. அவர்கள் அனைவரும் ராமானுஜாசார்யராலே ஸத்தா ஸ்திதி ப்ரவ்ருத்திகளை அடைந்தவர்களாய், அவரது அபிமானத்தில் அடங்கினவர்களாய், அவரது திருவடித்தாமரையிணையையே உபாயமாகக் கொள்கின்றவர்களாய், தம் அடியார்களுக்கும் அவ்வண்ணமே உபதேசிக்கின்றவர்களாய், அவ்வெம்பெருமானாருடைய ஸம்பந்தத்தை உண்டாக்குவதன் மூலமே தம் அடியார்களுக்கு உபகாரம் செய்பவர்களாய் விளங்குகின்றனர்] என்று அருளிச்செய்தாரிறே.

199. ஸத்யம் ஸத்யம் புநஸ்ஸத்யம் யதிராஜோ ஜகத்குரு: । ஸ ஏவ ஸர்வலோகாநாமுத்தர்த்தா நாத்ர ஸம்ஶய: ॥ [முக்காலும் சத்தியம் செய்து கூறுகிறேன்; யதிராஜரே உலக குருவாவார்; எல்லாவுலகையும் உய்விக்க வல்லவர் அவரே; இதில் ஐயமில்லை.] என்று கணியனூர் சிறியாச்சான் ஸசேலஸ்நாந பூர்வகமாக ஸ்ரீஶடகோபனைத் தலையிலே வைத்து 'எம்பெருமானாருடைய அபிமானமே உத்தாரகம்; இத்தையொழிய ஸம்ஸாரி சேதனர்க்கு வேறு உஜ்ஜீவிக்கைக்கு வழியில்லை' என்று பெருமாள் திருவோலக்கத்திலே ஶபதம் பண்ணினாரிறே.

200. "பகவதநந்யார்ஹஶேஷத்வரூபஸம்பந்தஸ்தைர்யாऽऽகாங்க்ஷிண: சரமகுருராமாநுஜாசார்யஸம்பந்தாபாவே தத்ஸம்பந்தஸ்தைர்யஸித்திர் ந ஸ்யாத் । அஸ்ய சேதநஸ்ய ப்ரதமதோ பகவத்ஸம்பந்தஸத்பாவோऽபி பகவத்ப்ரவணோஜ்ஜீவநஸத்பாவே ஸதி சேத் । தத்ஸித்திரபி அந்யஶேஷத்வநிவ்ருத்தி பூர்வக பகவதநந்யார்ஹஶேஷத்வஸத்பாவே ஹி ஸ்யாத் । ஏவமுஜ்ஜீவநோபயுக்த ததநந்யார்ஹஶேஷத்வ ஸத்பாவஸ்ய ததீயபர்யந்தத்வ ஏவ ஸித்தத்வாத், ததர்த்தம் ததீயாக்ரேஸரபரமகாருணிகராமாநுஜகுருஸமாஶ்ரயணம் லப்த்வா ஏதத்அநந்யார்ஹஶேஷத்வஸம்பந்தயுக்தஸ்ஸந் ததநந்தரம் கலு ததநந்யார்ஹஶேஷத்வஸித்தியுக்தோ பவதி । அத ஏவ ப்ரதமபர்வநிஷ்டஸ்யாபி சரமகுருபரமகாருணிகராமாநுஜகுருசரணஸமாஶ்ரயணமவஶ்யாபேக்ஷிதம் பவதி ॥", [எம்பெருமானேடு அநந்யார்ஹஶேஷத்வ ரூபமான ஸம்பந்தம் நிலைநிற்கவேண்டும் என்று ஒருவன் விரும்பினல், சரமகுருவான

ராமாநுஜாசார்யரோடு ஸம்ப₃ந்த₄ம் இல்லாவிடில் அந்த ப₄க₃வத் ஸம்ப₃ந்த₄ம் அவனுக்கு நிலைநில்லாது, இச்சேதனனால் சிலருக்கு ப₄க₃வானிடத்தில் ஈடுபாடு உண்டாகி, உஜ்ஜீவனம் உண்டானால் தான் இவனுக்கு முதன்முதலில் ப₄க₃வத்ஸம்ப₃ந்த₄ம் உள்ளதாகக் கொள்ளமுடியும். ஆகையால் இவன் சிலருக்கு அந்யஶேஷத்வத்தைக் கழித்து, எம்பெருமானோடு அநந்யார்ஹஶேஷத்வம் உண்டாம்படி செய்து, அவர்களை உய்விக்கவேண்டும். இப்படிப் பிறரை உய்விப்பதற்கு உறுப்பான ப₄க₃வத₃நந்யார்ஹஶேஷத்வம் நிலைநிற்க வேண்டுமானால் இவனுக்கு எம்பெருமானுடைய அடியார்களிடத்திலும் ஶேஷத்வம் உண்டாகவேண்டும். ஆகையால் அச்யுதன் அடியார்களில் தலைசிறந்தவராய், பரமகாருணிகரான எம்பெருமானாருக்கு அடிமைப்பட்டு, அவருக்கு அநந்யார்ஹஶேஷபூ₄தனான பின்புதான் இவன் எம்பெருமானுக்கு அநந்யார்ஹ ஶேஷபூ₄தனாகமுடியும். ஆகையாலேயே ப்ரத₂மபர்வமான எம்பெருமானிடம் ஊன்றியிருப்பவனுக்கும் சரமகு₃ருவாய், பரம காருணிகரான ராமாநுஜருடைய திருவடியை அடைவது அவஶ்யமாகிறது.] என்று ஜீயர் அருளிச்செய்தாரிறே.

201. ''ஏதத்₃வ்யதிரிக்தவிஷயப்ராப்யத்வ ப்ராபகத்வபு₃த்₃தி₄ரபி ஏதத₃பி₄மாநாந்தர்பூ₄தாநாம் ஏதத்₃ராமாநுஜகு₃ருமுக₂-க₂மலவிலாஸஹேதுகோடரவந்தர்பூ₄தா ப₄வதி ந கார்யகரண-கோடௌ | தது₃த்பாத₃கோபயுக்தவ்யவஸாயஸ்ய தஸ்ய தஸ்-மிந்நேவ க்ருதத்வாத் |'' [எம்பெருமானார் ஸம்ப₃ந்த₄முடைய ஆசார்யர்களிடத்தில் ஒரு சேதனன் ''இவர்களே பரமப்ராப்யம்; பரமப்ராபகம்'' என்று உறுதி கொள்வது—எம்பெருமானாரது அபி₄மானத்தில் அடங்கிய அச்சேதனன் விஷயத்தில் ''நம்முடைய ஸம்ப₃ந்த₄த்தை உணர்த்தினவர்களிடம் இவனுக்கு இத்தனை ஈடுபாடுஉண்டாவதே!'' என்று எம்பெருமானாருக்குத் திருமுகமலர்த்தி உண்டாகக் காரணமாகிறது. அவ்வுறுதி இவனுக்கு மோக்ஷ ப₂லனை விளைப்பதன்று. 'மோக்ஷப₂லனுக்கு உறுப்பான ஆறுகவும் (உபாயமாகவும்), பேறுகவும் (ப்ராப்யமாகவும்) இருப்பவர் எம்பெருமானாரே' என்று உறுதிகொள்ளும்படியாகவன்றோ இவன் தன் ஆசார்யனால் ஆக்கப்பட்டிருக்கிறன்.] என்றிறே ஜீயர் பணிக்கும்படி.

202. ஸ்ரீமல்லக்ஷ்மணயோகி₃நோऽந்யகு₃ருஷு ப்ரபாத்₃ய பா₄வார்த்தா பு₃த்₃தி₄: தந்முக₂ஹர்ஷஸம்ப₄வகரா விஜ்ஞாயதே நாந்யதா₂ | தஸ்மாத்தத்பத₃பங்கஜே ப்₄ருஶகரம் பூர்வை:

க்ருதத்வாத3யம் ஸர்வேஷாமபி முக்தித3: கருணயா ராமாநு ஜாக்2யோ கு3ரு: || [ஸ்ரீமத்ராமாநுஜாசார்யரின் ஸம்ப3ந்த4முடைய மற்ற ஆசார்யர்களிடம் அவரவர்களுடைய ஶிஷ்யர்கள் ப்ராப்ய மென்றும் ப்ராபகமென்றும் உறுதி கொள்வது எம்பெருமானருடைய முகமலர்த்தியை விளைப்பதாகவே அறியப்படுகிறது. அவ்வுறுதி யினுல் மோக்ஷம் விளைவதில்லை. ஆகையால் பூர்வாசார்யர்கள் அனைவரும் எம்பெருமானருடைய திருவடித்தாமரைகளையே ஆரு கவும் பேருகவும் உறுதிகொள்ளுகையாலே அந்த ராமாநுஜாசார் யரே அனைவர்க்கும் கருணையினுல் மோக்ஷமளிப்பவராவார்.] என்று கு3ருகு3ஹுவளியிலே ஸோமாசியாண்டான் அருளிச் செய்யும்படி.

203. இவ்வர்த்த2ங்களையெல்லாம் கு3ருப்ரப4ாவதீ3பிகையிலே பரக்க அருளிச்செய்தாரிறே எம்பெருமானருடைய ஶிஷ்யப்ரஶிஷ் யரான நலந்திகழ் நாராயணதா3ஸரும். அதாவது — "சரமகு3ரு ராமாநுஜாசார்யாபி4மாநாந்தர்பூ4தாநாம் சரமாதி4காரிணும் தந்- முகே2ால்லாஸஸ்யைவ பரமப்ரயோஜநத்வாத் தத்ப்ராப்தேரபி தத3பி4மாநநிஷ்ட2ததீ3யப்ராப்யத்வ ப்ராபகத்வ வ்யவஸாய பு3த்3தி4ஸித்3த4த்வாத் ராமாநுஜகு3ரு விஷய ப்ராப்யத்வ ப்ராபகத்வாத்4யவஸாயபு3த்3தி4வையர்த்2யம் ஸ்யாதி3தி சேத் தது3க்திர் ந யுக்தா | அஸ்ய ச சரமாதி4காரிண: ப்ராப்யபூ4த ப4கு3வத்3ராமாநுஜகு3ருமுக2விலாஸோऽபி விபூ4தி த்3வயவாஸ- பே4தே3ந பரோக்ஷாऽபரோக்ஷரூபத்3வைவித்4யயுக்தோ ப4வதி | தத்ர ப்ரத2மோபாத்த பரோக்ஷமுகே2ால்லாஸ: மார்க்க3த்3வயே நோபக3தஸ்ஸ்யாத் ஸ்வாநுவர்த்தநேந ஸ்வாபி4மாநநிஷ்ட2- ததீ3யாநுவர்த்தநேந ச| ஏதத3நுவர்த்தநத்3வயேந ராமாநுஜகு3ரு த்பத்3யமாநமுகே2ால்லாஸஸ்யார்ச்சாவதாரஜந்யத்வாத், அர்ச் சாவதாரஸ்யாபி ஆலோகாலாபாலிங்க3நாதி3கரணக்ஷமத்வாத் அர்ச்சாவதாரபூ4தராமாநுஜாசார்யமுகே2ால்லாஸ: தத3ர்வாசீ- நாஸ்மதா3ாதி3சரமாதி4காரிணும் பரோக்ஷஸித்3த4 ஏவ ஸ்யாத் | தத்ஸமகாலவர்த்திநாம் தா3ாஶரதி2 ஸ்ரீவத்ஸாங்க மிஶ்ர தத்- ஸூநுப4ட்டாரக கோ3விந்த3 குருகேஶ ப்ரப்4ருதீநாம் தேந ஸஹாவஸ்தி2தத்வாத் அபரிமிதாசிந்த்யஸுக்ருத விஶேஷப4ா- ஜாம் தேஷாம் கு3ருஜநாநாம் தஸ்ய பரமகாருணிகஸ்ய பரமோதா3ரப4ாவஸ்ய அபரிமிதாநவதி4காதிஶயாஶ்ரிதவாத்- ஸல்ய ஸௌஶீல்ய மஹாகு3ணஸாக3ரஸ்ய அசிந்த்ய தி3வ்ய ஜ்ஞாநப4க்திவைராக்3யராஶே: அபரிச்சி2ந்நமாஹாத்ம்யஸ்ய

விமலவிஸத₃ஸமத₃மாத்₃யாத்மகு₃ணகு₃ணாகரஸ்ய நிரந்தர-நிகி₂ல கு₃ருஜநநிவஹ ஸமாஸ்ரயணிய நிஜசரணகமலயுக₃லஸ்ய நித்யநிரவத்₃ய ப₄க₃வத₃நுப₄வாதிஸயஜநித நிரதிஸயாநந்த₃ ஸந்தீ₃ர்க₃ஹாம்ஸ்கூதஸாக₃ராந்தர்நிமக்₃ந ஸர்வாவயவஸ்ய அகி₂லஜக₃த்பரமகு₃ரோ: அஸ்மத்குலநாத₂பூ₄தஸ்ய அஸ்மத் ஸ்வாமிந: அஸ்மந்நிருபாதி₄க ஹேஷிண: அஸரண்ய ஸரண்யஸ்ய ப்ரபந்நஜந ஹ்ருத₃ய பங்கேருஹ ஹம்ஸாய மாநஸ்ய ப₄க₃வத: ஸ்ரீமத்₃ராமாநுஜகு₃ரோ: அபரிமிதநிர்மல க₃ம்பீ₄ரஜலாஸயமத்₄யோத்பந்ந ஸமுத்க்ருஷ்டநாலமிஹிரதருண கிரணநிகரவிகஸித புண்ட₃ரீகத₃லாமலாயதேக்ஷணமுகோ₂ல்லாஸ: ஸ்வகரதலநிஹிதஸமுத்க்ருஷ்டாமலாமலகவத் ப்ரத்யக்ஷஸித்₃தே₄ா ப₃பூ₄வ। தத்பூர்வகாலீந ராமமிஸ்ர புண்ட₃ரீகநயந நாத₂முநி ப்ரப்₄ருதீநாமபி பரோக்ஷஸித்₃த₄ ஏவாப₄வத்। அத₂ புந: நித்யவிபூ₄தௌ அபரோக்ஷஸித்₃த₄ப₄க₃வத்₃ராமாநுஜ கு₃ருமுகோ₂ல்லாஸே அஸ்மதா₃தி₃பி₄ர்லப்₃த₄வ்யே ஸம்ஸார நிவ்ருத்திபூர்வகம் ப்ராப்யதே₃ஸபூ₄த ஸ்ரீவைகுண்ட₂ தி₃வ்ய நக₃ரம் உபகா₃ர்யா தஸ்ய லப்₃யத்வாத் ஸம்ஸாரோத்தாரகத்வஸ்யாபி அஸ்மிந் ராமாநுஜகு₃ராவேவ அஸாத₄ாரணத்வேந வ்யவஸ்தி₂தத்வாத் ஸம்ஸாரநிவ்ருத்த்யர்த்த₂ம் ஸர்வோத்-தாரகராமாநுஜகு₃ரௌ ப்ராப்யப்ராபகத்வத்₃வயமபி நிஸ்சித்ய ததே₃கநிஷ்ட₂ாவதா பூ₄த்வா சரமாதி₄காரிணா ஸ்த₂ாதவ்யம் ப₄வதி ||'' [சரமாசார்யரான ராமாநுஜாசார்யருடைய அபி₄மானத்திலே அடங்கிய சரமபர்வநிஷ்ட₂ர்களுக்கு அவரது முகமலர்த்தியே பரமப்ரயோஜனமாகையாலும், அவருடைய அபி₄மானத்தில் அடங்கிய ஆசார்யர் ஒருவரிடம் "இவரே நமக்கு ப்ராப்யமும் ப்ராபகமும் ஆவார்'' என்னும் உறுதியாலே அந்த முகமலர்த்தி ஸித்₃தி₄க்கையாலும், ராமாநுஜாசார்யர் விஷயத்தில் "இவரே ப்ராப்யமும் ப்ராபகமும் ஆவார்'' என்று உறுதிகொள்ளுவது தேவையில்லையே எனில்; இப்படிக் கூறுவது பொருந்தாது. இந்தச் சரமாதி₄காரிக்கு ப்ராப்யமாயிருக்கும் எம்பெருமானாரின் முகமலர்த்தியும், இரண்டு விபூ₄திகளில் ஸெவிப்பதையிட்டு அப்ரத்யக்ஷமாகவும், ப்ரத்யக்ஷமாகவும் இரண்டுபடிப்பட்டதாயிருக்கும். இவற்றில் முதலில் எடுக்கப்பட்ட அப்ரத்யக்ஷமுகமலர்த்தி தன் கைங்கர்யத்தால் ஏற்படுவது என்றும், தன் அபி₄மானத்திலே அடங்கியவர்களுடைய கைங்கர்யத்தால் ஏற்படுவது என்றும் இரண்டுவழியாலே

வருவதாயிருக்கும். இவ்விரண்டு கைங்கர்யத்தாலும் ராமாநுஜா சார்யரிடம் விளையும் முகமலர்த்தி அர்ச்சாவதாரத்தில் விளைவதா கையாலும், அர்ச்சாவதாரத்தில் குளிரக் கடாக்ஷித்தல், வாய் திறந்து பேசுதல், அணைத்தல் செய்யக்காணாமையாலும் இந்த எம்பெருமானார் முகமலர்த்தி அவருக்குப் பிற்காலத்தில் உண்டான நம்மைப்போன்ற சரமபர்வ நிஷ்டர்களுக்கு அப்ரத்யக்ஷமாகவேயிருக்கும், அவரோடு ஒரே காலத்தில் வாழ்ந்த முதலியாண்டான், கூரத்தாழ்வான், அவர் குமாரரான பட்டர், எம்பார், திருக்குருகைப்பிரான் பிள்ளான் முத லானவர்கள் இப்படி ஒரே காலத்தில் வாழ்ந்ததனால், எல்லை யற்றதும், நினைத்தற்கரியதுமான புண்ணியமுடையவர்களான அந்த ஆசார்யர்களுக்கு—பரமகாருணிகராய், பெருவண்மையுடைய வராய், எல்லையற்றதும் ஒப்புயர்வற்றதுமான ஆஶ்ரிதவாத் ஸல்யம் ஸௌஶீல்யம் முதலான பெருங்குணங்களுக்குக் கடலா யிருப்பவராய், நினைத்தற்கரிய திவ்யஜ்ஞானபக்தி வைராக்யங் களுக்குக் கொள்கலமாயிருப்பவராய், எல்லையற்ற பெருமையுடைய வராய், குற்றமற்றவையாய், தெளிவானவையான ஶமம் தமம் முதலிய ஆத்மகுணங்களுக்கு இருப்பிடமாயிருப்பவராய், எல்லா ஆசார்ய ஸமூஹங்களாலும் எப்போதும் ஆஶ்ரயிக்கப்படும் திரு வடித்தாமரையிணையையுடையவராய், நித்யமாய், குற்றமற்றதான பகவதநுபவ வெள்ளத்தாலுண்டான எல்லையற்ற ஆனந்தம் அலையெறியும் அமுதக்கடலில் மூழ்கிய ஸர்வாவயவங்களையும் உடை யவராய், உலகனைத்துக்கும் பரமாசார்யராய், நமக்குக் குலநாத ராய், நமக்கு ஸ்வாமியாய், நமக்கு இயல்வான ஶேஷியாய், புக லற்றவர் அனைவர்க்கும் புகலாயிருப்பவராய், ப்ரபந்நஜனங்க ளுடைய இதயத்தாமரையில் வாழும் ஹம்ஸமாயிருப்பவராய், பகவானான ஸ்ரீமத்ராமாநுஜாசார்யருடைய — மிகுந்ததாய், குற்ற மற்றதாய், ஆழ்ந்ததான நீர்நிலையின் நடுவில் உண்டானதாய், பருத்த தண்டை உடையதாய், இளஞ்சூரியனுடைய கிரணங் களால் மலர்ந்ததான தாமரையின் இதழ்போன்று குற்றமற்று நீண்டு விளங்கும் திருக்கண்களையுடைய திருமுகமண்டலத்தின் மலர்த்தி — தம் கையிலே இலங்கும் உருண்டையான் அழுக்கற்ற நெல்லிக்கனிபோல் நேரில் காணலாயிருந்தது. எம்பெருமா னார்க்கு முற்காலத்தில் இருந்த மணக்கால்நம்பி, உய்யக்கொண்

டார், நாத₃முனி முதலானோர்க்கும் அம்முகமலர்ச்சி அப்ரத்யக்ஷமாகவேயிருந்தது. இனி, நித்ய விபூ₄தியில் ப்ரத்யக்ஷமாக எம்பெருமானாரின் முகமலர்த்தியை நாம் அடையவேண்டியிருக்கும்போது ஸம்ஸாரம் நீங்கி, ப்ராப்யபூ₄மியான ஸ்ரீவைகுண்ட₂ தி₃வ்ய நக₃ரத்தை அடைந்து, அந்த முகமலர்த்தியை அநுப₄விக்க வேண்டியிருக்கிறபடியாலும், ஸம்ஸாரத்திலிருந்து கரையேற்றுவிக்கும் உத்தாரகத்வமும் இந்த ராமாநுஜாசார்யருக்கே உரியதாயிருக்கையாலும் சரமாதி₄காரிகள் ஸர்வோத்தாரகரான ராமாநுஜாசார்யரிடமே ப்ராப்ய ப்ராபகத்வங்கள் இரண்டையும் அறுதியிட்டு, அவரிடமே ஊன்றியிருப்பவர்களாயிருக்கவேண்டும்.] என்று அருளிச்செய்தாரிறே.

204. ப்ரமேயரத்னம். "யாவச்ச₂ரீரபாதம் அத்ரைவ ஸ்ரீரங்கே₃ ஸுக₂மாஸ்ஸ்வ" என்று பா₄ஷ்யகாரர் அருளிச்செய்வர்.

205. ப்ரமேயரத்னம். பெரியநம்பி வைபவம் ஐ. நி. 30 காண்க.

206. ப்ரமேயரத்னம். பா₄ஷ்யகாரர் நீராட எழுந்தருளும்போது மிளகாழ்வான் கையைப் பிடித்துக்கொண்டு எழுந்தருளுவர். மீண்டு எழுந்தருளும்போது பிள்ளையுறங்காவில்லிதா₃ஸர் கையைப் பிடித்துக்கொண்டு எழுந்தருளுவர்.

207. ப்ரமேயரத்நம்—"ஆசார்யபத₃ம் என்று தனியே ஒன்று உண்டு; அது உள்ளது எம்பெருமானாருக்கு" என்று திருக்குருகைப்பிரான் பிள்ளான் பணிப்பர்.

208. ப்ரமேயரத்னம். பா₄ஷ்யகாரரும் ஆழ்வான் தே₃சாந்தரத்தினின்று வரக்கண்ட ப்ரீத்யதிசயத்தாலே, மீண்டும் த்₃வயத்தை உபதே₃சித்தருளினார்.

209. ப்ரமேயரத்னம். பெரியநம்பி வைபவம் ஐ. நி. 32 காண்க.

210. ப்ரமேயரத்னம். திருமாலையாண்டான் வைபவம் ஐ. நி. 36 காண்க.

211. ப்ரமேயரத்னம். பா₄ஷ்யகாரர் 'ஆளவந்தாருக்கு நான் ஏகலவ்யனேபாதி' என்று அருளிச்செய்வர்.

212. ப்ரமேயரத்னம். பெரியதிருமலைநம்பி வைபவம் ஐ. நி. 14 காண்க.

213. ப்ரமேயரத்னம். திருமாலையாண்டான் வைப₄வம் ஐ.தி. 26 காண்க.

214. ப்ரமேயரத்னம். "பேற்றுக்கு ப்ரபத்தி ஒருகால் பண்ண அமையும்; புந:ப்ரபத்தி பண்ணுகிறது காலக்ஷேபஸு*க₂ ரூபம்" என்று ப₄ாஷ்யகாரர் அருளிச்செய்வர்.

215. கோயிலொழுகு—உடையவர் வைப₄வம்:—

இந்தப்படி அநேககாலம் ஆளவந்தார் ஸ்ரீ கார்யம் விசாரித்து, தமக்குப் பின்பு உப₄யகைங்கர்ய நிர்வாஹகரார்? என்று திருவுள்ளத்திலே நினைத்திருக்க; ஸ்ரீபெரும்பூதூரிலே இளையாழ்வாரவதரித்து, பெருமாள்கோயிலிலே யாத₃வப்ரகாஶனண்டையிலே வித்₃யாப்₄யாஸம் பண்ணுகிற சேதியைக் கேட்டருளி, ஆளவந்தார் பெருமாள்கோயிலுக்கெழுந்தருளி, இளையாழ்வாரைக் கடாக்ஷித்து, "உப₄யகைங்கர்ய நிர்வாஹகராகவேணும்" என்று அநுக்₃ரஹித்து, பேரருளாளர் ஸந்நிதி₄யிலேயும் ப்ரார்த்தி₂த்துக்கொண்டு கோயிலேற வெழுந்தருளி, இளையாழ்வார் யாத₃வப்ரகாஶனைவிட்டுத் தேவப்பெருமாளுக்கு சாலைக்கிணற்றிலே திருமஞ்சன கைங்கர்யம் பண்ணிக்கொண்டிருக்கிற சேதியைக் கேட்டு, ஆளவந்தார் தேவப்பெருமாள் விஷயமாக ஸ்தோத்ரத்தைப் பண்ணியருளி, பெரியநம்பியைப் பெருமாள் கோயிலுக்கு அனுப்பியருள; பெரிய நம்பியும் பெருமாள் கோயிலுக்கெழுந்தருளி, தேவப்பெருமாள் ஸந்நிதி₄யிலே ஆளவந்தார் ஸ்தோத்ரத்தை விண்ணப்பஞ்செய்ய, இளையாழ்வார் கேட்டு, கேவலம் ஈடுபட்டு, ஆளவந்தாரை ஸேவிப்பதாகப் பெரியநம்பியுடனே திருக்கரம்பனூரிலே யெழுந்தருளி, இக்கரை கோலாஹலத்தை விசாரித்து, ஆளவந்தாரைத் திருப்பள்ளி படுக்கிறதைக் கேட்டு மிகவும் ஶோகித்து, பெரிய நம்பியுடனே ஆளவந்தாருடைய தி₃வ்ய மங்க₃ள விக்₃ரஹத்தை ஸேவித்து, அவருடைய மநோப₄ாவத்தையறிந்து ப்ரதிஜ்ஞை பண்ணி, தாம் வந்த வரத்து நிஷ்ப₂லமாகையாலே பெருமாளையும் ஸேவியாமல் பெருமாள்கோயிலுக்கு எழுந்தருளி, தேவப்பெருமாளுக்கு முன்போலே திருமஞ்சன கைங்கர்யம் பண்ணிக்கொண்டிருந்து, பேரருளாளப்பெருமாள் திருக்கச்சிநம்பியுடனே ஆறு வார்த்தை அருளிச்செய்தபடியினாலே 'பெரியநம்பி திருவடிகளிலே ஆஶ்ரயிக்கவேணும்' என்று புறப்பட்டருளின ஸமயத்திலே; அழகியமணவாளப்பெருமாளும் பெரியநம்பியை நியமிக்க, பெரிய

நம்பியும் புறப்பட்டருளி, பயணகு3தியிலே வர, இருவரும் ஸ்ரீமது4ராந்தகத்திலே ஸந்தித்து, தாம் வந்த காரியத்தை நிறைவேற்றிக்கொண்டு, இருவரும் பெருமாள் கோயிலுக்கெழுந்தருளி, சிலகாலமிருந்து, பெரியநம்பி கோயிலேற எழுந்தருளின வநந்தரம், இளையாழ்வார் ஆஶ்ரம ஸ்வீகாரம் செய்தருளின சேதியை ஸ்ரீரங்கதி3வ்யநக3ரவாஸிகளும் பெருமாளும் கேட்டருளி, அழகியமணவாளப்பெருமாள் நியமநத்தினாலே திருவரங்கப் பெருமாளரையரை ஸ்த2லத்தார் பெருமாள்கோயிலுக்குப் பயணம் பண்ணி, இராமாநுசனை அழைத்துக்கொண்டு வரச்சொல்லியனுப்ப; அரையரும் புறப்பட்டுப் பெருமாள்கோயிலுக்கெழுந்தருளி, தேவப் பெருமானை கா3நரஸத்தாலே மயங்கும்படி பண்ணி, இராமானுசனைப் பாரிதோஷிகமாக வாங்கிக்கொண்டு கோயிலுக்கெழுந்தருளுகிற சேதி கேட்டருளின அழகியமணவாளப்பெருமாள் நியமநத்தினாலே, ஸபரிகரராய் ஸேனை முதலியார் புறப்பட்டருளி, பன்றியாழ்வான் கோயிலளவாக எழுந்தருளி, இராமானுசனை எதிர்கொண்டு கோயிலிலே அழைத்துக்கொண்டுவர; அழகிய மணவாளப்பெருமாளும், திருவனுக்கன் திருவாசலளவாக திருக்கைத்தலத்திலே எழுந்தருளி எதிர்கொள்ள; இராமானுசனும், பெரியநம்பியை முன்னிட்டுக்கொண்டு ஸந்நிதி4யிலே புகுந்து ஸேவிக்க; பெரியபெருமாளும் குளிரக்கடாக்ஷித்து, பரிவட்டம் முதலான வரிசைகளையும் செங்கோலையும் ப்ரஸாதி3த்து, "நம் உப4யவிபூ4தியும் உமக்கு இஷ்ட விநியோகா3ர்ஹமாம்படி தந்தோம், நீர் உப4யவிபூ4தியையும் உடையவராய் நம் காரியத்தை ஆராய்ந்து கொண்டுபோரும்" என்று அருளப்பாடு ஸாதி3த்து, "திருவிக்ரமன் திருவீதியில் வடக்கு மாடத்திருவீதியில் கீழ்க்கண்டத்தில் முதல் மனையான சேரன் மடத்திலே, உடையவரை விட்டுவாருங்கோள்" என்று பரிஜநங்களை நியமிக்க, அந்தப்படியே உடையவரும், மடத்திலே, ஆழ்வான் ஆண்டானுடனே எழுந்தருளி, பரிஜநங்களையும் பெரியநம்பியையும் க்ஷாமணம் பண்ணிக்கொண்டெழுந்தருளியிருந்து, மற்றுநாள் முதலாக ஸ்ரீகார்யம் நிர்வஹித்தருளின விவரம் :— ஆழ்வானை த3ர்ஶந நிர்வாஹத்துக்குத் தமக்கு உசாத்துணையாக நியமித்து, முதலியாண்டானை உள்துறை கைங்கர்யத்திலே நியமித்து, தாம் திருக்கொட்டார வாசலுக்குத் தென்புறத்திலே உமிக் கட்டில் குறட்டிலேயிருந்து திருவிடையாட்டப்பரிப4வமும், மேல்முகம் கீழ் முகங்களான திருத்தோப்புகளில் விஶேஷங்களும், திருக்கொட்

டாரத்தில் மரியாதைகளும் அறிவறியாக விசாரித்து, படித்தனம் முதலானதுகளும் திட்டம்பண்ணி. நாள்தோறும் படித்தனம் முதலான கணக்குகளைப் பெருமாள் பெரியஅவஸரம் அமுதுசெய்தருளினபின்பு ஏகாந்தமாக ஸந்நிதி4யிலே விண்ணப்பஞ் செய்து கொண்டு, இந்தப்படி ஸ்ரீகார்யம் விசாரித்து: கருவுகலம் முதலானவைகளையும் விசாரித்து, ப3ஹு அவந்தரையாயிருந்தபடியினாலே, அந்தந்தத் துறைகளைத் திட்டம் பண்ணவேணுமென்று திருவுள்ளத்திலே நினைத்திருக்க; இப்படி அறிவறியாய் விசாரிக்கிறது பரிஜநங்களுக்கு நிர்ப3ந்த4மாய், காலதே3ஷத்தாலே பரிஜனங்கள் விஷப்ரயோகா3தி3 ஈதிபா3தை4களைப் பண்ணினபடியினாலே, உடையவரும் திருவரங்கந் திருப்பதியை விட்டு, இரண்டு வருஷம் திருவெள்ளறையிலே எழுந்தருளியிருந்து, அவ்விடத்திலே அழகியமணவாளப் பெருமாளை எழுந்தருளப்பண்ணி, ஏரியுங்கட்டி, பங்கயச்செல்வி ஸ்ரீகார்யத்தையும் த3ர்ஶந நிர்வாஹத்தையும் செய்துகொண்டு எழுந்தருளியிருக்க; பெருமாள் நியமனத்தினாலே பரிஜநங்கள் ப3ஹுதப்தராய், உடையவரை எழுந்தருளப்பண்ணுவித்துக் கொண்டுவரச்சொல்லித் திருவரங்கப் பெருமாளரையரை அனுப்ப; அரையரும் உடையவரை அழைத்துக் கொண்டுவர; உடையவரும் ஸ்ரீகார்யம் விசாரிக்குமளவிலே, அகளங்கநாட்டாழ்வான் உடையவர் திருவடிகளை ஆஶ்ரயிக்க; அவர் ஸமர்த்த2ராகையாலே திருவிடையாட்டம் விசாரிக்கிற கைங்கர்யத்தை அவருக்கு நியமித்தருளி; பூர்வம் திருவிக்கிரம சோழன் கைங்கர்யமான ஆலிநாடன் திருவீதியில் பெரிய திருமண்டபத்தில் குறட்டின்மேலே மரக்கோப்பாகத் திருமண்டபங் கட்டிவைத்து, ஒருநாள் ஆண்டான் த3த்4யோத3நத்துடனே நல்ல நாவல்பழத்தை அமுது செய்யப் பண்ணுவிக்க; பின்பு, உடையவர், அழகியமணவாளப்பெருமாள் ஸந்நிதி4யிலேவர, திருமுகமண்டலம் வாடியிருக்கக் கண்டு, அமுதுசெய்த பதா3ர்த்த2த்தை விசாரித்து, ''த3த்4யோத3நத்துடனே நாவல்பழம் அமுது செய்தபடியினாலே இப்படியாய்த்து'' என்று ஆண்டானை நிக்3ரஹித்து, தம் ஶிஷ்யரான க3ருட3வாஹந பண்டி3தரைக் கொண்டு பெருமாளுக்கு சிகித்ஸிப்பித்து, பூர்வம் புராண ஸித்3த4மாய் ஜீர்ணமாயிருந்த த4ந்வந்த்ரியை ப்ரதிஷ்டி2ப்பித்து, அந்தக் கோயிலை க3ருட3வாஹந பண்டி3தருக்குக் கட்டளையிட்டு, அவரிடத்திலும் நித்யமாக ராத்ரி திருக்காப்புச் சேர்க்கிறதுக்கு முன்பாக, குடிநீர் பால் அலங்காரமாக வந்து அமுது செய்தருளும்படி திட்டம்பண்ணி, ''திருவரங்கந் திருப்பதி ஸ்ரீபாஞ்

சராத்ரம் என்று ஶாஸ்த்ர ஸித்₃த₄மாயிருக்க, ஸ்ரீவைக₂ாநஸமா யிருக்கலாகாது'' என்று வைக₂ாநஸநம்பியாரை நிக்₃ரஹித்து, ஏகா யநருக்கு அஞ்சுபேருக்கு தீ₃க்ஷை ஸாதித்து மண்டலநாம மென்று இவர்க்குப் பட்டப்பேராக அஞ்சு திருநாமமும் ஸாதித்து ''ப₄ாக₃வதநம்பிமார்'' என்று ஶாஸ்த்ர ஸித்₃த₄வ்யவஹாரமும் நடத்திவைத்து, ஸ்ரீபாஞ்சராத்ரத்தில் பாரமேஶ்வர ஸம்ஹிதாக்ர மத்திலே திருவாராத₄நம் நடத்திவைத்து, கருவுகலம் முதலான வைகளுக்கு *தோதவத்தித் தூய் மறையோரான கொடுவா ளெடுப்பார்கைபிலே பூட்டும் திறவுகோலும், தழையிடுவாருடைய முத்₃ரை—தாங்கள் பக்ஷிராஜ பரிகரமாகையாலே தங்கள் கைங் கர்யத்துக்கு யஜமானரான க₃ருட₃முத்₃ரையும், ஆரியபட்டாள் காவலும், பல்லவன் விழுப்பரையன் கணக்குமாக நடந்துவர; அதில் ப₃ஹு அவந்தரையாக இருந்தபடியினாலே, திருவாழி யிலச்சினை தம்மதாகவும், ஸ்ரீபாஞ்சஜந்யமுத்₃ரை நம்பிமாரதாகவும் நடத்துவிக்க; அந்தக் கணக்கனை ரங்க₃த்₃ரோஹத்திலே தள்ளியிருந்தபடியினாலே ஒரு ஸ்ரீவைஷ்ணவ ப்₃ராஹ்மணனுக்குக் கணக்குக் கட்டளையிட நினைக்க, ஸ்த₂லத்தார் பூர்வமர்யாதை₃யை விண்ணப்பஞ்செய்ய, அந்தப்படியே வேளாளனை விழுப்பரைய னுக்கு கோயில் கணக்கன் என்று கீரனூர் கிழவனுக்கு ஆஶ்ர யண பூர்வகமாக ''ஶட₂கோபதா₃ஸன்'' என்று தா₃ஸ்ய நாமத்தை ஸாதித்து அவனுக்கு ''ஸ்த₂லஸம்ப்ரதி'' என்னும் பேரையும் நாட்டி, அவர்களுக்குச் சில வ்யவஸ்தை₂யும் பண்ணி வைத்து; இளநீர்திருத்தி ஸமர்ப்பிக்கிறது கைக்கோளமுதலியா யிருக்க, ப்₃ராஹ்மணனை நியமிப்போமென்று திருவுள்ளம்பற்றி, கைக்கோளமுதலியை சோதிக்குமிடத்தில், ப₄ாவஶுத்₃தி₄ யுண்டாயிருந்தபடியினாலே திருவுள்ளமுகந்து அவனையே அந்தக் கைங்கர்யத்திலே நியமித்து, பூர்வம் கொவணர், கொடவர், கொடு வாளெடுப்பார், பாடுவார், தழையிடுவார் என்று அஞ்சு கொத் திலே பரிஜநங்கள் அடங்கி நடந்து வந்ததை, பத்துக்கொத் தாகப் பெருக்கி நடப்பிக்க வேணுமென்று திருவுள்ளம்பற்றியிருக்கு மளவில்;

வாக்₃மியான ராஜவல்லபராய் நம் கோயில் புரோஹிதராய் நம் பெரியகோயில்நம்பி உடையவரை மதியாதே கில்பிஷம் பண்ணிக்கொண்டிருக்க, உடையவரும் அவரைத் திருவரங்கந்

---

* தோதவத்தி (பெரியாழ்திரு 4-8-1) — தௌ₄தவஸ்த்ரீ — வெள்ளை வஸ்திரம் உடுத்தவர்.

திருப்பதியில் உத்₃வஸிப்பிப்பதாகத் திருவுள்ளம்பற்றி ஒரு கால விஶேஷத்திலே பெருமாள் புறப்பாட்டுக்குக் காத்திருக்கிற ஸமயத்திலே, உடையவர் ஸ்வப்நத்திலே, வ்ருத்₃த₄ ஸ்ரீவைஷ்ணவராய் வந்து 'பெரிய கோயில் நம்பி ப₃ஹு காலமாய் நம்மை நம்பியிருக்கிறார், திருவுள்ளமானபடி செய்யவேணும்' என்று அருளிச்செய்ய; உடையவரும் கண்விழித்து, ஆழ்வானை அழைத்து, 'பெருமாளுக்கு நம் ஶத்ருவான பெரியகோயில்நம்பி இருக்கிறதே திருவுள்ளமாயிருக்கிறது நாம் பெருமாள்கோயிலுக்குப் போவோம்' என்று அருளிச்செய்ய; ஆழ்வானும், "பெருமாள் அந்தப்படி அருளிச்செய்தபோதே அவரை அனுகூலராய்த் திருவடிகளிலே ஆஶ்ரயிக்கும்படி பண்ணியருளுவர்" என்று விண்ணப்பஞ்செய்ய, "ஆகில் அவரைத் திருத்தும்" என்று அருளிச்செய்ய; ஆழ்வானும் வித்₃வானான பெரியகோயில்நம்பியை க்ரமேண திருத்தி, உடையவர் திருவடிகளைச் சேரவிட; உடையவரும் அவரைக் கடாக்ஷித்து க்ருபைபண்ணி, அவருடைய வாங்மாது₄ர்யத்தினாலே "அமுதன்" என்று திருநாமம் சாத்தி ஹ்ருஷ்டராயிருக்க; உடனே ஐப்பசி மாஸத்திலே அமுதனாருக்கு மாத்ரு வியோக₃மாய், பத்துநாளையில் கர்மங்களை நிறைவேற்றி, ஏகாஹத்துக்கு முன்பு போலே ப்ராக்ருதராயிருக்கிற தே₃ஹாநுப₃ந்தி₄களை பூ₄ஜிப்பிக்க வொண்ணாமையாலே, எம்பெருமானார் ஸந்நிதி₄யிலே சென்று விண்ணப்பஞ்செய்ய; உடையவரும், தம் முதலிகளைக் கடாக்ஷிக்க, முதலிகளும் இசையாமலிருக்கக்கண்டு, ஆழ்வானை அழைத்து, "நீர் போய் ஏகாஹத்தை பு₄ஜித்து நிறைவேற்றும்" என்று அனுப்ப; ஆழ்வானும், நியமநப்படியே பு₄ஜித்து, உத்தராபோஶந ஸமயத்திலே பெரியகோயில்நம்பி கையிலே அவரதான கோயில் பௌரோஹித்யமும் புராணபட₂நமுமான கோயில் காணியாக்ஷியை த₃ானம் பண்ணுவித்துக்கொண்டு, த₃ாநஶாஸநமும் வாங்கிக்கொண்டு, மட₂த்திலே ஸமர்ப்பிக்க;

### உடையவர் ஸந்நிதி₄ பரிகரங்களுக்குக் கைங்கர்யம் நியமித்தல்

உடையவரும் ஸந்துஷ்டராய், திருவுள்ளத்திலே நினைத்தபடியே ஸந்நிதி₄பரிகரங்களைப் பத்துக்கொத்தாகப் பெருக்கி; (1) தி₃வ்யதே₃ஶ வாஸிகளாய், பூர்வம் கோயிலொட்டற்றுத் தம் திருவடிகளை ஆஶ்ரயித்தவர்களை "திருப்பதியார்" என்று ஒரு கொத்தாகச் சாற்றி, அவர்கள் கைங்கர்யங்களை விப₄ஜித்து,

திருப்பாற்கடல்தா3ஸர் திருக்குருகைப்பிரான் முதலாக உள்ளூர்க் காணியாளரான செல்வநம்பி முதலானோர்க்கும் கைங்கர்யங்களை நியமித்து; (2) இரண்டாம்கொத்தாக, கொடவரில் திருத்தாழ் வரைதா3ஸர் திருவம்ஸரான அஞ்சுதிருநாமத்துக்கு ஆஶ்ரயண பூர்வகமாக, "திருக்குருகூர்தா3ஸர், நாலுகவிப்பெருமாள் தா3ஸர், ஶட2கோபதா3ஸர், திருக்கலிகன்றிதா3ஸர், ராமாநுஜதா3ஸர் என்று திருநாமமும் ஸாதி3த்து, விஶேஷகடாக்ஷம் செய்தருளி, அவர்களுக்குக் கோயில் கைங்கர்யங்களையும் வ்யவஸ்தி2தமாக்கி, "திருப்பணிசெய்வார்" என்று நிருபகமாக்கி; (3) மூன்றாம் கொத்தாக, பா4கவதநம்பிமாரை ப்ரதிஷ்டி2ப்பித்து, அவர்களுக்குக் கைங்கர்ய மர்யாதை3யைப் பண்ணுவித்து; (4) தோதவத்தித் தூய்மறையோரான கொடுவாளெடுப்பாரில், பெரிய பெருமாள் திருவரங்கமாளிகையார் முதலான பேருக்கு ஆஶ்ரயணாதி3களைப் பண்ணிவைத்து, "உள்ளூரார்" என்று வ்யவஹரிப்பித்து; (5) பாடுவாரான நாத2முநியரையர்களுக்கும் ஆஶ்ரயணாதி3களை ஸாதி3த்து, கைங்கர்ய வ்யவஸ்தை2யும் "விண்ணப்பம் செய்வார்" என்கிற வ்யவஹாரமும் கல்பித்து; (6) திருவரங்கவள்ளலார் என்றும், தூயமுனிவேழம் என்றுமிருக்கிற தம் ஶிஷ்யருக்குத் திருமஞ்சநம் முதலான சில கைங்கர்யங்களை உண்டுபண்ணி ஒரு கொத்தாக்கி, அவர்களுக்கு "திருக்கரகக்கையார்" என்று பேருண்டாக்கி; (7) தலைமுடியிடுவாரான ஸேநைநாத2 ப்3ரஹ்மராயர், வீரஸுந்த3ரப்3ரஹ்மராயர், ஜந (ஜக3ந்)நாத2ப்3ரஹ்மராயர் முதலானோருக்கு ஆஶ்ரயணாதி3களை ஸாதி3த்து, அவர்களுக்குப் பூர்வம் அந்தந்த ரபு4க்கள் பேர்கொடுத்ததுகளை விளங்கும்படி பண்ணி, அவர்களுக்கு "ஸ்தா2நத்தார்" என்று வ்யவஹாரமுண்டாக்கி; (8) ரிக3ாதி3வேத3 சதுஷ்டயமும் புராணேதிஹாஸ இயல் ஸ்ரீரங்க3மாஹாத்ம்ய பூர்வோத்தர மீமாம்ஸா ஸூத்ர ஸ்ரீபா4ஷ்ய ஆக்2யாந ஆபஸ்தம்ப3 போ3தா4யந ஸூத்ர ஸ்தோத்ர க3த்3ய பஞ்சாங்க3 ஸங்கீர்த்தநாதி3களை நித்யமாக ஸந்நிதி4யிலே திருவாராத4ந காலங்களிலே விண்ணப்பஞ் செய்யும்படி, தத்தத் ஶாகா2த்4யாயிகளாய், தம் திருவடிகளை ஆஶ்ரயித்தவர்களாயிருக்கிற க3ருட3வாஹநபண்டிதர், பெரியநம்பி, திருப்பணி செய்வார், நம்பிமார், ஆழ்வான், கோ3விந்த3ப்பெருமாள், ஆச்சான், திருவரங்கத்தமுதனார், பிள்ளான், சிறியாழ்வான், அம்மாள் முதலானவர்களை நியமித்து, அவர்களை ஒருகொத்தாக்கி, "பா4ட்டாள்கொத்து" என்று பேரிட்டு; (9) "ஆரிய

பட்டாளேயும்'' ஒருகொத்தாக, அவர்கள் கைங்கர்யத்தையும் திட்டம் பண்ணி; (10) புண்டரீகதாஸர் கைங்கர்யத்தையும் திட்டம் பண்ணி "தாஸநம்பி கொத்து'' என்று வ்யவஹரிப்பித்து;— இந்தப்படி பத்துக் கொத்தாக்கி, நியதபரிஜநங்களே வ்யவஸ்த்திதமாக்கி—ஸ்ரீஸேநாபதி துரந்தரராய் கோவணவரான தாம் திருவரங்கந் திருப்பதி ஸ்ரீவைஷ்ணவர்களுக்குத் தலைவராகையாலே, முதல்கொத்திலே அநுப்ரவிஷ்டராய், தாம் நித்யமாகக் கற்பித்த கருடவாஹந பண்டிதர் கைங்கர்யத்தையும் திருப்பதியார் கொத்தோடே சேர்த்து, இக்கொத்து முதல்பேரும்; பாரம்பர்யமாகக் கொடவருக்கு இரண்டாம்பேரும், தாம் கட்டளேயிட்ட பாகவத நம்பிமார்களுக்கு, தோதவத்தித் தூய்மறையோருடைய கைங்கர்யம் எடுத்துக் கைநீட்டுகிறதாகையாலே நம்பிமாருக்கு மூன்றும்பேருமாக, இப்படி கைங்கர்யத்தைப் பத்துபேருக்கும் திட்டம் செய்தருளினுர்.

இப்படி பத்துக்கொத்துக்கும் கைங்கர்ய விபாகமும் பண்ணி, பரமவிரக்தராய் தேசாந்தரிகளான ஏகாங்கிகள் நாலுபேருக்கும் வ்யவஸ்த்திதமாகச் சில கைங்கர்யங்களே நியமித்து; தங்கப்பிரம்பு நான்கு, வெள்ளிப்பிரம்பு இரண்டு, தலைவலேசல்பிரம்பு இரண்டு ஆக எட்டுப் பிரம்புக்கும் விரக்தரான திருநாமதாரிகளே நியமித்து, அவர்கள் கைங்கர்யங்களேயும் விபஜித்து; தேசாந்தரிகளான சாத்தாத முதலிகளுக்குச் சில கைங்கர்யங்களேயும் நியதமாக நியமித்து; பத்துக்கொத்தாகத் திட்டம்பண்ணி; அந்தந்த வகையில் பத்துக்கொத்துக்கும் கைங்கர்ய விபாகமும் செய்தருளி, திருவரங்கச் செல்வம் சிந்தாமே மங்காமே பொங்கும்படி ஆராய்ந்துகொண்டுவரும் காலத்திலே;

ஒரு திருவத்யயநோத்ஸவத்துக்கு திருநகரியிலும் ஆழ்வாரெழுந்தருளக்கூடாமல் சில உபாதிகளுண்டாயிருக்க, எம்பெருமானுர் தாமே கோயிலிலே ஆழ்வாரை திருப்ரதிஷ்டை பண்ணி வைத்து, திருமங்கைமன்னனேத் தவிர மற்ற ஆழ்வார்களேயும் நாதமுனிகளேயும் திருப்ரதிஷ்டை பண்ணிவைத்து, திருமொழி திருவாய்மொழித் திருநாளுக்கு ஆழ்வார்கள் எழுந்தருள, பெருமாள் அருளப்பாடு முதலான வரிசைகளே ஆழ்வார்களுக்கு ஸாதித்து, அவர்களுக்குக் கரணபூதரான அரையருக்கு அருளப்பாடு ஸாதிக்கும்படி பண்ணி; இயற்பாவுக்குள் முதலாழ்வார்கள் முதலான இயற்பா அருளிச்செய்தவர் மாத்திரம் அழகியமணவாளன்

திருமண்டபத்திலே ஸந்நிதி4க்கு நேராக எழுந்தருளியிருக்கும்படி பண்ணிவைத்தும், பெருமாளுடைய திருமுளைத் திருநாள்களிலே திருவீதிகளிலே தே3ஶாந்தரி ஸ்ரீவைஷ்ணவர்கள் திருக்கோவை கோத்து இயற்பாவை நித்யம் ஒரு திருவந்தாதியாக அநுஸந்தி4த்துவர; அந்தத் திருக்கோவை ஆழ்வார் திருவோலக்கமாகையாலே, திருப்பணிப்பு செய்வாருக்குத் தம் உகப்பினாலே ஆழ்வார்களுடைய சந்நிதி4ப்பேராக சில கைங்கரியங்களை நியமித்து; தம்முடைய த3ர்ஶனத்துக்கு வெற்றிதோன்ற ஸமய ச2த்ரத்தைத் திருக்கோவைக்கு முன்னே பிடிக்கும்படி திருப்பணி செய்வாரை நியமித்து; இவ்வாழ்வார்களுக்கும், ஆண்டாள் தவிர மற்ற ஆழ்வார்கள் தந்தாம் திருநக்ஷத்ரத்தினன்று திருமஞ்சனத்துடனே ஸந்நிதி4யிலேயெழுந்தருளி, ப்ரத2மகடாக்ஷத்திலே மங்க3ளாஶாஸநம் செய்தருளி, திருவாராத4நமாய், அமுது செய்தருளி ஸேனைமுதலியாரும் அமுதுசெய்தருளின வநந்தரம், ஒரு தளிகை ப்ரஸாத3மும் ஆழ்வார் அமுது செய்தருளி, ஸ்ரீப4ண்டா3ரத்துக்குப் போனபின்பு, தாம் உடுத்துக்களைந்த பீதகவாடையும் சூடிக்களைந்த திருமாலையும் பூசிக்களைந்த களப4மும் ப்ரஸாதி3க்க ப்ரஸாத3ப்பட, விடைஸாதி3த்து, தம் வரிசைகளாக சித்ரதாலவ்ருந்தாதி3களை ப்ரஸாதி3க்க, புறப்பட்டு நாய்ச்சியார் ஸந்நிதி4யிலேயும் அந்தப்படியே ஸத்க்ருதராய், திருவீதியிலே யெழுந்தருள; அத்4யாபக ஸ்ரீவைஷ்ணவர்கள் இயல் ஸேவிக்க, திருப்பணி செய்வார் அந்தத் திருவோலக்கத்துக்கு ஸந்நிதி4ப்பேராய் இயலுக்கு ஸமர்ப்பிக்கிற அடைக்காயமுது வாங்கியும், சந்தடி விலக்கியும், ஸமயச2த்ரத்தையும் பிடித்துக் கொண்டு, ஆழ்வார் தம் கோயிலிலே எழுந்தருளின பின்பு; அரையருக்கும் ஸ்ரீபாத3ம் தாங்கின சாத்தாத முதலிகளுக்கும், அத்4யாபக ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் ப3ஹுமாநம் திருப்பணி செய்வார் ஸாதி3த்து; தீர்த்த2மும், சாத்துப்படியும், அடைக்காயமுதும், திருவோலக்கத்திலே விநியோக3ம்பண்ணி; கோயில் பரிகரங்களான பத்துக்கொத்துக்கும் அத்4யாபகர்கள் ப3ஹுமதியுடன் விநியோக3ம் பண்ணி, ஸேவாகாலமாய்த் திருவோலக்கம் கலைந்த பின்பு ததீ3யாராத4நம் நடக்கும்படி பண்ணி, ஆண்டாள் திருநக்ஷத்ரத்துக்கு தம் ஸந்நிதி4யிலேதானே சாற்றுமுறை ஸமயத்திலே பெருமாள் தோதவத்தித் தூய்மறையோர் கையிலே அறுவாணமனுப்பியருள, ஆண்டாளும் அவர்களை ஆத3ரித்து ஆழ்வார் ஸந்நிதி4யைப்போலே நடக்கும்படி திட்டம் செய்தருளினர்.

இந்தப்படி எம்பெருமானார் திட்டம் செய்தருளினபடியினாலே, பெருமாள் ஸந்நிதி4யிலே ஆழ்வாருக்குக் கரணபூ4தரான அரையர் ஆழ்வார்கள் அருளிச்செய்த திவ்ய ப்ரபந்தங்களை இசையுடனே விண்ணப்பஞ்செய்வார்கள். நாய்ச்சியார் ஸந்நிதி4 முதலான திரு விருப்புக்களிலே ஒரு பாட்டு அரையர் இசையுடனே ஸேவிக்க, மற்றப் பாட்டுக்களை இயலாக ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஸேவிக்க, இசையுடனே அரையர் சாற்றுவர். இயற்பாவோடே கூடினதும், நாத2முனிகளைத்தொட்டு உடையவர் காலத்திலேயும் அநேகநாள் அரையர் ஸேவித்துக்கொண்டு வருமளவில்; ஒருகால விஶேஷத் திலே, பெரியகோயில்நம்பி, தம்முடைய கோயில் பௌரோஹித் யத்தையும், புராணபட2நத்தையும், ப்3ரஹ்மரத2த்தையும் ஆழ்வா னுக்கு தா3னம்பண்ணி, தாம் கோயிலிலே ஒட்டற்றிருந்தபடி யாலே, அதுமுதலாக ஆழ்வான் ப4ட்டாள்கொத்திலே சேர்ந்து, ஸந்நிதி4பௌரோஹித்யமும் நிர்வஹித்துக்கொண்டு; பூர்வம் திருக் குறுங்குடியிலே நடந்த கைஶிகவ்ருத்தாந்தத்தைப் பெருமாள் தம் முடைய ஸந்நிதி4யிலே உத்தா2நத்3வாத3ஶியில் கால்யோத்ஸவ காலத்திலே விண்ணப்பஞ்செய்யச் சொல்லி நியமித்து, ஸ்ரீ பாஞ்ச ராத்ரோக்தப்ரகாரமாகத் தாம் அந்த உத்ஸவாந்தத்திலே திருவீதி யெழுந்தருளுகிற ப்3ரஹ்மரத2த்தைப் பௌராணிகரான பெரிய கோயில் நம்பிக்குப் பாரிதோஷிகமாக ஸாதி3த்து, தாம் உள்ளே எழுந்தருளினது முதலாக கைஶிகபுராணம் படித்து ப்3ரஹ்மரத2 மேறி வீதிவலம் செய்கிறதும், ஆழ்வானுக்கே நடந்துவருகை யில்; இத்தை உடையவர் கடாக்ஷித்து, 'வித்3வானான திருவரங்கத் தமுதனார் இப்படி ஒழிந்திருக்கலாகாது' என்று திருவுள்ளம் பற்றி; பிள்ளை திருவரங்கப் பெருமாளரையர் திருமாளிகைக்கு எழுந்தருளி, இயற்பா ஸ்ரீ கோஶத்தை பி4க்ஷையாகக் கேட்டுக் கொண்டு, 'இன்று முதலாக இயற்பாவை நீங்கள் ஸேவிக்க வேண்டாம்' என்று நியமித்து, அமுதனாரை அழைத்து, ஒருரு இயற்பாவை ஸாதி3த்து, ஸ்ரீகோஶத்தை ஸந்நிதி4யிலே வைத்து; 'ஸ்ரீ கோஶத்தின்மேலே இயற்பாவை ஆயிரமும் ஸேவியும்' என்று நியமித்தருளும்படி பண்ணி, அன்றைக்கு அரையருக்கு ஸாதி3க் கிற வரிசையெல்லாம் அவருக்கு ஸாதி3க்கும்படிபண்ண; அமுத னாரும், ஆழ்வாருக்குக் கரணபூ4தராய் இயற்பாவை ஸேவித்துச் சாற்றினபின்பு, அரையரைப் போலே வரிசைகளை ஸாதி3த்து, வீட் டிலே விடுவித்தருளினார். நாய்ச்சியார்கோயில் முதலானதுகளிலே யும் அமுதனார் இயற்பாவைத்தொடங்க, ஸ்ரீ வைஷ்ணவர்கள் அது

ஸந்தி4ப்பர்கள். இசையெல்லாம் அரையர் அநுஸந்தி4க்கிறது; இயலெல்லாம் ஸ்ரீ வைஷ்ணவர்கள் அநுஸந்தி4க்கிறது. பெரிய ஸந்நிதி4யிலே இயற்பா அமுதனார் அநுஸந்தி4க்கிறது; மற்ற இடமெல்லாம் அவர் தொடங்கி ஸ்ரீவைஷ்ணவர்கள் அநுஸந்தி4ப்பார்கள். திருவீதியில் இயல் திருக்கோவை ஆழ்வார் திருவோலக்கமாகையாலே, அவ்விடத்திலே, ஆழ்வாருக்குக் கரணபூ4தர் ஸ்ரீவைஷ்ணவர்கள்; திருக்கோவையில் ஆழ்வாருக்குக் கரணபூ4தரான ஸ்ரீவைஷ்ணவர்கள் திருவோலக்கத்தருகே திருப்பணி செய்வாரை ஸந்நிதி4ப்பேராக நியமிக்கையாலே, அந்தத் திருவோலக்கத்தில் விநியோகா3தி3 கைங்கர்யபரர் திருப்பணி செய்வார்; ஆகையாலே, ஆழ்வார்கள் ஸந்நிதி4யிலே ப்ரஸாத3 திருப்பணியாராதி3 விநியோக3மில்லை; ததீ3யாராத4நமே உள்ளது.

இப்படி உடையவர் திட்டம்செய்தருளின அநந்தரம், சில நாளைக்குப் பின்பு, திருவரங்கத்தமுதனார், எம்பெருமானார் விஷயமாக, கா3யத்ரீ ஜபஸங்க்2யையாலே கலித்துறை நூற்றந்தாதியை விண்ணப்பஞ்செய்ய; பெருமாள், ஒரு ஸப்தாவரணத் திருநாளிலே, உடையவரை, தம்முடனே கூடவரவேண்டாம் என்று நியமித்தருளி, திருவீதியிலே ஸகலவாத்3யங்களையும் நிறுத்தி, ஸ்ரீவைஷ்ணவர்கள் அநுஸந்தி4க்கக் கேட்டருளி, போரவுகந்தருளினார்; அதுமுதலாக பெருமாள் நியமநத்தினாலே, பெரியஸந்நிதி4யிலே இயற்பா அநுஸந்தி4த்தவுடனே நூற்றந்தாதியை வரிசையுடன் கேட்டருளுகிறார். நாய்ச்சியார் கோயிலிலேயும், அப்படியே ஆண்டாள் ஆழ்வார் ஸந்நிதி4யிலே இயற்பாவை அமுதனார் யஜமாநராய்த் தொடங்க, ஸ்ரீவைஷ்ணவர்கள் அநுஸந்தி4த்துத் தலைக்கட்ட, நூற்றந்தாதி தொடக்கத்திலே அரையரைப்போலே வரிசைகளை உடையவர் நியமனத்தினாலே சாற்றுகிறது; உடையவர் நூற்றந்தாதியை இயற்பாவோடே—முதலாயிரத்திலே கண்ணிநுண் சிறுத்தாம்பைப் போலே சேர்த்து, ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் ப்ரபந்நகா3யத்ரியாக நித்யாநுஸந்தே4யமென்றும்; இந்த அமுதனாருக்கும் திருப்பணி செய்வாருக்கும் மட2மும், திருமாளிகைகளிலே அத்4யாபக ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு முன்னே ப3ஹுமாநமும் திட்டம் செய்தருளினார்.

இப்படி கோயில் கைங்கர்யபரரையும், அவரவர்க்கு வ்யவஸ்த்தி2தமான கைங்கர்யங்களையும் திட்டஞ் செய்தருளி, ஆழ்வார்களையும் ப்ரதிஷ்டி2ப்பித்து, அவர்களுக்குத் திருநக்ஷத்ர உபலாளனங்களையும் ஸ்ரீபாஞ்சராத்ர ப்ரகாரமாக வ்யவஸ்த்தை2பண்ணி,

பெருமாளுக் திருவாராத₄நம் நித்யோத்ஸவ பக்ஷோத்ஸவ மாஸோத்ஸவ ஸம்வத்ஸரோத்ஸவ மஹோத்ஸவாதி₃களையும் விஸ்தாரமாக நடத்தியருளி; திருப்பணி ஜீர்ணோத்₃த₄ாரணங்களையும் பண்ணுவிக்குமிடத்தில், நித்ய திருவாராத₄நவர்க்க₃ வகை முதலானவைகளுக்கு உதவும்படி, மாடமாளிகைசூழ் திருவீதியில் ஈஶாந்யபா₄க₃த்திலே கோ₃ஶாலையும் கட்டி வைத்து, சிறிது பசுக்களையும் அவ்விடத்திலே வைத்து, மற்றைப் பசுமந்தைகளெல்லாம் வடகரையிலே சோழங்கநல்லூர் வணிதத்திலேயிருக்கும்படி அஞ்சு க்₃ராமத்தை அழித்து வநமாக்கி அதிலே ஆநிரைகாத்த பெருமாளை ப்ரதிஷ்டி₂ப்பித்து, ப்₃ருந்த₃ாவநத்தைப்போலே பசுக்களிருக்கும்படி பண்ணி அகளங்கநாட்டாழ்வான் திருவிடையாட்டச் சீர்மை விசாரிக்குமளவில்; கேவலப₄க₃வத்பரரும் காலக்ஷேபபரருமாகையாலேயும், தாமும் அடிக்கடி பசுக்களைக் கடாக்ஷிக்க எழுந்தருளுகிறபடியினாலேயும், திருவரங்கத்திலே பெரிய பெருமாளை ப்ரதிஷ்டி₂ப்பித்தருளி, கோயிலிலேயிருந்த வைக₂ாநஸநம்பிமாரைத் திருவாராத₄நம் பண்ணச்சொல்லி நியமித்தருளினார்.

இந்தப்படி திருவரங்கேசனுருடைய ஸ்ரீகார்யத்தைக் குறைவற ஆராய்ந்துகொண்டிருக்கச்செய்தே; தாமும் திருக்கோட்டியூர் நம்பி முதலான அஞ்சு ஆசார்யர்கள் ஸந்நிதி₄யிலும் ஸகலார்த்த₂ங்களையும் அறிந்து, அநேகம் ஶிஷ்யரையும் லபி₄த்து, உப₄ய கைங்கர்யத்துக்கும் ஆழ்வானையும் ஆண்டானையும் கடவராக்கி தாம் தி₃க்₃விஜயம் செய்தருளவேணும் என்று திருவுள்ளம்பற்றி ஆழ்வானை யாத்ரா ஸஹாயரராக்கி, ஆண்டானை ஸ்ரீகார்ய நிர்வாஹகராக்கி, ஆண்டானுக்குச் செங்கோல் ப்ரஸாதி₃க்கும்படி ஸந்நிதி₄யிலே விண்ணப்பஞ்செய்ய; பெருமாளும் போரவுகந்தருளி 'உமக்குப் பாது₃கையான த₃ாஶரதி₂ நம்வீட்டை ஆராயக் கடவர், நீர் நம்முடைய ஆராமங்களையும் ஒரு ஒருக்கிட்டு நம் த₃ர்ஶநத்தில் களையறுத்து, எம்பெருமானர் த₃ர்ஶநமே ஸர்வோத்க்ருஷ்டம் என்று நாலுதிசையிலும் ஜயஸ்தம்ப₄ம் நாட்டி வாரும்' என்று விடைஸாதி₃த்து; ஸகலவரிசைகளையும் ப்ரஸாதி₃த்து, முதலியாண்டானுக்குச் செங்கோல் வரிசையும் ஸாதி₃த்தருளினார். உடையவரும், இந்தப்படி பெருமாள் நியமநத்தினாலே ஆழ்வானுடனே தி₃க்₃விஜய யாத்ரை செய்தருள; முதலியாண்டானும் குறட்டிலேயிருந்து கோயில்கார்யத்தையும், உள்ளே புகுந்து கருவுகல வாசலிலேயிருந்து திருமேனி உபசாரத்தையும், ஸந்நிதி₄யிலேயிருந்து திருப்பவள உபசாரங்களையும், உடையவர் நிய

மநப்படி ஆராய்ந்துகொண்டு, அனைத்தழகும் கண்டருளப் பண்ணிக்கொண்டிருந்தார்.

உடையவரும் பு3ஹுகாலம் ப்ரத3க்ஷிணமாக திவ்யதேசங்களையும் மங்களாஶாஸனம் பண்ணி, அவ்விடத்திலேயிருக்கிற எல்லாரையும் ஸ்ரீவைஷ்ணவர்களையும் திருத்தி, பஞ்சஸம்ஸ்காராதி3களையும் ஸாதி3த்து அந்தந்த ஸ்த2லங்களிலே தம்முடைய மட2மும் முத்3ரையும் நடத்துவித்து, தி3க்3விஜயமும் பண்ணி, ஜயஸ்தம்ப4மும் நாட்டி, ஸகல தேசராஜாக்களையும் தத்தத்3தே3ஶவித்வான்களையும் திருவடிகளிலே சேரவிட்டுக்கொண்டு, ஶாரதா3பீட2த்திலே ஸரஸ்வதியாலே ஸத்க்ருதராய் 'ஸ்ரீபா4ஷ்யகாரர்' என்கிற திருநாமத்தை லபி4த்து, தெற்கே ஆண்டாள் திருமாலிருஞ்சோலை அழகர்விஷயமாக மநோரதி2த்த அர்த்த2த்தைத் தலைக்கட்டினபடியாலே "கோயிலண்ணன்" என்கிற திருநாமத்தையும் அடைந்து கோயிலேற எழுந்தருள; கோயிலனைத்துக்கொத்தும் எதிர்கொண்டு ஸேவிக்க; உடையவரும் அவர்களை யதா2யோக்3யமாக ப்ரஶம்ஸிபாத ஆலிங்க3ந குஶலப்ரஶ்நாதி3களாலே ஸந்துஷ்டராக்கி, கோயிலிலே ஸேவாக்ரமத்திலே ஸேனைமுதலியாரநுமதிகொண்டு ஜயவிஜயாளநுமதியுடன் உள்ளே புகுந்து, பெருமாளை ஆபாத3வ்ருத்தமநுப4விக்க; பெருமாளும், உடையவரைக் கடாக்ஷித்து, 'நம்முடைய ஆராமங்களை ஆராய்ந்து நம் த3ர்ஶநத்தையும் களையறுத்து, நாலுதி3க்கிலும் ஜயஸ்தம்ப4மும் நாட்டிவந்தீரோ?' என்று அர்ச்சகமுக2மாக விருது விட்டருளி, தீர்த்த2ம் முதலான ஸகல வரிசைகளையும் ப்ரஸாதி3த்து, 'நம் வீட்டுக் காரியத்தையும் ஆராய்ந்துகொண்டு கோயிலிலேதானே இரும்' என்று அருளிச்செய்ய; உடையவரும், 'த4ந்யோऽஸ்மி' என்றுகொண்டு மட2த்திலே எழுந்தருளி, முதலியாண்டானை அநுக்3ரஹித்து, இற்றை வரைக்கும் சிந்தாமே மங்காமே திருவரங்கச்செல்வத்தை த்3விகு3ணமாக வர்த்தி4ப்பித்து அனைத்தழகும் நடத்திவைத்தபடியைக் கண்டு உகந்தருளி, ஸ்ரீகார்யவிசாரத்திலே அவரையே நியமித்து, பெரிய நம்பி முதலான முதலிகளுடனே புறப்பட்டது முதலாகப் பண்ணின உப4ய கைங்கர்யங்களையும் யதா2வ்ருத்தமருளிச்செய்து, ஸ்ரீபா4ஷ்யத்தை ஆழ்வானைக்கொண்டு பட்டோலையிடுவித்து நிறைவேறினவுடனே ஸந்நிதி4யிலே விண்ணப்பஞ்செய்ய, தம் மருமகனான நடாதூரம்மாள் கையிலே ஸ்ரீபா4ஷ்ய ஸ்ரீகோஶத்தைக் கொடுத்து ஶாரதா3பீட2த்துக்கு அனுப்பியருள, ஸரஸ்வதியும் அந்த ஸ்ரீகோஶத்தை ஶிரஸாவஹித்து ஶ்லாகி4த்தவநந்தரம், அந்த நடாதூரம்மாளை நித்யமாக வேத3 விண்ணப்பத்திலே கீ3தாபா4ஷ்யமானவுடனே ஶாரீரக பா4ஷ்யத்

தையும் விண்ணப்பஞ் செய்யச்சொல்லி நியமித்தருள; அதுமுத லாக, வேத₃விண்ணப்பத்திலே ருக்₃வேதம் முதலாக ஸ்ரீ பா₄ஷ்யமும், தாம் செய்தருளின க₃த்₃யத்ரயத்தையும் ஆண்டானுக்கு நியமிக்க, விண்ணப்பமும் நடந்துவருகிறது.

இப்படி நடக்கிற காலத்திலே, ஒருகல்தச்சன், முன்பு கோ₃ஶாலை கட்டுகிறபோது ஒரு கல்லின் நடுவிலே தேரையும் தண்ணீரு மிருக்கக் கண்டு, 'கல்லின் நடுவே இருந்த தேரைக்கு ஜீவநம் கல்பித்த ஈஶ்வரன் நமக்கும் நடத்துவர்' என்று தொழிலைவிட்டு, ப₄ரந்யாஸம்பண்ணி, திருமுடிக்குறையிலே நிர்வ்யாபாரனுயிருக்க, அது அவர் அறிந்து, அழகியமணவாளப்பெருமாள் ப்ரதிதி₃நமும் இராமாறு திருவொத்த சாதத்தைக் கொண்டுபோய் அவனை பூ₄ஜிப்பித்துக் கொண்டிருக்க; காலாவதி₄யாலே சில காலத்துக்குப் பின்பு அவன் மரித்த சேதியைக் கேட்டு, உடையவர் 'இன்றைக் காணுலும் அழகியமணவாளப்பெருமாள் வெறுந்தலையுமாய், சோறு சுமவாமல் ஸுக₂மாயிருப்பர்' என்று அருளிச்செய்தார்.

அப்படியே ஆழ்வான் முதலானவர்கள் பஞ்சகால பராயண ராயிருக்குங் காலத்திலே; ஒருநாள் வர்ஷோபாதி₄யாலே ஆழ்வான் உபாத₃ாநத்துக்கு எழுந்தருளக்கூடாமல் உபவாஸமா யிருக்க; ராத்ரி ஆழ்வானுடைய தே₃விகளான ஆண்டாள், திருவொத்த சாதம் அமுது செய்தருளுகிற பெரிய திருமணி ஓசையைக்கேட்டு, பெருமாளைக்குறித்து; 'ஆழ்வான் பட்டினியேயிருக்க தேவரீர் குலாவிக்குலாவி அமுதுசெய்தருளுவதே!' என்று நினைத்தவுடனே, ஒரு ஸ்ரீவைஷ்ணவர், தளிகையிலே திருவொத்த சாதத்தைக்கொண்டு, ஆழ்வானை அழைத்து, 'அடியேன்! அழகிய மணவாளத₃ாஸன், பெருமாள் நியமநத்திலே ப்ரஸாத₃ம் கொண்டுவந்தேன், அங்கீ₃கரிக்கவேணும்' என்று சொல்ல; ஆழ்வானும் திகைத்து ஆண்டாளை அழைத்து, 'என்ன நினைத்தாய்' என்று கேட்க; ஆண்டாளும் தான் நினைத்தபடியைச் சொல்ல, ஆச்சர்யத்துடனே 'இது ஸ்ரீப₄ண்ட₃ாரத்திலே க்ரயத்தளிகையாயிருக்குமே' என்று கொஞ்சமாக எடுத்துக்கொண்டு குறையை அனுப்பிவிட்டு, அதிலே ஆண்டாளுக்கு இரண்டு பா₄க₃மும் தமக்கொரு பா₄க₃மும் ப்ரஸாத₃ப்பட்டவநந்தரம், ஆண்டாள் திருவயிறுவாய்த்து, பத்துமாஸமும் சென்றவுடனே இரண்டு குமாரர்கள் திருவவதரிக்க; இச்சேதியை உடையவர் கேட்டு ஸந்தோஷத்துடனே ஆழ்வானைக்கொண்டு புத்ரோத்ஸவாபூ₃பு

பலாளநங்களைப் பண்ணுவித்து, பன்னிரண்டாம் நாள் உடை யவர் தாம் ஆளவந்தார் மநோரத2த்தை நிறைவேற்றவேணும் என்று எம்பாருடன் ஆழ்வான் திருமாளிகைக்கு எழுந்தருளி, எம்பாரைக் குழந்தைகளை எடுத்துக்கொண்டு வரச்சொல்லி நிய மிக்க, எம்பாரும், குழந்தைகளை எடுத்துக்கொண்டு, த்3வயாநு ஸந்த4நத்துடனே வரக்கண்டு; உடையவரும் 'த்3வயம் பரி மளிக்கிறது' என்று சொல்லி, ஒரு குழந்தைக்கு த3ர்ஶநோபகாரக ரான ஸ்ரீபராஶரப4ட்டப4க3வானுடைய திருநாமம் சாத்தி, ஆள வந்தாருடைய மூன்று மநோரத2மும் நிறைவேற்றி, மற்றக் குழந் தைக்கு ஆழ்வானைக்கொண்டு அவர் திருத்தமப்பனாராகிற சீராமப் பிள்ளை திருநாமம் சாத்துவித்தார்.

இந்தப்படி உடையவர் உப4யகைங்கர்ய நிர்வாஹகராய், செங்கோல் செலுத்தி, உப4யவிபூ4தியிலும் தம்முடைய சிறுமுறி செலுத்தி, எழுநூறு ஜீயர்களும், பன்னீராயிரம் ஏகாங்கிகளும், எழுபத்துநாலு ஆசார்ய புருஷர்களும், அஸங்க்2யேய வைஷ்ண வர்களும் ஸேவிக்க, அறுபது சாதுர்மாஸ்யம் திருவரங்கந் திருப் பதியிலே வாழ்ந்துகொண்டிருக்கும் காலத்திலே;

இம்மண்ட3லாதி4பதியான சோழன் பாபிஷ்ட2னாய் ப4க3வத்3 த்3வேஷியாய் திவ்யதேசங்களில் கோயில்களை இடிக்கத் தொடங்க; தத்புத்ரன், 'திருவாய்மொழியும் ஸ்ரீராமாயணமும் இரண்டும் திரள அவிசால்யமாயிருக்க, ஒன்றுலே திவ்யதேசங்களை அழிக்கப் போமோ?' என்றுசொன்னாலும், து3ர்பு3த்3தி4யாகையாலே கேளாமல் அபசாரப்பட்டு, தத3நுகு3ணமாக குலபாம்ஸனானான். புரோஹித ப்ரேரிதனாய், த3ர்ஶநஸ்த2ாபநாசார்யரான ஸ்ரீபா4ஷ்யகாரர் கையிலே 'ஶிவாத் பரதரம் நாஸ்தி' என்று எழுத்து வாங்க உத்3யோகி3த்து, கோயிலுக்கு ராஜப4டர்களையனுப்பிவைக்க, அந்த சேதியைக்கேட்டு உடையவர் நியமநத்தினாலே, பெரியநம்பி, கோயிலுக்குத் தீங்கு வாராதபடி எல்லையேற்றிக் காப்பிட்டிருக்கிற ஸமயத்திலே, ராஜ ப4டாள் எம்பெருமானார் மடத்து வாசலிலே வந்து ப்ரபு4வண் டைக்கு வரச்சொல்லி அழைக்க, உடையவர் நியமநத்தாலே ஆழ்வான் த்ரித3ண்ட3 காஷாயங்களை த4ரித்து, பெரியநம்பி யுடனேகூட கங்கைகொண்டானுக்கு ராஜப4டாளின்பின்னே போனார்.

உடையவரும், வெள்ளைசாத்திக்கொண்டு முதலியாண்டானை யும் கூட்டிக்கொண்டு, பெருமாளை ஸ்வஶக்தியாலே ரக்ஷித்துக் கொள்ளச் சொல்லி, மேற்கே புறப்பட்டு, பின்தொடர்ந்த ராஜ

ப4டாரை மணலை மந்த்ரித்து வழியிலே இறைத்துத் தடுத்துப் போகட்டு, மேற்கே மேல்நாட்டிலே எழுந்தருளி, முதலியாண்டான் ஸ்ரீபாத3தீர்த்த2த்திலே சில மதாந்தரஸ்த்த2ரையும், தாம் திருவனந்தாழ்வானாய் ஸஹஸ்ர ஶிரஸ்ஸுக்களுடனேயிருந்து ப்ரஸங்க3ம்பண்ணி அநேக மதாந்தரஸ்த்த2ரையும் ஜயித்து, அத்தேசத்தில் ப்ரபு4க்களை பஞ்சஸம்ஸ்காரராக்கி, யாத3வாத்3ரியை ஜீர்ணோத்3த4ாரணம் செய்தருளி, அந்த திவ்யதேசத்துக்கு 'திருநாராயணபுரம்' என்று திருநாமம் சாத்தி, டில்லிக்கெழுந்தருளி ராமப்ரியரை எழுந்தருளப் பண்ணுவித்துக்கொண்டுவந்து, அவருக்கு 'செல்வப்பிள்ளை' என்று திருநாமம்சாத்தி ப்ரதிஷ்டி2ப்பித்து, தத்ரத்யபாஷண்ட3 பௌ3த்3த4ாதி3களைக் கற்காணமாட்டுவித்து, ஸ்வாமிக்கு * ஐம்பத்திருவரைக்கொண்டு அணைத்தழகும் நடத்திக் கொண்டு, உப4யகைங்கர்ய நிர்வாஹகராய் எழுந்தருளியிருந்தார்.

இவ்விடத்திலே, பெரியநம்பியும் கூரத்தாழ்வானும் சோழன் ஸமக்ஷத்திலே போய், வேத3ஶாஸ்த்ரங்களினாலே ப4க3வத்பாரம்யத்தை ஸாதி4த்தவிடத்திலே, து3ரபி4மானத்தாலே, 'ஶிவாத் பரதரம் நாஸ்தி' என்று எழுதச்சொல்லி நிர்ப3ந்தி4க்க, ஆழ்வானும், அதை எழுதி, அதின்மேலே 'த்3ரோணமஸ்தி தத: பரம்' என்று எழுதக்கண்ட சோழன் குபிதனாய், இருவரையும் ஆஜ்ஞை பண்ணச்சொல்ல, நேத்ரோத்பாடந வேத3னை ஸஹிக்கமாட்டாமல், பெரியநம்பி திருநாட்டுக்கெழுந்தருளினார். ஆழ்வானும், 'அந்தப் பாபிஷ்ட2னைக் கண்ட கண்களிருக்கவொண்ணாது' என்று பச்சைக் கருப்பூரத்தைச் சாத்திக்கொண்டு கண்ணையிழந்து, 'ப்ராக்ருதஸ்பர்ஶம் கூடாது' என்று இருக்குமளவில், மது4ராந்தக ஸ்ரீவைஷ்ணவர் ஒருத்தரிருக்க, அவரை ஸஹாயமாக்கிப் பெரிய நம்பியையும் ஸம்ஸ்கரித்து, கோயிலுக்கெழுந்தருளி; ஒருநாள் பெருமாளை ஸேவிக்கப்போனவிடத்திலே, ஆரியப4ட்டாள் வாசலிலே ஒருத்தர் 'எம்பெருமானாருக்கு அந்தரங்கர் உள்ளே போகப் போகாது' என்று நிஷேதி4க்க, அத்தை ஒருவர் கேட்டு 'ஆழ்வான் மஹா ஸாத்விகர்; உள்ளே போகட்டும்' என்று சொல்ல; இவ்வார்த்தைகளை ஆழ்வான் கேட்டு, செவியைப் புதைத்து, 'நம்முடைய ஆத்மகு3ணம் ஆசார்யஸம்ப3ந்த4ாப4ாவத்துக்குறுப்

---

* ஐம்பத்திருவராவார்—திருவெள்ளறையிலிருந்து எம்பெருமானாராலே திருநாராயணபுரத்துக்குக் கொண்டு செல்லப்பட்ட 52 பூர்வாஶிக2 ஸ்ரீவைஷ்ணவ குடும்ப3ங்கள்.

பாவதே!' என்று சடக்கெனத் திரும்பி, திருமாளிகைக்குப்போய், விடிவோறே ஷாண்மாஸ ஶிஷ்யர்களையும் கூட்டிக்கொண்டு, ஆண்டானுடன் திருமாலிருஞ்சோலைக்கெழுந்தருளி, அங்கே ஆசார்ய விரஹஸ்தராய எழுந்தருளியிருந்தார்.

அநந்தரம், இந்த வ்ருத்தாந்தத்தை அர்க்4யப்ரத3ாந காலத்திலே எம்பெருமானார் கேட்டருளி, அபி4சாரார்க்4ய ப்ரத3ாநத்தைப் பண்ண; திருவேங்கடமுடையான் தம்முடைய திருவாழியாலே அந்தச் சோழன் கழுத்திலே குத்த, தத்க்ஷணத்திலே வ்ரணம் ஜநித்து, து3ஷ்பரிஹரமாய் ப3ஹுவாய் க்ரிமித்து மரித்துப் போனான். அதுமுதலாக, அந்தச் சோழனுக்கு க்ரிமிகண்ட2 சோழன் என்று பேராய்த்து.

தத3னந்தரம், தத்புத்ரன் ப்ரஹ்வாக அநுதப்தனாய், சேர பாண்டியரையும் அழைப்பித்து, மூன்றுபேரும் கோயிலுக்கு வர, கோயிலிலே உடையவர் எழுந்தருளினது முதலாக, கோயில் அரண்மனையாரதீ4நமாய், கருவுகலம் திருவாபரணப்பெட்டி முதலானதுகளுக்கு உடையவரிலச்சினையில்லாமல் க3ருட3முத்3ரையும் ஶங்க2முத்3ரையும் மாத்திரம் நடந்துகொண்டு வருகையில், ஆரிய ப4ட்டாள் அந்த ஸமயத்திலே சேர சோழ பாண்டிய முத்3ரை பெற்றார்கள்.

அந்தச் சோழனும், "பூர்விகர் 'தே3வதா3யம்' முதலானதுகளை ப்ரபு4க்கள் விசாரிக்கலாகாது என்று ஒரு ப்3ராஹ்மணரதீ4நமாக நடத்திக்கொண்டுவந்தார்களே; இப்போதும் நம் தகப்பன் து3ர் வ்ருத்தனாய்ப் பட்டபாடு கண்டோமே; இப்போது உங்கள் முன்னாக உடையவரை அழைப்பித்து, "தேவஸ்த்த2ானம் என் கைப் பிடியில்லாதபடி அவருக்கு த4ாரைவார்த்துக் கொடுக்கிறேன்" என்று சேரபாண்டியருடனே ஆலோசனைபண்ணி, முன் பெருமாளை ஸேவித்து. மாறொன்றில்லா மாருதியாண்டானை எம்பெருமானார் ஸந்நிதி4க்கு அனுப்பி. தாங்கள் பட்டணங்களுக்குப் போனார்கள்

எம்பெருமானாரும், திருவரங்கந் திருப்பதியை விட்டு, பன்னிரண்டு வருஷம் திருநாராயணபுரம் ஜீர்ணோத்3த4ாரணம் முதலான கைங்கர்யங்களையும் நிர்வஹித்துக்கொண்டிருந்து, மாறொன்றில்லா மாருதியாண்டான் முக2வசநத்தாலே கோயில் வ்ருத்தாந்தத்தை அறிந்து, தம் திருவடிகளிலே ப்ரவணரான ஐம்பத்திருவர் த4ரிக்கும்படி அர்ச்சாவதாரமாகத் தம் ப்ரதிமை ப்ரதிஷ்டி2ப்பித்து,

அங்கிலும் புறப்பட்டுத் திருமலை வழியாக எழுந்தருளி. திருமலை யடிவாரத்திலே தில்லை கோவிந்தராஜனை ப்ரதிஷ்டி₂ப்பித்து. தில்லைமூவாயிரவரிலே அநுகூலருக்கு ஆஸ்ரயணாதி₃களை ஸாதி₃த்துக் கைங்கர்யபரராக்கி, திருமாலிருஞ்சோலையிலெழுந்தருளி, ஆழ்வானையுங் கூட்டிக்கொண்டு கோயிலிலே எழுந்தருளின சேதியைக்கேட்டு, பெருமாள் பரிகரம் அனைத்துக் கொத்தும் ப்ரஸாத₃த்துடனே எதிர் கொண்டு பெருமாள் ஸந்நிதி₄யிலே அழைத்துவர; பெருமாளும், முன்புபோலே செங்கோல் முதலான வரிசைகளை ப்ரஸாதி₃த்து மட₂த்தேற அனுப்பியருள; உடையவரும், தமக்கு ப்ரஸாதி₃த்த வெள்ளை வகச்சல் குறுமாலைகளிலே, வெள்ளையை ஆண்டானுக்கும், வகச்சலை ஆழ்வானுக்கும் ஸாதி₃த்து ஸந்துஷ்டராய், மட₂த்திலேயெழுந்தருளின சேதியைக் கேட்டுக்கொண்டு, குலோத்துங்க சோழனும் கோயிலுக்கு வந்து, எம்பெருமானுரை ஸேவித்து, கோயிலதி₄காரம் தனக்குப் பணியில்லாதபடி த₄ாராபூர்வகமாக தா₃நஶாஸநம் பண்ணிக்கொடுத்து, "திருவடிகளிலே ஆஸ்ரயிக்க வேணும்" என்று விண்ணப்பஞ்செய்ய; உடையவரும் உகந்தருளி, அந்த சோழனை ஆண்டான் திருவடிகளிலே ஆஸ்ரயிப்பித்து, திருவரங்கந்திருப்பதியை ஆண்டானுக்கு த₄ாராபூர்வகமாக தா₃நஶாஸநம் பண்ணுவித்து, இந்த வ்ருத்தாந்தத்தை ஆரியப₄ட்டாள்வாசலிலே ஶிலாலிகி₂தம் பண்ணுவித்தார்.

உடையவர் கோயிலுக்கு எழுந்தருளின யோக₃க்ஷேமங் கேட்டு, கந்தாடையாண்டான் முதலான முதலிகளும் பெருமாள் கோயிலிலும் கோயிலுக்கெழுந்தருளி, எம்பெருமானுர் திருவடி தொழுது ஹ்ருஷ்டரானுர்கள்.

உடையவரும், யத₂ாபூர்வமாக ஆண்டானைக்கொண்டு ஸ்ரீகாரியத்தை நடத்துவித்துக்கொண்டு வருமளவில், ஒரு மஹோத்ஸவத்தில் தா₃நப்ரகரணத்திலே, உபகாரஸ்ம்ருதியாலே பெரியநம்பி குமாரருக்கு, மாடமாளிகை சூழ் திருவீதியில் கீழ் மாடத்திருவீதியில் தென்கண்டத்தில் மேல் புறத்தில் ப்ரத₂ம நிவேஶநமான ஆளவந்தார்மட₂த்தையும், ஆழ்வானுக்கு அதுக்கு எதிர்மனையையும், ஆண்டானுக்கு அதுக்குத் தென்மனையையும் தா₃னம் பண்ணுவித்து, தா₃நஶாஸநமாக ஸ்ரீஸேநாபதிபட்டையமும் ஸாதி₃த்தருளினுர்.

இப்படி எம்பெருமானுர் முதலிகளுடன் வாழ்ந்தருளி நூறு சாதுர்மாஸ்யாநந்தரம் ஶதாபி₄ஷேகமும் கண்டருளி, 'எதிராஜன்'

என்று பேர் லபி₄த்து; தம்முடைய ஶிஷ்யரான ராமாநுஜதா₃ஸன் என்கிற ஶில்பிக்கு ஏகாந்தஸேவை ஸாதித்து; யதா₂பூ₄ர்வமாக ஸ்வவிக்₃ரஹத்தை ஏறியருளப் பண்ணுவித்து, ஸ்வாஶ்ரித திவ்ய ஶக்தியை ஆதா₄நம்பண்ணி, கந்தாடை ஆண்டானைக்கொண்டு ஸ்ரீ பெரும்பூதூரிலே ப்ரதிஷ்டி₂ப்பித்து, பெருமாள் ஸந்நிதி₄யிலே தன்னுடைச் சோதிக்கு விடைபெற்று, கந்தாடையாண்டானையும் ப₄ட்டரையும் அழைத்து "நம்பெருமாள் கைங்கர்யத்தையும் நம் த₃ர்ஶநத்தையும் நன்ருகப் பண்ணுங்கோள்" என்று நியமித்து, பரிஜநங்களை க்ஷாமணம்பண்ணிக்கொண்டு திருநாட்டுக் கெழுந்தருளினுர்.

ஸ்ரீ ஸேநாதி₄பதிது₄ரந்த₄ரரான கந்தாடையாண்டானுர், பெருமாள் நியமநத்தினுலே, அகளங்கன் திருவீதியில் தென்கீழ்ப் புறத்தில் சுந்தரபாண்டியன் துலாபுருஷ மண்டபத்திலே எதிராஜனையும் உத்ஸவரையும் ப்ரதிஷ்டி₂ப்பித்து, மார்கழிமாஸம் முப்பதுநாளும் பெரியஸந்நிதி₄ நம்பிமார் எதிராஜனுக்குத் தளிகை அமுதுசெய்யப் பண்ணவும், திருமொழி திருவாய்மொழித் திருநாளிலேயும் இயற்பாவன்றைக்கும் ஆழ்வார்களுடனே ஸந்நிதி₄க்கு எழுந்தருளும்படியும் திருநக்ஷத்ர உபலாளநமும் ஏழுநாளாகப் பண்ணி, திருநக்ஷத்ரத்தினன்று ஆழ்வார்களைப் போலே ஸந்நிதி₄க்கெழுந்தருளி, மஹோத்ஸவத்தில் ஸப்தாவரணத்தினன்று தன் திருவாசலிலே திருக்கைத்தலத்திலே பெருமாளை மங்க₃ளாஶாஸநம் பண்ணும்படியும் பண்ணுவித்து, பெருமாளுக்கு அணைத்தழகும் கண்டருளப் பண்ணுவித்தார்.

(1) உடையவர் திருவவதரித்த பன்னிரண்டாம் நாள் பெரியதிருமலைநம்பி நாமகரணம் பண்ணினபேர் இளையாழ்வார்; (2) ஆஶ்ரமஸ்வீகாராநந்தரம் தேவப்பெருமாள் ஸாதி₃த்த பெயர் எதிராஜன்; (3) கோயிலுக்கெழுந்தருளின பின்பு பெருமாள் ஸாதி₃த்தது உடையவர்; (4) ஆத்மகு₃ணத்தாலே திருக்கோட்டியூர் நம்பிபக்கல் பெற்றபேர் எம்பெருமானுர்; (5) உப₄யகைங்கர்யத்தினுலேயும் கோதை சூடிக்கொடுத்த நாய்ச்சியார் ஸாதி₃த்த பேர் கோயிலண்ணன்; (6) ஶாரதா₃பீட₂த்தில் ஸரஸ்வதி சாத்தின திருநாமம் ஸ்ரீபா₄ஷ்யகாரர்; (2) ஸ்வமாஹாத்ம்யத்தினுலே ஶடதாபி₄ஷேகம் கண்டருளி லபி₄த்த பேர் எதிராஜன்; (7) பெரியநம்பி ஸாதி₃த்தது ராமாநுஜன்; ஆக ஏழு நாமங்களிலேயும், பெரியநம்பியும், பெரியபெருமாளும் ஸாதி₃த்த திருநாமங்கள் இரண்டுமே பட்டப்பேராய், அருளப்பாடு ஸாதிக்கிறது.

216, அந்திமோபாயநிஷ்டை₂ (மாமுனிகளின் அஷ்டதி₃க்₃க₃ஜங்களில் ஒருவரான பரவஸ்துபட்டர்பிரான்ஜீயர் அருளியது):— இன்னமுமாசார்யவைபவம். ஸதாசார்யஸமாஶ்ரயணத்துக்கு முன்புள்ள அனாதிகாலமெல்லாம் ஒரு காளராத்ரி, அன்று தொடங்கி இவனுக்கு நல்விடிவு. ஆனபடி எங்ஙனேயென்னில்— "புண்யாம்போ₄ஜ விகாஸாய பாபத்₄வாந்த க்ஷயாய ச | ஸ்ரீமாநாவிரபூ₄த்₃பூ₄மௌ ராமாநுஜதி₄வாகர: ||" என்றும், "ஆதி₃த்யராம தி₃வாகராச்யுதபா₄னுக்களுக்குப் போகாத உள்ளிருள் நீங்கி, ஶோஷியாத பிறவிக்கடல்வற்றி விகஸியாதபோதில் கமலம் மலர்ந்தது வகுளபூ₄ஷணபா₄ஸ்கரோத₃யத்திலே"என்றும் விடியாவெந்நரகான ஸம்ஸாரமாகிற காளராத்ரிக்கு ஆசார்யன் தோற்றரவை ஸூர்யோத₃யமாகச் சொல்லுவர்கள்......... "ஞானமனுட்டானமிவை நன்றாகவேயுடையனான குருவையடைந்தக்கால்" என்றுதொடங்கி, "திருமாமகள் கொழுநன் தானே வைகுந்தம்தரும்" "உய்ய நினைவுண்டாகில்" என்று தொடங்கி, "கையிலங்கு நெல்லிக்கனி" "தன்னாரியனுக்குத் தானடிமை செய்வது" என்று தொடங்கி. "ஆசாரியனைப்பிரிந்திருப்பாரார்மனமேபேசு" "ஆசாரியன் சிச்சன்" என்று தொடங்கி, "ஆசையுடன் நோக்குமவன்" "பின்பழகராம் பெருமாள்சீயர்" என்று தொடங்கி, "நம்பிள்ளைக்கான அடிமைகள் செய் அந்நிலையை நன்னெஞ்சே ஊனமற எப்பொழுதுமோர்" "ராமாநுஜம் யதிபதிம் ப்ரணமாமி மூர்த்₄நா" என்று தொடங்கி, " தஸ்மாத₃நந்யஶரணோ ப₄வதீதி மத்வா" என்றும் நம்முடைய ஜீயர் தாம் அந்திமோபாய நிஷ்டா₂க்₃ரேஸரரென்னுமிடத்தைஸ்வப்ரபந்தங்களான உபதேசரத்தினமாலையிலும்,யதிராஜவிம்ஶதியிலும் நன்றாக ப்ரகாசிப்பித்தருளி,...வடுகநம்பி உடையவர் தளிகைக்குப் பாலமுதுகாய்ச்சாநிற்க, பெரியதிருநாளுக்குப் பெருமாள் அழகாக வுடுத்து முடித்துப் புறப்பட்டருளி மடத்துவாசலிலே எழுந்தருள, உடையவர் புறப்பட்டு ஸேவித்து, 'வடுகா! பெருமாளை ஸேவிக்க வா' என்று அழைத்தருள, வடுகநம்பி 'அடியேன் உம்முடைய பெருமாளை ஸேவிக்கவந்தால் என்னுடைய பெருமாளுக்குப் பாலமுது பொங்கிப்போங்காணும். ஆகையால் இத்தை விட்டு வரக்கூடாது' என்றருளிச்செய்தார் என்று ப்ரஸித்தமிறே. "உன்னை ஒழிய ஒருதெய்வம் மற்றறியா மன்னுபுகழ்சேர் வடுகநம்பி தந்நிலையை எந்தனுக்கு நீதந்தெதிராசா எந்நாளு முன்றனக்கே ஆட்கொள்ளுகந்து" என்று வடுகநம்பி நிலையையும் நம்முடைய ஜீயர் ப்ரார்த்தி₂த்தருளினாரிறே.........

உடையவர்காலத்திலே அருளாளப்பெருமாள் எம்பெருமானுர் என்றெருவர் வித்யையாலும் சிஷ்யஸம்பத்தாலும் அறமிகுந்தவராய் அநேகஶாஸ்த்ரங்களை எழுதிக்ரந்தங்களைச்சுமைச்சுமையாகக்கட்டி எடுப்பித்துக்கொண்டு தம்முடைய வித்யாகர்வமெல்லாம் தோற்ற மதிப்புடனேவந்து உடையவருடனே பதினேழுநாள் தர்க்கிக்க, பதினெட்டாம்நாள் அருளாளப் பெருமாளுடைய யுக்தி ப்ரபல மாக, உடையவர் இது இருந்தபடியென்னென்று எழுந்தருளி யிருக்க, அவ்வளவில் அருளாளப்பெருமாள் தம்முடைய வெற்றி தோற்ற எழுந்திருந்து அற்றைக்குப்போக, உடையவரும் மடமே திருவாராதனம் பண்ணிப் பெருமாளுடனே வெறுத்து "பெரு மாளே! இத்தனை காலமும் தேவரீருடைய ஸ்வரூபரூப குண விபூதிகள் ஸத்யமென்னும் ப்ரமாணத்தை நடத்திக்கொண்டு போந்தீர்; இப்பொழுது இவனொரு ம்ருஷாவாதியைக் கொண்டு வந்து என்னுடைய காலத்திலே எல்லா ப்ரமாணங்களையும் அழித்துப்பொகட்டு லீலைகொண்டாடத் திருவுள்ளமாகில் அப்படி செய்தருளும்" என்று அமுதுசெய்தருளாமல் கண்வளர்ந்தருள, பெருமாளும் அந்த க்ஷணத்திலே, "உமக்கு ஸமர்த்தனாயிருப்பா னொரு சிஷ்யனை உண்டாக்கித் தந்தோம். அவனுக்கு இன்ன யுக்தியை நீர் சொல்லும். அவன் உமக்குத் தோற்று சிஷ்யனாகி றான்" என்று உடையவர்க்கு ஸ்வப்னத்திலே அருளிச்செய் தருள, உடையவரும் திருக்கண்களை விழித்து 'இதொரு ஸ்வப்ன மிருந்தபடியென்!' என்று திருவுள்ளமுகந்து, பெருமாள் ஸ்வப் னத்திலே அருளிச்செய்த யுக்தியைத் தம்முடைய திருவுள்ளத் திலே கொண்டு, "வலிமிக்கசீயம் இராமாநுசன் மறைவாதிய ராம் புலி மிக்கதென்று இப்புவனத்தில் வந்தமை" என்கிறபடியே மதித்த ஸிம்ஹம்போலே ப்ரஸன்ன காம்பீரமாய்க் கொண்டு தர்க்க கோஷ்டிக்கு எழுந்தருள, அவ்வளவில் அருளாளப் பெருமாள், உடையவர் எழுந்தருளுகிற காம்பீர்யத்தையும் ஸ்வ ரூபத்தையும் கண்டு திடுக்கென்று, "இவர் நேற்று எழுந்தருளு கிறபோது இங்கு நின்றும் சோம்பிக்கொண்டே எழுந்தருளா நின்றார்; ஆகையாலே இது மாநுஷமன்று" என்று நிச்சயித்துக் கடுக எழுந்திருந்து எதிரே சென்று உடையவர் திருவடிகளிலே விழ, உடையவரும் 'இது வென்? நீ தர்க்கிக்கலாகாதோ?' என்ன, அருளாளப்பெருமாள் உடையவரைப்பார்த்து, "தேவர்க் கிப்போது பெரியபெருமாள் ப்ரத்யக்ஷமான பின்பு, தேவரீரென்ன

பெரியபெருமாளென்ன, பே₄த₃மில்லை என்று அறிந்தேன். இனி அடியேன் தேவரீருடைய ஸன்னிதி₄யிலே வாய்திறந்தொரு வார்த்தை சொல்ல ப்ராப்தியில்லை. ஆகையாலே அடியேனைக் கடுக அங்கீகரித்தருளவேணும்" என்று மிகவும் அநுவர்த்திக்க, உடையவரும் அவ்வளவிலே மிகவும் திருவுள்ளம் உகந்து அவரைத் திருத்தி அங்கீ₃கரித்து விசேஷகடாக்ஷம் பண்ணியருள, அன்று தொடங்கி'அருளாளப்பெருமாள் எம்பெருமானார்'என்று தம்முடைய திருநாமம் ப்ரஸாதி₃த்தருளி, பெரியதொரு மடத்தையும் கொடுத்து, "உமக்குப் போராத ஶாஸ்த்ரங்களில்லை. புறம்புண்டான பற்றுக்களடைய ஸவாஸனமாக விட்டு ஶ்ரிய:பதியைப்பற்றும். உமக்குப்பரக்கச் சொல்லலாவதில்லை. விசிஷ்டாத்₃வைதம் பொருள்; நீரும் உம்முடைய சிஷ்யர்களும் கூடி வ்யாக்யானம் பண்ணிக் கொண்டு ஸுகமேயிரும்" என்று திருவுள்ளம் பற்றியருள, அவரும் க்ருதார்த்த₂ராய், அதுக்குப்பின்பு அருளாளப்பெருமாளெம்பெருமானாரும் அந்த மட₂த்திலே சிறிதுநாள் எழுந்தருளியிருந்தார். அனந்தரம் தேசாந்தரத்தில் நின்றும் இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் கோயிலுக்கெழுந்தருளி, திருவீதியிலே நின்று அவர்கள் சிலரைப்பார்த்து, எம்பெருமானார் மடமேதென்று கேட்க, அவர்கள், எந்த எம்பெருமானார் மடமென்ன, புதுக்க எழுந்தருளின ஸ்ரீவைஷ்ணவர்கள் நெஞ்சுளைந்து "நீங்களிரண்டு சொல்லுவானென்? இந்த தர்ஶனத்துக்கு இரண்டு எம்பெருமானாருண்டோ?"என்ன. அவர்கள் "உண்டுகாணும், அருளாளப் பெருமாள் எம்பெருமானாரும் எழுந்தருளியிருக்கிறார். ஆகையாலே சொன்னோம்" என்ன, நாங்கள் அவரை அறியோம். ஸ்ரீபா₄ஷ்ய காரரைக் கேட்டோமென்ன, ஆனால் உடையவர் மடமிது என்று அவர்காட்ட, அந்த ஸ்ரீவைஷ்ணவர்களும் உடையவர் மடத்திலே சென்று புகுந்தார்கள். இந்த ப்ரஸங்க₃ங்களெல்லாத்தையும் யாத்₃ருச்சி₂கமாக அருளாளப்பெருமாளெம்பெருமானார் கேட்டு, "ஐயோ! நாம் உடையவரைப் பிரிந்து ஸ்த₂லாந்தரத்திலேயிருக்கையாலே, லோகத்தார் நம்மை எம்பெருமானாருக்கு எதிராகச் சொன்னார்கள். ஆகையாலே நாம் அநர்த்த₂ப்பட்டுவிட்டோம்"என்று மிகவும் வ்யாகுலப்பட்டு அப்போதே தம்முடைய மடத்தையும் இடித்துப் பொகட்டு வந்து உடையவர் திருவடிகளைக் கட்டிக்கொண்டு, "அனாதி₃காலம் இவ்வாத்மா தேவர் திருவடிகளை அகன்று அஹமென்று அனர்த்தப்பட்டுப் போந்தது போராமல், இப்போதும் அகற்றிவிடத் திருவுள்ளமாய் விட்டதோ?" என்று மிகவும்

க்லேஶிக்க, உடையவர் 'இது என்?' என்ன, அங்கு பிறந்த வ்ருத்தாந்தங்களை விண்ணப்பம் செய்ய, உடையவரும் அச்சேதிகள் எல்லாத்தையும் கேட்டருளி, "ஆனால் இனி உமக்கு நாம் செய்யவேண்டுவதென்?" என்ன, அருளாளப்பெருமாள் எம்பெருமானார் அடியேனை இன்று தொடங்கி நிழலுமடிதாறும் போலே தேவரீர் திருவடிகளின் கீழே வைத்துக்கொண்டு நித்ய கைங்கர்யம் கொண்டருளவேணுமென்று விண்ணப்பம் செய்ய, உடையவரும் ஆனாலிங்கே வாருமென்று, அவரைத் தம்முடைய ஸன்னிதி$_4$யிலே ஒருக்ஷணமும் பிரியாமல் வைத்துக்கொண்டு ஸகலார்த்த$_2$ங்களையும் ப்ரஸாதி$_3$த்தருள, அவரும் க்ருதார்த்த$_2$ராய், தாம் உடையவரையொழிய வேறொரு தெய்வமறியாதிருந்தவராகையாலே ஸகலவேதா$_3$ந்த ஸாரங்களையும் பெண்ணுக்கும் பேதைக்கும் எளியதாகக் கற்று உஜ்ஜீவிக்கத்தக்கதாக "ஞானஸாரம்" "ப்ரமேயஸாரம்" என்கிற ப்ரப$_3$ந்த$_4$ங்களையுமிட்டருளி அதிலே "சரணாகதிதந்த தன்னிறைவன் தானே அரணாகும்" என்றும், "தேனார்கமலத்திருமாமகள் கொழுநன் தானே குருவாக" என்றுமித்யாதி$_3$களாலே "ஸச்சி$_2$ஷ்யனுக்கு ஸதா$_3$சார்யனே பரதேவதை; அவன் திருவடிகளே ரக்ஷகம்" என்னுமதும், அவன் தான் ப$_4$க$_3$வதவதாரமென்னுமதும் தோற்ற ஸர்வஜ்ஞரான அருளாளப்பெருமாளெம்பெருமானார் அருளிச்செய்தாரென்று நம்முடைய ஜீயர் அருளிச்செய்தருளுவர்.

திருக்கோட்டியூர்நம்பி கோயிலுக்கெழுந்தருளி திருநாள் ஸேவித்து மீண்டு எழுந்தருளுகிறவரை எம்பெருமானார் அநுவர்த்தித்து, "அடியேனுக்குத் தஞ்சமாயிருப்பதொரு நல்வார்த்தை அருளிச்செய்யவேணும்" என்று கேட்க, நம்பியும் ஒருநாழிகைப் போது திருக்கண்களைச் செம்பளித்துக்கொண்டு நின்று, பின்பு "எங்களாசார்யர் ஸ்ரீ ஆளவந்தார் அடியோங்களுக்கு ஹிதம் அருளும்போது அக$_4$மர்ஷணஸமயத்திலே திருமுதுகு இருக்கும்படி வல்லார் கடாரம் கவிழ்த்தாற்போலே காணும் இருப்பது, அதுவே நமக்குத் தஞ்சமென்று விஶ்வஸித்து இருப்பேன், நீரும் மறவாமல் இத்தை நினைத்திரும்!" என்று அருளிச்செய்தாரென்று ப்ரஸித்தமிறே. நம்பிதான் திருக்கோட்டியூரிலே தளத்தின்மேலே படிக்கதவைப் பொகட்டு ஆளவந்தாரை த்யானித்துக்கொண்டு யமுனைத்துறைவரென்கிற மந்த்ரத்தை ஸதா$_3$நுஸந்தா$_4$னமாயெழுந்தருளியிருப்பரென்று அருளிச்செய்வர். உடையவரும்

ஓர் ஊமையைக் கடாக்ஷித்தருளி அவனளவில் தமக்குண்டான க்ருபாதிஶயத்தாலே அவனைக் கடாக்ஷிக்கக்கடவோமென்று திருவுள்ளம்பற்றி ஏகாந்தத்திலே வைத்துக்கொண்டு ஸம்ஜ்ஞையாலே தம்முடைய திருமேனியை ஊமைக்கு ரக்ஷகமாகக் காட்டியருள, ஆருக்கும் ஸித்₃தி₄யாத விஶேஷகடாக்ஷத்தைக் கூரத்தாழ்வான் கதவுபுரையிலே கண்டு மூர்ச்சித்துத் தெளிந்து, பின்பு "ஐயோ! ஒன்றுமறியாத ஊமையாய்ப் பிறந்தேனாகில் இப்பேற்றை உடையவர் அடியேனுக்கும் இரங்கியருளுவர், கூரத்தாழ்வானாய்ப் பிறந்து ஶாஸ்த்ரங்களைப் பரக்கக் கற்கையாலே தம்முடைய தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹத்தை அடியேனுக்குத் தஞ்சமாகக்காட்டித் தந்தருளாமல் ப்ரபத்தியை உபதே₃சித்து விட்டார். ஆகையாலே எம்பெருமானாருடைய தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹமே எனக்குத் தஞ்சமென்கிற நிஷ்டை₂க்கு அனதி₄காரியாய் விட்டேன்" என்று ஆழ்வான் தம்மை வெறுத்துக்கொண்டாரென்று நம்முடையஜீயர் அருளிச்செய்தருளுவர்.

உடையவர் ஆழ்வாரை ஸேவிக்கவேணுமென்று திருநகரிக்கு எழுந்தருளுகிறபோது திருப்புளிங்குடி என்கிற திருப்பதியிலே எழுந்தருளினவாறே அவ்வூர் திருவீதியிலே பத்தெட்டு வயஸ்ஸிலே ஒரு ப்₃ராஹ்மணப்பெண்ணிருக்க, உடையவர் அவளைப் பார்த்து, "பெண்ணே! திருநகரி எத்தனை தூரம் போரும்" என்று கேட்க, அந்தப்பெண் உடையவரைப்பார்த்து "ஏன் ஐயரே! திருவாய்மொழி ஓதினீரில்லையோ" என்ன, உடையவர் "திருவாய்மொழி ஓதினால் இவ்வூர்க்குத் திருநகரி இத்தனைதூரம் போமென்று அறியும்படி எங்ஙனே?" என்ன, அந்தப்பெண் "'திருப்புளிங்குடியாய்! வடிவிணையில்லா மலர்மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடியைக் கொடுவினையேனும் பிடிக்க நீயொருநாள் கூவுதல் வருதல் செய்யாயோ' என்று ஆழ்வார் அருளிச்செய்கையாலே திருநகரிக்கு இவ்வூர் கூப்பிடுதூரமென்று அறிய வேண்டாவோ?" என்று உடையவரைப்பார்த்து விண்ணப்பம் செய்ய, உடையவரும் "இதொரு வாக்யார்த்த₂மிருந்தபடியென்?" என்று போர வித்₃த₄ராய், அந்தப்பெண்ணளவிலே மிகவும் திருவுள்ளமுகந்து இவளிருக்கிற ஊரிலே நமக்கின்று ஸ்வயம்பாகம் பண்ணுவதாகத்தேடின ப₄ாண்ட₃ங்களையும் உடைத்துப் போகட்டு "பெண்ணே! உன்னுடைய க்₃ருஹமேது?" என்ன, அவளும் தம்முடைய அகத்தைக்காட்ட,

உடையவரும் அந்த க்$_3$ருஹத்திலே எழுந்தருளி, அந்தப் பெண்ணையும், அவளுடைய மாதாபிதாக்களையும் தளிகைக்குத் திருப்போனகம் சமைக்கும்படி கற்பித்தருளி, தாமும் முதலிகளும் அமுது செய்தருளி, அந்தப் பெண்ணையும் அவளோடு ஸம்ப$_3$ந்த$_4$ முடையாரையும் அங்கீ$_3$கரித்து விசேஷகடாக்ஷம் பண்ணியருளி, தாமும் முதலிகளுமாகத் திருநகரிக்கேற எழுந்தருளினர். அன்று தொடங்கி அந்தப்பெண்ணும் தத்ஸம்ப$_3$ந்தி$_4$களும் உடையவர் அல்லது மற்றொரு தெய்வம் அறியாமல் இருந்து வாழ்ந்து போனார்கள் என்று பெரியோர்கள் அருளிச்செய்வர்கள். இந்தவ்ருத்தாந்தங்களால், "பா$_3$லமூகஜட$_3$ாந்த$_4$ாஶ்ச பங்க$_3$வோ ப$_3$தி$_4$ராஸ் ததா$_2$ | ஸதா$_3$சார்யேண ஸந்த்$_3$ருஷ்டா: ப்ராப்நுவந்தி பராங்க$_3$திம் ||" என்கிறபடியே ஶாஸ்த்ராநதி$_4$காரிகளான இவர்களெல்லாம் பரமக்ருபையாலே உஜ்ஜீவித்தார்கள் என்பதை உடையவர் பக்கலிலே காணலாம் என்றபடி.

ஒரு ஸ்ரீவைஷ்ணவர் அமுது செய்தருளாநிற்க, கிடாம்பியாச்சான் அவருக்குத் தண்ணீரமுது திருப்பவளத்திலே பரிமாறுகிறவர் செவ்வையிலே நின்று பரிமாறுமையாலே அந்த ஸ்ரீவைஷ்ணவருடைய திருக்கழுத்து சற்றுசாய, அத்தை உடையவர் கண்டருளி ஆச்சானைத் தம்முடைய திருக்கையாலே அறைந்து 'ஸ்ரீவைஷ்ணவர்க்குப் பாங்காகப் பரிமாறிற்றில்லையே' என்று கோபிக்க, ஆச்சானும் உடையவர் திருவடிகளிலே தெண்டனிட்டுப் "பணிமானம் பிழையாமே அடியேனைப் பணி கொண்ட மணிமாயனன்றே தேவரீர்" என்று விண்ணப்பம் செய்து, ஆச்சானும் மிகவும் க்ருதார்த்த$_2$ரானாரென்று நம்முடைய ஜீயர் அருளிச்செய்தருளுவர்.

ஒருநாள் கூரத்தாழ்வான் விஷயமாக உடையவர் சீறியருள, நடுவுநின்றவர்கள் ஆழ்வானைப்பார்த்து "உம்மை உடையவர் நிக்$_3$ரஹித்தாரே, இப்போது நீர் என்ன நினைத்திருக்கிறீர்" என்ன ஆழ்வான் அருளிச்செய்தபடி—இவ்வாத்மா பா$_4$ஷ்யகாரர்க்கே சேஷமான பின்பு அவருடைய விநியோக$_3$ ப்ரகாரங்கொண்டு அடியேனுக்குக் கார்யமென் என்றார் என்னுமிவ்ருத்தாந்தம் மாணிக்கமாலையிலே ஆச்சான்பிள்ளை அருளிச்செய்தார்.

க்ரிமிகண்டன் வ்யாஜத்தாலே உடையவர் வெள்ளைசாத்தி மேல் நாட்டுக்கு எழுந்தருளினபோது, பெருமாள் பரிகரத்தார் தங்களை நெருக்கிக்கொண்டு போருகையாலே, விஷமத்துக்காக ''உடையவராலேயன்றே இத்தேசத்துக்குக் கலக்கங்கள் விளைந்தது, ஆகையாலே உடையவர் திருவடிகளில் ஸம்பந்தமுள்ளவர்கள் ஒருவரும் கோயிலுக்குள் புகுந்து பெருமாளை ஸேவிக்க வொண்ணாது'' என்று திவ்யாஜ்ஞையிட்டுவைத்தார்கள். கூரத்தாழ்வான் தர்சனத்தை நிர்வஹிக்கைக்காக க்ரிமிகண்டனிடத்திலே புக்கு அவனாலே திருநயனங்களுக்கு உபத்ரவம் வந்து, மீண்டுகோயிலுக்கெழுந்தருளி, அங்குத்தைச் சேதியை அறியாமல் பெருமாளை ஸேவிக்க எழுந்தருளினவளவிலே, திருவாசல் காக்கிறவர்களிலே ஒருவன் ஆழ்வானை 'உள்ளே புகுராதே' என்று தகைய, ஒருவன் அவரைத் தகையாதே 'கோயிலுக்குள்ளே புகுரும்' என்ன, அவ்வளவில் ஆழ்வான் திகைத்து நின்று, இங்குற்றை விசேஷமேதென்று திருவாசல் காக்கும் அவர்களைக் கேட்க, அவர்களும்—'' 'எம்பெருமானுர் திருவடிகளில் ஸம்பந்தமுள்ளவர்கள் ஒருவரையும் பெருமாளை ஸேவிக்கவிடவேண்டாம்' என்று திவ்யாஜ்ஞையிட்டுத் தகைந்துகிடக்கிறது'' என்ன, 'ஆனால் நீங்கள் என்னைப் புகுரச்சொல்லுவானென்?' என்ன, அவர்கள் ''ஆழ்வானே! நீரெல்லாரையும் போலன்றிக்கே நல்ல குணங்களை உடையராகையாலே புகுரச்சொன்னோம்'' என்ன, ஆழ்வான் அத்தைக்கேட்டு ஜலசந்த்ரனைப் போலே நடுங்கி, சிவிட்கென்று நாலடிமீண்டு ''ஐயோ, ஆத்ம குணங்கள் உண்டானல் எல்லார்க்கும் ஆசார்யஸம்பந்தத்துக்கு ஹேதுவாமென்று சாஸ்த்ரம் சொல்லிற்று: எனக்குண்டான ஆத்ம குணங்கள் எம்பெருமானுர் திருவடிகளில் ஸம்பந்தத்தை அறுத்துக்கொள்ளுகைக்கு ஹேதுவாய்விட்டதோ!'' என்று வ்யாகுலப்பட்டு, தம்மை மிகவும் நொந்துகொண்டு, ''எனக்குப் பேற்றுக்கு எம்பெருமானுர் திருவடிகளில் ஸம்பந்தமே அமையும்; தத்ஸம்பந்தத்தையொழிய, பெருமாளை ஸேவிக்கவேண்டுவதில்லை'' என்று மீண்டு ஆழ்வான் திருமாளிகைக்கு எழுந்தருளினர் என்று நம்முடைய ஜீயர் அருளிச்செய்தருளுவர்.

உடையவர் திருமலைக்கெழுந்தருளி, திருமலைநம்பி ஸ்ரீபாதத்திலே ஸ்ரீராமாயணத்துக்கு ஸம்ப்ரதாயார்த்தம் கேட்டு மீண்டு கோயிலுக்கு எழுந்தருளுகிறபோது நம்பியும் உடையவர் அவதார

விசேஷமென்று அறிந்து மிகவும் ஆதரித்து, ஆளவந்தாரைப் போலே கண்டு தம்முடைய புத்ராதிகளையும் உடையவர் திருவடிகளிலே ஆச்ரயிப்பித்து, 'தேவரீருக்கு ஏதேனும் ஒன்று ஸமர்ப்பிக்கவேணும்' என்ன, உடையவரும் எம்பாருடைய ஆசார்ய ப்ரேமத்தைக் கண்டு திருவுள்ளமுகந்து, 'எம்பாரைத் தந்தருளவேணும்' என்ன, நம்பியும் எம்பாரை உடையவர்க்கு உத$_3$கதா$_4$ரா பூர்வகமாகக் கொடுத்தார். அதுக்குப்பின்பு எம்பார் உடையவரை ஸேவித்துக்கொண்டு திருவரங்கத்துக்கு நாலஞ்சு பயணமெழுந்தருள, நம்பியைப்பிரிந்தது எம்பார்க்குத் திருமேனி ஸோஷிக்க, உடையவர் எம்பாரைப்பார்த்து, ''உமக்கு இப்படி ஆவானென்?'' என்ன, எம்பாரும் 'நம்பியைப்பிரிந்து மிகவும் இளைத்தேன்' என்ன, ''ஆனால் நீர் நம்பி ஸ்ரீபாதத்தேறப் போம்'' என்ன, எம்பாரும் முன்பு நாலஞ்சு பயணமும் ஒரு பயணமாக மீண்டு திருமலைக்கெழுந்தருளி நம்பி திருவடிகளிலே தண்டனிட்டு நிற்க, நம்பியும் எம்பாரைப்பார்த்து, ''உத$_3$கபூர்வகமாக உம்மை உடையவர்க்குக் கொடுத்துவிட்டோமே; அவரைவிட்டு நீரிங்கு வருவானென்?'' என்ன, எம்பாரும் தம்முடைய திருமேனி ஸ்வபா$_4$வத்தை விண்ணப்பம்செய்ய, நம்பியும், ''விற்றபசுவுக்குப் புல்லிடுவாருண்டோ? நீர் உடையவர்க்குத் தானே அடிமை செய்துகொண்டு இரும்'' என்று ஒருபோதும் ப்ரஸாத$_3$மிடாமல் தள்ளிவிட்டார். எம்பாரும் அங்கு ஆசையற்று நமக்கினி உடையவர் திருவடிகளே தஞ்சமென்று அறுதியிட்டுக் கோயிலுக்கு எழுந்தருளி உடையவரை ஸேவித்துக் கொண்டு மிகவும் ப்ரீதராய் வாழுகிற காலத்திலே, ஒருநாள் உடையவரும் முதலிகளும் பெரிய திருவோலக்கமாக எழுந்தருளியிருக்க, முதலிகளெல்லாரும் எம்பாருடைய ஜ்ஞானப$_4$க்தி வைராக்$_3$யங்களைச் சொல்லித் தலைதுலுக்கிக்கொண்டாட, எம்பார் தாமும் அது 'ஒக்கும் ஒக்கும்' என்று அவர்களைக் காட்டில் மிகவும் தம்மை ஶ்லாகி$_4$த்துக்கொள்ள, உடையவரும் அத்தைக்கேட்டு எம்பாரைப் பார்த்து, ''எல்லாரும் உம்மை ஶ்லாகி$_4$த்தால் நீர் நைச்யாநுஸந்தா$_4$னம் பண்ணவேண்டியிராநிற்க. அது செய்யாதே நீர் தாமே உம்மை ஶ்லாகி$_4$த்துக்கொள்ளாநின்றீர்; இப்படியிருப்பதொன்று உண்டோ?'' என்ன, எம்பாரும் உடையவரைப்பார்த்து ''ஐயோ! முதலிகள் அடியேனைக் கொண்டாடில் காளஹஸ்தியிலே கையும் குடமும் கழுத்தும்கப்படமுமாய்க்கொண்டு

எளிவரவுபட்டு நின்ற அந்நிலையைக்கொண்டாடுமத்தனையன்றே அடியேனுக்குள்ளது: இப்படி ஆனபின்பு 'பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகி வந்து' என்கிறபடியே, தேவரீர் இவ்வாத்மாவை எடுக்கைக்காக ஒரு திருவவதாரம் பண்ணிச் செய்தருளின க்ருஷிபரம்பரைகளை அநுஸந்தித்து, நித்ய ஸம்ஸாரிகளிலும் கடைகெட்டுக்கிடந்த அடியேனைக் காலதத்வமுள்ளதனையும், 'எனக்கினி யார் நிகர்நீணிலத்தே', 'நெஞ்சமே நல்லை நல்லை' என்கிறபடியே அடியேனை ஶ்லாகித்துக் கொள்ளுகைக்கு ப்ராப்தியுண்டு. ஆகையாலே அடியோங்களெல்லாரும் தேவரீராலே இவ்வாத்மாவுக்கு உண்டான நன்மைகளை ஶ்லாகித்தது தேவரீரைக்கொண்டாடிற்றுமித்தனையன்றே'' என்று விண்ணப்பம் செய்ய; உடையவரும் "ஸ்ரீகோவிந்தப்பெருமாளே! நல்லீர் நல்லீர்'' என்று எம்பாரை மிகவும் உகந்தருளினாரென்று பெரியோர்கள் அருளிச்செய்தருளுவர்கள்.

கொங்குநாடு க்ஷாமமானவாறே ஒரு ப்ராஹ்மணன், ஸ்த்ரீயும் தானும் கோயிலிலேவந்து இருந்தான். அக்காலத்திலே எம்பெருமானார் ஏழு க்ருஹம் மாதூகரம் பண்ணி அமுதுசெய்தருளுவர். திருவீதியிலே எழுந்தருளும்போது அகளங்கநாட்டாழ்வானுடைய வட்டத்தில் முதலிகள் எல்லாரும் தண்டனிடுவர்கள். அந்த ப்ராஹ்மணன் ஸ்த்ரீயும் தானுமாக ஒருமச்சிலே இருக்கையாயிருக்கும். ஒருநாள் உடையவர் மாதூகரத்துக்கு அந்த க்ருஹத்துக்கு எழுந்தருளினவாறே அந்தப்பெண் மச்சு நின்று இழிந்து இடைகழியிலே நின்று ''ராஜாக்கள் உம்மை தண்டனிடாநின்றார்கள். நீர்மாதூகரம் பண்ணாநின்றீர். இதுக்குக் காரணமேது'' என்று உடையவரைக்கேட்க ''நாம் அவர்களுக்கு நல்வார்த்தை சொன்னோம். ஆகையாலே தண்டனிடுகிறார்கள்'' என்று அருளிச்செய்ய, ''அந்த நல்வார்த்தை எனக்கு அருளிச்செய்ய வேணும்'' என்று தண்டனிட்டாள். உடையவரும் அப்போது அவளுக்கு ஹிதத்தை ப்ரஸாதித்தருளினார். பின்பு அவர்களுடைய தேசம் ஸுபிக்ஷமாய் அவர்கள் அங்கேறப்போக இருக்கிறவளவிலே, உடையவரை ஸேவித்துப்போகப்பெற்றிலேனென்று அந்தப்பெண் வ்யாகுலப்பட்டுக்கொண்டு இருக்கிறவளவிலே மாதூகரத்துக்கு அங்கேற எழுந்தருளினார். அந்தப்பெண் மீளவும், ''எங்கள் நாடேறப் போகாநின்றோம், முன்பு அருளிச்செய்த நல்வார்த்தை அடியேன் நெஞ்சிலே படும்படி அருளிச்செய்து எழுந்தருளவேணும்'' என்று மிகவும் அநுவர்த்திக்க,

உடையவரும் அவ்வாத்மாவை மிகவும் க்ருபைபண்ணியருளி, ஹிதத்தை நெஞ்சிலே படும்படி ப்ரஸாதித்தருளி, எழுந்தருளப்புக்கவாறே, 'இன்னமும் அடியேனுக்கு ஆத்மரக்ஷகமாக ஏதேனுமொன்று ப்ரஸாதித்தருளவேணும்' என்று அவள் விண்ணப்பம் செய்ய, உடையவர் அப்போது சாற்றி எழுந்தருளியிருக்கிற திருவடிநிலைகளைப் பெரியபிராட்டியார் என்கிற அந்தப்பெண்ணுக்கு ப்ரஸாதி$_3$த்து எழுந்தருளினார். அவளும் அன்று தொடங்கி உடையவர் திருவடிநிலைகளைத் திருவாராத$_4$னம் பண்ணிக்கொண்டு போந்தாளென்னும் இவ்வ்ருத்தாந்தம் வார்த்தாமாலையிலே ப்ரஸித்$_3$த$_4$ம். இத்தால் சொல்லிற்றேதென்னில், எம்பெருமானையுங்கூட உபேக்ஷிக்கிற ஸம்ஸாரத்திலே ஆசார்யருசி பரிக்$_3$ருஹீதமானது ஏதேனுமொன்று தஞ்சமென்று விஸ்வஸித்திருக்கை அரிது. ஆசார்ய விஸ்வாஸம் உண்டானவர்கள் கொங்கில் பெரியபிராட்டியாரைப் போலே இருக்கவேணுமென்று சொல்லிற்று. இவ்விடத்திலே பொன்னாச்சியார், தும்பியூர்க்கொண்டி, ஏகலவ்யன், விக்ரமாதி$_3$த்யன் வ்ருத்தாந்தங்களை ஸ்மரிப்பது.

217. பெரியவாச்சான் பிள்ளை அருளிய க$_3$த்$_3$யவ்யாக்$_2$யானம் ப்ரவேஸம்:- ஸ்ரீபா$_4$ஷ்யத்தில்— "தத்த்வமஸி" இத்யாதி$_3$ வாக்யஜந்யஜ்ஞாநமே மோக்ஷஸாத$_4$நமென்றும், கர்மஜ்ஞாநஸமுச்சயமே மோக்ஷஸாத$_4$நமென்றும் சொல்லுகிற குத்$_3$ருஷ்டிகளை நிரஸிக்கைக்காக, கர்மாங்க$_3$கமாய், வேத$_3$நத்$_4$யாநோபாஸநாதி$_3$ஸப்$_3$த$_3$வாச்யமாய், ப$_4$க்திரூபாபந்நமான உபாஸநாத்மகஜ்ஞானமே வேதா$_3$ந்தப்ரதிபாத்$_3$யமான மோக்ஷஸாத$_4$னமென்று இவர் நிஸ்சயித்து அருளிச்செய்கையாலே இவர் மோக்ஷஸாத$_4$நமாக அறுதியிட்ட அர்த்த$_2$ம் இதுவேயென்று கொண்டு தம்முடைய ருசிபரிக்$_3$ருஹீதமான அர்த்த$_2$த்தையே விஸ்வஸித்திருக்கும் ஸாத்விகர் இத்தையே விஸ்வஸித்திருக்கக் கூடுமென்று பார்த்தருளி, ஆசார்யருசிபரிக்$_3$ருஹீதமுமாய், தமக்குத் தஞ்சமாகத் தாம் அறுதியிட்டிருக்கும் அர்த்த$_2$ம் ப்ரபத்தியென்னுமிடத்தை இக்க$_3$த்$_3$யரூபேண வெளியிட்டருளுகிறார். ஆனால், இப்ரபத்திதன்னையேகொண்டு குத்$_3$ருஷ்டி நிரஸனம் பண்ணாதொழிவானென்னென்னில்: ப்$_3$ராஹ்மணன் சண்டா$_3$ளனுக்கு வேத$_3$த்தை உபதே$_3$ஸித்தாற்போலே தூ$_3$ரஸ்த$_2$ரானவர்களுக்குப் பரமரஹஸ்யமான இவ்வர்த்த$_2$த்தை வெளியிடவொண்ணாதென்று பார்த்து, அவர்களிழிந்த ஸாஸ்த்ரமுக$_2$த்தாலேயே அவர்களை நிரஸித்து, ஸாஸ்த்ரதாத்பர்யமான ஸ்வஸித்$_3$தா$_4$ந்தத்தை இம்முக$_2$த்தாலே வெளியிடுகிறார்.

ஆக, இப்படி வேதா3ந்த ஸித்3த4முமாய், ஸ்வரூபப்ராப்த
முமாய், ஆசார்யருசிபரிக்3ருஹீதமுமாய், ஶரண்யஹ்ருத3யாநு
ஸாரியுமாயிருக்கையாலே அதிலும் இதுவே அநுஷ்டே2யமென்
னுமிடத்தைத் தம்மை விஶ்வஸித்திருக்கும் ஸாத்விகர் இழக்க
வொண்ணாதென்று பார்த்து, தாமும் பெரியபெருமாளும் அறிந்
ததாக அநுஸந்தி4த்துவிட அமைந்திருக்க, தம்முடைய பரமக்ரு
பையாலே க3த்3யமுகே2ந வெளியிடுகிறார்.

இதுதான் அவதரித்தபடி எங்ஙனேயென்னில்: ஒரு திருவுத்
தரத்திருநாளிலே, பெருமாளும் நாச்சியாருமாகப் புறப்பட்டு ஏறி
யருளாநிற்குமளவிலே எம்பெருமானார் எழுந்தருளித் திருவடி
தொழாநின்றார். அஸ்யாம் அவஸ்தா2யாம் திருவுள்ளத்திலே ஸம்
ஸாரபீ4தி நடையாட, திருவடிகளிலே விழுந்து ஶரணம் புக்கவது
க்குப் பாசுரமிட்டபடி. 'முதலிலே ஸம்ஸாரப4யபீ4தராய்க்கொண்டு
பெரியநம்பிஶ்ரீபாத3த்தை ஆஶ்ரயித்தபோதே பெரியபெருமாள்
திருவடிகளிலே ஶரணம்புக்கிலரோ? "ஸக்ருதே3வ" என்றன்றோ
ஶரண்ய ஹ்ருத3யமிருப்பது. ஆனபின்பு, 'தத் தஸ்ய ஸத்3ரு
ஶம் ப4வேத்" என்றும், "உன்னாலல்லால் யாவராலும் ஒன்றும்
குறைவேண்டேன்" என்றும் "களைவாய் துன்பம் களையாதொழி
வாய் களைகண் மற்றிலேன்" என்றும் சொல்லுகிறபடியே
உடையவன் உடைமையைச் செய்தபடி செய்கிறான் என்று
ஆறியிருக்க ப்ராப்தமாயிருக்கத் திரியட்டும் இப்போது ஶரணம்
புகவேண்டுவானென்' என்னில்; அவ்வளவு ஆறியிருக்கமாட்டாத
தம் ப்ராப்யத்வரையாலே ஶரணம் புகுகிறார். இதிறே ஆழ்வார்
களுக்கும் ரீதி. அவர்களை அடியொற்றுகிற ஆசார்யர்களுக்கும்
அதுவே ரீதியாமத்தனையன்றோ. ஸம்ஸாரப4யமும் ப்ராப்யருசியும்
கனக்கக் கனக்க ஒருகால் ஶரணம் புக்காப்போலே ஒன்பதின்
கால் ஶரணம் புகுமித்தனையிறே அவர்கள். ஆக, ஸம்ஸார
நிவ்ருத்தி பூர்வகமாகக் கைங்கர்யஸித்3தி4க்குப் பெரியபெருமாள்
திருவடிகளிலே ஶரணம் புகுகிறார்.

218. ஷ பதினேழாவது சூர்ணை அவதாரிகை:- "இப்படி
பெரியபெருமாள் அருளிச்செய்தாரென்று நாங்கள் விஶ்வஸித்
திருக்கும்படியென்?" என்று எம்பார் கேட்டருள, "எனக்குப்
பெரியபெருமாள் தம்முடைய ஶீலாதி3கு3ணங்களை ஹஸ்தாமலக
மாகக் காட்டித் தந்தார். அங்கு திருவுள்ளமாகாதது என்

வாயால் புறப்படாதே. அவர் சொல்லுவிக்கச் சொன்ன வார்த்தை யாகையாலே அவர் அருளிச்செய்த வார்த்தையென்று விஸ்வஸித் திருக்கத் தட்டில்லை" என்று உடையவர் அருளிச்செய்தார்.

219. ஸ்ரீவைகுண்ட2 க3த்3ய வ்யாக்2யானம் ப்ரவேஸம்:- பா4ஷ்யகாரர் தம் திருவுள்ளக்கருத்தில் அறுதியிட்ட அர்த்த2ம் பணைநிழற்போலே தம்மொருவரளவிலே பர்யவஸியாதே, கல்பக தருச்ச2ாயைபோலே பரோபகாரார்த்த2மாக உபாயோபேயங்களை அநுஷ்டி2ப்பான் என்று பரோபதே3ஸ ப்ரவ்ருத்தராகிறார் ஸ்ரீவைகுண்ட2க3த்3யத்திலே. பெரிய க3த்3யத்தில், ஸாமாந்ய ப4க3வத்3விஷயமாக அவரை நோக்கி ஸ்வப்ரார்த்த2நையாக அருளிச்செய்தார். ஸ்ரீரங்க3 க3த்3யத்தில், ஸௌலப்4யத்துக்கு எல்லை நிலமான பெரியபெருமாள் விஷயமாக அவரை நோக்கி ஸ்வ ப்ரார்த்த2நையாக அருளிச்செய்தார். இதில் பரத்வத்துக்கு எல்லை நிலமான ஸ்ரீவைகுண்ட2நாத2ன் விஷயமாகப் பிறரைநோக்கிக் கர்த்தவ்யோபதே3ஸம் பண்ணுகிறார்.

ஸ்ரீபா4ஷ்யத்தில், லோகத்தில்—து3ராசாரம் உபாயமென்பார், தே3வதாந்தரோபாஸநம் உபாயம் என்பார், தே3வதையை யொழியவே கேவல கர்மம் உபாயமென்பார், கேவலம் ஜ்ஞாநம் உபாயமென்பார், கர்மஜ்ஞாந ஸமுச்சயம் உபாயமென்பாராய்க் கொண்டு வேதா3ர்த்தங்களை விகல்பிக்கிற பா3ஹ்ய குத்3ருஷ்டிகளை நிரஸிக்கைக்காக, "நீங்கள் சொல்லுகிற வாக்யங்களுக்குப் பொருள் நீங்கள் சொல்லுகிறபடியல்ல; யுக்திகளிருந்தபடியாலும், ப்ரமாணாந்தரங்கள் இருந்தபடியாலும், கர்மஜ்ஞாநஸஹக்ருதையான ப4க்தியே உபாயம் என்று சொல்லுகிற இதுவே பொருள்" என்று ஸாதி4க்கவேண்டுகையாலே, ப்ரபத்தியும் உள்ளே ஸூசிதமாய்க் கிடக்கச்செய்தேயும், ப4க்தியிலே நோக்காக உப பாதி3த்தருளினார். இவ்வளவாலே—து3ஸ்ஸகையான ப4க்தியை உபாயமென்று ப்4ரமித்து, மந்த3மதிகள் ப4யப்படாமைக்காக, இப்படிப்பட்ட ப4க்திஸித்3தி4க்கும் புருஷார்த்த2ஸித்3தி4க்கும் சரமமான உபாயம் ப்ரபத்தியே என்னுமிடத்தை உபபாதி3த் தருளினார் பெரிய க3த்3யத்திலே. "ப4க்திஸாத்3குண்யத்துக்கும் ப்ர பத்தியேவேணும் என்று ப்ரபத்தி வைப4வம்சொன்ன இவ்வளவாலே ப்ரபத்தி அங்க3மாய் ப4க்திதானே ஸ்வதந்த்ரோபாயமோ" என்னும் அதிஸங்கை பிறவாமைக்காக, ஸூசகமாய், ஸ்வரூபாநுரூபமாய், இதரநிரபேக்ஷமாய், ஸ்வதந்த்ரமான ப்ரபத்தி உபாயமென்னு

மிடத்தை வெளியிட்டார் ஸ்ரீரங்கக₃த்₃யத்திலே. இனி, இதில்— இப்படி உபாயநிஷ்கர்ஷம் பிறந்தபின்பு, இவ்வுபாய ப்ராப்யமான தே₃ஶவிஶேஷவைப₄வத்தையும், அத்தே₃ஶாதி₄பதியாய், அநுப₄வ்யமான அவ்வஸ்துவைப₄வத்தையும், அவ்வஸ்துவைப₄வாநுப₄வஜநிதமான கைங்கர்யத்தையும், ஶ்ரோதாக்களுக்கு ருசி பிறக்கைக்காக அருளிச்செய்து, 'இவ்வர்த்த₂த்தில் ருசிபிறக்கைக் கடியான பா₄க்₃யமுடையார் இப்பேறு பெற்று வாழ்ந்திடுக' என்று உபாயாம்ஶத்தை ஸங்குசிதமாக அநுவதி₃த்து, உபேயாம்ஶத்தைப் பரக்க அருளிச்செய்து தலைக்கட்டுகிருர்.

220. ஷ நாயனுராச்சான் பிள்ளை அருளிய சது:ஶ்லோகீ வ்யாக்₂யானம் (முதல் ஶ்லோகம்—முதல் அடி):— "தே₃வதே₃வ தி₃வ்ய மஹிஷீம் அகி₂லஜக₃ந்மாதரம்" [தே₃வதே₃வனை எம்பெருமானுடைய தி₃வ்யமஹிஷியும், எல்லாவுலகிற்குத் தாயாயிருப்பவளும், (விஶேஷமாக) எனக்குத் தாயாயிருப்பவளும், க₃தியற்றவர்களுக்கு க₃தியாயிருப்பவளுமான ஸ்ரீதே₃வியை (வேருெரு)க₃தியற்ற அடியேன் ஶரணமடைகிறேன்] என்று பா₄ஷ்யகாரரும் இவருடைய (ஆளவந்தாருடைய) தி₃வ்யஸூக்தியை உட்கொண்டு ப₄க₃வத்ஸமாஶ்ரயணத்தை ப்ரதா₄நமாக அருளிச்செய்தாரிறே.

221. ஷ "பணிபதி: ஶய்யா" வ்யாக்₂யானம்:— "ஶேஷே பே₄கே₃ ஶ்ரியா ஸஹாஸீநம்" [ஸ்ரீதே₃வியுடன் திருவனந்தாழ்வான் மடியில் எழுந்தருளியிருப்பவனை...] என்று பா₄ஷ்யகாரர்.

222. ஷ "வாஹநம் வேத₃ாத்மா" வ்யாக்₂யானம்:- பா₄ஷ்யகாரரும் "ஸ்ரீவல்லப₄" என்று தொடங்கி, "ஶேஷஶேஷாஶந ப்ரமுக₂ நாநாவித₄ாநந்த பரிஜந பரிசாரிகா பரிசரிதசரணயுக₃ள" [ஶேஷன், விஷ்வக்ஸேனர் முதலான பலவித₄மான கணக்கற்ற தா₃ஸதா₃ஸிகளால் கிஞ்சித்கரிக்கப்பெற்ற திருவடியிணைகளை உடையவனே!] என்று அநுஸந்தி₄த்தருளினுரிறே.

223. ஷ "ஜக₃ந்மோஹிநீ" வ்யாக்₂யானம்:— இவ்வர்த்த₂த்ரயத்தையும் பா₄ஷ்யகாரர் "ப₄க₃வத்ஸ்வரூபதிரோதா₄நகரீம் விபரீதஜ்ஞாந ஜநநீம் ஸ்வவிஷயாயாஶ்ச போ₄க்₃யபு₃த்₃தே₄ர் ஜநநீம்" [ப₄க₃வத்ஸ்வரூபத்தை மறைப்பதும், விபரீதஜ்ஞானத்தை உண்டாக்குவதும், தன் விஷயமாக போ₄க்₃ய பு₃த்₃தி₄யை விளைப்பதுமான ப்ரக்ருதியிலிருந்து என்னைத் தாண்டுவிப்பாயாக] என்று அருளிச்செய்தாரிறே.

224. ஷ 2 வது ஸ்லோகம் "ப்ரபந்ந:" வ்யாக்₂யானம்:— இத்தை அடியொற்றியிறே பா₄ஷ்யகாரரும் "ப்ரபத்₃யே" [ஶரண மடைகிறேன்] என்று பற்றிற்று.

225. ஷ 4 வது ஸ்லோகம் முதல் அடி வ்யாக்₂யானம்:— "அகி₂லஹேய ப்ரத்யநீககல்யாணைகதாந" [தாழ்வு அனைத்துக்கும் எதிர்த்தட்டாகவும், மங்க₃ளங்களுக்கு ஒரே இருப்பிடமாகவுமிருக்கும் ஸ்வரூபத்தையுடையவன்] என்று உப₄யலிங்க₃ விஶிஷ்டவஸ்துவை அநுப₄வித்தருளினாரிறே பா₄ஷ்யகாரர்.

226. ஷ கடைசியிலுள்ள விசாரம்:— "ப₄க₃வந்நாராயணாபி₄ மதாநுருபஸ்வரூபரூப" [ப₄க₃வானான நாராயணனுக்கு இஷ்டமாகவும், தகுந்ததாகவுமுள்ள ஸ்வரூபம், ரூபம், (ரூப) கு₃ணம், விபூ₄தி, ஐஶ்வர்யம், ஶீலம் முதலான எல்லையற்ற மேன்மையையுடையவையும், கணக்கற்றவையுமான கல்யாணகு₃ணக₃ணங்கள் ஆகிய இவற்றை உடையவளும்] என்று ப₄க₃வத்ஸ்வரூபாநுரூபத்வத்தை பா₄ஷ்யகாரரும் ப்ரத₂மத்திலே ஸாதி₄த்தருளினாரிறே.

227. ஶ்ருதப்ரகாஶிகாகாரரான ஸுத₃ர்ஶனப₄ட்டர் அருளிய வேதா₃ர்த்த₂ஸங்க்₃ரஹ வ்யாக்₂யானமான தாத்பர்யதீ₃பிகை:—

"ஶ்ரீபா₄ஷ்யக்ருது₃பந்யஸ்த: ய: ஶ்ரீஶைலபதே: புர: |
வேதா₃ர்த்த₂ஸங்க்₃ரஹஸ்யாஸ்ய குர்வே தாத்பர்யதீ₃பிகாம்" ||

[திருமலையப்பனான திருவேங்கடமுடையான் திருமுன்பே ஸ்ரீ பா₄ஷ்யகாரராலே உபந்யாஸமாகச் செய்யப்பெற்ற வேதா₃ர்த்த₂ ஸங்க்₃ரஹத்திற்குத் தாத்பர்யதீ₃பிகை என்னும் வ்யாக்₂யானத்தைச் செய்கிறேன்.]

228. ஸுத₃ர்ஶனப₄ட்டர் ஶரணாக₃திக₃த்₃யம் 4-வது சூர்ணைக்கு அருளிய வ்யாக்₂யானம்:— "ஸ்வஸம்ப₃ந்தி₄ ஸம்ப₃ந்தி₄நிஸ்தரணமபி ஸர்வஶப்₃தா₃பி₄ப்ரேதம்" ['ஸர்வம் ஸம்பத்ஸ்யதே' என்று பிராட்டி அருளுகையாலே எம்பெருமானாரோடு பரம்பரயா ஸம்ப₃ந்த₄முடையவர்களுக்கும் பேறு உண்டு என்று உணர்த்தப்படுகிறது.]

229. ரஹஸ்யவிவேகம். ப₄ாஷ்யகாரரும் — ஸ்ரீவைகுண்ட₂ க₃த்₃யத்திலே "ஶேஷஶேஷாஶநாதி₃ ஸர்வம் பரிஜநம் ப₄க₃வதஸ் தத்தத₃வஸ்தோ₂சிதபரிசர்யாயாமாஜ்ஞாபயந்த்யா" என்று ப₄க₃வத்கைங்கர்யரூப பரமபுருஷார்த்த₂ம் இவள் நியோக₃த்தின் படி நடத்தவேணுமென்று அருளிச்செய்தார்.

230. ரஹஸ்யவிவேகம். ப₄ாஷ்யகாரரும் ப₄ாஷ்யத்திலே ப₄க்தியை "ஸ்வாஜ்ஞாதிவ்ருத்திவ்யவஸாய நிவ்ருத்தி மாத்ரேண" இத்யாதி₃யாலே அதி₄காரி விஶேஷணமாக அருளிச் செய்தார்.

231 ரஹஸ்யவிவேகம். ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயநிவ்ருத்தியைச் சொல்லுகிற நமஸ்ஸிலே ஸ்வரக்ஷணார்த்த₂மான ஸாத்₄யோபாயத்தை ஆர்த்த₂மாகச் சொல்லுகை அஸங்க₃தம். அகிஞ்சனனான அதி₄காரிக்கு ப₄ரந்யாஸத்தையொழிய வேறொன்றபேக்ஷையில்லாத ஸித்₃தோ₄பாயத்தை "மாமேகம்" என்று காட்டி, அவனுடைய வஶீகரணார்த்த₂மான ஸாத்₄யோபாயத்தை "ஶரணம் வ்ரஜ" என்று விதி₄க்கையாலே காட்டுகிறதென்கையும், ஏக ஶப்₃த₃ஸ்வாரஸ்யவிருத்₃த₄ம். ப₄ாஷ்யகாரரும் பதினெட்டுபர்யாயம் திருக்கோட்டியூர் நம்பி பக்கலிலே எழுந்தருளி மாஸோபவாஸம் பண்ணி சூழரவுகொண்டு பெற்ற அர்த்த₂த்துக்கு விருத்₃த₄மாகையாலே ஸம்ப்ரதா₃ய விருத்₃த₄ம். "ஶரணம் வ்ரஜ" என்று சோதி₃தத்வத்தால் வருகிற அதினுடைய உபாயத்வம் ஏக ஶப்₃தத்தாலே அபோதி₃தம். "என்னுணர்வினுள்ளேயிருத்தினேன்—அதுவும் அவனதின்னருளே" என்கிறவிடத்தில்—இருத்துகையும், 'இசைவித்தென்னை' என்கிற இசைவுமே அவனுடைய அருளின் கார்யமாகையாலே, அவ்வருளுக்கு அப்ரதா₄நமாகவும் காரணமன்றிறே. ப₄ாஷ்யகாரர் திருவாய்மொழியைக் கொண்டு ஸூத்ரவாக்யங்களொருங்கவிடுவரே. அப்படிப்பட்டவர் "ஆறெனக்கு நின்பாதமே" "கழல்களவையே சரணாக", "நாகணைமிசை நம்பிரான் சரணே சரண்", "அடிக்கீழமர்ந்து புகுந்தேனே" என்கிற இத்யாதி₃ ஆழ்வார் பாசுரத்துக்கு விருத்₃த₄மாக ப்ரபத்தியை அப்ரதா₄நவஶீகரணோபாயமாகவும் திருவுள்ளம் பற்றுரிறே. அப்படிப்பட்டவர் வஶீகரணோபாயமென்றால்

அதுக்குக் கருத்து – குத்3ருஷ்டிகளுக்கு ரஹஸ்யோபாயத்தை வெளியிடவொண்ணாமையிறே. உபாஸநாத்மகஜ்ஞாநத்தை பா4ஷ்யத்திலே அருளிச்செய்ததுக்குக் கருத்து அதுவே க3த்3ய வ்யாக்2யாநத்திலே ஆச்சான்பிள்ளை அருளிச்செய்தார். பா4ஷ்யகாரர் தாம் ஸ்வீகாரத்தில் அநுபாயத்வமாகிற ஏகஶப்3த3தாத்பர்யத்தை அருமைப்பட்டிறே பெற்றது. ஆகையால் அதுவேயிறே இவர்க்குத் திருவுள்ளம். அப்படிப்பட்ட எம்பெருமானார் திருவுள்ளத்துக்கு விருத்3த4மாக ஏகஶப்3த3தாத்பர்யகல்பநம் அத்யந்த ஸாஹஸ கார்யமாமத்தனை.

232 ரஹஸ்யவிவேகம். "தஸ்ய ச வஶீகரணம் தச்ச2ரணாக3திரேவ" என்று ஸ்ரீபா4ஷ்யகாரர் அருளிச்செய்தது; அவ்விடத்தில் ஶ்ருதப்ரகாஶிகையில் "நநு2ம் ஸர்வஸ்மாத் பரஸ்ய அநீஶ்வரேண ஸம்ஸாரிணா வஶீகர்த்தும் ஶக்யத்வம், ஶக்யஶ்சே[ஞ்சே]த் தத்ப்ரகாரோபி க்வசித் ஶ்ருயேத. ந ச ஶ்ருயதே, 'யச்சே2த் வாங்மநஸீ ப்ராஜ்ஞ' இத்யாதெ3ள அநுபலப்3தே4: இத்யத்ராஹ (தஸ்யசேதி) 'யச்சே2த்3வாங்மநஸீ' இத்யாதெ3ள தஸ்ய வஶீகார்யத்வ ஶ்ரவணம் து3ர்ஶயிஷ்யதே. (இத்யுக்த்வா வஶீகரணப்ரகாரப்ரதிபாத3கே 'தத்3யச்சே2த் ஶாந்த ஆத்மநி' இதிஶ்ருதிவ்யாக்2யாநே) தத்3யச்சே2த் ஶாந்த ஆத்மநீதி—ஶாந்தே ஸ்வத ஊர்மிஷட்கப்ரதிப4டே | மஹத ஆத்மநோ ஜீவஸ்ய நியமநம் நாம—தச்சே2ஷதாப்ரதிபத்தி:; ஸைவ தஸ்யாபி வஶீகரணம் ப4வதி" என்று ப4ட்டராலே அதி4காரி விஶேஷணமான ஶேஷத்வஜ்ஞாநகார்யமாக வ்யாக்2யாதமாய்த்திறே.

233. ரஹஸ்யவிவேகம். விஷ்வக்ஸேந மந்த்ரத்திலே— "விஶ்வஸ்ருஜே" என்று இவருக்கு ஸ்ரஷ்ட்ருத்வம் கண்டோ2க்தம். "ஸங்கல்பமாத்ராவக்லுப்த ஜக3ஜ்ஜந்ம ஸ்தி2தித்4வம்ஸாதி3கே ஸ்ரீமதி விஷ்வக்ஸேநே ந்யஸ்தஸமஸ்தாத்மைஶ்வர்யம்" என்று ஸ்ரீவைகுண்ட2க3த்3யத்திலே பா4ஷ்யகாரர் அருளிச்செய்தார்.

234. ரஹஸ்யவிவேகம். ஸ்ரீபா4ஷ்யத்திலே பலவிடங்களிலும் "த3யாஹி நாம ஸ்வார்த்த2நிரபேக்ஷா பரது3:க்க2ாஸஹிஷ்ணுதா" என்று பா4ஷ்யகாரர் அருளிச்செய்தார்.

235. ஸ்ரீவேதா3ந்ததே3ஶிகர் அருளிய கு3ருபரம்பராஸாரம். பெரியநம்பி வைபவம் ஐ. நி. 23 காண்க.

236. ஸ்ரீவேதா₃ந்ததே₃ஶிகர் அருளிய குருபரம்பரா ஸாரம் — எம்பெருமானுர் — திருக்கோட்டியூர் நம்பி ஸ்ரீபாத₃த்திலே ரஹஸ்யார்த்த₂ங்களை ஶிக்ஷித்தார். திருமாலையாண்டான் ஸ்ரீபாத₃த்திலே திருவாய்மொழி கேட்டார். ஆளவந்தாராழ்வார் ஸ்ரீபாத₃த்திலே திருவாய்மொழியும் ஓதி, ஸ்தோத்ராதி₃களும் அருளிச்செய்யும் நல்வார்த்தைகளும் கேட்டருளினுர். திருமலைநம்பி ஸ்ரீபாத₃த்திலே ஸ்ரீமத்₃ராமாயணம் கேட்டருளினுர். இவர் அருளிச்செய்த ப்ரப₃ந்த₄ங்கள் ஸ்ரீப₄ாஷ்யம், தீ₃பம், ஸாரம், வேதா₃ர்த்த₂ஸங்க்₃ரஹம், ஸ்ரீகீதா₃ப₄ாஷ்யம், சிறியக₃த்₃யம், பெரியக₃த்₃யம், ஸ்ரீவைகுண்ட₂க₃த்₃யம், நித்யம் ஆக ஒன்பது. இவர் ஸ்ரீபாத₃த்தில் ஆஶ்ரயித்த முதலிகளைத் தந்தாம் ஸம்ப்ரதா₃யப்படிகளிலே அறிந்து கொள்வது.

237. ஷ குருபரம்பராஸாரம் — இறுதியிலுள்ள பாடல்கள்

என்னுயிர்தந்(து) அளித்தவரைச் சரணம் புக்கு
யானடைவே அவர்குருக்கள் நிரை வணங்கி
பின்னருளால் பெரும்பூதூர் வந்த வள்ளல்
பெரியநம்பி ஆளவந்தார் மணக்கால் நம்பி
நன்னெறியை அவர்க்குரைத்த உய்யக் கொண்டார்
நாதமுனி சடகோபன் சேனை நாதன்
இன்னமுதத் திருமகளென் றிவரை முன்னிட்(டு)
எம்பெருமான் திருவடிகள் அடைகின்றேனே

ஆரண நூல்வழிச் செவ்வை அழித்திடு மைதுகர்க்கோர்
வாரண மாயவர் வாதக் கதலிகள் மாய்த்தபிரான்
ஏரணி கீர்த்தி இராமா னுசமுனி இன்னுரைசேர்
சீரணி சிந்தையி னேம்சிந்தி யோமினித் தீவினையே.

238. வேதாந்த தேசிகர் அருளிய ரஹஸ்ய த்ரய ஸாரம் சாஸ்த்ரீயநியமநாதி₄காரம். எம்பெருமானுர் திருநாட்டுக்கு எழுந்தருளுகிறபோது ஸ்ரீபாதத்திலே ஸேவித்திருந்த முதலிகளுடைய ஆர்த்தியைக் கண்டருளி இவர்களை அழைத்தருளி "என்னுடைய வியோக₃த்தில் தே₃ஹத்யாக₃ம் பண்ணினுருண்டாகில் ஆளவந்தார்ஸ்ரீபாதமே — என்னேடு அவர்களுக்கு ஸம்ப₃ந்த₄மில்லை" என்றருளிச்செய்ய, இவர்களும் இத்தைக் கேட்டு மிகவும் ஶோகார்த்தராய் "இனி எங்களுக்குச் செய்ய அடுப்பது எது?" என்று விண்ணப்பம் செய்ய, ்வர்

அருளிச்செய்தருளின வார்த்தை — "ஒருவன் ப்ரபந்நனுனல் அவனுடைய ஆத்மயாத்ரை ப₄க₃வத₃தீ₄னநயாகையாலே அதில் அவனுக்கு அந்வயமில்லை; உண்டென்றிருந்தானுகில் ஆத்மஸமர்ப்பணம் பொய்யாமித்தனை; தே₃ஹயாத்ரை கர்மாதீ₄னையாகையாலே அதுக்குக் கரையவேண்டா; கரைந்தானுகில் நாஸ்திகனுமித்தனை; ஆகையால் உப₄யயாத்ரையையுங் கொண்டு இவனுக்குக் கார்யமில்லை. ஆனுல் மநோ வாக் காய்ங்களாகிற த்ரிவித₄கரணங்களையுங் கொண்டு வேண்டிற்றுச் செய்து திரிய வமையுமோ? என்னில், அது இவனுக்கு ஸ்வரூபமன்று; உபாயாம்சத்தில் அந்வயமில்லாவிட்டாலும், ப்ராப்யமான கைங்கர்யத்திலே இவற்றை அந்வயிப்பிக்குமத்தனை. அதில் இவனுக்கு இங்கிருந்த நாள் பண்ணலாம் கைங்கர்யம் அஞ்சு உண்டு; அவையாவன — (1) பா₄ஷ்யத்தை வாசித்து ப்ரவர்த்திப்பித்தல் (2) அதுக்கு யோக்₃யதையில்லையாகில் அருளிச்செயலைக்கேட்டு ப்ரவர்த்திப்பித்தல் (3) அதுக்கு யோக்₃யதையில்லையாகில உகந்தருளின திவ்யதேசங்களுக்கு அமுதுபடி சாத்துப்படி திருவிளக்குத் திருமாலைகளையுண்டாக்குதல். (4) அதுக்கு யோக்யதையில்லையாகில் த்₃வயத்தினுடைய அர்த்தா₂நுஸந்தா₄னம் பண்ணுதல். (5) அதுக்கு யோக்யதையில்லையாகில் என்னுடையவன் என்று அபிமானிப்பானெரு ஸ்ரீவைஷ்ணவனுடைய அபி₄மானத்திலே ஒதுங்கி வர்த்தித்தல் செய்யலாம். இப்படி வர்த்திக்கும் அதிகாரிக்கு முன்னடி பார்த்து வர்த்திக்க வேண்டுவன மூன்று விஷயமுண்டு. அவையாவன :— (1) அநுகூலரென்றும் (2) ப்ரதிகூலரென்றும் (3) அநுப₄யரென்றும். அநுகூலராவார் — ஸ்ரீவைஷ்ணவர்கள்; ப்ரதிகூலராவார் — ப₄க₃வத்₃த்₃விட்டுக்கள்; அநுப₄யராவார்—இவ்விரண்டுமில்லாத ஸம்ஸாரிகள். இதில் அநுகூலரைக் கண்டால் சந்த₃ந குஸுமாதி₃கள் போலவும், நிலவு தென்றல் போலவும், அபி₄மத விஷயங்கள் போலவும் உகந்து வர்த்திப்பான். ப்ரதிகூலரைக் கண்டால் ஸர்ப்பாதி₃களைக் கண்டாற்போலே வெருவி வர்த்திப்பான். அநுப₄யரைக் கண்டால் காஷ்ட₂லோஷ்டாதி₃களைக் கண்டாற்போலே த்ருணவத்கரித்து வர்த்திப்பான். இவர்கள் அநுகூலிப்பார்களாகில் இவர்களுக்கு ஜ்ஞாநத்தை உண்டாக்கவும், இவர்கள் அநுகூலியார்களாகில் 'ஐயோ' என்று இவர்கள் பக்கலிலே க்ருபைபண்ணியிருக்கவும்

அடுக்கும். இப்படிச் செய்யவொட்டாதொழிகிறது அர்த்த₂காமங்களில் ப்ராவண்யம். அர்த்த₂காமங்களடியாக ஸ்ரீவைஷ்ணவர்களை அநாத₃ரித்திருக்குமாகில் ஸார்வபௌ₄மனாயிருப்பானொரு ராஜாவினுடைய புத்ரனை ராஜஸந்நிதி₄யிலே பரிப₄வித்தால் ராஜா வெறுக்குமாபோலே எம்பெருமான் திருவுள்ளம் சீறும். அர்த்த₂காமங்களடியாக ப்ரதிகூலரை ஆதரித்திருக்குமாகில், ராஜா ஸார்வபௌ₄மனாயிருக்க ராஜமஹிஷி க்ஷுத்₃ரஜந்துக்கள் பக்கலிலே மடிப்பிச்சை புக்கால் ராஜாவுக்கு அவத்₃யமாய் அத்தாலே அவளை அவன் வெறுக்குமாபோலே எம்பெருமான் திருவுள்ளம் வெறுத்திருக்கும். அர்த்த₂காமங்களடியாக அநுகூலரை ஆதரிக்குமாகில் ரத்நத்துக்கும் பாஷாணத்துக்கும் வாசியறியாதாப்போலே இவனுக்குப் பிறந்த ஜ்ஞாநம் கார்யகரமாயிற்றில்லை (யாகாதே) யென்று அவனளவிலே எம்பெருமான் அநாத₃ரித்திருக்கும்".

239. ஷை நிர்யாணாதி₄காரம். ஆழ்வான் அந்திமத₃ஶையிலே விடாயிலே நாக்கொட்டி எம்பெருமானார் திருவடிகளைப் பிடிக்க, இவர் அப்போது ஆழ்வான் செவியிலே த்₃வயத்தை அருளிச்செய்ய, "இப்பேறு நமக்கு வருகை அரிது, நாமென் செய்யக் கடவோம்?" என்று அப்போது ஸேவித்திருந்த முதலிகள் கலங்க, இவர்களபி₄ப்ராயத்தைத் திருவுள்ளம் பற்றி "ஆழ்வான் ப்ரக்ருதியறியீர்களோ? இவ்வவஸ்தை₂யில் இவருக்கு இது கர்ப்பூரத்தையும் க₂ண்ட₃ஶர்க்கரையையும் இட்டமாத்ரமன்றோ? நாமிது உபாயத்துக்குப் பரிகரமாகச் செய்தோமல்லோம்" என்று அருளிச்செய்ய, முதலிகள் தெளிந்து நிர்ப₄ரரானார்கள்.

240. ஷை அர்த்த₂பஞ்சகாதி₄காரம். இப்படி அநிஷ்ட பரம்பரைக்கு மூலங்களான ஆஜ்ஞாதிலங்க₄னங்களாலே வந்த ப₄க₃வந்நிக்₃ரஹ விஶேஷமாகிற ப்ரதா₄ந விரோதி₄க்குச்செய்யும் பரிஹாரத்தை, "தஸ்ய ச வஶீகரணம் தச்ச₂ரணாக₃திரேவ" [ஸ்ரீப₄ாஷ்யம் 1-4-1] [நமக்கு அருள்புரியும்படி அவ்வெம்பெருமானை வசப்படுத்தும் ஸாத₄நம் அவனை ஶரணமடைவதேயாகும்] என்று கட₂வல்லியில் வஶீகார்ய பரம்பரையை வகுத்த இடத்திலே ஸ்ரீப₄ாஷ்யகாரர் அருளிச்செய்தார்.

241. ஷை அபராத₄பரிஹாராதி₄காரம். இப்படி இவனுக்குப் பரிஹரணீயங்களானவற்றில் ராஜதா₃ராபராத₄ம்போலே பா₄க₃வதா

பசாரம் ப்ரத4ாநம் என்னுமிடத்தை, ''ஏவம் முக்திப2லாநியமஸ்தத3வஸ்தா2வத்4ருதேஸ்தத3வஸ்தா2வத்4ருதே:'' [ப்ரஹ்மஸூத்ரம் 3—4—51] என்ற ஸூத்ரத்திலே பா4ஷ்யகாரர் அருளிச்செய்தார்.

242. ஷ ஸித்3தே4ாபாயஶோத4நாதி4காரம். ''...... என்று சிலர் ஸித்3தோ4பாய முக2த்தாலே ஸாத்4யோபாயஶரீரத்தை அழிக்கப்பார்ப்பர்கள். இவர்களை விலக்கும்படி—பரமர்ஷிகளும், பா4ஷ்யகாராதி3களும் விஶ்வாஸபூர்வப்ரார்த்த2நாத்மநிக்ஷேபாதி3களைத் தாங்களும் அநுஷ்டி2த்து. இதுக்கு ஶாஸ்த்ரங்களையும் மூதலிப்பித்துக்கொண்டு, உபதே3ஶ பரம்பரையும் நடத்திப்போருகையாலே ஶேஷத்வாதி3 ஸம்ப3ந்த4ம் நித்யமேயாகிலும், கர்மவான்களான ஜீவர்கள் விஷயத்தில் ஈஶ்வரன் ஒருஸாத்4யோபாய விஶேஷத்தை முன்னிட்டல்லது ரக்ஷியான் என்று ஶாஸ்த்ரநிஷ்டா2ருக்குப் பரிக்3ரஹிக்கவேணும்.

243. ஷ ஸித்3தே4ாபாயஶோத4நாதி4காரம். ஸ்ரீபா4ஷ்யகாரரும் ஸ்ரீவைகுண்ட2க3த்3யத்தில்''ஶேஷஶேஷாஶநாதி3கம் ஸர்வம் பரிஜநம்ப4க3வதஸ்தத்தத3வஸ்தோ2சிதபரிசர்யாயாம்ஆஜ்ஞாபயந்த்யா'' என்று ப4க3வத்கைங்கர்யரூப புருஷார்த்த2ம் இவள் நியோக3த்தின்படியே நடத்தவேணும் என்று அருளிச்செய்தார்.

244 ஷ ஸித்3தே4ாபாயஶோத4நாதி4காரம். ''எம்பெருமானைச் சொன்னவிடத்திலே பிராட்டியையும் சொல்லிற்றும்'' என்று தொடங்கி உடையவர் அருளிச்செய்த வார்த்தையை ஆச்சான் பக்கலிலே கேட்டு நஞ்ஜீயர் ஸங்க்3ரஹித்தார்.

245. ஷ ஸித்3தே4ாபாயஶோத4நாதி4காரம். பா4ஷ்யகாரரும் இவ்வுபாயநிஷ்டை2யைச் சிறிய க3த்3யத்திலும், பெரிய க3த்3யத்திலும் அருளிச்செய்து. ஸ்ரீவைகுண்ட2க3த்3யத்திலும் இந்நிஷ்டை2யைச் சுருக்கிக்காட்டி, இருந்தநாள் ப்ராப்யருசி குறையாதே வளர்ந்துபோரும்படிக்கு ஈடான அநுஸந்தா4னவிஶேஷத்தை ''ததஶ்ச ப்ரத்யஹம் ஆத்மோஜ்ஜீவநாய ஏவமநுஸ்மரேத்'' என்று தொடங்கி அருளிச்செய்தார். இப்ரபந்நனுக்கு, ''பூசித்தும் போக்கினேன் போது'' என்கிற அநந்யப்ரயோஜனமான பூஜாவிஶேஷத்தை ''அத2 பரமைகாந்திநோ ப4க3வதா3ராத4ந

ப்ரயோகம்3 வக்ஷ்யே | ப4க3வத்கைங்கர்யைகரதி:பரமைகாந்தீ பூ4த்வா'' என்று தொடங்கி நித்யத்திலே ''அத்யர்த்த2 ப்ரிய விஶத3 விஶத3தம ப்ரத்யக்ஷரூபாநுத்4யாநேந த்4யாயந் ஆஸீத'' என்றும் அருளிச்செய்தார்.

246. ஷ ஸாத்4யோபாயஶோத4நாதி4காரம். இப்படி அநந்ய ப்ரயோஜநநிரந்தர ப4க3வத3நுஸந்த4ாநபரீவாஹமான கைங்கர்யத்திலே ப4க3வச்ச2ாஸ்த்ரோக்தமுமாய், வ்யாஸ த3க்ஷாதி3மஹர்ஷி மதங்களோடும் ஸங்க3தமாய். ''மறந்திகழும்'' என்கிற பாட்டிலும், ''இருமுப்பொழுதேத்தி'' என்ற பாசுரத்துக்கு விவக்ஷிதமாக ஆசார்யர்கள் வ்யாக்2யாநம் பண்ணின காலவிப4ாக3த்தை,

> ''அபி4க3ச்ச2ந் ஹரிம் ப்ராத: பஶ்சாத் த்3ரவ்யாணி சார்ஜயந்|
> அர்ச்சயம்ஶ்ச ததோ தே3வம் ததோ மந்த்ராந் ஜபந்நபி ||
> த்4யாயந்நபி பரம் தே3வம் காலேஷ்வேக்தேஷு பஞ்சஸு |
> வர்த்தமாந: ஸதா3 சைவம் பாஞ்சகாலிக வர்த்மநா ||
> ஸ்வார்ஜிதை: க3ந்த4புஷ்பாத்3யை: ஶுபை4: ஶக்த்யநுரூபத:|
> ஆராத4யந் ஹரிம் ப4க்த்யா க3மயிஷ்யாமி வாஸராந்||''

[காலையில் எம்பெருமானை அணுகி (இது அபி4க3மநம்), பிறகு அவனது திருவாராத4னத்திற்கு உறுப்பான திரவியங்களை ஸம்பாதி3த்து (இது உபாத3ாநம்), அதற்குப் பின் எம்பெருமானுக்குத் திருவாராத4னம் செய்து (இது இஜ்யை), அதற்குப் பின் மந்திரங்களை ஜபித்து (இது ஸ்வாத்4யாயம்), (இரவு துயில்கொள்ளுமுன்) பரமபுருஷனை தியானித்து (இது யோக3ம்), இப்படி ஐவகையான காலங்களில் பஞ்சகால பராயணராய் எப்போதும் வாழ்ந்து, தன்னால் இயன்றவரையில் ஸம்பாதி3க்கப்பட்ட மங்க3ளமான சந்த3னம் புஷ்பம் முதலான வற்றால் ப4க்தியோடு எம்பெருமானை தினந்தோறும் ஆராதித்துக் கொண்டு நாள்களைக் கழிப்பேனாக] என்று ப4ாஷ்யகாரர் அருளிச் செய்யக்கேட்டு வங்கிபுரத்து நம்பி நித்யத்திலே ஸங்க்3ரஹித்தார்.

247. ஷ ப்ரப4ாவவ்யவஸ்த2ாதி4காரம் ''ஸர்வத4ர்மாந் பரித்யஜ்ய'' என்கிறவிடத்தில் ப்ரத2மயோஜனையில் பு3த்3தி4விஶேஷ ரூபமான ஸாத்விகத்யாக3ம் சொல்லுகிறது என்று ப4ாஷ்ய காரர் அருளிச்செய்தார்.

248. ஷெ ப்ரபா4வரக்ஷாதி4காரம். ஸ்ரீபா4ஷ்யகாரர் அக்ருத்ய கரணக்ருத்யாகரணங்களோடே ப4க3வத3பசாராதி3களைச் சேர எடுத்தது கோ3பா3லீவர்த்த3ந்யாயத்தாலே ப4க3வத3பசாராதி3கள் தீவ்ரங்கள் என்கைக்காக. எல்லாம் ப4க3வத3பசாரங்களாயிருக்க, முக2பே4த3ங்களை விலக்ஷித்து, சிலவற்றை இங்கு பா4க3வதாபசாரங்கள் என்கிறது. "யாவை சில அபசாரங்களைப் புறம்பே செய்கிறுன், அப்படிப்பட்டவை தம்மையே ப4க3வத்3பா4க3வத விஷயங்களிலே செய்தால், விஷயஸ்வபா4வத்தாலே ராஜத்3ரோஹாதி3கள்போலே மிகவும் த3ண்ட3ஹேதுக்களாம்" என்று விஶேஷோபாத3ாநத்துக்கு அபி4ப்ராயம்.

249. ஷெ மூலமந்த்ராதி4காரம். ஶேஷத்வமாவது — தனக்கு ஒருபகாரத்தை ப்ரத4ானமாகப் பற்றலன்றிக்கே, பரோபகாரார்ஹமாகை. இத்தை — "பரகதாதிஶயாதா4நேச்ச2யா உபாதே3யத்வமேவ யஸ்ய ஸ்வரூபம் ஸ ஶேஷ:, பர: ஶேஷீ" என்று ஸ்ரீபா4ஷ்யகாரர் அருளிச்செய்தார்.

250. ஷெ மூலமந்த்ராதி4காரம். ஆனாலும், பா4வாந்தராபா4வ பக்ஷத்தில், ஸர்வாநிஷ்டநிவ்ருத்திதானே இஷ்டப்ராப்தியாயிருக்க, தனித்துச் சொன்னால் புநருக்தி வாராதோ? "அவித்3யாநிவ்ருத்திரேவ ஹி மோக்ஷ:" [அவித்3யையாகிற கர்மம் நீங்குதலேயன்றோ மோக்ஷம்] என்று ஸ்ரீபா4ஷ்யகாரரும் அருளிச்திலரோ? என்னில்: "ஏகமேவஸ்வரூபேண பரேண ச நிருபிதம் | இஷ்டப்ராப்திரநிஷ்டஸ்ய நிவ்ருத்திஶ்சேதி கீர்த்யதே ||" — ஒன்று தன்னையே ஸ்வரூபத்தாலும், ப்ரதியோகி3யாலும் நிருபித்து ப்ரயோஜந விஶேஷாபி4ஸந்தி4யாலே பிரியச் சொல்லக் கடவதாயிருக்கும்.

251. ஷெ த்3வயாதி4காரம். ஸ்ரீபா4ஷ்யகாரரும் "ப4க3வந் நாராயண" என்கிற நேரிலே "ப4க3வதீம் ஶ்ரியம்" என்று அருளிச்செய்தார்.

252. ஷெ சரமஶ்லோகாதி4காரம். ஹவிர்நிவேத3நத்திலும் ஸ்ரீபா4ஷ்யகாரர் "ஶாஸ்த்ராவிருத்3த4ாநி ஸம்ப்4ருத்ய" என்று அருளிச்செய்தார்.

253. ஷ சரமஶ்லோகாதி₄காரம். "தே₃வாந் ருஷீந் பித்ரூந் ப₄க₃வதா₃த்மகாந் த்₄யாத்வா ஸந்தர்ப்ய" [தே₃வர்களையும், ரிஷிகளையும், பித்ருக்களையும் எம்பெருமானை அந்தர்யாமியாக உடையவர்களாக தியானித்துத் தர்ப்பணம் செய்து] என்று நித்யப்ரப்₄ருதிகளில் ஸ்ரீபா₄ஷ்யகாரர் அருளிச்செய்தபடியே, தத்தத்₃தே₃வதா ஶரீரகனுகப் பரமாத்மாவை அநுஸந்தி₄த்துக்கொண்டு தத்தத் கர்மங்களை அநுஷ்டி₂க்கை ஶாஸ்த்ரப₃ல ஸித்₃த₄மானவிடத்தில் "உபாஸாத்ரைவித்₄யாத்" [ப்₃ரஹ்மஸூத்1—1—32]என்கிறபடியே ப்ரதர்த்த₃ந வித்₃யாதி₃களில் விஶேஷ்யமான தி₃வ்யாத்மஸ்வரூபத்தாலும், சேதநாசேதநவிஶிஷ்டனுகவும் பரமாத்மாவை உபாஸியாநின்றுலும், விஶேஷணமான சேதநாசேதனங்களில் ஆராத்₄யத்வமில்லாதாப்போலே இவ்விடத்திலும் விஶேஷணமான தே₃வர்ஷிபித்ராதி₃களை இவன் ஆராதி₄க்கிருனல்லன்.

254. ஷ சரமஶ்லோகாதி₄காரம். பா₄ஷ்யகாரஸம்ப்ரதா₃யத்திலுள்ள குலங்களெல்லாம் இன்றறுதியாக ஸ்வஸூத்ரோக்தமானபடியே தத்தத்₃ தே₃வதாமந்த்ரங்களைக் கொண்டு விவாஹ—உபநயநாதி₃கள் அநுஷ்டி₂க்கவும் காணுநின்றேம். பெரியநம்பி முதலான பரமாசார்யர்களும் தத்தத் ஸூத்ரங்களின்படியே யஜ்ஞாதி₃கள் பண்ணினுர்கள் என்னுமிடம் ஸர்வர்க்கும் ப்ரஸித்₃த₄ம். ஆனபின்பு, பா₄ஷ்யகாரருடையவும் தச்சி₂ஷ்யப்ரஶிஷ்யர்களுடையவும், உபதே₃ஶாநுஷ்டா₂னங்களிலே நிஷ்டை₂யுடையார்க்கு ஆக₃மஸித்₃த₄ாந்தாநுவர்த்திகளான ஸம்ஹிதா விஶேஷங்களில் ப்ரதிநியதமாகச் சொல்லும் மந்த்ரவிஶேஷங்களைக் கொண்டு க்ரியாவிஶேஷங்கள் அநுஷ்டி₂க்கவொண்ணுது.

255. ஷ சரமஶ்லோகாதி₄காரம். பா₄ஷ்யகாரர் அந்திம த₃ஶையிலும் வருந்தி எழுந்திருந்து ஸந்த்₄யாகாலத்திலே ஜலாஞ்ஜலிப்ரக்ஷேபம் பண்ணியருளினுர். ஆகையால், 'வர்ணுஶ்ரமத₄ர்மங்கள் ஔபாதி₄கங்கள்' என்று த்யஜிக்கை பூர்வாநுஷ்டா₂நாதி₃ விருத்₃த₄ம்.

256. ஷ அதி₄காரிவிபா₄கா₃தி₄காரம். "ஒருமலையில் நின்றும் ஒருமலையிலே தாவும் ஸிம்ஹஶரீரத்தில் ஜந்துக்களைப்போலே பா₄ஷ்யகாரர் ஸம்ஸாரலங்க₄நம் பண்ண, அவரோடு உண்டான குடல் துவக்காலே நாம் உத்தீர்ணராவுதோம்" என்று முதலியாண்டான் அருளிச்செய்த பாசுரம்.

257. வேதா3ந்ததே3ஶிகர் அருளிய ஸம்ப்ரதா3யபரிஶுத்3தி4. பெரியநம்பி ஐ. தி. 28 காண்க. அதற்குமேலே — இப்படி ஆசார்யாபி4மதவிஷயத்தில் ஆசார்யாநுஜ்ஞையாலே அபேக்ஷித ஜ்ஞாநோபஜீவநம் பண்ணுமது ஶாஸ்த்ரார்த்த2ம் என்னுமிடம் அந்திமத3ஶாவதி4யாக அத்யந்தாவஹிதராய்க்கொண்டு ஸதா3 சார்யாநுபாலநம் பண்ணின ஸ்ரீபா4ஷ்யகாரருடைய அனுஷ்டா2 நத்தாலே ஸித்3த4ம்.

258. ஷெ ஸம்ப்ரதா3யபரிஶுத்3தி4 ஸ்ரீபா4ஷ்யகாரருடைய ஶிஷ்யஸம்ப்ரதா3யங்களில் ஒன்றிலும் அர்த்த2 விரோத4மில்லை. வாக்யயோஜநாபே4த3மே உள்ளது. தே3ஶகாலாவஸ்தா2 விஶே ஷங்களாலே வரும் அநுஷ்டா2ந வைஷம்யம் ஶாஸ்த்ராநுமதம்.

259. ஷெ ஸம்ப்ரதா3யபரிஶுத்3தி4. சரமஶ்லோகத்தில் விதி4க் கிற ப்ரபத்தி ஸகலப2லஸாத4நமாகையாலே, அங்க3மாகவும், ஸ்வதந்த்ரமாகவும் வ்யாக்2யானம் பண்ணின பா4ஷ்யக3த்3யாதி3 களுக்கு விரோத4மில்லை.

260. வேதா3ந்ததே3ஶிகர் அருளிய தத்வஸந்தே3ஶம், ஸர்வ மந்த்ர ப்ரதா4நங்களான வ்யாபக மந்த்ரங்கள் மூன்றிலும் சேர ஸர்வாதா4ரபூ4தனுமாய், ஸர்வ ஶரீரியாய் நிற்கிற நிலையிலே இவனை "ஸ்வாதீ4நத்ரிவித4சேதநாசேதநஸ்வரூபஸ்தி2திப்ரவ்ருத்தி பே4த3ன்" என்று ஸ்ரீஆளவந்தாரும், ஸ்ரீபா4ஷ்யகாரரும் அருளிச்செய்தார்கள்.

261. வேதா3ந்ததே3ஶிகர் அருளிய ரஹஸ்யரத்நாவளீ. ஸ்ரீபா4ஷ்யகாராதி3களும் அருளிச்செய்த நித்யங்களையும் இங்கே அநுஸந்தி4ப்பது.

262. ஸ்ரீவேதா3ந்ததே3ஶிகர் அருளிய ந்யாயஸித்3தா4ஞ்ஜநம் முதலான பல ஸம்ஸ்க்ருத க்3ரந்த2ங்களிலும், மணிப்ரவாள நூல்க ளிலும் ஸ்ரீபா4ஷ்யகாரர் அருளிய ஒன்பது க்3ரந்த2ங்களிலிருந்தும் ஏராளமான மேற்கோள்கள் எடுக்கப்பட்டிருக்கின்றன.

263. ஸ்ரீவேதா3ந்ததே3ஶிகர் அருளிய யதிராஜஸப்ததி முழு வதும்— யதிராஜரைப்பற்றிய துதிநூல்.

264. பிள்ளைலோகம் சீயர் அருளிச்செய்த "ராமாநுஜார்ய தி3வ்யசரிதை" [ஸ்ரீராமாநுஜ சரித்ரத்தை மிக விரிவாகப் பலமேற் கோள்களுடன் இந்நூலில் மணிப்ரவாளநடையில் பிள்ளைலோகம்

சீயர் அருளிச்செய்திருக்கிருர், அந்நூலின் சுருக்கத்தைத் தலைப் புகளாக அடுத்தபடி கொடுத்து ஒருசில தலைப்புக்களின்கீழ் நூலின் மிக முக்கியமான சில பகுதிகளை அச்சிடுகிறேம்]

1. பரமபதநாதன் திருவனந்தாழ்வானையும் பெரிய திருவடியையும் (கருடாழ்வானையும்) உலகைத் திருத்துவதற்காக அவதரிக்கும்படி நியமித்தல். திருவனந்தாழ்வான் — ஆஸூரி கேசவப்பெருமாளுக்கும் (பெரிய திருமலை நம்பியின் சகோதரியான) ஸ்ரீ பூ₄மிப்பிராட்டியாருக்கும் திருக்குமாரராக, கலியுகம் பிறந்து நாலாயிரத்தொருநூற்றுப் பதினெட்டு வருஷத்திற்குப் பிறகு பிங்கள வருஷம்(கிபி. 1017)சித்திரை மாதம் சுக்லபக்ஷ பஞ்சமி வியாழக்கிழமை திருவாதிரையில் கடக லக்னத்தில் ஸ்ரீ ராமானுஜராக அவதரித்தல், பெரியதிருவடி—அதே வருஷம் தைமாதம் திங்கட்கிழமை புனர்பூசநக்ஷத்திரத்தில் ஸ்ரீ பூ₄மிப்பிராட்டியின் தங்கையான பெரிய பிராட்டியாருக்கும், நிரந்தரவகரம் எனப்பட்ட மதுரமங்கலத்தில் வட்டமணிக் குலத்தவரான கமலநயனபட்டருக்கும் குமாரராக 'கோவிந்தர்' என்னும் எம்பாராக அவதரித்தல்.

உ. ஸ்ரீ ராமானுஜருக்கு ஜாதகர்மம், நாமகரணம், உபநயநம் முதலான ஸம்ஸ்காரங்களைச் செய்வித்தல், விவாஹம் செய்வித்தல்.

3. திருக்கச்சிநம்பி, பேரருளாளருக்கு அந்தரங்க₃கைங்கர்யம் செய்து கொண்டிருந்தது. திருக்கச்சிநம்பி ஆளவந்தாரை ஆஶ்ரயித்தல். [பெருமாள் நியமனத்தால்] பெரியநம்பியின் அபி₄மானத்தைப் பெறுதல்,

4. உடையவர் பெருமாள் கோயிலில் எழுந்தருளியிருக்கும் போது 'தா₃ஶரதி₂' என்னும் முதலியாண்டான், வரத₃விஷ்ணு என்னும் நடாதூராழ்வான் ஆகிய இரு மருமகன்மார்கள் (சகோதரி புத்திரர்கள்) அவதரித்தல்.

5 ஸ்ரீமுகவருஷம் சித்திரை மாதம் பதினெட்டாம் தேதி ஶுக்ல ஷஷ்டி திங்கட்கிழமை புனர்வஸு நக்ஷத்திரத்தில் வாதூ₄ல குலத்தில் முதலியாண்டான் அவதரித்தார். கூரத்தாழ்வான் ஹாரீத குலதிலகராய் அவர் பிதாவானவர் யாக₃ம் பண்ணுகையாலே, ஸ்ரீராம நாம ஸோமயாஜியானவர் ஸூநுவாய், ஸ்ரீவத்ஸாங்கமகராய், ஶுக்ல வருஷம் தைமாதம் ஶுக்லபஞ்சமி ஞாயிற்றுக்கிழமை ஹஸ்த நக்ஷத்திரத்தில் கூரத்தில் அவதரித்தருளினர். (இருவருடைய அவதாரத்துக்கும் அவதார ஶ்லோகங்கள் கொடுக்கப்பட்டுள்ளன)

6, ராமானுஜரும், கோவிந்தரும் பெருமாள் கோயில் ஸமீபத்தில் யாதவப்ரகாஶன் என்னும் ஏகதண்டியிடம் வேதாந்த வ்யாக்யானம் கேட்டல். "ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம" என்கிற ஶ்ருதிக்கு யாதவப்ரகாஶன் அவப்பொருள் கூற, அதற்கு ராமானுஜர் சரியான பொருளுரைத்தல்.

7. "கப்யாஸ" ஶ்ருதிக்கு யாதவப்ரகாஶன் அவப்பொருள் கூற, ராமானுஜர் சரியான பொருள் உரைத்தது கண்டு யாதவப்ரகாஶன் அவரைக் கோபித்து விலக்குதல்.

8. யாதவப்ரகாஶன் ஸ்ரீராமானுஜரை கங்கையில் தள்ளிக் கொல்ல நினைத்து, அவரை மறுபடியும் அழைத்துச் சேர்த்துக் கொண்டு கங்காயாத்திரை செல்லும் வழியில் விந்தியமலைக் காடுகளில் கோவிந்தரால் உண்மை உணர்த்தப்பெற்ற ராமானுஜரை வேடன் வேடுவிச்சியாக வந்த பெருமாளும் பிராட்டியும் காஞ்சிக்கு அழைத்துச் செல்வதாகக் கூறல். விடியற்காலையில் அந்த வேடதம்பதிகள் ராமானுஜரிடம் சாலைக்கிணற்றுத் தீர்த்தத்தைப் பெற்று மறைதல். ராமானுஜர் காஞ்சி புண்யகோடி விமானத்தைக்கண்டு வியப்பெய்தல். எம்பெருமான் விரும்பிப்பெற்ற சாலைக் கிணற்றுத் தீர்த்தத்தை தினந்தோறும் பெருமாள் திருவாராதநத்துக்கு ராமானுஜர் ஸமர்ப்பித்தல்.

9. யாதவப்ரகாஶன் ராமானுஜரைத் தேடிக் காணமல் மற்ற சீடர்களுடன் கங்கைக்கரையை அடைதல். கோவிந்தருக்கு கங்காஸ்நானத்தின் போது கையில் லிங்கம் அகப்பட, அதுவே காரணமாக அவர் "உள்ளங்கை குளிர்ந்த நாயனார்" என்று பெயரிடப்பெறுதல். தம் ஊரில் அந்த லிங்கத்தை ப்ரதிஷ்டை செய்து பூஜித்தல். காளஹஸ்திநாதன் நியமனத்தாலே அங்கு சென்று காளஹஸ்திக்கோயில் நிர்வாஹத்தை ஏற்றுக்கொள்ளல். கங்கையிலிருந்து காஞ்சி திரும்பிய யாதவப்ரகாஶனிடம் மறுபடியும் ராமானுஜர் வேதாந்தம் வாசித்தல்.

10. ஆளவந்தார் ராமானுஜரின் பெருமைகளைக் கேள்விப்பட்டு, கோயிலிலிருந்து பெருமாள் கோயிலுக்கு எழுந்தருளியது. திருக்கச்சிநம்பியை ஆளவந்தார் 'யாதவப்ரகாஶனுடைய சிஷ்ய கோஷ்டியிலே இளையாழ்வார் யார்' எனக்கேட்க, "ஆஜாநு பாஹுவாய், சிவந்து நெடிய வலியவாய திருவடிகள் நகதேஜஸ்ஸோடே கூடிக்கொண்டு, முழந்தாள் தசைந்து, பழுத்த

திருப்பரியட்டமும் சாத்திக்கொண்டு, உதா₃ரமூர்த்தியையுடையராய், அகன்ற திருமார்பும், தசைந்த திருக்கழுத்தும், சிவந்த திருவத₄ரமும், சந்த்₃ரமண்ட₃லம்போலேயிருக்கிற திருமுகமண்டலமும், சந்த்₃ரகிரணம் போலேயிருக்கிற திருமுத்தின் ஒளியும், திருமுடிச் சீலையும் செவிமறையச்சாத்திக்கொண்டு நடுவிலே வருகிறவரே ராமானுஜர்'' என்று நம்பி இளையாழ்வாரைக்காட்ட, அவரை ஆளவந்தார்''ஆமுதல்வனிவன்'' என்றும் 'ஶேஷாவதாரம்'என்றும் கடாக்ஷித்து, ''இவர் த₃ர்ஶநப்ரவர்த்தகராம்படி விஶேஷகடாக்ஷம் பண்ணியருளவேணும்'' என்று வரத₃ராஜப் பெருமாளை ஶரணடைதல்.

11. அந்த தேசத்து அரசன் தன் மகளுக்குப் பிடித்திருந்த ப்₃ரஹ்மராக்ஷஸனைப் போக்குகைக்காக யாத₃வப்ரகாஶனை அழைத்தல். ப்₃ரஹ்மராக்ஷஸன் யாத₃வ ப்ரகாஶனின் முன் ஜன்மத்தை விளக்குதல். ப₄ாக₃வத ஸ்ரீபாத₃தீர்த்த₂ம் தளிகைப்ரஸாத₃ங்களின் மாஹாத்ம்யத்தைக் கூறுதல். யாத₃வப்ரகாஶனால் விரட்டமுடியாத ப்₃ரஹ்மராக்ஷஸன் இளையாழ்வாருடைய திருவடி ஸம்ப₃ந்த₄த்தால் நீங்குதல்.

12. 'ஸர்வம் க₂ல்வித₃ம் ப்₃ரஹ்ம' முதலான வேத₃வாக்யங்களுக்கு விசிஷ்டாத்₃வைதபரமாக ஸ்ரீராமானுஜர் அருளிச்செய்த அர்த்த₂ங்களைப் பொறுக்காத யாத₃வப்ரகாஶனை விட்டு விலகி, பேரருளாளருக்குச் சாலைக்கிணற்றிலிருந்து திருமஞ்சனதீர்த்தம் கொண்டுவந்து ஸமர்ப்பித்துக்கொண்டு இருந்தது.

13. ஆளவந்தார் பெரியநம்பி முதலானோர்க்குக் கோயிலிலே தஞ்சமாயிருக்கும் வார்த்தைகள் அருளிச் செய்தது. ஆளவந்தாருக்குத் திருமேனி பாங்கில்லாதிருந்து பிறகு பாங்கானது.

14. ஆளவந்தார் விஶிஷ்டாத்₃வைதத்தை நிலைநிறுத்துவதற்காகச் செய்தருளின எட்டு க்₃ரந்த₂ங்களில் த்₃வயப்பொருளை விளக்குவதான ஸ்தோத்ர ரத்னத்தைப் பெரியநம்பி திருக்கையிலே கொடுத்து, பெருமாள்கோயிலில் இளையாழ்வாருக்கு அனுப்பியது.

15. ஆளவந்தார் நோவுசாத்தித் திருநாட்டுக்கெழுந்தருளினது. ஆளவந்தாருக்கு ப்₃ரஹ்மமேத₄ ஸம்ஸ்காரம் நடந்த வித₄ம்.

16. பெருமாள்கோயிலில் பெரியநம்பி பேரருளாளனுக்கு முன்பு ஸ்தோத்ர ரத்னத்தை அநுஸந்தி₄த்துக் கொண்டிருக்க, ஸ்ரீ

ராமாநுஜர் "இதை அருளிச்செய்தவரை அடியேன் சேவிக்க வேணும்" என்று பிரார்த்திக்க, பெரியநம்பி அவரை ஸ்ரீரங்கத்திற்கு அழைத்து வருதல். இளையாழ்வாரும் பெரியநம்பியும் ஆளவந்தாருடைய சரமத்திருமேனியை ஸேவித்தல். ஆளவந்தாருடைய மூன்று திருவிரல்கள் முடங்கியிருப்பதற்குக் காரணம் கேட்க, ஆளவந்தார் சிஷ்யர்கள் அவரது திருவுள்ளத்திலிருந்த மூன்று குறைகளைக் கூறுதல்: அந்தக் குறைகளைத் தீர்ப்பதாக ராமாநுஜர் ப்ரதிஜ்ஞை செய்தவுடன் திருவிரல்கள் நிமிர்தல், ஸ்ரீ ராமாநுஜர் ஆளவந்தாரோடு வார்த்தை சொல்லமுடியாத குறையாலே பெரியபெருமாளையும் ஸேவிக்காமல் காஞ்சிக்குத்திரும்பி, திருக்கச்சி நம்பியிடம் செய்தி சொல்லுதல். திருக்கச்சி நம்பி ஆளவந்தாருக்கு ஸ்ரீ பூர்ணபரிபாலனமும், திருவத்யயனமும் நடத்துதல்.

17. திருக்கச்சிநம்பி தம் திருவடிகளில் ஆஶ்ரயிக்க விரும்பிய ராமானுஜரை விலக்கியருளியது.

18. ராமானுஜர் திருக்கச்சிநம்பியின் போனகம் செய்தசேடம் ஸ்வீகரிப்பதற்காக அவரைத் தம் திருமாளிகையில் அமுது செய்யப் பிரார்த்தித்தல். அவரை ராமானுஜர் தேடிச்சென்றபோது வந்த திருக்கச்சிநம்பியை ராமானுஜருடைய தேவி இடைகழியிலே அமுது செய்தருளப் பண்ணி, அவர் சென்றவுடன் அவ்விடத்தை ஶுத்திபண்ணி, தாமும் நீராடி நிற்கிறதைக் கண்டு ராமானுஜர் அவளை நிந்தித்தல்.

19. பேரருளாளர் பக்த பாரதந்த்ர்யத்தாலே தமக்கு அடிமை செய்வதைப் பொறுக்காமல், திருக்கச்சிநம்பி அவர் அனுமதியுடன் திருமலைக்கு எழுந்தருளுதல். திருவேங்கடமுடையானுக்குப் பூமாலைகள் ஸமர்ப்பித்து, திருக்கச்சிநம்பி திருவாலவட்டம் பரிமாற, "குளிரருவி வேங்கடத்தில் இதுநமக்குத்தேவையில்லை. உத்தரவேதியில் அக்னியிலே நாம் ஆவிர்பவித்த காஞ்சியிலேயே இக்கைங்கர்யத்தைச் செய்துகொண்டிரும்" என்று திருவேங்கடமுடையான் திருக்கச்சிநம்பிக்கு விடைகொடுத்தருள, திருக்கச்சிநம்பி காஞ்சியிலேயே கைங்கர்யம்செய்துகொண்டிருத்தல்.

20. ஸ்ரீ ராமானுஜருடைய பிரார்த்தனையைத் திருக்கச்சிநம்பி பேரருளாளருக்கு விண்ணப்பம் செய்ய, அவர் ஆறுவார்த்தை அருளிச்செய்தது.

21. ஸ்ரீரங்க₃த்தில் ஆளவந்தாருடைய சிஷ்யர்கள் ஸ்ரீராமானுஜரை த₃ர்ஶநப்ரவர்த்தகராம்படி பண்ணி அழைத்து வருவதற்காகப் பெரியநம்பியை அனுப்புதல். பேரருளாளரின் ஆறுவது வார்த்தையைத் திருவுள்ளத்திற் கொண்டு ஸ்ரீரங்க₃த்திற்குப் புறப்பட்ட ஸ்ரீராமானுஜர் பெரியநம்பியை மது₄ராந்தகத்திலே சந்திக்க, பெரியநம்பி அவருக்குத் திருவிலச்சினை சாதித்து த்₃வயத்தை உபதே₃ஶித்து அதன் அர்த்த₂த்தைத் தெளிவாக உபதே₃ஶித்தருளியது.

22. ஸ்ரீராமானுஜர் பெரியநம்பிகளை அழைத்துக்கொண்டு காஞ்சிக்குச் சென்று தம் தே₃விகளைப் பெரியநம்பி திருவடிகளில் ஆஶ்ரயிப்பித்தல்.

23. பெரியநம்பி இளையாழ்வாருக்கு அருளிச்செயல் மூவாயிரத்தையும் த₃ர்ஶநார்த்த₂ங்களையும் அருளிச்செய்துகொண்டிருக்கும் போது அவ்விருவருடைய தேவிகளுக்கும் மனஸ்தாபம் வர, பெரியநம்பி இளையாழ்வாரிடம் சொல்லாமல் ஸ்ரீரங்க₃த்திற்கெழுந்தருளினது.

24. இளையாழ்வார் தம் தே₃விகளுடைய து₃ர்க்கு₃ணங்களைப் பொறுக்காமல் பேரருளாளர் சந்நிதியில் ஸந்யாஸாஶ்ரமம் ஏற்றுக்கொண்டது.

25. இளையாழ்வார் வைப₄வத்தை அவ்வூரிலுள்ள ஓர் ஊமை "இவர் விஷ்வக்ஸேநருடைய அவதாரம்" என்று பேசி வெளியிட்டது.

26. இளையாழ்வார் கோவிந்தபட்டரைத் திருத்தி அழைத்து வரும்படி பெரியதிருமலை நம்பியைப் பிரார்த்தி₂த்து ஒரு ஸ்ரீவைஷ்ணவரை அனுப்பியது.

27. கூரத்தாழ்வானும், முதலியாண்டானும் ஸ்ரீராமானுஜரை ஆஶ்ரயித்து அவரை அகலாதிருத்தல்.

28. யாத₃வப்ரகாஶருக்கும் ஸ்ரீ ராமானுஜருக்கும் தப்தமுத்₃ராத₄ாரண விஷயமாகவும், ஊர்த்₄வ புண்ட்₃ர விஷயமாகவும் பெருமாள் கோயிலில் திருவனந்தஸரஸ்ஸில் ஞானப்பிரான் ஸந்நிதி₄யில் வாத₃ம் நடத்தல். யாத₃வப்ரகாஶர் ராமானுஜருடைய வாத₃ங்களுக்கு இசைந்து அவரிடம் திருவிலச்சினையும் திரி

தண்ட ஸந்யாஸமும் பெற்று,'கோ₃விந்த₃ ஜீயர்' என்னும் திருநாமத்தையும் அடைந்தது. கோ₃விந்த₃ஜீயர் ராமானுஜருடைய நியமனத்தாலே 'யதித₄ர்மஸமுச்சயம்' என்னும் கிரந்தமிட்டருளித் திருநாடலங்கரித்தல்.

29. நம்பெருமாள் பேரருளாளருக்கு ஸ்ரீராமானுஜரை அனுப்பச் சொல்லிப்போகவிட்ட ஸ்ரீமுகம் பேரருளாளரால் ஏற்கப்படாமல் போயிற்று என்னும் விஷயம்.

30. நம்பெருமாள் திருவரங்கப்பெருமாளரையரைக் கொண்டு பேரருளாளரை இசையாலே உகப்பித்து ராமானுஜரை ஸ்ரீரங்க₃த்திற்கு எழுந்தருளப்பண்ணிக்கொண்டு வந்தது.

31. ராமானுஜரை நம்பெருமாள் வரவேற்று, திருக்கைத்தலத்தில் எதிர்கொண்டழைத்தல். நம்பெருமாள் ராமானுஜருக்கு "உப₄யவிபூ₄தியையும் உடையவர்" என்று திருநாமம் சாத்தி, கோயில் காரியங்களை நிர்வஹிக்கும்படி கட்டளையிடுதல்.

32. உடையவர் நம்பெருமாளுடைய கைங்கர்யங்களுக்குத் தனித்தனியே ஒருவரை ஏற்படுத்தி, குறையற நடத்தியருளுதல்.

33. உடையவர் திருவரங்கப் பெருமாளரையரிடத்திலே திருவாய்மொழியைப் பண் இசை தாளத்துடனே ஓதி, அப்படியே பாடவல்ல பல விண்ணப்பஞ்செய்வாரை (அரையர்களை) ஏற்படுத்துதல்; பிள்ளைஉறங்காவில்லி தாஸரைப் பெரியபெருமாள் கடாக்ஷத்திற்கு இலக்காக்கி, பெருமாளுக்குத் திருமேனிக் காவலாய் நியமித்தல்; அவரும், அவருடைய மருமக்களான வண்டரும், சுண்டரும் மட₂த்திற்குத் ததீ₃யாராத₄னத்திற்கு அமுதுபடி முதாலானவை நடத்திக் கொண்டு வருதல்.

34. நம்பெருமாளுக்கு ஏற்பட்டதான பாஞ்சராத்ர பாரமேஶ்வர ஸம்ஹிதையின்படி நடந்த திருவாராத₄னம் ஒருகாலத்தில் வைக₂நஸ ரீதியாக மாறிநடந்ததை மாற்றி, உடையவர் முன் போலவே பாஞ்சராத்ர விதி₄ப்படி நடக்கும்படி பண்ணுவித்தல்.

35. பெரிய திருமலைநம்பி காளஹஸ்தியிலே ருத்₃ராபி₄ஷேகத்திற்குக் குடமெடுத்து வருகிற கோ₃விந்த₃ப₄ட்டரைக் கண்டு வார்த்தை சொல்லியது. பெரியதிருமலைநம்பி திருமலைக்குத் திரும்பி மறுபடியும் காளஹஸ்திக்கு வந்து கோ₃விந்த₃ப₄ட்டரோடு பேசுதல். காளஹஸ்தித் தோப்பில் ஒருநாள் திருவாய்மொழியில் "தேவன் எம்பெருமானுக்கல்லால் பூவும் பூசனையும் தகுமே" என்றவிடத்தைத் திருமலைநம்பி சிஷ்யர்களுக்கு வ்யாக்₂யானம் செய்து கொண்டிருப்பதைக் கேட்டு, கோ₃விந்த₃ப₄ட்டர் "தகாது தகாது" என்று கூறி, சைவசின்னங்களைவிட்டு, திருமலைநம்பி திருவடிகளில் வணங்குதல்.

36. கோ₃விந்த₃ப₄ட்டரும் அவர் தே₃விகளும் பெரியதிருமலை நம்பி திருவடிகளில் ஆஶ்ரயித்துப் பஞ்சஸம்ஸ்காரம் பெற்றது. கோ₃விந்த₃ப₄ட்டரும் அவரது தம்பியாரும் திருமலைநம்பியை ஆஶ்ரயித்த செய்தி சொன்ன ஸ்ரீவைஷ்ணவரை ராமாநுஜர் கொண்டாடியது.

37. பெரியநம்பி இரண்டாவது முறையாக உடையவருக்கு த்₃வயப் பொருளை விரிவாகச் சொல்லி, திருமந்த்ர சரமஶ்லோகங்களின் அர்த்த₂த்தைத் திருக்கோட்டியூர் நம்பி ஸந்நிதி₄யில் கேட்டுக்கொள்ளும்படி நியமித்தல்.

38. திருக்கோட்டியூர் நம்பி உடையவருக்குத் திருமந்த்ரார்த்த₂த்தை அருளிச்செய்து, பெரியபெருமாளுக்குக் கைங்கர்யம் செய்யும்படி நியமித்தல். உடையவர் சரமஶ்லோகார்த்த₂த்தை அருளிச்செய்யும்படி நம்பியைப் பிரார்த்தித்தல். நம்பி அவருடைய ஆஸ்திக்யத்தையும் ஆத₃ரத்தையும் பரீக்ஷிப்பதற்காக அவரைப் பதினேழு முறை திருவரங்கத்திற்குச் சென்றுவரும்படி அலைக் கழித்தல். பதினேழாவது முறை ஸ்ரீரங்க₃த்திற்கு வந்தபின்பு ஸ்ரீராமாநுஜர் படும் க்லேஶத்தை ஒரு ஸ்ரீவைஷ்ணவர் மூலம் கேட்டறிந்து நம்பி த₃ண்ட₃பவித்ரங்களோடு வரும்படி அந்த ஸ்ரீவைஷ்ணவர் மூலம் உடையவருக்குச் சொல்லி அனுப்புதல். அது கேட்டு உகந்து திருக்கோட்டியூர் எழுந்தருளிய உடையவர் நம்பி திருமாளிகை வாசலில் "உந்துமதகளிற்றன்" அநுஸந்த₄ானத்துடன் எழுந்தருள, கதவைத்திறந்த நம்பி குமாரத்தி தேவகிப்பிராட்டியாரை நப்பின்னைப் பிராட்டியாக எண்ணி தண்டனிடல். நம்பியும் அவருடைய தகுதியைக் கண்டு உகந்து, "எவர்க்கும் உபதே₃ஶிக்கக்கூடாது" என்று சபதம் பெற்று, சரமஶ்லோகார்த்த₂த்தை உபதே₃ஶித்தல். 'கூரத்தாழ்வானுக்கு மட்டும் ஒரு வருஷம் ஶுஶ்ரூஷை கொண்டு அதை உபதே₃ஶிக்கலாம்' என்று நம்பி அனுமதித்திருக்க, திருக்கோட்டியூரில் தெற்காழ்வார் (நரசிங்கன்) ஸந்நிதி₄யில் திரண்டிருக்கிற ஸ்ரீவைஷ்ணவர்களுக்கெல்லாம் சரமஶ்லோகார்த்த₂த்தை உபதே₃ஶித்தல். திருக்கோட்டியூர் நம்பி உடையவரின் ஸ்வப₄ாவத்தைச் சோதிப்பதற்காக, 'இப்படி ஆசாரியனுடைய ஆணையை மீறியதற்குப் ப₂லம் என்ன?' என்று ராமானுஜரைக் கேட்க, 'நரகமே ப₂லம்' என்று ராமாநுஜர் அருளிச்செய்ய, 'தெரிந்து ஏன் செய்தீர்?'

என்று நம்பி கேட்க "அடியேன் ஒருவனன்றோ நரகம் புகுகிறேன். இவ்வாத்மவர்க்க₃மெல்லாம் உஜ்ஜீவிக்குமே" என்று ராமாநுஜர் பதில் சொல்ல, "நம்பெருமாளோ நீர்?" என்று உகந்தருளிச்செய்து, 'எம்பெருமானார்' என்று அவருக்குத் திருநாமம் சாத்தி, "இந்த த₃ர்ஶனம் எப்போதும் எம்பெருமானார் த₃ர்ஶனமாகவே நடக்கும்" என்று அனைவர்க்கும் அருளிச்செய்தல்.

39. கூரத்தாழ்வான் ஒரு மாஸம் உபவாஸம் இருந்து உடையவரிடமிருந்து சரமஶ்லோகார்த்த₂ம் கேட்டது.

40 முதலியாண்டான் திருக்கோட்டியூர் நம்பி ஸந்நிதி₄யிலே ஆறு மாஸம் காத்திருந்து அவரிடம் ஸ்வரூப ஶிக்ஷை பெற்று அவர் நியமனத்தாலே உடையவரிடத்தில் சரமஶ்லோகார்த்த₂த்தைப் பெற்றது.

41. உடையவர் திருக்கோட்டியூர் நம்பி நியமனப்படி திருமாலையாண்டான் ஸந்நிதி₄யிலே திருவாய்மொழிக்கு அர்த்த₂ம் கேட்டல். "அறியாக்காலத்துள்ளே" என்ற பாட்டிற்கு உடையவர் ஆளவந்தார் நிர்வாஹத்துக்கு முரணாகச் சொன்ன அர்த்த₂த்தை "விஶ்வாமித்ர ஸ்ருஷ்டி" என்று இகழ்ந்து திருமாலையாண்டான் காலக்ஷேபம் சாதிப்பதைத் தவிர்தல். திருக்கோட்டியூர் நம்பி கோயிலுக்கு எழுந்தருளின போது இதைக்கேட்டு, திருமாலையாண்டானுக்கு எம்பெருமானார் பெருமையை உணர்த்தி, மறுபடியும் அவருக்குத் திருவாய்மொழியின் அர்த்த₂த்தை அருளிச்செய்து சாற்றும்படி செய்தது.

42. உடையவர் ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் ஸந்நிதி₄யில் ஆளவந்தார் ஸ்தோத்ரத்திற்கு அர்த்தம், 'ஆசார்யனே உபாயம்' என்னும் அர்த்த₂ம் ஆகியவற்றைப்பெற்று 'லக்ஷ்மணமுனி' என்னும் திருநாமத்தையும் அடைந்தது.

43. 'முன்புள்ளார் உடையவருக்கு ஆசார்யர்களாகவும், பின்புள்ளார் சிஷ்யர்களாகவும் உஜ்ஜீவித்தார்கள்' என்னும் விஷயம்; ஆசாரிய ரத்னஹாரத்தின் நாயகரத்னம் உடையவர்.

44. உடையவர் கொங்குப் பிராட்டிக்கு இரண்டுமுறை த்₃வயத்தை உபதே₃ஶித்து, திருவடிநிலைகளை ப்ரஸாதி₃த்தருளியது.

45. உடையவர் நம்பெருமாளுக்கு ஆசாரமாக உபசரிக்கும்படி நிர்ப்ப₃ந்தி₄ப்பதை ஸஹியாத உத்தமநம்பியொருவர் விஷங்

கலந்த பி₄க்ஷையை அவருக்கு ஸாதி₃க்கும்படி செய்ய, அதைத் திருக்காவேரியிலே கரைத்துவிட்டு உடையவர் ஒருமாஸம் உபவாஸமிருக்க, இந்த அறிந்த திருக்கோட்டியூர் நம்பி எழுந்தருளி, எம்பெருமானுர் சிஷ்யர்களில் அவருடைய திருமேனியில் பரிவுடையவர் கிடாம்பியாச்சானே என்று சோதித்தறிந்து அவரை என்றும் பி₄க்ஷை ஸாதி₃க்கும்படி நியமித்தருளியது.

46. யஜ்ஞமூர்த்தி என்ற அத்₃வைதியான மஹாவித்₃வான் உடையவரிடத்தில் பதினேழுநாள் தர்க்கவாத₃ம் செய்து, பின்பு அருளாளப்பெருமாள் அருளாலே உடையவரிடம் தோற்று அவர் திருவடிகளிலே ஆஶ்ரயித்து ''அருளாளப்பெருமாள் எம்பெருமானுர்'' என்று திருநாமம் பெற்றது.

47. அனந்தாழ்வான் முதலானுர் உடையவர் நியமனத்தாலே அருளாளப்பெருமாள் எம்பெருமானுர் திருவடிகளிலே ஆஶ்ரயித்தது.

48. அனந்தாழ்வான் உடையவர் திருவுள்ளப்படி திருமலைக்கெழுந்தருளி, அங்கே ''ராமானுசன்'' என்ற திருநந்தவனம் செய்தருளி, புஷ்ப கைங்கர்யம் செய்துகொண்டிருந்தது.

49. கூரத்தாழ்வான் தம்முடைய சொத்துக்கள் அனைத்தையும் கைவிட்டு உடையவரையே எல்லாச் செல்வமுமாகக் கொண்டு தம்முடைய பத்னியான ஆண்டாளோடு கூட ஸ்ரீரங்க₃த்திற்கு எழுந்தருளி உடையவருக்குக் கைங்கர்யம் செய்து கொண்டிருத்தல்.

50. உடையவர் திருவேங்கட யாத்ரைக்கு எழுந்தருளப் போவதை நினைத்துப் பிள்ளையுறங்காவில்லி த₃ாஸர் மதிகலங்கி நின்றது.

51. உடையவர் திருவேங்கட யாத்ரைக்கு எழுந்தருளும் வழியில் திருவெள்ளறை, திருக்கோவலூர் ஆகிய தி₃வ்யதே₃ஶங்களைச் சேவித்தல். அங்கிருந்து புறப்பட்டு அஷ்டஸஹஸ்ரம் (எண்ணுயிரம்) குடியைச் சேர்ந்த யஜ்ஞேஶர் (எச்சான்) என்பவர் ரஜோகு₃ணம் மிக்கவரராய் இருக்கையாலே அவரை உபேக்ஷித்து, ஸாத்விகரான பருத்திக் கொல்லையம்மாள் திருமாளிகைக்கு எழுந்தருளுதல். எச்சானையும் திருத்தியருளுதல்.

52. உடையவர் (காஞ்சீபுரத்தில்) பேரருளாளனை மங்க₃ளாஶாஸனம் செய்தல்.

53. உடையவர் திருமலையிலே திருவேங்கடமுடையானை மங்க₃ளாஶாஸனம் செய்தது.

54. திருமலை நம்பிக்கு விரித்த படுக்கையில் அவரது சீடரான கோ₃விந்த₃ப்பெருமாள் படுத்துக்கொண்டு பார்த்தது; கோவிந்தரின் ஆசாரிய ப₄க்தி.

55. (பெரிய) திருமலை நம்பி உடையவருக்கு ஸ்ரீராமாயணத்தை த்₃வய பரமாக அர்த்த₂ம் அருளிச்செய்தது.

56. பெரிய திருமலை நம்பி உடையவருக்கு கோ₃விந்த₃ப்பெருமாளைக் கொடுத்தருளியது. அவரது பிரிவை த₄ரிக்காத கோ₃விந்த₃ரை உடையவர் திருமலைக்குத் திருப்பிப்போகச் சொல்ல, திருமலை நம்பி அவரை ஏற்காமல் திருப்பி அனுப்பியது.

57. உடையவர் எச்சான் திருமாளிகைக்கு எழுந்தருளியது, அங்கிருந்து ஸ்ரீமுஷ்ணம், திருவாலி திருநகரி முதலான தி₃வ்ய தே₃ஶங்களில் பெருமாளையும் திருமங்கையாழ்வாரையும் மங்க₃ளாஶாஸனம் செய்தருளியது. அங்கிருந்து திருவிந்தளூர், தேரழுந்தூர், திருக்குடந்தை, திருவிண்ணகர், திருப்பேர்நகர் முதலான தி₃வ்ய தே₃ஶங்களை மங்க₃ளாஶாஸனம் செய்து கொண்டு திருவரங்கம் எழுந்தருளுதல்.

58. கோ₃விந்த₃ப்பெருமாள் எம்பெருமானரடியாள் என்னும் தா₃ஸி பாடின உடையவர் தாலாட்டிலே ஈடுபட்டது. அதற்குக் காரணம் கேட்டு எம்பெருமானார் வியப்புறுதல். பத்னியிடமும் ஈடுபாடு இல்லாமையறிந்து அவருக்கு உடையவர் ஸந்யாஸாஶ்ரமம் அளித்தல்.

59. உடையவர் சிஷ்யர்கள் அனைவரும் எம்பாருடைய ஜ்ஞான ப₄க்தி வைராக்₃யங்களையும், ஆசார்ய நிஷ்டை₂யையும் கொண்டாட, அவர் அதை அங்கீ₃கரித்தது. அதன் கருத்தை விளக்குதல். 'பற்பமெனத்திகழ்' என்னும் எம்பெருமானார் திருமேனி அநுப₄வமான பாட்டை அருளிச்செய்தல்.

60. அருளாளப்பெருமாள் எம்பெருமானார் "இரண்டு எம்பெருமானார் இருக்கலாகாது" என்று தம்முடைய மட₂த்தை இடித்துவிட்டு உடையவர் மட₂த்திலேயே எழுந்தருளியிருந்தார் என்பது.

61. கூரத்தாழ்வான் திருவரங்கத்தமுதனருடைய தாயார் ஏகாஹத்தில் தமக்குக் கிடைத்த த4னத்தைத் தெருவிலே இறைத்து விட்டு உடையவர் மட2ம் சேருதல். இதுபற்றி எம்பெருமானருக்கும் ஆழ்வானுக்கும் ஸம்வாத3ம்.

62. திருவரங்கத்தமுதனர் "இராமாநுச நூற்றந்தாதி" அருளிச் செய்ததும், உடையவர் அதைத் தம் சிஷ்யர்களுக்கு நித்யா னுஸந்தே4யமாம்படி நியமித்தருளியதும்.

63. உடையவர் தரிசனத்தை நிலைநாட்ட தி3க்3விஜயம் எழுந்தருளுதல்.

64. உடையவர் திருமாலிருஞ்சோலை அழகரை மங்க3ளா ஶாஸனம் செய்தல். தென்மதுரையில் கூடலழகரையும், ஸ்ரீ வில்லி புத்தூரில் பெரியாழ்வாரையும், வடபெருங்கோயிலுடையானையும், ரங்கமன்னரையும் ஆண்டாளையும் மங்களாஶாஸனம் செய்தல்.

65. உடையவர் திருப்புளிங்குடி முதலான தி3வ்யதே3ஶங்களை மங்க3ளாஶாஸனம் செய்தல். திருக்குருகூரில் நம்மாழ்வாரையும், பொலிந்து நின்ற பிரானையும் மங்க3ளாஶாஸனம் செய்தருளியது. "மது4ரகவிகள்" என்று திருநாமமாயிருந்த ஆழ்வார் திருவடி நிலைகளுக்கு "ராமாநுசன்" என்று திருநாமம் ஆகவேணும் என்று உடையவர் பிரார்த்தித்ததை ஆழ்வார் அங்கீ3கரித்தது. பிள்ளா னுக்குத் "திருக்குருகைப்பிரான் பிள்ளான்" என்று திருநாமம் சாத்தி, ஆழ்வார் விஷயத்தில் நன்றியை வெளிப்படுத்தல்.

66. உடையவர் திருக்கோளூரில் வைத்தமாநிதி4யையும் மது4ரகவியாழ்வாரையும் மங்க3ளாஶாஸனம் செய்தல். திருக் கோளூர்ப் பெண்பிள்ளையோடு ஸம்வாத3ம்.

67. உடையவர் திருத்தொலைவில்லிமங்கலம் முதலான திருப்பதிகளையும், வானமாமலை திருக்குறுங்குடி எம்பெருமான் களையும் மங்க3ளாஶாஸனம் செய்தல்.

68. உடையவர் திருக்குறுங்குடி நின்ற நம்பிக்கு த்3வயத்தை உபதே3ஶித்து "வைஷ்ணவ நம்பி" என்று திருநாமம் சாத்தி யருளியது.

69. உடையவர் திருவண்பரிசாரத்தில் திருவாழ்மார்பனையும் திருவாட்டாற்றில் திகழ்கின்ற திருமாலான கேசவனெம்பெருமா னையும் மங்க3ளாஶாஸனம் செய்தருளியது.

70. திருவனந்தபுரத்தில் பத்3மநாப4னையும், குட்டநாட்டுத் திருப்புலியூர் திருமூழிக்களம் திருநாவாய் முதலான மலைநாட்டுத் திருப்பதிகளையும் மங்களாஶாஸனம் செய்தருளியது.

71. த3க்ஷிணாமூர்த்தி என்னும் மலைநாட்டிலிருந்த வித்3வான் உடையவரின் க்3ரந்த2ங்களை ஸேவித்துக் கொண்டாடியது.

72. வடநாட்டில் ஸ்ரீமத்3 த்3வாரகை, வடமதுரை, திருவாய்ப்பாடி முதலான தி3வ்ய தே3ஶங்களை மங்க3ளாஶாஸனம் செய்து ஆங்காங்குள்ள புறச்சமயிகளை வெற்றி கொள்ளல்.

73. உடையவர் காஷ்மீர தே3ஶத்து ராஜாவை மத்4யஸ்த2னாக வைத்து அங்குள்ள அத்3வைதிகளை வென்று விஶிஷ்டாத்3வைதத்தை ஸ்த2ாபித்தல். அரசன் அவரைக் கொண்டாடியது.

74. உடையவர் ஒரே ராத்ரியில் வேதா3ந்த ஸாரம் என்னும் க்3ரந்த2த்தை எழுதி அரசனிடம் கொடுக்க, அவனும் அங்குள்ள ஆலயத்தில் "ஶாரதா3தே3வி" என்னும் ஸரஸ்வதியின் கையில் அதை வைத்துக் கதவை மூடித் திறந்து பார்க்க, அந்த க்3ரந்த2ம் அவளுடைய தலையிலேயிருக்க, ஶாரதா3தே3வியும் அஶரீரி வாக்காலே உடையவரைக் கொண்டாடுதல்; காஷ்மீர அரசனும் எம்பெருமானார் திருவடிகளில் ஆஶ்ரயித்து, போ3தா4யன வ்ருத்தியின் ஸங்க்3ரஹமான ஸ்ரீ கோஶத்தை உடையவர் கையில் கொடுத்தல். அந்த வ்ருத்தி ஸங்க்3ரஹத்தைப் பொறாமைகொண்ட அத்3வைதிகள் பறித்துக்கொள்ளல். அதன் அர்த்த2ங்களைத் தேக்கிக்கொண்டிருந்த கூரத்தாழ்வானைக் கொண்டாடுதல்.

75. உடையவர் ப3த3ரிகாஶ்ரமத்தில் நரநாராயணனையும் ஸாளக்3ராமத்தில் மலையையும் ஸேவித்தருளியது. திருவயோத்4யையையும் மிதிலையையும் ஸேவித்தருளியது.

76. கோயிலிலே முதலியாண்டான் முதலிய சிஷ்யர்கள் உடையவர் வரவை எதிர்பார்த்திருந்தது.

77. உடையவர் காசியிலே மாதவனை ஸேவித்து, புருஷோத்தமம் என்னும் (புரீ) ஜகந்நாதத்திற்குச் செல்ல, அந்த தே3ஶத்து அரசனாலே கௌரவிக்கப்பட்டார் என்பது. அங்கு கண்ணன், ப3லராமன், சுபத்ரை ஆகியவர்களை மங்களாஶாஸனம் செய்தருளியது. புருஷோத்தமத்தில் கோவில் ஆசாரங்களைச் சீர்திருத்த நினைத்த

உடையவர் தூங்கும்போது எம்பெருமான் கருடனைக் கொண்டு அவரை ஸ்ரீகூர்மத்தில் கொண்டுபோய் வைக்கச் செய்தல்.

78. உடையவர் ஸ்ரீகூர்மத்தில் எம்பெருமானை மங்களாசாஸனம் செய்தருளியது.

79. ஜகந்நாதத்தில் உடையவரைக் காணாமல் கலங்கின சிஷ்யர்களுக்கு, ஓர் அந்தண உருவில் வந்த புருஷோத்தமன் ஸ்ரீகூர்மத்தில் உடையவர் இருக்கும் விஷயம் சொல்ல, அவர்களும் ஸ்ரீகூர்மம் வந்து உடையவரைக் கண்டு களித்தல்.

80 உடையவர் ஸிம்ஹாசலத்தில் ஸ்ரீவராஹ நரஸிம்ஹனை மங்களாசாஸனம் செய்தருளியது.

81. வாரங்கல் என்ற பட்டிணத்தில் "பாஞ்சால ராயன்" என்கிற எம்பெருமானை உடையவர் ப்ரதிஷ்டை செய்தல்.

82. ஸ்ரீகாகுளத்தில் "ஸ்ரீவல்லபன்" என்னும் எம்பெருமானுக்கு உடையவர் "தெலுங்கு ராயன்" என்று திருநாமம் சாத்தியது.

83. ஸ்ரீ அஹோபிலம் என்று ப்ரஸித்தமான சிங்கவேள் குன்றத்தில் உடையவர் அழகிய சிங்கரை மங்களாசாஸனம் செய்தருளியது.

84. பெரிய திருமலையிலே திருவேங்கடமுடையானை மங்களாசாஸனம் செய்தருளியது. இவன் சிவனே என்று வாதம் செய்த சைவரை வென்று அவன் திருமாலே என்று நிர்த்தாரணம் செய்தது.

85 திருவல்லிக்கேணியில் பார்த்தஸாரதியையும் மயிலையில் பேயாழ்வார் அவதார ஸ்தலத்தையும், திருநின்றவூர், திருவெவ்வுளூர், திருநீர்மலை முதலான திவ்யதேசங்களையும் மங்களாசாஸனம் செய்தருளியது.

86. கச்சி நகரில் அத்திகிரி அடியில் அழகிய சிங்கரையும், அதன் உச்சியில் பேரருளாளனையும், திருவெஃகா முதலான மற்ற திவ்ய தேசங்களையும் மங்களாசாஸனம் செய்து, ஸ்ரீபெரும்பூதூர் எழுந்தருளி கேசவனெம்பெருமானைத் திருவடி தொழுதது.

87. உடையவர் திருக்கடல்மல்லையில் தலசயனத்துறைவாரையும், திருவிடவெந்தையில் வராஹப்பெருமாளையும் மங்களாசாஸனம் செய்தருளியது.

88. ஸ்ரீமதுராந்தகத்தில் ஏரிகாத்த ராமனையும், திருவயிந்திரபுரத்தில் தெய்வநாயகனையும், திருச்சித்ரகூடத்தில் கோவிந்தராஜனையும், காழிச்சீராம விண்ணகரம் முதலான திவ்ய தேசத்து எம்பெருமான்களையும், திருவாலி திருநகரி வயலாளி மணவாளனையும், திருநாங்கூர் எம்பெருமான்களையும், தலைச்சங்க நாண்மதியத் தெம்பெருமானையும், சிறுபுலியூர் அருமாகடலமுதையும், திருக்கண்ணபுரம், திருநறையூர், திருச்சேறை, திருக்கண்ணங்குடி, திருநாகை முதலான சோழநாட்டு திவ்யதேசத்து எம்பெருமான்களையும் மங்களாசாஸனம் செய்து ஆங்காங்குள்ள புறச்சமயிகளை வெற்றிகொள்ளல்.

89. திருமெய்யம், திருக்கோஷ்டியூர், திருப்புல்லாணி முதலான திவ்யதேசங்களையும் மங்களாசாஸனம் செய்துகொண்டு கோயிலை நோக்கிப் புறப்படுதல்.

90. உடையவர் தென்திருக்காவேரிக் கரையிலே எழுந்தருளியதைக் கண்டு, "எதிராசர் வந்தார்; எதிரானும் இல்லாதவர் வந்தார்; மதிராசி ராமாநுசர் வந்தார். ஆமாறறியும் பிரான் வந்தார். சீமான் சரணுகதி தந்த பிரான் வந்தார். அரணுகும் கழலோன் வந்தார். முரணுகும் வாதியரை வெல்லுமவர் வந்தார். மாநிலத்தில் வேதியரின் மிக்கமகன் வந்தார்" என்று சீடர்கள் விருதும் திருச்சின்னமும் ஊதி வருவதையும் கண்டு முதலியாண்டான் முதலிய சிஷ்யர்கள் எதிர்கொண்டழைத்து, திருவடிகளிலே வணங்கிக் கொண்டாடியது.

91. உடையவர் திருக்காவேரியிலே நீராடி, திருமண்காப்பு சாத்தியருளி, பெரிய பிராட்டியார் தொடக்கமாக நம்பெருமாளளவும் மங்களாசாஸனம் செய்தருளியது. அழகிய மணவாளன் உடையவரைக் கொண்டாடி மடமே போகவிட்டார் என்பது.

92. உடையவர் ஸ்ரீரங்கநாதனுக்குத் திருப்பாவைச் சிறப்பு முதலான உத்ஸவங்களை ஸங்கல்பித்தருளினர் என்பது.

93. பெருமாள் ஆயிரக்கால் மண்டபத்திலே எழுந்தருளியிருக்கும்போது முதலியாண்டான் ஆழ்வானுக்கு, "பொருந்தவிட்ட திருவடிமலர்கள் உபாயம்; திருமேனி உபேயம்" முதலான அர்த்த₂ங்களை அருளிச்செய்தல்.

94. உடையவர் முதலியாண்டானுக்கு "முமுக்ஷுவாய் ப்ரபந்நனை அதி₄காரிக்கு த்₃வய ஶரீரமே ப்ராப்யம்" என்று தொடங்கி "த்₃வய வைப₄வத்தை" அருளிச்செய்தது.

95. உடையவர் வடுகநம்பியைத் திருவீதியில் எழுந்தருளுகிற நம்பெருமாளை ஸேவிக்க அழைக்க "உம்முடைய பெருமாளை ஸேவிக்க வந்தால் என்னுடைய பெருமாளுக்குப் பாலமுது தீய்ந்து போகும்" என்று கூறி நம்பெருமாளை ஸேவிக்க மறுத்தல். வடுகநம்பி நிஷ்டை.

96. எம்பெருமானாருக்கு ஆழ்வான் தாளிணைகள், ஆண்டான் பாதுகைகள், எம்பார் பாத₃ச்ச₂ாயை (திருவடி நிழல்), அருளாளப் பெருமாள் எம்பெருமானார் ஆத்மஸமர். பிள்ளை உறங்காவில்லி தா₃ஸர் ப₃ாஹுஸமம். பெரியநம்பி தொடக்கமான ஐந்து ஆசார்யர்கள் ஐந்து தலைகள். திருக்குருகைப் பிரான் பிள்ளான் புத்ர ஸமர்.

97. ஆளவந்தார் நியமனப்படி ஸ்ரீப₄ாஷ்யம் இயற்றும்போது கூரத்தாழ்வானை எழுதுபவராக நியமித்தல். ஓரிடத்தில் எம்பெருமானார் சீறியதும், ஆழ்வானுடைய பாரதந்த்ர்ய நிஷ்டையும், எம்பெருமானார் ஆழ்வான் கருத்தறிதலும்.

98. "ஆத்மாவுக்கு ப்ரத₄ான நிரூபகம் யாது" என்பதைத் திருக்கோஷ்டியூர் நம்பியிடம் கேட்டுவரும்படி ஆழ்வானை அனுப்புதல். நம்பி "அடியேன் உள்ளான்" என்னும் பாசுரத்தின்மூலம் ஶேஷத்வமே ப்ரத₄ானம் என்று காட்டியருள, அதை எம்பெருமானாரிடம் விண்ணப்பித்தல். இதுபோன்று ஆழ்வார்களுடைய ஸ்ரீஸூக்திகளைக்கொண்டு ஸூத்ர வாக்யங்களை ஒருங்கவிட்டு ப₄ாஷ்யகாரர் ஸூத்ர ப₄ாஷ்யத்தை அருளிச்செய்து அதைக் கிடாம்பி ஆச்சான், கிடாம்பிப் பெருமாள் முதலானார் மூலமாக ஶாரத₃ா பீட₂ ஸரஸ்வதிக்கு அனுப்பியது. ஸரஸ்வதி அதைத் தலையால் த₄ரித்து "ஸ்ரீ ப₄ாஷ்யகாரர்" என்று எம்பெருமானாருக்குத் திருநாமம் சாத்துதல்.

99. ஶாரத$_3$ா பீட$_2$த்திலிருந்து திரும்பிவரும்போது கிடாம்பி ஆச்சான் "துர்பையூர்க் கொண்டி" என்னும் இடைச்சி கொடுத்த தயிருக்கு விலையாக அவளுக்குப் பரமபதம் அளிக்கும்படி திருவேங்கடமுடையானுக்கு ஓலை எழுதிக்கொடுக்க, அதன்படி அவள் பரமபத$_3$மடைதல்.

100. திருக்குருகைப்பிரான் பிள்ளான் எம்பெருமானாரின் அனுமதியுடன் திருவாய்மொழிக்கு ஆறாயிரப்படி வ்யாக்$_2$யானம் அருளிச்செய்தல்.

101. உடையவர் எழுபத்துநாலு ஸிம்ஹாஸநாதிபதிகளும் 700 யதிகளும், ஒன்பதினாயிரம் (பூணூல் சாத்திய) ஸ்ரீ வைஷ்ணவர்களும், பன்னீராயிரம் சாத்தாத ஸ்ரீவைஷ்ணவர்களும் புடைசூழ ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருத்தல். மற்ற திருப்பதிகளில் எண்ணிறந்த ஸ்ரீவைஷ்ணவர்களைத் திருத்துதல். ஓர் பங்குனி உத்தரத் திருநாளிலே ச$_3$த்$_3$யத்ரயத்தை விண்ணப்பித்து, தமக்கும் தம்மோடு நேரேயும், பரம்பரையாகவும் ஸம்ப$_3$ந்த$_4$ம் பெற்றவர்களுக்கும் மேல்வீடு உண்டு என்று ஸ்ரீரங்க$_3$ தி$_3$வ்ய த$_3$ம்பதிகளிடம் வரம் பெறுதல்.

102. பெரிய பெருமாளுடைய அக்காரவடிசில் பிரஸாத வைப$_4$வத்தாலே ஆழ்வானுக்கும் ஆண்டாளுக்கும் ப$_4$ட்டரும் ஸ்ரீராமப்பிள்ளையும் அவதரித்தல். ஆழ்வான் குமாரரை எழுந்தருளப்பண்ணிவரும்போது எம்பார் த்$_3$வயாநுஸந்த$_4$ானத்துடன் வர, எம்பெருமானார் அவரையே அக்குழந்தைக்கு ஆசார்யனாக நியமித்து அக்குழந்தைக்கு 'பராசரபட்டர்' என்று திருநாமம் சாத்துதல்.

.103 எம்பாருடைய தம்பி சிறிய கோவிந்தப் பெருமாளுடைய குமாரருக்கு 'பராங்குஶன்' என்று நம்மாழ்வாருடைய திருநாமம் சாத்தும்படி எம்பெருமானார் நியமித்து, ஆளவந்தாருடைய மூன்றாவது குறையைத் தீர்த்தல்.

104. பட்டர்—திருமணத்தூண் அருகே தொட்டிலிட்டு நாச்சிமார் சீராட்டி வளர்க்க, பெருமாள் அமுது செய்வதற்கு முன்னே, படைத்த தளிகையிலே அமுதுசெய்து வளருதல். ஐந்து வயஸ்ஸிலே ஆழ்வானிடம் "சிறுமாமனிசர்" என்னும் திருவாய்மொழிப் பாசுரத்திற்குப் பொருள்கேட்டு உணருதல். ஐந்து வயஸ்ஸிலே ஸர்வஜ்ஞபட்டனின் கர்வத்தையடக்குதல்.

105. ப$_4$ட்டர் உபநயனமானவுடன் ஒரேசந்தையில் நான்கு வேத$_3$ங்களையும் அப்$_4$யஸித்தல்.

106. ப$_4$ட்டருக்கும் ஸ்ரீராமப்பிள்ளைக்கும் பெரியநம்பி வம்சத்திலே பெண் எடுத்துத் திருக்கல்யாணம் செய்தல்.

107. ப$_4$ட்டர் பெருமாளையும் நாச்சிமாரையும் ஆழ்வானும் ஆண்டாளுமாக நினைத்துப் போந்தது.

108. உடையவர் முதலியாண்டானை த்ரித$_3$ண்ட$_3$ஸ்த$_2$ானமாக அபி$_4$மானித்தல்.

109. உடையவர் அருளிச்செயலில் ஒருபாட்டு அருளிச்செய்யக் கேட்டு முதலியாண்டான் பரவஶரானது.

110. உடையவர் நம்பெருமாள் அவப்$_4$ருதத்தன்று முதலியாண்டான் திருக்கைத்தலத்தைப்பற்றி எழுந்தருளியிருந்து நீராடி, மீண்டெழுந்தருளும்போது பிள்ளையுறங்காவில்லித$_3$ாஸர் திருக்கையைப்பற்றி எழுந்தருளியது. எம்பெருமானர் திருவுள்ளம்.

111. பெரியநம்பி திருமகளார் அத்துழாய்க்கு முதலியாண்டானைச் சீதனவெள்ளாட்டியாக (பிறந்தகத்து வேலைக்காரியாக) அனுப்புதல். அத்துழாயின் புக்ககத்தார் பிரார்த்தனையின்படி மறுபடியும் அவரைத் திருப்பி அழைத்துக்கொள்ளுதல்.

112. மாறநேரி நம்பி தம் சரமதசையிலே வராஹசரமஶ்லோகம் இரண்டையும் அருளிச்செய்து த்$_3$வயநிஷ்ட$_2$ர்வைப$_4$வத்தைப் பெரியநம்பியைக்கொண்டு வெளியிட்டருளியது.

113. பெரியநம்பி தம் குமாரரான புண்ட$_3$ரீகரை உடையவர் திருவடிகளை ஆஶ்ரயிக்கும்படி செய்தது.

114. மாறநேரி நம்பி த்$_3$வயாநுஸந்த$_4$ானத்துடன் திருநாட்டுக்கெழுந்தருள, பெரியநம்பி அவரை ப்$_3$ரஹ்மமேத$_4$த்தாலே ஸம்ஸ்கரித்தார் என்பது. எம்பெருமானருடைய ஆக்ஷேபமும் பெரியநம்பியின் பதிலும். திருநாட்டுக்கெழுந்தருளும்போது மாறநேரி நம்பியின் அனுஸந்தானம் பற்றிப் பெரியநம்பிக்கு உடையவருக்கும் மற்ருரு விசாரம்.

115. உடையவர் ஓர் ஊமைக்குத் தம்முடைய திருமேனியை ரக்ஷகமாகக் காட்டியருள, அதைக் கண்ட கூரத்தாழ்வா

மூர்ச்சித்துத் தெளிந்து "ஒன்றும் அறியாத ஊமையாய்ப் பிறக்கப் பெற்றிலேனே" என்று தம்மை வெறுத்தல்.

116. பெரியநம்பி உடையவருக்கு "ஸதா₃சார்யனுடைய விக்₃ரஹமே எப்போதும் தியானிக்கத்தக்கது; அவருடைய நாமமே எப்போதும் ஜபிக்கத்தக்கது" என்று அருளிச்செய்தது. உடையவர் பட்டினிப் பெருமாளோடு ப₄க₃வத₃நுப₄வம் பண்ணிக் காலங் கழித்தல்.

117. முதலியாண்டான் குமாரருக்கு "இளையாழ்வாரான ராமாநுஜன்" என்று உடையவர் திருநாமம் சாத்துதல். கந்தாடையாண்டான் என்று பிரஸித்தி பெற்ற அவரை ஆட்கொண்ட வில்லி ஜீயரிடத்தில் ஆஶ்ரயிக்கும்படி செய்தல். உடையவருடைய மற்ற சிஷ்யர்களும் தம் குமாரர்களுக்கு உடையவருடைய திருநாமம் சாத்துதல், ஸ்ரீவைஷ்ணவ வண்ணாத்தானும் அப்படியே செய்ய உடையவர் அந்தப் பிள்ளைக்கு அருள்புரிதல்

118. ராமாநுஜருடைய வைப₄வத்தைப் பொறுக்காத அரசனுடைய உபத்₃ரவத்துக்குப் பரிஹாரமாகப் பெரியநம்பி மணலை மந்திரித்து ஸ்ரீரங்கம் கோவிலைச் சுற்றித் தெளித்து, கோவிலுக்கு ரக்ஷையிட்டருளியது.

119. உடையவர் வேதா₃ந்தார்த்த₂ங்களைத் தெளிவுபடுத்திக் கொண்டு கோயிலிலே அறுபது ஸம்வத்ஸரங்கள் எழுந்தருளியிருந்தார் என்பது.

120. (க்ரிமிகண்ட₂) சோழன் அவைஷ்ணவப் புலவர்களிடம் "சிவாத் பரதரம் நாஸ்தி" (சிவனைக்காட்டிலும் மேலானது இல்லை) என்று கையெழுத்து வாங்கி வந்தது. நாலூரானுடைய சொற்படி ராமானுஜரை அழைத்து வர வந்த ராஜதூதர்களோடு ராமானுஜர் எழுந்தருளத் திருவுள்ளம் பற்றியது. கூரத்தாழ்வான் பிரார்த்தித்து அதைத் தடுத்து. உடையவருடைய காஷாயத்தைத் தான் த₄ரித்து, பெரியநம்பியோடு கூடச் சோழராஜாவிடம் செல்லுதல். முதலியாண்டான் முதலான சிஷ்யர்களுடைய பிரார்த்தனையின் பேரில் உடையவர் வெள்ளை சாத்திக்கொண்டு மேற்கே திருநாராயணபுரத்தை நோக்கி எழுந்தருளல். "கொடுமை செய்யும் கூற்றமும்" என்னும் பாசுரத்தைச் சொல்லி, மணலாலே மந்திரித்துத் தெளித்து உடையவர் தம்மைப் பின் தொடர்ந்த ராஜ

மனுஷ்யர்களைத் தொடராமல் செய்தல். நல்லான் அடியாரான வேடமுதலிகளது இருப்பிடத்திற்கு உடையவர் எழுந்தருளல்.

121. த்ரித₃ண்ட₃ம் காஷாயம் த₄ரித்த கூரத்தாழ்வானும், பெரியநம்பியும் சோழனைக் கண்டது. "சிவாத் பரதரம் நாஸ்தி" என்று எழுதச் சொன்ன (க்ரிமி கண்ட) சோழன் முன்னே "த்₃ரோணமஸ்தி தத: பரம்" [சிவம் என்னும் குறுணிக்கு மேல் த்₃ரோணம் என்னும் பதக்கு உண்டு] என்று எழுதிய கூரத்தாழ்வானையும் பெரியநம்பியையும், கண்ணைப் பிடுங்கும்படி தன் சேவகர்களுக்குச் சோழன் உத்தரவிடல். ஆழ்வான் "உன்னைக் கண்ட கண்ணுக்கு நீ சொன்ன தண்டனையை நானே விருப்பத்துடன் நிறைவேற்றுகிறேன்" என்று கூறி, தம் கண்ணைத் தா கையாலே பிடுங்கிவிடல். அவ்வரசனுக்கு உடைவாளெடுக்கும் ஒரு பெண்பிள்ளை கூரத்தாழ்வானை ஊருக்கு வெளியில் அழைத்துச்சென்று உபசரித்தல். சோழன் பெரியநம்பியையும் அப்படி எழுத்திடச் சொல்ல, அவர் "ஸ்ரீமந்நாராயணனே பரதத்வம்" என்று பல வசனங்களைச் சொல்லி நிலைநாட்ட, அரசன் அவர் கண்ணையும் பிடுங்கச்செய்தல். பெரியநம்பி திருக்குமாரத்தி அத்துழாய் பெரியநம்பியையும் ஆழ்வானையும் அழைத்துச் செல்லல். நாதமுனிகளும் குருகைக்காவலப்பனும் பரமபத₃மடைந்த முக்திபூ₄மியிலே கூரத்தாழ்வான் மடியில் திருமுடியும், அத்துழாய் மடியில் திருவடியும் வைத்துப் பெரிய நம்பி திருநாட்டுக்கெழுந்தருளல். அநாத₂ ப்ரேத ஸம்ஸ்காரம் பண்ண வந்தவர்களுக்கு ஆழ்வானின் பதில்.

122. ஸ்ரீபராந்தகனில் ஸ்ரீவைஷ்ணவர்கள் பெரியநம்பிக்கு ப்₃ரஹ்மமேத₄ ஸம்ஸ்காரம் செய்தல். பெரியநம்பிக்கும், கூரத்தாழ்வானுக்கும் உதவிய 'நாவல்கொடி அம்மாள்' திறத்தில் நம்பெருமாளுடைய அருள்.

123 உடையவர் ஏழுநாள் உபவாஸத்துடன் நடந்து திருமலை நல்லான் சிஷ்யர்களான வேடமுதலிகள் வாழும் மலையருகே செல்லல். எம்பெருமானுர் பட்ட வருத்தத்தை ஒரு ஸ்ரீவைஷ்ணவர் மூலம் அறிந்து வேடமுதலிகளும் பட்டினி கிடத்தல். எம்பெருமானுர் அந்த வேடமுதலிகளைக் கடாக்ஷித்து, அவர்கள் அன்புடன் அளித்த தினைக்கதிரையும், தேனையும் அமுதுசெய்தருளி அங்கு தங்குதல். மறுநாள் வேட முதலிகளில் ஒருவரையும் தம் சிஷ்யர்களில் ஒருவரையும் கோயிலுக்கு அனுப்பி அங்கிருந்து நானூற்றுநாற்பத்தைந்து சிஷ்யர்களை அழைத்து வருதல்.

124. சிஷ்யர்களோடு கூடிய எம்பெருமானார் கொங்கில் பிராட்டியைச் சந்தித்து அவளுடைய ஆசார்ய நிஷ்டையைச் சோதித்தறிந்து, அவளுடைய ப$_4$ர்த்தாவையும் தம் திருவடிகளுக்கு ஆளாக்கிக் கொண்டு த்ரித$_3$ண்ட$_3$ காஷாயாதி$_3$களை ஸம்பாதித்து த$_4$ரித்தருளுதல். ஆழ்வான் நிலையறிய, மாருதியாண்டானையும் அம்மங்கியம்மாளையும் கோயிலுக்கனுப்புதல்.

125. உடையவர் ப$_4$க$_3$வத்$_3$ப$_4$ாக$_3$வத விரோதி$_4$யான க்ரிமி கண்ட$_2$னையழிக்கத் திருவேங்கடமுடையானைக்குறித்து அர்க்$_4$யப்ரதா$_3$னம் செய்தருளியது. திருவேங்கடமுடையான் திருக்குற்றுடைவாளாலே சோழன் கழுத்தைக் குத்த, அவன் க்ரிமி கண்ட$_2$ன் ஆனான் என்பது.

126. உடையவர் மேல் நாட்டிலே சைவர் மிகுந்திருந்த [illegible]வயலூரிலே ஒரு புஷ்கரிணியிலே நீரெடுக்கும் துறையிலே முதலியாண்டானைத் திருவடி விளக்கி வரச் செய்தல். அந்த ஸ்ரீபாததீர்த்த$_2$ ப்ரப$_4$ாவத்தாலே அவ்வூராரனைவரும் எம்பெருமானாரை ஆஸ்ரயித்தல். அவ்வூருக்கு "ஸ்ரீஸாலக்$_3$ராமம்" என்ற திருநாமம் ஏற்படுதல். அங்கிருந்த வடுகநம்பிக்கு த$_3$ர்சநார்த்த$_2$ங்களை அருளிச்செய்தல். தொண்டனூருக்கு எழுந்தருளி, தொண்டனூர் நம்பிக்கு அருள்புரிதல்.

127. மேல் நாட்டில் விட்டல தே$_3$வராயன் மகளுக்குப் பிசாசு பிடித்திருக்க, தொண்டனூர் நம்பியின் புருஷகாரத்தாலே விட்டல தேவராயன் மகளுக்குப் பிடித்திருந்த பிசாசம் உடையவர் ஸ்ரீபாத$_3$ தீர்த்த$_2$த்தாலே நீங்கியதும், அவன் உடையவர் திருவடிகளிலே ஆஸ்ரயித்ததும், அவனுக்கு 'விஷ்ணுவர்த்த$_4$னராயன்' என்னும் திருநாமமிட்டதும்.

128. இதைக் கண்டு கோபங்கொண்ட அவ்வரசனுடைய கு$_3$ருக்கள் பன்னீராயிரம் சமணர்கள் உடையவரோடு வாத$_3$ம் செய்ய, உடையவர் திரைக்கு உள்ளே ஆயிரம் நாவு கொண்ட ஆதிசேஷனாயிருந்து அவர்களுக்கு பதில் சொல்லி, அவர்களை வெற்றி கொள்ளல். அரசன் அவர்களுக்கு மரணத$_3$ண்ட$_3$னை விதி$_4$த்தல்.

129. எம்பெருமானார் திருமண் கிடைக்காமல் மூன்று நாள் உபவாஸமிருத்தல். திருநாராயணப்பெருமாள் ஸாதித்த ஸ்வப்னத்தின்படி உடையவர் காடுகளை வெட்டி, யது$_3$கி$_3$ரியேறி, திருநாராய

ணப்பெருமாள் இருக்குமிடம் காணுமல் கவலையுற்றிருக்க, மறுபடி சாதித்த ஸ்வப்னத்தின்படி திருத்துழாய்க்கொழுந்து அடையாள மாகக் கல்யாணிக் குளக்கரையிலே திருநாராயணன் எழுந்தருளி யிருக்கும் புற்றைக் கண்டு களித்தல். திருப்புற்றடியிலே ஸேவை ஸாதித்த திருநாராயணனுக்குத் திருப்ரதிஷ்டை₂ செய்வித்து, "ஒருநாயகம்" என்ற திருவாய்மொழியை அவருக்கு ஸமர்ப்பித்தல். த்ரித₃ண்ட₃த்தாலே கீற, திருமண் கண்டு களித்தது. திருநாரா யணப்பெருமாளின் ஸ்வப்னத்தின்படி உத்ஸவ மூர்த்தியான ராமப்ரியரை எழுந்தருளப் பண்ணிக் கொண்டுவர டில்லிக்குச் சென்றது.

130 'ஸம்பத் குமாரன்' [செல்வப்பிள்ளை] என்னும் திரு நாமம் பெற்ற ராமப்ரியர் வைப₄வம். ராமப்ரியர் குசனுலே தனது மகளுக்கு ஸ்த்ரீத₄னமாகக் கொடுக்கப்பட்டார் என்பது. சக்ரவர்த்தித்திருமகன், குசன் இவர்களாலே ஆராதி₄க்கப்பட்ட வராய், யது₃வம்சத்திற்கு ஸ்த்ரீத₄னமாகக் கிடைத்தவராய், ப₃ல ராமன், கிருஷ்ணன் முதலியவர்களால் ஆராதி₄க்கப்பட்டவரான ராமப்ரியர் திருநாராயணனுக்கு உத்ஸவராய் எழுந்தருளினு ரென்பது.

131. டில்லியில் 'எம்மாடுராயன்' என்கிற துருஷ்கன் மகளது அந்தப்புரத்திலேயிருந்த ராமப்ரியர் தம்மை எழுந்தருளப்பண்ணிக் கொண்டு போகும்படி உடையவருக்கு ஸ்வப்னம் ஸாதித்தது. ராம ப்ரியர் உடையவராலே 'செல்வப்பிள்ளை' என்று திருநாமம் பெற்றது. செல்வப்பிள்ளை தமமைப் பிரியில் த₄ரியாத எம்மாடுராயனின் பெண்ணுன துலுக்கநாச்சியாரைத் தம்மோடு சேர்த்துக்கொண்டது.

132. உடையவர் திருநாராயணபுரத்தில் செல்வப்பிள்ளையைத் திருநாராயணனுடனே எழுந்தருளப்பண்ணி எல்லா உத்ஸவங் களையும் நடத்திக் கொண்டு பன்னிரண்டு வருஷங்கள் எழுந்தரு ளியிருந்தார் என்பது.

133 தொண்டனூர் நம்பியின் பெருமாளான 'புண்ட₃ரிகைக் கேள்வன்' தொண்டனூர் நம்பிக்கு ஸ்வப்னம் ஸாதிக்க, அக்கன வின்படி திருநாராயணபுரத்திலே செல்வப்பிள்ளையுடன் அப்பெரு மாள் பாடிவேட்டை கண்டருளி, எம்பெருமானுராலே 'நம்பி தம்பிரான்' என்று திருநாமம் சாத்தப்பெறுதல்.

134. உடையவர் அங்குள்ளார் அனைவருக்கும் திருமண் வைப$_4$வத்தையும், பெரிய திருமந்திரத்தின் வைப$_4$வத்தையும் வெளிப்படுத்தி, அனைவரையும் ஸ்ரீவைஷ்ணவர்களாக்குதல்.

135. கூரத்தாழ்வான் மாறனேரிநம்பி, மாருதிச்சிறியாண்டான், அம்மங்கியம்மாள் ஆகியவர்களிடமிருந்து உடையவர் வரலாற்றையும், சோழன் க்ரிமிகண்ட$_2$னுடைய மறைவையும் கேட்டுக்களித்தல்.

136. 'சோழன் க்ரிமிகண்ட$_2$னுடைய புழுத்துப் புரண்டான்' என்ற செய்தி சொன்ன ஸ்ரீவைஷ்ணவர்களுக்குக் கைம்மாறாக உடையவர் த்$_3$வயத்தை மறுபடியும் உபதேசித்தருளியது. பெரிய நம்பி திருநாடலங்கரித்ததைக்கேட்டு உடையவர் ஸ்ரீசூர்ணபரிபாலனமும் திருவத்$_4$யயனமும் நடத்துவித்தது. "கமலாபதி கல்யாண" என்னும் ச்லோகத்தை அவர் விஷயமாக அருளிச்செய்தது.

137 திருக்கல்யாணிக் குளத்தின் கீழ்க்கரையில் உள்ள திருமாலையில் எழுந்தருளியிருக்கும் அழகியசிங்கரை மங்க$_3$ளாசாஸநம் செய்தருளியது. 'செங்காமி' என்னுமிடத்தில் உள்ள மாயாவாதிகளை ஜயித்து அங்கே ராமானுஜ மடமும் கட்டுவித்து, அப்பால்சென்று மற்ற புறமதத்தவர்களைத் திருத்தும்படி முதலியாண்டானை அனுப்பியது.

138. உடையவர் விஷ்ணுவர்த்த$_1$நராயனைக்கொண்டு பஞ்ச நாராயண ப்ரதிஷ்டை$_2$ செய்வித்தது. க்ரிமிகண்ட$_2$ன் மாண்டது.

139. திருநாராயணபுரத்தில் ப்ரஹ்லாத$_3$வரத$_3$னை அழகிய சிங்கரை மங்க$_3$ளாசாஸநம் செய்து, அங்கு உள்ளவர்களுக்கு, தனக்குப் பிரதிநிதி$_4$யாக ஒரு உடையவர் விக்$_3$ரஹம் ஏறியருளப் பண்ணிக்கொடுத்து, திருநாராயணபுரம் செல்வப்பிள்ளை கைங்கர்யங்களைச் செய்துபோரும்படி கட்டளையிட்டது.

140. உடையவர் திருநாராயணன் நியமநம்பெற்றுக் கோயிலுக்கெழுந்தருளியது. உடையவர் திருநாராயணனுக்கு ஸமர்ப்பித்த "ஒருநாயக"த்தை அநுஸந்தி$_4$த்துக்கொண்டு அங்கு உள்ளார் வாழ்ந்துபோனார்களென்பது.

141 ஸ்ரீரங்க$_3$த்திலுள்ளவர்கள் உடையவர் மேல்நாட்டிலிருந்து ஸ்ரீரங்க$_3$ம் வந்து திருக்காவேரியிலே நீராடித் திருமண் காப்பு சாத்திக்கொண்டிருக்கிறார் என்று கேள்விப்பட்டு ஆனந்தக் கடலில் மூழ்கி அவரிடம் சென்று அரங்கன் திருச்செல்வம் குறைவற நடந்துவருகிறது என்று விண்ணப்பித்தது.

**142.** உடையவர் திருவரங்கச் சோலைவளங்களை அனுப4வித்தருளியது. ஸ்ரீரங்க3நாயகியாரை மங்க3ளாஶாஸனம் செய்து அழகிய மணவாளனை மங்க3ளாஶாஸனம் செய்தருள, அவர் தீர்த்த2ம் திருமாலை முதலான வரிசைகள் ப்ரஸாதி3த்தருளி ஆறுதல் மொழிகள் அருளியது.

**143.** உடையவர் — திருவடிகளில் ஸேவித்து நிற்கிற சோழ நாடு முதலியவற்றிலுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களைக் குஶல ப்ரஶ்நம் செய்தருளியது.

**144.** இனி கூரத்தாழ்வான் விருத்தாந்தம், ஸ்ரீபராந்தகனில் ஒருவருடம் தங்கியிருந்து அங்குள்ள ஸ்ரீவைஷ்ணவர்களாலே தமது திருக்கண்களுக்கு நேர்ந்த உபத்திரவத்தை ஆற்றிக்கொண்டு, அவர்களால் கோயிலிலே எழுந்தருளப்பண்ணிக்கொண்டு வந்து விடப்பெற்று ப3லிபீட2த்தினருகே தண்டன் சமர்ப்பித்து உள்ளேபுகுந்து எம்பெருமானை ஸேவிக்க ஆழ்வான் எழுந்தருள, "எம்பெருமானுர் ஸம்ப3ந்த4முடையார் ஒருவரும் புகுரலாகாது என்று ராஜாஜ்ஞை" என்று சிலர் தடுக்க, ஒருவர் "இவர் ஆத்ம கு3ணம் உள்ளவர்; உள்ளே புகுரவிடுங்கள்" என்ன, "ஆத்ம கு3ணம் ஆசாரிய ஸம்ப3ந்த4த்தை அறுத்துக்கொள்ளக் காரணமாகிவிடக் கூடாது" என்று திருவுள்ளம்பற்றி "என் பேற்றுக்கு எம்பெருமானுர் திருவடிகளில் ஸம்ப3ந்த4மே அமையும்; அதைவிட்டுப் பெருமாளை திருவடித்தொழவேண்டியதில்லை" என்று கோயிலிலிருந்து மீளுதல். அதற்குப்பின் கூரத்தாழ்வான் அழகர்கோயிலுக்கெழுந்தருளல்.

**145.** ஆழ்வான் பிரிவைப்பொறுக்காமல் உடையவர் அழகர் திருமலையிலிருந்து எழுந்தருளும்படி கூரத்தாழ்வானுக்கு ஸ்ரீமுகம் ஸாதித்தல்.

**146.** உடையவர் ஆழ்வான் வருமளவும் திருமாலிருஞ்சோலை வளப்பத்தையும் ஸுந்தரராஜன் வடிவழகையும் அநுஸந்தித்து அனுப4வித்துக்கொண்டிருத்தல்.

**147.** எம்பெருமானுருடைய திருமுகம் பெற்றவுடன் ஆழ்வான் அழகரிடம் விடைகொண்டு ஸ்ரீரங்க3ம் எழுந்தருளி எம்பெருமானுரை ஸேவித்தல்.

148. பேரானந்தமடைந்த உடையவர் ஆழ்வானைப் பெரிய பெருமாளிடம் அழைத்துச் செல்ல, பெரியபெருமாள் "தரிசனத் திற்காகத் தரிசனத்தை இழந்த உமக்கு நாம் கண் கொடுக்கி றோம்" என்றருளிச் செய்ய, ஆழ்வான் "கண்டகனைக்கண்ட கண்கள் எனக்கு வேண்டுவதில்லை; இராமாநுசன் தந்த ஞான மாகிற உட்கண் உண்டு; நாலூரானுக்கும் எதிராஜர்க்காக வீடு தந்தருளவேணும்" என்று விண்ணப்பிக்க, அவரும் "தந்தோம்" என்று கூறி, "உம்மோடு ஸம்பந்த₄ம் பெற்றவர்கள் அனைவருக் கும் வீடுதந்தோம்" என்றருளிச் செய்ய, இதைக்கேட்டுகந்த எம்பெருமானர், "ஆழ்வானோடு ஸம்ப₃ந்த₄முள்ள எனக்கும் மேல் வீடு உண்டு" என்று உகந்து கூத்தாடுதல். "அர்வாஞ்ச:" என் னும் கூரத்தாழ்வான் வைப₄வபரமான ஶ்லோகம்.

149. கூரத்தாழ்வான் உடையவர் நியமனப்படி வரத₃ ராஜஸ்தவம் செய்தருளி, நெஞ்சென்னும் உட்கண்ணால் பெரு மாளையும் உடையவரையும் காண்பதற்கும், தான் பெற்ற பேறு நாலூரான் பெறுவதற்கும் வரத₃ராஜனிடம் வரம்பெறுதல்.

150. உடையவர் ஸ்ரீரங்கே₃ஶ புரோஹித பதவியை அமுத னாரிடமிருந்து பெற்று, ஆழ்வானுக்கு அளித்தல். தினந்தோறும் பெருமாள் ஸந்நிதியிலே புராணம் வாசிக்கும்படியும் ஆழ்வானை நியமித்தல். (அமுதனார் ஸாதித்த) ராமாநுஜநூற்றந்தாதியோடு இயற்பாவை நம்பெருமாள் சேர்த்தியிலே விண்ணப்பம் செய்யும் படி அமுதனாரை நியமித்தல்.

151. குலோத்துங்கசோழன் திருச்சித்திரகூடத்தில் கோயிலைக் குலைத்தபோது, உடையவர் திருப்பதியில் கோயில் கட்டுவித்து அதில் தில்லைகோவிந்தராஜனைப் பிரதிஷ்டை செய்வித்தது.

152 உடையவர் எழுபத்து நாலு ஸிம்ஹாஸநாதி₄பதிகளுக்கும் அழகியசிங்கரைத் திருவாராதனமாக நியமித்தது.

153. வேங்கடாசல மாஹாத்மியம், உடையவர் திருமலை யாத்திரை செய்தது. திருவேங்கடமலைக்கோயிலையும் அதின் வாயில்களையும் வலர்வருகிறவர் — மலைகுனிய நின்றான், திருவாழி பரப்பினான், பங்கயச்செல்வி, திருமலைநம்பி, திருமழிசைப்பிரான், திருவேங்கடத்துநின்றான், வண்சடகோபன், இராமாநுசன் திரு

மாலிருஞ்சோலை, பேரருளாளன், அழகியமணவாளன், ஸ்ரீராமா நுசன், ஹரிஸரணாலயன், ஸ்ரீபுண்டரீகன், திருப்பேர்நகரான் முதலான அநேகம் திருநந்தவனங்களையும், திருப்பூமண்டபங்களையும் ஸேவித்து வியப்புற்று, ஞானப்பிரானை (வராஹப்பெருமானை) ஸேவித்து, திருக்கோனேரியில் தீர்த்தம் பருகி, கோயிலினுள் திருவேங்கடமுடையானை மங்களாஸாஸனம் செய்தது, திருமலையின் வளப்பம்.

154 திரும்பிவரும்போது காஞ்சீபுரத்திருப்பதிகளைத் திருக்கச்சிநம்பி புருஷகாரமாக ஸேவித்து, மற்றுமுண்டான திருப்பதிகளையும் ஸேவித்து, ஸ்ரீபெரும்பூதூர், திருக்கோவலூர் வழியாகத் திருவெள்ளறையடைந்து பங்கயச் செல்வியாரை முன்னிட்டுக் கொண்டு செந்தாமரைக் கண்ணனை ஸேவித்து, கரம்பனூர் உத்தமனை ஸேவித்து, திருவரங்கம் சேர்ந்து அழகியமணவாளனை மங்களாஸாஸனம் செய்தருளியது.

155. "இன்னவாறு திருப்பதிகள் எங்கும் வாழ்வித்து எதிராசன், தன்னதாக்கித் தரிசனமுந் தரணியெங்கும் விளங்குவித்து, முன்னமுரைத்த பாடியத்தின் முற்றமூன்றத் தொருகூறு, தன்னைச்சென்றுண்டாயிரத்தாங்கெழுபத்தேழில் சாத்தினான்" என்கிறபடியே உடையவர் ஸ்ரீபாஷ்யத்தில் எஞ்சியிருந்த ஒரு பகுதியை நிறைவுபடுத்தியருளல். "வேதார்த்தஸ்ய ச ஸங்க்ரஹம் ம்ருதுபதம் வேதாந்ததீபம் ததா, வேதாந்தஸ்ய ச ஸாரம் அர்த்தகஹநம் ஸ்ரீபாஷ்யமத்யத்புதம்। கீதாபாஷ்யமபி ப்ரபத்திவிஷயே கத்யத்ரயம் சாகரோத் நித்யம் லக்ஷ்மணலக்ஷணாய முநயே தஸ்மை நமஃகுர்மஹே ||" [(1) வேதார்த்த ஸங்க்ரஹம், (2) மென்மைமிக்க பதங்களையுடைய வேதாந்ததீபம், (3) வேதாந்த ஸாரம், (4) ஆழ்ந்த பொருளையுடையதாய், அத்யத்புதமான ஸ்ரீபாஷ்யம், (5) கீதாபாஷயம், (6, 7, 8) ப்ரபத்தியைப்பற்றிய மூன்று கத்யங்கள், (9) நித்யக்ரந்தம் ஆகிய ஒன்பது கிரந்தங்களை அருளிய ஸ்ரீராமாநுஜ முனிவர்க்கு வணக்கம்] என்னும் ஸ்லோகத்தின்படி ஒன்பது கிரந்தங்களை அருளல்.

156. பெரியபெருமாள் ஸ்ரீபாஷ்யத்தைத் திருச்செவி சாத்தி மிகவும் உகந்து உடையவர்க்கு ஸிஷ்யர்களைக்கொண்டு ஸதகலஸாபிஷேகம் பண்ணுவித்து, ப்ரஹ்மரதத்திலே திருவீதி வலம்வரும்படி செய்து, "உபயவிபூதிநாதர்" என்று பட்டா

பி$_4$ஷேகமும் செய்வித்து, பட்டருக்கு யுவராஜபட்டாபி$_4$ ஷேகமும் செய்வித்தது.

157. உடையவர் திருவடிகளிலே ஆஶ்ரயித்த முதலிகளின் திருமுடி அடைவு. கந்தாடை ஆண்டானும் நடாதூராழ்வானும் பட்டவர்க்கமும் கூரத்தாழ்வானும் ஸ்ரீபா$_4$ஷ்யத்திற்கு உசாத்துணை. அருளாளப் பெருமாள் எம்பெருமானார் அருளிய ஞானசாரப் பிரமேயசாரங்களை எம்பெருமானார் உகந்து, தம்முடைய பெருமாளுக்குத் திருவாராதனம் செய்து கொண்டிருக்கும்படி அவரை நியமித்தார். கிடாம்பி ஆச்சானும் கிடாம்பிப்பெருமாளும் திரு மடைப்பள்ளி கைங்கர்யம். வடுகநம்பி திருச்சுரபிக்கு (பசுவிற்கு) புல்லிடுவதும், எண்ணெய்க்காப்புசாத்துவதும் செய்வார், முதலியாண்டான் திருமண்காப்பிற்கும் திருவாராதனத்திற்கும் பரிசாரகமும், திருவடி நிலைகள் ஸமர்ப்பித்தலும் செய்வர். எம்பாருக்குக் கைங்கர்யம் — திருமேனி திருவடிகளைப் பிடித்தல், திருப்படுக்கை சோதித்தல், திருப்பரியட்டங்கள் திருத்தல், திருக்கை ஸமர்ப்பித்தல், திருமேனிக்காவல் முதலான கைங்கர்யங்கள். கோமடத்துச் சிறியாழ்வான் திருக்கைச்செப்பும் ஸ்ரீபாதரக்ஷையும் எடுப்பர், பிள்ளை உறங்காவில்லிதாஸர் கருவுகலம் நோக்குவர். அம்மங்கி பாலமுது காய்ச்சுவர். உக்கலாழ்வான் திருத்தளிகை மாற்றுவர், உக்கலம்மாள் திருவாலவட்டம் பரிமாறுவர். மாருதியாண்டான் திருமஞ்சனம் எடுப்பர். மாறொன்றில்லாச் சிறியாண்டான் மடத்துக்கு அமுதுபடி கறியமுது நடத்திப்போருவர். வண்டரும் சுண்டரும் ராஜசேவையால் கிடைத்த ஆயிரம் பொன்களை மடத்திற்கு ஸமர்ப்பிப்பர். ராமாநுஜ வேளைக்காரர் திருமேனிக்காவலாய்ப் போருவர்கள். அகளங்கநாட்டாழ்வான் பரபக்ஷநிரஸனம் பண்ணிப் போருவர். பிள்ளை திருவரங்கத்தமுதனார் தம் ஆசாரியனின் வைபவத்தை நூற்றந்தாதியிலே அருளிச்செய்து, பரம ஸாத்விகர்களுக்கு உபகரித்தருளினார். மற்றுமுள்ள எல்லா சிஷ்யர்களும் நியமித்த கைங்கர்யங்களைச் செய்து போருவர்.

158. வடுகநம்பி வைபவம்.

159. அனந்தாழ்வான் வைபவம்.

160. கூரத்தாழ்வான் வைபவம்.

161. ஆழ்வான் மேல்வீடு பெறுவதற்கு உடையவர் களிப்புற்றதும் பின்பு இருவரும் ஸம்பா$_4$ஷித்ததும்.

162. கூரத்தாழ்வான் தம் திருவடிகளிலே விழுந்து துன்புற்ற அமுதனார்க்கு "எம்பெருமானார் திருவடிகளே தஞ்சம் என்றிரும்" என்று அருளிச்செய்து விடைகொடுத்தருளியது.

163. ஆழ்வான் திருநாட்டுக்கெழுந்தருளின செய்தி.

164. உடையவர், கூரத்தாழ்வான் திருநாடலங்கரித்ததைப் பற்றித் துன்புற்றது. கூரத்தாழ்வானை ப்₃ரஹ்மமேத₄ ஸம்ஸ்காரத்தாலே ஸம்ஸ்கரித்து, திருவத்₄யயனமும் பெருக்க நடத்தியருளியது.

165. அழகிய மணவாளன் ப₄ட்டரையும் ஸ்ரீராமப்பிள்ளையையும் உடையவர் திருக்கையிலே காட்டிக்கொடுத்தது.

166. ப₄ட்டர் உபந்யாஸத்தைக் கேட்டு முதலிகள் கொண்டாடியது.

167. உடையவர் பெருமாளுடைய ஸ்ரீகார்யம் ஆராய்ந்து கொண்டு ஸ்ரீப₄ாஷ்யத்தையும் திருவாய்மொழியையும் அஹோராத்ரம் நடத்திக்கொண்டு வந்தார். பகலில் ஸ்ரீப₄ாஷ்ய காலக்ஷேபம் செய்து ராத்ரி குடிநீர் பாலமுது செய்து திருப்பள்ளியேறியருளினால் பாலோடமுதன்ன ஆயிரமான திருவாய்மொழி அநுப₄வத்திலே பரவசராயிருந்து கண்வளர்ந்தருளுவர். இரவில் உறங்காவில்லிதாஸர் முதலான ராமாநுஜ வேளைக்காரர், ஸ்ரீ குமததாஸர், ஹனுமத்₃த₃ாஸர் முதலானார் அவரை நோக்கிக்கொண்டு போருவர்.

168. உடையவரைத் திருப்பள்ளி உணர்த்துகைக்காக முதலிகள் அருளிச்செய்த ஸுப்ரப₄ாதம்.

169. உடையவர் திருப்பள்ளி உணர்ந்து ஸ்வாசார்யன் தொடங்கி எம்பெருமான் வரையில் அநுஸந்தி₄த்து நீராட்டத்திற்குப் புறப்படுதல். நீராட்டம் செய்தருளின பின்பு ப்ராதரநுஷ்ட₂ானம் செய்தருளல்.

170. திருவீதியிலுள்ள ஆசார்ய புருஷர்கள் ஸத்கரிக்க உடையவர் திருக்காவேரியினின்றும் மட₂த்திற்கு எழுந்தருளுவர்.

171. கோயில் முதலான திவ்யதேசத்தெம்பெருமான்களுடைய பவித்ரங்களைத் திருமுடியிலும் திருக்கழுத்திலும் சாத்திக்கொண்டு திருப்பல்லாண்டு திருப்பள்ளியெழுச்சி திருப்பாவை கண்ணிநுண் சிறுத்தாம்பு, ஸ்தோத்ர க₃த்₃யங்கள் அநுஸந்த₄ானத்துடன் திரு

மண்காப்பும் ஸ்ரீ சூர்ணக்காப்பும் சாத்திக்கொண்டு உடையவர் பகவத் தியானம் செய்வர்.

172. தம் திருவாராதனமான பேரருளாளனுக்குத் திருவாராதனம் தொடங்கிய பிறகு அழகியமணவாளனை மங்க₃ளாஶாஸனம் செய்ய ஸந்நிதிக்கு எழுந்தருளுவர்.

173. நம்பெருமாளுக்கு ஸகல கைங்கர்யங்களும் காலகாலங்களிலே நடக்கும்படி பத்துக்கொத்திலுள்ளார்க்கும் கட்டளையிட்டருளியது; ஸந்நிதிக்குப்பலவிதமான தொழிலாளிகளை ஏற்படுத்தியது.

174. போ₄க₃ சதுரராய், நாச்சியார் பரிகரமாய்ப் போருகிற திருவெள்ளறையில் பங்கயச்செல்வி பரிகரமானவர்களைக் கொண்டு சதுர்வித₄ான்னமாகச் சமைக்கும்படி கட்டளையிடுதல். இது போலவே தென்னரங்கன் செல்வமுற்றும் திருத்திவைத்தல்.

175. கோயிலிலிருந்து மட₂த்திற்கு எழுந்தருளின பின்பு, பேரருளாளருக்குத் திருவாராதனத்தைப் பூர்த்தி செய்து தளிகை மாற்றிய பிறகு சிஷ்யர்களுக்குத் தீர்த்தமும், ஸ்ரீ பாத₃தீர்த்த₂மும் ப்ரஸாதி₃த்தருளி, தாமும் ஸ்ரீவைஷ்ணவர்களும் ப்ரஸாதப்படுதல்; அதன் பிறகு யமுனைத்துறைவர் என்ற திருமண்டபத்திலே யோக₃பீட₂த்திலே எழுந்தருளியிருந்து ஆளவந்தார் ஸ்ரீபாத₃த்தை நெடும்போது தியானித்துக்கொண்டிருப்பர். ப₄ட்டரையும் ஸ்ரீராமப் பிள்ளையையும் கொண்டு ஸ்ரீராமாயணத்தைப் படிக்கச்சொல்லித் திருச்செவி சாத்துவர். ஸாயங்காலம் அஷ்டாக்ஷர அநுஸந்த₄ான பூர்வகமாக க₃ாயத்ரீஜபம் முதலான அனுஷ்ட₂ானங்களைச் செய்து பேரருளாளன் திருமுன்பே திருப்பல்லாண்டு முதலான நித்யானுஸந்த₄ானத்தை ஸேவிக்கும்படிசிஷ்யர்களுக்குக் கட்டளையிடுதல். அதன்பிறகு அழகியமணவாளனைச் சென்றுஸேவித்து, கோயில் முழுவதும் பளபளக்கத் திருவிளக்கேற்றி, ஸந்நிதி₄யிலே பொன்திருக்குத்து விளக்குகளிலே புழுகுநெய்யோடுகூடின புத்துருக்குப் பசுவின்நெய்யும் பரிமாறி விளக்குகள் எரியும்படி கற்பித்தருளுவர். எண்பகர் பூக்களாலே தொடுக்கப்பட்ட மலர்மாலைகள் சாத்துவிப்பர். இளநீர் அமுதுசெய்வித்தருளுவர். பகலிற்போலே ராத்ரியிலும் திருவாராத₄னம் நடத்துவித்து, திருவரங்கச் செல்வரை எழுந்தருளுவித்து நடைப்பலிகளை நடத்தியாகசாலை ஹோமங்களையும் நடத்தச்செய்வர். பிறகு பள்ளிகொள்ளுமிடத்தில் செல்வரை எழுந்தருளுவித்து, செல்வர் சம்பா அமுதுசெய்வித்து, தன்வந்

ரியின் வழிவந்த வைத்₃யர்கள் கற்பித்த கஷாயமும் அமுதுசெய்வித்து ஸ்ரீரங்க நாயகியார் கோயில் திருப்பள்ளியையும் அலங்கரிப்பித்து, 'என் திருமகள் சேர் மார்ப'னைக் சேர்த்தியிலே எழுந்தருளச்செய்து, பலவிதமான ஸுக₃ந்த₄ங்களைச் சாத்துவித்துக் கர்ப்பூர ஹாரத்தியையும் கண்டருளப்பண்ணிவைத்து, களைந்த திருமாலை முதலானவற்றை ஸேனை முதலியாருக்குச் சாத்துவித்து, வெள்ளிக்கிடாரங்களிலே பாற்குழம்பு சேர்த்து அமுது செய்வித்தவுடன் அரம்பையர்கள் தற்சூழத் தாலாட்டு ஸேவிக்க, யாழ் குழல் வீணை வாசிக்கத் திருவரங்கத்தரவணையிலே பெருமாள் பள்ளிகொண்டருளும்படி செய்து "உறகல் உறகல்" என்னும் பாசுரப்படி சங்கம் சக்ரம் முதலான ஆயுதாழ்வார்களைப் பள்ளியறை குறிக்கொண்டு நோக்கும்படி பெருமாளுக்குக் காவலடைத்து, ஸ்ரீநிதி₄ கிடக்கிறவிடத்திற்குத் திருக்காப்பு சேர்ப்பித்துப் புறப்பட்டருளுவர். மட₂த்தில் பேரருளாளருக்கும் எல்லாம் செய்து பின்பு தாம் திருப்பள்ளிகொள்வர்.

176. முதலியாண்டான் குமாரரான கந்தாடையாண்டான் எம்பெருமானாரை மிகவும் பிரார்த்தித்து, அவதார ஸ்தலமான ஸ்ரீபெரும்பூதூரில் அவரது அர்ச்சாவிக்₃ரஹத்தை ஏறியருளப்பண்ண அனுமதி பெறுதல். அந்த உத்ஸவ விக்₃ரஹத்தை உடையவரும் மிகவுகந்து ஆலிங்க₃னம் செய்துகொண்டு, கு₃ருபுஷ்யத்திலே ப்ரதிஷ்டை செய்யும்படி நியமித்தல். ஆண்டானும் அப்படியே அவ்வுத்ஸவவிக்₃ரஹத்தை மூலவரோடு ப்ரதிஷ்டை செய்ய, அன்று உடையவருக்குத் திருமேனியில் மிகவும் தளர்ச்சியாய், ப₃லஹானியும் உண்டாக, ஆராய்ந்தபோது அது விக்ரஹ ப்ரதிஷ்டை செய்யச் சொன்ன கு₃ருபுஷ்யதி₃னமாயிருப்பதைக் கண்டு உடையவர் வியப்புறுதல்.

177. இப்படி எழுந்தருளியிருக்கும் உடையவருடைய ப்ரப₄ாவத்தை (1) நம்பெருமாளும் (2) திருவேங்கடமுடையானும் (3) பேரருளாளரும் (4) திருநாராயணப்பெருமாளும் (5) அழகரும் (6) திருக்குறுங்குடி நம்பியும் (7) சிஷிகளும் (8) நம்மாழ்வாரும் (9) நாதமுனிகளும் (10) ஆளவந்தாரும் (11) பெரிய நம்பியும் (12) திருக்கோட்டியூர் நம்பியும் (13) திருமலைநம்பியும் (14) திருமாலையாண்டானும் (15) ஆழ்வார் திருவரங்கப்பெருமாளரையரும் (16) மற்றும் அவர் சிஷ்யர்களான ஆசார்யர்களும் (17) ஸரஸ்வதியும் (18) ப்₃ரஹ்மரக்ஷஸும் (19) ஜைமையும்

வெளியிட்ட பிரகாரங்களின் விவரணங்கள். [(16) எம்பெருமானுர் வழிவந்த ஆசார்யபுருஷர்களில் (1) வடுகநம்பி (2) கணியனூர் சிறியாச்சான் (3) அருளாளப் பெருமாள் எம்பெருமானுர் (அநந்தாழ்வான் முதலானுர்க்கு அருளியது) (4). ஆழ்வான் (5) முதலியாண்டான் (மிளகாழ்வானுக்குச் சொன்னது) (6) எம்பார் (பட்டருக்கு ஸாதி₃த்தது) (7) பட்டர் (நஞ்ஜீயருச்கு ஸாதி₃த்தது) (8) நஞ்ஜீயர் (நம்பிள்ளைக்கு அருளியது) (9) நம்பிள்ளை (சிவக்கறைப்பிள்ளைக்கு ஸாதி₃த்தது)(10) திருக்குருகைப்பிரான் (சோமாசியாண்டானுக்கு ஸ்ரீபாஷ்யம் மூன்றுமுறை காலக்ஷேபம் ஸாதி₃த்த பின்பு அருளியது) (11) கோமடத்துப்பிள்ளான் (தன் திருவடிகளில் மூன்றுரு ஸ்ரீபாஷ்யம் வாசித்த காக்கைப்பாடி ஆச்சான் பிள்ளைக்கு ஸாதி₃த்தது) (12) எங்களாழ்வான் (காக்கைப்பாடியாச்சான்பிள்ளையைப் பார்த்து 'உம்மைப் பெருமாள் முனிந்தருளின போது என்ன நினைத்திருந்தீர்?' என்ன, 'எம்பெருமானுர் திருவடிகளே தஞ்சம் என்று நினைத்திருந்தேன்' என்றது). (13) நடாதூரம்மாள் (தம்மிடம் ஸ்ரீபா₄ஷ்யம் வாசித்த சிஷ்யர்களுக்கு அருளியது). (14) நடுவிலாழ்வான் (திருநாராயணபுரத்திலே உடையவர் ஸந்நிதியிலே ஸ்ரீபாஷ்யம் கேட்டு 'இது அரிதாயிருந்தது' என்ற வங்கிபுரத்து ஆச்சி, சொட்டையம்மாள் உள்ளிட்டாருக்கு அருளியது) (15) ஸ்ரீ வேத₃வ்யாஸ பட்டர் (திருநாராயணபுரத்தில் உடையவர் ஸந்நிதியில் ஸ்ரீபாஷ்யகாலக்ஷேபம் ஸாதித்தபின்பு சிஷ்யர்களுக்கு அருளியது) (16) நடுவில்திருவீதிப்பிள்ளை (வெள்ளைக்குளத்தே ஆனைகாத்த சிங்கர் திருமுன்பே ஸ்ரீபாஷ்யம் ஸாதித்த போது தம் சிஷ்யரான அழகியாருக்கு ஸாதித்தது) ஆகிய பதினுறு ஆசார்யர்கள் எம்பெருமானுர் வைபவத்தை அருளிய ப்ரகாரம் விவரிக்கப்பட்டுள்ளது.]

இவ்விஷயங்களில் பெரும்பாலானவை சரமோபாயநிர்ணயம், ஆறுயிரப்படி கு₃ருபரம்பராப்ரபா₄வம் முதலானவற்றில் காணப்படுபவையே. ஒவ்வொரு ஆசாரியரும் தம் சிஷ்யர்களுக்கு "நீர் உம்முடைய பெருமையை நினைத்து இறுமாந்திருக்கவேண்டா; எம்பெருமானுர் திருவடிகளே தஞ்சமென்று இரும்; அவரிடமே ஆசார்யத்வபூர்த்தி உள்ளது; நாங்களெல்லாம் அவருடைய ஸம்ப₃ந்த₄த்தை விளைக்கும் உபகாரக ஆசார்யர்களே; அவர் ஒருவரே உத்தாரக ஆசாரியர்" என்று உபதே₃ஶித்தனர் என்பது குறிக்கொள்ளத் தக்கது.

178. அவதாரங்களெல்லாம் ஒத்திருக்கச்செய்தே, ராம க்ருஷ்ணாத்3யவதாரங்களுக்கு ப்ராத4ான்யமுண்டானாற்போலேயும், திவ்ய தேசங்களெல்லாம் ஒத்திருக்கச்செய்தே கோயில் திருமலைபெருமாள் கோயில் திருநாராயணபுரத்திற்கு ப்ராத4ாந்யமுண்டானாற்போலே யும், ரிஷிகள் எல்லாரிலும் வ்யாஸபராசரசௌநகநாரதர் என் கிற இவர்களுக்குப்ராத4ாந்யம் உண்டானாற்போலேயும், ஆழ்வார்கள் எல்லாரும் ஒத்திருக்கச்செய்தே நம்மாழ்வாருக்கு ப்ராத4ாந்யம் உண்டானாற்போலேயும், ஆசார்யர்கள் எல்லாரிலுங் காட்டில் இவர்க்கு (எம்பெருமானார்க்கு) ப்ராத4ாந்யம் கொள்ளக்குறையில்லை.

[இங்கு த்3ருஷ்டாந்தமாகக் காட்டப்பட்ட ராமக்ருஷ்ணாத்3யவதாரங்கள் முதலானவற்றுக்குள்ள ப்ராத4ாந்யம் ஆறாயிரப்படி கு3ருபரம்பரையில் விளக்கப்பட்டதுபோலே இங்கும் விளக்கப்பட்டது. (மஞ்ஜரி பக்கம் 295—298 காண்க)]

179. உடையவர் முற்கூறியவர்கள் அனைவரைக்காட்டிலும், ஆழ்வான், ஆண்டான் முதலானவர்களைக் காட்டிலும் ப்ரத4ாநர் [இதுவும் ஆறாயிரப்படியில் விளக்கப்பட்டது. மஞ்ஜரி பக்கம் 298—299 காண்க.]

180. உடையவர் திருநாராயணபுரத்தில் உபந்யாஸம்; "ஆளவந்தார் கோஷ்டியிலே ஒருநாளாகிலும் ஸேவிக்கப் பெற்றேனாகில் பரமபதத்துக்கும் இங்குத்தைக்கும் சுருளும்படியும் கட்டேனோ". என்று அருளிச்செய்தல் [இதுவும் ஆறாயிரப்படியில் உள்ளது; மஞ்ஜரி பக்கம் 302 காண்க.]

181. விபீ4ஷணசரணாக3திபற்றி பிள்ளையுறங்காவில்லிதா3ஸரின் கேள்வியும் எம்பெருமானார் பதிலும். [இதுவும் ஆறாயிரப்படியில் உள்ளது; மஞ்ஜரி பக்கம்302—303 காண்க ]

182. இராமாநுசநூற்றந்தாதியில் சில பாசுரங்களின் விவரணங்கள் [இதுவும் ஆறாயிரப்படியில் உள்ளது; மஞ்ஜரி பக்கம் 303, 304 காண்க.]

183. கூரத்தாழ்வான் ஆளவந்தார் ஆசார்ய நிஷ்டைக்கு அடி மதுரகவிகள். [இதுவும் ஆறாயிரப்படியில் உள்ளது]

184. சக்ரவர்த்தித்திருமகன் வைபவம்போலே ஸ்ரீராமாநுஜர் வைபவமும் அவாங்மநஸகோசரம் என்று கூறி க்ரந்தத்தைத் தலைக்

கட்டுதல். [இதுவும் ஆருயிரப்படியில் உள்ளது. மஞ்ஜரி பக்கம் 311 காண்க.]

185. எழுபத்துநாலுஸிம்ஹாஸநாதிபதிகளின் திருநாமங்கள். [இது ஆருயிரப்படியில் முன்பே உள்ளது மஞ்ஜரி பக்கம் 275—276 காண்க]

[இத்துடன் 264 எண்ணுள்ள "ராமாநுஜார்ய திவ்ய சரிதை" யின் விவரணம் நிறைவுபெறுகிறது.]

265. மாமுனிகள் அருளிச்செய்த ப்ரமேயஸாரவ்யாக்$_2$யானம். எம்பெருமானார் ஒருநாள் உகப்பிலே முதலியாண்டானுக்கு அருளிச்செய்ததாக அவருடைய குமாரரான கந்தாடை ஆண்டான் பட்டருக்கு அருளிச்செய்த அர்த்த$_2$விஶேஷங்களெல்லாம் ப்ரதிபாதி$_3$க்கிற ப்ரணவஸங்க்$_3$ரஹமாகிற ப்ரப$_3$ந்த$_4$த்திலே ஆசார்யனை உகாரவாச்யனாகச் சொல்லாநின்றதிறே. இவரும் எம்பெருமானார் திருவடிகளிலே ஸேவித்தவராகையாலே அவரருளிச்செய்யக்கேட்டிருக்குமது கொண்டிறே இப்ப்ரப$_3$ந்த$_4$த்திலே இப்படியருளிச்செய்தது.

266. விளாஞ்சோலைப்பிள்ளை அருளிய ஸப்தகாதை — 6.

அழுக்கென்றிவையறிந்தேன் அம்பொன் அரங்கா
ஒழித்தருளாய் உள்ளில் வினையை—பழிப்பிலா
என்னாரியர்க்காக எம்பெருமானர்க்காக
உன்னாருட்காகஉற்று

[பிள்ளைலோகம் ஜீயர் அருளிய இதன் வ்யாக்யானமும் காணத் தக்கது.]

267. பெரியவாச்சான்பிள்ளைக்கும் அவர் குமாரர் நாயனாராச்சான் பிள்ளைக்கும் சீடரான பரகாலதா$_3$ஸர் என்கிற திருக்கலிகன்றி தா$_3$ஸர் அருளிய பரகால நல்லான் ரஹஸ்யம்.

சரமஶ்லோகப்ரகரணம் 'பரித்யஜ்ய' ஶப்$_3$த$_3$ார்த்த$_2$ம்:— இப்படி ஆழ்வார்களெல்லாரும் ஸாத$_4$நாந்தராநந்யபூர்வகமாகப் பலவிடங்களிலும் ப்ரபத்தியை அருளிச்செய்துகொண்டு போருகையாலே இதிற்சொல்லுகிற த்யாக$_3$விதி$_4$நம் அத்யந்தமநுரூபமாயேயிருக்குமாகையாலே இவ்வாழ்வார்கள் திருவுள்ளத்தை அநுவித$_4$நம் பண்ணிப்போந்த யாமுநமுனிகள் ப$_4$ாஷ்யகாரர் முதலான பூர்வாசார்யர்களும் ஸாத$_4$நாந்தரபரித்யாக$_3$பூர்வகமாக இப்ப்ரபத்தியை அருளிச்செய்தார்கள்.

268. ஷ. சரமஶ்லோகப்ரகரணம் பா$_4$ஷ்யகாரரும் "பிதரம் மாதரம்" என்று தொடங்கி "ஸர்வத$_4$ர்மாம்ஶ்ச ஸந்த்யஜ்ய" என்கிறதிறுதியாக, சேதநாசேதநரூபங்களான ப்ராப்யாபா$_4$ஸங்களையும் ப்ராபகாபா$_4$ஸங்களையும் பரித்யஜித்து "லோகவிக்ராந்தசரணௌ ஶரணம் தே$_2$வ்ரஜம் விபே$_4$ா" என்று திருவுலகளந்தருளின திருவடிகளை உபாயமாக வரிக்கிறேனென்று புராணவசந ப்ரக்ரியையாலே இதரோபாயபரித்யாக$_3$பூர்வகமாக ஶரணவரணம் பண்ணி, ஸ்வவசநத்தாலே ஶரணம்புகுகிறவளவிலும் "கைங்கர்ய ப்ராப்த்யுபாயபூ$_4$தப$_4$க்தி. தது$_3$பாயஸம்யக்ஜ்ஞாந தது$_3$பாயஸமீசீநக்ரியா" என்று தொடங்கி "அத்$_3$ருஷ்டஸந்தாரோபாய:" என்கிறதிறுதியாக கைங்கர்யப்ராப்திக்கு உபாயமான ப$_4$க்தி, தது$_3$பாய ஜ்ஞாநயோக$_3$ம், தது$_3$பாயமான கர்மயோக$_3$ம், தத$_3$ங்க$_3$மான ஶமத$_3$மாதி$_3$களாகிற ஸமஸ்தாத்மகு$_3$ணங்களாலும் விஹீநனுயிருப்பனென்றும், அநாதி$_3$பாபவாஸநையின் மிகுதியாலே இவற்றுக்கடியான ஆத்மஜ்ஞாநமுங்கூட இல்லாதபடி ப$_4$க$_3$வந்மாயாதிரோஹித ஸ்வப்ரகாஶனுகையாலே அத்$_3$ருஷ்டஸந்தாரோபாயனுயிருப்பனென்றும், கர்மஜ்ஞாநாத்$_3$யுபாய விஶேஷங்களினுடைய அநந்வயத்தை அருளிச்செய்து, "நிகி$_2$லஜந்துஜாத ஶரண்ய ஶ்ரீமந்நாராயண தவ சரணாரவிந்த$_3$யுக$_3$ளம் ஶரணமஹம் ப்ரபத்$_3$யே" என்று ஶரண்யகு$_3$ணனுஸந்த$_4$ாந பூர்வகமாக ஸ்வாபராத$_4$ப$_4$யநிவர்த்தக புருஷகாரத்தைப் புரஸ்கரித்து ஆஶ்ரயணோபயோகி$_3$கல்யாணகு$_3$ணவிஶிஷ்டனுன அவன் திருவடிகளிலே ஶரணம் புக்கார்.

269. ஷ சரமஶ்லோக ப்ரகரணம். ஆனல் ப்ரபந்நனுக்கு து$_3$:க்க$_2$ஹேதுவான ப்ராரப்$_3$த$_4$ஶேஷம் அனுப$_4$விக்கவேண்டுவானென்னென்னில்: ப்ராரப்$_3$த$_4$கர்மநிப$_3$ந்த$_4$நஶோகமொழிய ப்ராரப்$_3$த$_4$ஶரீரவிஷயமான ஶோகமில்லாமையாலே; உண்டாயிற்றதாகில் அப்போதே நஶிக்கும்; ஆகையிறே பா$_4$ஷ்யகாரர் "ஆரப்$_3$த$_4$கார்யாநநாரப்$_3$த$_4$கார்யாம்ஶ்ச ஸர்வாநஶேஷத: க்ஷமஸ்வ" என்று ப்ராரப்$_3$த$_4$மும் ப்ரபத்தவ்யனுன ப$_4$க$_3$வான் க்ஷமிக்கத்தீருமாக அருளிச்செய்தது.

270. அமுதனர் அருளிய இராமாநுசநூற்றந்தாதி முழுவதும். துதி நூல் (தமிழ்)

271. மாமுனிகள் அருளிய யதிராஜவிம்ஶதி முழுவதும் துதிநூல் (வடமொழி)

272. மாமுனிகள் அருளிய ஆர்த்தி ப்ரபந்தம் முழுவதும் [ஆர்த்தியைத் தெரிவிக்கும் தமிழ்ப் பாக்களால் அமைந்த நூல்]

273. ப்ரபந்நாம்ருதம் முதல் பாகம் [ஸ்ரீராமானுஜருடைய சரித்திரத்தை வடமொழி ஸ்லோகங்களில் மிக விரிவாக விளக்கும் நூல். தமிழ் மொழிபெயர்ப்புடன் நம்மால் வெளியிடப்பட்டுள்ளது.]

274. வடிவழகிய நம்பிதாஸர் இயற்றிய ஸ்ரீராமானுஜர் சரித்திரம் முழுவதும். [அழகிய தமிழ்ப்பாக்களாலானது]

275. கருடவாஹநபண்டிதர் இயற்றிய வடமொழிக் காவியமான திவ்யஸூரிசரிதம் 17, 18 ஸர்க்கங்கள் முழுவதும்.

276. மாமுனிகள் அருளிய உபதேசரத்தினமாலை பாட்டு 27, 28, 29

** இன்றுலகீர் சித்திரையி லேய்ந்த திருவாதிரைநாள் *
என்றையினுமின் றிதனுக் கேற்றமென்தான் *—என்றவர்க்குச்
சாற்றுகின்றேன்கேண்மின் எதிராசர் தம்பிறப்பால்
நாற்றிசையும் கொண்டாடும் நாள். [27]

**ஆழ்வார்கள் தாங்க ளவதரித்தநாள்களிலும்*
வாழ்வான நாள் நமக்கு மண்ணுலகீர் *—ஏழ்பாரு
முய்ய எதிராசருதித்தருளும்* சித்திரையில்
செய்ய திருவாதிரை [28]

**எந்தையெதிராச ரிவ்வுலகி லெந்தமக்கா*
வந்துதித்த நாளென்னும் வாசியினால்*—இந்தத்
திருவாதிரை தன்னின் சீர்மைதனைநெஞ்சே*
ஒருவாம லெப்பொழுதுமோர்* [29]

277. இயல்சாத்தில் பிள்ளையுறங்காவில்லிதாஸர் அருளிய முதற்பாட்டு.

நன்றுந்திருவுடையோம் நானிலத்தில் எவ்வுயிர்க்கும்*
ஒன்றும் குறையில்லை ஓதினோம்*—குன்றம்
எடுத்தானடிசேர்ராமானுசன் தாள்*
பிடித்தார்பிடித்தாரைப்பற்றி. [1]

[ஸ்ரீராமானுஜரைப்பற்றி அவருடைய சிஷ்யப்ரசிஷ்யர்கள் தம் கிரந்தங்களிலும் தனியாகவும் அருளிய முக்கியமான ஸ்லோகங்கள்]

278. கூரத்தாழ்வான் அருளிய ஸ்ரீவைகுண்டஸ்தவம் முதல்ஸ்லோகம். ''யோநித்யம்'' [பக்கம் 179—180 காண்க]

279. கூரத்தாழ்வான் அருளிய ஸுந்த₃ரபா₃ஹுஸ்தவம் ஶ்லோகம் 1.

ஶ்ரீமந்தௌ ஹரிசரணௌ ஸமாஶ்ரிதோऽஹம்
ஶ்ரீராமாவரஜ முநீந்த்₃ரலப்₃த₄போ₃த₄: |
நிர்பீ₄கஸ் தத இஹ ஸுந்த₃ரோருபா₃ஹூம்
ஸ்தோஷ்யே தச்சரணவிலோகநாபி₄லாஷீ ||

[எம்பெருமானுடைய திருப்பொலிந்த சேவடியை அடைந்தவனான யான் ஶ்ரீராமானுஜமுனிஶ்ரேஷ்டரால் அறிவுபெற்றவன்; அது காரணமாகவே அடியேன் அந்த ஶ்ரீராமானுஜாசார்யருடைய திருவடிகளை ஸேவிக்க விரும்பியவனாய், பயமில்லாமல் சுந்தரத்தோளுடையானைத் துதிக்கத் தொடங்குகிறேன்.]

280. ஷை ஸுந்த₃ரபா₃ஹுஸ்தவம் ஶ்லோகம் 129.
விஜ்ஞாபநாம் வநகி₃ரீஶ்வர! ஸத்யரூபாம்
அங்கீ₃குருஷ்வ கருணார்ணவ! மாமகீநாம் |
ஶ்ரீரங்க₃தா₄மநி யதா₂புரமேகதோऽஹம்
ராமாநுஜார்யவஶக₃: பரிவர்த்திஷீய ||

[கருணைக்கடலான திருமாலிருஞ்சோலைப் பெருமானே! உண்மையான அடியேனது விண்ணப்பத்தைத் திருவுள்ளம் பற்றியருள வேணும்:—"அடியேன் முன்போலே திருவரங்கம் பெரிய கோயிலிலே ஒரு புறத்திலே ஶ்ரீராமானுஜாசார்யரை அண்டைகொண்டு வாழவேணும்" (என்பதே அவ்விண்ணப்பம்).]

281. கூரத்தாழ்வான் அருளிய வரத₃ராஜஸ்தவம்
ஶ்லோகம் 102.

ராமாநுஜாங்க்₄ரிஶரணோऽஸ்மி குலப்ரதீ₃பஸ்—
த்வாஸீத் ஸ யாமுநமுநே: ஸ ச நாத₂வம்ஶ்ய: |
வம்ஶ்ய: பராங்குஶமுநே: ஸ ச ஸோऽபி தே₃வ்யா:
தா₃ஸஸ் தவேதி வரத₃ஸ்மி தவேக்ஷணீய: ||

[வரதராஜனே! (அடியேன்) எம்பெருமானாருடைய திருவடிகளைப் பற்றியவன்; அவரோவெனில் ஆளவந்தாருடைய ஞானவம்சத்திற்கு அணிவிளக்காயிருப்பவர்; அவ்வாளவந்தாரும் (பிறப்பாலும், ஞானத்தாலும்) நாத₂முனியின் வழிவந்தவர்; அந்த நாத₂முனிகளும் நம்மாழ்வாருடைய (ஞான) வம்சத்தில் வந்தவர்;

அவ்வாழ்வாரும் உன் தே₃வியான பெரியபிராட்டியாருடைய சீடர்; இந்தப் பரம்பரா ஸம்ப₃ந்த₄த்தைப் பார்த்து, அடியேன் தேவரீரால் கடாக்ஷிக்கத்தக்கவன்.]

282. ஸ்ரீபராசரப₄ட்டர் அருளிய ஸ்ரீரங்க₃ராஜஸ்தவம் [1-8]

ராமாநுஜமுநிர் ஜீயாத் யோ ஹரேர் ப₄க்தியந்த்ரத: ।
கலிகோலாஹலக்ரீடா₃ முத₄ரக்₃ரஹமபாஹரத் ॥

[யாவரொருவர் ஹரிப₄க்தியாகிற யந்த்ரத்தாலே, கலிபுருஷனுடைய கோலாஹலவிளையாட்டாகிற பாழும் பிசாசை விரட்டினரோ, அவ்வெம்பெருமானுர் பல்லாண்டு வாழ்க.]

283 ஸ்ரீபராசர ப₄ட்டர் முக்தகஸ்லோகம்.

ஸ்ரீரங்க₃ம் கரிஸைலமஞ்ஜநகி₃ரிம் தார்க்ஷ்யாத்₃ரி ஸிம்ஹாசலௌ
ஸ்ரீகூர்மம் புருஷோத்தமம் ச ப₃த₃ரீநாராயணம் நைமிஸம் ।
ஸ்ரீமத்₃த்₃வாரவதீ ப்ரயாக₃ மது₄ராயோத்₄யா க₃யா புஷ்கரம்
ஸாளக்₃ராமகி₃ரிம் நிஷேவ்ய ரமதே ராமாநுஜோऽயம் முநி:॥

[திருவரங்கம், திருவத்திகிரி, திருவேங்கடமலை, கருடாசலம் என்னும் திருநாராயணபுரம், ஸிம்ஹாசலம், ஸ்ரீகூர்மம், புரீஜக₃ந்நாத₂ம், ப₃த₃ரிகாஸ்ரமம், நைமிஸாரண்யம், த்₃வாரகை, ப்ரயாகை, வடமதுரை, அயோத்₄யை, கயை, புஷ்கரம், ஸாளக்₃ராமமலை ஆகிய இந்த தி₃வ்ய தே₃ஸங்களுக்கு யாத்திரை செய்து ஸ்ரீராமானுஜமுனீந்திரர் இன்புறுகிறார்.]

284. த₄ாடீபஞ்சகம் [கூரத்தாழ்வான் முதலான ஸ்ரீராமானுஜ சிஷ்யர்கள் ஐவர் ஒவ்வொருவர் ஒவ்வொரு ஸ்லோகமாக அருளிச்செய்தது என்பர்.]

1. பாஷண்ட₃த்₃ருமஷண்ட₃ தா₃வத₃ஹந: சார்வாக ஸைலாஸநி:
பௌ₃த்₃த₄த்₄வாந்தநிராஸவாஸரபதிர் ஜைநேப₄ கண்டீ₂ரவ: ।
மாயாவாதி₃ பு₄ஜங்க₃ ப₄ங்க₃க₃ருட₃ஸ் த்ரைவித்₃ய சூடா₃மணி:
ஸ்ரீரங்கே₃ஸ ஜயத்₄வஜோ விஜயதே ராமாநுஜோऽயம் முநி:॥

[(மறைக்கு முரணுகப்பேசும்) பாஷண்டிகளான மரக்கூட்டங்களை வேரோடு அழிக்கும் காட்டுத்தீபோன்றவரும், (ப்ரத்யக்ஷம் ஒன்றையே ஒப்புக்கொள்ளும்) சார்வாகர்களாகிற மலைகளை அழிக்கும்

இடிபோன்றவரும், பௌத்3த4ர்களாகிற இருளைத் தொலைக்கும் ஸூர்யன்போன்றவரும், ஜைனர்களாகிற யானைகளை அழிக்கும் சிங்கம் போன்றவரும், மாயாவாதிகளாகிற பாம்புகளை மாளச் செய்யும் க3ருட3ன் போன்றவரும், பரமவைதிகர்களுக்குத் தலையில் கொள்ளும் சிரோமணியாய் விளங்குகின்றவரும், ஸ்ரீரங்க3நாத2னுக்கு அனைத்துச் சிறப்புகளும் விளங்கச்செய்யும் வெற்றிக் கொடியாயிருப்பவருமான ஸ்ரீ ராமானுஜர் வீறுபெற்று விளங்குகிறார். ]

2. பாஷண்ட3ஷண்ட3 கி3ரிக2ண்ட3ந வஜ்ரத3ண்ட3ா:
ப்ரச்ச2ந்நபௌ3த்3த4மகராலய மந்த2த3ண்ட3ா: |
வேத3ாந்தஸார ஸுக2த3ர்ஶந தீ3பத3ண்ட3ா:
ராமாநுஜஸ்ய விலஸந்தி முநேஸ் த்3ரித3ண்ட3ா: ||

[பாஷண்டிகளின் திரள்களாகிற மலைகளைப் பிளப்பதில் வஜ்ர தண்டம் போன்றவையும், வைதிக வேஷத்தில் மறைந்து நிற்கும் பௌத்தர்களான மாயாவாதிகளாகிற கடல்களைக் கலக்குவதற்குரிய மத்துத்தடிகள் போன்றவையும், வேதாந்தத்தின் ஸாரப்பொருள்களைத் தெளிவாகக்காட்டும் தீபதண்டங்கள் போன்றவையுமான எம்பெருமானருடைய த்ரித3ண்ட3ங்கள் அழகியவையாய் விளங்குகின்றன.]

3. சாரித்ரோத்3த4ாரத3ண்ட3ம் சதுரநயபத2ாலங்க்ரியா
கேதுத3ண்ட3ம்
ஸத்3வித்3யாதீ3பத3ண்ட3ம் ஸகலகலிகத2ாஸமஹ(ஹ்ரு)தே:
காலத3ண்ட3ம் |
த்ரய்யந்தாலம்ப3த3ண்ட3ம் த்ரிபு4வநவிஜயச் ச2த்ர
ஸௌவர்ண த3ண்ட3ம்
த4த்தே ராமாநுஜார்ய: ப்ரதிகத2கஶிரோவஜ்ரத3ண்ட3ம்
த்ரித3ண்ட3ம் ||

[நன்னடத்தைகளை உயர்த்த வல்ல (உபாத்தியாயர் கையில்) பிரப்பு போன்றதும், நல்ல (மீமாம்ஸா) நியாய மார்க்கங்களை அலங்கரிக்கவல்ல கொடியின் த3ண்ட3ம் போன்றதும், ஸத்3வித்3யை முதலான வித்3யைகளை (அல்லது மிக உயர்ந்த வித்3யையான உபநிஷத்தைக்) காட்டித்தரும் தீ3பத3ண்ட3ம் போன்றதும், கலியின் கோலாஹலங்கள்

அனைத்தையும் அழிக்கும் யமதண்டம் போன்றதும், வேதாந்த மாகிற புருஷனுக்கு ஊன்றுகோலான தண்டம் போன்றதும், மூவுலகையும் வெற்றி கொண்டமை தோன்றத் தாங்கிநிற்கும் கொற்றக் குடைக்கிட்ட பொன்தடி போன்றதும், துர்வாதிகளின் தலைகளைத் தகர்க்கும் வைரத்தடி போன்றதுமான த்ரிதண்டத்தை எம்பெருமானார் திருக்கையில் ஏந்தியுள்ளார்.]

4. த்ரய்யா மாங்கல்யஸூத்ரம் த்ரியுகபதயுகா ரோஹணாலம்பஸூத்ரம்
ஸத்வித்யாதீபஸூத்ரம் ஸகலகலிகதாஸம்ஹ(ஹ்ரு)தே: காலஸூத்ரம்।
ப்ரஜ்ஞாஸூத்ரம் புதாநாம் ப்ரமமதநமந: பத்மிநீநாளஸூத்ரம்
ரக்ஷா ஸூத்ரம் முநீநாம் ஜயதி யதிபதேர்வக்ஷஸி ப்ரஹ்மஸூத்ரம் ॥

[வேதமாகிய பெண்ணுக்குத் திருமாங்கல்யக்கயிறாய் இருப்பதும், ஆறு குணங்களை உடைய எம்பெருமானுடைய திருவடிகளில் ஏறுவதற்குரிய கயிறாயிருப்பதும், ஸத்வித்யை முதலானவற்றை (அல்லது உபநிஷத்தைக்) காட்டும் விளக்கின் திரியாயிருப்பதும், கலிகோலாஹலங்கள் அனைத்தையும் அழிக்கும் யமனின் பாசக்கயிறாயிருப்பதும், அறிவாளிகளுடைய பேரறிவை விளங்கச்செய்யும் ப்ரஹ்மஸூத்ரமாயிருப்பதும், புலனடக்கத்தைச் செல்வமாகக் கொண்ட யோகிகளின் மனமாகிற தாமரைக்குளத்திற்கு அலங்காரமான தாமரைத்தண்டாயிருப்பதும், முனிவர்களுக்குக் காப்புக் (ரக்ஷாபந்தனக்) கயிறாயிருப்பதுமான பூணூல் எம்பெருமானாருடைய திருமார்பில் வீறுதோற்ற விளங்கா நிற்கிறது.]

5. பாஷண்ட ஸாகர மஹாபடபாமுகாக்நி:
ஸ்ரீரங்கராஜசரணாம்புஜமூலதாஸ: ।
ஸ்ரீவிஷ்ணுலோக மணிமண்டபமார்க்கதாயீ
ராமாநுஜோ விஜயதே யதிராஜ ராஜ: ॥

[பாஷண்டிகளாகிற கடலின் கொந்தளிப்பை அடக்கும் படபாமுகாக்நி போன்றவரும், ஸ்ரீரங்கநாதனுடைய திருவடித்தாமரைகளுக்குப் பழவடியாராயிருப்பவரும், ஸ்ரீ வைகுண்டத்திலுள்ள திருமாமணிமண்டபம் சேரும் வழியைக் காட்டுபவரும், சிறந்த யதிகளுக்கும் தலைவராயிருப்பவருமான எம்பெருமானார் வெற்றி பெற்று விளங்குகிறார்.]

285. அநந்தாழ்வான் அருளிய ஸ்ரீராமாநுஜசதுஃஸ்லோகீ

1. அநிஶம் ப₄ஜதாமநந்யபா₄ஜாம்
சரணம்போ₄ருஹமாத₃ரேண பும்ஸாம் ।
விதரந்நிப்₄ருதம் விபூ₄திமிஷ்டாம்
ஜய ராமாநுஜ! ரங்கதா₄ம்நி நித்யம் ॥

[(உப₄யவிபூ₄தியையும்) உடையவரே! உமது திருவடித் தாமரையை அன்போடு எப்போதும் ஆஶ்ரயித்திருப்பவர்களாய், வேறு புகலற்றவர்களான அடியார்களுக்கு (உப₄யவிபூ₄திகளில்) அவர்கள் விரும்பும் விபூ₄தியை நிச்சயமாக அளித்துக் கொண்டு திருவரங்கத்தில் என்றும் வீறுதோற்ற வாழ்வீராக.]

2. பு₄வி நோ விமதாஸ்த்வதீ₃யஸூக்தி:
குலிஶீபூ₄ய குத்₃ருஷ்டிபி₄ஸ் ஸமேதாந் ।
ஶகலீகுருதே விபஶ்சிதீ₃ட்₃யா
ஜய ராமாநுஜ! ஶேஷஶைலஶ்ருங்கே₃ ॥

[எம்பெருமானரே! பேரறிவாளர்கள் புகழத்தக்க தேவரீருடைய ஸ்ரீஸூக்தியானது வஜ்ராயுத₄ம் போலே வேத₃த்திற்குப் புறம்பான மதங்களையும், வேத₃த்திற்கு அவப்பொருள் கூறும் மதங்களையும் பொடியாக்குகின்றது. (இப்படிப்பட்ட ஸ்ரீஸூக்திகளை அருளிய தேவரீர்) திருவேங்கடமலையுச்சியிலே பல்லாண்டுகள் வெற்றியுடன் விளங்குவீராக.]

3. ஶ்ருதிஷு ஸ்ம்ருதிஷு ப்ரமாணதத்த்வம்
க்ருபயாऽऽலோக்ய விஶுத்₃த₄யா ஹி பு₃த்₃த்₄யா ।
அக்ருதா₂: ஸ்வத ஏவ பா₄ஷ்யரத்நம்
ஜய ராமாநுஜ! ஹஸ்திதா₄ம்நி நித்யம் ॥

[ஸ்ரீராமாநுஜரே! நிர்ஹேதுககருணையினாலே, ஶ்ருதிஸ்ம்ருதிகளில் காணப்படும் ப்ரமாணங்களின் உண்மையை நடுவுநிலைதவறாத குற்றமற்ற மதியினாலே ஆராய்ந்து ஸூத்ரபா₄ஷ்யங்களில் தலை சிறந்ததான ஸ்ரீபா₄ஷ்யத்தை நீர்தாமே அருளிச்செய்தீர். (இப்படிப்பட்ட தேவரீர்) ஸ்ரீஹஸ்திகி₃ரியிலே என்றும் வெற்றி பெற்று விளங்கவேணும்.]

4. ஜய மாயிமதாந்த₄காரபா₄நோ !
ஜய பா₃ஹ்யப்ரமுக₂ாடவீக்ருஶாநோ ! ।

ஜய ஸம்ஸ்ரிதஸிந்து4 ஸீதபு4ரபே4!
ஜய ராமாநுஜ! யாத3வாத்3ரிஸ்ருங்கே3 ||

[மாயாவாதி3களின் மதமாகிற இருளுக்கு ஸூர்யன் போன்றவரே! பா3ஹ்யகுத்3ருஷ்டிகளாகிற காட்டிற்கு நெருப்புப் போன்றவரே! உமதடியார்களாகிற கடலைப் பூரிக்கச்செய்யும் சந்திரனாயிருப்பவரே! யதிராஜரே! (மேலக்கோட்டை) திருநாராயணபுரத்தில் வெற்றியுடன் நீடூழி விளங்கவேணும்.]

ராமாநுஜசதுஃஸ்லோகீம் யஃ படே2ந் நியதஸ்ஸதா3 |
ப்ராப்நுயாத் பரமாம் ப4க்திம் யதிராஜபதா3ப்3ஜயோஃ ||

[இந்த ஸ்ரீராமாநுஜசதுஃஸ்லோகியை எப்போதும் பாராயணம் செய்பவர்க்கு யதிராஜருடைய திருவடிகளில் பரமப4க்தி உண்டாகும்]

286. ஆர்சான்பிள்ளை அருளிய முக்தக ஸ்லோகம்

புரா ஸூத்ரைர் வ்யாஸஃ ஸ்ருதிஸதஸிரோர்த்த2ம் க்3ரதி2தவாந்
விவவ்ரே தம் ஸ்ராவ்யம் வகுளத4ரதாம் ஏத்ய ஸ புநஃ|
உப4ாவேதௌ க்3ரந்தௌ2 க4டயிதுமலம் யுக்திபி4ரஸௌ
புநர் ஜஜ்ஞே ராமாவரஜ இதி ஸ ப்3ரஹ்மமுகுரஃ ||

[முன்னொரு காலத்தில் வேதவியாஸர் ப்3ரஹ்மஸூத்ரங்களைக் கொண்டு பல வேதவாக்யங்களின் பொருளை விவரித்தருளினார்; அவரே (கலியின் ஆதியில்) மறுபடியும் நாட்கமழ் மகிழ்மாலைமார்பினரான சடகோபராகி அந்த வேதவாக்யப்பொருளை செவிக்கினிய செஞ்சொற்களாலே தமிழ் வேதங்களில் விவரித்தார். ப்3ரஹ்ம ஸூத்ரங்களும், தமிழ்வேதங்களுமாகிற இவ்விரு க்ரந்தங்களையும் யுக்திகளாலே நன்கு பொருந்தவைப்பதற்காக அவரே மறுபடியும் ஸ்ரீராமாநுஜராக அவதரித்தார். அவர் ப்3ரஹ்மம் (1 பரம்பொருள்; 2. வேதம்) பிரதிபலிக்கும் கண்ணாடி போன்றவரன்றோ.]

287. பூர்வர்கள் அருளிய மற்றொரு முக்தக ஸ்லோகம்.

அர்வாஞ்சோ யத்பத3ஸரஸிஜத்3வந்த்3வமாஸ்ரித்ய பூர்வே
மூர்த்4நா யஸ்யாந்வயமுபக3தா தே3ஸிகா முக்திமாபுஃ |
ஸோऽயம் ராமாநுஜமுநிரபி ஸ்வீயமுக்திம் கரஸ்த2ாம்
யத்ஸம்ப3ந்த4ாத் அமநுத கத2ம் வர்ண்யதே கூரநாத2ஃ ||

[எந்த எம்பெருமானுருடைய திருவடித்தாமரையோடு ஸம்ப₃ந்த₄ம் பெற்றுப் பின்னுள்ள ஆசார்யர்களும், எவருடைய திருமுடியோடு ஸம்ப₃ந்த₄ம் பெற்று முன்னுள்ள ஆசார்யர்களும் முக்தியடைந்தனரோ, அந்த எம்பெருமானுரும் எவருடைய ஸம்ப₃ந்த₄த்தால் தமக்கு மோக்ஷம் கைப்பட்டதாக நினைத்தாரோ, அத்தகைய பெருமையையுடைய கூரத்தாழ்வானை எப்படி வர்ணிக்கமுடியும்?]

288 மற்றொரு முக்தக ஶ்லோகம்.

காஷாயஶோபி, கமநீய ஶிகா₂நிவேஶம்
த₃ண்ட₃த்ரயோஜ்ஜ்வலகரம் விமலோபவீதம் ।
உத்₃யத்₃தி₃நேஶநிப₄முல்லஸதூர்த்₄வபுண்ட்₃ரம்
ரூபம் தவாஸ்து யதிராஜ த்₃ருஶோர் மமாக்₃ரே ॥

[யதிராஜரே! காஷாயத்தினுல் பிரகாசிப்பதும், அழகிய சிகையை உடையதும், திரிதண்டத்தால் விளங்கும் திருக்கையை உடையதும், பரிசுத்தமான பூணூலை உடையதும், உதிக்கும் சூரியன் போன்றதும், விளங்காநிற்கும் (பன்னிரு) திருமண்காப்புகளை உடையதுமான தேவரீருடைய திருமேனி என் கண்முன்னே (எப்போதும்) பிரகாசிக்கட்டும்.]

289 வேறொரு முக்தக ஶ்லோகம்.

நம:ப்ரணவஶோபி₄தம் நவகஷாய க₂ண்ட₃ாம்ப₃ரம்
த்ரித₃ண்ட₃ பரிமண்டி₃தம் த்ரிவித₄தத்த்வ நிர்வாஹகம் ।
த₃யாஞ்சிதத்₃ருக₃ஞ்சலம் த₃ளிதவாதி₃வாக்₃வைப₄வம்
ஶமாதி₃கு₃ணஸாக₃ரம் ஶரணமேமி ராமாநுஜம் ॥

['ஓம்' 'நம:' என்னும் ஶப்₃த₃ங்களின் (அல்லது ஓங்காரம் போன்ற திருப்பல்லாண்டு, நம: பதம்போன்ற கண்ணிநுண்சிறுத்தாம்பு ஆகிய இரண்டின்) அநுஸந்த₄ானத்தால் விளங்காநிற்பவராய், புதிய காஷாய வஸ்திரம் தரித்தவராய், திரித₃ண்ட₃த்தால் அலங்கரிக்கப்பெற்றவராய், சித₃சிதீ₃ஶ்வர தத்வத்ரய நிர்வாஹகராய், கருணை நிறைந்த கண்ணினராய், வாதி₃களின் வாக்கின் செருக்கை அடக்கியவராய், ஶமம், த₃மம் முதலான கு₃ணங்களுக்குக் கடலான ஸ்ரீராமானுஜரை ஶரணமடைகிறேன்.]

290. பிறிதொரு முக்தக ஶ்லோகம்.

ஏதாநி தாநி புவநத்ரயபாவநாநி
ஸம்ஸார ரோகஶமகலீகரணௌஷதாநி ।
ஜிஹ்வாதலே மம லிகாநி யதா ஶிலாயாம்
ராமாநுஜேதி சதுராண்யம்ருதாக்ஷராணி ॥

['ராமாநுஜ' என்னும் வல்லமைமிக்க நாலு அமுதம்போன்ற எழுத்துக்களான இவையே மூவுலகையும் பரிசுத்தப்படுத்தும்; ஸம்ஸாரவியாதியைப் போக்கடிக்கும் ஔஷதமுமாகும்; (இவற்றை) கல்லிலே பொறித்தாற்போலே என் நாவிலே எழுதிக் கொள்வேணுக.]

291. ஶரணாகதி கத்யத் தனியன்.

வந்தே வேதாந்தகர்ப்பூர சாமீகரகரண்டகம் ।
ராமாநுஜார்யமார்யாணாம் சூடாமணி மஹர்நிஶம் ॥

[வேதாந்தங்களாகிற கர்ப்பூரத்தைச் சேமித்துவைக்கும் தங்கச் செப்புப்போன்றவரும், நல்லோர்கள் தலையில் சூடும் சூடாமணியாயிருப்பவருமான ஸ்ரீராமாநுஜாசார்யரை எப்போதும் வணங்குகிறேன்.]

292. ஸ்ரீரங்க கத்யத் தனியன்.

சிதசித்பரதத்த்வாநாம் தத்த்வயாதார்த்யவேதிநே ।
ராமாநுஜாய முநயே நமோ மம கரீயஸே ॥

[சித், அசித், ஈச்வரன் என்னும் மூன்று தத்துவங்களின் உண்மையை உள்ளபடி அறிந்தவராய், என் ஆசார்யரான ஸ்ரீ ராமாநுஜ முனிவரை வணங்குகிறேன்.]

293. ஶ்ருதப்ரகாசிகைத் தொடக்க ஶ்லோகங்கள்.

1. தஸ்மை ராமாநுஜார்யாய நம: பரமயோகிநே ।
ய: ஶ்ருதி ஸ்ம்ருதி ஸூத்ராணாம் அந்தர்ஜ்வரமஶீஶமத் ॥

[யாவரொருவர் ஶ்ருதி, ஸ்ம்ருதி, ஸூத்ரங்கள் ஆகியவற்றினுடைய (மேலெழத்தோன்றும்) முரண்பாடுகளாகிற உள்வெதுப்பைப் போக்கினாரோ, அத்தகைய பரமயோகியான ஸ்ரீராமாநுஜரை வணங்குகிறேன்.]

2. ப்ரபத்₃யே ப்ரணவாகாரம் பா₄ஷ்யம் ரங்க₃மிவாபரம் |
பரஸ்ய ப்₃ரஹ்மணோ யத்ர ஶேஷித்வம் ஸ்பு₂டமீக்ஷ்யதே ||

[('அகில' என்று தொடங்கி, 'ஸமஞ்ஜஸம்' என்று முடிகையாலும், மற்றும் பல காரணங்களாலும்) மற்றொரு ஶ்ரீரங்க₃ (ப்ரணவாகார) விமானம்போலேயிருப்பதாய், (அவ்விமானத்திற்போலே) பரப்₃ரஹ்மத்தின் ஶேஷித்வத்தைத் தெளிவாகக் காட்டுவதாயிருக்கும் ஶ்ரீ பா₄ஷ்யத்தை (மனத்தால்) அடைகிறேன்.]

3. ஶ்ருத்யந்தேஷு ஶ்ருதம் பா₄ஷ்யே மதம் த்₄யாதம் ஹ்ருத₃ம்பு₃ஜே |
லக்ஷ்மீத₄ரம் ப்ரபத்₃யேऽஹம் த்₃ருஷ்டம் ஶ்ரீரங்க₃ தா₄மநி||

[வேதா₃ந்தங்களில் கேட்கப்படுவதாய், பா₄ஷ்யத்தில் ஆராயப் படுவதாய், இ₃தயக்கமலத்தில் தியானிக்கப்படுவதாய், திருவரங்கம் பெரியகோயிலில் காணப்படுவதான லக்ஷ்மியை த₄ரிக்கும் பர வஸ்துவை ஶரணமடைகிறேன்.]

4. அவிஸ்த்ருதா: ஸூக்ஷ்ம க₃ம்பீ₄ரா: ராமாநுஜமுநேர் கி₃ர: |
த₃ர்ஶயந்து ப்ரஸாதே₃ந ஸ்வம் பா₄வமகி₂லம் த்₃ருட₄ம் ||

[மிகவும் விரிவில்லாமல், மிக ஆழ்ந்த பொருளுடையவையான ஶ்ரீராமானுஜ ஶ்ரீஸூக்திகள் நிர்ஹேதுககிருபையால் தமது கருத்து அனைத்தையும் அடியேற்குக் காட்டட்டும்.]

294. ப்ரார்த்த₂நா பஞ்சகம். [வரத₃கு₃ருவை ஆசார்யராகக் குறிப்பிடுகையால், நடாதூரம்மாளின் ப்ரதா₄ன சிஷ்யரான ஶ்ருதப்ரகாசிகாசார்யரால் இந்த ஐந்து ஶ்லோகங்கள் அருளிச் செய்யப் பட்டவையாயிருக்கத்தகும்.]

1. யதீஶ்வர! ஶ்ருணு ஶ்ரீமந்! க்ருபயா பரயா தவ |
மம விஜ்ஞாபநமித₃ம் விலோக்ய வரத₃ம் கு₃ரும் ||

[(ஜ்ஞானபக்தி வைராக்₃யச்) செல்வம் மிக்க யதிராஜரே! எனது ஆசார்யரான வரத₃ரை (நடாதூர் அம்மாளை) நோக்கி, உமது மேலான கருணையாலே அடியேனுடைய இந்த விண்ணப்பத்தைக் கேட்பீர்.]

2. அநாதி₃பாபரசிதாம் அந்த:கரணநிஷ்டி₂தாம் |
யதீந்த்₃ர! விஷயே ஸாந்த்₃ராம் விநிர்வாஸய வாஸநாம் ||

[யதிராஜரே! அநாதி₃யான எனது பாபத்தால் உண்டானதாய், என் மனத்தில் பேர்க்கமுடியாதபடி நிற்பதாய், (ஶப்₃த₃ாதி₃) விஷயங்களில் உறுதியாயுள்ள வாஸனையைப் போக்குவீராக.]

3. அபி ப்ரார்த்த₂யமாநாநாம் புத்ரக்ஷேத்ராதி₃ஸம்பதா₃ம் |
குரு வைராக்₃யமேவாத்ர ஹிதகாரிந்! யதீந்த்₃ர! ந: ||

[(அனைவர்க்கும்) ஹிதத்தைச் செய்யும் யதிராஜரே! எங்களால் பிரார்த்திக்கப்பட்ட போதிலும், பிள்ளை, நிலம் முதலான செல்வங்கள் விஷயத்திலும் வைராக்₃யத்தையே விளைப்பீராக.]

4. யதா₂பராதா₄ ந ஸ்யுர் மே ப₄க்தேஷு ப₄க₃வத்யபி |
ததா₂ லக்ஷ்மணயோகீ₃ந்த்₃ர! யாவத்₃தே₃ஹம் ப்ரவர்த்தய ||

[ஶ்ரீராமானுஜமுனிவரரே! அடியேற்கு பா₄க₃வதாபசாரமோ, ப₄க₃வதபசாரமோ இந்த ஶரீரம் உள்ளவரை விளையாதபடி நடத்துவீராக.]

5. ஆமோக்ஷம் லக்ஷ்மணார்ய த்வத்ப்ரப₃ந்த₄பரிஶீலநை: |
காலக்ஷேபோஸ்து ந: ஸத்₃பி₄: ஸஹவாஸமுபேயுஷாம் ||

[ஶ்ரீராமானுஜாசாரியரே! நல்லவர்களோடு கூடிவாழும் பேறுபெற்ற நமக்கு, மோக்ஷமடையும் வரையில் உமது ப்ரபந்தங்களின் ஆராய்ச்சியிலேயே பொழுது கழியட்டும்.]

## ப₂லஶ்ருதி

இத்யேதத் ஸாத₃ரம் வித்₃வாந் ப்ரார்த்த₂நாபஞ்சகம் பட₂ந் |
ப்ராப்நுயாத் பரமாம் ப₄க்திம் யதிராஜபதா₃ப்₃ஜயோ: ||

[அறிவாளியாயிருக்கும் எவனொருவன் இந்த ப்ரார்த்த₂நாபஞ்சகத்தைப் படிக்கிறானோ, அவன் யதிராஜருடைய திருவடித்தாமரைகளில் பரமப₄க்தியை அடைவான்.]

295. வேதா₃ந்ததே₃ஶிகர் அருளிய கீ₃தாபா₄ஷ்ய தாத்பர்ய சந்த்₃ரிகையின் முதல் ஶ்லோகம்.

யதிபரிப்₃ருடே₄ா யத்₃கீ₃தாநாம் அத₃ர்ஶயத₃ஞ்ஜஸா
நிக₃மபரிஷந்நேதீ₃யாம்ஸம் ஸு₂த₄மயமாஶயம் ।
ஜநநபத₃வீயாதாயாதஶ்ரமாபஹராம் தி₄யம்
ஜநயது ஸ மே தே₃வ: ஸ்ரீமாந் த₄நஞ்ஜய ஸாரதி₂: ॥

[எங்க தேவனுடைய கீதைக்கு யதிராஜர் வேத₃ஸமூஹத்திற்கு அருகிலிருப்பதாய், அமுதமயமான கருத்தை நன்கு காட்டினாரோ, திருவின் நாயகனான அந்தப்பார்த்த₂ஸாரதி₂யான தே₃வன் பிறந்தும் செத்தும் நின்றிடரும் பேதைமையைத் தீர்க்கும் அறிவை எனக்கு உண்டாக்குவானாக.]

296. வேதா₃ந்ததே₃ஶிகர் அருளிய க₃த்₃யபா₄ஷ்யத் தொடக்கத்தில் உள்ள ஶ்லோகம்.

லக்ஷ்மீபதேர் யதிபதேஶ்ச த₃யைகதா₄ம்நோ:
யோऽஸௌ புரா ஸமஜநிஷ்ட ஜக₃த்₃தி₄தார்த்த₂ம் ।
ப்ராச்யம் ப்ரகாஶயது வ: பரமம் ரஹஸ்யம்
ஸம்வாத₃ ஏஷ ஶரணாக₃திமந்த்ரஸார: ॥

[கருணைக்கோர் இருப்பிடமான லக்ஷ்மீபதிக்கும், யதிபதிக்கும் உலகின் நன்மையின் பொருட்டு யாதொரு ஸம்வாத₃ம் முன்னொருகால் ஏற்பட்டதோ, த்₃வயமந்திரத்தின் ஸாரமான அந்த ஸம்வாத₃ம் முன்னோர்கள் உபதேசித்த பரமரஹஸ்யத்தை நமக்கு வெளிப்படுத்தட்டும்.]

297. வேதா₃ந்ததே₃ஶிகர் அருளிய ந்யாயபரிஶுத்₃தி₄யின் தொடக்க ஶ்லோகம்.

பத்யு: ஸம்யமிநாம் ப்ரணம்ய சரணௌ
தத்பாத₃கோடீரயோ:
ஸம்ப₃ந்தே₄ந ஸமித்₄யமாநவிப₄வாந் த₄ந்யாம்ஸ்
தத₂ாந்யாந் கு₃ரூந் ।
ஶுத்₃த₄ம் ஸம்ஶ்ரிதபா₃த₃ராயணதநோர்
நாராயணஸ்யோக்திபி₄:
ஸ்ரீமாந் வேங்கடநாயக: ஸ்தி₂திபத₃ம் நிர்மாதி
நீதே: ஶுப₄ம் ॥

[யதிராஜரை வணங்கி, அவருடைய திருவடிஸம்பந்தத்தாலும், திருமுடிஸம்பந்தத்தாலும் (முக்திபர்யந்தமான) பெருமைகளைப் பெற்றுப் பேறுபெற்ற மற்ற ஆசார்யர்களையும் வணங்கி, பாதராயணராகிய வேதவ்யாஸரை ஶரீரமாகக் கொண்ட நாராயணனுடைய ஸ்ரீஸூக்திகளைக்கொண்டு ஸ்ரீமானான வேங்கடநாதஸூரி நியாய பரிசுத்தியை இயற்றுகிறார்.]

298. வேதாந்ததேஶிகர் அருளிய அதிகரண ஸாராவளீ முதல் ஶ்லோகம்.

ஸ்வஸ்தி ஸ்ரீரங்கபர்த்து: கிமபி தததஹம்
ஶாஸநம் தத்ப்ரஸத்த்யை
ஸத்யைகாலம்பி பாஷ்யம் யதிபதிகதிதம்
ஶஶ்வதத்யாப்ய யுக்தாந் ।
விஶ்வஸ்மிந் நாமரூபாண்யநுவிஹிதவதா
தேந தேவேந தத்தாம்
வேதாந்தாசார்யஸம்ஜ்ஞாம் அவஹிதபஹுவித்
ஸார்த்தமந்வர்த்தயாமி ॥

[உலகில் எல்லாப்பொருள்களுக்கும் நாமருபங்களை அளித்த ஸ்ரீரங்கராஜனால் அளிக்கப்பெற்ற "வேதாந்தாசார்யர்" எனும் பெயரை—அப்பெருமானுடைய ஒப்பற்ற நியமனத்தைப் பெற்றவனாய், அவனுடைய உகப்பிற்காக, யதிராஜரால் அருளப்பெற்ற ஸத்யத்தையே பற்றிநிற்கும் ஸ்ரீபாஷ்யத்தைப் பலமுறை சீடர்களுக்குக் கற்பித்தபிறகு, குறிக்கொண்டு பார்க்கும் பேரறிவாளர்களின் குழுவிலே (இந்த ஸாராவளியின் மூலம்) பொருளுடையதாக்குகிறேன்.]

299. ஸ்ரீவேதாந்த தேசிகர் அருளிய தத்த்வ முக்தா கலாபத்தின் இறுதி ஶ்லோகம்.

காதா தாதாகதாநாம் களதி கமநிகா காபிலீ
க்வாபி லீநா
க்ஷீணா காணாதவாணீ த்ருஹிணஹரகிர: ஸௌரபம்
நாரபந்தே ।
க்ஷாமா கௌமாரிலோக்தி: ஜகதி குருமதம்
கௌரவாத் தூரவாந்தம்
கா ஶங்கா ஶங்கராதேர் பஜதி யதிபதௌ பத்ரவேதீம்
த்ரிவேதீம் ॥

[யதிராஜர் வேதங்களாகிற ப₄த்₃ரவேதி₃யை அடைந்தபோது பு₃த்₃த₄ மதம் நழுவுகிறது: கபிலமதம் ஓடி ஒளிந்தது. கணாத₃மதம் அழி கிறது; பிரமன் தோற்றுவித்த யோக₃மதமும், பசுபதிமதமும் மண மற்றதாகின்றன; குமாரிலமதம் நசிக்கிறது; கு₃ருமதம் பெரு மைக்கு வெகுதூரத்தில் தள்ளப்பட்டது; சங்கரர் முதலானோருடைய மதங்களின் நிலையைப்பற்றி ஐயுறவும் வேண்டுமோ?]

300. வேதாந்ததே₃ஶிகர் அருளிய ந்யாஸதிலக ஶ்லோ-6-22.

உக்த்யா த₄நஞ்ஜய விபீ₄ஷண லக்ஷ்யயா தே
ப்ரத்யாய்ய லக்ஷ்மணமுநேர் ப₄வதா விதீர்ணம் |
ஶ்ருத்வா வரம் தத₃நுப₃ந்த₄ மத₃ாவலிப்தே
நித்யம் ப்ரஸீத₃ ப₄க₃வந் மயி ரங்க₃நாத₂ ||

[அரங்கநகரப்பனே! அர்ஜுனனுக்குச் சொன்ன (ஸ்ரீக்ருஷ்ண) சரமஶ்லோகத்தையும் விபீ₄ஷணனுக்குச் சொன்ன (ஸ்ரீராம) சரம ஶ்லோகத்தையும், சொல்லி நம்பச்செய்து, ஸ்ரீராமாநுஜருக்கு (ஓர் பங்குனி உத்தரத் திருநாளில்) தேவரீர் அளித்த வரத்தைக் கேள்விப் பட்டு, அந்த ராமாநுஜரோடு உள்ளஸம்ப₃ந்த₄த்தையிட்டுப் பெரு மிதங்கொண்டிருக்கும் அடியேனிடம் எப்போதும்அருள்புரிவாயாக;]

301. ஸ்ரீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணன் அருளிச்செய்த ஸ்ரீ ராமாநுஜ ஸுப்ரபாதம்.

## ஸ்ரீ ராமாநுஜஸுப்ரப₄ாதம்

1. ஜயஜய யதி ஸார்வபௌ₄ள்மாமல ஸ்வாந்த! துப்₄யம் நம:
ஜய ஜய ஜநிஸிந்து₄மக்₃நாத்மஸந்தாரகக்₃ராமணீ: |
ஜய ஜய ப₄ஜநீய கூரேஶமுக்₂யை: ப்ரஸீத₃ ப்ரபே₄ா!
ஜய ஜய விது₃ஷாம் நிதே₄! ஜாக்₃ருஹி ஸ்ரீநிதே₄!
ஜாக்₃ருஹி ||

[யதிகட்கரசரே! தூயநெஞ்சினரே! உமக்கு வணக்கம்; வெற்றிமேல் வெற்றி பெறுவீராக. பிறவிக்கடலில் அழுந்திநிற்கும் ஆத்மாக்களைக் கரையேற்றுவதில் தலை சிறந்தவரே! கூரத்தாழ்வான் முதலானவர் களால் ஆஶ்ரயிக்கப்படும் தலைவரே! அருள்வீராக. பேரறிவாளர்க்கு நிதி₄போன்றவரே! கைங்கர்யச் செல்வத்திற்குக் கொள்கலமாய் இருப்பவரே! பள்ளியெழுந்து வெற்றிமேல் வெற்றி பெறுவீராக.]

2. பூர்ணார்ய பூர்ண கருணா பரிலப்$_3$த$_4$போ$_3$த$_4$!
வைராக்$_3$ய ப$_4$க்தி முக$_2$தி$_3$வ்யகு$_3$ணாம்ருதாப்$_3$தே$_4$!।
ஶ்ரீயாமுநார்ய பத$_3$பங்கஜ ராஜஹம்ஸ!
ராமாநுஜார்ய ப$_4$க$_3$வந்! தவ ஸுப்ரப$_4$ாதம் ॥

[பெரியநம்பிகளின் நிறைந்த கருணையினால் பேரறிவு பெற்றவரே! வைராக்யம், பக்தி முதலான சிறந்த நற்குணங்களாகிற அமுதம் நிறைந்த கடல்போன்றவரே! ஆளவந்தாருடைய திருவடித் தாமரையில் வீற்றிருக்கும் ராஜஹம்ஸமாயிருப்பவரே! ஞானம் முதலான குணங்களால் நிறைந்தவரே! ராமாநுஜாசார்யரே! பள்ளி யெழுந்தருளுவீர்.]

3. ஆநேதுமத்$_3$ய வரத$_3$ஸ்ய க$_3$ஜாத்$_3$ரி ப$_4$ர்த்து:
பாநீய மச்ச$_2$மதிஶீதமகா$_3$த$_4$கூபாத் ।
த்$_4$வாந்தம் நிரஸ்தமருணஸ்ய கரைஸ்ஸமந்தாத்
ராமாநுஜார்ய! ப$_4$க$_3$வந்! தவ ஸுப்ரப$_4$ாதம் ॥

[பகவத் ராமாநுஜாசார்யரே! அருணனுடைய கிரணங்களாலே எல்லாவிடங்களிலும் இருள் நீங்கிற்று. அத்திகிரியப்பனான வரதனுக்கு ஆழமுள்ள சாலக்கிணற்றிலிருந்து தெளிந்த குளிர்ந்த நீரை இன்று கொண்டு வருவதற்காகப் பள்ளியெழுந்தருள்வீர்.]

4. ஶ்ரீரங்க$_3$ராஜ பத$_3$பங்கஜயோரஶேஷகைங்கர்ய-
மாகலயிதும் ஸகுதூஹலஸ்த்வம் ।
உத்திஷ்ட$_2$ நித்யக்ருதிமப்யகி$_2$லாம் ச கர்த்தும்
ராமாநுஜார்ய ! ப$_4$க$_3$வந்! தவ ஸுப்ரப$_4$ாதம் ॥

[பகவத் ராமாநுஜாசார்யரே! திருவரங்கராஜனின் திருவடித்தாமரை யிணைகளில் கைங்கர்யம் செய்வதற்கு உத்ஸாஹம் கொண்டிருக்கும் தேவரீர் நித்ய கர்மாநுஷ்டானங்கள் அனைத்தையும் செய்வதற்குப் பள்ளியெழுந்தருள்வீர்.]

5. த்வாம் வீக்ஷிதும் ஸமுபயாதி வ்ருஷாசலேந்த்$_3$ர:
த்வத்ஸம்ப்ரக்லுப்தவர ஶங்க$_2$ரத$_2$ாங்க$_3$பாணி: ।
ஸம்யோஜிதாமுரஸி மாம் ப$_4$வதைவ பி$_3$ப்$_4$ரத்
ராமாநுஜார்ய! ப$_4$க$_3$வந்! தவ ஸுப்ரப$_4$ாதம் ॥

[பகவத் ராமாநுஜாசார்யரே! தேவரீரால் அளிக்கப்பெற்ற ஶங்க சக்ரங்களைக் கையில் ஏந்தியவனாய், தேவரீரால் சாத்தப்பட்ட லக்ஷ்மியைத்திருமார்பிலே தரித்தவனாய், தேவரீரைக் கடாக்ஷிப்பதற்காகத் திருமலையப்பன் வருகின்றான். பள்ளி யெழுந்தருள்வீர்.]

6. ஸ்ரீமத்குரங்க$_3$ பரிபூர்ணவிபு$_4$ஸ்த்வது$_3$க்தம்
ஸ்ரீப$_4$ாஷ்ய ஶாஸ்த்ரமமலம் த்வயி ப$_4$க்தியுக்த: |
ஶ்ரோதும் ஸமிச்ச$_2$தி யதீந்த்$_3$ர! ஸிதோர்த்$_4$வ புண்ட்$_3$ர:
தம் பே$_3$ாத$_4$யார்த்த$_2$மகி$_2$லம் தவ ஸுப்ரப$_4$ாதம் ||

[யதிராஜரே! திருக்குறுங்குடி நம்பியெம்பெருமான் தேவரீரிடத்தில் பக்தியுடையவராய், (தேவரீர்சாத்திய) வெளுத்த திருமண்காப்பை யுடையவராய், தேவரீர் அருளியகுற்றமற்றஸ்ரீப$_4$ாஷ்ய ஶாஸ்த்ரத்தைக் கேட்பதற்கு விரும்புகிறார். பள்ளி யெழுந்தருள்வீர்.]

7. ஸ்ரீப$_4$ாஷ்ய மாலிகி$_2$துமாத்த விஶாலலேக்$_2$ய:
ஸ்ரீவத்ஸசிஹ்நகு$_3$ருராநத தி$_3$வ்யக$_3$ாத்ர: |
வேத$_3$ாந்த ஸூத்ரமபி வக்துமமுஷ்ய ஸர்வம்
உத்திஷ்ட$_2$ லக்ஷ்மண முநே! தவ ஸுப்ரப$_4$ாதம் ||

[லக்ஷ்மண முனிவரே! வணங்கிய திருமேனியையுடைய கூரத்தாழ் வான் ஸ்ரீபாஷ்யத்தை எழுதுவதற்காக விசாலமான எழுதுகோலைக் கைக் கொண்டவராய் எழுந்தருளியிருக்கிறார். அவருக்கு வேதாந்த ஸூத்ரங்கள் அனைத்தையும் அருளிச் செய்வதற்குப் பள்ளி யெழுந் தருள்வீர்.]

8. ஸ்ரீமாந் ஸ பூர்ணவடுராத$_3$ரத: ப்ரக்$_3$ருஹ்ய
ஸ்ரீபாது$_3$காம் யதிபதே! பத$_3$யோ: ப்ரயோக்தும் |
த்$_3$வாரி ஸ்தி$_2$திம் விதநுதே ப்ரணதார்த்தி ஹாரிந்!
ராமாநுஜார்ய! ப$_4$க$_3$வந்! தவ ஸுப்ரப$_4$ாதம் ||

[யதிராஜரான ராமாநுஜாசார்யரே! கைங்கர்யச் செல்வம் நிறைந்த வடுகநம்பி தேவரீருடைய திருவடிகளில் சேர்ப்பதற்காக ஸ்ரீ பாதுகைகளை ஆர்வத்துடன் கைக்கொண்டு வாயிலில் நிற்கின்றார். பள்ளி யெழுந்தருள்வீர்.]

9. காஷாயவஸ்த்ரகடிஸூத்ர கமண்ட$_3$லூாஶ்ச
ஸ்ரீத$_3$ந்தகாஷ்ட$_2$மபி தே$_3$ஶிக ஸார்வபௌ$_4$மா: |
பாணௌ நித$_4$ாய நிவஸந்தி விஶுத்$_3$த$_4$ க$_3$ாத்ரா:
ராமாநுஜார்ய! ப$_4$க$_3$வந்! தவ ஸுப்ரப$_4$ாதம் ||

[பகவத் ராமாநுஜாசார்யரே! பரிசுத்தமான திருமேனியை உடைய ஆசார்ய ஶ்ரேஷ்டர்கள் காஷாய வஸ்த்ரம், அரைநாண் கயிறு, கமண்டலு, பல்துலக்கும்குச்சி ஆகியவற்றைக் கையில் ஏந்தி நிற்கின் றார்கள்; பள்ளி யெழுந்தருள்வீர்.]

10. த்வாம் போ3த4யந்தி கு3ரவ: ப்ரதி2தா மஹாந்த:
ஸ்ரீவைஷ்ணவாஶ்ச யமிநஸ்தவ பாத3ப4க்தா: |
ஏகாந்திநஶ்ச விமலாஸ்த்வத3நந்ய பா4வா:
தாந் பாலயாத்3ய யதிஶேக2ர! ஸுப்ரபா4தம் |

[யதிகட்கிறைவரே! புகழ்பெற்ற பெரியவர்களான ஆசார்யர்களும், உம்முடைய திருவடியில் அன்புடைய ஸ்ரீ வைஷ்ணவர்களான ஜீயர்களும் குற்றமற்றவர்களாய் உம்மையல்லது அறியாத ஏகாந்திகளும் உம்மைப் பள்ளியெழுப்புகிருர்கள். அவர்களை இப்போது காத்தருள்வீர். பள்ளியெழுந்தருள்வீர்.]

11. ப்3ராஹ்மே ப்ரபு3த்3த்4ய விபு3த4ா: ஸ்வகு3ரூந் ப்ரணம்ய
ராமாநுஜாய நம இத்யஸக்ருத்3 ப்3ருவாணா: |
அஷ்டாக்ஷரம் ஸசரமம் த்3வயமுச்சரந்தி
ராமாநுஜார்ய! ப4க3வந்! தவ ஸுப்ரபா4தம் ||

[பகவத் ராமாநுஜாசார்யரே! பேரறிவாளர்கள் ப்ராஹ்ம முஹூர்த்தத்தில் விழித்தெழுந்து தமது ஆசார்ய பரம்பரையை வணங்கி ''ராமாநுஜாய நம:''என்றுபலகால்சொல்லுகின்றவர்களாய், திருவஷ்டாக்ஷரத்தையும் த்வயத்தையும், சரமஶ்லோகத்தையும் அநுஸந்திக்கிருர்கள். பள்ளியெழுந்தருள்வீர்.]

12. ப்ராத: பட2ந்தி பரமத்3ரவிட3ப்ரபந்ந-
கா3யத்ரி மந்த்ர ஶதமஷ்டஶிரஸ்கமச்ச2ம் |
ஸ்ரீவைஷ்ணவாஸ்தவ பத3ாப்3ஜ நிவிஷ்டபா4வா:
ராமாநுஜார்ய! ப4க3வந்! தவ ஸுப்ரபா4தம் ||

[பகவத் ராமாநுஜாசார்யரே! தமிழினுல் ஆன தூய்மையான நூற்றெட்டுப் பாடல்கள் கொண்ட ப்ரபந்த காயத்ரியான இராமாநுச நூற்றந்தாதியை, தேவரீர் திருவடித்தாமரைகளில் செலுத்திய நெஞ்சை உடையவரான ஸ்ரீ வைஷ்ணவர்கள் பாராயணம் செய்கிருர்கள். பள்ளியெழுந்தருள்வீர்.]

13. ஆராத4நம் ரசயிதும் கமலாஸக2ஸ்ய
ஸ்ரீயாத3வாசலபதேர்விவிதே4ாபசாரை: |
பாதும் ச த்3ருஷ்டிகமலேந நதாநஶேஷாந்
ராமாநுஜார்ய! ப4க3வந்! தவ ஸுப்ரபா4தம் ||

[பகவத் ராமாநுஜாசார்யரே! ஸ்ரீதேவிநாதனுய் யாதவகிரியில் (திருநாராயணபுரத்தில்) எழுந்தருளியிருப்பவனுன திருநாராயணனுக்கு,

பலவகைப்பட்ட உபசாரங்களோடு திருவாராதனம் செய்வதற்கும், உம்மை வணங்கி நிற்கும் அனைவரையும் தாமரைபோன்ற கண்களாலே நோக்கிரக்ஷிப்பதற்கும் பள்ளியெழுந்தருளுவீர்.]

14. ஸம்ஸேவ்ய! ஸப்தஶதஸம்யமிஸார்வபௌ₄ளமை:
ஸத்₃தே₃ஶிகைஸ் ஸகல ஶாஸ்த்ரவித₃ரம் வரிஷ்டை₂:|
ஏகாந்திபி₄: பரமப₄ரக₃வதைர் நிஷேவ்ய!
ராமாநுஜார்ய! ப₄க₃வந்! தவ ஸுப்ரப₄ாதம் ||

[பகவத் ராமாநுஜாசார்யரே! எழுநூறு யதிஶ்ரேஷ்டர்களாலும், எல்லா ஶாஸ்த்ரங்களையும் அறிந்தவர்களில் தலைசிறந்தவர்களான ஸிம்ஹாஸனாதிபதிகளான ஆசார்யர்களாலும், தலைசிறந்த ஏகாந்திகளாலும் ஸேவிக்கப்படுபவரே! பள்ளியெழுந்தருளுவீர்.]

15. க₃த்₃யத்ரயம் நிக₃மஶேக₂ர தீ₃பஸாரௌ
வேத₃ார்த்த₂ ஸங்க்₃ரஹமபி ப்ரதி₂தம் ச நித்யம்|
கீ₃தார்த்த₂ ப₄ாஷ்யமபி தே₃ஶிக புங்க₃வாநாம்
த₃ாதும் ப்ரஸீத₃ யதிஶேக₂ர! ஸுப்ரப₄ாதம் ||

[யதிகட்கிறைவரே! கத்யத்ரயத்தையும்,வேதாந்ததீபஸாரங்களையும், புகழ்பெற்ற வேத₃ார்த்த₂ ஸங்க்₃ரஹத்தையும், நித்யக்₃ரந்த₂த்தையும், கீதாபாஷ்யத்தையும் ஆசார்யஶ்ரேஷ்ட₂ர்களுக்குக் காலக்ஷேபம் ஸாதிப்பதற்கு அருள்கூர்ந்து பள்ளியெழுந்தருளுவீர்.]

16. பாத₃ாம்பு₃ஜம் யதிபதே! ஶரணம் விஹர்த்தும்
ஸங்க₃த்ய ஸம்ஸரணவாரிதி₄லங்க₄நோத்கா: |
ஆயாந்தி ஹஸ்தகமலாபி₄த்₄ருதோபசாரா:
தாந் பாஹி தே கருணயா தவ ஸுப்ரப₄ாதம் ||

[யதிபதியே! ஸம்ஸாரக்கடலைத் தாண்டவிரும்பியவர்களாய், தங்களுடைய தாமரைபோன்ற கைகளிலே உபசாரத்ரவ்யங்களை ஏந்தியவர்களாய், தஞ்சமான உம்முடைய திருவடித்தாமரையில் சேர்ந்து இன்புறுவதற்கு (பலபெரியவர்கள்) வருகிறுர்கள், உமது கருணையினுல் அவர்களைக் காக்கப் பள்ளியெழுந்தருள்வீர்.]

17. ஸ்நாதும் கவேரதநயா ஸலிலேஷு ஶிஷ்யை:
ஆசார்ய பூருஷ வரைர்யதிபி₄ர் விஶுத்₃தை₄: |
ஸ்ரீவைஷ்ணவைஶ்ச ஸஹ ஸேவ்ய ! மஹாநுப₄ாவை:
ராமாநுஜார்ய! ப₄க₃வந்! தவ ஸுப்ரப₄ாதம் ||

[பகவத் ராமாநுஜா[illegible]ரே!பெரியவர்களால் ஸேவிக்கப்படுபவரே! சிஷ்யர்களோடும் [illegible]ந்த ஆசார்யர்களோடும், பரிசுத்தமான

ஜீயர்களோடும், ஸ்ரீவைஷ்ணவர்களோடும் காவேரி தீர்த்தத்தில் நீராடுவதற்குப் பள்ளியெழுந்தருள்வீர்,]

18. ராமாநுஜார்ய! ரமணீய குணாபிராம!
ராகாதிதூரக! குரோ! குருஸார்வபௌம! ।
ஸத்த்வ ப்ரதாந! ஶரணாகதவத்ஸல! த்வத்
பாதாப்ஜயோரிஹ பரத்ர ச கிங்கர: ஸ்யாம் ॥

[ராமாநுஜாசார்யரே! அழகிய கல்யாணகுணங்களை உடையவரே! விஷயங்களில் ஆசை முதலான துர்க்குணங்களுக்கு வெகு தூரத்தில் விலகி நிற்பவரே! ஆசார்யபதத்திற்கு முக்கியப் பொருளா யிருப்பவரே! ஆசார்ய ச்ரேஷ்டரே! ஸத்வகுணம் நிறைந்தவரே! ஶரணாகத வத்ஸலரே ! உமது திருவடித்தாமரைகளில் இம்மையிலும் மறுமையிலும் அடியேன் அடிமைசெய்யக் கடவேன்.]

ஸ்ரீராமாநுஜ ஸுப்ரபாதம் முற்றிற்று.

## 302 ஸ்ரீ பாஷ்யகார மங்களம் (பூர்வர்கள் அருளியது)

1. ஸ்ரீபராங்குஶ பாதாப்ஜ ஸுரபீக்ருத மௌளயே ।
ஸ்ரீவத்ஸசிஹ்ந நாதாய யதிராஜாய மங்களம் ॥

[நம்மாழ்வாரின் திருவடித்தாமரைகளாலே மணமூட்டப்பெற்ற திருமுடியை உடையவராய், கூரத்தாழ்வானுக்கு நாதரான யதிராஜருக்கு மங்களம் உண்டாகுக.]

2. நாத பத்மாக்ஷ ராமார்ய பாதபங்கஜ ஸேவிநே ;
ஸேவ்யாய ஸர்வயமிநாம் யதிராஜாய மங்களம் ॥

[நாதமுனிகள், உய்யக்கொண்டார், மணக்கால் நம்பி ஆகியவர்களின் திருவடித்தாமரைகளை ஸேவிப்பவராய், முக்கோற்பகவர்கள் அனைவராலும் ஸேவிக்கத்தக்கவரான யதிராஜருக்கு மங்களம் உண்டாகுக.]

3. பூர்ணார்ய பூர்ண கருணா பாத்ராய அமிததேஜஸே।
மாலாதர ப்ரியாயாஸ்து யதிராஜாய மங்களம் ॥

[பெரியநம்பியின் பூர்ணகருணைக்கு இலக்கானவராய், ஒப்பற்ற ஒளியுடையவராய், திருமாலையாண்டானுக்கு இனியவரான யதிராஜருக்கு மங்களம் ஆகுக.]

4. ஸம்ஸேவ்ய யாமுநாசார்யம் ஏகலவ்யோऽஸ்ம்யஹம்
குரோ: |
இத்யேவம் வத₃தே நித்யம் யதிராஜாய மங்க₃ளம் ||

[யாமுனுசார்யரான ஆளவந்தாரை ஸேவித்து, 'நான் ஆளவந்தாருக்கு ஏகலவ்யன்' என்று கூறும் யதிராஜருக்கு என்றும் மங்களம் ஆகுக.]

5. ஸ்ரீ காஞ்சீபூர்ணமிஶ்ரோக்த ரஹஸ்யார்த்த₂விதே₃ ஸதா₃ |
தே₃வராஜப்ரியாயாஸ்து யதிராஜாய மங்க₃ளம் ||

[திருக்கச்சிநம்பி (வரதனிடமிருந்து கேட்டு) உரைத்த (ஆறு வார்த்தைகளாகிற) ரஹஸ்யார்த்தங்களை அறிந்தவராய், தேவப் பெருமாளுக்கு எப்போதும் இனியவரான யதிராஜருக்கு மங்க₃ளம் ஆகுக.]

6. ஸ்ரீமத்₃கோ₃ஷ்டீ₂ புரீபூர்ண தி₃வ்யாஜ்ஞாம் குர்வதே ஸதா₃ |
ஶ்லோகார்த்த₂ம் க்₃ருஹ்ணதே தஸ்மாத் யதிராஜமங்க₃ளம் ||

[திருக்கோட்டியூர் நம்பியின் சிறந்த ஆணையை எப்போதும் நிறைவேற்றுகிறவராய், சரமஶ்லோகார்த்த₂த்தை அவரிடமிருந்து உபதே₃ஶம் பெற்றவரான யதிராஜருக்கு மங்க₃ளம் உண்டாகுக.]

7. கூரேஶ குருகாநாத₂ தா₃ஶரத்₂யாதி₃ தே₃ஶிகா: |
யச்சி₂ஷ்யா: ப₄ாந்தி தே தஸ்மை யதிராஜாய மங்க₃ளம் ||

[கூரத்தாழ்வான், திருக்குருகைப்பிரான் பிள்ளான், முதலியாண்டான் முதலான ஆசார்யர்கள் அனைவரும் எவருடைய சீடர்களாயிருந்து நிறம் பெறுகிறார்களோ, அந்த யதிராஜருக்கு மங்க₃ளம் ஆகட்டும்.]

8. சரமஶ்லோக தத்த்வார்த்த₂ம் ஜ்ஞாத்வா ஆர்யாஜ்ஞாம்
விலங்க்₄ய ச |
த₃த₃தே தம் ஸ்வகீயேப்₄யோ யதிராஜாய மங்க₃ளம் ||

[சரமஶ்லோகத்தின் உண்மைப்பொருளை (திருக்கோட்டியூர் நம்பியிடமிருந்து) அறிந்து, (இதை அனைவருக்கும் சொல்லிவிடாதே என்னும்) அவருடைய ஆணையைமீறி, (ஆசையுடைய) தம் சீடர்கள் அனைவர்க்கும் உபதேசித்த யதிராஜருக்கு மங்களம் உண்டாகட்டும்.]

9. ஸ்ரீஶைலபூர்ணக்ருபயா ஸ்ரீராமாயண மர்த்த₂த:|
பு₄க்த்யா யேந ஸ்ருதம் தஸ்மை யதிராஜாய மங்க₃ளம் ||

[திருமலை நம்பியின் கருணையாலே, அவரிடமிருந்து ப₄க்தியுடன் ஸ்ரீராமாயணப் பொருளை உபதேசம் பெற்ற யதிராஜருக்கு மங்களம் விளைக.]

10. ஶ(ா)ங்கராதி₃ குத்₃ருஷ்டீநாம்பா₃ஹ்யாநாம் நித₄நாய ச |
ஸ்ரீப₄ாஷ்ய மகரோத் தஸ்மை யதிராஜாய மங்க₃ளம்||

[வேத₃த்திற்கு அவப்பொருள் கூறும் சங்கரர் முதலானோரும், வேத₃த்தை ஒப்புக்கொள்ளாத பௌத்₃த₄ர் முதலானோரும் தோல்வி யடையும்படி ஸ்ரீப₄ாஷ்யத்தை அருளிய யதிராஜருக்கு மங்களம் ஆகுக.]

11. குர்வந்நுபநிஷத்₃ப₄ாஷ்யம் ஜக₃த்₃ரக்ஷாம் கரோதி ய:|
த₃யாயா: பரதந்த்ராய ப₄ாஷ்யகாராய மங்க₃ளம் ||

[(வேதா₃ர்த்த₂ஸங்க்₃ரஹம், ஸ்ரீப₄ாஷ்யம் முதலான தமது நூல்களிலே) உபநிஷத்₃வாக்யங்களுக்கு உரை எழுதி உலகை ரக்ஷிப்பவராய், கருணைக்கு வசப்பட்டவரான ஸ்ரீப₄ாஷ்யகாரருக்கு மங்களம் விளைக.]

12. த்₃ரமிடோ₃பநிஷத்₃வ்யாக்₂யாம் காரயேதி க்ருபாப₃லாத் |
ஶாஸதே குருகேஶம் தம் யதிராஜாய மங்க₃ளம்||

[கருணைக்கு வசப்பட்டவராய்—'திருவாய்மொழிக்கு உரையிடுவீராக' என்று திருக்குருகைப்பிரான் பிள்ளானை நியமித்த யதிராஜருக்கு மங்களம் ஆகுக.]

13. க₃த்வா து ஶாரதா₃பீட₂ம் வ்ருத்திம் போ₃த₄ாயநஸ்ய ச|
அவலோக்யாக₃தாயாஸ்து ப₄ாஷ்யகாராய மங்க₃ளம் ||

[(காஷ்மீரில்) ஶாரதா₃பீட₂த்திற்குச் சென்று போ₃த₄ாயனருடைய (ப்₃ரஹ்மஸூத்ர) வ்ருத்தியை ஸேவித்துத்திரும்பியவரான ஸ்ரீப₄ாஷ்யகாரருக்கு மங்களம் உண்டாகட்டும்,]

14 பரமாணும்ருஷாவாதி₃ வாத₃ஸம்ஹாரகாரிணே |
தஸ்மை ப₄க₃வதே ஸ்ரீமத்₃ ப₄ாஷ்யகாராய மங்க₃ளம்||

['பரமாணுக்களே காரணம்' என்னும் தார்க்கிகர்கள், 'உலகம் பொய்' என்னும் மாயாவாதி₃கள் முதலானவர்களின் விதண்டா வாத₃ங்களை அழித்தவரான கைங்கர்யச் செல்வம்மிக்க ஸ்ரீப₄ாஷ்ய காரருக்கு மங்க₃ளம் விளைக.]

15. ஸ்ரீமத்குரங்க₃ பூர்ணாய ஸ்ரீப₄ாஷ்யம் வத₃தே ஸ்வயம் |
பித்ரே ஸம்பத்ஸுதஸ்யாபி ப₄ாஷ்யகாராய மங்க₃ளம் ||

[திருக்குறுங்குடி நம்பியெம்பெருமானுக்குத் தாமே ஸ்ரீப₄ாஷ்யத்தைக் காலக்ஷேபம் ஸாதி₃த்தவராய், (திருநாராயணபுரம்) செல்வப் பிள்ளைக்குத் தகப்பனாருமான ஸ்ரீப₄ாஷ்யகாரருக்கு மங்க₃ளம் ஆகுக.]

16. த₃த்வா வ்ருஷகி₃ரீஶஸ்ய ஶங்க₂சக்ரே ரமாபதே: |
பரமப்ரீதியுக்தாய ப₄ாஷ்யகாராய மங்க₃ளம் ||

[அலர்மேல்மங்கை நாயகனான திருமலையப்பனுக்குச் சங்காழிகளை அளித்து மிகவுகந்தவரான ஸ்ரீப₄ாஷ்யகாரருக்கு மங்க₃ளம் ஆகுக.]

17. ஸந்ந்யாஸம் குர்வதே காஞ்ச்யாம் அநந்தஸரஸீதடே |
வரதே₃ ந்யஸ்தப₄ாராய ப₄ாஷ்யகாராய மங்க₃ளம் ||

[காஞ்சியில் அநந்தஸரஸ்ஸின் கரையில் ஸந்யாஸாஶ்ரமத்தை ஏற்றுக்கொண்டவரும், வரதராஜப்பெருமாளிடம் தன்னையும் தன் உடைமைகளையும் ஸமர்ப்பித்தவருமான ஸ்ரீப₄ாஷ்யகாரருக்கு மங்களம் ஆகுக.]

18. ஸ்ரீமந் மஹாபூ₄தபுரே ஸ்ரீமத் கேஶவ யஜ்வந: |
காந்திமத்யாம் ப்ரஸூதாய யதிராஜாய மங்க₃ளம் ||

[ஸ்ரீபெரும்பூதூரில் ஸ்ரீமத் கேசவ ஸோமயாஜிக்கும் காந்திமதி தே₃விக்கும் பிள்ளையாகப் பிறந்தவரான யதிராஜருக்கு மங்க₃ளம் ஆகுக.]

19. ஶேஷோவா ஸைந்யநாதோ₂வா ஸ்ரீபதிர்வேதி ஸாத்விகை: |
விதர்க்யாய மஹாப்ராஜ்ஞை: யதிராஜாய மங்க₃ளம் ||

[பேரறிவாளர்களான ஸாத்விகர்களாலே "இவர் திருவநந்தாழ்வானோ, அல்லது ஸேனைமுதலியாரோ, அல்லது லக்ஷ்மீநாத₂னேயோ" என்று ஒவ்வொருவிதமாகப் பேசப்படும் யதிராஜருக்கு மங்க₃ளம் ஆகுக.]

20. ப்ரக்ருஷ்ட கு₃ணபூர்ணாய ப்ராப்யாய ஸ்வாங்க்₄ரி-
ஸேவிநாம் ||
ப்ரபந்ந ஸார்த்த₂ வாஹாய யதிராஜாய மங்க₃ளம் ||

[கல்யாணகுணங்கள் நிறைந்தவரும், தன்திருவடிகளை அடைந்த வர்களுக்கு மேலான பயனாய் இருப்பவரும், ப்ரபந்ந ஸமூஹத்தை மோக்ஷத்திற்கு அழைத்துச் செல்லும் தலைவராயிருப்பவருமான யதிராஜருக்கு மங்களம் ஆகுக.]

21. வேதா₃ர்த்மகப்ரமாணேந ஸாத்விகைஶ்ச ப்ரமாத்ருபி₄: |
ப்ரமேயேண ஸஹ ஶ்ரீமாந் வர்த்த₄தாம் யதிஶேக₂ர: ||

[உபயவேதங்களாகிற ப்ரமாணத்தோடும், அவற்றைக் கரைகண்ட ஸாத்விகர்களான ஆழ்வார்களும், ஆசார்யர்களுமான ப்ரமாதாக்க ளோடும், அர்ச்சாவதார பர்யந்தமாய் நிற்கும் ப்ரமேயமான எம் பெருமானோடும் கூட கைங்கர்யச் செல்வம் நிறைந்த யதிராஜர் வீறு பெற்று விளங்குவாராக.]

303. எம்பெருமானார் அருளிய பெருமாள் திருமொழித் தனியன்

இன்னமுதமூட்டுகேன் இங்கேவா பைங்கிளியே! *
தென்னரங்கம் பாடவல்லசீர்ப்பெருமாள் *—பொன்னஞ்
சிலைசேர் நுதலியர்வேள் சேரலர்கோன் * எங்கள்
குலசேகரனென்றே கூறு.

304. எம்பெருமானார் அருளிய பெரியதிருமொழி திருவெழுகூற்றிருக்கைத் தனியன்

வாழிபரகாலன் வாழிகலிகன்றி *
வாழிகுறையலூர்வாழ்வேந்தன் *—வாழியரோ
மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர்கோன்*
தூயோன் சுடர்மான வேல்.
சீரார்திருவெழுகூற்றிருக்கையென்னும் செந்தமிழால் *
ஆராவமுதன் குடந்தைப்பிரான்தனடியிணைக்கீழ் *
ஏரார்மறைப்பொருளெல்லாமெடுத்திவ்வுலகுய்யவே *
சோராமல்சொன்ன அருள்மாரிபாதம் துணை நமக்கே.

305. எம்பெருமானார் அருளிய பெரிய திருவந்தாதித்தனியன்

முந்துற்றநெஞ்சே! முயற்றிதரித்துரைத்து *
வந்தித்து வாயாரவாழ்த்தியே *—சந்த
முருகூரும்சோலைசூழ் மொய்பூம்பொருநல் *
குருகூரன் மாறன்பேர் கூறு.

306 எம்பெருமானுர் அருளிய சாத்துமுறைத் தனியன்.

ஸ்ரீமந் ஸ்ரீரங்க3ஸ்ரியமநுபத்3ரவாமநுதி3நம்
ஸம்வர்த்த4ய ।
ஸ்ரீமந் ஸ்ரீரங்க3ஸ்ரியமநுபத்3ரவாமநுதி3நம்
ஸம்வர்த்த4ய ॥

307. எம்பெருமானுர் திருநக்ஷத்ரத் தனியன்.

மேஷார்த்3ரா ஸம்ப4வம் விஷ்ணோர்
த3ர்ஶந ஸ்தா2பநோத்ஸுகம் ।
துண்டீ3ரமண்ட3லே ஶேஷ
மூர்த்திம் ராமாநுஜம் ப4ஜே ॥

308. எம்பெருமானுர்பற்றிய வாழித்திருநாமங்கள்.

சீராருமெதிராசர் திருவடிகள்வாழி
திருவரையிற் சாத்திய செந்துவராடை வாழி*
ஏராரும்செய்யவடிவு எப்பொழுதும்வாழி
இலங்கிய முந்நூல்வாழி இணைத்தோள்கள் வாழி*
சோராத துய்ய செய்ய முகச்சோதி வாழி
தூமுறுவல் வாழி துணைமலர்க் கண்கள் வாழி*
ஈராறு திருநாமமணிந்த எழில்வாழி
இனிதிருப்போடெழில் ஞானமுத்திரை வாழியவே.

அறுசமயச் செடியதனை யடியறுத்தான் வாழியே
அடர்ந்துவரும் குதிட்டிகளையறத்துரந்தான் வாழியே*
செறுகலியைச் சிறிதுமறத் தீர்த்து விட்டான் வாழியே
தென்னரங்கர் செல்வமுற்றும் திருத்திவைத்தான்
வாழியே*
மறையதனில் பொருளனைத்தும் வாய்மொழிந்தான்
வாழியே
மாறனுரை செய்த தமிழ்மறை வளர்த்தோன் வாழியே*
அறம்மிகுநற்பெரும்பூதூர் அவதரித்தான் வாழியே
அழகாரும் எதிராசர் அடியிணைகள் வாழியே.

சங்கர பாற்கரயாதவ பாட்டப்பிரபாகரர் தங்கள் மதம்
சாய்வுற வாதியர் மாய்குவரென்றுசதுமறைவாழ்ந்திடு
நாள்
வெங்கலியிங்கினிவீறு நமக்கிலை யென்று
மிகத்தளர்நாள்
மேதினி நஞ்சுமையாறுமெனத்துயர் விட்டு
விளங்கியநாள்
மங்கையராளி பராங்குச முன்னவர் வாழ்வு
முளைத்திடுநாள்
மன்னிய தென்னரங்காபுரி மாமலைமற்றுமுவந்திடுநாள்
செங்கயல் வாவிகள் சூழ்வயல் நாளும் சிறந்த
பெரும்பூதூர்ச்
சீமானிளையாழ்வார்வந்தருளியநாள் திருவாதிரை
நாளே.

அத்திகிரி யருளாள ரடி பணிந்தோன் வாழியே*
அருட்கச்சி நம்பியுரை யாறு பெற்றோன் வாழியே*
பத்தியுடன் பாடியத்தைப் பகர்ந்திட்டான் வாழியே*
பதின்மர் கலையுட் பொருளைப் பரிந்து கற்றான் வாழியே*
சுத்தமகிழ் மாறனடி தொழுதுய்ந்தோன் வாழியே*
தொல் பெரிய நம்பி சரண் தோன்றினான் வாழியே*
சித்திரையி லாதிரைநாள் சிறக்க வந்தோன் வாழியே*
சீர்பெரும்பூதூர் முனிவன் திருவடிகள் வாழியே.

எண்டிசையெண் ணிளையாழ்வார் எதிராசன் வாழியே*
எழுபத்து நால்வர்க் கெண்ணான் குரைத்தான் வாழியே*
பண்டை மறையைத் தெரிந்த பாடியத்தோன் வாழியே*
பரகால னடியிணையைப் பரவுமவன் வாழியே*
தண்டமிழ்நூல் நம்மாழ்வார் சரணானான் வாழியே*
தாரணியும் விண்ணுலகும் தானுடையோன் வாழியே*
தெண்டிரைசூழ் பூதூ ரெம்பெருமானார் வாழியே*
சித்திரையிற் செய்ய திருவாதிரையோன் வாழியே.

ஆசார்ய வைப₄வ மஞ்ஜரியில்
எம்பெருமானார் வைப₄வ மீருகவுள்ள
முதல் பாகம் நிறைவுற்றது.

